# குமரகுருபரர் ஆய்வு மாலை

3

பதிப்பாசிரியர்

முனைவர் த.கோ. பரமசிவம்
முனைவர் வே.இரா. மாதவன்
பேராசிரியர் ம.வே. பசுபதி
திரு. மோ.கோ. கோவைமணி

குமரகுருபரர்
இலக்கிய ஆய்வு விழா வெளியீடு
வாரணாசி
1999

# குமரகுருபரர் ஆய்வுமாலை

## தொகுதி மூன்று

பதிப்பாசிரியர்

முனைவர் **த. கோ. பரமசிவம்**

முனைவர் **வே. இரா. மாதவன்**

பேராசிரியர் **ம. வே. பசுபதி**

திரு **மோ. கோ. கோவைமணி**

**குமரகுருபரர்**

**இலக்கிய ஆய்வு விழா வெளியீடு**

**வாரணாசி**

**1999**

○ குமரகுருபரர் ஆய்வுமாலை
தொகுதி மூன்று

○ திருப்பனந்தாள் காசித்திருமடமும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும் இணைந்து நடத்திய குமரகுருபரர் இலக்கிய ஆய்வு விழா வெளியீடு

○ திருவள்ளுவராண்டு 2030, புரட்டாசி 17, 18, 19
(4, 5, 6—10—1999)

○ முதற்பதிப்பு : 1999 அக்டோபர்

○ பதிப்பாசிரியர்:

முனைவர் த. கோ. பரமசிவம்
பேராசிரியர் & தலைவர், ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் வே. இரா. மாதவன்
இணைப்பேராசிரியர், ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பேராசிரியர் ம. வே. பசுபதி
முதல்வர், கா. சு. சு. கலைக்கல்லூரி,
திருப்பனந்தாள்.

திரு. மோ. கோ. கோவைமணி
ஆய்வு உதவியாளர், ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

○ விலை : உருபாய் 150/-

○ நூல் கிடைக்குமிடம் : தவத்திரு அதிபர் சுவாமிகள்
காசித் திருமடம்,
திருப்பனந்தாள்,
தஞ்சை மாவட்டம் – 612 504.

○ அச்சாக்கம் : சபாநாயகம் பிரிண்டர்ஸ்,
சிதம்பரம் – 608 001.
போன்: 23020, 23040

# ஆய்வு மலர்கள்

## (தொகுதி மூன்று)

ரு

அ

# அடிகளும் அருணகிரியும் கொண்ட கற்பனை

சா. அங்கயற்கண்ணி, திருநெல்வேலி

இலக்கியத்தையும் வரலாற்றையும் வேறுபடுத்துவதே கற்பனை என்று அறிஞர்கள் குறிப்பர்.

கந்தசாமி. ஆ. எழுதிய 'குமரகுருபரரின் கற்பனை' என்ற நூலும், அருணகிரியாரின் 'திருச்செந்தூர்த் திருப்புகழும்' இக்கட்டுரையின் அடிப்படை ஆதாரங்களாக அமைகின்றன.

குமரகுருபரரும் அருணகிரியாரும் இறைவனைப் பாடு பொருளாகக் கொண்டு பாடிய படைப்புகளில் மிளிரும் கற்பனையைக் காண்போம்.

## 1. இறைவன் பற்றிய கற்பனை

கற்பனைக்கெட்டாத இறைவனது உருவமும் செயல்பாடு களும் கற்பனை நயமுடன் பாடப்பெறுகின்றன.

### தோற்றம்

கொன்றை, பாம்பு அணிந்த இறைவனை அடிகளார் பாடுகிறார். அவ்விடத்து, 'இறைவன் சடைமுடியிலுள்ள பாம்பு அம்முடியிலுள்ள கங்கையாற்றின் கரையில் திரித்துப் போடப் பட்ட வைக்கோற்புரி போன்று உள்ளதாகக் (திரு.நா.ம.மா. 28) கற்பனை செய்வார்.

மற்றோரிடத்து, 'பாம்பும் நிலவும் பகைமையுடையன. முழுநிலவைப் பாம்பு உண்ணும். எனவே பிறை பாம்பைக் கண்டஞ்சி வளராமல் பிறையாக இருப்பதைக் குறிப்பார். இதனை, 'மன்றுடையான் செஞ்சடைமேல் வாளரவுக்குள் அஞ்சி என்று மதி தேய்ந்தே இருக்குமால்' (சித.மு.ம.கோ-24) என்பது விளக்கும்.

நிலவைச் சடையில் மூடியதால் கொன்றை கண்ணீர் விட்டழுவதாக (சி.செ.கோ. 43)வும் படைப்பார்.

அருணகிரியார் பாடுமிடத்து, 'சடைமீது அழகாகப் புனைந்த கொன்றையும், குணம் கொண்ட இளமதியின் குறைத் துண்டத்தையும், இடபத்தையும், பாம்பையும் கொண்ட பரமன்' (பா. 18) என்பார். 'ஆத்தி சூடிய சடைப்பெருமான்' (பா. 27) என்றும் பாடுவார்.

**நஞ்சுண்டல்**

அம்மையாகிய அமுதுக்கு இடப்பாகமும், நஞ்சுக்குக் கண்டத்தை இடமாகக் கொடுத்ததால் அமுதும் நஞ்சும் தோன்றிய கடலாகக் காட்சி தருபவன் (ம. கலம்-72) என்பார் குமரகுருபரர்.

'நஞ்சினை உண்ட சிவன்' (பா-22, 44) அருணகிரியாரின் பாடல்களிலும் அமைகிறது.

**உருவமற்றவன்**

மலைகளைப் புயமாகவும், வானத்தைத் திருமேனியாகவும், அண்டகூடத்தைத் திருமுடியாகவும், மேருமலையை வில்லாகவும் கொண்ட அருவநிலை இறைவனை (சி.செ.கோ-59) அடிகள் காட்டுவார்.

'பழைய இறை உருவமிலி' என அருணகிரியார் பாடுவார்.

**செயல்கள்**

பதஞ்சலி முனிவருக்காக இடக்காலைத் தூக்கி ஆடிய இறைவன் ஆடலை (சி.மு.ம.கோ-4) அடிகள் விளக்குவார். மேலும் திருமாலும் தன் திருவடி கண்டதாகப் பெருமைப்படக் கூடாது, ஏனெனில் இடப்பாதம் உமைக்குரியது' என்பதாகவும் (சி.கோ.-12) கூறுவார். மேலும், அடியவர்கட்காகவும், எமனுக்கு எச்சரிக்கை செய்வதற்காகவும் (சி.கோ-16) இடக்கால் தூக்கினார் என்பார்.

இறைவன் ஆடிய ஆடலை அருணகிரியார், 'தலையில் சூடிய குமுத மலரின் நாயகனாம் திங்களின் பிளவு அமுதத்தை மிகச் சிந்தவும், திருவடிச் சிலம்பு வேத மொழிகளை மிகக் கொஞ்சி ஒலிக்கவும், வளைசடைகள் தொங்கவும், பார்வதி, அருகே ஆடவும், இசை ஒலிக்கக் கழல்கள் அதிர ஆடினார்' (பா-17) எனக் காட்டுவார்.

**காமனை வென்றமை**

துறவிகளும் அஞ்சுமாறு மலர் அம்பு கொண்டு போர் தொடுக்கும், தென்றலில் உலவும் மன்மதனை வென்ற சிவபிரானை (பா-24) அருணகிரியார் காட்டுவார்.

குமரகுருபரரோ, காமன் சிவனை வென்றதாகவும், வெற்றி அடையாளமாகப் பதித்தவைதான் இறைவனின் வளைத்தழும்பு (கா. கலம்-5) எனக் காட்டுவார்.

**அழிவும் அருளும்**

அருணகிரியார் 'முப்புரம் எரித்த அச்சிவன்' (பா-1) என்றும் 'மழுவாயுதம் ஏந்திய சங்கரன்' (பா-77) என்றும் குறிப்பார்.

குமரகுருபரர், 'விழியில் மன்மதனையும், புன்னகையால் முப்புரமும் எரித்தான். நகத்தால் பிரமனின் தலையையும் கொய்தான், காலால் கூற்றுவன் உயிரைக் குடித்தான். பரசாயுதத்தையும் சூலாயுதத்தையும் தன்கை சிவக்கும்படி கால மெல்லாம் ஏந்தி நிற்பது அறியாமை (சித.செ.கோ-21) எனப் பாடுவார். கேசாதிபாதமாய்க் கூறுவது புதுமரபுக் கற்பனை என்ற கூற்றை இவண் குறிப்பிடலாம்.

மார்க்கண்டேயனுக்கு அருளிய அருட்செயலை (பா-179) அருணகிரியார் பாடுகிறார். மேலும் உமைக்குத் தன்பாகமருளிய சிவனை 'உமையொருபாகன்' (91) என்றும் குறிப்பார். உலகத்தைக் கண்ணனுக்கும், செல்வத்தைக் குபேரனுக்கும், அடியார்க்குச் சுவர்க்கத்தையும், உமைக்குத் தன் உடம்பில் பாதியையும் கொடுத்ததால் திருவாரூரில் தியாகராசன் எனப் பட்டான் (திரு.நா.ம.மா-24) என்று அடிகளார் குறிப்பிடுவார்.

அழித்தல் மற்றும் அருளலாகிய இறைவனின் செயல்களைத் தம் கற்பனையில் வடித்தனர்.

**2. இறைவி பற்றிய கற்பனை**

**உவமையும் உருவகமும்**

அடிகளார் இறைவியின் தோற்றத்தை உருவகமாகக் கூறு மிடத்து 'மதுரையில் வளர்கிளி' (முத்தம்-9) 'மலையத்துவசன் வார்த்த பசுங்கிளி' (தால்-9) என்பார். அடிமுதல் முடிவரை வருணனை டடவும் (மீ அ.பி.த ஊசல்-10) இயப்புவார்.

'தேவி மனோமணி ஆயி பராபரை தேன்போலும் மொழியாள்' என உவமைபடக் குமரகுருபரர் பாடுகிறார்.

**அருள் திறம்**

குமரகுருபரர், 'விழியாகிய கடலின்மடை திறந்த கருணை யாகிய வெள்ளம் பெருகியது' (மீ.அ.பி.த.சப்-5) என மொழிகிறார். மேலும், உலகத்து அன்னையாக விளங்கு தலையும் பாடி நிற்பார் (கா.கலம்-2) அருணகிரியார், 'எல்லா உலகங்கட்கும் அண்டங்கட்கும் தலைவியாம் நாயகி' (பா-55) என்றும், 'குற்றமற்ற கருநிறத்தவள்' 'பயத்தைத் தருபவ ளாகவும், போக்குபவளாகவும் நிற்பவள்' (பா-66) என்றும் அவளின் திறம் மொழிவார்.

**தாய்மை**

'பார்வதி தந்த குமரன்' (பா-23), 'பார்வதி பெற்ற சிறியவன்' (பா-56) என்றும்; 'மகனே நீ வாழ்க என வீரவேல் தந்த பார்வதி'யை(பா-66)யும் அருணகிரியார் பாடி நிற்பார்.

'திருமுலைப்பால் உண்ட முருகன் (பா-42) என அருணகிரியார் குறிக்க, 'பாலைச்சங்கில் ஏந்தி முருகனுக்கு ஊட்டி வளர்த்தை' (சப்-5) என உலகியல் கற்பனையாகக் குறிப்பார் அடிகளார்.

**3. முருகன் பற்றிய கற்பனை**

**தோற்றமும் அருளும்**

குமரகுருபரர், 'திருவுடலின் ஒளியை ஞாயிற்றின் ஒளி எனக் கருதி முருகனின் ஆறுமுகங்களாகிய தாமரைக்காடு மலர்ந்ததாம். அத்தாமரை புன்னகை செய்ய, அதனை நிலவொளி என்று கருதி, அவனது பன்னிரு இதழ்களாகிய அல்லி மலர்ந்தன' என்பார். மேலும்,

'பச்சை மயில் வாகனமும் பன்னிரண்டு திருத்தோளும்
அச்ச மகற்றும் அயில்வேலும் – கச்சைத்
திருவரையும் சீறடியுஞ் செய்கையும் ஈராறு
அருள்விழியும் மாமுகங்களாறும் – விரிகிரணம்
சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர் தோன்ற' (கந்.க.வெ-114-116)

என்பதாக முருகனின் தோற்றமும் அருளும் கூறுவார்.

அருணகிரியாரும் 'பன்னிரு கண்களும், நிலவொளிகளும் என் கண் முன் தோன்றாவோ' (பா–16) என்றும்; 'செஞ்சொற் புலவர்க்கு அன்புற்ற திருச்செந்தில் குமரப் பெருமான்' (பா–19) என்றும் பாடுவார்.

**குழந்தைப்பருவம்**

தனக்கு முத்தம் தருமாறு கங்கை வேண்ட, முருகன் அழுது கொண்டு அம்மையிடம் ஓடிவர, அம்மை அவனைத் தேற்றிய காட்சி குமரகுருபரரின் கற்பனையில் (மு.கு.பி.த.வரு–5) காட்டப்படுகிறது.

'சதங்கை சிற்றொலி செய்ய, மணித்தண்டை, 'கலின் கலின்' என்று ஒலிக்க, சங்கரி மனங்குழைந்து உருக, முத்தம் தர எழுந்தருளும் தளர்நடைப் பிள்ளையே உலகுதொழும் சரவணனே' (பா–47) என்று முத்தம் தர வரும் முருகனை அருணகிரியாரின் பாடலில் காணலாம்.

**இன்பநிலை**

வள்ளியின் மழலை கேட்டு அமுதமும் அவியுணவும் வெறுத்த முருகனும் (மு.கு.பி.த.முத்–5); கடைக்கண்ணில் இன்னமுது துளிர்க்க தெய்வயானையை மணந்த முருகனும் (மு.கு.பி.த.சப்-2) குமரகுருபரரின் பாடல்களில் காட்டப் பெறுகிறான்.

'குறவிக்கு இனியோன், (பா–21,31) 'வள்ளி மலையோன் (பா–42,43) என்றும்; 'குறப்பெண் பஞ்சசிப் பெண் கொங்கையில் துஞ்சும் பெருமான்' (பா–29) என்றும் இருவரிடத்து இன்புற்ற முருகனை அருணகிரியார் பாடுவார்.

**4. திருமால் பற்றிய கற்பனை**

'துளசியைச் சூடிக் கிழக்கிலிருந்து வரும் மேகம்' (சித. செ. கோ–76) என்றும்; 'சங்கினைக் கையில் வைத்துள்ள மேகம் (மீ.அ.பி.த.செங்–10) என்றும் உருவகிப்பார் குமரகுருபரர்.

அருணகிரியாரோ, மேக நிறமுடைய திருமால் (பா–22,28), 'பாஞ்ச சன்னியம் ஏந்துபவர்' (பா–32); கடல் மீது துயில்பவர் (பா–35) என்று திருமாலின் தோற்றத்தைப் பாடுவார்.

**5. பிரமன் பற்றிய கற்பனை**

இருவருமே ஒரே விதமாகப் பிரமனைப் பாடுவார். 'வையமீன்ற மறைக்கிழவன்' (சித.செ.கோ–76) என்று அடிகளும்; 'அந்தண மறையோன்' (பா–22) என்று அருணகிரியாரும் பாடுவார்.

**6. விநாயகன் பற்றிய கற்பனை**

'பெரிய வயிற்றை உடைய விநாயகனாகிய யானை' (ம.கலம்–1) என்றும்; அடியாரின் உள்ளமாகிய கட்டுத்தறியில் கட்டப்படும் களிறாகவும் அடிகளார் பாடுவார்.

'பாம்பை அரையிலணிந்த யானைமுக வடிவனன்' (பா–23) என உவமையில் அருணகிரியார் பாடுவார்.

**7. கூற்றுவன் பற்றிய கற்பனை**

கூற்றுவனின் அச்சத்தரும் தோற்றமே இருவரின் பாடல் களில் வெளிப்படுகிறது.

அச்சம் தரும் கூற்றுவன் உருவம் (சித.செ.கோ – 50) என அடிகளாரும்; 'விஷம் ததும்பும் கண்கள், பாசக்கயிறும் கொண்ட கைகள், எருமை மேல் வரும் யமராஜனின் தோற்றத்தை அருணகிரியாரும் பாடுவார்.

**ஒப்பீடு**

இருவரின் பாடல்களில் காணப்படும் கற்பனைத் திறத்தை ஒப்புமையாகவும் வேற்றுமையாகவும் பிரித்துக் கண்டின் புறலாம்.

**1. ஒப்புமை**

சிவனின் அருளும் தியாகமும் கூறுதல்
இறைவியை உலக நாயகியாகக் காட்டுதல்
முருகனின் ஆறுமுகத் தோற்றம், முத்தம் தரும் குழந்தைப் பருவத்தைப் பாடுதல்
வள்ளி தெய்வயானையின் இன்பநிலை கூறுதல்
பிரமனை வேதநாயகனாகக் காட்டுதல்
கூற்றுவனின் அச்சம் தரும் தோற்றத்தைப் பாடுதல்

என்ற கூறுகள், இறைக் கற்பனை என்பதன் கீழ் ஒப்புமையாக அமைவன.

## 2. உவமையும் உருவகமும்

குமரகுருபரரிடம் உருவகக் கற்பனையும் அருணகிரியாரிடம் உவமைக் கற்பனையும் காணப்படுகிறது.

1. அருணகிரியார், சிவன் உருவமற்றவன் என்றால், குமரகுருபரர், இயற்கையே இறைவனின் உறுப்புகள் என உருவகிப்பார்.

2. அருணகிரியார், இறைவன் நஞ்சுண்டவனாக இயல்பாகக் காட்ட, குமரகுருபரர், அமுது நஞ்சும் தோன்றிய கடலாக உருவகிப்பார்.

3. அருணகிரியார், இறைவியை விளிப் பெயர்களாலும், உவமையிலும் காட்டி நிற்க, குமரகுருபரர் இறைவியைக் கிளியாகவே உருவகிப்பார்.

4. அருணகிரியார், திருமாலை மேகநிறத்தான் என உவமிக்க, குமரகுருபரர், மேகமாகவே உருவகிப்பார்.

5. அருணகிரியரார், விநாயகனைக் களிறுமுக வடிவினை என்று உவமிக்க குமரகுருபரர், களிறாகவே உருவகிப்பார்.

## 3. மாறுபடல்

### அ) காரணக் கற்பனை

1. அருணகிரியார் இறைவனைச் சடைமுடியோன் என்று இயல்பாகக் காட்ட, குமரகுருபரர் திரித்துப் போடப் பட்ட வைக்கோற்புரி போன்றது என உவமையில் விரிந்த கற்பனையைக் காட்டுவார்.

2. அருணகிரியார் பாம்பு, நிலவு மற்றும் அத்தி சூடிய இறைத் தோற்றம் காட்ட, குமரகுருபரர் பாம்பு கண்டஞ்சிய வளராத பிறையைத் தலையில் உடைய சிவன், நிலவுக்காகக் கண்ணீர் விடும் கொன்றை சூடியவன் எனக் கற்பனையை விரிவாக்குவார்.

3. இசை ஒலிக்க ஆடிய சிவனின் ஆடல் தோற்றத்தை அருணகிரியார் காட்ட, பதஞ்சலி, உமை மற்றும் அடியவருக்காக இடக்கால் தூக்கி ஆடிய ஆடற் காரணத்தைக் கூறுவார் குமரகுருபரர்.

**ஆ) வேறுபட்ட கற்பனை**

1. சிவன் காமனை வென்றமை அருணகிரியார் பாடிட, காமன் சிவனை வென்றமையால் இறைவனின் உடலில் வளைக்குறி தோன்றியது என மாறுபட்ட கற்பனையைக் குமரகுருபரர் பாடுவார்.

2. சிவனின் மழுப்படை ஏந்திய தோற்றத்தை அருணகிரியார் வீரச் செயலாகக் காட்டிட, குமரகுருபரர், கைசிவக்கப் பரசாயுதத்தையும், சூலத்தையும் காலமெல்லாம் ஏந்திய சிவனின் அறியாமை என்பதாக மாறுபட்டுக் காட்டுகிறார்.

3. முலைப்பால் ஊட்டி முருகனை வளர்த்த பார்வதியை அருணகிரியார் பாடிட, சங்கில் பாலூட்டி வளர்த்த பார்வதியைக் குமரகுருபரர் பாடுகிறார்.

இவ்விதம், இறைக் கற்பனையில் ஒப்புமையாகவும், இலக்கிய நயத்தில் (உவமை உருவகம் வழி) வேறுபட்டும்; விரிவு மற்றும் காரணம் கூறுதல், வேறுபடுதல் என்பதாகக் கற்பனையில் மாறுபட்டும் அமைந்த திறத்தைக் காணலாம். இறைவனைப் பாடுபொருளாகக் கொண்ட படைப்புகளை ஒப்புமையுடன் நோக்கும்போது மேலும் இலக்கியச் சுவை கூடும் என்பதில் ஐயமில்லை.

# அடிகள் பார்வையில் தலவரலாறு

அரு. அப்பாசாமி, புதுவை

வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே – செந்தில்நகர்ச்
சேவகா வென்று திருநீ றணிவார்க்கு
மேவவா ராதே வினை.

தமிழிலக்கிய வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் சிற்றிலக்கியங்கள் செல்வாக்குப் பெற்று விளங்கின. மாணவர்கள் தமிழ்ப் புலமைக்கு சிற்றிலக்கியப் பயிற்சி மிக இன்றியமையாத தாக இருந்தது. இதனால் சிற்றிலக்கியங்கள் வளம் பெற்றன. சிற்றிலக்கியப் பாவலர் பலர் பாராட்டுக்குரியவராயினர். அத்தகைய பாவலர்களில் அரும் புலமை ஒருவராகத் திகழ்ந்தவர் குமரகுருபர அடிகளாவார்.

**தலவரலாறு**

பிற்பட்ட காலத்தே இந்நாட்டில் தலவழிபாடு பெருகியது. தலங்களின் வரலாறுகளை அறிவதில் யாவரும் ஊக்கங் கொண்டனர். தலபுராணங்கள் பல உண்டாயின. புலவர்கள் தலத்தொடர்பான சிற்றிலக்கியங்களை அமைத்துக் காட்டினர். இக்காலத்தே 17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றிய குமரகுருபரர் இயற்றியருளிய பிரபந்தங்களுள் நீதிநெறி விளக்கம், பண்டார மும்மணிக்கோவை நீங்கலாக ஏனையவை தலங்களின் சார்புடையனவாகவே உள்ளன. இவற்றுள் பொதிந்துள்ள தலவரலாற்றுச் செய்திகளைக் குமரகுருபர அடிகள் நோக்கில் காணவியலும்.

ஒரு தலத்தின் பெருமையை அத்தலத்தைச் சிறப்பிப்பத னாலும், அங்குள்ள திருக்கோயில், தீர்த்தம் என்பவற்றையும், மூர்த்திகளையும் சிறப்பிப்பதனாலும் வெளிப்படுத்துவர் என்பர். இத்தகைய செய்திகளைக் கந்தர் கலிவெண்பாவில் காணவியலும்.

**கந்தர் கலிவெண்பா**

இந்நூல் முருகக் கடவுளிடம் விண்ணப்பம் செய்து கொள்ளும் முறையில் அமைந்துள்ளது. திருச் செந்திலாண்டவன் அருளைப் பெற்ற அருள் நூல்களுள் இதுவும் ஒன்று. கலிவெண்பா யாப்பில், திருச்செந்தூர்ப் பெருமான் மீது பாடப்பெற்றதால் **'திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா'** எனப் பெற்றது.

**தலச்சிறப்பும் திருக்கோயில் சிறப்பும்**

முருகன் கோயில் கொண்டுள்ள செந்திலம்பதி சங்க நூல்களில் **'திருமணிவிளக்கின் அலைவாய்'** என்றும், (அகம். 266); **'வெண்டலைப் புணரி அலைக்குஞ் செந்தில்'** (புறம். 55) என்றும் தலச் சிறப்பு சுட்டப்பெறுகிறது. பரிபாடல் **பரங்குன்றையும்**, 'முருகு' **அறுபடை வீடுகளையும்** குறிப்பிடு கின்றன. **ஒதலாந்தையார்** என்னும் புலவர், முருகன் விரும்பி உறையும் இடம் **'மலையே'** என்பதனை **'முருகமர் மாமலை'** (ஐங். 308) என்று குறிப்பிடுவர். சிவனுக்கு இடமாக **கயிலை வெற்பு** திகழ்தல் போல், கந்தனுக்கு இடமாகக் **கந்தவெற்பு** நிலவுதலைக் கந்தபுராணம் சுட்டும். **திருத்தணி மலையே** அவனுக்குரிய சிறப்பிடமாகப் பேசப் பெறுகிறது.

இனிக் குமரகுருபர அடிகள் **கந்தர் கலிவெண்பாவில்** செந்திற்பதியை, **'நாறுமலர்க், கந்திப் பொதும்பர் எழுகா ரலைக்கும் சீரலைவாய்ச் செந்திற்பதி'** (கந். 110) என்றும்; **'சீரலைவாய், தெள்ளுதிரை கொழிக்கும் செந்தூர்'** (கந். கலி. 95) என்றும் குறிப்பிடுகின்றார். இதுவரை திருக்கோயில் அதன் தலச் சிறப்புக்கள் உணர்த்தப் பெற்றன.

இனி, **தலம் தீர்த்தம் மூர்த்தி** என்பதனுள் நடுவனதாகிய தீர்த்தச் சிறப்பு வருமாறு.

நீர்நிலைகளில் உடலைத் தூய்மை செய்து கொண்டவுடன் இறைவனை வழிபடுவதற்காக அந்நீர் நிலைக்கு அருகே தெய்வத் திருஉருவங்களை மக்கள் நிறுவி அதனை வழிபடத் தொடங்கினர். இவ்வாறு தெய்வத் திருஉருவுடன் விளங்கிய இந்நீர்நிலைகள் தீர்த்தங்கள் எனவும் பெயர் எய்தின. தீர்த்தம் இறைவனுக்குச் சரிநிகராகப் போற்றப் பெற்றது. **'சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே'** என நாவுக்கரசர் தீர்த்தங்களை இறைவனாகவே போற்றினார்.

குமரகுருபரர் **'சீரலைவாய்'** என்றும், **'தெள்ளுதிரை கொழிக்கும் செந்தூர்'** என்றும் குறிப்பிடுகிறார் ஆதலின், திருச்செந்தூரின் தீர்த்தச் சிறப்பினைக் கந்தர் கலிவெண்பா வினால் அறியவியலும்.

இனி, மூர்த்தி என்பது பற்றி அறியப் பெறுவது: தன்னருளினால் பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்ற ஐந்துருவிலும் முருகன் வெளிப்படுபவன் என்பதனைக் குமரகுருபரர், 'தனாதருளின் பஞ்சவிதரூப பரசுகமாய்' என்று கந்தர் கலிவெண்பாவில் சுட்டுகின்றார்.

இறைவன் உருவமாகவும், அருவமாகவும், அருவுருவமாகவும் விளங்குபவன் என்றும் இம்மூன்றும் 'நந்தம் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு' என்றும், இறைவன் ஒருவனே மகேசுவரன் முதலிய ஒன்பது வகையாக விளங்கி 'நலந்தரு பேத' மாகக் காட்சியளிப்ப என்றும் சிவஞானசித்தியார் புகலும். முருகன் உயிர்கள் மாட்டுக்கொண்ட கருணைத் திறத்தான் உரு, அரு, அருவுரு என்னும் மூவுருவாக விளங்குபவன் என்பதனைக் கந்தபுராணம் குறிப்பிடுகின்றது. இதனை, 'ஏகத்து உருவும் அருவும் உருவுமாகிப் பருவ வடிவம் பலவாய்' விளங்கு பவன் முருகன் என்ற குமரகுருபரர் வாக்கான் அறியவியலும்.

இவ்வாறு அறியப்பெறும் மூர்த்திச் சிறப்பைக் குமர குருபரர், 'சீரலைவாய்ச், செந்திப் பதிபுரக்கும் செவ்வேளே' என்றும்; 'தெள்ளுதிரை கொழிக்கும் செந்தூரிற் போய்க் கருணை-வெள்ளம் எனத் தவிசின் வீற்றிருந்து' என்றும் அருளுகின்றார். புறநானூற்று (55) அடிகள் 'வெளிய தலையையுடைய திரை யலைக்கும் செந்திலிடத்து நெடிய முருகவேள் நிலை பெற்றதனைக் குறிப்பிடுகின்றன.

இனி, கந்தபுராணச் செய்தியினைச் செந்திலம்பதியின் தலவரலாற்றுச் செய்தியாகக் 'கந்தர் கலிவெண்பா' மணம் பெறச் செய்துள்ளதனை அறியவியலும். இச்செய்தி பின்வருமாறு அமைக்கப்பட்டுள்ளது.

கந்தபுராணத்தின் இறுதிக்காண்டமாகிய தட்ச காண்டத்தில் சூரபதுமன் விண்ணவர்களைத் துன்புறுத்திய காரணம் விவரிக்கப் படுகிறது. இதனால் இதுவே, முதற்காண்டமாகக் கோடற்குரிய தாம். இரண்டாவது அமைந்த அசுர காண்டத்தில், சூரபதுமன்

உள்ளிட்ட அசுரர்களின் தோற்றமும் வாழ்வும் விண்ணவர்கள் துன்புற்றதும் ஆன செய்திகள் காணவியலும்.

இவ்விரு காண்டங்களின் வரலாற்றை உள்ளடக்கியதே 'வெந்தகுவார்க்கு ஆற்றாத விண்ணோர்' என்று அடிகள் அருளும் தொடராகும். இத்தகைய விண்ணோர் இறைவனிடம் முறையிட அப்பெருமானும் ஐந்து முகத்தோடு அதோ முகமுங் கொண்டு அம்முகங்களினின்றும், ஆறு தீப்பொறிகள் எழுமாறு செய்து அப்பொறிகள் சரவணப் பொய்கையில் கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு ஒரு திருமுருகனாக விளங்கி அருளினன் என்பர்.

அவ்வாறு தோன்றிய பெருமானின் பெருமையும் விளையாடல்களும், இறைவன் ஆணை வழி நின்று தாரகனை அழித்துச் செந்தூருக்கு எழுந்தருளுவதும் ஆகிய வரலாறுகளை அடிகள் 21 கண்ணிகளில் சுருங்கிய சொற்களால் பொருள் விளங்க விரித்துக் கூறுகிறார்.

அசுர காண்டத்திறுதியில் உள்ள அசுரர் சிறைபுகு படலத்தில் வியாழன் மூலம் அசுரர்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் கேட்ட முருகப்பெருமான் இந்திரனுக்கு அஞ்சல் அளித்தான் எனக் கூறப்பெற்றுள்ளது. இதனை 'வெள்ளைக் கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்து' என்ற தொடரால் அடிகள் குறிப்பிடுகின்றார். மகேந்திர காண்டம் முருகப்பெருமானின் ஆணை வழி வீரவாகு தேவர் சூரபதுமனிடத்தில் தூது சேறலும் அதற்கு அவன் இணங்காமையும் விரித்துரைக்கிறது. இதனை 96 ஆவது முதல் 98 ஆவது வரை உள்ள கண்ணிகளில் விளக்குவர். வானவரை வணங்காத சூரபதுமனின் நால்வகைப் படைகளையும், தம்பி, மகன் ஆகியோரையும் அழித்து தேவர்களைச் சிறை வீடு செய்த பகுதி இக்காண்டத்தில் விவரிக்கப்படுகிறது. இதனை ஆறு கண்ணிகளில் அடிகள் குறிப்பிடுகின்றார்.

இதற்கப்பால் குமரகுருபர அடிகள் தம் ஊரில் எழுந்தருளி யுள்ள கைலாய நாதர் மீது கைலைக் கலம்பகம் பாடியுள்ளார். இவர் இலக்கண விலக்கியங்களையும் திருவருளால் கற்றுத் தேர்ந்தார். பின்னர்ப் பல சிவத்தலங்களையும் சென்று வழிபட எண்ணி மதுரை சென்றார்.

இனி, அம்மதுரைத்தல வரலாறு பற்றிய செய்தியினைக் கூறுவோம்.

மதுரையின் திருநாமங்கள்; ஆலவாய், கடம்பவனம், கூடலம்பதி, நான்மாடக்கூடல் போன்ற பல. இவற்றுள் திருவாலவாய் என்று ஒருவர் சொல்லக் கேட்டவரே அறத்தை அடைவர். திருவாலவாய் என்று நினைத்தவரே பொருளை யடைவர்; திருவாலவாயைத் தரிசித்தவரே இன்பத்தை அடைவர். இவ்வூரில் எப்பொழுதும் வசித்தவரே வீடுபேற்றை அடைவர் என்பதனால் தலச்செய்தி சிறப்பிக்கப் பெறுகிறது. 'அறம் பொருளின்பம் வீடடைதல்' என்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

திருவாலவாயின் தீர்த்நச் சிறப்புப் பற்றித் திருவிளையாடற் புராணம் கூறுவது;

''தெய்வவித் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டினாலும்
அவ்விய வினையி னீந்தி யரும்பெறல் வீடு சேர்வர்;
இவ்வுரை மெய்யே யாகு மென்னெனின் மனத்தா றன்றி
வெவ்வழற் றீண்டினாலும் சுடுமன்றி விடுமோ அம்மா''

என்று திருவிளையாடற் புராணப் பாடல் தீர்த்தப் பெருமை பேசுகிறது.

இனி மூர்த்திச் சிறப்புப் பற்றி கூறப்படுவது:

திருவாலவாயில் வீற்றிருந்தருளும் சோமசுந்தரக் கடவுளாகிய மூலலிங்க மூர்த்தியின் பெருமை அளவிடற்கரிது. மேருமலை, மந்தர மலை, கைலாயம், திருக்கேதாரம்; காசி முதலான இடங் களில் சிவலிங்க மூர்த்திகள் தோன்றுவதற்கு முன்னரே கடம்ப மரத்தடியில் ஞான ஒளி வடிவாகிய இச்சிவலிங்க மூர்த்தி தோன்றியது, ஆதலின் இச்சிவலிங்கம் மூலலிங்கம் எனவும் பெயர் பெறும். ''முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி'' என வரும் அப்பர் பெருமான் வாக்கும்; ''மேதினி தோன்று முன்னஞ் செவ்வியின் முளைத் தெழுந்த திப்பியலிங்கம்'' என வரும் திருவிளையாடற் புராண அடிகளும் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கவை.

இத்தகைய சிறப்பு மிக்க மதுரைத்திருத்தலத்தில் எழுந்தருளி யுள்ள மீனாட்சியம்மை மீது அடிகளாற் பிள்ளைத்தமிழ் பாடப் பெற்றுள்ளது. குமரகுருபர அடிகளாற் பாடப்பெற்ற பிள்ளைத்

தமிழ் இரண்டனுள் ஒன்று மீனாட்சி அம்மை மீதும் மற்றொன்று முத்துக்குமாரசாமி மீதும் பாடப்பெற்றுள்ளன. இவற்றுள் ஆண் பால் பெண்பால் பிள்ளைத்தமிழ் இலக்கண அமைதியைக் காண வியலும் 'பிள்ளைத்தமிழ்' என்ற அளவிலே தமிழ்பயில்வார்க்கு மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழே முதலில் நினைவில் நிற்கும்.

பிள்ளைத்தமிழ் பாடப் பெறுங்காலத்து, அக்காலத்தரசராகிய திருமலைநாயக்கர் மீனாட்சியம்மை அருளால் அதனைத் தெரிந்து அப்பிள்ளைத் தமிழை அம்பிகை திருமுன் அரங்கேற்றுவித்தனர். அப்பிள்ளைத் தமிழின் வருகைப் பருவத்து "தொடுக்குங் கடவுட் பழம்பாடல் தொகையின் பயனே" என்னும் செய்யுளுக்குப் பொருளுரைக்கும்போது மீனாட்சியம்மையார் சிவாச்சாரியாரின் மகள் போன்று தோற்றம் கொண்டு அரசர் கழுத்திலணிந்திருந்த மணிவடத்தைக் கழற்றிக் குமரகுருபர அடிகள் கழுத்திலிட்டு மறைந்தருளினார் என்பது தலவரலாற்றுச் செய்தியாகக் குறிப்பிடப் பட்டுள்ளதனை அறிய இயலும்.

சைவசமயக் கடவுளரைப் போற்றிப் பாராட்டும் இவர் ஏனைய தெய்வங்களையும் உரிய இடங்களிற் பரவிச் செல் கின்றார் என்பதனைத் திருமால் காப்புக் கடவுளாக அமைந்த மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ்ப் பாடல் ஒன்றால் அறிய வியலும்.

தாமரை மலரில் தங்கியிருக்கின்ற பெண் தெய்வமாகிய திருமகள் ஒரு கையை அணையாகக் கொடுத்து அடுத்துச் செல்லவும் பாம்பு கொண்ட வளைவாகிய படங்கள் அமைந்த பாயின் சுருள் திரட்சியையுடைய தோள் பிடரியை வருத்தவும், பழமறைகள் முறையிட்டுப் பின் செல்லும் முறைமை வாய்ந்த திருமால் பைந்தமிழ்ப் பின் சென்றனன், என்னும் காஞ்சித்தல வரலாற்றுச் செய்தியினை மதுரைத்தல நாயகி பிள்ளைத்தமிழில் அடிகள் பாடுவது நயமிக்கது.

அதே பாடலின் முன்னிரண்டு அடிகளில் கூறப்பட்ட செய்தி யினை அறிவோம்.

பிரம கொலைப்பாவம் பற்றப்பட்ட இந்திரன் வியாழ பகவான் யோசனைப்படி பூலோகத்தில் தலப்பயணம் செய்து காஞ்சி முதலிய தலங்களைக் கடந்து கடம்ப வனம் அடையும் போது தன் மீது பற்றப்பட்டிருந்த பிரமகொலைப் பாவம்

நீங்கக் கண்டு வியப்புற்று அங்குக் கோயில் கொண்டிருந்த சோமசுந்தரப் பெருமானை வணங்கினான். பின்னர், அப்பெருமான் தனக்கு விண்ணிலிருந்து வரவழைக்கப்பட்ட விமானம், ஆதிசேடன், திக்கயங்கள், முப்பத்திரண்டு சிங்கங்கள், அறுபத்து நான்கு சிவ கணங்கள் ஆகியவற்றால் தாங்கப்பட்டு, தேவதச்சனால் ஆக்கிக் கொடுக்கப்பட்டது. அதனில் அங்கயற் கண்ணியையும் சோமசுந்தரக் கடவுளையும் வீற்றிருக்கச் செய் தான். மதுரைத்தல வரலாற்றுச் செய்தியை யுட்படுத்திக் கூறிய இப்பாட்டில், 'மால்களிறுபிடர் வைத்த வளரொளி விமானத்து' என்கிறார் அடிகளார்.

மதுரைக் கலம்பகத்தில் தல வரலாற்றுச் செய்திகள்:

குமரகுருபரர் மூன்று கலம்பகங்களைப் பாடியுள்ளார். அவற்றுள், மதுரைக் கலம்பகம் ஒன்று. கலம்பகம் என்பதற்குப் பலவகைப் பொருள் கூறப்படினும், பலவகை மலர்களும் கலந்தமைந்த கலம்பக மாலையென்று பொருள் கொள்வதே பொருந்தும் என்பர்.

இனி, மதுரைக் கலம்பகத்தால் அறியப்பெறும் தல வரலாறாகக் கூறப்பெறுவனவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

தல சம்பந்தமாக அமைந்த பிரபந்தங்களில் அவ்வத்தல வரலாறுகளை இடைப்பெய்து விளக்குதல் கவிஞர் இயல்பு. விசேடண மாத்திரமாக அமைத்தலினும் கற்பனைகளில் அமைத்துக் காட்டுதல் புலமைத் திறத்துக்கு அடையாளம் என்பர். குமரகுருபரர் அவ்வாற்றலிற் சிறிதும் குறையுடையவரல்லர். அப்பொருளமைந்த பல செய்யுட்களில் அவ்வக் கிளவிப் பொருளுக் கேற்பத் தலச்செய்தியை இணைத்து ஒன்றனுக்கு ஒன்று இன்றியமையாத வண்ணம் அடிகள் புனைந்திருத்தலைக் காணவியலும்.

மதுரைக் கலம்பகத்தில் மதுரைத்தலத்தில் சோமசுந்தரக் கடவுள் இயற்றிய திருவிளையாடல் செய்திகள் அகத்துறைச் செய்திகளோடு கலந்தமைந்து பொருளைச் சிறப்பிக்கின்றன.

சோமசுந்தரக் கடவுள்பால் காமுற்ற மகளிர் கூற்றாக அமைந்துள்ள கலம்பகப் பாடல் ஒன்று, 'கடம்பாடவிச்சுந்தரரே! தேவரீர்பால் மையலுற்று உம்முடைய கொன்றை மாலையை

யாம் விரும்பி நிற்ப எமக்குஉன் மத்தின் பெருவாழ்வாகிய பித்தநிலையையா தருவது. இந்திரன் பழியை நீக்கினாலும் எம்மை வருத்துவதாகிய பெண்பழிபோமோ? என்கிறாள்.

இதனை அடிகள் ... ... 'கடம்பாடவிச்சுந்தரரே நும் தடந்தோள் குறித்திங் கணைந்தேமெனிற்பின் தரும்பேறுன் மத்தின் பெருவாழ்வோ? என்கிறார். இச்செய்தி மதுரைத் தலத்தில் நிகழ்ந்ததாகலின் மதுரைத் தலவரலாற்றின் பாற்பட்டது.

செவிலி கூற்றாயமைந்ததொரு கலம்பகப் பாடல்: தடாதகைப்பிராட்டியார் திருமணச் செய்தியை எடுத்துக்காட்டி ''முன்னர்ப் பாண்டியர் திருமகளாகிய கன்னியை மணந்தல்லவா கன்னிநாடெய்தப் பெற்றீர்? இப்போது என் கன்னியையும் ஏற்றலின் பின்பும் செல்வமுண்டாகும் (164) என்று தலைவியை ஏற்றுக்கொள்ள வேண்டுகிறாள். இதனை,

''கன்னியை மணந்தே யன்றோ கன்னிநாடெய்தப் பெற்றார்,
மின்னிவண் முயக்கம் பெற்றால் வெறுக்கை மற்றிதன் மேலுண்டோ, கொன்னியல் குமரிமாடக் கூடலம் பதியுளார்க்கே''
என்றுவதாக மதுரைத்தலச் செய்தி அமைந்துள்ளது.

மற்றுமொரு கலம்பாடலில் கூறப்படும் செய்தி தல வரலாறாகக் கொளற்பாலது.

தெப்பத் திருவிழாவில் சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து மயல்பூண்ட தலைவி, தனக்குச் சைத்தியோபசாரம் செய்யும் தோழியரை நோக்கி ''சொக்கப்பிரானைக் கரையேற்றிய காமமடுவிற்பட்ட என்பால் பின்னும் குங்குமச் சேற்றைக் கொட்டக் கரையேறவிடாமல் தடுக்கின்றீர்களே (173) என்று கூறுவதாக அமைந்துள்ளது பாடல்.

இனி, மதுரைக் கலம்பகம் போன்றதே காசிக்கலம்பகம். காசித்தலத்தை அவிமுத்தம், ஆனந்தவனம் என்றும் விசுவ நாதரை அகிலேசர், காசிநாதரென்றும், விசாலாட்சியம்மையைப் பெருந்தடங்கண்ணம்மை ஆனந்தவல்லியென்றும் கூறுவர். இங்குள்ள மணிகர்ணிகைத் துறையும் சிறப்பிக்கப்படுகிறது. இங்கே உயிர்கள் இறக்கும்போது விசுவநாதர் எழுந்தருளிவந்து பிரணவோபதேசம் செய்வாரென்பதும், அவ்வுயிர்கள் சாரூபம் பெறுமென்பதும் சொல்லப்படுகின்றன. இச்செய்தியை

அகத்துறையோடு பொருத்தியமைத்த செய்யுட்கள் காசிக் கலம்பகத்தில் வருகின்றன.

சந்திரனது தண்கதிரைப் பெறாமல் வெம்பும் தலைவி யொருத்தி கூறுவதாக அமைந்துள்ளது. விசுவேசர் தம் அடியாருக்குச் சாரூபம் வழங்குகையில் ஒவ்வொருவருக்கும் ஒரு கலையையுடைய பிறையை அணியத் தருகின்றார். இவ்வாறு பலருக்குக் கலைகள் கொய்து கொய்து கொடுக்கவும் இந்த மதிக்கொழுந்து வளர்ந்து கொண்டே இருக்கின்றது. என்ன வியப்பு (610) என்று வியக்கின்றாள்.

இறைவரது மாலை பெறாமல் வருந்தும் தலைவி ஒருத்தி மாலைக்காலம் வந்துவிடுமே மதிக்கொழுந்து தோன்றுமே நம் விரகதாபம் கண்டு நம் சுற்றத்தார் நகுவாரே என்று ஏங்குகின்றாள். பிறகு நகைத்தாள் நமக்கென்ன நமக்குத்தான் உயிர்போய் விடுமே. அப்பால் காசிப் பிரானைத் தரிசிக்கலாம். அவரது கொன்றை மாலையையும் பெறலாம் என்று துணிவு கொள்கிறாள் என்பதாக அமைந்துள்ளது ஒரு பாடல்.

காசியில் பாவஞ் செய்தவர்க்கு யமதண்டனை இல்லை என்பதும் வயிரவர் தண்டனை மட்டும் உண்டென்பதும் புராண வரலாறு. இதனைத் தலைவி,

''ஆமோ வவிமுத்தத் தையரே பெண்பழிவீண்
போமோ வயிரவர்தஞ் சாதனமும் பொய்யோ?''

என்கிறாள்.

ஒரு தாமத்தை தாராமல் நிற்கும் தேவரீர் பரந்தாமத்தைத் தருவது எங்ஙன முண்மையாகுமென இதில் ஒரு நயம் தோற்றியது. ஒருதாமம் – கொன்றை மாலை, பரந்தாமம் – முத்தி.

குமரகுருபர அடிகள் தாம் பிறந்த பாண்டிய நாட்டைச் சிறப்பித்தது போலவே, சோழநாட்டுத் தலங்களுக்கும் சென்று அத்தல சம்பந்தமான சிற்றிலக்கியங்களைப் பாடியருளி யுள்ளார்.

குமரகுருபர அடிகள் சோழநாட்டுத் தலங்களுள் ஒன்றான திருவாரூர் பற்றிக் குறிப்பிடுவதைக் காண்போம்.

நான்மணிமாலை என்பது வெவ்வேறு வகையான நான்கு மணிகளைத் தொடுத்தமைத்த மாலை போல வெண்பா கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்பவை முறையே அந்தாதியாக அமைய நாற்பது செய்யுட்கள் பாடுவது. நான்மணிமாலையில் அகத்துறைச் செய்திகளும் கலந்து வருகின்றன.

திருவாரூர் பூமி தேவியின் இதய கமலாகவும் விளங்கிற் றென்றும் அடிகள் குறிப்பிடுகின்றார். அவ்வூரில் தேவாசிரய மென்னும் திருக்காவணமாகிய திருமண்டபம் உண்டென்றும் அடிகள் குறிப்பிடுவர். இம்மண்டபத்தில், சிவனடி மறவாச் சிந்தையராகிய நாயன்மார் திருக்கூட்டம் அமர்ந்திருக்கும் என்றும் குறிப்பிடுவர்.

திருவாரூரிலுள்ளார் அனைவரும் சிவகணங்களாகத் தோற்றுவரென்பதும் கூறப்படுகிறது. இங்ஙனம் தோற்றுதலை நமிநந்தியடிகள் புராணத்தில், 'திருவாரூர்ப் பிறந்து வாழ்வா ரெல்லாரும், மைவைத் தனைய மணிகண்டர் வடிவேயாகிப் பெருகொளியாம், மெய்வைத் தமர்ந்த மேனியராம் (பெ.பு. செ. 29) என்று குறிப்பர்.

இனி, நான்மணிமாலைச் செய்யுள் ஒன்றில் அடிகள் கூறுவது, 'ஓர் புலவன், பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால் சிவந்த, கண் மலர் சாத்தியுங் கண்பரிதான கழன்மலரே' என்று குறிப்பிடுவதனால், 'பண்நிறைந்த திருப் பதிகங்களாகிய மலர்களை அணிந்து' என்பதனைக் குறிப்பிடும் பாடலில்,

> "மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய வாரூரை,
> நன்னெடுங் காதன்மையா னாவலர் – கோனூரன்
> பன்னெடுஞ் சொன்மலர் கொண் டிட்டனபத்தும் வல்லார்
> பொன்னுடை விண்ணுலக நண்ணுவர் புண்ணியரே"

என்று சுந்தரமூர்த்தியாரே குறிப்பிடுவதனை எடுத்துக் காட்டுவர். இதனால் திருவாரூர்த் தல வரலாறு கூறப்பட்டுள்ளதனை அறிய வியலும்.

இனி, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் குறிப்பிடும் தல வரலாற்றுச் செய்திகள் சிலவற்றை யறிவோம். அடிகளால் பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் இரண்டனுள் முத்துக்குமாரசாமிப்

பிள்ளைத்தமிழ் என்பதும் ஒன்று. இது பற்றிய தல வரலாற்றுள் சிலவற்றைக் கூறுவோம்.

புள்ளிருக்கு வேளூராகிய வைத்தீசுவரன் கோயிலுக்கு பல திருநாமங்கள் உண்டு என்பது முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் என்னும் நூலிலிருந்து தெரிய வருகிறது. ''வேதபுரி கந்தபுரி புள்ளூர் எனப் பொலியும் வேளூர்'' எனத் தலப் பெயரை நிரல்படுத்திக் கூறுவர் அடிகள். (செ. 14)

அங்குள்ள சித்தாமிர்த தீர்த்தத்தைச் சிறப்பித்துக் கூறு முகமாக இத்தலத்தில், திருக்கோயில், விபூதி குண்டத்திலிருந்து வெண்சாந்தெடுத்தும், அங்க சந்தானத் தீர்த்தத்தினின்று மண் எடுத்தும் உண்டார் நோய் நீங்கிச் சுகம் பெறுவர் என்பது அத்தலச் செய்திகளில் ஒன்றாக அறியப் பெறுகிறது. இதனை அடிகள்,

''திருமுன்னர் அள்ளியிடு வெண்சாந்தும் மற்றைத்
திருச்சாந்தும் நிற்கவற்றாச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையொன்றே அமையுமால்''

என்று குறிப்பிடுகின்றார்.

இனித் தில்லைத் திருத்தல வரலாறு கூறுவோம்.

சிதம்பரத்தைத் தில்லை, தெய்வப்புலியூர், புண்டரீகபுரம், புலியூர், பெரும்பற்றப் புலியூரென்னும் நாமங்களாற் குறிப்பர். அத்தலம் விராட்புருடனது உள்ளக் கமலமென்பர்.

புண்ணிய தீர்த்தம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது சிதம்பரத்திலுள்ள சிவகங்கையே யாகும்.

புகழ்ந்து ஏத்துதற்குரிய சிறப்பினையுடைய தலம் பெரும் பற்றப் புலியூராகிய சிதம்பரமேயாகும்.

எல்லோரினும் மேம்பட்ட மூர்த்தியாக உள்ளது தில்லை அம்பலக் கூத்தனது திருஉருவமேயாகும்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றினாலும் உலகில் சிறந்து விளங்குவது சிதம்பரத்தலமே என்பதை விளக்குவதனை இப்பாடல் மூலம் குறிக்கின்றார் அடிகள்.

"தீர்த்தம் என்பது சிவகங்கையே!
ஏத்தருந் தலம் எழிற்புலியூரே!
மூர்த்தி அம்பலக் கூத்தன துருவமே!"

என்பது அப்பாடல்.

தில்லை அம்பலவன் திருநடனத்தை உளக்கண்ணால் அனுபவித்த இம்முனிவர் பிறரையும் அக்காட்சி பெறும்படி ஒரு செய்யுளில் அறிவுறுத்துகின்றார். இதனை,

"ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும்
பசும்பொன் மன்றத் தொருதாள் ஊன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந்து அகில மாடக்கருங்
கொண்டலோ டுங்குழல் கோதையோ டுங்கறைக்
கண்டனா டும்திறங் காண்மினோ! காண்மினோ!

என்கிறார்.

நடன தரிசனம் கண்டிர் யமபய மிலராவ ரென்பதையும் முத்தியடைவ ரென்பதையும் சில செய்யுட்களில் தெரிவிப்பதாக அறிகிறோம்.

இனி, இறுவாயாக, குமரகுருபரர் இயற்றியனவாக அறியப் பெறும் சிற்றிலக்கியங்களில் பொதிந்துள்ள தல வரலாற்றுச் செய்திகளை இவ்வுரையின்கண் ஓரளவே எடுத்துக் காட்ட இயன்றது. இனி, எடுத்துக் காட்ட வேண்டிய தல வரலாற்றுச் செய்திகள் பல உள. அவை அனைத்தையும் திரட்டி நிரல்படத் தந்தால் அதுவே ஒரு நூலாக விரியும் என்பதில் ஐயமில்லை. இத்தல வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்வதன் மூலம் ஒவ்வொரு திருத்தலத்தின் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்பினை அறிந்து கொள்ள இயலும். மேலும் அத்தலத்தின் வரலாற்றுச் செய்திகள் தல நம்பிக்கைகள் முதலியவற்றை அறிந்து கொள்ள இயலும்.

# நீதிநெறி விளக்கத்தில் கல்வி நெறிகள்

மு. அம்பிகாபதி, புதுக்கோட்டை.

கல்வி முழுமையானது. அது வாழ்க்கையோடு தொடர்புடையது. உண்மையான கல்வி, வாழ்க்கை முழுவதும் நிகழக் கூடியது. நம் பழைய கல்விமுறை பொதுக்கல்வி முறையாக இருந்ததில்லை. குரு வாழும் இடத்தில் சென்று, தங்கிப் பயிலும் குருகுலக் கல்வி முறையாகவே இருந்தது. மேலும் தொடக்கத்தில் கடவுளை அறிந்து கொள்வதற்காகவும், அறிந்து வழிபடுவதற்காகவுமே கல்வியின் நோக்கமாக இருந்தது. இதனையே,

> "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்" (குறள்–2)

எனும் குறள் உணர்த்துகின்றது.

பிறவாமையை அடைய கல்வி ஒன்றே வழி, அதனைக் காலந்தோறும் கற்க வேண்டும், கற்றவழி நிற்க வேண்டும், நிற்பதோடு மட்டுமல்லாது உலகத்தோடு ஒட்ட ஒழுகல் வேண்டும், என்றெல்லாம் பழந்தமிழ்க் கல்வி வலியுறுத்து கின்றது. மேலும்,

> "கல்லாதார் நெஞ்சில் கடவுளும் நிற்க மாட்டார்"
> (திருநாவுக்கரசர் தேவாரம்)

> "கல்லாத மூடரைக் காணாவு மாகாது
> கல்லாத மூடற்சொற் கேட்கக் கடனன்று
> கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராய்
> கல்லாத மூடர் கருத்தறி யாரே"
> (திருமூலர் திருமந்திரம்–317)

என்று சூழ்நிலைகளையும் சுட்டிக் காட்டி நல்வழிப் படுத்து கின்றது. இவர்தம் வழி வந்து, இளமையிலே மொழியிழந்து பின் இறையருளால் பேசுந்திறன் பெற்ற குமரகுருபரர் கூறும் கல்வி நெறிகளை நீதிநெறி விளக்கத்தினின்று காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சிற்றுயிர்க்குற்ற துணை**

நீரில் எழும் குமிழியை ஒத்த இளமையையும், அந்நீரில் எழும் அலையை ஒத்த செல்வத்தையும், அந்நீரின் மேல் எழுதப்பட்ட எழுத்தை ஒத்த உடலையும் கொண்டது இம்மனித வாழ்க்கை, இம்மனித வாழ்க்கையில் அவனுக்குத் துணையாக எப்போதும் நிற்பது கல்வி ஒன்றே.

ஏனெனில் அக்கல்வியே அவனுக்கு நன்னெறியையும், நிறை செல்வத்தையும், நல்லின்பத்தையும் வீடுபேற்றையும் கொடுக்கும். இவையல்லாமல் உலகத்தில் நல்ல புகழையும் தேடித் தரும். துன்பம் வந்துற்ற காலத்துக் கைகொடுக்கும் துணையாகவும் திகழும். இதனை,

> "அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
> புறங்கடை நல்லிசையும் நாட்டும் – உறும் கவலொன்(று)
> உற்றுழியுங்கை கொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
> சிற்றுயிர்க்(கு) உற்ற துணை" (நீ. நெ. வி. 2)

என்றுரைக்கிறார் குமரகுருபரர்.

ஈண்டு 'சிற்றுயிர்' என்று மனித வாழ்வை நினைவுபடுத்தி அதற்கு உற்றதுணை கல்வியே எனும் ஆசிரியர், கல்வியால் 'அறம், பொருள், இன்பம்' எனும் மூன்றும் ஒருசேர விளையும் தன்மையோடு, அதன்பின் விளையும் நன்மையாக 'வீடுபேறும்' கிடைக்கும் என்கின்றார். மேலும் இம்மைக்கும், மறுமைக்கும் வழிவகுப்பது கல்வி ஒன்றே என்கிறார். இக்கருத்து,

> "ஒருமைக்கண் தான் கற்றகல்வி ஒருவற்கு
> எழுமையும் ஏமாப் புடைத்து" (கல்வி–8)

எனும் குறளையும்

> "மறுமைக்கு அணிகலம் கல்வி" (பா. 521)

எனும் திரிகடுகப் பாவையும்

> "அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே"
> (நூற்பா. 10)

எனும் நன்னூலாரின் கருத்தையும் அடியொற்றி நிற்கிறது.

'உறுங் கவலொன்று உற்றுழியும் கைகொடுக்கும்' எனும் கூற்று.

''இழுக்கல் உடையுழி ஊற்றுக் கோலற்றே
ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்'' (கேள்வி. 5)

எனும் வள்ளுவன் கருத்தை வலியுறுத்துகின்றது.

''இன்பமும், வீடும், நல்லிசையும், உற்றுழியும்''

என்று பல உம்மைகள் கொடுத்து அழுத்தி உரைப்பதன் மூலம் குமரகுருபரர் கல்விக்குச் சிறப்பு எத்துணையளவு கொடுத்திருக் கிறார் என்பதனை நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

**துன்பமல்ல இன்பமே**

கல்வியானது பயிலத் தொடங்கும்போது துன்பம் தருவது போல் காட்டிப் பின்னர் இன்பம் பயக்கும். அத்தோடு அறியாமையை அழித்து அறிவையும் பெருகச் செய்யும். ஆனால் நெடுங்காம ஆசையோ இன்பத்தை முதலில் கொடுத்து பின்னர் துன்பத்தை பலவழிகளில் கொடுக்கும். எனவே, மனித மனங்கள் எது நிலைத்த இன்பம் என்று கண்டு கொள்ள வேண்டும். 'இன்பத்திற்கு பின் வரும் துன்பத்தைவிட, துன்பத்திற்கு பின் வரும் இன்பமே சிறப்பானது'. இதனையே,

''தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடங்கொன்று அறிவாற்றும் கல்வி – நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்!
பிற்பயக்கும் பீழை பெரிது'' (பா. 3)

என அழகாக எடுத்துரைக்கிறார்.

கல்வியைப் பற்றிக் கூறவந்த வள்ளுவர் 'கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை' என்று நான்கு அதிகாரங்களில் அதன் அருமை, பெருமைகளைப் பற்றிப் பேசுகின்றார். 'கல்வி கற்பதால் வரும் பெருமைகளையும், கல்லாததால் வரும் சிறுமைகளையும் கல்வியை எப்படி எல்லாம் அடையலாம்' என்றெல்லாம் கூறிய வள்ளுவர் அக்கல்வியைக் கற்கும்போது என்ன நிலை அடைய நேரிடும்? என்பதை மட்டும் எடுத்தோத வில்லை. ஆனால் குமரகுருபரரோ, ''மனிதனே அஞ்சாதே!'' கல்வியைக் கற்கத் தொடங்கும் போதுதான் அது உனக்குப் புரியாததுபோல நின்று அச்சுறுத்தும். துன்பம் நல்கும்! ஆனால் அதன் அருமைகளை அறிந்து, சற்றே நீ முயன்று ஒருமுகப் படுத்தி கற்றுக் கொண்டு விட்டாயேயானால் பின் வரும் காலமெல்லாம் அது உனக்கு இன்பத்தை அள்ளிக் கொடுத்துக்

கொண்டே இருக்கும். கல்வியைக் கற்காது, சிற்றின்பச் செயல்களில் மனதைச் செலுத்தி விட்டாயேயானால், தொடக்கத்தில் சில மணித்துளிகளுக்கு இன்பம் தந்து, பின்னர் வாழ்நாள் எல்லாம் உனக்கு அது துன்பம் தந்து கொண்டே இருக்கும் என்று தெளிவுபடுத்துகின்றார். ஏனெனில் நிலையில்லாதது ஆசையினால் வரும் இன்பம். அதனாலன்றோ பெரியவர்களும் 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்றனர்.

உலகில் எது நிலைத்தது, எது பயனுடையது, எது வாழ்வைச் சிறக்கச் செய்வது? என்று உணர்த்தும் கல்வியைக் கற்க அஞ்சாதே என்று தட்டிக் கொடுத்து ஊக்கப்படுத்தும் குமரகுருபரர், கல்வியை விடுத்து காமத்தில் இறங்கினால் என்ன பெறுவாய் என்று சுட்டிக்காட்டி எச்சரிக்கையும் செய்கிறார். மனிதனை மிருகமாக்குவது காமம். ஆனால் மனிதனை தெய்வமாக்குவது நல்ல கல்வி அன்றோ! ஆக, முதல் பாடலில் கல்வியே அனைத்தும் நல்கும் என்றுரைத்த புலவர் அதனைப் பெற முதலில் வரும் துன்பத்தைக் கண்டு துவண்டு விடாதே என்று தெளிவுபடுத்துகிறார்.

### கற்ற கல்விக்கு அழகு

துன்பமுற்று இவ்வாறு கற்ற கல்விக்கு அழகு சொல் வளமிக்க மனிதனாக கற்றோர் அவையிலே தன் கருத்தை எடுத்து மொழிதலே ஆகும் (நீ.நெ.வி.பாடல்-4). அவ்வாறு மொழியும் திறனை ஒருவர் பெற்றாரேயானால் பொன்னாற் செய்த மலர் மணம் பெற்றது போலாகும். (நீ.நெ.வி.பாடல்-5). தான் கற்றதைக் கற்றோர் முன் சொல்ல அறியாதவராக இருப்பாரேயானால் அவர் அச்சபை நடுவே தோன்றா திருத்தலே நன்று என்று கற்ற கல்விக்கு அழகு எது, அழகின்மை எது என்று உணர்த்துகின்றார். இதனையே வள்ளுவரும்,

> 'இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
> உணர விரித்துரையா தார்''
>
> (குறள்-650)

என்று மொழிந்து இருக்கிறார்.

''ஆன்றவிந்த சான்றோருட் பேதை புகலின்னா''

என்கிறது இன்னாநாற்பதும். (பா. 17)

**கேடில் விழுச்செல்வம்**

நான்முகனால் படைக்கப்படும் உடம்புகள் எல்லாம் அழிந்து போவன. ஆனால், புலவர்களால் படைக்கப்படும் நூல்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாயினும் அழியா நிலை உடையன. இதனால் அழிந்துபோகும் வெற்றுடம்பைப்படைக்கும் நான்முகனைக் காட்டிலும், அழியா உடம்புகளைப் படைக்கும் புலவர்கள் உயர்ந்தவர்கள் அல்லவா? (நீ. நெ. வி. பாடல்-7) என்கிறார் குமரகுருபரர். இதனைத்தான் வள்ளுவனும் ''கேடில் விழுச்செல்வம் கல்வி'' என்றார்.

**பேதமைமிகு கல்வி**

கற்றவற்றை மறந்து மீண்டும் கற்றல், கையிலிருந்த மிகுதியான பொருளைக் கீழே சிதறவிட்டு, ஒவ்வொன்றாக மீண்டும் பொறுக்கி பொருளைச் சேர்ப்பது போன்ற பேதமை மிக்க செயலாகும். இதனை,

> ''வருந்தித் தாம் கற்றன ஓம்பாது மற்றும்
> பரிந்து சில கற்பான் தொடங்கல் – கருந்தனம்
> கைத்தலத்து உய்த்துச் சொரிந்திட்டு, அரிப்பு அரிந்தாங்கு
> எய்த்துப் பொருள் செய்திடல்'' (நீ. நெ. வி. 8)

என்று மிக அழகாக எடுத்துரைக்கின்றார்.

இவ்விடத்தில் 'சொரிந்திட்டு, அரிப்பு அரிந்தங்கு' என்ற சொற்களால் பேதையாரின் செயல் கண்டு எள்ளி நகையாடு கிறார். எனவே கற்றதை மறவாமல் போற்ற வேண்டும். முதுமொழியும் இதனைத்தான்,

> ''மேதையிற் சிறந்ததன்று கற்றது மறவாமை''

என்கிறது.

**நல்லழகு கல்வியே**

முழுமணிகளால் ஆக்கப்பட்ட ஆபரணத்திற்கு வேறு ஆபரணங்கள் வேண்டியதில்லை. அதேபோல கற்றுணர்ந்த பெரியோர்க்கு வேறு அணிகலன்கள் வேண்டியதில்லை என்பதனை,

> 'கற்றோர்க்கு கல்வி நலனே கலன் அல்லால்
> மற்றோர் அணிகலம் வேண்டாவாம் – முற்ற
> முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
> அழகுக்கு அழகு செய்வார்'' (பா. 13)

என்கிறார். என்ன அழகான வினா? அழகுக்கு அழகு செய்ய யாரேனும் நினைப்பாரோ என்று!

. 'குஞ்சியழகும் கொடுந்தானைக் கொட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து
நல்லம்யாம் எனும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு'

எனும் நாலடியார் கூற்று குமரகுருபரரால் உண்ணப்பட்டிருப்பது உணர முடிகிறதல்லவா? மேலும்,

"எழுத்தின் வனப்பே வனப்பு" எனும் ஏலாதிக்கருத்தும், "சொல்லின் வனப்பே வனப்பு" எனும் சிறுபஞ்சமூலக் கருத்தும் ஈண்டு எண்ணி உண்ணத்தக்கது.

**கற்கும் வகை**

'முழுவதூஉம் கற்று விட்டோம்' என்று ஒருவன் தன்னிறைவு கொண்டு விடக்கூடாது. அவ்வாறு எண்ணில் சிறு உளியில் மலை பிளக்கப்படுவது போல சிறிது கல்வியறிவுடையரால் பெருங்கல்வியறிவு உடையவர் வெல்லப்பட்டு விடுவர். எனவே 'கற்றனம் என்று களியற்க' (நீ. நெ. வெ. பாடல்–14) என்று எச்சரிக்கை விட்டு, அடக்கத்தோடு இருக்கக் கூறுகிறார். இதனால் தானே,

'கற்றது கையளவு கல்லாதது உலகளவு' என்றும்,
'கல்விக்கரையில கற்பவர் நாள்சில' (நாலடியார். 5)

என்றும் பெரியோர் உரைத்துள்ளனர். ஏனெனில் 'குறைவறக் கற்றவன் கோடியில் ஒருவன்' அன்றோ? இதனைத்தான் நான்மணிக்கடிகையும்,

'குணன் அடங்கக் குற்றம் ஊனும் ஒருவன்
கணன் அடங்கக் கற்றானும் இல்' (102)

என்கிறது. தம்மை விட கற்றவரைக் கண்டு நாம் கற்றது போதாது நாம் அவரை விடக் கற்க வேண்டும் என்ற எண்ணம் கொள்ள வேண்டும் என்பதைக் குமரகுருபரர்,

"... ... ... ... ... ... ... ... தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்து அழிக, கற்றது எல்லாம்
எற்றே இவர்க்கு நாம்"

என்கிறார். இதனால்தான் சித்தர்களும் 'மனம் அடங்கக் கற்பதே கல்வி' என்று சிறப்பித்துரைத்தனர். வள்ளுவனும்,

'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்கு
கற்றனைத் தூறும் அறிவு' (குறள் – 396)

என்று குரல் விடுத்தார்.

**கற்றோர் செயல்**

தம்மினும் அறிவில்லார் தன்னைக் குறைவாகப் பேசி உயர்ந்தவர் போல் காட்டிக் கொள்ளும்போது எடையுடைய தராசுத்தட்டு தாழ்ந்து, வெற்றுத்தட்டு உயர்ந்து நிற்கும் நிலை போல் அமைதியாய் இருத்தல் வேண்டும். (நீ. நெ. வி. பா. 16) ஏனெனில் நிறைகுடம் நீர் தளும்பாது. குறைகுடம் கூத்தாடும் என்பதுதானே உலகம் கண்ட உண்மை.

நான்மணிக்கடிகையும் இதனைத்தான்,

"கற்றார்வாய்ச் சாயினும் தோன்றா கரப்புச் சொல்"
(பா. 96)

என்று உரைத்தது.

கற்று, பிறர்க்கு உரைத்து விட்டு அதன்வழி நில்லாதவனை இவ்வுலகம், சொன்ன சொல் பின்பற்றாது ஏன் எனக் கேட்டு நாணப்பட செய்யுமாம். எனவே கற்றவழி நிற்க என்கிறார் குமரகுருபரர் (பா. 20) வள்ளுவரும்,

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக (குறள் – 391)

என்றார். புரியாதவரிடத்து சொல்லாதிருப்பதே நலம். அதனை விடுத்துச் சொல்லின், சொல்பவர் குற்றமே அன்ற உணர இயலாதவர் குற்றம் அன்று. எனவே பிறருக்கு புரியும் வகையில் சொல்ல கற்றல் வேண்டும். (பா. 23)

இவ்வாறெல்லாம் நன்கு கற்றறிந்தவன் தன்னைத்தானே வியந்து கொள்வது (பா. 17) இழுக்கையே கொண்டு வரும். எனவே கற்றமை சிறக்கும் வண்ணம் கற்றோர் செயல் புரிய வேண்டும். தாம் கற்ற கல்வியை விற்பவர் நரகத்துள் புகுவார் (பா. 21) என்று தண்டனை கிடைக்கும் தன்மைதனையும் எடுத்தோதுகிறார்.

**கல்லாதார் இழிவு**

கற்க வேண்டிய முறை கற்பவன் இருக்க வேண்டிய முறை எல்லாம் கூறிய குமரகுருபரர், கல்லாதவன் கற்றவர்முன் பேசமுயல்வது. ஆண் மக்களால் விரும்பப்படும் பெண்மைத் தன்மையைப் பெற்றிருந்தாலும் பெண்ணின் இன்பத்தை பேடிகளால் பெறுதல் இயலாத தன்மையை ஒத்ததாகும் என்று சுட்டிக் காட்டுகிறார்.

**விதி விலக்கு**

கல்வியின் சிறப்பை உணர்ந்து கற்றிருந்தாலும், சிலபோது கற்றவர்பின் செல்லாது இந்த உலக மக்கள், செல்வர் பின்னால் சென்று விடுவர். கற்றவனைக் குறை கூறி, கல்லானைப் பாராட்டியும் நிற்பர். (நீ. நெ. வி. 9, 10) எனவே வறுமையுற்றார் கல்வி சிலபோது துன்பம் நல்கி நிற்கவும்கூடும் என்கிறார். ஆனால் கல்வி கற்பவர் கலங்கல் வேண்டா என்றும் துன்பத்தைத் தாங்கும் துணிவும் பெறுவீர், கல்வி கொண்டு நல்லவனாகவும், செல்வம்மிகு வல்லவனாகவும் மாறிக் கொள்வீர் என்று பிற பாடல்கள் மூலம் மறைமுகமாக அறிவுறுத்துகின்றார் குமரகுருபரர்.

# அடிகள் வாக்கில் பழிப்பும் புகழ்ச்சியும்

மு. அருணகிரி, மதுரை

தமிழ் இலக்கியத்திற்கும், சமய இலக்கியத்திற்கும் வளம் சேர்த்தவர்கள் பலர். இவற்றின் மூலமாகத் தாம் கொண்டிருந்த தமிழ் உணர்வையும், மக்களுக்கு உணர்த்த வேண்டிய தமிழ், வாழ்க்கை, சமய நெறிகளையும் வெளிப்படுத்தினர். இவ்வரிசையில் குமரகுருபரர் தனியிடம் பெறுகின்றார்.

திருவைகுண்டத்திலே பிறந்த இவர், திருச்செந்தூர் முருகப் பெருமானால் பேச்சுத்திறனும், கவித்திறனும் பெற்று, பல்வேறு புனிதத் தலங்களுக்குச் சென்று அக்கடவுளர் மீது இலக்கியங்கள் படைத்துச் சிறப்புப் பெற்றவர். தமிழ்மொழியும், வடமொழியும் நன்கறிந்து பிரபந்தங்கள் படைத்து அவற்றில் பல்வேறு உத்திகளைக் கையாண்டு தான் கூற நினைத்த செய்திகளைத் திறம்பட வெளிப்படுத்தியவர். அவர் கையாண்ட உத்திகளுள் ஒன்றை எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

இலக்கியத்திற்குச் சிறப்புத் தருவது இலக்கியச்சுவையே ஆகும். சுவைகளுள் ஒன்றே 'அணி' ஆகும். தண்டியலங்காரம் எனும் நூல் 35 விதமான அணிகளை எடுத்துரைக்கும். அவற்றுள் ஒன்று இலேச அணி ஆகும்.

> 'குறிப்பு வெளிப்படுக்கும் சத்துவம் பிறிதின்
> மறைத்துரை யாடல் இலேச மாகும்'

என்பது இலேச அணி பற்றிய செய்தி. அதாவது கருதியதை வெளிப்படுத்தும் சத்துவமாகிய குணங்களை, பிறிது ஒன்றால் நிகழ்ந்தனவாக மறைத்துச் சொல்லுவது இலேசம் எனும் அலங்காரம் ஆகும். இதனையே புகழ்வது போலப் பழித்தல், பழிப்பது போலப் புகழ்தல் என்றும் இருவகைப்படுத்துவர். தவறு ஒன்றைக் கண்டவிடத்து அதனை நேரடியாகப் பழிக்காது புகழ்வது போலச் சில சொற்களைக் கூறி மறைமுகமாகப் பழிப்பதும்; புகழவேண்டிய ஒன்றை நேரடியாகப் புகழாமல் பழிப்புச் சொற்களைக் கையாண்டு புகழ்கின்ற தன்மையும்

இலக்கிய உத்திகளாகப் புலவர் பெருமக்களால் பெரிதும் கையாளப்பெற்றன.

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபர அடிகள் பெருந்துறவியாகவும் சிவநெறிச் சான்றோராகவும், தமிழ் ஆர்வலராகவும் இருந்தார். உலகமக்கள் கடைபிடிக்க வேண்டிய உயர்ந்த ஒழுகலாறுகளை நீதிநெறி விளக்கம் எனும் நூலுள் விளக்கியுள்ளார். இவ்வாறு விளக்கும் போது புகழ்வது போலப் பழிக்கும் உத்தியைக் கையாண்டுள்ள பாங்கு வியக்கத்தக்கது.

**புகழ்வது போலப் பழித்தல்**

உலகில் பொருள்வளம் பெற்றவர் உண்டு. பெருஞ்செல்வம் இருந்தும், அவற்றால் பிறருக்கு எவ்விதப் பயனும் இராது. எவருக்கும் ஒரு சிறிதளவு கூடப் பொருள் தராத கருமியாக இருப்பர். ஆனாலும் இத்தகைய பொருளுடைய கருமிகளைத் தாமே வலியச்சென்று அணுகி அவர்களுக்காகப் பணிகளைச் சிலர் செய்வர். இது இவ்வுலகில் நடைபெறும் பெரும் பான்மையான வழக்கமே. இதனைக் கண்ட குமரகுருபரர் இத்தகைய செயலுக்கு ஒரு காரணம் கற்பிக்கின்றார். முன் பிறவியில் தவம் செய்தவர்கள் இப்பிறவியில் எல்லா வளமும் பெறுவர்; முற்பிறவியில் தவம் செய்யாதவர்கள் இப்பிறவியில் வறுமையில் வாடுவர். தவம் செய்த அவர்களைப் பின்பற்றுவது தவறு அல்லவே! கல்வியறிவால் பெற்ற பயன்தானே என்று விளக்கமும் தருகிறார் அடிகள்.

இப்பாடலில் கருமியரைப் பாராட்டுவது போலச் செய்தி இருக்கிறது. இருப்பினும் இது அவர்களது தன்மையைப் பழிப்பதற்காகவே புகழ்வது போலப் பாடப்பெற்ற இலக்கிய உத்தியாகும்.

எவருக்கும் ஈயாக் கருமிகள் சிறப்புக்களைப் பெறுதற்கு உரியவர்களே என்பதில் புகழ்ச்சி அமைவதையும்; நற்குணம் பெற்றோர் பிறரை அண்டி வாழ வேண்டியிருக்கிறது என்பதில் இகழ்ச்சி அமைவதையும் இங்குக் கண்டாலும் கருமிகளை இடித்துரைப்பதே அடிகளின் நோக்கமாகும் என்பதை உணரலாம்.

"இவறன்மை கண்டும் உடையாரை யாரும்
குறையிரந்தும் குற்றேவல் செய்ப – பெரிதும்தாம்

முற்பகல் நோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை அன்று''

என்பது நீதிநெறி விளக்கப் பாடல். சிவநெறியில் பிடிப்புடைய ராதலால் இரு வினைகளைவும், அவற்றால் ஏற்படும் விளைவு களையும் இப்பாடலில் காட்டுகின்றார் அடிகள். இதனையே வுள்ளுவரும்,

''இலர் பலர்ஆகிய காரணம் நோற்பார்
சிலர் பலர்நோலா தவர்''

என்று விளக்குவார். ஆற்றல் இல்லாதவர் பலராக உலகில் இருப்பதற்குக் காரணம், தவம் செய்கின்றவர் சிலராகவும் தவம் செய்யாதவர்கள் பலராகவும் இருப்பதே ஆகும் என்பது இதன் பொருள்.

''கற்க கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக''

என்பார் வள்ளுவர். படிப்பனவற்றைக் குற்றமின்றி முழுமையாகக் கற்க வேண்டும். இதனினும் மேலாகப் படித்தவற்றில் உள்ள கருத்துப்படியே நடந்துகாட்ட வேண்டும். இப்படி இருப்பவர்கள் சிறப்புடையோர். ஆனால் உலகில் கற்றறிந்த பலர் தாம் கற்றவற்றைப் பிறருக்குத் தெளிவாக உரைத்து உணர்த்த வல்லவர்களாக இருப்பதில்லை. தாமும் கற்றபடியே நடந்து காட்டுவதும் இல்லை. இருப்பினும் அவர்களது வெற்றுரைக்குத் தான் வலிமை உண்டு என்று குமரகுருபரர் உணர்த்துகின்றார். ''கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம் நில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரைக்கு உண்டு ஓர் வலியுடைமை'' என்பது அவர் வாக்கு. இதில் அவர்களைப் புகழ்வது போல இருந்தாலும், உண்மையில் அவர்களை இடித்துரைக்கவே – கற்றபடியே அவர்கள் ஒழுக வேண்டும் என்பதை உணர்த்தவே இவ்வாறு கூறியுள்ளார் எனலாம்.

திருவள்ளுவரும் 'கல்லாதவரும் நனிநல்லர்' என்று கல்லாதவர்கள் மிக நல்லவர்கள் என்று இம்முறையிலேயே கூறுகின்றார்.

**பழிப்பதுபோலப் புகழ்தல்**

இலேசு அணியில் உள்ள மற்றொரு வகையே பழிப்பது போலப் புகழ்கின்ற பாங்கு. இத்தகைய முறையிலும்

வல்லவராகத் திகழ்கின்றார் குமரகுருபர அடிகள். இதனைத் தான் வடநூலார் நிந்தாஸ்துதி என்றுரைப்பர்.

காசிக்கலம்பகம் எனும் நூலில் இத்தகைய உத்தியைக் கையாண்டுள்ளார்.

எல்லாம்வல்ல சிவபெருமான் தன் கையில் மண்டை ஓட்டை ஏந்தியிருப்பான்; அதில் பிச்சை பெற்று உண்பான் என்று புராணங்கள் கூறும். இதனைத்தான் குமரகுருபரர் நிந்தாஸ்துதியாகப் பாடுகின்றார்.

உமையம்மை உலகுக்கெல்லாம் அருள் பாலிப்பவள்; முப்பத்திரண்டு அறங்களைச் செய்பவள். இவள் சிவபெருமானின் இல்லாள். இங்கு 'இல்லாள்' என்ற சொல்லைச் சிலேடையாகக் கொண்டு மனைவி என்ற ஒரு பொருளையும், ஒன்றும் இல்லாதவள் என்ற பொருளையும் கொண்டு நிந்தாஸ்துதிப்பாடல் அமைக்கின்றார். ஒன்றுமே இல்லாத ஏழையான உமாதேவியே பல அறங்களைச் செய்கின்றபோது; உலகங்களுக்கெல்லாம் தலைவனான, மிகுந்த செல்வந்தனான காசிச்சிவபெருமான் மண்டை ஓட்டை ஏந்திப் பிச்சை எடுக்கிறானே? என்று கேட்பது இகழ்வது – பழிப்பது– போலத் தோன்றினாலும் இறைவனின் எல்லையற்ற சிறப்பைப் புகழ்வதற்கேயாகும்.

''இல்லாளே முப்பத்திரண்டு அறமும் செய்திருப்ப
செல்லார் பொழிற்காசிச் செல்வனார் – மெல்லப்
பரக்கின்ற புண்ணீர் படுதலைகொண்டு ஐயம்
இரக்கின்ற வாறுஎன் சொல்கேன்''

என்பது காசிக் கலம்பகப்பாடல்.

சைவசமயத்தில் சரியை, கிரியை, யோகம் என்ற பல்வேறு சிவ புண்ணியங்கள் உண்டு. இத்தகைய சிவபுண்ணியங்களைச் செய்தோர் பதமுத்தி அடைவர். அங்குச் சாலோகம், சாமீபம், சாரூபம் ஆகியவற்றைப் பெறுவர். இங்குச் சாரூபம் என்பது தோழர்போல இறைவனோடு அளவளாவி இருக்கும் உரிமையை உடையராதல் என்பது ஆகும். இதனைச் சகமார்க்கம் எனவும், தோழமை நெறி எனவும் குறிப்பிடுவர்.

இருவினைப்பயனால் இவ்வுலகில் பிறந்த மக்கள் காசிக்குச் சென்று, கங்கையில் நீராடி, இறைவனை வழிபட்டு, அவன்

திருவடி அடையவேண்டும் என்று நினைப்பர். இந்நினைப்பினா லேயே, காசித்தலத்தை அடையும் வரை தம் உடலை நன்கு பாதுகாத்துப் பேணி வளர்ப்பர். இவ்வாறு உடலை நன்கு பாதுகாத்து வளர்ப்பது எதற்கு? என்ற வினாவினைக் குமரகுருபரர் எழுப்பி, அதற்கு விடையாக, அங்குச் சென்றவர் அடைவது முடைத்தலை, எலும்பு, சாம்பல் போன்றவைதான் என்று விடையிறுக்கின்றார். காசியில் பெறுகின்றவற்றை இழிந்த பொருள்கள் போலச் சுட்டிப் பழிக்கின்றார். ஆனால் இத்தகைய சிவச்சின்னங்களைக் காட்டுவது சாரூபம் என்ற உயர்ந்த நிலை என்று உணர்த்துவதற்கே எனலாம். எனவே இங்குப் பழிப்பது போன்று புகழ்கின்ற உத்தியைக் கையாள் கின்றார்.

"முத்திக்கு வேட்டவர் மோட்டுடல் பாரம்முடைத்
தலையோடு
அத்திக்கும் சாம்பற்கும் ஏம்பினரால் இவையன்றி அப்பால்
சித்திப்பது மற்றிலைபோலும் காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவலமே பலமாகப் பலித்ததுவே"

இதில் உலகியலில் இழிந்த பொருள்களைத் தரும் சொற்களைப் பயன்படுத்தி, அவற்றின் மூலம் உயர்ந்த பொருள்களை உய்த்துணரச் செய்கின்ற பாங்கு சிறப்புடைத்து.

பிறிதோர் பாடலில் இறைவனை என்றும் விடாதுநின்று பற்றி இருப்போருக்குக் கிடைப்பது விடம்தான் என்றும், இறைவனை நினையாது இருப்போர் பெறுவது இன்பம் தரும் உலகப்பிறப்பு என்றும் கூறுவதும் நிந்தாஸ்துதி ஆகும் (காசிக் கலம்பகம்-84). 'காசிப்பிரான் உடம்பு என்பது என்போடு ஊன் என்று விட்டொழிந்தார் களிப்பார். உவட்டாத இன்பத்தேன் என்று அடைந்தவற்கு உண்ணக் கிடைப்பது தீவிடமே' என்பதில் சாரூப நிலையின் உயர்வு சுட்டப்படுகிறது.

குமரகுருபரர் உலக மக்களுக்கு வேண்டிய நீதிகளையும், சைவ சமயத்தின் சிறப்புக்களையும், இறைவனின் திருவடிப் பேற்றினை அடையவேண்டிய தன்மையினையும் தம் இலக்கியங்களில் பெரிதும் வலியுறுத்துகின்றார். அப்போ தெல்லாம் இலக்கிய உத்திகளைக் கையாள்கின்றார். அத்தகைய உத்திகளுள் ஒன்றான பழிப்பும், புகழ்ச்சியுமே இக்கட்டுரையில் விளக்கப்பெற்றது.

# கலிவெண்பாவில் சைவ சித்தாந்தம்

மு. அருணாசலம், கரூர்

இந்தியா மெய்பொருளியல் எனப்படும் சமயத்துறையின் தொட்டிலாக விளங்கி வருகின்றது. இந்து, சமணம், புத்தம் போன்ற தொல் சமயங்களின் தோற்றுவாயாக இருந்துள்ளது. இந்து சமயத்தின் ஆதாரப் பொருளாக ரிக், யஜுர், சாமம், அதர்வணம் எனும் நான்கு வேதங்களும் அவற்றுக்கு விளக்கமாக உபநிடதங்கள், ஆகமங்கள், ஆரண்யங்கள், பிராமணங்கள் போன்ற நூல்களும் உள்ளன. தமிழ்நாட்டின் தொன்மைச் சமயமாக விளங்கி வருவது சைவ சமயமாகும். இதைத்தான் தொல்காப்பியரும்

> "கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"

என்று சைவ சமயச் செய்திகளை மேற்கூறிய நூற்பாவில் குறிப்பிடுகின்றார். சங்க இலக்கியங்களான பரிபாடல், திருமுரு காற்றுப்படை போன்றவை சைவ சமயக் கருத்துக்களை மிகுதியாகக் கூறியுள்ளன. சைவ சமயம் தமிழ்நாட்டில் பக்தி இயக்கக் காலத்தில் மறுமலர்ச்சி பெற்று இன்று வரை தமிழர்களால் கடைபிடிக்கப்பட்டு உயிர்ப்புடன் திகழ்ந்து வருகின்றது. இவ் ஆய்வுக் கட்டுரை குமரகுருபரரால் அருளப் பட்ட திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பாவில் அமைந்துள்ள சைவசித்தாந்தக் கருத்துக்களை ஆராய்கின்றது.

**கந்தர் கலிவெண்பாவின் அமைப்பு முறை**

குமரகுருபரர் ஐந்து வயது வரை பேச முடியாமல் ஊமையாக இருந்த காலத்து திருச்செந்தூர் முருகன் அருளால் பேச்சாற்றல், பாடும் ஆற்றல், கல்வி ஆற்றல் போன்றவை வாய்க்கப் பெற்றார். இக்காரணம் பற்றி குமரகுருபரர் முருகப்பெருமான் மீது கொண்ட பக்தியால் பாடியருளிய முதல்

நூல் கந்தர் கலிவெண்பாகும். இது 'குட்டிக் கந்தபுராணம்' என்றே சைவ அடியார்களால் வழங்கப்படுகின்றது. இந்நூல் சைவ சித்தாந்தக் கருத்துக்களைச் சுருக்கமாகவும், தெளிவா கவும், தொகுத்தும் தந்துள்ளது. சைவ சித்தாந்தத்தின் சிறப்பு பற்றி குமரகுருபரரே

> ''ஓரும் வேதாந்தம் என்றுச்சியில் பழுத்த
> ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரங்
> கொண்ட சைவ சித்தாந்தம்''

எனப் புகழ்ந்துள்ளார்.

கந்தர் கலிவெண்பாவில் முதல் 36 கண்ணிகளே சைவ சித்தாந்த கருத்துக்களை விளக்கி நிற்கின்றன. பிற கண்ணிகள் முருகப்பெருமானின் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றன. கந்தர் கலிவெண்பா

* முதல் 6-7 கண்ணிகளில் சிவபெருமானின் சொரூப நிலை பற்றிக் கூறுகின்றது.
* 7-10 கண்ணிகள் சிவபெருமானின் தடத்த நிலை பற்றிக் கூறுகின்றது.
* 11-16 கண்ணிகள் சிவன் பல்வேறு வடிவங்களில் ஆட்கொண்டருளுதலைக் கூறுகின்றது.
* 17-22 கண்ணிகள் இறைவன் ஆன்மாக்களுக்குச் சொர்காதி போகம் பதி முக்தி முதலியவற்றைக் கொடுத்து சத்திநிபாதம் பதித்தற்கு தக்க காலத்தை எதிர்நோக்கி அருளுவதைக் கூறுகின்றது.
* 23-24 கண்ணிகள் இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்புரிய குருபரனாய் எழுந்தருளி வருவதைப் பற்றிக் கூறுகின்றது.
* 25-32 கண்ணிகள் இறைவன் பக்குவ ஆன்மாக்களுக்குத் திருவருள் புரியும் முறை பற்றிக் கூறுகின்றது.
* 33-36 கண்ணிகள் இறைவன் ஆன்மாக்களுடன் அத்து விதமாக நின்று, அடிமை கொண்டு முக்தி அளிப்பதைக் கூறுகின்றது.

சிவனும், முருகனும் தந்தை, மகன் என்ற உறவு வைத்துக் கூறப்பட்டாலும் இவர்கள் இருவரும் ஒருவரே என்பதைச் ''சிவனே குகன்'', ''குகனே சிவன்'' என்று பதிநூல்கள் கூறுகின்றன. இதைத்தான் கந்தபுராணமும்

''ஈசனே அவன் ஆடலால் மதலை ஆயினன் காண்
ஆசிலா அவன் ஆறுமுகத் துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனொடு பேதகன் அல்லன்
தேசுலா ஆங்கவன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்''

என்று பாடியுள்ளது. இதன் மூலம் கந்தர் கலிவெண்பாவில் முதல் 36 கண்ணிகளில் சிவபெருமானுக்குக் கூறப்பட்ட கருத்துக்கள் முருகக் கடவுளுக்கும் பொருத்தமாக அமையும். இனி, 36 கண்ணிகளில் அமைந்துள்ள சைவ சித்தாந்த கருத்துக்கள் பற்றிக் காண்போம்.

**பரமசிவத்தின் சொரூப நிலை**

உலக உயிர்கள் முதல்வனைப் பல முறையில் உணர்ந்து மெய்யுணர்வின் நிறைநிலை எய்துதற் பொருட்டு சிவாகமங்கள் அவன் இயல்பைச் சொரூப நிலை, தடத்த நிலை என இருவகைப்பட உரைக்கும்.

சொரூபம் தன்னியல்பு. அதாவது சச்சிதானந்தம் (உண்மை, அறிவு, இன்பம்) என்னும் வடிவில் மெய்யுணர்ந்தோரால் அனுபவிக்கப்படும் இயல்பு. இதைத்தான் சிவஞான போதத்தின் ஆறாஞ் சூத்திரம்,

''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது, அசத்து இலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா''

என்று குறிப்பிடுகின்றது. இவ் இயல்பு நிலையில் இறைவன் சிவம், சிவன் என்றும், நிர்க்குணன் என்றும் அழைக்கப்படுவான். அதாவது பிரகிருதிகளின் குணங்களாகிய சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களில் இருந்து நீங்கியுள்ளவன் என்று பொருள்படும். இதைத்தான் திருமூலரும் ''முக்குண நிர்க்குணன்'' என்கின்றார். மெய்கண்டார் ''நிர்க்குணனும், நின்மலனும், நித்யானந்தனும் தற்பரமாவானும், உவமித்தறியப் படாத தனி முதல்வனுமாகியனும், ஆகாசம் முதலிய தத்துவங்

களினின்றும் நீங்கிய உயிருக்குக் காட்சியளிப்பவனுமாகிய இறைவன் உயிருக்குக் கடந்து விளங்கும் அற்புதமாயும் விட்டு நீங்காத அறிவுக்கு அறிவாயுந் தோன்ற மாட்டனோ'' என குறிப்பிட்டுள்ளார். குமரகுருபரர் சிவனின் சொரூப நிலைகளை

''நாதமுநா தாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் – ஆதி நடு
அந்தம் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தம் தணந்த பரஞ்சுடராய் வந்த
குறியும் குணமுமொரு கோலமும் அற்(று) எங்கும்
செறியும் பரம சிவமாய் – அறிவுக்(கு)
அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக் கெட்டா வடிவாய் – தனதருளின்
பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் எஞ்சாத
பூரணமாய் நித்தமாய்ப் போக்குவரவும் புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் தாரணியில்''

என்று பல்வேறு நிலைகளில் சிவனின் சிறப்பு இயல்பை வெளிப்படுத்தியுள்ளார்.

**தடத்த நிலை**

தடத்த நிலை என்பது சிவனின் பொது இயல்பைப் பற்றிப் பேசுவதாகும். சிவனே உலகிற்கு அடிநிலையாக இருப்பவன். அவன் உருவம், அருவம் ஆகிய இரண்டுமாக இருப்பவன். அத்துவிதக் கலப்பாக உலகில் உள்ள எல்லாப் பொருளினிடத்தும் கலந்து நிற்பவன்.

தனக்கொரு கரு இல்லாச் சுயம்பு மூர்த்தியாகத் திகழ்பவன். இந்நிலையை மாணிக்கவாசகரும்

''நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடெண் வகையாய்ப் புணர்ந்து
நின்றான்''

என்று குறிப்பிட்டுள்ளார். மனம், புத்தி, சித்தம் எனும் மூன்று உட்கரணங்களால் வரும் இச்சா, ஞானம், கிரியா சத்திகளால் இலயம், போகம், அதிகாரம் எனும் இவற்றை உடைய

பொருளாக இருப்பவன். இறைவன் ஞானசத்தியின் மூலம் கிரியா சக்தியால் இவ் உலகைப் படைப்பான். இவ்விரண்டு சத்தி களையும் இறைவனையும் பிரிக்க முடியாது. இத்தகைய இறைவனின் பொது இயல்புகளைக் குமரகுருபரர்

> "இந்திரசா லம்புரிவோன் யாவரையும் தான் மயக்கும்
> தந்திரத்திற் சாராது சார்பது போல் – முந்தும்
> கருவின்றி நின்ற கருவாய் அருளே
> உருவின்றி நின்ற உருவாய்த் – திரிகரணம்
> ஆகவரும் இச்சை அறி(வு) இயற்ற லால் இய
> போக அதி காரப் பொருளாகி"

என்ற கண்ணிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

## இறைவன் பல வடிவங்களில் ஆன்மாக்களுக்கு வினைப் பயனை அளித்து மறைதல்

ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டு பரமசிவன் தன்னுடைய நிலையிலிருந்து இறங்கி அருவத் திருமேனி, அருவுருவத் திருமேனி, உருவத் திருமேனி, அவ்வவ் காலத்தில் கொள்ள மாகேசுவர வடிவங்கள் ஆகியவை மூலம் அடியவர்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப அதாவது ஆணவ மலத்தை நீக்கி அசுத்த மாயையில் இருந்து சுத்த மாயைக்கு அழைத்துச் செல்லத் தன்னுடைய கருணையை அவர்களுக்கு அருளுவான். இவற்றில் அருவத்திருமேனி வடிவம் ஏதுமின்றி இருப்பது. இது சிவம் சத்தி நாதம் விந்து என்று நான்கு வகைப்படும். இவற்றைப் பின்வரும் மாயை முறை மூலம் விளக்கலாம். அதாவது சுத்த மாயையில் இருந்து தோன்றி வருவதாகும்.

**மாயை**

- சுத்தமாயை (ஆணவம், கன்மம் கலவாத நிலை)
  - நாதம் (சிவதத்துவம்; ஞானசக்தி சுத்தமாயையை இயக்குவதால் தோன்றுவது)
  - விந்து (சக்தி தத்துவம்; நாதத்தை கிரியா சக்தி இயக்குவதால் உண்டாவது)
  - சாதாக்கியம் (ஞானமும், கிரியையும் சமநிலையில் இயங்குவதால் உண்டாவது)
  - மகேசுவரம் (ஞானத்தோடு கிரியை மிகுதியாக தொழிற்படும் போது மகேசுவரம் தோன்றும்)
  - சுத்தவித்தை (மகேசுவரத் தினின்று ஞானம் தொழிற்படும் போது உண்டாவது)
  - ஐந்து தத்துவங்கள் சிவதத்துவம் அல்லது பிரோத காண்டம் எனப்படும்.
- அசுத்த மாயை
  - (மோகினி மயக்கஞ் செய்வதால்)
  - சிவன் இயக்குவதில்லை.
  - சுத்தமாயையில் இருந்து தோன்றிய தேவர்கள் இயக்குகின்றனர்.
  - சிவனின் சக்தியால் அசுத்த மாயையில் இருந்து காலம், நியதி, கலை எனும் மூன்று தத்துவங்களைத் தோற்று வித்தனர்.

சுத்தமாயையில் இருந்து வாக்கின் தொகுதி தோன்றும். வாக்கு நான்கு வகைப்படும்.

பரை – மேலானது, நுட்பமானது

பைசந்தி – பிரித்தறிய முடியாமலும்; சிறிது தூலமாகவும் இருப்பது.

மத்திமை – முன்னதினும் தெளிவாக, கேட்க முடியாததாய் விளங்குவது.

வைகரி – தெளிவாகக் கேட்க கூடிய ஒலி, எழுத்து, சொல் மூலம் வெளிப்படும். இச்சக்தியை இலக்கண நூலார் ஸபோட்டா என்பர். சுத்தமாயையின் முதல் விருத்தியாகும்.

**அசுத்த மாயை**

↓

கலை (கலையில் இருந்து வித்தை, அராகம் தோன்றுதல்)

- வித்தை
  - ↓ அராகம்
  - ↓ இவ்வைந்து தத்துவங்கள் கஞ்சகங்கள் (சட்டைகள்) எனப்படும். கஞ்சகங்களின் சேர்க்கையால் உயிர் புருசதத்துவம் எனப்படும்.
- பிரகிருதி
  - சித்தம்
  - புத்தி
    - ↓ அகங்காரம்
    - ↓ இது தத்துவம், இராசதம், தாமதம் இவற்றின் முனைப்பால் மூன்று வகையாகும். இதனால் அகங்காரம் மூன்று பெயர் பெறுகின்றது.
      - தைசத அகங்காரம் பிறத்தல் → ஞானந்திரியம் → மனம் → (மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம்)
      - வைகரிய அகங்காரம் பிறத்தல் → கன்மேந்திரியம் → (வாக்கு, பாணி, பாதம், பாயுரு உபத்தம்)
      - பூதாதிய அகங்காரம் → தன்மாத்திரை எனப்படும் சூக்கும தூல பூதங்கள் தோன்றுகின்றன.

**தன் மாத்திரை**

- சத்தம் → (ஓசை) → ஆகாயம்
- ஸ்பரிசம் → (ஊறு) → காற்று
- ரூபம் → (ஒளி) → தீ
- இரசம் → (சுவை) → நீர்
- கந்தம் → (நாற்றம்) → நிலம் தூல பூதங்கள்

இவற்றோடு 36 தத்துவங்கள் நிறைவு பெறுகின்றன.

* அருவுரு திருமேனி – சிவலிங்கமாக இருத்தல்
* உருவத் திருமேனி – மகேசன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் ஆகிய நான்கு வடிவங்களாக இருத்தல்.

* பரிவ வடிவம் – அடியவர்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப 25 மகேசுவர வடிவங்களாக (சந்திர சேகரர், நடராசர்) வெளிப்படம். இம் மகேசுவர வடிவம் போக வடிவம் கோர வடிவம் யோக வடிவம் என மூன்று வகைப்படும்.

மேற்கூறப்பட்ட சித்தாந்தக் கருத்துக்களை எல்லாம் குமரகுருபரர்

''உருவம் அருவம் உருவருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய் இருள் மலத்துள்''

எனும் '11'-ம் கண்ணியில் இருந்து

''கன்மத்துக்(கு) ஈடாய்க் கறங்கும் சகடமும் போல்
சென்மித்(து) உழலத் திரோதித்து''

எனும் '16'-ம் கண்ணி வரை சொல்லியுள்ளார்.

**இறைவன் ஆன்மாக்களுக்கு சொர்க்காதி போகம் பத முக்தி கொடுத்து சத்திநிபாதம் பதித்தற்கு ஏற்ற காலத்தை எதிர் நோக்கி அருளல்.**

இறைவனை அடைவதற்கு பசுவாகிய உயிர்கள் மேற் கொள்ள வேண்டிய மார்க்கங்கள் நான்காகும். அவை, சரியை கிரியை யோகம் ஞானம் மேற்கூறிய ஒவ்வொன்றும் நான்கு வகைப்படும். இவற்றுள் சரியை நிலையில் திருக்கோயிலில் கோலமிடுதல், இறைவனது புகழ்ப் பாடல்களை இசைத்தல், இறை வழிபாட்டிற்கு உதவுதல், இறை அடியவர்களுக்கு தொண்டு செய்தல் ஆகியவை அடங்கும்.

கிரியை நிலை என்பது உயிர் இறைவனிடத்து செல்லும் நெருக்கமான நிலையில் இருந்து அவனுக்கு அன்பையும், புகழையும் அர்பணஞ் செய்தல் ஆகும்.

யோக நிலை என்பது உயிர் இறைவனைத் தோழனாகப் பாவிக்கும் நிலையாகும்.

இந்த மூன்று நிலைகளும் பதியாகிய இறைவனை அடைவதற்கு முன் உயிர் இறைத்தன்மையை பெறுவதற்கு சாதன வாயில்களாக அமைகின்றன.

சரியாபாதத்தால் உயிர் அடைவது இறைவனிடம் உறையும் சாலோகம். (இறைவன்-எஜமான் அடிமை-முறை-நாவுக்கரசர்)

கிரியையின் பயனால் இறைவனுக்கு அண்மையில் இருக்கும் நிலை சாமீபம் (தந்தை–மகன்–உறவு-ஞானசம்பந்தர்) யோகத்தின் பயனாய் இறை வடிவம் பெறுதல் சாரூபம். (சுந்தரர்)

உயிர்களுக்கு மெய்யுணர்வு ஏற்படுத்தும் நிலை ஞானம் ஆகும். இது இறைவன் அருளக் கூடியது. இந்நிலைக்குப் பெயர் 'சாயுச்சியமாகும்'. (குரு மாணவர் உறவு மூலம் ஞான நிலை பெறல் மாணிக்கவாசகர்) ஞானநிலை மேலோங்கிய நிலையில் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் எனும் நான்கு வகையான சத்திநிபாத நிலையை ஏற்படுத்துகின்றான் இறைவன்.

இறைவனின் திருவருளை உயிர்கள் பெறுவதற்கு வேண்டிய பக்குவநிலையில் நல்வினை, தீவினை எனும் சமநிலைகளை அவை அறிந்திருக்க வேண்டும் என சித்தாந்த நூல்கள் கூறுகின்றன. புண்ணிய மற்றும் பாவச் செயல்களுக்கு எவ்வித விருப்பு, வெறுப்பு இன்றி உயிர்கள் இருக்கும்போது தான் இதுவரை அறிவை மறைத்து வந்த மலம் இறைவனால் அறுக்கப்படுவதற்கு ஏதுவாகின்றது. உயிர்களின் மலத்தின் முதிர்வு நிலையே மலபரிபாகமென்பர்.

இந்த சித்தாந்தக் கருத்துக்களை எல்லாம்

"விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யா யோகம் சார்வித்து – அருள் பெருகு
சாலோக சாமீப சாருப மும்புசிப்பித்(து)
ஆலோகந் தன்னை அகற்றுவித்து – நால்வகையாம்
சத்தி நி பாதம் தருதற்(கு) இருவினையும்
ஒத்துவரும் காலம் உளவாகிப் – பெத்த
மலபரி பாகம் வருமளவில் பன்னாள்
அலமலருதல் கண்ணுற்(று) அருளி உலவா(து)

ஆகிய கண்ணிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார் குமரகுருபரர்.

**ஆன்மாக்களுக்கு அருள இறைவன் குருவாய் வருதல்**

சைவ சித்தாந்திகள் இறைவன் அவதாரம் செய்கின்றான் என்பதை ஆதரிப்பதில்லை. அடியவர்கள் தன்னை எந்த வடிவில் வழிபடுகின்றார்களோ அவ்வடிவங்களில் வெளிப்படுபவன் இறைவன் எனும் கருத்தைக் கூறுகின்றனர். அத்தகைய வடிவங்களில் உயர்ந்த வடிவம் குரு வடிவம். சகலருக்கு இத்தகைய வடிவில் வந்து அருளுவான் இறைவன். இல்லறக்

கடலில் துயருறும் உயிர்களைக் கரைசேர்க்கவே இறைவன் இவ்வடிவில் வெளிப்படுகின்றான். இதனை

> ''அருபரத்தொருவன் அவனியில் வந்து
> குருபரனாகி அருளிய பெருமையை''

என்று மாணிக்கவாசகர் திருவாசகத்தில் கூறுகின்றார். மேலும் மெய்கண்டார் சிவஞானபோதத்தில்

> ''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து ஏனத்
> தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்தவிட்டு
> அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே''

என்று இறைவன் குருவாக வந்து அருளுவதைக் கூறுகின்றார். குமரகுருபரரும் 23, 24 ஆகிய கண்ணிகளில் இறைவன் குருவாக வருவதை

> ''அறிவுக்(கு) அறிவாகி அவ்வறிக்(கு) எட்டா
> நெறியிற் செறிந்தநிலை நீங்கிப் பிறியாக்
> கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
> குருபரன் என்(று) ஓர்த்திருப்பேர் கொண்டு''

என்று குறிப்பிட்டுள்ளார்.

**இறைவன் பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்புரியும் முறைமை**

சிவன் உயிர்கள் முன் தோன்றி ஞானத்தை உபதேசிக்கின்றான். ஞான நிலையில் உள்ள உயிர் சகலாவத்தை, கேவலாவத்தை ஆகியவற்றில் இருந்து பிரிந்து சுத்தவத்தையில் திகழ்கின்றது. இந்நிலையில் உள்ள உயிர் விஞ்ஞானகலர் ஆகும். அவ் உயிரின் உள்ளத்தில் இறைவன் உள் ஒளியாகத் தோன்றுவான்.

பிரளாயாகலருக்கு தெய்வத்தன்மை வாய்ந்த உயர் வடிவில் வந்து அருளுவான்.

சகலருக்கு மானிட வடிவில் அதாவது குரு வடிவில் வந்து பார்த்தல், தொடுதல், உபதேசித்தல் போன்ற நிலைகளால் உயிர்களின் ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களை மெலிவித்து உயர்ந்த ஞான நிலை அல்லது முக்தி நிலையை அடையச் செய்கின்றான். இச்சித்தாந்த கருத்துக்களை

> ''திருநோக்கால்
> ஊழ்வினையைப் போக்கி உடலுறுபத் தெட்டுநிலம்
> ஏழு(ம்) அத்து வாக்கள். இருமூன்றும் பாழாக

ஆணவ மான படலம் கிழித்(து) அறிவில்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப் பூணும்
கண்மலத் தார்க்குமலர்க் கண்மூன்றும் தாழ்சடையும்
வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல் மின்னிடத்துப்
பூத்த பவளப் பொருப்(பு) ஒன்று வெள்ளி வெற்பில்
வாய்த்தனை தெய்வ வடிவாகி மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்(து) உள் நின்று
ஒரு மலத்தார்க்(கு) இன்பம் உதவி''

என்ற கண்ணிகள் மூலம் வெளிப்படுத்துகின்றார் குமரகுருபரர்.

**இறைவன் அத்துவிதமாக ஆன்மாக்களுடன் நின்று அடிமை கொண்டு முக்தி அடையுமாறு செய்தல்**

கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை எனப்படும் இம்மூன்று காரணவத்தைகளில் இருந்து விடுவித்து பரமுக்தியை அளிப்பவன் சிவன். உயிர் சிவத்துவம் அடைந்தது என்பது சிவனிடத்து இரண்டாக கலந்து விட்டது என்பதல்ல. தனித்த உயிராய், பொருளாய் இலங்குவது. உயிர் சிவத்துவத்தில் இறைவனது தன்மையைப் பெற்றதாக இருக்கலாம். ஆனால், இறைவனாக மாறிவிட முடியாது. மேலும், இறைஞானம் என்பது இறைவனுடைய ஞானம் அல்ல. இறைவனால் உயிர் ஞான அறிவு பெற்றது என்றே கூற முடியும். யான் எனும் அகப்பற்றும், மாமகரம் எனும் புறப்பற்றும் நீக்கி இறைவனது திருவடியை அடையும் உயிர் இருமையில் ஒருமை அனுபவத்தையே பெறுகின்றது. அதாவது, இறைவனோடு ஒன்று கலக்கும் நிலை பெறாது அவன் தன்மைகளை மட்டும் உயிர் அனுபவிக்கின்றது. இக்கொள்கையைச் சித்தாந்திகள் சுத்தாத்வைதம் என விளக்குபவர். இந்நிலைகளை குமரகுருபரர்

''பெருகியெழு
மூன்றவத்தை யுங்கழற்றி முத்தடனேயிருத்தி
ஆன்ற பரமுத்தி அடைவித்துத் - தோன்றவரும்
யான் எனதென்(று) அற்ற இடமே திருவடியா
மோனபரா னந்தம் முடியாக - ஞானம்
திருவுருவா இச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை அலரா-இருநிலமே
சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே! எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே!''

என்ற கண்ணிகள் மூலம் விளக்குகின்றார்.

# அடிகள் சுட்டும் தனிமனித ஒழுக்கம்

பா. அருள்செல்வி, ஈரோடு.

அருளாளர்களின் வரிசையில் குமரகுருபரர் சைவ சமயம் தழைக்க வழிகாட்டியவர். பல நூல்களை இயற்றும் ஆற்றலைப் பெற்ற இவர் தம் நூல்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. அதிலும் தனி மனித நிலையில் கடைப் பிடிக்கவேண்டிய நீதிகளை இவரால் இயற்றப்பெற்ற நீதிநெறி விளக்கம் தெளிவாகக் காட்டுகின்றது. இதில் கூறப்படும் நெறி முறைகள் பல நீதி இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்கவை. இருப்பினும் விரிவு அஞ்சி அக்கருத்துகள் இங்கே எடுத்து விளக்கப் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்நூலின் வழி பெறப்படுபவை மட்டும் பெரும்பாலும் இவண் தொகுத்து அளிக்கப் பெற்றுள்ளன.

### நீதிநெறி விளக்கம்

வெண்பாவால் யாக்கப்பெற்ற இந்நூல் 102 பாடல்களைக் கொண்டது. முதற்பாடல் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளது. இளமை, யாக்கை, செல்வம் இவை அழியக் கூடியவை. எனவே இம்மூன்றும் இருக்கும் காலத்திலேயே இறைவனைத் தொழ வேண்டும் என்கிறது இப்பாடல். இத்துடன் வேறு சில பாடல் களிலும் (48, 98) இறைவனைப் பற்றி இந்நூலில் கூறப் பட்டுள்ளது. இவற்றுடன் ஊழ் (92) மூப்பின் இயல்பு (34) போன்ற தத்துவக் கருத்துகளையும் இதில் நோக்க இயலும். ஒருவன் செய்யும் தீய செயல்களே அவனுக்குத் தீமை பயக்கும் என்றும் (35) அறிவில்லாத மூடர்கள் தமக்கு எத்தகைய தீமைகள் வந்தாலும் அவற்றிற்கு அஞ்சார் என்றும் (34) இந்நூலின் வழி அறியலாம். இவற்றுடன் நல்லோர் தம் இயல்புகளைக் கூறும் போது, பொய், புறங்கூறல், வன்சொல், பயனில் சொல் இவற்றைக் கூறார் என்றும் (60); நல்லன அல்லாதனவற்றிற்கு இவர் உடன்படார் என்பதைப் 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' எனும் உவமையால் இந்நூல் ஆசிரியர் விளக்குவார்

(பா. 61) இவை தவிர அரசன் அமைச்சன் ஆகியோருக்கு உரிய ஒழுக்கங்களும் இதில் காணப்பெறுகின்றன. (28 – 33; 45 – 48).

மேற்கூறியவை அல்லாத சில அறிவுரைகளைப் பின்வரும், இருபகுதிகளாக இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றன.

1. துறவிகட்கான வாழ்க்கை நெறிமுறைகள்
2. பொது நிலையில் தனி மனித ஒழுகலாறுகள்

**1) துறவிகளின் ஒழுக்கங்கள்**

துறவு நிலையில் வாழ்ந்து இறைவனைத் தேடும் முயற்சியில் உள்ள தவஞானிகளின் இலக்கணம் இந்நூலில் தெளிவாகத் தரப்பட்டுள்ளது. (85, 86, 89, 91, 98, 99, 100, 102) இவர்கள் சிற்றின்பம் விரும்பாது பேரின்பத்தை நாடுவர். ஐம்புல இன்பங்களை வெறுத்தல் என்பது இவர்தம் தலையாய கடனாகின்றது. (85) அதிலும் உணவு (86) உறக்கம் (85) இவற்றில் இவர்கள் மிகுந்த கட்டுப்பாட்டுடன் வாழ்தலை இப்பாடல்கள் காட்டுகின்றன. மேலும் இவர்கள் பெண்ணின்பத்தினைப் பெரிதும் பேணாமையை (85, 86, 89,) நீதிநெறி விளக்கம் வழி அறியலாம். துறவு நெறியில் நிற்போர் அனைத்து நற்பண்புகளைக் கொண்டிருந்தாலும் பெண் விருப்பில் அவர் மனம் சென்றால் காமுகனால் கூட பழிக்கப்பெறும் நிலையை அடைவர் (பா. 89) என்பதையும் இந்நூல் தருகின்றது.

தம் இறுதிக்காலம் வரை தவத்தை மேற்கொள்ளும் துறவிகள் இயல்பை, "... ... ... ... மெய்யுணர்ந்தார். காப்பே நிலையாய் பழிநாண நீள் கதவாச் சேர்ப்பர் நிறைதாழ் செறித்து" (பா. 79) இப்பாடல்களில் காணலாம். இங்கே ஐம்புலக் காப்பே நிலையாகவும், பழிக்கு நாணுதல் நீண்ட கதவாகவும் கொண்டு நிறைவாகிய தாழைப் போட்டுத் தம் புலன்களை அடக்கி வாழ்வர் என்று அழகிய உவமையால் நூலாசிரியர் விளக்குவர். மேலும் இவ்வுடம்பைப் பெரிதாக மதிக்காமை, (87) அறிவு நூல்களைக் கற்று, அடக்கமாய் தீநெறிகளைக் கைவிட்டு கிடைத்ததை உண்டு, மனதை ஒருநிலைப்படுத்தி, வீடடையும் வழியில் நிற்பர் என்பதையும் ஒரு பாடலில் (101) காணலாம். பண்பல்லவற்றைப் பாராட்டாத குணம் படைத்த (25) இப்பெரியோர் தம் மெய்யறிவால் அனைத்தையும் உணரும் ஆற்றல் பெற்றவராவர் (102).

இனி, பின்வருவன துறவு நெறியில் செல்லாவிடினும் தனி மனித நிலையில் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்களாகத் தெளிவு றுத்தப்படுகின்றன. இவை இங்கே மனிதன் அகநிலை மற்றும்' புறநிலையில் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்களாகப் பிரித்து நோக்கப்பெற்றுள்ளன.

**அ) அகநிலையில் பின்பற்ற வேண்டியவை**

இங்கே அகநிலையில் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் என்பன பெரும்பாலும் தனி மனிதன் தன்னளவில் கடைபிடிக்க வேண்டியனவாகும். இவை ஒவ்வொன்றாக எடுத்து நோக்கப் படுகின்றன.

**1) இல்வாழ்க்கையில் கையாள வேண்டியன**

பொது நிலையில் இல்வாழ்வை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை நீதிநெறி விளக்கம் வழி அறியலாம். தாம் செய்யும் வேலைகள் தடைப்படாமலும், கல்வி கெடாமலும், அறச் செயல்கட்குக் குறை வராமலும், இல்லற நன்மைகள் குறைவு படாமலும் இல்வாழ்வை நுகர்தல் வேண்டும் (78) என்றும் இந் நூல் கூறுகின்றது. மேலும், இல்வாழ்வில் ஈடுபடும் ஆண், பெண் இருவரும் கற்புநிலை பிறழாது வாழக் கடமைப்பட்டுள்ளனர் என இந்நூல் வழி தெரிய வருகிறது. பிறன்மனையை விரும்பும் ஆடவனின் நிலை இனிய விரும்பாது இன்னாது உண்ணும் விலங்கின் நிலையை ஒத்தது என்பதை

"திருவின் நல்லாள் மனைக்கிழத்தியேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பர் – நறுமை
வாயினவேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர் (80)

என்னும் பாடலடி விளக்கும். இவ்வாறே, கற்பிலா மகளிர் பொது மகளிரைவிடத் தாழ்ந்தவர் என்றும் (85) பெரும்பாவம் உடையவர் (84) என்றும் இந்நூல் பகிர்கின்றது.

**2) கற்றோர் பின்பற்ற வேண்டியன**

நீதிநெறி விளக்கத்தில் கல்வி, கல்விகற்றோர் எனும் இரு பகுதிகள் இடம்பெறுகின்றன. (2–17, 21–26) இவற்றுள் கற்றோர் நிற்கும் நெறிமுறைகளைப் பின்வரும் பகுதியில் காணலாம்.

அ) தாம் கற்ற கல்வியைப் பாதுகாத்தல், அவற்றைவிட்டு ஏனைய நூற்பொருளைக் கற்கத் தொடங்கல் என்பது, தான் கையில் வைத்திருந்த பொருளை வீசி எறிந்து விட்டுப் பின்னர் தேடலுக்கு சமம் என்கிறது இந்நூல்.

ஆ) தம்மை விடத் தாழ்ந்தவரிடத்தில் (கல்வி, செல்வம் இவற்றில்) தாம் தாழ்ந்து நடத்தல் (16, 17).

இ) தாம் கற்ற கல்வியை ஏற்றுக்கொள்ளும் அறிவு உடைய வருக்கே தம் கருத்தைக் கூறல் அவசியம் (25)

இக்கருத்துகளைத் தொடர்ந்து முயற்சியுடன் வாழ்தல் எனும் கருத்து வலியுறுத்தப் பெறுகின்றது.

**2) முயற்சி செய்தல்**

மனித வாழ்வில் முயன்றால் முடியாதது இல்லை. இக் கருத்துப் பற்றி சில பாடல்கள் இதில் காணப்பெறுகின்றன. (44, 53) ஒரு காரியத்தில் இறுதிவரை முயலல், (49) ஊழையும் முயன்றால் வெல்லலாம்; (50, 51) காலம், வினை, இடம் இவை அறிந்து முயலுதல் அவசியம் எனவும் இந்நூல் உணர்த்தும். முயற்சி உடையாரின் இயல்பை,

> ''மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் – செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
> கருமமே கண்ணா யினார்'' (53)

எனும் பாடலடிகள் விளக்கும்.

**புலால் உணவு உண்ணாமை**

புலால் உண்ணாக் கருத்தை இந்நூலில் ஒரு பாடலில் (97) காணலாம். இக்கருத்து அந்தணர் வேள்வியில் பசுவைக் கொல் வதைச் சுட்டிக்காட்டி, அதனால் நீவிர் புலால் உண்ணல் ஆகாது. ஏனெனில் பெரியோர் சில நேரங்களில் பிறர் பழிக்கும் செயல்களில் ஈடுபட்டாலும், அவற்றால் நன்மையே பிறக்கும் என்பதால் அச்செயல்கள் தவறாகாது எனும் கருத்து இங்கு வலியுறுத்தப்படுகின்றது. மேற்கூறும் கருத்துகளுடன் கோபம் கொள்ளாமை (58) மானம் காத்தல் (40, 41) தற்புகழ்ச்சியுடன் வாழாமை (18, 19) வீண் பொழுதினைப் போக்காமை (90) என்பனவற்றையும் எடுத்துக் காட்டலாம். இனி மனிதன் புற

நிலையில் கையாளப்பெறும் நன்னடத்தை விதிகளைப் பற்றிப் பின்வரும் பகுதியில் காணலாம்.

**சொல் பற்றியன**

நம் வாயிலிருந்து வெளிவரும் சொற்களைப் பற்றியும் நீதி நெறி விளக்கம் கூறுகின்றது. வெற்றுச் சொற்களைப் பேசாமை (71) இனிய சொற்களைப் பயன்படுத்தல் நன்று; (68) எனும் இரு கருத்துகளையும் இதன்வழி அறியலாம். இத்துடன் சொல் வன்மையே சிறந்தது (69) என்ற கருத்தையும் உள்ளடக்கியது இந்நூல். மேலும் சில நேரங்களில் நல்லோரின் கடுஞ்சொல்லும் இன்சொல் ஆகும் என்றும் தீயோரின் இன்சொல்லும், வன்சொல் ஆவதுண்டு எனவும் இந்நூல் குறிப்பிடும். இது நஞ்சு குளிர்ந்த தாயினும் கொன்றுவிடும். வெங்காரம் வெம்மையாயினும் நோயைக் குணப்படுத்தும் என்னும் உவமையால் விளக்கப் படுகின்றது. (59)

**நட்புநிலை**

நட்பில் கூடாநட்பு, (56) தீநட்பு (57) எனும் இரு நிலைகளைக் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார். இவ்விரண்டிலும் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவோரை நட்பாகக் கொள்ள லாகாது என்கிறார்.

**பொருளைப் பற்றியன**

''பொருளில்லாருக்கு இவ்வுலகம் இல்லை'' என்பதால் பொருளை நல்வழியில் ஈட்ட வேண்டும் (65, 75) பேராசை கொண்டு பெரும்பொருள் ஈட்டலாகாது (64), பொருளுக்காக வாய்மை, தவம், உரிமை போன்றவற்றை இழத்தல் ஆகாது (62), ஒருவரை வஞ்சித்துப் பொருள் தேடல் கூடாது, எனும் பல கருத்துரைகளை இந்நூல் தொகுத்து அளிக்கின்றது. மேலும் ஈட்டிய பொருளை இரப்போர்க்குக் கொடுத்து மகிழ்தல் அவசியம் என்பதையும் குமரகுருபரர் சுட்டிக்காட்டத் தவற வில்லை. (67, 68) இதனை விளக்குமிடங்களில், கொடுக்கும் இயல்பில்லாதவனின் செல்வத்தைவிட, ஈயும் மனமுடையவனின் வறுமையே நன்று என (67) தெளிவுபடுத்துகின்றார். இவர் இவற்றுடன் செல்வம் படைத்தோரை மூன்று வகையாக இவர் பாகுபாடு செய்துள்ளார். (66) தலையாயினார் செல்வம் பொது மகளிரைப் போன்றது; இடையாயினார் செல்வம் குல மகளிரைப்

போன்றது. கடையாயினார் செல்வம் கைம்பெண்ணின் நிலையைப் போன்றது எனப் பெண்டிருடன் செல்வத்தை ஒப்பிடும் பாங்கு ஆசிரியரின் கற்பனைத் திறனைக் காட்டுகின்றது.

மேற்காணும் செய்திகளுடன் பிறர் மீது பழி கூறல் கூடாது; (73, 76, 95) அடைக்கலம் காத்தல்; (37) ஒருவரைப் பற்றிக் கூற வேண்டுமெனில் அவரின் பெருமைகளை மட்டும் கூறல் வேண்டும் (21) என்பன போன்ற கருத்துரைகளையும் இணைத்து நோக்கலாம்.

**முடிவுரை**

1. இந்நூல் பழந்தமிழ் நீதிகளை அடியொற்றி எழுதப் பெற்ற தாகும்.
2. பொது நிலையில் இதில் கூறப்படும் நீதிகள் பெரும்பாலும் தனி மனித நிலையில் கடைப்பிடிக்கத் தக்கவை ஆகின்றன. ஒருசில கருத்துகள் அவர் வாழ்ந்த காலச் சூழலுக்கு ஏற்றவாறு எழுதப்பெற்றவையாகின்றன. எடுத்துக் காட்டாக, புலால் மறுப்புக் கொள்கையில் இவர் கூறிய எடுத்துக்காட்டு (அந்தணர் வேள்வியில் பசுவினைக் கொன்று விடும் பண்பு) ஏற்றுக் கொள்ளத் தக்கதாய் இல்லை.
3. செல்வமுடையோரை மகளிருடன் ஒப்பிடும் நிலை இவரது கற்பனைத் திறனுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

# குமரகுருபர சுவாமிகளின் தமிழன்பு

ப. அருள் நமச்சிவாயன், தஞ்சாவூர்

'தமிழில் இவருக்கு இருந்த அன்பு அளவிடற்கரியது. இறைவன்பால் அன்பையும், அன்பர் தொடர்பையும், துறவுள்ளத்தையும் வேண்டும் இவ்வாசிரியர், உலகியற் பொருள் களில் எதனையும் விரும்பவில்லை. ஆயினும் சொல் விற்பனமும், கவிசொல்ல வல்ல நல்வித்தையும் வேண்டுமென்ற வேட்கை மாத்திரம் இவரை விடவில்லை' என்பார் டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் அவர்கள். (குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு ஆராய்ச்சியுரை).

இவர் பிரபந்தங்களில் முதலாவதாகிய கந்தர் கலிவெண்பாவில் ''...எழுத்து முதலாமைந்திலக்கணமுந் தோய்ந்த பழுத்த தமிழ்ப்புலமைபாலித்து'' என்று வேண்டுவ தால் தமிழ் மொழியில் இவருக்கிருந்த ஈடுபாடு உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும். ''தெய்வத்தமிழ்க் கூடற் தழையத் தழைத்தவள்'' என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழிலும், ''தேத்தந்த கொன்றையான் தெய்வத்தமிழ்க் கூடல்'' என்று மதுரைக் கலம்பகத்திலும் குறிப்பிடுவதால் இம் முனிவர் தமிழினிடத்தில் தெய்வத் தன்மையைக் கண்டதை அறியலாம். தாம் பாராட்டும் தெய்வங்களையெல்லாம், தமிழின்பால் தொடர்பும், தமிழின்பால் வேட்கையும் உடையவர்களாகவும் கூறுவார். ''பண் முத்தமிழ்க்கோர் பயனே சவுந்தர பாண்டியனே'' என மதுரைக் கலம்பகத்தில் குறித்திருப்பது முத்தமிழுக்குச் சிவபெருமானே பயனாக உள்ளாரென்பது இவரது கொள்கை எனக் கொள்ளலாம். ''நறைபழுத்தத் துறைத்தீந்தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே'' என மதுரை மீனாட்சியை, மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழிலும் ''சங்கத் தமிழின் தலைமைப்புலவர்'' என்றும், ''தோலாத முத்தமிழ் நாவா'' என்றும் ''தெளிதமிழின் வடித்திடு நவரசமே'' என்றும் முருகப் பெருமானை முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலும் பாராட்டுவார்.

''மதுரமொழுகுங் கொழி தமிழ்ப்பனுவற் துறை படியும் மடநடைக் கூந்தலம் பிடி'' என்றும், ''தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடலினளன் பினைந்திணையென வெடுத்த விரை நூற் தெள்ளமுது கூட்டும் வெள்ளோதிமம்'' என்றும்

கலைமகள் தமிழின்பால் தனியுரிமை பூண்டு இருந்தலை மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழில் சிறப்பித்துச் சொல்கின்றார்.

சிவபெருமான் சுந்தரேசராகவும், அம்மை தடாதகைப் பிராட்டியாராகவும், முருகக் கடவுள் உக்கிர குமாரராகவும் அவதரித்தற்குக் காரணம் அம்மூவர்க்கும் தமிழினிடத்திருந்த வேட்கையே என்பது புலப்பட, ''தமர நீர்ப்புவன முழுதொருங் கீன்றாள் தடாதகை தேவி என்றொரு பேர் தரிக்க வந்ததுவும், தனிமுதல் ஒரு நீ சவுந்தர மாறனானதுவும், குமரவேள் வழுதி உக்கிரனெனப் பேர் கொண்டதுந் தண்டமிழ் மதுரம் கூட்டுலாவெழுந்த வேட்கையாலெனில் இக்கொழி தமிழ்ப் புலமை யாரறிவார்'' என மதுரைக் கலம்பகத்தில் கூறுவார். முருகக் கடவுள் திருவாயை ''கடவுள் மறையும், தமிழும் மணக்கும் திருவாய்'' என்பார் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்.

தம்முடைய ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரை ''நான்மறைக்கிழவ, நற்றமிழ் முதல்வ, நூன்முறை பயின்ற நுண்மை சாலறிஞ, சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞ, கற்றவர் வியக்கும் காவியப் புலவ'' என்றெல்லாம் பண்டார மும்மணிக்கோவையில் பாராட்டுவார்.

குறி சொல்ல வந்த குறத்தி தனக்குரிய பொதிய மலையின் சிறப்பைப் பேசவந்த இடத்து அம்மலை தமிழின் தொடர் புடையது என்பதனை ''தங்கு புயல் சூழுமலை, தமிழ் முனிவன் வாழுமலை'' என்றும் தென்னந் தமிழும் பசுங்குழவித் தென்றற் கொழுந்துந் திளைக்கு மலை'' எனக் கூறுவதாக மதுரை மீனாட்சியம்மை குறத்தில் சிறப்பித்துக் கூறுவார்.

திருவாரூராகிய கமலையை ''பெருமான் தமிழ்க் கமலை'' எனவும் ''ஒள்ளொளி ததும்பும் ஒண்டமிழ்க்கமலை'' எனத் திருவாரூர் நான்மணிமாலையில் அறிமுகம் செய்வார்.

அருந்தமிழ், இசைத்தமிழ், குலத்தமிழ்த் தீம்பாலமுதம், கொத்து முத்தமிழ், கொழித்தெடுத்துத் தெள்ளித் தெளிக்கும் தமிழ், கொழி தமிழ், கொழுத்த தமிழ், சங்கத் தமிழ், செழுந் தமிழ்ச் செல்வம், செழுந்தமிழ்த் தெள்ளமுது, சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ், தண்டமிழ், மதுரமொழுகு பசுந்தமிழ், தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ், தீஞ்சுவைக் கனியும், தண்டேனறையும் வடித்தெடுத்த சாரங்கனிந் தூற்றிருந்த பசுந்தமிழ், துறைத்தமிழ், தெள்ளுதமிழ், தெளிதமிழ், தென்னந் தமிழ், தேக்கமழ் மதுரமொழுகிய தமிழ், பண்ணுலாம் வடிதமிழ், புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழ், பைந்தமிழ், மதுரித்து வட்டெழு முத்தமிழ், முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ், மும்மைத்தமிழ், வண்டமிழ், வண்டமிழ்க் கடல், விரைத்தேன் பில்கும் தேத்தமிழ் என்னும் தொடர் மொழிகளால் தமிழைத் தம்முடைய பிரபந்தங்களில் சிறப்பிக்கிறார்.

''தேத்தமிழ்த் தெளிக்கும் செந்நாப் புலவீர், பாத்தொடுத்த பரஞ்சுடரை நாத்தழும்பு இருக்க வேத்துமினீரே'' என்று காசிக்கலம்பகத்தை நிறைவு செய்த சுவாமிகள் உ. வே. சா. குறித்ததைப் போல ''தெய்வங்களால் விரும்பப் பெறும் தமிழினிடத்தே அன்பு செறிந்த இவ்வாசிரியர் தம்மைப் போன்ற புலவர்களையும் தாம் சென்ற நெறியே செல்லப் பணிக்கிறார் என்று கொள்ளலாம்.

# அடிகளும் அருணகிரியும் கண்ட முருகியல்

க. அல்லி, கோவை.

'மந்த மனமுடையேம் மாசுகள் போக்குவேம்
கந்தன் திருவடி சேர்ந்து'

பெருகிவரும் தீமைகளினின்று மானிடமனம் கரையேறவும், மனித மனம் வளம் பெறவும் தனி மனிதப் பண்பாடு இன்றி யமையாதது. தனி மனிதன் பண்படுவது என்பது அவன் மனம் தூய்மை பெற்றிருத்தல் வேண்டும். இறைச் சிந்தனை மிக்குடை யார்க்கு தீய எண்ணங்கள் தோன்றா என்பதும். அவர் தீவினை புரியமாட்டார் என்பதும் திண்ணம். ஆன்மா தெளிவடைய பக்தி பரிகாரமாகிறது. தீவினைகள் மட்டுமே தீர்வென வாழ்ந்தவர் பலர் தெளிவடைந்ததும் தெய்வ அருளால் தான். இறைவனைத் தொழுபவரின் எண்ணிக்கை பெருகச் சமூகக் கொடுமைகள் சற்றே குறையும். இந்தக் கோட்பாடுகள் எல்லா நிலை மாந்தர்க்கும் சென்று சேர வேண்டும். ஆன்மிகம் செழித் தால் அகிலமே தழைக்கும் என்ற பெரும் நம்பிக்கையால் ஆன்மீகத் தொண்டாற்றிய ஆன்றோர் பலராவர். வைசத்தில் திளைத்து வையத்தைத் துதித்துத் தெய்வீகம் வளர்த்தவர்கள் ஆழ்வார்கள். தமிழ்க் கடவுளாம் அழகுக் கடவுளாம் முருகனை உள்ளத்தில் தாங்கி அற்புதப் பாசுரங்களை அவனிக்கு வழங்கிய வர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் குமரகுருபரரும் அருணகிரி யாரும் என்று சொன்னால் மிகையன்று. இன்னார் இருவரின் முருகியல் சிந்தனை முகிழ்க்கும் பாங்கினை நோக்குவாம்.

## குமரகுருபரர்

பேசத் தெரிந்தார் பரம்பரையில் பிறந்திருந்தும் குமரகுருபரர் தம் ஐந்து வயது வரையிலும் வாய் பேசாக் குழந்தையாகவே வளர்ந்து வந்தார். பெற்றோரின் மனம் பெரிதும் கவன்று அவரைத் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்று செந்திலாண்டவர் சந்நிதியில் இருத்தித் தாமும் வரம் வேண்டித் தவம் கிடந்தனர். முருகப் பெருமானின் திருவருளால் பேசும் ஆற்றலைப் பெற்றுக்

கல்வியும் கவிபாடும் திறமையும் கொண்டார். இவர் பெற்ற இத்திறனுக்குரியவரும் கல்வித் திறமும், கவித்திறமும், வழங்கிய குருவாய் முருகனைக் கருதினர்.

**முருகனின் திருவருள்**

குமரகுருபரர் இலக்கண இலக்கியங்களை விரைவில் உணர்ந்தார். பாண்டி நாட்டுச் சிவத்தலங்களை வழிபட்டு மதுரையம்பதியில் சிலகாலம் தங்கித் திருமலை நாயக்கரின் முன்னிலையில் மீனாட்சியம்மை மீது பிள்ளைத்தமிழ் பாடி அரங்கேற்றினார். நீதிநெறி விளக்கமும் மதுரைக்கலம்பகமும் இயற்றியருளினார். முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச்செய்யுட்கோவை முதலியனவும் தில்லையில் வழங்கினார்.

'புன் முறவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய் தீர்க்கும் திருமொழியும்'

என்று பாடிப்பரவுகிறார். கந்தனின் புன்முறுவலும் திருவாக்கும் பிறப்பறுக்கவல்லது என்பதனை உணர்கின்றார். ஆறுமுகனின் அழகுமுகங்களைச் சிந்தனை செய்யும் இவர் தனித்தனியே அம்முகங்களின் பேரருளை வகைப்படுத்துகிறார்.

**ஆறுமுகம்**

தெவ்வருயிர் சிந்தும் திருமுகம் என்றும், பேரின்பம் வாழ்வுதரும் செய்ய மலர் முகம் என்றும், பழமறைகள் ஆகமங்கள் யாவும் முடிக்கும் கமலமுகம் என்றும், பால் இருள்துரந்து பல்கதிரில் சோதிவிடும் வாசமலர் வதனம் என்றும், மோகம் அளிக்கும் மதிமுகம் என்றும், வரம்பலவும் தந்தருளும் தெய்வத் தாமரைமுகம் என்றும், அவர் முகஸ்துதி பாடும் முறை ஆழமான முருகியல் வெளிப்பாட்டை உணர்த்துகின்றது.

இதன்வழிச் சமுதாயத்திற்கு உணர்த்துவதாவது. மானிடர் தீமையை அழிக்கும் திறம் பெற்றிருக்க வேண்டும்.

தீயவை தீயபயத்தலான் தீயவை தீயினும் அஞ்சப்படுதல் போல் அறம் புரிந்து அல்லவை நீக்கி வாழ்வதாலும் மாந்தரின் இயல்புகளில் மகத்தானதாய் அமைய வேண்டும்.

பழவினை மறந்து புதுவினைக்கண் ஈடுபாடு கொள்ள வேண்டும்.

அதுகாறும் ஆற்றிய கொடுமைகளை விட்டொழித்து நல்லவை நாடி இனியவாறு செயலாற்றும் சிறப்பே நலம் பயக்கும். அதுவே பேரின்பம் நல்கும்.

நீதி நூல்கள் இயம்பும் நேரிய பண்புகள் மேற்கொள்ளப் பெறுதல் வேண்டும். பழையன கழிதலும் புதியன புகுதலும் சமுதாயத் தூய்மைக்குச் சாலச்சிறந்தது. வேதங்களின் கருத்துக் களைப் புதிய உலகுக்கேற்பப் புதுப்பிக்கும் ஆன்மபலம் அனைவர்க்கும் வேண்டும்.

பாசச்சுழலில் சிக்கித் தவிக்காமல் மீளவேண்டும் உள்ளத்தை ஆசையினின்று மீட்டு உயர் நெறிக்குக் கொண்டு வருதற்பொருட்டு பாசத்தின் இருளைவிட்டு பக்தி ஒளியோடு வெளிவர வேண்டும்.

உலகப்பிணைப்பில் வாழ நேர்ந்தால் உயிர்களிடத்து அன்பு பேணல் வேண்டும். ஒருவேளை உலக ஈடுபாட்டுடன் கூடிவாழ நேருமாயின் அனைத்து உயிர்களிடமும் அன்பு பேணுதல் வேண்டும்.

'அன்பின் வழியது உயிர் நிலை' எனும் நெறியைப் போற்று தலுக்கிணை தஞ்சம் எனத் தன்னிடம் வந்தாரை நெஞ்சம் குளிரப் போற்றுதல் வேண்டும். இருக்கின்றவற்றை இயன்ற அளவு யாவர்க்கும் வழங்கும் ஈகைப்பண்பு மனித இனத்தின் மேன்மையைக் காக்கும்.

**பன்னிரு கைகள்**

நல்லாரைத் துயர்ப்படுத்தும் கொடியவரை அழிக்க வல்ல உறுதிக்கரம் ஒவ்வொருவர்க்கும் வேண்டும் என்பதை

'தேவர்க்குதவும் திருக்கரம்'

என்றும்; இல்லறத்தார் தம்மனையாளிடத்தில் அன்பு பேண வேண்டும் என்பதைச்,

'சூர் மகளிர் மேவக் குழைந்தணைந்த மென்கரம்'

என்றும் வாரி வாங்கும் ஈகைக்குணம் இறைவனுக்கே உண்டென்றால் மனிதர்க்கும் தேவை என்பதை

'ஓவாது மாரிபொழிந்த மலர்க்கரம்'

என்றும்,

புகழைத் தேடும் பணியும் செய்யவேண்டும் என்பதை 'பூந்தொடையல் சேர அணிந்த திருக்கரம்' எனவும், மார்பகத்தில் வைத்த கரம் எனவும், வாமம் மருங்கில் ஒருகரம், உய்த்த குறங்கில் ஒருகரம், மொய்த்த சிறுதொடிசேர்கை, மணிசேர்த்த தடங்கை, சமர் அங்குசஞ் சேர்கை, போர் அதிர்கேடகம் சுழற்றும் அங்கை, கதிர்வாள்விதிர்க்கும் கரம் என்று குமரகுருபரர் முருகனின் பன்னிரு கைகளையும் விளக்குவதில் பரவசம் அடைகின்றார்.

**அடியவர்க்கும் அவன்**

முருகனைப் பக்தியுடன் பரவி வரும் பக்தர்களுக்கு,

'ஆதரிப்போர்க்கு ஆருயிராய் அன்பர் அகத்தாமரை
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே'

என்றும் ஆற்றுப்படுத்திப் பாடுகிறார். மேலும் தொண்டுபுரியும் உயிர்களின் அறிவுக்கு நல்லுணர்வு அளித்தற்பொருட்டு படைத்தல் முதலிய ஐந்து தொழில்களையும் தம் ஆணையால் செலுத்தி ஒப்பின்றி நடத்தும் பெருமானை,

''ஆவிப்புலனுக்கு அறிவளிப்ப ஐந்தொழிலும்
ஏவித்தனிநடத்தும் எங்கோவே''

என்று போற்றுகிறார்.

**அவன் ஒருவனே எனல்**

ஆயிரமாயிரமாய்த் தெய்வங்கள் உண்டான போதும் முருகக் கடவுளைப் போன்று தெய்வம் வேறெங்குமில்லையாம். குமரகுருபரர்,

''விண்கண்ட தெய்வம் பல்கோடி உண்டேனும்
விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ?

என்று சகலகலாவல்லியான கலைமகளைப் போற்றி,

கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்டிக்கொண்டு
அடியேற்கு முன்னின்று அருள்''

என்று முருகப்பெருமானை வாழ்த்தி வணங்குகிறார். பலவாறு பாடும் இவர் கவிப்பெருமை அனைத்தும் விரிக்கிற்பெருகும்.

### அருணகிரிநாதர்

கலியுக பெருமானாம் ஆறுமுகக் கடவுளின் பேரருளுக்கு இலக்காகி வாழ்ந்து இலக்கியத்தால் அவனை வணங்க வழி கோலியவர் அருணகிரியார்.

பதினைந்தாம் நூற்றாண்டில் திருவண்ணாமலைப்பதியின் கண் வாழ்ந்து வந்தவர். இவர் தம்முடைய இளமைக்காலத்தை உலகமாயைக்குட்படுத்திப் பெண்டிரிடம் பெறும் சிற்றின்பமே வாழ்வின் பேரின்பமாகக் கருதிக் காலம் கழித்து வந்தார் என்றும், நாளடைவில் அந்த வாழ்வினை வெறுத்து மெய்ஞ்ஞானம் பெற்றார் என்றும், இறைவழிபாட்டில் மனத்தைச் செலுத்தித் தாம் வாழ்ந்த பிழையான வாழ்க்கைக்குப் பிராயச்சித்தம் பெறவிழைந்தே பேரழகுக் கடவுளாம் முருகப்பெருமான் மீது வழிபாட்டுப் பாடல்களைப் பாடினார் என்றும் சிலர் கூறுகின்றனர்.

### திருவருளில் திருப்புகழ்

மொழிக்கடவுளாம் முருகன் மீது கொண்ட விருப்புகளின் வெளிப்படையே திருப்புகழின் தோற்றமாகும். பக்திச்சுவை நன்கு சொட்ட திருப்புகழ் இயற்றப்பெற்றுள்ள பான்மையே அருணகிரிநாதரின் பெருமைக்கும், பக்திக்கும், தமிழ்ப்பற்றுக்கும் சான்று பகரும். திருப்புகழ் நூலின் சிறப்பாக,

> 'சீராம் திருப்புகழைச் செவ்வேள் மேல் அன்பாக
> ஆராய்ந் துரைத்தான் அருணகிரி – நேராக
> அந்தப் புகழை அனுதினமும் ஓதாமல்
> எந்தப் புகழ்ஓது வீர்'

என்று நேரிசை வெண்பா அமைந்துள்ளது. முருகனே திருப்புகழ் படைக்க அருள் வழங்கினார் என்பதை

> ''செய்ப்பதியும் வைத்துயர்திருப்புகழ் விருப்பமொடு
> செப்பென எனக்கருள்கை மறவேனே''

என்னும் பாடலில் குறிப்பிடுகிறார்.

### ஆறுமுகம்

அருணகிரியாரும் அந்த அழகு தெய்வத்தின் ஆறுமுகங்களின் பெருமைகளைச் சுட்டுகிறார். அவையாவன

1. ஏறுமயில் ஏறி விளையாடும் முகம்

2. ஈசருடன் ஞானமொழி பேசும் முகம்
3. கூறும் அடியார் வினை தீர்க்கும் முகம்
4. குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம்
5. மாறுபடு சூரரை வதைத்த முகம்
6. வள்ளியை மணம் புணர வந்த முகம்

என்று வகைப்படுத்தும் போது மயிலேறி உலக நலம் காணச் சென்று வரும்போது நோக்கும் தந்தையுடன் அறிவு வளர்ச்சிக் கான கலந்துரையாடல் நிகழ்த்துவதால் கல்வியின் தேவையும், அடியவரின் வினைகள் தீர்க்கப் பெறும்போது சமூகத் தொண்டுணர்வும், வேல்தாங்கி நிற்கும் போது எதையும் மன உறுதியுடன் ஏற்கமுனையும் பாங்கும், அழிக்கத்தக்க பகைவரை அழித்தே ஆகவேண்டும் என்பதை மாறுபடு சூரரை வதைத்த முகமென்றும், ஒவ்வமுடிந்தால் மனை வாழ்க்கை முன்னின்று என்றார் போல வள்ளியை மணம் புரிவது தமக்கெனப் பிறந்தாரை தாம் ஏற்று வாழ வைப்பதுமான சமுதாய உணர்வுகளைத் தெளிவுபடுத்தும் நிலையை ஆறுமுகங்களான் அறியலாம்.

ஆன்மீக வலிமையை அறியும் ஆவலில் முனையும் போது அருணகிரிநாதரின் புலமை நயமும் புலப்படுகின்றது. தமிழ்க் கடவுளாம் முருகனின் நேரடி அருள் பெற்ற பாங்கு இவருடைய பாடல்களில் தெளிவாகத் தெரிகின்றது.

**திருவருளில் பெறுமருள்**

அருணகிரியார் இளமையில் தாம் பெற்றிருந்த சிற்றியல்பு களை வெளிப்படையாய்க் குறிப்பிட்டுத் தொழுகிறார்.

''ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணா
ஈனனை வீணனை ஏடெழுதா முழு
ஏழையை ..................''

என்று கல்வியறிவற்ற தீ நெறியாளன் என்று கூறும் போது அவர் எந்த நிலையினின்று இத்தகு உயர்நிலை அடைந்திருக் கிறார் எனத் தெரிகின்றது. மானிடர் மனத்தைத் தூய்மையாக்க வேளை தேட வேண்டியதில்லை. இறைவன் திருவடியை நினைந்து நினைந்து நினைந்து நொடிப்போதும் தூய சிந்தையை இருத்தினால் உயர்வுறலாம் என்பது இவர் வாக்கு. இறைவன் நினைவில் மூழ்கி இன்பம் பெறுதலை

'உயிர் கருணை புரியுமின்பக் கடல் மூழ்கி
உனை எனதுள் அறியும் அன்பைத் தருவாயே'

என்று வேண்டுவதன் வாயிலாக அறியலாம்.

மேலும் இவர் சிந்தனையில் நிறைந்திருக்கும் முருகவேளின் படைவீடுகள் ஆறினையும் குறித்து அவனருள் வேண்டும் அவர் பலவாறு பாடியிருக்கிறார். அவற்றைக் கூறின் விரியும்.

**முடிவுரை**

குமரகுருபரும், அருணகிரியாரும் முருக வழிபாட்டில் முதன்மை பெற்றபோதும் அவனருள் அகிலத்திற்கும் கிட்ட வேண்டும் என்பதிலும் பெருவிருப்பம் கொண்டிருந்தனர். ஆசைகளை அறவே ஒழித்து ஆறுமுகனின் திருவடியைப் போற்றுவார்க்குத் திருவருள் தாமே வந்து கூடும்.

# குமரகுருபரரின் தலப்பயணங்கள்

ம. சா. அறிவுடைநம்பி, தஞ்சாவூர்

இந்திய நாடு கோயில்கள் சூழ்ந்த திருநாடாகும். தனி மனிதன் வாழ்விற்கும் அவன் கட்டுக்கோப்பாக வாழ்வதற்கும் ஆணிவேராக இக்கோயில்கள் அமைந்திருக்கின்றன. இத்தகைய கோயில்களைச் சுற்றியே ஒவ்வொருவரின் வாழ்க்கையும் அமைந்து விளங்குகிறது. எனவேதான் இக்கோயில்களுக்குப் பயணம் சென்று வருவதை ஒரு புனிதச் செயலாகப் போற்றி வருகின்றனர். இறை நம்பிக்கை யுடையவர்கள் இறைவன் எழுந்தருளியுள்ள தலங்களுக்குப் புனிதப் பயணம் மேற்கொள் வதைத் தங்களின் வாழ்வியல் கடமைகளுள் ஒன்றாகவே கருதி வருகின்றனர். பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய குமரகுருபரர் மேற்கொண்ட தலப்பயணங்களை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### திருக்கோயில் வழிபாடு

தெய்வத்தை வழிபட்டால் அத் தெய்வம் வழிபடுவோரின் புறத்தே நின்று அவரைக் காத்து வரும் என்று தமிழர்கள் நம்பினர். அதனால் தெய்வங்களுக்குக் கோயில்கள் எடுத்தும், உருவங்களைச் சமைத்தும் வழிபட்டனர். தெய்வம் தமக்குச் செய்யும் நன்மைக்காகத் தெய்வத்திற்குக் கைம்மாறாக ஏதாவது செய்ய வேண்டுமென்று விரும்பினர். நன்மை பெற்றாலும் தீமை நிகழ்ந்தாலும் எல்லாம் இறைவன் திருவருளால்தான் நிகழ்கின்றன என்று கருதினர். மக்கள் மேல் நின்று தெய்வம் அவர் வாய்வழி உரைப்பதாகவும் எண்ணினர்.

ஒருவன் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்ப நன்மை தீமையை அடைவான் என்ற கோட்பாடு காலப்போக்கில் ஊழ்வினை, மறுபிறப்பு, மோட்சம், நரகம் என்று உருவாயிற்று. ஊழ்வினையால் ஒருவன் மோட்சத்தையோ நரகத்தையோ அடைவான் என்று நம்பினர். சங்க காலந்தொடங்கி இறை தொடர்பான நம்பிக்கைகள் இன்று வரை இருந்து வருகின்றன,

மனிதனுக்கு உடம்பும், வாக்கும் தந்தவன் இறைவன். இவை தாமே வந்து அமைவதில்லை. எவரும் எடுத்துக் கொள்வதில்லை. வாழ்த்துவதற்கு வாயையும், நினைப்பதற்கு நெஞ்சையும், வணங்குவதற்குத் தலையையும் தந்த தலைவனாகிய இறைவனை இவ்வுலகில் பிறந்த ஒவ்வொருவரும் பூவும் நீரும் கொண்டு வணங்குதல் வேண்டும் என்பதை,

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவன்''

(அப்பர் தேவாரம் 5.90.7)

என்கின்றார் அப்பர். மற்றோரிடத்தில் கால்களால் பயன் என்? என்று கேள்வி கேட்டு அவரே அதற்குப் பதிலும் அளிக்கின்றார்.

''கால்களாற் பயன்என் – கறைக்
கண்டன் உறை கோயில்
கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்
கால்களாற் பயன்என்''

(அப்பர் தேவாரம் 4.9.9.)

என்ற பாடலில், இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில் களுக்குச் சென்று வழிபட வேண்டும் என்பதையே அப்பர் உணர்த்தியுள்ளார்.

சீவன்முத்தன் என்போர் மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவுவன்; மலநீக்கம் நீங்கும் பொருட்டுச் சிவசின்னம் அணிந்த சிவனடியார்களின் திருவேடத்தையும், சிவன் உறையும் திருக்கோயில்களையும் முதல்வனாகவே கண்டு வழிபடுவான். இதனை மெய்கண்டார்,

''செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானும் அரனெனத் தொழுமே''

(சிவஞானபோதம், சூ. 12)

என்று கூறினார். திருக்கோயில் வழிபாடு செய்து பெரும் பேறெய்திய மார்க்கண்டேய முனிவர் இதற்குச் சான்றாவர்.

''அத்த னாலய மனைத்தும் வைகலும்
பத்தி யோடுமுன் பரவி யேமிகுஞ்

சுத்த னாகியே தொலைவி லாருயிர்
முத்தி யெய்தினான் முழுதுணர்ந் துளான்''

(கந்தபுராணம்)

என்பது கந்தபுராணம்.

**தலப்பயணம்**

சங்க காலத்தில் வளமுடைய புரலவர்கள், வள்ளல்கள், மன்னர்கள் போன்றவர்களைப் புலவர்கள் நாடிச் சென்று அவர்களைப் போற்றிப் பாடிப் பரிசில் பெற்றனர். இவற்றினடிப் படையிலேயே ஆற்றுப்படை நூல்கள் தோன்றின. அதிலும் திருமுருகாற்றுப்படை நூல் முருகனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்டுள்ளது. காலப்போக்கில் இறைவன் உறையும் தலங்களுக்குச் சென்று தங்கள் குறைகளைப் போக்கிக் கொள்ள முயன்றனர். இறையனுபூதி பெற்ற அருளாளர்கள் தலப்பயணம் சென்று பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சமய குரவர்களும் ஆழ்வார் களும் இவ்வாறு தலங்கள்தோறும் சென்று பாடி மகிழ்ந்த திருத்தலங்கள் **'திருமுறைத் தலங்கள்'** எனப் பெற்றன. இவர்களால் பாடப்பெற்ற தோத்திரப் பாக்களும், பாசுரங்களும் திருக்கோயில்களை மையமாகக் கொண்டே எழுந்தன. தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்ற பனுவல் களில் காணப்படும் திருத்தலங்களோடு புராண இதிகாச மாந்தர்கள் தொடர்பு கொண்டுள்ளனர். திருமால், நான்முகன், திருமகள், உமையவள், காளி, இந்திரன், தேவர்கள், இராமன். இலக்குவன், அருச்சுனன், சடாயு முதலானோர் வழிபட்டு வந்ததாகப் பல திருத்தலங்கள் குறிப்பிடப்படுகின்றன. இத்தகைய சிறப்புப் பெற்ற திருத்தலங்களுக்குச் சென்று வழிபட்டால் பாவம் தொலையும் என்றும் புண்ணியம் கிட்டும் என்றும் மக்கள் நம்பினர்.

இந்து சமயம், இசுலாம் சமயம், கிறித்தவ சமயம் போன்ற வற்றில் உள்ளவர்களும் தாங்கள் சார்ந்துள்ள சமயங்களைச் சார்ந்த தலங்களுக்குப் பயணம் மேற்கொண்டனர். உலக நன்மைக்காகவும், ஆன்மநேய ஒருமைப்பாட்டுக்காகவும், மன அமைதிக்காகவும் இறைவன் உறையும் தலங்களுக்குச் சென்றனர். சிலர் 'பாத யாத்திரை' யாக விரதம் இருந்து சென்று வழிபட்டனர். இந்து சமயம் ஏனைய சமயங்களை

விடவும் மிகுதியான கடவுளர்களைப் பெற்றுள்ளது. கடவுளை எந்த உருவிலும் எந்த முறையிலும் வழிபட முடியும் எனும் தத்துவ நெகிழ்ச்சியும் இச்சமயத்தில் உள்ளது. ஆன் மாக்களாகிய முத்தியாகிய கரையில் ஏற்றுங் காரணமாகவே மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று வடிவாய்ச் சிவபிரான் விளங்குகின்றனன். இவற்றை முறையோடு வழிபடுவோர் பரமாசாரியரால் உண்மை ஞானம் பெற்று முத்தியடைவர் என்பதை,

''மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''
(தாயுமானவர்)

என்றார் தாயுமானவர். தலத்தை அடிப்படையாகக் கொண்டே ''பிறக்க வீடு தருவது திருவாரூர்; இறக்க வீடு தருவது காசி; கண்டு வழிபட வீடு தருவது கோயில் (சிதம்பரம்); நினைக்க வீடு தருவது திருவண்ணாமலை'' என்ற ஆழ்ந்த நம்பிக்கை மக்களிடையே ஏற்பட்டது. இந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் காசி, இராமேசுவரம், பழநி, சபரிமலை, திருப்பதி, திருநள்ளாறு முதலான பல்வேறு தலங்களுக்கும் புனிதப் பயணத்தை மேற் கொண்டு வருகின்றனர்.

கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவர்கள் வேளாங்கண்ணிக்கும், இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்கள் நாகூர், மெக்கா போன்ற தலங்களுக்கும் புனிதப்பயணத்தை மேற்கொண்டு வருகின்றனர். இத்தகைய தலப்பயணங்களின் மூலம் இறைமீது மக்கள் கொண்டிருக்கின்ற ஆழ்ந்த பத்தி, நம்பிக்கைகளைக் காண முடிகின்றன; மேலும் மன அமைதி கிடைப்பதாகவும் நம்பி வருகின்றனர்.

காலந்தோறும் மக்களிடையே சமய ஒருமைப்பாடும், சமயப் பூசல்களும், தலப்பயணங்களும் நிகழ்ந்து வருவதை வரலாற்றுச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன. இந்தப் பின்னணியில் குமர குருபரர் மேற்கொண்ட தலப்பயணங்களை ஆராய்வது பொருத்த முடையதாகும்.

**வரலாற்று மூலம்**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 'புலவர் புராணம்', திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்

பாடிய 'திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர ஸ்வாமிகள் சரித்திரம்', சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் பாடிய 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் புராணம்', ச. சோமசுந்தர தேசிகர் எழுதிய 'தமிழ்ப் புலவர்கள் வரலாறு பதினேழாம் நூற்றாண்டு', மு. அருணாசலம் எழுதிய 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்' போன்ற நூல்களில் குமரகுருபரரின் வரலாறு காணப்படுகிறது.

**தலப்பயணம் மேற்கொள்ளல்**

''முன்னோர் நவில்மொழியும், கலைவாணி நடம்புரியும் நாவும், முருகன் மலர்த்தாள்களும்'' கொண்டு தாம் செவிவழி யாகக் கேட்டறிந்த செய்திகளைத் தொகுத்துப் புலவர் புராணம் பாடியுள்ளதாகத் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார். இப் புராணத்தில் குமரகுருபரர் வரலாறு 42 பாடல்களில் பாடப் பட்டுள்ளது.

குமரகுருபரர் வரலாற்றை மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் 338 பாடல்களிலும், சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் 1001 பாடல்களிலும் பாடியுள்ளனர்.

சைவ வேளாளர் மரபில் தென்பாண்டி நாட்டில் பொருநை யாற்றின் வடகரையிலுள்ள சீவைகுண்டத்தில் கைலாசபுரத்தில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும், சிவகாமசுந்தரிக்கும் அருந்தவ மகனாகக் குமரகுருபரர் தோன்றினார். ஐந்து வயது வரை வாய் பேசாமல் ஊமையாயிருந்து திருச்செந்தூர்ப் பெருமான் திருவருளால் பேசத் தொடங்கினார்.

சீவைகுண்டத்தில் தோன்றிய குமரகுருபரர் திருச்செந் தூருக்குச் சென்றதிலிருந்தே அவரது தலப்பயணமானது தொடங்கிவிடுகிறது. இவர் பாடியருளிய முதல் பனுவல் 'திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா'வாகும். அன்று முதல் இவர் பல தலங்களுக்கும் தம்முடைய பயணத்தைத் தொடங்கி விட்டார். இறையருள் பெற்ற இவர் பல தலங்களுக்கும் சென்றதோடமையாமல் சில தலங்களில் பாடியருளிய பாக்கள் தனியொரு சிற்றிலக்கியமாக அமைந்திருப்பதைக் காண முடிகின்றன.

குமரகுருபரர் வரலாறு கூறும் பனுவல்களில் பல்வேறு தலங்களுக்கு அவர் சென்றதைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

ஆயின் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய பனுவலில் காணப்படும் தலப்பயணங்கள் இக்கட்டுரையில் ஆராயப்படு கின்றன.

திருச்செந்தூர்க் குமரவேள் கருணையினால் குமரனாகி, குமரகுருபரன் எனும் பெயர் தாங்கி முதன் முதலில் கந்தர் கலிவெண்பாவைத் தம் ஐந்தாம் அகவையில் பாடிய பின்னர்த் தம் பெற்றோருடன் தாம் பிறந்த சீவைகுண்டம் ஊருக்குத் திரும்புகிறார். இவர் பிறந்த ஊர் கயிலாசபுரம் எனவும் அழைக்கப் பெறுகிறது. இங்குள்ள சிவன் கோயிலில் எழுந் தருளியுள்ள இறைவன் மீது 'கயிலைக் கலம்பகம்' பாடுகின்றார். இதனை,

> "அன்னமென் னடையார்சூழ வவிர்திருக் கயிலைசார்ந்து
> கன்னவில் சிலையி னார்க்குக் கலம்பக மொன்றுபாடி" (58)

என்கின்றார். ஆயின் இந்நூல் கிடைக்கவில்லை என்றே பலரும் குறிப்பிடுகின்றனர்.

சிலகாலம் கழித்து, ஒருநாள் திருச்செந்தூர் முருகன் கோயிலில் வலம் வந்து கொண்டிருந்தபொழுது,

> "குழந்தாய், நீ வடதிசை யாத்திரை செய்து கொண்டு பல தலங்களும் சென்று வழிபட்டு வருவாயாக, அவ்வாறு வழிபடும் காலத்துக் காசிவரை செல்வாயாக. செல்லும் காலத்து எந்தச் சந்நிதியில் உன் வாக்குத் தடைப்படு கிறதோ அந்தச் சந்நிதியே நீ ஞானம் பெறுவதற்கான இடம் என்று அறிவாயாக"
>
> (மு. அருணாசலம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், ப. 10)

என்று முருகன் அசரீரியாக உணர்த்தியதாக மு. அருணாசலம் கூறுகின்றார்.

அதன்பிறகே குமரகுருபரர் தலப்பயணத்தைத் தொடங்கு கின்றார்.

**தலங்களும் பனுவல்களும்**

முதன்முதல் திருச்செந்தூரில் பாடிய கந்தர் கலிவெண்பா நூல் 122 கண்ணிகளை உடையது. முருகன் திருவருளைப் பெறுவதற்காக முக்காலத்தும் பாராயணம் செய்யப்படும் நூலாகத் திகழ்கிறது. முருகப்பெருமானின் இயல்பு, உயிர்

களது இயல்பும் அவற்றிற்கு இறைவன் செய்யும் பெருங்கருணை, கந்தபுராண வரலாறு போன்றவற்றை இப்பனுவல் கூறுகிறது.

பல்வேறு தலங்களுக்கும் சென்ற குமரகுருபரர்,

"தெய்வவெண் ணீறு கண்டி திகழ்தரத் தலங்க டோறு
மையறச் சென்று சென்று வணங்கியித் தலத்து வந்தார்"(85)

என்று மதுரைக்கு வந்ததை மீனாட்சிசுந்தரம் பிள்ளை கூறுகின்றார். அங்கயற்கண்ணியை வணங்கி மீனாட்சியம்மன் கோயிலில் திருமலை நாயக்கர் முன்னிலையில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் நூல் அரங்கேற்றம் செய்ததை,

"வந்தவர் கயற்க ணம்மை மலரடி வணங்கிப் போற்றிச்
சந்தமிக் கமைந்த பிள்ளைத் தமிழ்ப்பிர பந்தம் பாடிச்
சுந்தர் வல்லி முன்பு தொழுதரங் கேற்றல் செய்வா
னுந்துதம் முள்ளத் தெண்ணி யிருந்தன ருணர்தி யென்றார்"
(86)

என்பார். இந்நூல் 100 பாக்கள் கொண்டது.

அதன் பின்னர் 102 வெண்பாக்களைக் கொண்ட நீதிநெறி விளக்கம், 102 பாக்களைக் கொண்ட மதுரைக் கலம்பகம் ஆகிய இரு நூல்களைப் பாடினார்.

திருவாவடுதுறைக்கு வந்த சைவ சிகாமணி அருள் நல்கும் மாசிலாமணி தேசிகரைக் கண்டு அவரைத் தம் குருவாகக் கொண்டார். திங்கள் அணிந்த பிரானின் திருமகனார் அருட் செல்வராகிய குமரகுருபரர் தம் குருநாதர் மேல் 30 பாக்கள் கொண்ட பண்டார மும்மணிக்கோவை பாடினார்.

திருவாரூரில் நான்மணிமாலையைப் பலரும் வியப்புறும்படி அரங்கேற்றினார். புள்ளிருக்குவேளூரில் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் நூலை அரங்கேற்றினார். சிதம்பரத்தில் 30 பாக்கள் கொண்ட சிதம்பர மும்மணிக்கோவை, 84 பாக்கள் கொண்ட சிதம்பரச் செய்யுட்கோவை ஆகிய நூல்களைப் பாடினார். காசியில் 10 பாக்கள் கொண்ட துண்டி விநாயகர் பதிகம், விச்சுவேசர் மேல் 100 பாக்கள் கொண்ட காசிக் கலம்பகம் ஆகிய நூல்களைப் பாடினார். காசி நகரை ஆட்சி செய்த இசுலாமிய மன்னருக்குத் தம் புலமையைக் காட்டுவான் வேண்டித் தமக்கு அவர்கள் பேசும் மொழியைக் கற்றுத்தர

நாமகளை நோக்கி 10 பாக்கள் கொண்ட சகலகலாவல்லி மாலை பாடித் துதித்தார்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடிய இப்பனுவலில் 13 நூல்களே குமரகுருபரர் பாடியனவாகக் காணப்படுகின்றன. மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை ஆகிய நூல்களைக் குமரகுருபரர் பாடியதாகக் கூறவில்லை.

விநாயகர், முருகன், சிவபெருமான், உமையவள், கலைமகள் ஆகியோர் மீது பதிகம், பிள்ளைத்தமிழ், கலிவெண்பா, கலம்பகம், மாலை, கோவை ஆகிய சிற்றிலக்கிய வகைகளில் பாக்களைப் பாடியுள்ளார். இவரருளிய பாக்களில் முருகனும், சிவனும் ஒருவரே எனும் கொள்கை உடையவராகக் குமரகுருபரர் கருதியிருப்பதைக் காணமுடிகிறது. மேலும் சங்க நூற் கருத்துக் கள், சைவ சித்தாந்தக் கருத்துக்கள், பழமொழிகள், அறவுரைகள், தமிழின் பெருமை முதலானவற்றையும் காணமுடிகின்றன.

**தலச்சிறப்பு**

திருச்செந்தூர் தொடங்கிக் காசி மாநகரம் வரை ஏறத்தாழ 95 தலங்களுக்குத் தலப்பயணம் மேற்கொண்டதாக மீனாட்சி சுந்தரம்பிள்ளை தம் நூலில் குறிப்பிடுகின்றார். இவற்றுள் ஒருசில தலங்களை அவற்றின் சிறப்புக்களோடு பாடியுள்ளார். சில தலங்களில் குமரகுருபரர் சமய வாதம் செய்ததாகவும், சில தலங்களில் புலவர்களை வாதில் வென்றதாகவும் கூறியுள்ளார். தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரரைச் சில தலங்களில் புலவர் பெருமக்களும், அடியார்களும் போற்றி வரவேற்கின்ற காட்சியையும் கூறியுள்ளார். பல தலங்களின் பெயர்களை மட்டும் கூறி 'முதலான தலங்களுக்கு'ப் பயணம் மேற்கொண்ட தாகக் கூறிச் செல்வதையும் காணமுடிகிறது.

திருச்சிராப்பள்ளியின் பெருமையைக் கூறவந்த ஆசிரியர்,

"விண்ணளவு நெடுஞ்சிகரமேவு சிராமலைப் பெருமான்
கண்ணளவு திருவடிகள் கண்டுதொழச் செய்வித்து" (101)

என்கின்றார். இக்கோயிலில் எழுந்தருளியுள்ளவர் தாயுமானவர். மலையின் மேல் இக்கோயில் உள்ளது. இறைவனிடத்து அன்பு மிகுந்த ஒருபெண் கருவுற்றிருந்து குழந்தைப் பேற்றின்போது தன் தாயின் வருகையை எதிர்பார்த்திருந்தாள். காவிரி வெள்ளம்

பெருகியிருந்ததால் தாய் வந்து இவளுக்கு உதவ முடியவில்லை. இறைவனே மனமிரங்கித் தாயாகி வந்து அப்பெண்ணுக்கு உதவி செய்தார். அதனால் இறைவன் தாயுமானவர் எனப்பெற்றனன் இதனைத் 'தாயான மண்ணவர்வாழ் திரிசிராப்பள்ளி நகர்' (99) எனக் கூறுகின்றார் ஆசிரியர்.

"இமையார் வணங்கு பைஞ்ஞீலி யென்னுந் தலம்" (107)
"வானோர் புகழு நெய்த்தானம்" (136)
"வண்ண மதில்சூழ் மழபாடி" (136)
"ஓங்கு மதில் ஆமாத்தூர்" (224)
"அரிய மாதவர் தொழுதெழு வீழி" (172)
"பிரியமிகு கோவலூர்" (224)

என்றிவ்வாறு தலங்களின் பெருமையை ஆசிரியர் கூறுகின்றார். இமையவர் வணங்கிப் போற்றுவதையும், அரிய தவங்களைச் செய்கின்றவர்கள் வணங்குவதையும், மதில்களால் தலங்கள் சூழப் பெற்றிருப்பதையும் இவற்றில் காண முடிகின்றன. திரு நெடுங்களம் எனும் தலத்துக் 'கவலை களையு நெடுங்களம்' (107) என்கின்றார். திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகங்களுள் 'மறையுடையாய்' எனத் தொடங்கும் இத்தலப்பதிகம், படிப்ப வருடைய இடரினைக் களையும் சிறப்புடையது என்பதையே ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றார்.

### இறைவன் – இறைவி பெருமைகள்

தலத்தில் உறையும் இறைவன், இறைவி பெருமைகளையும் கூறுவதைக் காணமுடிகின்றன. தாமிரபரணியாற்றின் வட கரையில் அமைந்துள்ள தலம் திருநெல்வேலியாகும். இத்தலத் திறைவன் மூங்கிலின் நின்றும் எழுந்தமையால் „வேய்முத்தநாதர் என அழைக்கப் பெறுகின்றனன். இதனை "வேயீன் றருளிய முத்தமென்ன, வோங்குபுண் ணியனார் மேய நெல்வேலி யுவந்து போற்றி" (59) என்கின்றார்.

"கோணிய பிறை முடித்தார் குளிர் கொடுங்குன்றம்" (62)
"தீவினை யறுப்பா ராப்பனூர்" (63)
"கரிய கண்டர்வாழ் தருதிரு வம்பர்மா காளம்" (172)

என்று இறைவன் பெருமையைப் போற்றுகின்றார்.

'செய்யவேண் மகிழ்ந்து மேய திருப்பரங்குன்றம்' (63) என்று திருப்பரங்குன்றத்தில் உறையும் முருகன் புகழைப் பாடுகின்றார்,

"பாகமொரு பெண் குடியிருக்கும் பரமானந்தர் வீற்றிருக்குங்
காகமெரியக் கனல்வீசும் பொருப்புங் கடம்பந்துறைப்பதி"
(106)

என்பது கடம்பந்துறையில் உறையும் இறைவன், இறைவி பெருமைகளாகும்.

நடராசப் பெருமான் ஆலங்காட்டில் காளியுடன் ஊர்த்துவ தாண்டவம் ஆடுகின்றார். இதனை நினைவுகூர்ந்த ஆசிரியர் 'அம்மை திருநடங்காணு மாலங்காடு' (230) என்கின்றார்.

கயிலை மலையிலிருந்து காஞ்சிபுரத்திற்கு வந்த உமையவள் இறைவனை அடையும் பொருட்டுக் கம்பையாற்றின் கரையில் சிவவழிபாடு செய்கின்றனள். அப்பொழுது ஆற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது. வெள்ளத்திலிருந்து இறைவனைக் காப்பாற்றும் பொருட்டு இறைவி தழுவிக் கொண்டார். இதனால் இறைவன் இறைவியின் முலைச்சுவடும் வளைத்தழும்பும் நிலை பெறுமாறு குழைந்து கொடுத்தார் என்பது இத்தல வரலாறாகும். இதனை ஆசிரியர்,

"வல்லாரு முலைச்சுவடும் வளைச்சுவடுங் கொண்டுமகிழ்
வில்லாரு மெய்ப்பொருளை வீங்குகா தலிற்பணிந்து"(233)

என்று போற்றியுரைக்கின்றார்.

**இயற்கை வளம்**

சில தலங்களின் பெருமைகளைக் கூறுவதனோடு அமையாமல் அத்தலங்களின் இயற்கை வளத்தையும் சேர்த்துக் கூறுவதையும் காணமுடிகிறது.

"அன்ன மென்னடையார் சூழவவிர் திருக்கயிலை" (58)

"துன்னிய சார றோறுந் துதைந்துவாழ் குற்றாலம்" (60)

"அருண்மலி சோலை" (67)

"முகிறோய் தருமீங்கோய்மலை" (106)

"வளங்கண் மிகப்பெருகு மானைக்கா" (107)

"மலையினின் றிழியருவியின் மும்மதம் வடிக்குங்
கொலையி னின்றுநீங் காப்பெருங் கொடுங்களி றுரித்தார்
நிலையி னின்றவர் செறிவழு வூர்" (171)

"வாங்கு நீர்த்திரை வாவியில் வாளைமீன் பாய
வோங்கு சீர்கொள்புள் ளிருக்குவே ளூரைவந் துற்றார்"
(190)

"பொருவிலாவள மலிதிருப் பாதிரிப்புலியூர்" (219)

எனும் பாடல் வரிகளில் அந்தந்தத் தலங்களின் இயற்கை வளத்தையும் காணமுடிகின்றது. குமரகுருபரர் பல்வேறு தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டதைப் பட்டிய லிட்டுக் கூறாமல் தலத்துடன் தொடர்புடைய இயற்கை வளம், வரலாறு போன்ற செய்திகளையும் சேர்த்துக் கூறியுள்ள பாங்கு சிறப்பாக அமைந்திருக்கிறது.

**அருளாளர் பெருமைகள்**

அப்பர் பெருமான் உழவாரப்பணி செய்து திருப்புகலூரில் இறைவன் திருவடி நீழலடைந்தார் என்பது வரலாறு. திருப்புகலூருக்குக் குமரகுருபரர் வந்தார் என்பதைக் கூற வந்த ஆசிரியர்,

"திங்கள் சூடிதன் றிருப்பணிப் பெருமையைத் தெரிப்பா
னெங்க ணாவினுக் கரசுழ வாரங்கை யேந்தி
யங்க ணார்பணி புரிபுக லூர்" (189)

என்று பாடுகின்றார்.

சிவபிரான் சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட தலம் திருவெண்ணெய் நல்லூராகும். இத்தலத்திற்குக் குமரகுருபரர் வந்ததை,

"நாவலூர் நம்பிதனைத் தடுத்தாண்ட நம்பெருமான்
மேவுமா லயம்புகுந்து" (221)

என்கின்றார்.

**புலவர்களை வாதில் வெல்லுதலும் வரவேற்பும்**

தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரர் பல்வேறு தலங்களுக்கும் செல்கின்றார். சில தலங்களில் புலவர்களை வாதில் வென்றதையும், சிலருடன் சமயவாதம் புரிந்ததையும் மீனாட்சி சுந்தரம்பிள்ளை கூறியுள்ளார்.

மதுரைக்கு வந்த குமரகுருபரர் பல புலவர்களை வாதில் வென்றார். சிலரை இந்திலக்கணத்தால், சிலரை இலக்கியத்தால், சிலரை வலிமையான சொற்பொழிவினால், சிலரைப் பாடலால்,

சிலரை நேர் உரைக்கும் சொல்லால், சிலரை மெய்ஞ்ஞான நூலால், சிலரை மற்றுள்ள நூலால் சிறப்புற வென்றார். திருச்சி, திருவாரூர், சிதம்பரம், காசி போன்ற தலங்களில் பிற சமயத்தார்களுடன் சைவ சமயக் கொள்கைகளை விளக்கித் தம் சமயமே சிறந்தது என்று நிலைநாட்டுகின்றார். திருச்சிராப் பள்ளியில் பிள்ளைப்பெருமாள் ஐயங்காரையும், திருத்துறையூரில் சகலாகம பண்டிதரையும் சந்தித்ததாகக் கூறியுள்ளார்.

குமரகுருபரரின் புலமையைக் கண்டு வியந்த மன்னரும், புலவர்களும், சமய அடியார்களும் பல்வேறு தலங்களுக்கு அவர் வந்தபொழுது மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்; அவர் காலடியில் வீழ்ந்து வணங்கினர்; போற்றினர்; பொன்னாலும் மணிகளாலும் முழுக்காட்டிட்டனர்; பல்வேறு பொருள்களை வாரி வழங்கினர்; நிலங்களைக் கொடையாக வழங்கினர்.

**முடிவுரை**

திருச்செந்திலாண்டவன் கருணையினால் ஐந்து வயதில் பாடத் தொடங்கித் தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரர் காசியில் தாராசுகோ எனும் இசுலாமிய மன்னர் வழங்கிய இடத்தில் மடத்தை நிறுவிப் பல அரிய சமயப் பணிகளை ஆற்றினார். மூன்றுமுறை தருமபுரத்திற்கு வந்ததாக அவர் வரலாறு காட்டுகிறது. கி. பி. 1688இல் காசியிலேயே முத்திப்பேறு அடைந்தார். இவரது தலப்பயணத்தில் பல்வேறு சிற்றிலக்கியப் பனுவல்களை இத் தமிழுலகத்திற்கு வழங்கிப் பெருமை சேர்த்துள்ளார். மேலும் இவரது தலப்பயணத்தின் மூலம் தலத்தின் சிறப்பு, தலவரலாறு, இறைவன் - இறைவி பெருமைகள், அருளாளர்களின் பெருமைகள், புலவர்களை வாதில் வென்ற நிலை போன்றவற்றைக் காணமுடிகின்றன.

# நீதிநெறி விளக்கமும் பொருத்தப்பாடும்

க. அன்பழகன், தஞ்சாவூர்.

இலக்கியம் காலத்தின் கண்ணாடி என்பார்கள். ஓர் இனத்தின் பண்பாட்டையும், நாகரிகத்தையும் தூக்கிப் பிடிப்பன வாக இலக்கியங்கள் திகழ்கின்றன. இவற்றை உள்ளீடாகக் கொண்டிலங்கும் இலக்கியம் காலங்கடந்து வந்து மனிதனோடும் சமுதாயத்தோடும் உறவு கலந்து நன்மை பயக்கின்றன. சமூகத்தைப் பண்படுத்தி நல்வழியிலே செலுத்தும் முகத்தான் சமயங்களும் அவைசார் இலக்கியங்களும், காவியங்களும், சித்தாந் தங்களும், தத்துவங்களும் பல்கிப் பெருகின. இவை தூய்மை யான நெறி நிறைந்த வாழ்விற்கு அடிப்படையாயும், வேராயும் துலங்குவன.

சைவம் பொதுநோக்குடையது "நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம்" என்பது சேக்கிழார் வாக்கு. நமக்கு மூலம் சைவ சித்தாந்தம் உள்ளிட்ட இன்ன பிறவும். எல்லா உயிர்களும் சிவசம்பந்தமுடையவை. உலகமே சிவமயம்தான். இதனை வளர்த்த சான்றோர் பலர். அவரில் ஒருவர் குமரகுருபரர். பிறப்பு முதல் பேசாதிருந்து பின் முருகன் அருளால் பேசி, குருபரன் என்ற திருப்பெயர் சூட்டப்பெற்ற பெருமகனார். துறவறம் கொண்டு செய்த பணிகள் ஏராளம். எல்லாம் உலகியலையும் இறைவனையும் பேசும். அந்த வகையில் நீதி நெறி விளக்கம் அமைகிறது. சில கருத்துக்கள் எக்காலச் சூழலுக்கும் பொருந்தும். அது கொண்டிருக்கும் உண்மைப் பொருளின் அடிப்படையில் அப்படி நேர்வது. நீதிநெறி விளக்கம் மிகக் குறைவான பாடல்களைக் (102 பாடல்கள்) கொண்டு மனித வாழ்வு, உலகியல், மற்றும் பல நிலையாமைகளைப் பேசி இறைவனைப் பற்றுக்கோடாய்க் கொள்ள பயனாய் நிற்கிறது. இந்த நீதிநெறி விளக்கத்தின் கருத்துக்கள் இன்றைய பொருத்தப் பாடு என்கிற நிலையில் எடுத்துக் கொள்ளப்பட்டு இக்கட்டுரை அமைகிறது.

### நீதிநெறி விளக்கம் பாடினமை

சமய கருத்துக்களைத் தொடர்ந்து அறக் கருத்துக்களை உள்ளடக்கி குமரகுருபரர் இச்சமூகத்திற்கு உவந்தளித்ததுவே நீதிநெறி விளக்கம். இதன் உள்ளடக்கம் பற்றிக் குறிப்பிடும் போது கா. சுப்பிரமணிய பிள்ளை பின்வருமாறு குறிப்பிடுவார் (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்).

> ''அடிக ளியற்றியருளிய நீதிநெறி விளக்கம் கல்வி, செல்வம், உலகியல், அரசியல், தவம், மெய்யுணர்வு முதலிய விழுமிய பொருள்களின் இயல்பினையும் பயனையும் திட்ப நுட்பஞ் சிறக்க விளக்குந் தன்மையது. அறம் இளையதென் றறிதற்குக் கல்வி வேண்டுமாகலின் அதன் பெருமையை முதற்கண் பேசினர். அறநூல் பொது நூலாதலின், பொதுவாய் எம்பிரான் மன்றினை வழுத்துதல் இன்றியமையாமை குறித்தார். இறைவழிபாடு எக் காலத்தும் வேண்டுமென்பதை வற்புறுத்துவான் இளமை, செல்வம், யாக்கை முதலியவற்றின் நிலையாமையை இனிதெடுத்தியம்பினர்''

(ப. 80)

நீதிநெறி விளக்கம் பாடினமையைத் தெளிவாகக் குறிப்பிடுவதை உணர்ந்து கொள்ளலாம்.

இன்றைய பொருத்தப்பாட்டிற்கு இளமை, செல்வம், யாக்கை நிலையாமையும், கல்வியின் அருமையும் தேவையாக உள்ளன. அவற்றைச் சில சான்றுகள் வழி காணலாம்.

இன்றைய சமூகக் கேட்டிற்குப் பல கிளைகள் உள்ளன. இவற்றின் தீர்வுக்கு முக்கிய காரணங்களாக அமைவனவற்றில் கல்வியறிவின்மை ஒன்றாக அமைகிறது. மேலும் இளமை, செல்வம், யாக்கை நிலையாமையை உணராததும் இவற்றிற்கு அடிப்படையாக அமைகிறது.

### நீதிநெறி விளக்கம் கூறும் அறங்கள்

மேலே குறிப்பிட்டது போன்று இவ்வுலகியல் நெறிகளுக்கு கல்வி முதன்மையாக அமைகிறது. இதனையடுத்துப் 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்றான் வள்ளுவன். எனவே

பொருளாதாரமாகிய செல்வம் அமைகிறது. இவ்வுலகக் கேட்டிற்கு 'எல்லாம் நிலையானவை' என்று நினைக்கும் மாயை தான் மறைத்து வைக்கிறது. நிலையாமைத் தத்துவம் இன்றைக்கும் பொருத்தமாக உள்ளது மட்டுமின்றி இன்றைய நல்வாழ்வின் இலக்குக்குத் தேவையாகவும் உள்ளது.

**கல்வி**

கல்வியின் மேன்மையை அடிகள் தெளிவுற எளிமையாக எடுத்துக் காட்டுகிறார். உலகில் பலரும் கல்வி விடுத்து காமமிக்கு கெட்டழியும் நிலையைக் குறிக்கிறார். இரண்டுக்குமுள்ள வேறு பாட்டைக் குறித்துக் காட்டுகிறார். கல்வி வாழ்விக்கும். காமம் அழித்து நிற்கும் எனக் காட்டுகிறார். காமத்தால் பிணிக்கப் பட்டவர் கொலைக்கஞ்சாமையும், பொய்கூற நாணாமையும், மானங்காவாராகவும், களவு முதலிய பல தீமைகள் புரிந்து நிற்பாராயும் பழியும் பாவமும் கருதாராயும் இருப்பார் என்பதைக் குறிக்கிறார்.

''கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ் வேனையவுஞ் செய்வார் பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்'' (பா. 79)

இப்பாடல் தெளிவுறக் காட்டுகிறது. கல்வியாசை கொண்ட வனுக்குக் கல்வியே மனைவி, மக்கள், இயற்றும் நூலே புதல்வன், சொல்வளமே செல்வம் எனக் கருதுவதே நலமாகும் என்பதை பிறிதொரு பாடல் (பா.4) வழிக் காட்டிப் போகிறார். கற்றவன் பேச்சு காலங்காலத்திற்கு நிலைத்துப் பயன்விளைக்கும் சிறப்பின என்கிறார். கற்றோர்க்குக் கல்வியின் அழகே போதுமானது (பா. 15) அதுவே சிறந்த அணிகலன் என்கிறார்.

'பணியுமாம் என்றும் பெருமை' என்றாற் போன்று கற்ற கல்வியினால் செருக்கெய்தக் கூடாது. செருக்குற்றலைபவன் 'கொல்லன் சம்மட்டியால் உடையாத கல்சிற்றுளியால் உடைவது போல்' அவமதிப்புக்கு ஆளாக நேரிடும் என்கிறார்.

''முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க – சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்'' (பா. 14)

கல்வியின் தேவை இன்றைக்கும் பொருத்தப்பாடு மிக்கு கொண்டிலங்குவதற்கு அடிகள் மிகப்பெரும் சாட்சியாய் நிற்கிறார்.

**நிலையாமை தத்துவம்**

இன்றைய சமூகம் பாழ்பட்டு முரண்பாடுகளின் மொத்த உருவமாகத் திகழ்கிறது. எங்கும் சாதிச் சண்டைகள், மதக் கலவரங்கள், இனப்படுகொலைகள், மனிதனே இன்னொரு மனிதனை மிருகமாகப் பார்க்கும் மனோபாவம், பகைமை கொள்ளல், பொருதுதல், இதனால் எண்ணற்ற உயிர்கள் பலியாதல் போன்ற கொடுஞ்செயல்கள் இன்றைய சமூகத்தின் வேரை அறுத்துக் கொண்டு இருக்கின்றன. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் மனித நேயம் போற்றப் படாமையே! சகோதரத்துவம் பேணப்படாமையே! உயிரின் இயல்பறிந்து போற்றாமையே! மானிடப் பிறவியின் அருமை உணராமையே! எல்லாவற்றுக்கும் மேலாக இதெல்லாம் எப்பவும் முடியும்! நிலைபெற்று இருப்பேன்! அழிவில்லை எனக்கு என்று நினைக்கும் மாயைத் தன்மையே காரணம். ஒவ்வொரு மானுட உயிரும் இந்த உலகியலைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்குமானால் எப்போதும் துன்பமில்லை. இளமையின் வேகத்தில், செல்வத்தின் ஆணவத்தில் மனிதன் ஆற்றும் செயல்களைப் பற்றிப் புரிந்து கொள்வான்! நிதானம் கொள்வான்! அதனால் விளையும் பாதிப்புக்களைச் சரியாக துலாக்கோல் போல் நிறுத்துப் பார்க்கும் மனப்பக்குவம் வரும்! இறைவனின் மேன்மையும் இறையியலின் தத்துவமும் பிடிபடும். வாழும் வாழ்க்கையைச் சிறப்புற அமைத்து நல்வாழ்வு வாழ்வான்.

இந்த நிலையாமை தத்துவம் எல்லா உயிருக்கும் உணர்த்தப் படவேண்டும். உள்ளூட்ட வேண்டும். இதைத்தான் எல்லா மதங்களும் காட்டுகின்றன. சைவ சித்தாந்தமும் பேசுகின்றது. குமரகுருபரரும் இதைக் காட்சிப்படுத்தி வைத்துவிட்டுப் போயிருக்கிறார். அது இற்றைச் சமூகத்திற்கு மிகப் பொருத்தப் பாட்டுடன் அமைந்து இருக்கிறது. அதைக் காண்போம்.

திருமூலர் தெளிவாக உலகியலைப் புரிந்தவர். மனிதப் பிறவி பற்றியும் மனிதக் குணம் பற்றியும் உண்மையை வெகு இயல்பாகக் காட்டுகிறார்.

> "ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
> பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டு
> சூரையங் காட்டிடைக் கொண்டுபோய் சுட்டிட்டு
> நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே"

இதுதான் உண்மை. கசப்பாக இருந்தாலும் அச்சமூட்டினாலும் எக்காலத்தும் மாறாத உண்மை.

**யாக்கை, இளமை, செல்வம் நிலையாமை**

இரண்டு பாத்திரங்கள் உள்ளன. ஒன்று சுட்டது. மற்றொன்று சுடாதது. சுடாத பாத்திரம் மழையில் கரைந்து மீண்டும் அது உருவான மண்ணோடு மண்ணாகப் போய்விடுகிறது. இதுபோன்றுதான் மனிதர்களும். இவ்வுடம்பு அழிந்தபின் தான் கடைப்பிடித்த விரதமும் ஞானமுமே உடன் வரும். இவ்வாறு திருமூலர் பேசுகிறார் எளிமையாக சான்று காட்டி.

> "மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்
> திண்ணென்று இருந்தது தீவினை சேர்ந்தது
> விண்ணின்று நீர்விழின் மீண்டு மண்ணானாற்போல்
> எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே" (திரு. 143)

மேலும் 24 பாடல்களில் யாக்கை நிலையாமை பற்றிப் பேசுகிறார் திருமூலர். இதை நாம் உணர வேண்டும். 'நோய்களின் கூடு இவ்வுடம்பு' என்கிறது தம்மபதம்.

அடுத்து இளமை நிலையாமை பற்றிக் குறிப்பிடும்போது

> "கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
> விழக்கண்டுந் தேறார் **விழியிலா மாந்தர்**
> குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
> விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே" (திரு. 169)

குழந்தைப்பருவம், வாலிபப் பருவம், முதுமைப் பருவம் என்றே போய்த்தான் கழியும். மாற்றமில்லை. இளமை நிலையாமையை மனதில் கொண்டு செயல் செய்ய வேண்டும்.

இதையே குமரகுருபரரும் தெளிவாகக் காட்டிப் பேசுகிறார். நீரில் உருவாகி நொடியில் அழிந்து போகும் நீர்க்குமிழி போன்றது இளமை, நீரிலெழும்பியடங்கும் அலைகள் போன்றது செல்வம், நீரின் மேலே எழுதிய எழுத்துப் போன்றது யாக்கை இறைவனே நிதர்சனம் என பளீரென உலகியலைப் படம்

பிடித்துக் காட்டுகிறார். இன்றைய சமுகத்திற்கு இவை மிக்கப் பொருத்தப்பாட்டுடனே இலங்கி நிற்கின்றன.

> ''நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
> நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் – நீரில்
> எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
> வழுத்தாத தெம்பிரான் மன்று'' (பா. 1)

கல்வியைப் போன்று செல்வமும் போற்றுதலுக்குரியது எனின் அதனியல்பையும் அடிகள் அழகாக விளக்கிக் காட்டுகிறார். அதே நேரத்தில் செல்வம் மிக்குடையவன் செருக்குற்று நின்றால் மூதேவி விரைந்து சென்று வாசங் கொள்வாள் என்று கூறிப் பேராசை கொள்ளாது தம்மின் மெலியாரை நோக்கி மனத்தைத் திருப்தி கொள்ள வேண்டும். மேலும் செல்வர்க்குப் பணிவு வேண்டும். பெருந்தன்மை வேண்டும் என்றும் அடிகள் குறிப்பிடுகிறார். மேலும் 'வறியார்க்கீதல்', 'பெருஞ்செல்வத்திற்கு அழகு ஈகையே', 'கொடை செய்யாதவன் செல்வத்தினைவிட கொடை செய்கிறவனின் வறுமையே சிறந்தது, மேலானது' 'நல்வழியில் இருப்பவனிடமே பொருள் சென்று சேரும்' 'தீயவழியில் சேர்த்த செல்வம் நன்மை என்று பெயர் பெறாது தீயது தீயதாகவே இருக்கும்' என அடிகள் குறிப்பிடுவதைக் கூர்ந்து கவனிப்பின் செல்வம் பிறர்க்குப் பயனாக வேண்டும். செல்வம் நிலையாமைத் தன்மை கொண்டது என்பதையும் உணர்த்துவதை உணர்ந்து கொள்ளலாம்.

அழகான சான்று காட்டுகிறார் அடிகள் யானை உட்கொள்ளும் கவளத்திலிருந்து சிதறும் பருக்கைகளால் யானைக்குக் கவலையில்லை. ஆனாலும் கோடியெறும்புகளுக்குச் சுவை உணவாகிப் போகும். சிதறும் பருக்கைகளை இழுத்துப் போகும் என்கிறார்.

> ''வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
> றூங்குங் களிறோ துயருறா – ஆங்கதுகொண்
> டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
> ஆறாங் கிளையோ டயின்று''
> (பா. 38)

இதையே திருமூலர் வெளிப்படையாய் இறைவனை வணங்கினால் பெருஞ் செல்வம் உண்டாகும். செல்வத்தினைக் கொண்டு கூற்றுவனை வெல்லுதலியலாது என்கிறார்.

"தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே"

என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்.

மேலும் அடிகள் நிலையாமையை அடுத்து புகழ், சொற்பயன், நட்பு, காதலொழுக்கம் பற்றியும் பேசுவது இன்றைய சமூகத் தேவையை நிறைவேற்றும் செயல்பாடுகளுக்குப் பொருத்தமாகவே அமைந்துள்ளன.

என்றும் நிலைத்திருக்கும் புகழையே பெரியோர் நாடி அடக்கமாயிருப்பர். செயற்கரிய செயல்கள் செய்தும் பிறர் அவற்றைச் செய்தாற்போல தோன்றச் செய்து பேசாதிருப்பர் சிறியவர்களே ஆரவாரம் செய்து செருக்குற்றிருப்பர் என்கிறார் அடிகள்.

"அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்டு
டொல்லாதார் வாய்விட் டுலம்புப - வல்லார்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற் பார்" (பா. 72)

என்கிறார். அதேபோன்று தக்கவர்களையே நட்புகொண்டு நண்பர்களாகக் கொள்ள வேண்டும். வெளியே நட்புடன் உள்ளே பகையுடன் இருப்பாரை விட்டுப் பிரிதல் வேண்டும், என்கிறார் அடிகள். காதலொழுக்கம் பற்றிப் பேசும்போது அகப்பகை 'காமம்' என்கிறார். எந்த நிலையிலும் பிறன்மனை விழைதல் தீயதே பயக்குமென்கிறார் அடிகள். பிறன்மனை நோக்குதல் பற்றிப் பேசும்போது விலங்குகள் வாயிலே மணம் நிறைந்த பொருள்களைக் கொண்டிருந்தாலும் அவற்றை விடுத்து கசப்பை உண்பது போல என்கிறார் (பாடல் 89). இன்னொரு இடத்தில் கற்பிலாத பெண்டிரைவிட விலைமாதர் நல்லவர்கள் என்கிறார் அடிகள்.

"கற்பின் மகளி னலம்விற் றுணவு கொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர் - மற்றுத்தம்
... ... ... ..." (பா. 83)

முயற்சியின் பலனை,

> "மெய் வருத்தம் பாரார், பசிநோக்கார் கண்டுஞ்சார்
> ... ... கருமமே கண்ணாயி னார்" (பா. 53)

என்கிறார். வேந்தன் கடமைகள், அமைச்சன் செயல்பாடு, தவம் பற்றி அடிகள் அருளிச் செய்கிறார் தொடர்ந்து.

**முடிவுரை**

மனித வாழ்வின் செம்மைக்கு அறங்கள் வழிகாட்டும் விளக்குகள். இந்த விளக்குகள் பலவற்றைத் தம் நீதிநெறி விளக்கம் என்னும் கோயிலில் ஏற்றி சுடர்பரப்பி அருளிச் செய்திருக்கிறார் குமரகுருபர சுவாமிகள். திசைமாறி, தறிகெட்டுப் போய்க் கொண்டிருக்கும் சமூகத்திற்கும், மானுட உயிர்களுக்கும் உய்விக்கும் வழி சொல்லியிருக்கிறார் அடிகள். இன்றைக்கான சமூகத்திற்கு அடிகளது கருத்துக்கள் மிகப் பொருத்தப்பாடு கொண்டிலங்குகின்றன என்பதையே இச்சிறு கட்டுரை உறுதி செய்து காட்டுகிறது.

# மீனாட்சியம்மை குறத்தில் சொல்லாட்சி

அ. ஆலிஸ், திருச்சி

சைவத்துக்குத் தொண்டாற்றிய ஞானச் செல்வர் குமரகுருபர அடிகள் இயற்றிய பதினைந்து சிற்றிலக்கியங்களுள் ஒன்று 'மதுரை மீனாட்சியம்மை குறம்' ஆகும். மதுரை மீனாட்சி யம்மை மீது பாடப்பட்ட குறத்திப்பாட்டு மீனாட்சியம்மை குறம் என வழங்கப்படுகிறது.

''இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமுந்
திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே''

என்று பன்னிருபாட்டியல் குறிப்பிடுவதற்கிணங்க இந்நூலில் குறத்தி கூற்றில் முக்காலமும் சுட்டப்படுகின்றது. பாட்டுடைத் தலைவனைக் காமுற்ற தலைவி ஒருத்தியைக் கண்டு குறத்தி குறி கூறுவது மரபு. இங்குப் பாட்டுடைத் தலைவனாகச் சொக்க லிங்கப் பெருமானும், தலைவியாக மீனாட்சியம்மையும் கூறப் பெறுகின்றனர். இந்நூலுள் காப்புடன் சேர்த்து அய்ம்பத்தொரு செய்யுட்கள் உள்ளன. குமரகுருபர அடிகளின் கவிதைத் திறத்தில் அவர்தம் சொல்லாட்சி பெறும் இடத்தைக் காணும் நோக்கில் மீனாட்சியம்மை குறத்தில் காணப்படும் சொற்றிறம் இக்கட்டுரையில் ஆராயப்படுகிறது.

குறி கூறும் குறத்தி தான் சார்ந்த பொதியமலை பற்றி விளக்குகிறாள். பின்னர் நீ சொக்கலிங்கப் பெருமானைக் கூடி இன்புறுவாய் என மீனாட்சியம்மைக்குக் குறி கூறி வருவதுரைக் கிறாள். தம் குறவர் குலம், தம் வாழ்க்கை முறைகள், தாம் வாழும் மலை, தம் முன்னோரும் தாமும் குறி சொல்லும் முறைகள்; அவை பாலிக்கும் விதம்; குறி சொல்வதற்கான புற ஏற்பாடுகள், முன் சகுனங்கள் போன்ற செய்திகளை அடுத்தடுத்து சொல்லுகிறாள். அதன் பின்னர் மீனாட்சியம்மையை வாழ்த்தி வணங்குகிறாள். இவையே இந்நூல் நுவலும் முக்கியச் செய்திகள்.

## 1. பயின்று வரல்

மேற்குறிப்பிட்ட செய்திகளை விளக்க வரும் குமரகுருபரர் பல்வேறு உத்திகளைத் தம் பாடல்களில் கையாளுகிறார். இவ்வகையில் திரும்பத் திரும்பச் சொற்கள் பயின்று வருமாறு அமைக்கும் பொதுவான ஓர் உத்திக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்து வெளிப்படுத்துகிறார்.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும் (குறள் – 202)

என்ற குறளில் தீமையை விளக்குவதற்கு 'தீய' என்ற சொல் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதுபோல பல பாடல்களில் குமரகுருபரர் சொல் பயின்று வரல் உத்தியைக் கையாளுகிறார்.

செந்நெல் முத்தும் கன்னல்முத் தும்ஒளி
திகழ்மதுரை அங்கயற்கண் அம்மை
பொன்னுமுத்தும் சொரியும்வெள் அருவிப்
பொதியமலைக் குறத்திநான் அம்மே
(மீ. அ. கு. – பா. எ. 2)

என்ற இப்பாடலில் குறத்திதன் மலைவளம் கூறும்போது 'முத்து' என்ற சொல்லை மீண்டும் மீண்டும் பயன்படுத்துகிறாள். செந் நெல் தந்த முத்து, கன்னல் முத்து, அருவிசொரியும் முத்து என்ற மூன்று நிலைகளில் முத்து வளம் அவள் மலைநாட்டில் இருப்ப தாகக் குறிப்பிடுகிறாள்.

செண்டிருக்கும் வடவரையில் சேலிருக்கும்
அரசிருக்கும் தென்னர் ஈன்ற
கண்டிருக்கும் மதுரமொழிக் கனியிருக்கும்
துவரிதழ்அங் கயற்கண் பாவை
வண்டிருக்கும் நறைக்கமல மலரிருக்கும்
பரிபுரத்தாள் மனத்துள் வைத்துக்
கொண்டிருக்கும் தமிழ்முனிவன் குடியிருக்கும்
பொதியமலைக் குறத்தி நானே''
(மீ. அ. கு. – பா. எ. 3)

என்ற பாடலில் 'இருக்கும்' என்ற சொல் அடுத்தடுத்து வந்து மலைவளத்தை விளக்குவதுடன் கவிதைக்கு இனிமையையும் ஓசை நயத்தையும் தருகிறது. இது போலவே பின்வரும் பாடலில்

அகர ஈற்றினை உடைய சொற்கள் முதலிரு அடிகளில் விரவி வந்து 'ஐ' ஈற்றினை உடைய சொற்கள் கவிதை முழுவதும் விரவி வந்து ஓசை இன்பம் நல்குகின்றன.

மங்கை குங்குமக் கொங்கை பங்கயச்
செங்கை அங்கயற் கண்ணினாள் மறைபண்ணினாள்
பங்கனைக்கழல் அங்க னைச்சொக்க
லிங்கனைக்கூடி மேவுவாய் கொல்லிப் பாவையே

(மீ. அ. கு. – பா. எ. 4)

இக்கவிதையில் மீனாட்சி அம்மையின் அழகும் இயல்பும் வருணிக்கப்பட்டு வருவது உரைக்கும் நோக்கில் சிவ பெருமானைக் கூடுவாய் என குறி கூறுதலும் நிகழ்கிறது.

"வஞ்சி யேசுப ரஞ்சியேமட மயிலே வரிக்குயிலே
கொஞ்சி யேபழி யஞ்சி யாருனைக் கூடுவார் இனியம்மே"

(மீ. அ. கு. – பா. எ. 5)

என்ற வரிகளில் 'ஏ' என்ற விளித்தல் உருபு பாடலில் பயின்று வருதலைக் காணலாம். இம்முறையிலேயே இந்நூலுள் பாடல்கள் 12, 13, 14, 15 ஆகிய பாடல்களில் 'மலை' என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்து குறத்தியின் மலை நாட்டைக் கவிதை ஓசைப்பட விளக்குகின்றது.

கொழுங்கொடியின் விழுந்த வள்ளிக் கிழங்குகல்லி
எடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்வைத்துத்
தொடுப்போம்
பழம்பிழிந்த கொழும்சாறும் தேடிலும் வாய்மடுப்போம்
பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே உடுப்போம்
செழுந்தினையும் நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின் பாயலின்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில் விழுந்து வினை கெடுப்போம்
எங்கள்குறக் குடிக்கடுத்த இயல்பிதுகாண் அம்மே

(மீ. அ. கு. – பா. எ. 18)

என்ற பாடலில் 'ஓம்' என்ற தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி ஒவ்வொரு வரியிலும் நான்காம், எட்டாம் சீர்களில் அமைந்து கவிதைக்கு அழகூட்டுகின்றன. இச்சான்றுகளின் வாயிலாக குமரகுருபர அடிகள் தம் பாடலுக்கு அழகும், ஓசையும், கவிச்சுவையும் ஊட்ட சொல்லோ சொல்லின்

பகுதியோ பயின்று வரல் என்னும் உத்தியைத் தெரிவு செய்து கையாண்டுள்ள உத்தி தெளிவாகப் புலனாகிறது.

## 2. பேச்சுவழக்குச் சொற் பயன்பாடு

குறத்தி குறி கூறும்போது அவளது பேச்சு வழக்கு அவள் கூற்றிலே கலந்து வர வாய்ப்பு இருக்கிறது என்று கருதியோ என்னவோ சில பாடல்களில் பேச்சு வழக்குச் சொற்களைக் கலந்து எழுதும் முறையை அடிகள் கையாளுகிறார். குறி கூறும் களம் அமைக்கக் குறத்தி ஏவுகிறாள்.

"புழுகாலே தரைமெழுகு பிள்ளை யார்வை
பொற்கோலம் இட்டுநிறை நாழி வையாய்"

(மீ. அ. கு. – பா. எ. 6)

'மெழுகு', 'வை', 'வையாய்' என ஏவுகின்ற சொற்கள் குறிப்பிடத்தக்க சொற்கள். இதுபோலவே,

நங்கை நிகரு துங்குறி சொல்லவுன்
செங்கை தனைக்கொடு வாஎங்கள்
அங்க யற்கண்ணி பங்கர் அருட்சொக்க
லிங்கர் இனிஅணை வார்அம்மே

(மீ. அ. கு. – பா. எ. 9)

என்ற பாடலில் 'கொடு வா' என்ற சொற்றொடரில் வா என்ற சொல் ஏவுகின்ற பேச்சு வழக்குச் சொல்லாய் அமைந்துள்ளது.

"தூசும்ஒரு காசும்வை உள்
நேசம்வர வேசொல்லநான்
ஈசர்கயி லாசர்மது
ரேசர்உனைச் சேர்வாரம்மே"

(மீ. அ. கு. – பா. எ. 10)

என்ற பாடலிலும் இதே அமைப்பில் 'வை' என்ற சொல் குறிப்பிடத்தக்க சொல்லாகிறது. இவ்வாறு பேச்சுவழக்குச் சொற்கள் பயன்படுத்தப்படுவது கவிஞருக்கும் கவிதையைச் சுவைப்போருக்கும் இடையே ஒரு நெருக்கத்தை ஏற்படுத்துகிறது.

## 3. குறிப்பிடத்தக்க சொற்கள்

தகுந்த இடத்தில் தகுந்த சொற்களைப் பயன்படுத்துவது கவிதைக்கு மெருகூட்டும். மறக்க முடியாத பொருத்தமான பல சொற்களைக் கையாண்டு குமரகுருபர அடிகள் தம் கவிதையை நெஞ்சில் நிலைக்கச் செய்கிறார்.

பச்சைப் பசுங்கொம்பு அங்கயற்கண்
பாவை பயந்த ஆறிருதோள்
செச்சைப் படலை நறுங்குஞ்சிச்
**சிறுவன்** தனக்குப் பெருந்தடங்கண்
**கொச்சைச் சிறுமி** தனைக்கொடுத்த
குறவர்குலம்எம் குலம் அம்மே

(மீ. அ. கு. – பா. எ. 17)

இப்பாடலில் சிறுவன், கொச்சைச் சிறுமி ஆகிய சொற்கள் முறையே முருகப் பெருமான், வள்ளியம்மை ஆகிய கடவுளரை உருவகமாகக் குறிப்பிட்டுக் கவிதையைச் சிறப்பிக்கின்றன. ஒருவேளைக்குக் கஞ்சியும் என் குழந்தை தலைக்கு எண்ணெயும் ஓர் உடையும் தந்தால் நீ மனத்தில் நினைத்தவற்றையெல்லாம் கூறுவேன் என்ற பொருளில் அமையும்.

"ஒருகாலம் கஞ்சியும்என் குஞ்சுதலைக்கு
எண்ணெயும்ஓர் உடுப்பும் ஈந்தால்
பொருகால வேல்கண்ணாய் மனத்துநீ
நினைத்தஎலாம் புகல்வன் கண்டாய்"

(மீ. அ. கு. பா. எ. 24)

என்ற வரிகளில் 'குஞ்சுதலை' என்ற சொல் அவளது குழந்தையின் தலை என்று பொருள்பட்டு இன்பம் பயக்கிறது.

"வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக்
குறவன்எங்கள் வீட்டில் கொண்ட
வள்ளிதனக் கேகுறவர் மலையாட்சி
சீதனமா வழங்கி னாரால்"

(மீ. அ. கு. பா. எ. 20)

என்ற பாடல் அடிகளில் வெள்ளிமலைக் குறவன் என்பது சிவனையும் அவன் மகன் பழனிமலைக் குறவன் என்பது முருகனையும் குறிப்பிட்டுக் கவிதைக்கு அழகும் இன்பமும் ஒருசேர நல்குகின்றன.

கவிதையில் சொற்களை இடத்திற்கேற்பத் திறம்பட தெரிவு செய்து பயன்படுத்துகிறார் குமரகுருபரர். எனவேதான் ஒரு பொருள் பல சொற்கள் பல இவர் தம் கவிதைகளில் கிடைக் கின்றன. தமிழ் முனிவன் (பாடல் எண்–3), கும்பமுனி (பாடல் எண்–16) என்ற இரு சொற்கள் அகத்தியரைக் குறிக்கின்றன.

மதுராபுரி (பாடல் எண்-1), மதுரை (பாடல் எண்-2), தமிழ்க் கூடல் (பாடல் எண்-50) என மதுரையைக் குறிக்க மூன்று சொற்கள் இடம்பெறுகின்றன.

இவ்வாறு குமரகுருபரர் தம் கவிதைகளில் சொல் பயின்று வரல், பேச்சு வழக்குச் சொற் பயன்பாடு, தகுந்த இடத்தில் தகுந்த சொற் பயன்பாடாகிய குறிப்பிடத்தக்க சொற் பயன்பாடு ஆகிய உத்திகளைக் கையாண்டு அவர்தம் கவிதைகளை நம் நெஞ்சில் நிலைநிறுத்தும் சொல்லாட்சித்திறம் குறிப்பிடத்தக்க ஒன்று ஆகும். குறி கூறும் குறத்தியின் உள்ள நெகிழ்ச்சியினை வெளிப்படுத்துவதில் இக்கவிதைகளில் குமரகுருபர அடிகள் தெரிவு செய்து பயன்படுத்தும் சொற்கள் முக்கியப் பங்காற்றுகின்றன என்பதில் ஐய்யமில்லை.

# அடிகளின் அறநெறி அணுகுமுறை

ஆ. இசக்கியம்மாள், குற்றாலம்.

இலக்கியம் மனித வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடி இவ்விலக்கியத்தைப் பலவகையாகப் பகுக்கலாம். அதில் ஒன்றே அற இலக்கியம். இதனை 'நீதி இலக்கியம்' என்றும் கூறுவர். 'அறம்' என்பது ஒருவகை வாழ்க்கை நெறியாகும். இத்தகு அறத்தைப் பற்றி பல்வேறு காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் விளக்குகின்றன. காப்பியங்களில் ஒன்றான மணிமேகலை,

> ''அறம் எனப்படுவது யாதெனக் கேட்பின்
> மறவாது இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
> உண்டியும் உடையும் உறையுளும் அல்லது இல்... ...
> (மணி. 25-2-28-31)

என்று கூறுகின்றது. திருக்குறள் என்கிற நீதி இலக்கியம் ''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்'' (குறள்-35) என்று போற்றுகின்றது. திருக்குறள் பரிமேலழகர் உரை ''அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழித்தலுமாம்'' எனக் குறிப்பிடுகின்றது. 'அறம்' என்ற சொல்லிற்கு அகராதி தரும் பொருள் 'அறுத்துச் செல்வது' 'வழியை உண்டாக்குவது' என்பதாகும். எனவே மனித வாழ்க்கையைச் செம்மை உடையதாக, அமைதியுடையதாக, பயனுடையதாகச் செய்ய ஆன்றோர் காட்டிய நெறியே அறநெறி எனலாம்.

## இலக்கியத்தில் அறம்

தமிழில் தொன்றுதொட்டு வரும் இலக்கியம் முதல் தற்கால புனைகதை இலக்கியம் வரையில் அறநெறி பார்வைக்கு நிறைய இடமுண்டு. தொல்காப்பியர் இலக்கியத்தின் பாடு பொருளாக 'அறமுதலாகிய மும்முதற் பொருள்' (தொல்.செய். 105) என்று செய்யுளியலிலும்

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்புடன் புணர்ந்த ஐந்திணை மருங்கின்''

என்று களவியலிலும் இலக்கணம் கூறுகின்றார். தொல்காப்பியர் காலத்தில் அறம் பொருள் இன்பம் என்ற மூன்று நிலைகளைக் கொண்டதாக இருந்தது. ஆனால் பக்திமார்க்கக் காலத்தில் நான்கு நிலைகளைக் கொண்டதாகியது. இதனைத் தான், கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னூல் என்னும் இலக்கண நூல்,

'அறம் பொருள் இன்பம் வீடு
அடைதல் நூற்பயனே'' (நன். 10)

என்று குறிப்பிடுகின்றது. எனவே காலந்தோறும் 'அறம்' பற்றிய நூல்கள் தோன்றினமைக்குச் சான்றுகள் உள்ளன. இவ்வகையில் கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் தோன்றிய குமரகுருபரரும் தமது பல்வேறு படைப்புக்களுள் 'நீதிநெறி விளக்கம்' என்னும் அற நூலையும் படைத்துள்ளார் எனலாம். இத்தகு அற இலக்கியங் களை அறவியல் நோக்கு அல்லது அறநெறி அணுகுமுறை கொண்டு ஆராய்தல் வேண்டும். இதுவே காலத்தால் முந்திய பழமையான நோக்கு என்கிறார் க. த. திருநாவுக்கரசு.

**அறநெறி அணுகுமுறை**

இலக்கியம் என்பது வாழ்க்கை பற்றிய ஒரு திறனாய்வு எனலாம். எனவே ''மனித சமுதாயத்தின் அறவியல் கோட்பாடு களை - நீதிநெறிகளை - மையமாகக் கொண்டு அவற்றின் அடிப்படையில் இலக்கியங்களை அணுகுவது அறவியல் திறனாய்வாகும். (Moral of Ethical Approach) என்கிறார் தி. சு. நடராசன். ''இத்திறனாய்வு அறவியலின் அடிப்படையில் இலக்கியங்களை மதிப்பிடுவதும், குறிப்பிட்ட இலக்கியங்களை அறவியல் எவ்வாறு வழி நடத்திச் செல்கிறது என்று காண்பதும், இலக்கியங்களிலுள்ள அறவியல் நெறியில் பண்புகளையும் ஆற்றல்களையும் காண்பதும் இவ்வணுகு முறையின் நோக்கமாகும்'' என்ற தி. சு. நடராசனின் கோட்பாடே இவ்வாய்வில் பின்பற்றப்படுகின்றது. குமரகுருபரர் தமது நீதிநெறி விளக்கத்தில் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு பகுப்புக்களையும் உள்ளடக்கமாகக் கொண்டுள்ளார். அவற்றில் 'அறம்' என்ற பகுப்பு மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

**அறம்**

நீதி நூல்களில் தலையாயதாகக் கருதப்படும் திருக்குறள் அறத்தை 'இல்லறம்', 'துறவறம்' என்று பகுத்துள்ளது. நாலடியாரிலும் இவ்வகை பகுப்பு முறையே காணப்படுகின்றது. ஆனால் குமரகுருபரர் தமது அறம் பற்றிய பகுப்பில் கல்வி என்ற ஒரு ஒழுக்க நெறியை அதன் பல்வேறு நிலைகளை ஏறக்குறைய இருபத்து மூன்று பாடல்களில் எடுத்துரைக் கின்றார். எனவே இப்பாடல்கள் கல்விச் சிறப்பு, புலமைச் சிறப்பு, சொல்வன்மை, கற்றோரும் செல்வரும், கற்றவற்றைப் பாதுகாத்தலும் அதன்படி நிற்றலும், வறுமையும் கல்வியும் என்ற தலைப்புக்களில் ஆய்வு செய்யப்படுகிறது.

**கல்விச் சிறப்பு**

மனிதனை மனிதனாக்குவதுகல்வியாகும். குமரகுருபரர் கல்வி 'அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்' (பா. 1) என்று கூறுகின்றார். இம்மை மறுமை பயன்களைத் தருவதே கல்வி தான் என்பது அவர் 'வீடும்' என்று உம்மை கொடுத்துச் சிறப்பிப்பதனால் புலனாகிறது. அதோடு தனிமனித உணர்வுக்கு உரமிடும் வகையில் ... ... ... ... ... ... உறுங்கவலொன் றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை சிற்றுயிர்க்கு உற்ற துணை'' (பா. 1) என்றும் தெளிவுபடுத்துகின்றார். கல்வியின் சிறப்பைக் கூற காமத்தையும் கல்வியையும் ஒப்புமைப் படுத்திப் பேசுகின்றார். கல்வி கற்கும் பருவத்தில் துன்பத்தையும் கற்றபின் இன்பத்தையும் தரக் கூடியது. காமமோ தொடக்கத்தில் இன்பத்தையும் பின்னர் வாழ்வியல் சிக்கல் களையும் தரக்கூடியது என்ற புதிய சிந்தனையை எடுத்தாளு கின்றார். இத்தகு கல்வியை 'இடமறிந்து உய்த்துணர்ந்து' ஆழமாகக் கற்க வேண்டும். அப்படிக் கற்காத கல்வி ''எத்துணையவாயினும் ... ... ... ... ... ... இல்லெனின் இல்லாகும்'' என்று செவியில் அறைந்தாற் போல் அறிவுறுத்து கின்றார். அதோடு,

> ''கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால்
> மற்றோர் அணிகலன் வேண்டாவாம்'' (பாடல் – 12),

என்ற கருத்தினையும் நினைவூட்டுகின்றார். இக்கருத்து,

"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ...
கல்வி அழகே அழகு" (நாலடி - 131)

என்பதனை நினைவூட்டுகிறது. கற்ற கல்வியானது கற்றவரிடத்து எக்காலத்தும் நீக்கமற நிறைந்து நிற்பதாகும். அது ஒருவரை விட்டு (கற்றவரை) போக்குவதற்கு அரியது என்பதனால் 'போக்கறு கல்வி' (பா. 23) என்கிறார். இதே கருத்து பிற இலக்கியங்களிலும் 'வெள்ளத்தால் அழியாது வெந்தணலால் வேகாது' என்று வலியுறுத்தப்பட்டுள்ளது. இத்தகு சிறப்பு வாய்ந்த கல்வி கற்றலில் கருத்தைச் செலுத்தாது நகைத்து வீண்பொழுது போக்குவாரிடத்துப் போய்ச் சேராது. இக் கருத்தை விளக்க ஆசிரியர் கையாண்டுள்ள,

"... ... ... ... ... ... தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை உடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொள்ளப்படுவ தில்" (நீதிநெறி பா. 23)

என்ற உவமம் போற்றுதற்குரித்து. குமரகுருபரர் கல்வியை அதன் சிறப்புக் கருதிக் கற்புடையப் பெண்டிருக்கு உருவகித் துள்ளார். அப்பெண்டீர் ஈன்ற அறிவுப் புதல்வன் கவித்துவம் ஆகும். இங்குக் கற்றோர் எனப்படுவோர் புலமைத் திறம் வாய்ந்தவராக இருத்தல் வேண்டும். அதாவது கல்வி கற்றதனை அளக்கும் கோலாக புலமைத் திறம் காணப்படு கிறது. இக்கருத்து கற்றோருக்குத் தேவையான அடிப்படை சிந்தனையாகும்.

**புலமைச் சிறப்பு**

கல்வி கற்றோருக்குப் புலமைத் திறம் மிக இன்றியமையாத ஒன்றாகும். புலவரும் பிரமனும் தமது படைப்பாற்றலால் ஒன்றுபட்டவர் ஆவார். இருவர் தம் நாவிலும் கலைமகள் வீற்றிருக்கின்றாள். ஆனால் புலமைத்திறம் பெற்றோராகிய புலவர்கள் பிரமனைக் காட்டிலும் சிறந்தவராவார். காரணம் பிரமன் படைப்பாகிய மனித உடம்பு அழிந்து விடக்கூடியது. நிலையற்றது. ஆனால் புலமைத் திறம் படைத்தோர் படைப்புக்கள் புகழைத் தருவதோடு என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும். இவ்விடத்து ஆசிரியர் கல்வியால் புலமைத் திறம் மிக்கோர் மும்மூர்த்திகளுள் ஒருவராகக் கருதப்படும்

ப்ரமனைக் காட்டிலும் சிறந்தவர் என்பது 'கல்வி' தெய்வத் தன்மை பொருந்திய அறநெறி என்பதனை நிலை நாட்டுவதற்கே ஆகும்.

**சொல்வன்மை**

தாம் கற்றவற்றைப் பிறருக்குச் சொல்லும் போது தான் கல்வி சிறப்படைகிறது. குமரகுருபரர் சொல்வன்மையாக 'அறிய விரும்பியவருக்கு உரைக்கும் தன்மையையும் அறிஞர் நிறைந்த சபையில் பேசும் வன்மையையுமே' குறிப்பிடுகின்றார். சொல்வன்மை கற்றோருக்கு இன்றியமையாதது என்பதனை இலக்கண விளக்கம் என்ற நூலும்

"ஆறுட் பகைசெற் றருங்கலை யோர்ந்து
பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுதல்
நல்லவை அடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ
வல்லோர் மொழியினும் வல்லுந ராக்கிக்
கேட்போ ருறையறை நிறையவை யாகும்"
(இல. வி. 936).

வலியுறுத்துகின்றது. இத்தகு சொல்வன்மை பெற்றிருந்தால் அது "பொன்மலர் நாற்றமுடைத்து" என்று புலப்படுத்துகிறார் குமரகுருபரர். சொல்வன்மை வேண்டும் என்று வலியுறுத்து வதோடு அது இன்மையால் ஏற்படும் இழிநிலையையும்

"அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும் – நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இல்நலமும்
பூத்தலின் பூவாமை நன்று"
(பா. 5).

என்று கூறுகிறார். இத்தகு கடுமையான சாடுதலுக்குக் காரணம் ஒரு பிறவியில் கற்ற கல்வி எழுமையும் தொடர்ந்து வருமே என்ற அச்ச உணர்வே ஆகும். அதனை,

"... ... ... ... ... ... ... ... ... கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்"
(பா. 7).

என்று கூறுகின்றார். சொல்வன்மையற்ற கல்வியின் கொடுமை வலியுறுத்தவே பிறனில் விழைதலை உவமிக்கின்றார்.

**கற்றோரும் செல்வரும்**

கல்வியுடைமை, பொருளுடைமை என்ற இரண்டுமே இவ் வுலகத்திற்குத் தேவையான செல்வங்கள் ஆகும். எனவே கல்வி யில் சிறந்தவர்களுக்கும் செல்வத்தில் சிறந்தவர்களுக்கும் இருக்க வேண்டிய அடிப்படை பண்பு நலன்கள் இரண்டினை நீதிநெறி விளக்கத்தில் குறிப்பிடுகின்றார். கல்விச் செல்வரும்; பொருட் செல்வரும்,

> "... ... ... ... ... ... ... ... இல்லார்
> குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் தாமும்
> தலை வணங்கித் தாழப் பெறின்" (பா. 15).

சிறந்த சான்றாண்மை பெற்றவர்களாகக் கருதப்படுவர் என்ற அறவியலை வலியுறுத்துகிறார். குமரகுருபரரின் இக்கருத்து, "அறிவோர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல்" என்று வெற்றி வேற்கை கருத்தினையும்,

> "எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
> செல்வர்க்கே செல்வம் தகைத்து" (குறள் 125).

என்ற குறள் கருத்தினையும் நினைவுறுத்துகிறது. இரண்டாவ தாக கற்றோர் தம்மைக் காட்டிலும் மிகுதியாகக் கற்றவர் களைக் கண்டு, 'கற்றதெல்லாம் எற்றே இவர்க்கு நாமென்று கருத்தழிய' (பாடல் 14). வேண்டுகின்றார். செல்வருக்கோ

> "தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
> அம்மா பெரிதென்று அகமகிழ்க" (பாடல் 14).

என்று அறிவுறுத்துகிறார். இவ்விரண்டு பாடல்களும் செல்வருக்குத் தாம் பெற்ற செல்வத்தில் திருப்தியையும், கல்வி யுடையாருக்கு மேன்மேலும் கற்றல் வேண்டும் என்ற ஆர்வத் தினையும் அடிப்படை பண்புகளாக அறிவுறுத்துகின்றன. கற்றோருக்குச் செருக்கும் தற்பெருமையும் கூடாது என மேலும் இரு பாடல்களில் வலியுறுத்துகின்றார்.

> "முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
> கற்றன மென்று களியற்க – சிற்றுளியால்
> கல்லும் தகரும் (பா. 13).

என்பது காலந்தோறும் அறிவுறுத்தப்படும் உலக நியதியாகும். அறநெறிச்சாரம் என்ற அறநூலும் "சிலகற்றார் கண்ணும்

உளவாம் பலகற்றார்க்கு அச்சாணி அன்னதோர் சொல்'' என்று வலியுறுத்துகின்றது. மேலும் கற்றோர் தன் ஆற்றலை வியந்து நினைத்து தற்பெருமை கொள்வது குற்றம் என்கிறார். அதைவிட தற்பெருமை கொண்டு பேசுவது மாபெரும் குற்றம் என்று அறிவுறுத்துகிறார். தற்பெருமை பேசும் நிலையை ''தீச்சுடர் நன்னீர் சொரிந்தற்று'' என்று விளக்குகிறார்.

**கற்றதனை மறவாமை**

கல்வி கற்றோர் மேலும் மேலும் புதியவற்றைக் கற்பதனைக் காட்டிலும் கற்றவற்றை மறுத்தல் கூடாது என்பதனையே இப்பகுதி விளக்குகிறது. குமரகுருபரர் இக்கருத்தை,

''வருந்தித் தாம் கற்றன ஓம்பாது மற்றும்
புரிந்து சில கற்பான் தொடங்கல்'' (பா. 8).

கைத்தலத்திருந்த பெருமைமிகு செல்வத்தை மதியாமல் தொலைத்து விட்டு ஏதேனும் சிறுபொருள் கிடைப்பது கருதி கடைவீதி முதலிய இடங்களில் உள்ள புழுதியைப் பல மணி நேரம் கொழித்தலுக்கு ஒப்பாகும்'' என்று யதார்த்த உவமை கொண்டு விளக்குகிறார். ஒருவன் தான் கற்ற கல்வியைச் சிந்தித்தல், ஆராய்தல் முதலியவற்றால் மறவாது பாதுகாக்க வேண்டும் என்ற ஆழமான தத்துவத்தை மிகவும் ஆணித்தரமாக உணர்த்துகிறார்.

**வறுமையில் கல்வி**

வறுமையாளர் கல்வி சிறக்காது என்ற உண்மையைக் குமரகுருபரர் தமது கல்வி பற்றிய செய்யுளில், எடுத்துரைக்கின்றார். இது எதனை ஒத்தது என்றால்,

''... ... ... ... ... மனைத்தக்காள்
மாண்பிலள் ஆயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா செயல்''

ஒத்ததாகும் என்று விளக்குகிறார்.

**முடிவுரை**

இவ்வாறு குமரகுருபரர் 'கல்வி' என்னும் ஒழுக்கநெறியைப் பல்வேறு நிலைகளில் சித்திரித்துள்ளார். பொதுவாக ''அறநெறிகள் என்பவை காலம் இடம் என்னும் தளத்திற்கு

உட்பட்ட சார்புநிலைக் கொள்கைகளே அதாவது அவை என்றும் ஒரே மாதிரியாக இருப்பன அல்ல, மாறக்கூடியவை, வளரக் கூடியவை'' (தி.சு. நடராசன்) என்றாலும் குமரகுருபரரின் கல்வி பற்றிய நீதிநெறி விளக்கக் கருத்துக்கள் எல்லாக் காலத்திற்கும் ஏற்றதாகிய மாறாத கருத்துக்கள் ஆகும். எல்லாக் காலத்துக்கும் உரிய அழியாத இலக்கியத் தன்மையினைக் கொண்டதாகவும் விளங்குகிறது. குமரகுருபரரின் இக்கல்வி பற்றிய அறவியல் கோட்பாடு 'நல்லது – கெட்டது' 'தீங்கற்றது – தீங்கானது' என்ற தனி மனித உணர்வினைத் தாங்கிய மனிதாபிமான கோட்பாடு ஆகும். அதோடு குமரகுருபரரின் நீதிநெறி விளக்கம் என்னும் இவ்வற இலக்கியம் டி.எஸ். எலியட் கூறிய ''இலக்கியம் அளிக்கும் இன்பம் நிலைபேறுடையதாக இருக்க வேண்டுமானால் மனித வாழ்க்கையை மேம்படுத்தும் அறநெறிக் கருத்துக்களும் அனுபவ உண்மைகளும் அதில் இடம் பெற்றுத்தான் ஆக வேண்டும். அப்பொழுது தான் அது வாழும் இலக்கியமாக விளங்க முடியும்'' என்பதற்கு பொருந்தி வருகிறது எனலாம்.

# அடிகளின் வடமொழிப் புலமை

**இராகவன் முத்து, காரைக்குடி**

குமரகுருபர அடிகள் காசி (வாரணாசி)த் திருத்தலத்தில் வாழ்ந்த காலத்தில் வடமொழி இலக்கிய, இலக்கண, நீதிநூல் அறிஞர்களுடன் உறவு ஏற்பட்டிருக்க வேண்டும். தில்லியை ஆண்ட பாதுஷாவிடம் இந்துஸ்தானி மொழியில் உரையாடியும் சைவ, தமிழ் இலக்கியப் பெருமைகளை உளங்கொள்ளும்படிக் கூறியும் அடிகள் அவ்வரசனிடம் பல வெகுமதிகளைப் பெற்றார். அதற்கு, சகலகலாவல்லி மாலை என்ற தோத்திரப்பதிகம் பாடிக் கலைமகள் கருணையைப் பெற்றதே காரணம். கலைமகள் திருவருள் துணையினாலேயே வடமொழி (சமஸ்கிருதம்) யறிவும் புலமையும் அடிகள் பெற்றார் என்றும் கொள்ளலாம். சைவ சமயக் கடவுள் வடிவங்கள்பாற் பெரும்பற்றும் பேரன்பும் கொண்டாலும், அடிகள் பிறசமயக் கூறுகள் எதிலும் காழ்ப்பற்ற செந்தண்மையாளராக இருந்தார். அதுபோலவே, தாய்த் தமிழின்பால் ஆராக் காதலும் அளப்பரிய பேரன்பும் கொண்டிருந்த அடிகள், கீழை நாட்டின் உயர்தனிச் செம்மொழிகளில் இன்னொன்று ஆகிய வடமொழி (சமஸ்கிருதம்)யின்பால் வெறுப்போ, இழிபுணர்வோ காட்டாமல் அதனையும் உயர் வாகவே பாடுகிறார். ''தொண்டர் செந்நாவில் கலைமகள் நின்று காப்பதால்'' தான் அவர்கட்கு ''வடநூற் கடலும் தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்'' (சகல. மாலை-4) வரவாகின்றன என்று அடிகள் பாடுவார். எனவே, தமிழைப் போலவே வடமொழியிலும் புலமை உடையராதல் என்பது கடவுளின் திருவருட்கொடை (LEGACY) தான் என்பது அடிகளின் துணிபு.

அடிகளின் நூல்களைப் பயின்றால் அவர்தம் வடமொழியறிவு ஆங்காங்குச் செறிவாக விரவியிருக்கக் காணலாம். ''நீதிநெறி விளக்கம்'' என்ற அடிகளின் வெண்பா நூலை மட்டும் ஆழ நோக்கி, வடநூல் அறிஞர்களை ஏற்று அடிஒற்றியும் புதுக்கியும் அடிகள் வழங்கிய சில செய்திகளைத் தொகுப்பதும்,

அதனால் அடிகளின் வடமொழிப் புலமையை இனங்கண்டு போற்றுதலும் இக் கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**வடமொழித் தொடர்புடைய செய்திகள்**

அடிகள் தம் பிரபந்தங்களில் வடமொழி நூலறிவையும் உயர்வுடனேயே குறிப்பிடுகிறார். இறைவன் மறைகளால் அளக்கவும் அடையவும் முடியாத நிலைக்கு உயர்ந்தவன் என்று அடிகள் பற்பல இடங்களில் பாடுகிறார். ''எழுதாக் கிளவி'' ஆகிய வடமொழி மறைகள் சிவபிரானுக்குக் குதிரையும் சிலம்பும் ஆயின என்றும், அவை ,நான்முகனாலும் கலை மகளாலும் ஓதப் பெற்றன என்றும் பாடுவார்.

வடமொழிச் சொற்களும் சொல் தொடர்களும் அடிகள் திருவாக்கில் விரவி வந்துள்ளன. அவை இயல்பாக அப்படியே அமைந்தும், தமிழ் இயைபிற்கு இசையத் திரிபுடனும், தமிழ் மொழி பெயர்ப்பாகவும் ஆளப்பெற்றமைந்தன.

சித்ரம், தர்க்கம், ப்ரதாபம், லளிதம், விருத்தர் முதலிய சொற்களும், அருணரத்னம், சித்ரரதி, பக்தசகாய முதலிய தொடர்களும் திரிபின்றி அடிகளால் ஆளப்பெற்றன. இவ்வரிசையில் உபய சரணன், காமானலம், குடிலகோடீரம், சகதண்ட மண்டலம், பானுவிலோசன, விரகானலம் என்ற தொடர்களை ஆளும் நேர்த்தி, அடிகளின் வடமொழிப் புலமைக்கு ஒரு சான்று.

அம்பை, சடானன், பார்ப்பதி, பற்பம், மயிடம், செந்துக்கள், வாச்சியம் முதலான சொற்கள் திரிபு ஏற்று வந்த வடசொற் களின் தமிழ் வடிவங்கள்.

நரசிங்கத்தை மானிட மடங்கல் என்றும் இரணியனை ஆடகப்பெயர் அவுணன் என்றும் பானுகோபனை இரவிபகை என்றும் கிரவுஞ்சகிரி என்பதைக் குருகுபெயர்க் குன்றம் என்றும் சர அசரம் என்பதை நிலையில் பொருள், நிலை இயற்பொருள் என்றும் விசாலாட்சியைப் பெருந்தடங்கண்ணாள் என்றும் வடமொழித் தொடர்களை அடிகள் நறுஞ்செழுந் தமிழாக்கி வழங்குவது, கற்றவர்க்குக் கழிபேரின்பம் தருவதாகும்.

### நூல் மரபுகள்

மகளிர் கால் படுவதால் அசோகு மலர் விரியும் என்பதும் சந்திரகாந்தக் கல்லில் இருந்து நிலவொளியில் நீர்சுரக்கும் என்பதும் வடமொழி இலக்கிய நூல்களில் கண்ட மரபுகள். இன்னும் இதேபோல், சந்திரன் கலையில் இருந்து பெறலாகும் அமுதம் தேவர்கட்கு உணவாவதும், எழுவகைப் பிறப்புகள் இவை என்ற பட்டியலும் வடமொழி நூல் மரபுகளே. இசைக்குக் கல் உருகும் என்ற பழைய புராணச் செய்தியை அடிகள் மீனாட்சி அம்மையின் குரல் இனிமை கூறும்பொழுது பயன்கொண்டு, கற்பனையில் வடநூல் புலவர்களைத் தாண்டி மேற்செல்கின்றார். மீனாட்சியம்மை அம்மானை ஆடும்கால், உடன்பாடும் இசைப்பாட்டிற்கு அவள் கையிருந்த மாணிக்கப் பந்து உருகிற்று என்பார்.

நெருப்பின் நிறம் செம்மை எனக் கொண்டு செந்தழல் என்பது தமிழ் வழக்கு. ஆயின், நெருப்பை வெண்மை நிறம் பெற்றது என்னல் வடமொழி இலக்கிய வழக்கும் நியாய நூல் வழக்கும் ஆகும். அதை அடிகள் நுட்பமாகப் பயன்கொண்டு,

> ''காசிக் கடவுள் நுதல்விழியும்
> இடக்கண்ணும் வெண்ணெருப்பே''

என்று பாடுகிறார்.

இவற்றான் அடிகள் வடமொழி இலக்கியங்களில் பயிற்சியும் பயன்பாடும் பெற்று, அம் மரபுகளை இசைந்துழி ஏற்றுக் கையாண்டமை தெரிய வரும்.

### வடமொழியில் நீதி நூல்கள்

வடமொழியில் அமைந்த நான்மறைகளின் பல பகுதிகளும் துணைப் பகுதிகளும் (ஆகம, உபநிடதங்கள்) வழிபாடு, தோத்திரப் பாடல்களாக மட்டும் நின்றுவிடாமல் நீதிநெறி களையும் அறக்கோட்பாடுகளையும் கூறுகின்ற அறநெறி இலக்கியங்களாய் அமைந்தன.

சாணக்கியர் வழங்கிய அர்த்த சாஸ்திரம், வெள்ளிக் கடவுள் (சுக்கிரன்) அருளியதாய் வழங்கும் சுக்கிரநீதி, நியாய சாஸ்திரம் இவற்றில் தனிமனித ஒழுக்கம், சமுதாய ஒழுக்கம்,

அரச ஒழுக்கம் இவற்றுக்குரிய நீதிநெறிக் கூறுகள் பரந்து விரிந்துள்ளன.

தமிழிற் காணும் விவேக சிந்தாமணி, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களை ஒத்த அறநெறித் தொகை நூல்கள் வடமொழியிலும் உண்டு. அவற்றுள் இங்கு எடுத்தாளப் பெற்ற நூல் "சமயோசித பத்ய மாலிகா" என்பது. இந்நூலில் பகவத் கீதைப் பகுதிகளும் விதுரநீதி என்ற நூற் பகுதிகளும் இடம் பெற்றுள்ளன. இந்நூலின் தொகுப்பாசிரியர் பெயர் தெரிய இல்லை.

மூதுரை, நன்னெறி, நல்வழி, உலகநீதி, ஆத்திசூடி, வெற்றி வேற்கை, கொன்றைவேந்தன் என்ற குழந்தைப் பருவத்திலேயே புகட்டப்பெறும் அறநூல்களுக்கு இணையான பாடல்கள் வடமொழியில் நிறைய உண்டு. அவை ஆசிரியர் பெயர் வழங்கப் பெறாமலேயே "சுபாஷிதாணி" (நல்லறச் செய்திகள்) என்று பெயரிட்டு வழங்கும்; இளம் சிறுவர்களுக்கு உணர்த்தப் பெறும்.

இங்குக் கூறப்பெற்ற இந் நீதிநூல்களின் கருத்துக்களும் செய்திகளும் குமரகுருபரர் திருவுள்ளத்துட் சென்று புகுந்து ஊறி விளைந்து வந்தன என எண்ணும் வண்ணம் நீதிநெறி விளக்கத்தில் பல பாடல்களை அடிகள் அருளியிருக்கின்றார்.

**ஒருபோகுச் சிந்தனை**

நியாய சாஸ்திரத்தில் கண்ட இரு நியாயங்களை அடிகள் ஏற்றுக் கையாண்டு அதற்கு இணையான இரு பாக்களை அருளியுள்ளமை காட்டுவாம்.

1. "இந்துஷ் வேட நியாயம்" என்று நியாய நூற் கோட்பாடு ஒன்று உண்டு. மதிக் கொழுந்தை யாரும் காண முடிமேல் ஏற்றும், நஞ்சை மறைத்துத் திருமிடற்றில் அடக்கியும் நின்ற பண்பால் சிவபிரான் வணங்கத்தக்கவர் ஆயினார் என்பது அந்நியாயம். இக்கோட்பாடு உலக மாந்தர் யாருக்கும் பொருந்தும் என்று உணர்ந்த அடிகள், "மற்றவர் பெருமை களை வெளியிட்டும், சிறுமைகளை மறைத்தும் வாழும் பெருந்தன்மையாளர்களை அனைவரும் போற்றுவர்" என்று கூறுவார். "பிறர்பிறர் சிறுமை புறம்காத்தும், சீரெல்லாம்

தூற்றியும்'' வாழ்பவர் ''பிறரால் பெருஞ்சுட்டு'' ஏற்பர் என்பது நீதிநெறி விளக்கத்தின் செய்தி. (பாடல் 20)

2. ''மக்ஷிகா நியாயம்'' என்று ஒரு செய்தியை நியாய சாஸ்திரம் கூறும். மேனியின் நற்பகுதிகளை நீக்கிப் புண் உள்ள இடத்தின் அழுக்கையே ஈயானது விரும்பிச் சேரும். அதுபோல் இழிந்தவர்கள் உள்ளனர் என்று, இச்செய்தியை, பிறர்மனை நோக்கி, கற்பிழந்து, காமம் கதுவப்பட்ட மாந்தரைச் சுட்டும் பொழுது அடிகள் குறிப்பாக உணர்த்துவர். வாயில் இருக்கும் இனிய நறிய உணவை உமிழ்ந்தும் நஞ்சை உண்டும் அழிவு தேடும் விலங்குகள் அவ் விழிநிலை மனிதர் என்பது அடிகள் பாடல். (''திருவினும் நல்லாள்'' – நீதிநெறி – 80)

**பொலிவும் விரிவும்**

1. மன்னன் எவ்வழி, மக்கள் அவ்வழி என்ற அறநெறிக் கூற்றை ''இகல்மன்னன் சீர்வழிப் பட்டதே மன்பதை'' என்பார் அடிகள். (நீதிநெறி – 44) இவ்வறம் சமயோசித பத்ய மாலிகாவை ஏற்றுவிரித்தது.

ராக்ஞீ தர்மிணி தர்மிஷ்டா;
பாபே பாபா: ஸமே ஸமா: |
லோகாஸ் ததநுவர்த்தந்தே
யதா ராஜா ததா ப்ரஜா: ||

என்ற செய்யுள் அறத்தை அடிகள் வழங்கும் பொழுது, அதற்கு ஒரு பொலிவைத் தன் அறிவாற்றலால் ஏற்றி விரிவாக்கினார். ''நீர்வழிப் பட்ட புணை'' என்ற உவமையினால் மன்னராட்சியில் மக்களின் நிலையை அடிகள் சுட்டி உரைத்து, மன்னராயவர் அறம் பிறழவே கூடாது என்று அறிவுறுத்தினார்.

2. தான் கற்ற கலையினைத் தகுதியற்றவர்க்கு வழங்குதல் விலைப்பொருட்டேயாம். அது ''விற்றலே'' யாம். அவ்வண்ணம், தாம் கற்றவற்றைப் பிறர்க்கு விற்றவர், இயமன் கைகளில் துன்புறுவர் என்பது அடிகளின் பாடல் (''பிறர்க்குப் பயன்பட''– நீதிநெறி – 22) இக் கருத்து உபநிடதச் செய்தியின் விரிவாகும்.

''இதம் அதர்வ சீர்ஷம் அசிஷ்யாய ந தேயம் |
யோ யதி மோஹாத் தாஸ்யதி ஸ:
பாபீயான் பவதி || ''

என்பது கணபதி உபநிஷதத்தின் இறுதிப்பகுதி. தக்கவர் அல்லார்க்குக் கலைஞானத்தை ஆசையினால் வழங்கிய ஆசிரியன் கடும்பாவம் செய்தவன் ஆவான் என்பது உபநிடதம். ஆங்குக் கூறப்பெற்ற பாவத்தின் முடிவை அடிகள் விரிவாக்கி வழங்குவார்.

3. செல்வரின் பின் உலகு பித்துடையதாக வணங்கிச் சென்று வாய்பார்த்துக் கிடக்கும். இதை,

''கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்'' (நீதிநெறி – 11) என்று கூறி வருந்துவர் அடிகள். இச்செய்தி வட மொழிப் பாடலைச் செம்மை செய்த செய்தி எனலாகும்.

''வயோ வ்ருத்தா: தபோ வ்ருத்தா:
ஞான வ்ருத்தா: பஹீஸ்ருதா:
இத்யேதே தனவ்ருத்தஸ்ய த்வாரே
திஷ்டந்தி கிங்கரா:''

என்பது சமயோசித பத்ய மாலிகாப் பாடல். அறிவிலும், தவத்திலும், வயதிலும் மூத்தவர்கள் கூடச் செல்வர்கள் வீட்டுவாயிற் படிகளில் காவல் பணியாளர் போல் காத்துக் கிடக்கின்றனர் என்பது வடமொழிப் பாடல். அச் செய்தியை ''இடக்கர் அடக்கல்'' முறையில் அடிகள் பொலிவாக்கி வழங்கியுள்ளார்.

4. கல்வியறிவை வடநூலார் ''ஸ்ரீவித்யா'' என்று பெண் பாலாய்க் கூறல் மரபு. அம்மரபை அடியொற்றி, ''கல்வியே கற்புடைப் பெண்டிர்'' (நீதிநெறி – 4) என்ற செய்யுளை அடிகள் வழங்கினர். ஆனால் உருவகத்தை மேலும் விரிவாக்கி, செல்வப் புதல்வனே தீங்கவி என்றும் ''சொல்வளம் மல்லல் வெறுக்கை'' என்றும் பொலிவேற்றியுள்ளார் குமரகுருபரர்.

5. மன்னன் நன்னெறியில் ஒழுகி, குடிமக்கள் மனம் நோவா வகை இறை(வரி)ப் பொருளைக் கொள்ள வேண்டும். இல்லா விடில் அவன் விரைவில் அழிந்துபடும் கொள்ளைக்காரன் போன்றவன் ஆவான். இவ்வறத்தை, சாணக்கியர் அர்த்த சாஸ்திரத்தில் மறைமுகமாகவும் நாகரிகமாகவும் உணர்த்து கிறார்.

''சரலஸ்ய வைதனிகஸ்ய வேதனா ப்ரார்த்தனாகாலே ஜனா: வ்யவஹரந்தி! தஸ்யுகர்மிண: பர்த்ஸனேன பீதா: ஜனா: ந வ்ய வஹரந்தி | தார்மிகேன ந்ருபேன ஸாகம் ஜனா: விவாதம்

குர்வந்தி பீகரேன ந்ருபேன ஸாகம் ஜனா: விவாதம் ந கதாபி குர்வந்தி | கிந்து போ ராஜன்! ஹ்ருதி ஏனாம் உபதாதும் அர்ஹஸி | வைதனிகஸ்ய ஜீவிதம் நிர்விஸங்கம் – தஸ்யகர்மிண; ஜீவிதம் நித்யம் பயப்ரதம்'' என்பது அர்த்தசாஸ்திரப் பாடல்.

இதன் பொருள்: ''உண்மை உழைப்பாளியின் கூலிக்கு மக்கள் பேரம் பேசுவர். வழிப்பறி கொள்ளையனின் அதட்டலுக்கு அஞ்சுவர்; பேரம் பேசார். நேர்மையாய் ஆளும் அரசிடம் மக்கள் வாதாடுவர். அச்சுறுத்தி ஆளும் அரசிடம் மக்கள் வாதாட மாட்டார்கள். ஆயின், அரசே! இது நினைவிற் கொள்க. கூலிக்கு உழைப்பவன் வாழ்வு சாசுவதம் (நிலைக்கும்); கொள்ளைக் காரன் வாழ்வு நித்ய கண்டம் (நிலையற்றது)''.

இச்செய்திகளை அடிகள் மனம் கொண்டு, இவ்வறத்தை, நயமாக இடித்துரைக்கும் நல்லமைச்சர் நிலையில் நின்று மூன்று பாடல்களை அருளுவார். ''குடி கொன்று இறைகொண்டால் அம்மன்னன், ஆறலை கள்வர் போல்வான். அவன் நெட்டுயிர்ப் போடுற்ற பிணம் ஆவான்'' என்பார் அடிகள். (நீதிநெறி – 29 - 30 - 31) அப்பாடல்கள் அர்த்தசாஸ்திரத்திற் கண்ட மறை முகச் செய்தியை நேர்முகமாயும் பொலிவாயும் கூறியதேயாம்.

4. கல்விப் பெருமையும் புலமைச் செல்வர் உயர்வும் பற்றிய அடிகளின் பாடல்கள் வடமொழி அறநூற் பாடல்களுக்கு ஒருபோகுடையன.

''கல்விப் பொருள் ஒன்றே எப்பொருளினும் மிகச் சிறந்த தாகும். மற்றைப் பொருள் எல்லாம் அக்கல்வியை மூலமாய்க் கொண்டு உண்டாவன ஆம்'' என்பது சுக்கிரநீதி. (III - 6 - 178). இதை, அடிகள் ''கல்வியின் ஊங்கில்லை சிற்றுயிர்க்கு உற்ற துணை'' (நீதிநெறி – 2) என்ற பாட்டில் அருளினார்.

கல்வியே அழகு கூட்டும் அணிகலன்களில் தலையாயது. கல்வியழகு உடையார்க்கு வேறு அணிகலன் வேண்டாம் என்பது அடிகள் வழங்கும் அறவுரை. (நீதி–13).இச் செய்தி வடமொழியில் சிறுவர்கற்கும் அறநெறிப் பாடலின் செய்தியாகும்.

''சுந்தரோபி சுசீலோபி குலீனோபி மஹாதன: |
ஷோபதே ந வினாவித்யாம், வித்யா சர்வஸ்ய பூஷணம் || ''

என்பது மேற்சுட்டிய செய்யுள் (சுபாஷிதாணி).

அவ்வகைச் செய்யுள் ஒன்று, மன்னரையும் புலவரையும் ஒப்பீடு செய்யும். "சிறப்புக் கொள்வதில் எல்லை வரையறை மன்னர்க்கு உண்டு, புலவர்க்கு இல்லை எனவே மன்னனிற் புலவர் உயர்வுடையர்" என்று கூறும்.

"வித்வத்வம் ச நருபத்வம்ச நைவதுல்யம் கதாசன |
ஸ்வதேசே பூஜ்யதே ராஜா வித்வான் ஸர்வத்ர பூஜ்யதே" ||

என்பது அச்செய்யுள். இச்செய்தியை அடிகள் இன்னும் விரிவும் பொலிவும் ஏற்றி, புலவர்கள் படைப்புக் கடவுளையும் விஞ்சும் பெருமை உடையார் என்று ஒப்பீட்டின் எல்லையை உயர்த்தி மகிழ்வார். "கலைமகள் வாழ்க்கை" (நீதிநெறி-7) என்னும் வெண்பாவில் தமிழ்ப் புலவர்கள் தம் படைப் புத்திறத்தால் மலரவனையும் விஞ்சினர் என்று விதந்தோதி மகிழ்வார் குமரகுருபரர்.

"வித்யா ததாதி வினயம் வினயாத் யாதி பாத்ரதாம்!
பாத்ரத்வாத் தனம் ஆப்னோதி தனாத் தர்மம் தத: சுகம்" ||

என்பது சிறார்க்குரிய மற்றுமொரு அறநெறிச் செய்யுள். கல்வியால் பணிவும், தகவும், திருவும், சுவைகளும் விளைவாகும் என்பது இச் செய்யுட் கருத்து. இதனை ஏற்று அடிகள் "அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்" (நீதி.2) "முற்றும் உணர்ந்தவர் இல்லை" (நீதி.14) என்ற இரு செய்யுட்களை அணிபெறத் தந்தார். அவற்றால், கல்விச் செருக்கை அகற்றும்படி அறிவுறுத்தினர் அடிகள்.

**தொகுத்துச் சுட்டியவை**

ஈகையும் கொடையும் இம்மைக்கும் மறுமைக்கும் உதவும், பயனும் புகழும் விளைவிக்கும் என்பது வடநூல்கள் உணர்த்திய அறச்செய்தி. அவ்வறம், நிலையாமையுடன் இயைத்து உணர்த்தப் பெறும்.

"அறிவு ஈட்டப் புகுவான் நெடிது வாழ்வேன் என்ற உறுதியுடன் முயலுக; அறம், கொடை, ஈகை மேற்கொள்வோன் நாளையே மரணம் வரலாம் என்ற உணர்வுடன் இயங்குக" என்று சுக்கிரநீதி (3-8-2) கூறும். இவ் வறத்தை நெஞ்சறிவுறூஉ என்று வழங்க விரும்பி ஏற்றுக்கொண்ட அடிகள், சுட்டுமொழியாகவும், தொகையாகவும் இக் கருத்தை (concept) மூன்று பாடல்களில் அமைத்தருள்வார்.

“இளமை நீர்க்குமிழி போன்றது; நீர்ப்பரப்பில் எழும் அலைத்திரள் போல்வது செல்வம்; நீர்மேல் எழுத்துப் போல் வாழ்வு-யாவும் நிலையற்றன. எனவே ஈகை மேற்கொள்ளுதல் வேண்டும். சிறிதே ஈயினும் போதும். யானைக்குரிய உணவில் ஒரு சிறிது (ஒரு கவளம்) போதும், அதை உண்டு கோடி எறும்புகள் பசிதீர்த்துக் கொள்ளும். அவ்வண்ணம் ஈதலே செல்வத்தின் பயன். ஈயாதார் கடையர் ஆவார்” என்று கொடைப் பெருமையை நீதிநெறி விளக்கத்தில் (1, 38, 66) பாடுகின்றார்.

**இசைவும் மறுப்பும்**

ஊழ், முயற்சி என்ற இரண்டும் எதிர்நிலைப் பொருட்கள். ஊழின் வலிமை அளப்பரியது. எனினும் முயற்சி வேண்டும், முயலாமல் வாளா விருப்பார்க்கு ஊழ் ஒரு துணையாக அமையல் கூடாது என்ற வாழ்வறங்களை வடநூலாரும் ஏற்றனர்; அடிகளும் இசைந்து பாடுவார்.

“ஒருதலையாக வரற்பாலனவற்றைத் தடுக்க இயலாது.... ஊழ் தீயதாகுங்கால் பெரிய நற்செயலும் தீய பயனை விளை விக்கும். – மாவலியும் அரிச்சந்திரனும் கொடையினால் துன்புற்றனர்” (1-6-54;58) என்பது சுக்கிரநீதி, இச்செய்தியை அவ்வண்ணமே ஏற்றுக்கொண்டு அடிகள் “நல்லவை செய்யத் தொடங்கினும் நோனாமே அல்லன அல்லவற்றில் கொண்டுய்க்கும்” – ஆறலைத்துண்பார் போல் – (நீதிநெறி – 92) என்று ஊழின் வலிமையை இசைந்து பாடுவார்.

ஆனால், ஊழ் வலியதாகலின் முயலாமல் இருப்பாரை, படைப்பில் இறைவன் கண்ட தோல்வி என்றும், ஊழின் தீமை உளங்கொள்ளாது முயன்று பார்க்கும் “தீரர்”களே படைப்பின் வெற்றி என்றும் சாணக்கியார் வகுத்துரைப்பார்.

“யத்னம் கரோது மனுஷ்ய: பலம் ததாதி பகவான் ஸ்வயம்!,... அவிதிதமபி பலம் உபேக்ஷ்ய யோ உத்யமேன ஏவ ஜீவதிஸ தீர: பகவத: விஜயஸ்தம்ப: ||” – (அர்த்தசாஸ்திரம்) எனவே முயற்சி செய்பவர்களை அடிகளும் பாரட்டா முனைகின்றார். ஊழின் வலிமையை மிக வலிமையாகச் சுட்டிக் காட்டிய சுக்கிர நீதி நூலிலேயே,

''மக்களுக்கு இம்மையிற் செய்யும் முயற்சிகளாலேயே திறமை உண்டாகும் என்ப. நெய்தோய்ந்த திரியைப் பற்றி நிற்கும் விளக்கைக் காற்று அவித்துவிடாது காத்தல் முயற்சியினாலே யாகும்'' (1-6-53)

என்று ஊழைப் பற்றி எண்ணிச் சோம்பிக் கிடவாமல் முயற்சி மேற்கொள்வதற்கு ஒரு எடுத்துக்காட்டு வழங்கப் பெற்றது. அந்த விளக்கு - காற்று உவமையை அப்படியே அடிகள் கையாண்டு, ''காற்றடிக்கும் இடத்தில் விளக்கு ஏற்றார் அறிவுடையார்; ஏற்றின், முயற்சியினாலே, விளக்கு அவியாமல் தடுக்க முனைவர். அவ்வாறு உலையா முயற்சி மேற்கொண்டால் ஊழும் தோற்றுப் போகலாம். மறலி உயிர்குடித்த மார்க்கண்டன் வரலாறே சான்று'' என்று முயற்சிப் பெருமையை விதந்து ஊழ்வலிமையை மறுப்பார். (நீதிநெறி-50, 51).

**புதியன கூறியமை**

பொய்த் துறவிகள் பற்றியும் கடுந்துறவு பற்றியும் அடிகள் பாடும் அறக்கூறுகட்கு இணையான வடநூற் பாடல்கள் புலப் படஇல்லை. அடிகள் நீதிநெறி விளக்கத்தும் பிற நூல்களிலும் பாடும்வண்ணம், துறவியர் நல்ஒழுக்கமும் பற்றின்மையும் ஞானமும் உடையராதல் வேண்டும். உடம்பை மிகை என்று உணர்ந்து எக்கணமும் ''சுளியார் சுமை''யாம் உடலை விடுத்தற்கு - உயிர்நீப்பிற்கு அணியமாக இருக்க வேண்டும். துறவியர் பண்கலந்த பாடலும் செவிவழி நுகராதவராயும் பித்தர் உண்பதுபோல் மிகக் குறைந்த உண்டி உடையராயும் இருக்க வேண்டும். இவையாவும், பொய்த்துறவிகளை நேரில் கண்டு வருந்திய அடிகள், பிற அறநூல்கள் இந்நிலை பற்றிக் கூறாமை தெளிந்து, தாமே வகுத்து வழங்கிய புதிய அறங்கள் எனலாம்.

**முடிவுரை**

குமரகுருபர அடிகள் அருளிய ''நீதிநெறி விளக்கம்'' என்ற வெண்பாச் சதக நூலில் தனிமனிதன் (ஆண் - பெண் இருபாலர்க்கும்), அரசன், துறவி என்று முந்நிலையில் மனித வாழ்வுக்குரிய அறக்கூறுகளை வழங்குகின்றார். நிலையாமை, கல்விப் பெருமை, கொடைப்பயன், ஊழ்வலிமை, செல்வப்

பெருமை ஆகியன உவமைகள், உருவகங்களுடன் இனிய கவிதை வடிவில் அடிகளால் அறிவுறுத்தப் பெற்றன. அவற்றில் பல செய்திகளும் அறங்களும் வடமொழியில் வழங்கும் அறநூல்களின் கருத்துக்களை ஒத்துள்ளன. துறவுநிலை பற்றிய அறக்கூறுகள் மட்டுமே வடமொழியிற் காணாத புதுமை உடையன. ஏனைய செய்திகளும் அறங்களும் வடமொழியறிஞர்களின் படைப்புக்களை அடியொற்றியும், பொலிவுறுத்தியும், விரித்தும் அடிகள் பாடியருளியனவாம். இவற்றைக் கற்பார்க்கு, அடிகள் வடமொழி நீதி நூல்களையும் அறிந்திருந்தமையும் அவற்றைக் காழ்ப்பின்றிக் கற்றுத் தெளிந்தமையும் ஏற்புழி ஏற்றுப் பயன்கொண்டமையும், தமிழின்மாட்டு ஆராக் காதல் இருந்தபொழுதும் வடமொழியின் பால் வெறுப்போ மறுப்போ அடிகட்கு இல்லை என்பதும் தெள்ளிதின் விளங்கும்.

# வாழ்வியலில் வள்ளுவரும் குருபரரும்

ந. இராணி, புதுக்கோட்டை

சங்கம் மருவிய காலத்து இலக்கியமாக சுட்டப்பெறுவது நீதி இலக்கியமான திருக்குறள். இதன் பின் கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நீதி இலக்கியம் நீதிநெறி விளக்கம். இச்சம காலத்தில் தோன்றிய மற்றொரு நீதி நூல் சிவப்பிரகாசரின் நன்னெறி. இவ்விரண்டு நூல்களிலும் திருக்குறளின் தாக்கம் காணப்படுகின்றதென்றாலும் நீதிநெறி விளக்கத்திலேயே அதிகமாக இடம்பெற்றுள்ளது. நீதிநெறி விளக்கத்தில் காணப்படுகின்ற திருக்குறள் குமரகுருபரரால் எடுத்தாளப் பெற்றுள்ள பிற இலக்கண, இலக்கியச் சான்றுகள் என்ற இருவகை நிலையினை இவரது பாடல்களில் காணமுடி கிறது. பிற பிரபந்தங்களிலும் சில திருக்குறள் கருத்துக்கள் இவரால் சுட்டப்பட்டுள்ளன.

எந்த ஒரு இலக்கிய ஆசிரியரும் எக்காலத்திலும் முன்பு இல்லாத ஒன்றையோ/பலவற்றையோ முற்றிலும் புதியனவாக உலகிற்கு வழங்குதல் என்பது இயலாதது. உள்ளவற்றில் ஒத்தவற்றை வலியுறுத்தியும், ஒவ்வாதவற்றை விலக்கியும், தமது கருத்தை ஏற்றியும் இலக்கியம் படைப்பார்கள். வாழ்வியல் உண்மைகளை உணர்ந்த வள்ளுவரும், குமரகுருபரரும் தாம் வாழ்ந்த சமகால சமூகச் சூழலை உணர்ந்து அதற்குத் தகவே நூல்கள் வகுத்துள்ளனர். அவர்கள் வரையறுத்துக் கொண்ட பாடுபொருள்களே இதற்குச் சான்று பகர்கின்றன.

## நீதிநெறி விளக்கம் பாடுபொருளும் இணையான திருக்குறளும்

நீதிநெறி விளக்கத்தில் காணப்படுகின்ற காப்புச் செய்யுள்கள் விடுத்த 101 பாடல்களில் மொத்தம் 44 திருக்குறள் கருத்துகள் எடுத்தாளப் பெற்றுள்ளன. இவை முறையே கீழ்க்கண்டவாறு பகுக்கப்பட்டுள்ளன.

| நீதிநெறி விளக்கநுவல் பொருள் | பா. எண்ணிக்கை | மொத்த எண்ணிக்கை | பயன்படுத்தப் பட்டுள்ள குறள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| கல்வி | 1–9, 12–16, 20–24 | 19 | 2–372, 3–924, 4–636, 9–51, 15–125 | 5 |
| பொருள் | 10,11, 61–64 | 6 | 11–270, 62–659, 64–594 | 3 |
| தற்புகழ்ச்சி இன்மை | 15, 17, 18 | 2 | | |
| அறிவுரை | 19 | 1 | 19–419 | 1 |
| அரசியல்பு | 25–39, 44–47 | 20 | 26–388, 27–624, 727, 28–1078, 43 30–297, 32–423, 35–167, 44–638, 45–699, 46–801 | 11 |
| நிலையாமை | 40–42 | 3 | 40–968 | 1 |
| முயற்சி | 48–52 | 5 | 49–616, 619 | 2 |
| பகை | 53–56 | 4 | 53–187, 674, 879, 54–889 | 4 |
| மனத்தூய்மை | 57, 59, 60 | 3 | 57–64 | 1 |
| ஈகை | 65– 67 | 3 | — | — |
| சொல் பயன்பாடு | 58, 68–72 | 6 | 70–150, 78–148, 146, 83-833 | 4 |
| கடவுள் | 73 | 1 | — | — |
| தீயசெயல்கள் | 74 | 1 | 74–169 | 1 |
| சான்றோர் | 75 | 1 | — | — |
| இன்பம் | 76–83 | 8 | 76–150, 78–148, 146, 83–833 | 4 |
| துறவு | 84–101 | 18 | 86–290, 340, 91–171, 92–273, 276, 100–297 | 7 |
| | மொத்தம் | 101 | | 44 |

மேற்சுட்டப்பட்டுள்ள பட்டியல்வழி 16 பகுப்புகளில் குமர குருபரரின் நீதிநெறி விளக்க நுவல்பொருளைப் பிரிக்கலாம். இவற்றுள், சுருக்கம் கருதி கல்வி, அரசியல்பு ஆகிய இரண்டு மட்டும் விளக்கப்பட்டுள்ளன.

கல்வி குறித்துக் கல்வியின் பயன் (1) கல்வியின் உயர்வு, காமத்தின் இழிவு, (2) கல்வி, கவித்துவம், பாடல் கூறல், சொல்வன்மை இவற்றின் சிறப்பு (3) பயனில்லாதவை, (5) புலவர் பெருமை (6) சொல்வன்மை இல்லாத கல்வி (7) கற்றவை பாதுகாத்தல், (8) வறுமைக்கல்வி (9) கல்வி அழகு, கல்வியால் கர்வம் கூடாது (13), கற்றலில் ஆர்வம் (14) பணிவு வேண்டும் (15, 16) கற்றவழி ஒழுகல் (20) கல்வியை விற்றல் கூடாது (21), பயனில சொல்லாமை (22), குற்றமற்ற கல்வியறிவு (23), கற்றவர் பெருமை அறிதல் (24), என்ற பொருளடிப்படையில் 19 பாடல்கள் வழி கல்வியின் சிறப்பையும், கல்வியறிவு எவ்வாறு சமூகத்திற்குப் பயன்பாடுடையதாக இருத்தல் வேண்டும் என்பதையும் வலியுறுத்திக் கூறுகின்றார். இவற்றில் 5 திருக்குறள் பாடற் கருத்துகள் சான்று காட்டப்பட்டுள்ளன.

கல்வியின் உயர்வையும் காமத்தின் இழிவையும் கூறும் பாடலில் (2) 'மடங் கொன்றறிவகற்றுங் கல்வி' என்ற தொடருக்கு அறியாமையை அழித்து, அறிவை விரிவுபடுத்துவது கல்வி என்பது குமரகுருபரர் கருத்து. இத்தொடர்புடைய பொருளில் 'அறிவு அகற்றும் ஆகூழ்' உற்றக்கடை (372) என்பதற்கு கைப்பொருளை இழத்தற்கு ஏதுவாகிய ஊழின் வலிமையால் இயற்கையான அறிவும் வேறுபடும் என வள்ளுவர் கூறுவதைப் போன்று காம இன்பம் கல்வி இன்பத்தை அழித்து விடும் என்பதில் இருவரிடையேயும் கருத்து ஒருமை உள்ளது.

வடமொழி மரபில் வித்யா என்பது பெண்பாற் சொல். அதற்கு இணையாக குறளில் (924) நாண் என்ற சொல் பெண்ணாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. குமரகுருபரரும் இக் கருத்தோடு இணைந்து 'கல்வியே கற்புடைப் பெண்டிர்' (3) என கல்வியைக் கற்புப் பெண்ணாக உருவகப்படுத்துகின்றார் சொல் வன்மையின் சிறப்பைக் குமரகுருபரர்.

> எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
> துய்த்துணர் வில்லெனி னில்லாகும் (4)

என்ற வரிகள் வழி நூல்களை நுண்மைத்தன்மை உணர்ந்து ஆராய்ந்து அறிந்திருந்தாலும், உய்த்துணர்ந்து கொள்ளும் தன்மை வேண்டும் என்பதை வள்ளுவர் அமைச்சனுக்குக் கூறுவ தாகிய (636) இயற்கையாகிய நுண்ணறிவை, செயற்கையாகிய

நூலறிவோடு ஒப்பிட்டுச் செயல்புரியும் நுட்பமுடையவனுக்கு முன் சூழ்ச்சிகள் ஏதும் செய்தல் இயலாது என்ற கருத்தின் தாக்கமாகக் குமரகுருபரரின் பாடல் வரிகள் அமைந்துள்ளன.

மனைவி மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செயல்களை உடையவளாய் மனைத்தக்க மாண்புடையாள் ஆகி (51) இருந்தால் வாழ்வு இன்பம் பயக்கும் என வள்ளுவர் குறிப்பிட, எதிர்மறைப் பொருளில் குமரகுருபரர் இல்லாது இருந்தால் எத்தகு துன்பமோ அதே போன்றது வறுமையாளர் கல்வி என்பதை விளக்க 'மனைத்தக்காள் மாண்பில ளாயின்' என்ற தொடரைப் பயன்படுத்தி உள்ளார். கல்வியறிவு உடையோரும் செல்வம் உடையோரும் அடக்கத்தை அணிகலனாகக் கொள்ள வேண்டும் என்பதை விளக்க

> கல்வியுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
> செல்வமும் செல்வ மெனப்படும் – இல்லார்
> குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமும்
> தலைவணங்கித் தாழப் பெறின் (15)

எனக் குமரகுருபரர் குறிப்பிடுவது

> எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
> செல்வர்க்கே செல்வம் தகைத்து (125)

பெருமிதம் இன்றி அடங்குதல் எல்லோருக்கும் நன்று, அவ் எல்லாருள்ளும் செல்வம் உடையவருக்கு வேறு ஒரு செல்வத்தைப் போல் உதவவல்லது பணிவு என்ற குறட்கருத்துக்கு ஒப்ப எழுதியுள்ளார்.

குமரகுருபரர் முதன் முதலில் கல்வியின் இன்றியமை யாமையைப் புலப்படுத்தினாலும் அரசு இயல்புக்கே அதிக பாடல்களைப் (20) பாடியுள்ளார். அரசியல்புகளில் 11 திருக்குறள் கருத்துகள் பிரதிபலித்துள்ளன. சுருக்கம் கருதி சான்றாக ஒரு குறட்கருத்து மட்டுமே சுட்டப்படுகின்றது. மனைவிக்கு கொழுநன், பிள்ளைக்கு தந்தை, தாய், அறவோர்களுக்கு ஆசிரியர், அரசன், மக்களுக்கு தெய்வமென குமரகுருபரர் உவமிப்பது (26)

> முறைசெய்து காப்பாற்றும் மன்னன் மக்கட்கு
> இறைஎன்று வைக்கப் படும் (388)

என்ற குறட்பாவை நிறைவுறுத்துகிறது. அளவறிந்து மன்னன் வரி கொள்ளல் வேண்டும் என்ற பொருளடிப்படையில்

குமரகுருபரரின் 28 பாடலும், திருக்குறள் (43) குறட்பாவும் ஒத்தபொருளின் வரி வசூலித்தலைக் குறிப்பிடுகின்றன.

மேற்சுட்டப்பட்டுள்ளவை தவிர பொருள், தற்புகழ்ச்சி இன்மை, நிலையாமை, முயற்சி, பகை, மனத்தூய்மை, சொல் பயன்பாடு, தீய செயல்கள், இன்பம், துறவு ஆகியவற்றில் குறட்பா கருத்துக்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. இவை அனைத்துமே வாழ்வியலுக்கு இயைந்த நெறிகளாகத் திகழ் கின்றன.

பிரபந்தத் திரட்டின் 557-ஆவது பாடலில் 'உதவியின் வரைத்தோவடிகள் கைம்மாறே' என்ற தொடர்

> உதவி வரைத்தன்று உதவி உதவி
> செய்யப்பட்டார் சால்வின் வரைத்து (105)

என்ற குறளை நினைவுறுத்துகின்றது. இது தவிர 354, 370-ஆவது திருக்குறளும் பிரபந்தங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

நீதிநெறி விளக்கத்தில் திருக்குறள் விடுத்து ஏறத்தாழ 36 இலக்கண இலக்கிய நூல்கள், தொல்காப்பியம், மாறனலங்காரம், அகநானூறு, புறநானூறு, முருகாற்றுப்படை, பொருநராற்றுப் படை, நாலடியார், முதுமொழிக்காஞ்சி, இனியவை நாற்பது, பழமொழி, சிறுபஞ்சமூலம், திரிகடுகம், மணிமேகலை, சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், பாகவதம், பெரியபுராணம், பெருங்கதை, அரிச்சந்திர புராணம், பிரபுலிங்க லீலை, திருவிளையாடற் புராணம், சீகாழிப்புராணம், தமிழ் விடுதூது, அருணைக் கலம்பகம், கலிங்கத்துப்பரணி, முத்தொள்ளாயிரம், திருச்சிற்றம்பலக்கோவை, மார்க்கண்டேய புராணம், திருவாரூர் திருச்சதகம், அறநெறிச்சாரம், வெற்றிவேற்கை, கொன்றை வேந்தன், நன்னெறி, தாயுமானவர் பாடல்கள் ஆகியவை குமரகுருபரரால் சான்று காண்பிக்கப்பட்டுள்ளன.

நீதிநெறி விளக்கத்தில் கருத்துக்கள் அடிப்படையில் சில இடங்களில் தொகுப்பு இயைபு அமைந்திருப்பினும் சான்றாக இன்பம் (76 – 83) குறித்த நீதிக் கருத்துக்கள் அனைத்தும் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன. ஆனால், கல்வி குறித்து பாடப்பட்ட கருத்துக்கள் மூன்று (1-9, 12-16, 20-24) இடங்

களில் காணப்படுகின்றன. இவையும், இறை போன்ற பிறவும் அடுத்தடுத்து அமையுமாறு அமைத்திருக்கலாம்.

திருக்குறளின் தாக்கம் மிகுந்த அளவில் நீதிநெறி விளக்கத்தின் பாடற் பகுதியில் காணப்படுவதைத் தவிர, பெயரீட்டிலும் பெரிதும் ஒத்து அமைந்துள்ளது. சான்றாக, கல்வி, துறவு, ஈகை, நிலையாமை ஆகியவை எவ்வித சொல் மாற்றமுமின்றி எடுத்தாளப்பட்டுள்ளன. சிறிய மாற்றத்துடன் பொருள் செயல்வகை / பொருள், பகைத்திறம் தெரிதல், பகைமாட்சி / பகை, சொல்வன்மை, பயனில சொல்லாமை / சொல் பயன்பாடு, தீவினையச்சம் / தீய செயல்கள், சான்றாண்மை / சான்றோர் என்பவை தவிர, இன்பம் என்ற பகுப்பில் குறிப்பிடப்படுகின்ற பிறனில் விழையாமை / பிறன்மனை நயத்தல், புதல்வரைப் பெறுதல் / நன்மக்கட்பேறு, வரைவின் மகளீர் / கற்பில் குலமகளீர் இயல்புகள் ஆகியவை திருவள்ளுவரால் அதிகாரங்களாகப் படைக்கப்பட்டுள்ள குறட்பாக்கள், குமரகுருபரர் நீதிநெறி விளக்கத்தில் பாடல் களாகவும், சமூக இயல்புக்குத் தேவையான நிகழ்வுகளாகவும் தாக்கம் பெற்றுள்ளன.

# ஈசனைப் போற்றும் இலக்கணியார்

சி. இலட்சுமணன், தஞ்சாவூர்

திருமுருகன் அருள் பெற்ற குமரகுருபர சுவாமிகள் தன்னிகரில்லா தமிழ்ப் புலவராவார். இவர் இயற்றிய நூல்களுள் சிதம்பர செய்யுட் கோவையும் ஒன்றாகும். இந்நூல் தமிழில் உள்ள பாட்டின் வகைகள் அத்தனைக்கும் இலக்கண இலக்கியமாகவும், சுவாமிகளின் தமிழிலக்கண வரம்பிற்கோர் எடுத்துக்காட்டாகவும் திகழ்கிறது. சிதம்பர செய்யுட்கோவை என்று சொன்ன உடனே பாவும் பாவினங்களுமே நினைவுக்கு வருகின்றன. இலக்கண "இலக்கியம்" என்று கூறப்பட்டாலும் யாப்பிலக்கணக் கூறுகளை முன்னிலைப்படுத்தி ஆய்வு செய்வதையே அதிகமாகக் காணமுடிகிறது. நூலின் பாடு பொருள் பற்றிப் பேசுகின்ற நிலையில்கூட சிதம்பரம் நடராசப் பெருமானைப் பற்றிய துதிப்பாடல்கள் என்று ஒரு வரிச் செய்தி தருவதே வழக்கமாகவும் அமைந்துள்ளது. இந்நிலையில் யாப்பறி புலமைமிக்க இலக்கணியாகத் திகழும் குமரகுருபர சுவாமிகள் ஈசனை எவ்வாறு போற்றுகிறார் என்பதையும் இலக்கிய நலங்கொண்ட இப் பாமாலையின் கவி இன்பத்தையும் காட்ட விழைவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### வீடுபேறு நாடுவோர்க்கு நல்வழி

இம்மையிலும் மறுமையிலும் சிறப்பாக வாழவேண்டும், வீடுபேறு அடைய வேண்டும் என்பதே ஒவ்வொரு தனிமனிதனின் விருப்பாகும். வீடுபேறு அடைய விரும்பாதவர் எவருமே இப்பூவுலகில் இல்லை. உலக மக்களின் முத்திக்கு நெறிகாட்டவும் நடராசப் பெருமானை வழிபட வேண்டியதன் தேவையைப் புலப்படுத்தவும் முதற்கண் குமரகுருபர சுவாமிகள் விழைகின்றார். வீடுபேறு அடைய வேண்டும் என்று விரும்புகின்ற ஒவ்வொருவரும் அழகிய கொன்றை மலர்களால் தொடுத்த மாலையை அணிந்த தில்லையிலே வீற்றிருக்கும் எல்லையில்லா பரம்பொருளாகிய சிவபெருமானை வணங்கிடுக என்று கூறுகின்றார். இதனை,

'பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்' (1)

எனப் பாடி இறைவனைப் போற்றுகின்றார்.

வெண்மதிக் கண்ணி சூடிய கண்ணுதற் கடவுளாம் புண்ணிய பொதுவிலாடும் தண்ணமை கொன்றை மலர்மாலை அணிந்த எம்பெருமானின் பூங்கழல்களை வீடுபெறற் பொருட்டு வழிபடுக என்று பக்தி நனி மேவிடப் பரவுகின்றார்.

எல்லோரும் எளிதாகச் சென்று அடைவதற்குரிய தில்லைக்குச் சென்றவர்க்கு துன்பமோ துயரமோ இல்லை. அத்தலத்தினை அடைந்தோர் எல்லாவற்றிற்கும் மேலாகக் கருதப்படும் முத்தி உலகினை அடைந்தவர்களாவர். எனவே முத்தி பெறுவதற்கு எளிய வழி தில்லைக்குச் சென்று சிவபெருமானை வழிபடுவது ஒன்றேதான் என்று அன்போடு அறைகூவல் விடுகின்றார் (80).

**வண்ணமும் வடிவும்**

சிவபெருமானின் மேனி, கழுத்து, சடை ஆகியவற்றின் வண்ணமும் வடிவும் சுட்டி தோற்றப் பொலிவினைப் போற்றிப் புகழ்கிறார். கருமையான கழுத்தினை உடையவன் என்றும் சிவந்த சடைகளை உடையவன் என்றும் வெண்ணீறு அணிந்தவன் என்றும் வலது கரத்திலே மழுப்படையை ஏந்தியவன் என்றும் அம்பலத்தாடுவனின் அங்க அடையாளங் களைக் கூறித் துதிக்கின்றார் (28).

சிதம்பரத்தில் செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானைப் பொன்னார் மேனியன் என்று கண்ணாற் கண்ட மேனியழகை களிப்போடு கூறிக் கரங்கூப்பி வழிபடுகின்றார் (29).

தேவர்களுக்கெல்லாம் இரண்டு கண்களே இருக்கும். எம்முடைய தன்னிகரில்லா தலைவனுக்கோ மூன்று கண்கள் எனக் கூறுகின்றார். மன்மதனை செகுத்த நெற்றிக்கண்ணும், மாதர் நலனை அழிக்கும் சந்திரனைக் கொண்ட கண்ணும் மாதர்களுக்குத் துன்பத்தைத் தரும் இராக்காலத்தை ஒழிக்கும் சூரியனைக் கொண்ட கண்ணும் என மூன்று கண்களை உடைய முக்கண் முதல்வனின் இயல்பினை எடுத்துக் கூறுவதை, செய்யுள் 17 இல் காணலாம்.

சிவபெருமானின் அடையாள மாலையும் பாம்பு. அவனுடைய திருமுடியை அலங்கரிக்கும் மாலையும் பாம்பு. பெருமானின் திருவரையில் காணப்படும் கச்சையும் பாம்பு. பொருபுயத்தில் காணப்படும் கடகமாம் கைவளையும் பாம்பு. திருமார்பில் காணப்படும் ஆரமும் பாம்பு – என மாலை, கச்சை, கடகம், ஆரம் அத்தனையையும் பாம்பின் வடிவில் கண்டு பரமனைப் பாடிப் பரவுகின்றார் (4).

## தில்லையம்பலத்தில் திருநடனக் காட்சி

பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய இருவருக்கும் தில்லையம்பல நடராசப்பெருமான் நாட்டிய திருநடனக் காட்சியைச் சொல்லோவியமாகத் தீட்டுகின்றார். தூய நிலா விண்வெளியில் ஒளிபரப்பி பரந்த இருளை அகற்றும் பனிமதி கண்ணியாகத் திகழ்கிறது. மின்னலை வெளிப்படுத்தும் கார்மேகம் விண்ணிலிருந்து வெள்ளிவிழுது வீழ்வதுபோல் மழை பொழிகிறது. பொன்செய் கொன்றை மலர்கள் பூத்துக் குலுங்கும் பொன்னம்பலத்தில் சிவபெருமானின் பூங்கழல்கள் ஓசையெழுப்புகின்றது. இந்நடனக் காட்சியை இருவருக்கும் காட்டுகின்ற கருமிடற்றன், செஞ்சடையான், ஐம்முகத்தான் என எம்பெருமானைச் சுவாமிகள் பாடிப் பரவுகின்றார்.

சிதம்பரத்திலுள்ள பத்து தீர்த்தங்களுள் சிவகங்கை தீர்த்தமே சிறந்ததாகும். போற்றுவதற்குரிய புண்ணிய தலம் புலியூரென்று புகழப்படுவது சிதம்பரமாகும். இப் பொன்னம்பலத்தில் நடனமாடும் சிவபெருமானின் திருவுருவே சிறந்ததாகும் (45).

சிற்றம்பலம், பேரம்பலம், பொன்னம்பலம் என்பன சிவபெருமான் திருநடனமிடும் சிதம்பரத்திலுள்ள மூவேறு அம்பலங்களாகும். சிற்றம்பலத்தில் நடனமாடும் கற்றைச் சடையானின் திருமுடியில் விளங்கும் திங்கள் புனல்மங்கையாம் கங்கா தேவியின் நுதல் ஒக்கும். பேரம்பலத்தில் நடனமாடும் பெருமானின் செஞ்சடையில் விளங்கும் திங்கள் நீர்மங்கையாள் முத்துக் கச்சொக்கும். பொன்னம்பலத்தில் நடனமிடும் பூங்கழலான் சடைமுடியில் சதிராடும் சுடர்த்திங்கள் மங்கையவள் கங்கையின் செங்கையாம் கைவளையை ஒக்குமென்று ஒப்பில்லா காட்சியைச் சித்திரித்து சுவாமிகள் உள்ளம் மகிழ்கின்றார் (47).

**கூற்றையும் உதைக்கும் கொற்றவன்**

அச்சத்தின் உச்சம் உயிராகும். அவ் உயிரை கவர்ந்து கொள்ள எமன் வரும் நாளை எவரும் அறியார். இப் பூவுலகில் பிறந்த ஒவ்வொருவரும் எமனுக்கே அஞ்சுவர். இவ் உண்மையை நன்குணர்ந்த குமரகுருபரர் எமனுக்கு அஞ்ச வேண்டியதில்லை என்பதை பல்லாற்றானும் பல பாடல்களில் எடுத்துரைக்கின்றார். அதற்கு ஒரேவழி கூற்றையும் உதைக்கும் கொற்றவனாம் கூத்தர் பெருமானை வணங்கி வழிபடல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார்.

காண்பதற்கரிய காட்சியாக விளங்கும் நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமானைக் கண்ட திருவிழிகளுக்கு வெல்கூற்றின் தோற்றமில்லை என்று எம்பெருமானைப் போற்றிப் புகழ் கின்றார்.

ஆடகச் செம்பொன் மணிமண்டபத்தில் வீற்றிருக்கும் எம்பெருமானை, பாடகமாம் அணிகலனைக் காலிலணிந்த சிறிய அடிகளை உடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமானை; கைவளையணிந்த கங்காதேவியின் கணவனாம் கறைமிடற்றன் பூங்கழல்களை இருகரம் கூப்பி வணங்கி வழிபடுவோரை எமனும் வணங்கிச் சென்று விடுவான் என்று ஆடல்வல்லானைப் பாடிப் பரவுகின்றார் (15).

உற்றார் உறவினர்களே! கூற்றுவன் நம்மை உதைத்துத் தாக்குவதற்கு வருமுன் இடப வாகனத்தில் வீற்றிருக்கும் எம்பெருமான் பொன்னார் திருவடிகளைப் போற்றுங்கள் போற்றுங்கள் என குவலயத்து மக்களைக் குமரகுருபரர் கூவி அழைக்கின்றார் (26).

**நிலையாமை நினைவோட்டம்**

இளமை நிலையாமை, செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமை ஆகிய நீதிகளை எடுத்துச் சொல்ல நீரில் குமிழி, நீரில் அலை, நீரில் எழுத்து ஆகியவற்றை உவமையாக எடுத்துக் காட்டி எம்பெருமான் உறைவிடமாம் பொன்னம்பலத்தை வழிபடுங்கள் என்று வலியுறுத்துகின்றார். வாழ்வியலோடு வளர்ந்துவிட்ட சமயத்தைப் புறக்கணிக்காமல் அதனை வாழ்வின் முதன்மையாக வைத்துக் கொள்ள வேண்டும் என்னும் அடிப்படையில் கூறும் சுவாமிகளின் அருள்வாக்கு அனைவரும் கொள்ளத் தக்கதாகும்.

"நூலறிவினாலும் நுண்ணறிவினாலும் தெளிந்த உண்மை களைச் சமயச் சார்போடு பிணைத்துக் குமரகுருபரர் பேசுவாராயினார் என்னும் நடேச முதலியார் கூற்று இவண் சுட்டத் தக்கதாகும்.

**சொல் விளையாட்டில் சுவைநலம்**

உலகியல் பொருள்கள் எதனையும் விரும்பாத தமிழ் முனிவர் குமரகுருபரர். இருப்பினும் சொல்விற்பனமும், கவிசொல்ல வல்ல நல்வித்தையும் வேண்டுமென்ற வேட்கை மட்டும் இவரை விட்டுவிடவில்லை. இவ் வேட்கைக்கு காரணம் தமிழின்பால் கொண்ட பற்றும் இறைவன்பால் கொண்ட அன்பு மேயாகும். இவர்தம் சொல் விளையாட்டில் சுவைநலம் காண சில சான்றுகள் காண்போம்.

செவ்வாய் கருங்கண் பசுந்தோகையாக விளங்கும் உமாதேவியும் வெண்மதிச் சென்னியனாம் சிவபெருமானும் ஆணும் பெண்ணுமாய் ஒருவடிவாக இருக்கும் திருவுருவை காட்டும் நிலையில் "பைவாய் பொறியர வல்குலந் தாயென்று பாடுவதுமே" என்று இருபொருள்படப் பாடுகின்றார் (73).

பைவாய் பொறி அரவு என்பதற்கு படத்திலே பொறியை யுடைய பாம்பு என்பது பொருளாகும். அல்குலெந்தாய் என்பது அல்குலை உடைய 'எம் தாயே' என்றும் அல்குலை உடைய 'எம் தந்தையே' என்றும் இரு பொருள்படும். அரவின் படம் போன்ற அல்குலை உடைய எம்தாயே என்றும், அரவை அணிந்த அல்குலை உடைய எம் தந்தையே என்றும் சிலேடை யாகப் பொருள் அமைத்து பாடிய தமிழ் முனிவரின் மொழி யாற்றலை மொழிவது எளிதன்று. இதே போன்று

"காதல் மகளிர் கலக்கக் கலக்குண்டு" (16)

என்னும் செய்யுளில் 'போதம் படரும்' என்னும் தொடர் 'போதம் படரும்' சிவஞானம் பரவும், என்றும் போது அம்பு அடரும் – மலரம்பு பாயும் என்றும் இருபொருள்பட அமைந்துள்ளது.

காதல் மகளிர் கலக்கிய கலக்கத்தில் மயக்கமடைந்தோர் நெஞ்சத்தின் மீது மன்மதனின் மலரம்பு பாயுமென்றும், அங்ஙனம் கலக்கமுறாது பிழைத்தகன்றோர் நல்ல நெஞ்சத்தின்

மீது சிவஞானம் பரவுமென்றும் சிலேடை நயம்படப் படிப்போர் நெஞ்சைப் பரவசப்படுத்துகின்றார்.

**ஒவ்வா திருவுருவை ஊடுருவும் சொல்லிலக்கணம்**

தமிழ் மொழியில் 'ஒருவர்' என்ற சொல் ஆண், பெண் இவ்விருபாலுக்குமுரிய பொதுப் பெயராகும். இதனை நன்னூலார்

> 'ஒருவர் என்பது உயர்இரு பாற்றாய்ப்
> பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப' (நூ. 289)

என்பார். ஒருவர் என்று வழங்கும் சொல் உயர்திணை ஆண்பால், பெண்பால் ஆகிய இவ்விரு பாலுக்கும் பொதுப் பெயராய் ஒரு பொருளையே உணர்த்துமாயினும் பலர்பால் வினையைக் கொண்டு முடிகின்ற தன்மை உடையது என்பது நூற்பாவின் பொருளாகும். இதனை பாராட்டுவது போல் குமரகுருபரர் 54-ஆவது செய்யுளில் சுட்டும் சொல்லிலக்கணச் சுவையைக் காணலாம்.

மிக வெறுப்புக்குரிய உலக வாழ்வினை துறந்தோர்க்கு ஆனந்தப் பெருவாழ்வாகிய திருநடனம் காட்டுவதற்கு நிலம், நீர், தீ, காற்று, வான், சூரியன், சந்திரன், இயமானன் என்னும் எட்டுவகை வடிவம் கொண்ட அட்டமூர்த்தியாக விளங்கும் சிவபெருமான் உமாதேவியுடன் ஒருருவாய் நிற்கின்ற நிலையில் இருவருக்கும் உரியதாக ஒருவர் என்ற இயற்சொல் இல்லை என்றால் ஒருவன் என்றோ ஒருத்தி என்றோ சொல்வேனோ. மற்றெவ்வாறு சொல்வேன் என்னும் நிலையில் இறைவனுக்கும் இறைவிக்கும் திருவுரு ஒன்று என்பதை இலக்கண நயம்பட கூறியுள்ளமை எண்ணி எண்ணி மகிழத் தக்கதாகும். இதிலிருந்து இத்தமிழ் முனிவனின் இலக்கண ஈடுபாடும், இலக்கணப் புலமையும் புலனாகின்றது.

**பன்னூற் பயிற்சியும் பதிவும்**

குமரகுருபர சுவாமிகள் பன்னூற் பயிற்சியும் நுண்மாண் மாட்சியும் உடையவர் என்பதை அவர்தம் படைப்புகளில் காணலாம். சான்றாக சிதம்பரச் செய்யுட்கோவையில் சில பதிவுகளைக் காணலாம்.

> பூஉந் தண்ண புனைமயி லகவ
> மாஅங் குயில்கள் சாஅய்ந் தொளிப்பக்
> கோஒ டரங்கண் முசுவொடும் வெரீஇக்

காஅ றழீஇக் கவிழ்ந்த் தொடுங்கச்
சூஉன் முதிர்ந்து காஅல் வீஇழ்
வாஅன் றாஅழ் மழைப்பெய றலைஇத்
தேஎன் றாஅழ் பூஉங் காஅ
வளங் கனிந்த மணிமன்றின்
விளங் கொளியை யுளங்கொள றவமே" (42)

என்னும் செய்யுளில் தலைப் பெயறலைஇய தண்ணறுங்கானத்து என்னும் திருமுருகாற்றுப்படையின் பதிவினைக் காணலாம்.

தெய்வத்தை முன்னிலைப்படுத்தியே முதன் முதலாக உலா இலக்கியம் பிறந்துள்ளது. சேரமான் பெருமாள் பாடிய திருக் கயிலாய ஞானஉலா தெய்வத்தை முன்னிலைப்படுத்திப் பாடப் பெற்றதாகும். உலா இலக்கியங்களில் ஊறித் திளைத்த சுவாமிகள் அதன் பதிவினை சிதம்பரச் செய்யுட் கோவையிலும் தந்துள்ளார் (58) என்பதற்கு பின்வரும் பாடல் வரிகள் சான்றாகும்.

**உமையொரு பாகனை வழிபடல்**

உமாதேவியைத் தம் உடலின் பாதியிடத்தில் கொண்ட சிவ பெருமான் என்பதாலே அம்மையின் அருள்வேண்டி அம்மை அப்பனாய் சுவாமிகள் பாடிப் பரவசமடைவதை பல பாடல்களில் காணலாம்.

நடராசப் பெருமான் திருநடனம் புரியும் பொன்னம்பலம் பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூவினை ஒத்திருக்கும். பொன்னம்பலத்தில் காணப்படும் சிவபெருமானின் திருமேனி அப்பொற்றாமரைப் பூவிலிருக்கும் தேனினை ஒத்திருக்கும். அத் தேனை உண்டு களிப்படையும் களிவண்டு உமாதேவியின் திரு விழிகளாம் இருவிழிகளையும் ஒத்திருக்கும் என்று உமாதேவியை நினைந்து உளமுருகப் பாடிப் பரவுகின்றார் (14).

சிவபெருமானுக்கு உமாதேவியார் போகசக்தியாய் இருத்தலின் மனைவி எனவும் சக்தி சிவத்தை உயிர்ப்பித்தலின் தாய் எனவும் சிவம் சக்தி என்னும் வேறுபாட்டில் முன்னர் சிவமும், பின்னர்ச் சக்தியுமாய் தோன்றலின் தங்கை எனவும் சிவத்தினின்று சக்தி தோன்றலின் மகள் எனவும் கூறப்படுவார். எனவே கூத்தர் பெருமானுக்கு எம் அன்னையாகிய உமாதேவி மகள், தாய், மனைவி, தங்கை என்னும் முறையினளாதல் அறியப்படும் என்று உறவுமுறை பாராட்டி குமரகுருபரர் போற்றுகின்றார் (33).

பொதிசடைமேல் நாகப்பாம்பும் நாண்மதியும், இருண்ட மேகம் போன்ற கூந்தலில் தலைக்கலனும் கொண்டு விளங்கும் சிவபெருமான், வானத்தைச் சந்திரனுக்குப் பகுந்தளித்த வண்ணம் போல் இறைவன் தமது உடம்பினில் பாதியை உமாதேவிக்குப் பகிர்ந்தளித்து அர்த்த நாரீசுவரனாய் விளங்குகின்றார் (48).

**வாழ்த்தும் வழிபாடும்**

உற்றார் உறவினர்களே வாருங்கள். பொன்னம்பலத்தில் வீற்றிருக்கும் பொன்னார் திருவடி கழல்களை கண்டு வணங்கி வாழ்வில் நற்கதி அடையுங்கள். இப்பற்றுக்கோடின்றி பிறிது வேறில்லை. இதுவே மெய்மொழியாகும் (83).

எம்பெருமான் சிவபெருமானை வாழ்த்துங்கள். தில்லையில் திருநடனம் புரியும் கூத்தர் பெருமானை நினைவில் கொள்ளுங்கள். பொன்னம்பலத்தில் உங்கள் தலைதாழ்த்தி வணங்குங்கள். தீய வழிகளை விட்டு அறநெறி போற்றி ஒழுகுங்கள். அறிவார்ந்த மக்களின் கடமை இதுவேயாகும்.

> ''வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
> தாழ்த்துமின் சென்னி தலைவற்கு – வீழ்த்த
> புறநெறி யாற்றா தறநெறி போற்றி
> நெறிநின் றொழுகுதிர் மன்ற
> துறையறி மாந்தர்க்குச் சூழ்கட னிதுவே'' (84)

என்று மக்களை ஆற்றுப்படுத்தி அருட்பெருங்கடலாக விளங்கும் அம்பலத்தாடுவானை அடிகளார் வழிபடுகின்றார்.

திருமன்றமாம் பொன்னம்பலம் கண்ட மலர்க்கண்கள் வாழ்க. எம்பெருமான் புகழினைக் கேட்டு மகிழ்ந்த செவிகள் வாழ்க. தில்லையம்பதி சிவபெருமானின் திருவடிகளை வணங்கிய தலை வாழ்க. நடராசப் பெருமானின் சீரும் சிறப்புகளையெல்லாம் நாவாரப் பாடி மகிழும் வாய் வாழ்க என்று கூறுகின்றார் (10).

**முடிவுரை**

பாவும் பாவினத்திற்குமுரிய எடுத்துக்காட்டாகச் சிதம்பரச் செய்யுட்கோவை திகழ்ந்தாலும் இலக்கிய நலன் மிக்கதாக காணப்படுகிறது. இறைவடிவங்களையும் இயல்புகளையும் சுட்டிக் காட்டி எம்பெருமானை குமரகுருபரர் பரவுகின்றார். முத்தி பெறுவதற்கு எளியவழி தில்லைக்குச் சென்று சிவபெருமானை வழிபடுவதே ஒன்றேயாகும் என்பதை வலியுறுத்திக் கூறுகின்றார். இங்ஙனம் சொல்வளமும் சுவைநலமுமிக்க சிதம்பரச் செய்யுட் கோவை இலக்கணத்திற்குரிய இலக்கிய நூல் மட்டுமல்ல பக்தி பனுவலாகவும் திகழ்கிறது என்பதைப் புகரவும் வேண்டுமோ?

# அறநூல்களும் நீதிநெறி விளக்கமும்

**ந. கடிகாசலம், சென்னை.**

கி. பி. பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் குமரகுருபரர். சைவ சமயத்தைச் சேர்ந்தவர். சைவ சமயக் கருத்துக்கள் இடம்பெற்ற பல்வேறு நூல்களைத் தமிழன்னைக்குச் சூட்டியவர். தமிழிலக்கிய வரலாற்றில் இவருக்குச் சிறப்பான இடமுண்டு. சமயக் கருத்துக்கள் உள்ளடங்கிய நூல்களை மட்டுமின்றி, அறக் கருத்துக்கள் இடம்பெற்ற "நீதிநெறி விளக்கம்" எனும் நூலையும் குமரகுருபரர் இயற்றியுள்ளார். இந்நூல் இங்கு ஆய்வுப் பொருளாகின்றது.

**நீதிநெறி விளக்கம்**

102 வெண்பாக்களைக் கொண்டது இந்நூல். நல்ல செந்தமிழ்ச் சொல்நடையில் அமைந்தது. குமரகுருபரரின் உலகியல் அறிவின் ஆழத்தையும் அகலத்தையும் வெளிப்படுத்தி நிற்கிறது. கல்வி, செல்வம், உலகியல், அரசியல், தவம், மெய்யுணர்வு முதலானவற்றினைப் பற்றி வெகு சிறப்பாக எடுத்தோதுகிறது. கடவுள் வாழ்த்துடன் நூல் தொடங்குகிறது. கல்வியின் இன்றியமையாமை கருதி, நூலின் தொடக்கத்திலேயே அதன் பெருமையைக் குமரகுருபரர் பேசுகிறார்.

**அறநூல் சாரம்**

மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, நீதிநெறி விளக்கத்தைக் குமரகுருபரர் இயற்றினார். தமிழில் நீதிக் கருத்துக்கள் பல்வேறு நூல்களிலும் பரந்து காணப்படுகின்றன. அவற்றையெல்லாம் தொகுத்து ஒரே நூலாகத் தருவது நோக்கமாகும். குறிப்பாகத் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளில் காணும் கருத்துக்கள் வேறு உருவில் நீதிநெறி விளக்கத்தில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. திருக்குறள், நாலடியார் ஆகிய அறநூல்களின் தாக்கம் நீதிநெறி விளக்கத்தில் காணப்படுவதை இக்கட்டுரை வெளிப்படுத்த முனைகிறது.

**கடவுள் வாழ்த்து**

நிலையாமையை உணர்த்துவது அறநூல்களின் கடப் பாடாகும். குமரகுருபரர், கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே நிலையாமையை உணர்த்தி, இறைவனை வணங்குவது நமது கடமை என்று உரைக்கிறார்.

> நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
> நீரில் சுருட்டும் நெடும்திரைகள் – நீரில்
> எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
> வழுத்தாத(து) எம்பிரான் மன்று (நீதி. 1)

ஒருவனுடைய இளமைப் பருவம் நீர்க்குமிழி; அவனுடைய செல்வம் நீரில் எழும் அலைகள்; அவனுடைய உடல் நீர் மேல் எழுத்து. இந்நிலையில், இறைவனை வணங்காமல் இருப்பது ஏன்? இளமை, செல்வம், யாக்கை ஆகியன நிலையற்றவை என்பதைக் குமரகுருபரர் எளிய உவமை மூலம் எடுத்துரைக் கின்றார்.

> அற்கா இயல்பிற்றுச் செல்வம் (333)
> நெருநல் உளன்ஒருவன் இன்று இல்லை (336)

ஆகிய திருக்குறள் வரிகள், செல்வம், உடல் ஆகியவற்றின் நிலையாமையைப் பேசுகின்றன.

> புல்லறிவாளர் பெருஞ்செல்வம் – எல்லிற்
> கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி
> மருங்கறக் கெட்டு விடும் (8)

எனும் நாலடியார் வரிகள் செல்வ நிலையாமையையும்,

யாக்கை

> மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற்று ஆங்கே
> நிலையாது நீத்து விடும் (28)

எனும் நாலடியார் வரிகள் யாக்கை நிலையாமையையும் உணர்த்துகின்றன.

கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே, இளமை, செல்வம், உடல் ஆகியவற்றின் நிலையற்ற தன்மையை, தமக்கு முற்பட்ட அறநூல்களின் வழிக் குமரகுருபரர் பாடியிருப்பது தெரிய வருகிறது.

**கல்வி**

கடவுள் வாழ்த்துப் பாடலை அடுத்து, கல்வியின் சிறப்பினைக் குமரகுருபரர் கூறுகின்றார். மனிதனாகப் பிறந்த

ஒருவனுக்கு, கல்வி என்பது கண் போன்றது. கல்வி பெறாத வனுடைய கண் புண்ணாகக் கருதப்படும் என்று வள்ளுவர் கருதுகின்றார். கல்வியின் பெருமையைப் பல்வேறு நூல்களும் பேசுகின்றன.

அறம், பொருள், இன்பம், வீடு ஆகியனவற்றைத் தரவல்ல கல்வி போன்று, மனிதருக்குத் துணையாவது வேறு ஏதும் கிடையாது என்று குமரகுருபரர் கூறுகின்றார்.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புலங்கடை நல்இசையும் நாட்டும் – உறும்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை (நீதி. 2)

என்பது நீதிநெறி விளக்கப் பாடலாகும். இது,

கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடுஅல்ல மற்றை யவை (400)

எனும் குறட்பாவை அடியொற்றியது எனலாம்.

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடுஇன்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கு மருந்து (நாலடி. 133)

எனும் பாடலையும் ஒத்திருப்பதைக் காணலாம்.

கல்வி என்பது ஒருவனுக்கு ஈடு இணையற்ற அழகினைத் தரும் (நீதி. 13) என்னும் குருபரரின் கருத்து, கல்வி அழகே அழகு (131) எனும் நாலடியாரின் கருத்தை ஒத்து அமைந்துள்ளது.

மடங்கொன்று அறிவகற்றும் கல்வி (நீதி. 3) எனும் நீதிநெறி விளக்கக் கருத்தானது – அறிவகற்றும் = விரிவு படுத்தும் எனும் பொருளில் வந்திருப்பதானது – குறட்பா (372)வில் பயின்று வந்திருப்பது போன்று, அமைந்திருப்பதைச் சுட்டலாம்.

பேதைப் படுக்கும் இழவூழ் அறிவுஅகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை (372)

என்பது அந்தக் குறட்பா.

கல்வியும் உய்த்துணர்வும் வேண்டும் (நீதி. 4) எனும் நீதி நெறி விளக்கக் கருத்தானது, மதிநுட்பம் நூலோடு உடையார் (636) எனும் குறளைத் தழுவிக் காணப்படுகின்றது. செல்வர்க்குப் பணிவுடைமை வேண்டும் என்பதில் நீதிநெறி விளக்கமும் திருக்குறளும் (125) ஒத்துக் காணப்படுகின்றன. கற்ற கல்வியின்படி நிற்க வேண்டும் என்பதிலும் குறட்பாவை (391) ஒத்து நீதிநெறி விளக்கம் (20) அமைந்துள்ளது.

**செல்வம்**

கல்வியைப் போலவே செல்வமும் போற்றப்படுவதால் குமரகுருபரர் செல்வம் பற்றியும் பேசுகின்றார். செல்வம் உடையோர், செல்வம் இல்லாதோரைக் கண்டு மனநிறைவு கொள்ள வேண்டும். பணிவாகவும் நடந்து கொள்ள வேண்டும். அப்படியென்றால், அவர்கள் செல்வத்தை அது அழகு செய்யும் (நீதி. 15). மாறாக, செருக்கு கொண்டால்,

தூக்கின்
மெலியது மேன்மேல் எழச்செல்லச் செல்ல
வலிதன்றோ தாழும் துலைக்கு (நீதி. 17)

என்பதை ஒக்கும். நீதிநெறி விளக்கம் கூறும் இக்கருத்து,

எல்லார்க்கும் நன்றாம் பணிதல், அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து (125)

எனும் குறட்பாவின் கருத்தை விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா – ஆங்கதுகொண்டு
ஊரும் எறும்புஇங்கு ஒருகோடி உய்யுமால்
ஆரும் கிளையோடு அயின்று (நீதி. 38)

என்பது நீதிநெறி விளக்கப் பாடலாகும். உணவு உண்ணும் போது, சிறிதளவு உணவு தவறிக் கீழே விழுந்து விட்டால், அதைப் பற்றி யானைகள் கவலைப்படுவதில்லை. கீழே சிந்திய உணவுப்பொருள் ஊர்ந்து செல்லும் பல எறும்புகளுக்குப் பசியாற்றும். ஆகவே, செல்வம் கொண்டிருப்பவர்கள் தானம் செய்வதைக் கடமையாகக் கொள்ள வேண்டும் என்கிறார் குமரகுருபரர்.

நல்வழியில் நாடுவார்க்குப் பொருள் தானே எளிதில் கைகூடும் (நீதி.64) என்னும் கருத்து,

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவுஇலா
ஊக்கம் உடையான் உழை (594)

எனும் திருக்குறளுடன் ஒருவாறு ஒப்புமையுடையது எனலாம்.

**முயற்சி**

இனி, முயற்சியின் முக்கியத்துவத்தைக் குமரகுருபரர் அழகாக எடுத்துக் கூறுவதைக் காண்போம்.

ஒரு விளக்கைக் காற்று வீசும் இடத்தில் ஏற்றிவைத்தால் எரியாது; காற்று வீசும் இடத்தில் விளக்கை ஏற்றிவைத்துவிட்டு, அது எரியாததற்கு வினையைக் காரணம் காட்டக்கூடாது. முயற்சி செய்ய வேண்டும். அப்போதுதான் காரியம் கைகூடும். அதை விடுத்து, எல்லாம் வினையின்படியே நடைபெறும் என்றிருப்பதும் தவறு. இந்தக் கருத்து அமைந்த நீதிநெறி விளக்கப் பாடல் (49),

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும் (619)

எனும் திருக்குறளின் மறுவடிவமாகத் தென்படுகிறது. குமர குருபரர் காட்டும் எடுத்துக்காட்டு, படிப்போர்க்குத் தெளிவைத் தருவதாக அமைந்துள்ளது.

உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் உண்மையும் உண்டே (நீதி. 51)

எனும் குமரகுருபரர் வாக்கு,

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
தாழாது உஞற்று பவர் (620)

எனும் திருக்குறளார் கருத்துக்கு இசைவாகவும், மேலும் அரண் சேர்ப்பதாகவும் அமைந்துள்ளது சுட்டத்தக்கது. ஊழை வெல்வ தற்கு முயற்சி பயன்படுவதை இருவரும் ஏற்றுக்கொள்வதாகக் கருதலாம்.

**வேந்தன்**

மக்களைப் பொறுத்தவரையில் மன்னன் தெய்வம் என்று இலக்கியங்கள் காட்டுகின்றன.

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும் (388)

எனும் வள்ளுவர் வாக்கு, எல்லார்க்கும் தெய்வம் அரசன் என்று நீதிநெறி விளக்கத்தில் (26) எதிரொலிக்கிறது.

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் – அறவோர்க்கு
அடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை

என்று குமரகுருபரர் விளக்கமாகத் தருகிறார்.

நீர் ஓடும் வழியிலே தெப்பம் ஓடும்; அதுபோல பகையை ஒழித்த மன்னனின் ஆணையின் வழியே உலகம் செல்லும் என்கிறது நீதிநெறி விளக்கம் (43). மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி எனும் அறநூல் கருத்து இங்குப் புதுப்பிக்கப்படுகிறது.

**அமைச்சன்**

வேந்தனின் கடமையைக் கூறிய நீதிநெறி விளக்கம், அமைச்சனைப் பற்றியும் குறிப்பிடத் தவறவில்லை.

அரசன் வெகுண்டாலும் தவறாது நீதியுரைத்தல் அமைச்சனின் கடமை என்கிறார் குமரகுருபரர். நீதிநெறி விளக்கத்தின் (44) இக்கருத்துக்கு,

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன் (638)

எனும் குறள் அடிப்படையாகிறது.

**பிற**

இனி, வேறு சில ஒப்புமைக் கருத்துகளைச் சுருக்கமாகக் காணலாம்.

**அ) பகை களைதல்**

சிறிய பகைதானே என இகழ்ந்து, அதனைக் களையாமல் இருப்பது தீது என்கிறது நீதிநெறி விளக்கம். (53).

இளைதாக முள்மரம் கொள்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து (879)

எனும் குறளினடியாக இது உருப்பெற்றது எனலாம்.

**ஆ) மானம்**

மானம் அழிந்த பிறகு உடனே உயிர் துறக்காமல், உடலை மட்டும் பாதுகாத்து வாழ்வது என்பது உயிரைக் காக்கும் மருந்து ஆகுமா? (968) என்கிறது திருக்குறள். இவ்வழியில் நாலடியார் (40) மட்டுமல்ல, நீதிநெறி விளக்கமும், மானம் போனவுடன் உயிர் துறத்தல் நன்று; ஏனெனில் மானம் உயிரினும் மேலானது (40) என்கிறது.

**இ) அறம் செய்க**

அறத்தை வலியுறுத்தும் அறநூல்களின் வழிநின்று நீதிநெறி விளக்கமும் அறம் செய்யுமாறு வலியுறுத்துகிறது. அறம் செய்வதற்கு மனத்தூய்மை (57) வேண்டும் என்கிறார் குமரகுருபரர்.

மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்துஅறன் (34)

எனும் வள்ளுவர் வாக்கின் மறுபதிப்பாக இது தென்படுகின்றது.

**ஈ) தீய செயல்**

தீயசெயல் செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல – தீயன
நல்லன ஆகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல் (74)

எனும் நீதிநெறி விளக்கக் கருத்துக்கு,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடு நினைக்கப் படும் (169)

எனும் குறள் துணை நிற்கிறது.

**உ) உட்பகை**

புறப்பகையைக் காட்டிலும் அஞ்சத்தக்கது உட்பகை (54) என்கிறது நீதிநெறி விளக்கம். இது,

எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு (889)

எனுங் குறளுடன் ஒப்புமை கொண்டிருப்பதை உணரலாம்.

**ஊ) காமத்தின் தீமை**

காமத்திற்கு ஆட்பட்டு, மாற்றான் மனைவியிடம் தவறாக நடந்து கொள்ளும் ஒருவனிடம் பகை, பாவம், அச்சம், பழி

ஆகியன நீங்காமல் நிற்கும் (146) என்றும்; மாற்றான் மனைவியை மனத்தாலும் நினைக்காமல் இருப்பதே பேராண்மை (148) என்றும் திருக்குறள் கருத்துத் தெரிவிக்கிறது. இதன் எதிரொலியை,

> கொலைஅஞ்சார் பொய்நாணார் மானமும் ஓம்பா;
> களவொன்றோ ஏனையவும் செய்வார் - பழியோடு
> பாவம் இஃது என்னார் பிறிதுமற்று என்செய்யார்
> காமம் கதுவப்பட் டார் (78)

என நீதிநெறி விளக்கம் பேசுகின்றது.

**நிறைவுரை**

திருக்குறள், நாலடியார் முதலான அறநூல்களின் கருத்துக்கள் குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கத்தில் இடம் பெற்றுள்ள பாங்கினைக் கண்டோம். அறநூல்களின் பணி, வாசகர்களை நல்வழிப்படுத்துவது என்ற நிலையில், நீதிநெறி விளக்கம் அரிய பல நீதிக் கருத்துக்களை மிகச் சிறப்பாகத் தொகுத்தளித்திருப்பது புலனாகின்றது.

# அடிகளாரின் தமிழ்ப் பண்பாட்டுநெறி

கு. கதிரேசன், திருச்செந்தூர்

**அடிகளாரின் இலக்கியப் படைப்பாக்க நெறி**

குமரகுருபரர் இயற்றி இன்று கிடைத்திருப்பவை பதினான்கு சிற்றிலக்கியங்கள் ஆகும். இவற்றில் பதிமூன்று பக்தி மார்க்கத்தையும் ஒன்று நீதிநெறியையும் எடுத்துரைக்கின்றன. இவற்றில் வெளிப்படும் அவரது இலக்கண இலக்கியப் புலமையை இனம் கண்டால் சுவாமிகளின் தமிழ்ப்பற்றின் தன்மையை விளங்கிக் கொள்ளலாம். இவற்றில் அவர் சமய நெறியையும், அறநெறியையும், புலமை நெறியையும் இணைத்த பண்பாட்டு நெறியை விளங்கிக்கொள்ள முடியும்.

தமிழ் யாப்பிலக்கணத்தில் எத்தனை பாடல் வகைகள் உண்டோ, அத்தனை பாடல் வகைகளையும் பாடும் திறமை சுவாமிகளுக்கு உண்டு. இதனை அவர் இயற்றிய சிதம்பர செய்யுட்கோவை என்னும் இலக்கியத்தில் இனம் காணலாம். இந்நூலைச்செய்யுள் இலக்கணத்திற்கு இலக்கியமாகவே இயற்றப் பட்டது என்பார் சாமி. சிதம்பரனார். (அருணகிரியார்–குருபரர் அறிவுரைகள் 1964:86) சுவாமிகள் பெரிய காவியங்களையோ, புராணங்களையோ பாடவில்லை. சிற்றிலக்கியங்களையே இயற்றினார். இவ்வாறு சிற்றிலக்கிய வகைகளில் தமது புலமையை வெளிப்படுத்தித் தமிழ் உலகிலும் பக்தி உலகிலும் மிகப்பெரும் இடத்தைப் பிடித்தவர் சுவாமிகள். அவர் பாடிய பாடல்களில் வெளிப்படும் ஓசை நயம், பொருட்சிறப்பு, கற்பனை ஆற்றல், இயற்கை நிகழ்வுகள், நீதி நெறிகள் அனைத்தும் அவரது தமிழ்மொழி அறிவையும், தனித்திறனையும், புலமை ஆற்றலையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றன. சுவாமிகளின் பாடல் சிறப்பும், கற்பனைத்திறமும் அதன் மூலம் வெளிப்படும் தமிழ்ப் பற்றும் அனைவராலும் புகழ்ந்து பாராட்டத்தக்கவை.

அடிக்ளார் இயற்றிய இரட்டை மணிமாலையும், மும்மணிக் கோவையும் நான்மணிமாலையும் திருமுறைப் பிரபந்தங்களின் தொடர்ச்சியைக் காட்டுகின்றன. பிள்ளைத்தமிழும் கலம்பகமும் முன்பே வழக்கில் வந்துவிட்ட போதும் குறம் இவரிடமே தனியிலக்கியமாக அமைகிறது. (தமிழிலக்கிய வகையும் வடிவும், ச. வே. சுப்பிரமணியன்: 1984: 210) இப்பண்பு குமரகுருபரரின் சிற்றிலக்கியப் புலமைக்கும், தமிழ்ப் பற்றிற்கும் சான்றாக அமைகிறது. அடிகளார் இயற்றிய சிதம்பரச் செய்யுட்கோவை யாப்பு வகைகளுக்கு விளக்கமாக அமைகிறது. நீதிநெறி விளக்கம் அறம் கூறுவதே நோக்கமாகக் கொண்டு அமைகின்றது. இத்தன்மைகளினால் இவ்விரண்டும் அடிகளாரின் படைப்பில் குறிப்பிடத்தக்கவையாக அமைகின்றன. சிதம்பரச் செய்யுட் கோவையில் இலக்கியத்தின் வடிவாகிய பா அமைப்புக்கு முக்கியத்துவமளித்திருப்பதும் நீதிநெறி விளக்கத்தில் சமயக் குரவர்கள் கூறிய அறிவுரைகளுக்கு முக்கியத்துவமளித்திருப்பதும் புலனாகின்றன. அறமும் சமயமும் இரண்டறக் கலந்த அடிகளாரின் தமிழ் நெறியை இங்கு இனம் காணலாம். அடிகளாரின் நெறியைப் பின்பற்றியே வீர சைவரான சிவப் பிரகாசர் பிற்காலத்தில் தாம் இயற்றிய பல நூல்களுடன் நன்னெறி என்னும் அறநூலையும் எழுதினார் என்பார் ச. வே. சுப்பிரமணியன் (1984: 210).

எனவே அடிகளார் சமய நெறியையும், அறநெறியையும், அழகிய புலமை நெறியையும் இணைத்து இலக்கியம் படைக்கும் தமிழ்ப் பண்பாட்டு நெறியைக் கொண்டிருந்தார் என்னும் முடிவுக்கு வரலாம்.

## அடிகளாரின் தமிழ்ப்பற்றும், பண்பாட்டு நெறியும்

அடிகளார் மொழி பேதமில்லா சகிப்புத்தன்மை மிக்கவர். தமிழுடன் வடமொழியைக் கற்றுத் தேர்ந்தவர். கலைமகளைப் போற்றி சகலகலாவல்லி மாலை என்னும் இலக்கியத்தைப் பாடி அவர் அருளால் இந்துஸ்தானி அதாவது இந்தி மொழியை அறிந்தார். அடிகளார் இந்தி மொழியில் ஆற்றிய கம்பராமாயணச் சொற்பொழிவை துளசிதாசர் என்னும் புலவர் கேட்டு அதனடிப்படையிலேயே இந்தி இராமாயணத்தை உருவாக்கினார். (வாழ்வியல் களஞ்சியம்: 1996: 648) இவ்வாறு சுவாமிகள் பிறமொழி அறிவும், ஈடுபாடும் கொண்டிருந்த

போதும் தாய்மொழியாம் தமிழ்மொழியின் மீது தணியாத பற்று கொண்டு திகழ்ந்ததை அறியலாம்.

"தாய்" ஒரு மனிதனின் வளர்ச்சியில் எத்தனை முக்கியமோ அத்தனை முக்கியத்துவத்தைத் தாய்மொழி பெறுகிறது. பொதுவாகத் தாய்மொழியில் கற்கும்பொழுது ஆழமாக மனதில் பதிவதுண்டு. இளம் பருவத்தில் தாய்மொழியில் போதிக்கப்படும் நல்லுரைகள் எளிதில் மறைந்துவிடாமல் நிலைத்து நிற்கக்கூடிய மனிதனின் பண்பும் வாழ்வியல் நெறிமுறைகளும் பெருகுவதற்குத் தாய் கூறும் அறிவுரைகளே உதவுகின்றன. இவ்வுண்மையை இறைவனடியார்களாலேயே முழுமையாக உணர முடிந்தது. இறைவனிடம் அன்பு கொண்டவர்கள் தங்கள் தாய்மொழியில் அன்புப் பாடல்களைப் பாடும்பொழுதுதான் நெஞ்சம் உருகி நிற்பர். உள்ளம் உருகி கண்ணீர் வடிப்பர். இந்தப் பின்னணியிலேயே அடிகள் இறைப்பற்றையும், தமிழ்ப்பற்றையும் இணைத்துப் பார்த்து உயர்ந்த பண்பாட்டு நெறியை உருவாக்கிக் கொண்டிருந்தார் எனலாம்.

தமிழ்நாட்டு அறிஞர்கள்-அன்பர்கள்-அடியார் அனைவரும் தாய்மொழியை அன்னையைப் போலவே போற்றினர்; வாழ்த்தினர், வணங்கினர். அன்னையைக் காட்டிலும் ஒருபடி மேலாக உயர்த்திப் பேசினர். தமிழ்மொழியை இறைவனாகவோ, இறைவியாகவோ போற்றித் துதித்தனர். அதாவது கடவுளை தாய்மொழியின் வடிவமாகவும், சுவையாகவும், பயனாகவும் எண்ணினர். இது அவர்கள் தாய்மொழிப் பற்றினால் எழுந்த பண்பாட்டு நெறியாகும். இந்த பின்னணியிலேயே அடிகளார் தமிழைத் தாயாக, தாய்த்தெய்வமாக, இறைவனாக எண்ணி பல இலக்கியங்களை உருவாக்கினார். அவை அடிகளாரின் தமிழ்ப் பற்றையும், பண்பாட்டு நெறியையும் பறைசாற்றுவதாக அமைகின்றன.

> தொடுக்கும் கடவுள் பழம் பாடல்
> தொடையின் பயனே! நறைபழுத்த
> துறைத்தீம் தமிழின் ஒழுகுநறும்
> சுவையே!

என்னும் பாடல் மூலம் மீனாட்சி அம்மையிடம் பிறக்கும் அன்பைவிட தழிழ்த்தாயிடம் பிறக்கும் அன்பே அதிகம் என்னும் அடிகளாரின் கருத்தை விளங்கிக்கொள்ளலாம். அவர் உள்ளத்தில்

தமிழ்த்தேன் நிரம்பி வழிகிறது. உணர்வுகள் முழுமையும் தமிழ் நிறைந்து காணப்படுகிறது. இவ்வாறு மீனாட்சியம்மையை உவமைகள் அடுக்கியும், கற்பனை கலந்தும் போற்றிப் புகழும் அடிகளாரின் தமிழ்ப் பண்பாட்டு நெறிக்கு மேற்குறிப்பிட்ட பாடலைச் சான்றாகக் கொள்ளலாம்.

அடிகளாரின் இலக்கியங்களில் தமிழ்-வடமொழி கலப்பு மிகுந்திருந்த போதும் தமிழ்மொழிப் பற்று மிகுந்தவராகவே விளங்கினார். ஓசை நயமும், சொல்லின்பமும் இலக்கணக் கருத்து களை உவமையாக எடுத்தாளலும் அகப்பொருள் புறப்பொருள் கவிதைகளை அமைத்தலும் உயர்வு நவிற்சி கற்பனை ஆகிய கூறுகளை இணைத்தலும் சிலேடைப் பயிற்சியும் தவிர மேலும் பல்வேறு வகையாகத் துணைமைக் கூறுகளும் பொருந்தி நின்று அடிகளாரைப் பெரும் தமிழ்க் கவிஞராக, சமயப் பெரியாராக அடையாளம் காட்டின.

பொதுவாக இலக்கிய உறுப்புகளான கற்பனையும், வர்ணனையும் ஓரளவிற்காவது வாழ்க்கையோடு தொடர்பு பட்டிருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்து. பிற் காலத்தில் இக்கொள்கை கைவிடப்பட்டது. வரம்பு கடந்து கற்பனை செய்வதும் கவிஞர்களுக்கு உரிய மரபு என்று கருதும் நிலை ஏற்பட்டது. அடிகளார் இக்காலப் புலவர்களுள் தனிச் சிறப்புமிக்கவராகவும், உண்மையான படைப்புத்திறன் வாய்ந்த பெருங்கவிஞராகவும் விளங்கினார். ஆயினும் அவர் காலத்திற் கேற்பத் தமது படைப்பு நெறிகளை உருவாக்கிக் கொண்டார். இதனால் அளவுக்கு அதிகமாகக் கற்பனை வருணனைகளை அமைத்தார். இவை அடிகளாரின் இலக்கிய நெறியையும், பண் பாட்டு மரபையும் அறியத் துணைசெய்யும் என்பதில் ஐயமில்லை.

விளையாட்டயரும் மணற் சிற்றில்

என்று தொடங்கும் பாடலில் மதுரையில் உள்ள உழவர்குலச் சிறுமி பண்ணைகளில் சிறுசோறு சமைக்கும் செல்வச் சிறப்பு சித்திரிக்கப்படுகிறது. மணல் வீட்டில் குடிபுகுந்து, சூட்டடுப்பில் பவள விறகு வைத்து மாணிக்கத் தீ மூட்டி, நத்தைக் கூட்டுப் பானையில் தேன் உலை நீர் பெய்து முத்தரிசியை இட்டுச் சிறுமியர் சோறு சமைப்பர். இத்தகைய செல்வக் கற்பனையை அமைத்து இலக்கியம் படைப்பது அடிகளாரின் மிகை விருப்பமாக அமைந்திருந்தது.

மீனாட்சியம்மன் அம்மானை ஆடும்பொழுது, அவள் வீசும் வெண்மையான காய்கள் மேலே சென்று கீழே இறங்கிச் சுழல் கின்றன. அந்தக் காய்களுடன் அன்னையின் கண்பார்வையும் சுழல்கிறது. அது திருமணப் பந்தலில் கணவன் மீது வீசப்படும் சோற்று உருண்டையில் மோதும் சுரும்பு போலவும் வானத்து மதி மீது பாயும் மான் போலவும் இருப்பதாக உவமைக் கற்பனையையும் அமைத்துள்ளார். இது அடிகளாரின் கற்பனை வேகத்தையும் இலக்கியப் பண்பாட்டு நெறியையும் எடுத்துக் காட்டுகிறது.

அன்னை அம்மானை ஆடும்பொழுது முத்தினாலான அம்மானைக்காய் மூன்று விதமான நிறங்களைப் பெறுவதாகவும் அவள் செங்கை படும்பொழுது சிவப்பு நிறத்தையும் கடைக்கண் படும்பொழுது கருப்பு நிறத்தையும் வெண்ணகை நிலவு படும் பொழுது வெண்மை நிறத்தையும் பெற்று திகழ்வதாக பாடல் வர்ணிக்கிறது. இதனை அடிகளாரின் உயர்ந்த கற்பனை நயத்திற்குச் சான்றாகக் கூறலாம்.

மீனாட்சியம்மன் நீராடும்பொழுது பச்சை மேனியிலிருந்து பசுங்கதிர்கள் பட்டு நீரில் உள்ள சிவந்த பவளக்கொடி பைங் கொடியாகவும் முத்துக்கள் மரகதமாகவும் அன்னப்பறவைகள் மயில் போன்றும் காட்சி தருகின்றன என்கிறார்.

உலகில் உள்ள அனைத்துப் பொருட்களும் அன்னையின் வடிவாகவே அமைந்திருக்கின்றன என்பதை தெய்வக் கற்பனை யில் வெளிப்படுத்துவதை அறியலாம்.

அதோடு மதுரையில் உள்ள வயல்களில் வாழும் வாளை மீன்கள் மேல்நோக்கித் தாவி வானத்தை நோக்கிச் செல்கின்றன. அங்கு அவை மேக மண்டலத்தைக் கிழித்து, கற்பகக்காடு, வான கங்கைக்கரை ஆகியவற்றைக் கடந்து சந்திர மண்டலத்தைத் தாக்கி, விண்மீன்களைச் சிதைத்து, பகிரண்டத்தைப் பிளந்து, பெரும்புறக் கடலைக் கலக்கி அங்குள்ள சுறா மீன்களோடு விளையாடின என்பது போன்ற உலகியலக்குப் பொருந்தாத வெறும் கற்பனையையும் (Fancy) அடிகளார் இலக்கியங்களில் எடுத்தாண்டிருப்பதைக் காணலாம். இதன் மூலம் கற்பனை, வர்ணனை உள்ளிட்ட இலக்கியக் கூறுகளை பக்தி நெறியுடனும் தமிழ் இலக்கிய நெறியுடனும் இணைத்து வெளியிடும்

அடிகளாரின் தனிச்சிறப்புமிக்க இலக்கிய நெறியையும், தமிழ்ப் பண்பாட்டு நெறியையும் இனம் காண முடியும்.

**அடிகளார் காட்டும் நீதிநெறியும் பண்பாட்டு மரபுகளும்**

அடிகளார் பக்தி நெறி, இலக்கிய நெறி, மொழி நெறி, அறநெறி ஆகியவற்றை இணைத்து புதிய பண்பாட்டு நெறியை உருவாக்கியவர். அறக்கருத்துகளைக் கூறும்பொழுதும் இனிமை குன்றாமல் சுவைபட எடுத்துரைக்கும் திறம் பெற்றவர். இளமை நீரில் தோன்றும் குமிழி போன்றது. செல்வம் நீரில் எழும் அலைகள் போன்றது. உடம்போ நீரில் எழுதப்படும் எழுத்து போன்றது. எனவே சிவபெருமானுடைய அம்பலத்தை வணங்காமலிருப்பது முறையா?

"நீரில் குமிழிஇளமை நிறை செல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்"

என்று நிலையாமை பற்றி அடிகளார் தொடுத்த வினாக்கள் இன்றைய இலக்கிய உலகிற்கும் பண்பாட்டு நெறிக்கும் ஏற்புடைய நீதிநெறியாகவே அமைகிறது.

பிரம்மனுடைய முகத்தில் கலைமகள் வாழ்ந்தாலும் அவன் புலவர்களுக்கு நிகராக முடியாது; காரணம் பிரம்மன் படைத்த உடல்கள் அழிகின்றன. ஆனால் புலவர்கள் படைத்த நூல்கள் அழிவதில்லை என்று கூறி புலவர்களை மிக உயர்வாகப் போற்றுகிறார். மண்ணாளும் அரசர்களும் என் பாட்டைக்கேட்டு ஏவல் செய்யவேண்டும் என்று சகலகலாவல்லி மாலையில் கலைமகளிடம் வேண்டுகிறார் அடிகளார். காக்கும் கடவுளான திருமால் தூங்குகிறான். அழிக்கும் கடவுளான சிவபெருமானுக்குப் பித்து பிடித்துவிட்டது. ஆனால் படைக்கும் கடவுளான பிரம்மனுக்குக் கலைமகள் கரும்பாகத் திகழ்கிறாள் என்று பக்தியையும் நிலையாமையையும் இலக்கிய நயத்துடன் இணைத்துக் கூறியிருக்கும் பாங்கு போற்றத்தக்கது.

மேற்காணும் சான்றுகள் அடிகளாரின் தமிழ்ப் பண்பாட்டு நெறியை அடையாளம் காட்டுபவனவாக அமைகின்றன. பக்தி நெறியையும், அறநெறியையும் இலக்கிய நெறியையும் இணைத்து புதிய தமிழ்ப் பண்பாட்டு நெறியை ஏற்படுத்தியிருக்கும் அடிகளாரின் தனிச்சிறப்பை மேற்காணும் எடுத்துக்காட்டுகள் உறுதிப்படுத்துகின்றன.

**அடிகளார் அறிவுறுத்தும் பண்பாட்டு நெறிகள்**

அடிகளார் தமது இலக்கியங்களில் தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகள் பலவற்றைத் தமக்கே உரிய இலக்கிய நயத்துடன் வெளிப்படுத்தியிருப்பதை அடையாளம் காணலாம். இது அவரது பண்பாட்டு நெறியை இனம் காணத் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை. அடிகளாரின் பாடல்கள் இயற்கையை ஒட்டி அமைந்துள்ளன.

பொதுவாகப் பெண்கள், பிறந்த இடத்தின் பெருமை பேசும் இயல்புடையவர்கள். தன் தாயகம் வறுமைக்கும், கொடுமைக்கும் இருப்பிடமாக இருப்பினும் பிறர் அதை இழித்துப் பேச இடம் கொடுப்பதில்லை. பெருமையாகப் பேசிக் கொள்வர். இயற்கை யோடு இணைந்த இப்பண்பாட்டை மீனாட்சியம்மை குறம் என்னும் இலக்கியத்தில் எடுத்தியம்புகிறார் அடிகளார். குறத்தி ஒருத்திதான் பிறந்த இடமான இயற்கையிலே பொருள் வளமும் அருள் வளமும் நிறைந்த பொதிய மலையைப் புகழ்ந்து பேசுவதை மீனாட்சியம்மை குறம் வர்ணனை செய்கிறது.

தமிழ்ப்புலவர்கள் தாங்கள் படைக்கும் நூல்களில் தமது பண்பாட்டை வெளிப்படுத்தும் மரபு உண்டு. இதன் மூலமே தமிழர்களின் மறைந்து வரும் பண்பாட்டுக் கூறுகளை இனம் காணமுடியும். அந்த வகையில் அடிகளாரும் பண்டைத் தமிழ் மக்களிடமிருந்த தெய்வ வணக்க நெறி, விருந்தினரைப் போற்றும் வழக்கம் உள்ளிட்ட பண்பாட்டு நெறிகளைத் தமது இலக்கியங் களில் வெளிப்படுத்துகிறார்.

> கொழுங்கொடியின் விழுந்த வள்ளிக்
> கிழங்கு கல்லி எடுப்போம்;

என்று தொடங்கும் பாடலில் குறக்குடியின் வாழ்வும் பண்பாட்டுக் கூறுகளும் படம்பிடித்துக் காட்டப்படுகின்றன.

தமிழ்மொழியின் சிறப்பையும் பெருமையையும் இனிமை யையும் தெய்வத்தன்மையையும் தமது இலக்கியங்களில் பக்தி நெறியுடன் சேர்த்துத் தருகிறார் அடிகளார்.

> "தமரநீர்ப் புவனம் முழுதுஒருங்கு ஈன்றாள்
> தடாதகா தேவி என்று ஒருபேர்
> தரிக்கவந் ததுவும்

என்னும் பாடலில் சிவபெருமான் சௌந்தர பாண்டியன் என்னும் பெயருடனும் பார்வதி தேவி தடாதகா தேவி என்னும் பெயருடனும் முருகன் உக்கிர குமாரன் என்னும் பெயருடனும் மதுரையில் வளரும் தமிழின்பத்தைச் சுவைக்கப் பிறந்தார்கள். எனவே தமிழரின் பெருமையை அளவிட முடியாது என்று குறிப்பிடுகிறார். இப்பாடலில் மதுரையின் செல்வச் சிறப்பும் தமிழின் பெருமையும் சுட்டிக் காட்டப்படுகின்றன.

கல்வியினால் ஏற்படும் பெருமையையும், கல்வி கற்பதனால் மக்கள் அடையும் நன்மை, கற்றவர்க்குக் கல்வி அளிக்கும் இன்பம், கற்றவர்கள் தமது நூலால்–கவிதையால் பெறும் இன்பம் ஆகிய தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் நீதிநெறி விளக்கம் என்னும் வெண்பாவில் வெளிப்படுத்தப்படுகின்றன.

உண்மையான கல்வியறிவுள்ளவர்க்குக் கல்விதான் கற்புள்ள மனைவியர் ஆவர். அவர் பாடும் இனிய கவிதைகளே செல்வப் புதல்வர்கள்; ஆராய்ந்து சொல்லும் சொற்களே சிறந்த செல்வ மாகும் என்று கல்வியின் பெருமையை அறிவுறுத்துகிறார் அடிகளார்.

தமிழர்கள் தாங்கள் வணங்கும் கடவுளர்களைத் தங்களைப் போன்றே மனைவி – குழந்தைகள் குடும்பமாகக் காணும் பண்பாட்டைக் கொண்டு விளங்கினர். இப்பண்பாட்டுக் கூறினை வெளிப்படுத்தும் நோக்கிலேயே அடிகளார் தமது பாடல்களில் தெய்வங்கள் தங்கள் பிள்ளைகளுடன் கொஞ்சிக் குலவுவதாக அமைத்திருக்கிறார். இதன் மூலம் பெற்றோர் தங்கள் குழந்தை களிடம் காட்டும் அன்பும், ஆதரவும் வெளிப்படுவதை இனம் காணமுடிகிறது.

''போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து'' என்னும் பொன்மொழிக்கேற்ப மனநிறைவுடன் வாழ்வதே அழியாத செல்வம்; பேராசை கொள்வதே தீராத வறுமை என்னும் வாழ்வியல் உண்மையை அடிகளார் தமது இலக்கியத்தில் எடுத்தியம்புகிறார்.

ஊர்தோறும் அலைந்து விறகு விற்கும் ஏழை, தான் பெறும் கூலியைக் கொண்டு கூழும், கீரையும் உண்டு தன் மனைவி மக்களுடன் இன்புற்று வாழ்கிறான். எனவே உள்ளத்தில் மகிழ்ச்சியுடன் உழைத்து வாழ்பவனே மகிழ்ச்சியுடன் இருப்பான்

என்றும் அதனால் மனநிறைவே சிறந்த செல்வம் என்றும் உயர்ந்த பண்பாட்டு நெறியை அடிகளார் அறிவுறுத்துகிறார்.

குருவையும் கடவுளைப் போலவே எண்ணி வணங்குவதும் போற்றுவதும் சைவ சமயத்தின் கோட்பாடுகளில் ஒன்றாகும். சைவ சமயப் புலவர்கள் பலர் தங்கள் ஞான குருவைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனர். இப்பாடல்கள் தமிழர்களின் குருபக்தி யையும் பண்பாட்டு நெறியையும் அறியத்தருவதாக அமையும். இக்கருத்துப் பின்புலத்தினடிப்படையிலேயே அடிகளாரும் மிகுந்த குருபக்தியுடையவராகத் திகழ்ந்தார். குருவைப் போற்றிப் பாடினார்.

> "மாசிலா மணிஎன வண்பெயர் நிறீஇ
> மேன்மையோடு அமர்ந்த ஞான சம்பந்த
> ஈண்டு உனைத் தமியேன் வேண்டுவது யாது எனின்"
> ... ... ... ... ... ... ... (பண்டார மும்மணிக்கோவை)

என்று தொடங்கும் பாடலில் "குருவை வேண்டுவதனால் குருபக்தி, சைவ சித்தாந்த நெறியிலே நின்று சிவபிரானைப் பணிய வேண்டுவதால் லிங்க பக்தி நாயாய்ப் பிறந்தாவது அடியார்களின் எச்சில் இலையைத் தின்ன விரும்புவதால் அடியார் பக்தி (சங்கம பக்தி) ஆகிய மூன்று கொள்கைகளையும் எடுத்தியம்புவதைக் காணலாம். இக்கருத்தினை சாமி சிதம்பர னாரும் போற்றிப் புகழ்கிறார் (1964:128) இதன் மூலம் அடிகளாரின் குருபக்தி என்னும் உயர்ந்த பண்பாட்டு நெறியை விளங்கிக் கொள்ளலாம்.

எனவே குமரகுருபர சுவாமிகள் தமது இலக்கியங்களில் தமிழ்ப்பண்பாட்டு நெறிகள் பலவற்றை தன்னையறியாமலேயே வெளிப்படுத்தியிருப்பதை மேற்காணும் எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம். இவர் பக்தி நெறி, இலக்கிய நெறி, அறநெறி ஆகியவற்றுடன் தமிழ்ப்பண்பாட்டு நெறியைப் பிரிக்க முடியாத வாறு இணைத்து வெளிப்படுத்தியிருக்கும் பாடல் மிகச் சிறப்புடையது. இப்பண்பாட்டு நெறி அடிகளாரின் சிறப்பையும், பெருமையையும், தனித்தன்மையையும் எடுத்தியம்புவதாக அமைகிறது.

மேற்கூறிய கருத்துகள் மூலம் அடிகளாரின் பக்தி நெறி, இலக்கிய நெறி, அறநெறி, பண்பாட்டு நெறி இணைந்த புது நெறியை விளங்கிக் கொள்ளலாம்.

# கடவுட் பழம்பாடல் - ஒரு விளக்கம்

ஆ. கந்தசாமி, சென்னை

**முன்னுரை**

கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த குமரகுருபரர் மீனாட்சியம்மையை,

> "தொடுக்குங் கடவுட் பழம்பாடல்
> தொடையின் பயனே
> துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
> சுவையே" (மீ.பி. 9:1)

என மொழியோடு தொடர்புபடுத்திப் பாடுகின்றார். இப்பாடலில் வரும் 'கடவுட் பழம்பாடல்' என்ற தொடர் எதனைக் குறித்தது. வட வேதத்தையா? தமிழ்ப் பாடலையா? என்பதன் விளக்கமாய் இக்கட்டுரை அமைகிறது. இப்பாடலுடன் தொடர்புடைய காரணத்தால் இவர் பாடிய முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்ப் பாடல் வரிகளும் விளங்கங் கருதி இணைத்து நோக்கப்படுகின்றன. இந்த ஆய்வுக் கட்டுரைக்கு உ.வே.சா. அவர்களின் (குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு) பதிப்பும், அதில் அவர் எழுதிய ஆராய்ச்சி முன்னுரையும் பெரிதும் பயன்பட்டமையை ஆய்வாளர் நன்றியுடன் நினைவுகூர்ந்து, மேலும் விளக்கங் காண முயல்கின்றார்.

இக்கட்டுரையில் எழுப்பப்பட்டு அவிழ்க்கப்படும் சிக்கல்கள்

1. 'மறை' என்ற சொல் வடவேதத்தை மட்டும் குறிக்குமா? தமிழ் மறையையும் சுட்டுமா?
2. பழம்பாடல் என்பது வேதத்தைக் குறித்ததா?
3. இப்பாடலில் தமிழையே இருமுறை அடுக்கிக் கூறுவானேன்?
4. நாயன்மார் (நால்வர்) பாடல்களை இவர் அறிந்து ஈடுபட்டமைக்குச் சான்றுகள் உண்டா?

5. இதுபோல், அம்மையைத் தமிழோடு இணைத்துக் கூறக் காரணமென்ன?
6. நால்வர் பாடல்களைப் பழம்பாடல் என்றல் பொருந்துமா?
7. சங்கப் பாடலை முன்னர்க் கூறாது பக்திப் பாடலை (தேவார திருவாசகம்) முன்னர்க் கூறியது சரியா?
8. இவ்வாறு இருபொருள் படும்படி இத்தொடரை அமைக்க வேறு காரணமுண்டா?

**கடவுட் பழம்பாடல் – ஒரு விளக்கம்**

மேற்குறித்த மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் வருகைப் பருவத்தில் அமைந்த பாடலில், அம்மையைக் 'கடவுட் பழம் பாடல் தொடையின் பயனாக'க் குமரகுருபரர் புதுமையாகக் கூறுகின்றார். இங்குள்ள பழம்பாடல் என்பதற்கு உ.வே. சாமி நாதையர் வடமொழி வேதம் எனப் பொருள் கொள்கின்றார். இந்நூலின் உரையாசிரியர்களுள் ஒருவரான புன்னைவனநாத முதலியார், 'தொடுக்கப்படும் தெய்வத் தன்மையுடைய பழைய பாடல்களாகிற மாலையின் பொருளாயிருப்பவள்' எனப் பொதுவாகப் பொருள்கொள்கின்றார். குமரகுருபரர் பாடல்களை ஆய்வு நோக்கில் கண்ட கா. சுப்பிரமணியபிள்ளை பழம்பாடல் என்பதற்குத் தமிழ்ச் செய்யுள் என்றே பொருள் கொள்கின்றார். சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை என்பவர் 'கடவுட் பழம்பாடல்- வேத சிவாகமங்கள்' எனப் பொருள்கொள்கின்றார். இவற்றால் இத்தொடருக்குப் பொருள் கொள்வதில் இருமாறுபட்ட கருத்திருப்பதை அறிய முடிகிறது.

உ. வே. சா. தமது பதிப்பில் கந்தர் கலிவெண்பாவில் – (திரட்டில் இந்நூலுக்கு முன்னர் உள்ளது) 'பாகமேவுந் தெய்வப் பழமறையும்' என்ற தொடருக்குப் பின்னால் தாம் எழுதப் போகும் உரையை நினைவிற் கொண்டு தெய்வப் பழமறை யாவது – தொடுக்குங் கடவுட் பழம்பாடல் எனக் குறிப்பிடு கின்றார். இதனால், பழமறை என்ற சொல்லுக்குப் பழையவேதம் எனப் பொருள் கொண்டு, அதன் அடிப்படையில் கடவுட் பழம் பாடல் என்பதற்கும் பழைய வேதம் எனப் பொருள் கொள்கின்றார் என்பது விளங்குகின்றது. வடவேதம் மட்டுமே கடவுளைப் பற்றிக் கூறும் பழமை வாய்ந்தது என்பது அவர்

கருத்தாயிருந்திருக்க வேண்டும். ஆனால் குமரகுருபரர் எதனைக் குறிப்பிடுகின்றார் என்பதே நாம் காண வேண்டியது. அவ்வகையில் 'மறை' என்ற சொல்லைப் பற்றிய விளக்கத்தை நாம் காண வேண்டும்.

### 1. 'மறை' – சொல் விளக்கம்

குமரகுருபரர் 'மறை' என்ற சொல்லைப் பலவிடங்களில் பயன்படுத்துகின்றார். அச்சொற்களை ஆய்ந்த கா. சு. பிள்ளை,

''பழமறைகள் முறையிடப் பைந்தமிழ் பின்சென்ற'' என்ற விடத்து மறை என்ற சொல் வடவேதத்தைக் குறித்தது. 'பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய', 'உரையாத பழமறையின் முதலெழுத்தின்' என்னும் அடிகளிலே அது நாத தத்துவத்திலுள்ள நாத கலையைக் குறிக்கும். 'பழமறையின் குருந்தே வருக' செழுமறை வடித்த தமிழ்த்திருப்பதிகம் என்ற இடங்களில் அது தமிழ் மறையைக் குறிப்பதாயிற்று'' என்ற முடிவுக்கு வருகின்றார். மேலும் அவர்,

> ''பண்ணேர் வேதம் என்றவிடத்துப்
> பண்என்பது தமிழிசையைக்
> குறிக்குமாதலின் 'வேதம்' என்பது
> தமிழ்மறையை உணர்த்தும்''

என மறை என்ற சொல்லேயன்றி 'வேதம்' என்ற சொல்லும் தமிழ்ப்பாடலை (மறை) குமரகுருபரர் குறிப்பதாகக் கூறுவதும் சிந்திக்கத் தக்கதாகும். குமரகுருபரர் மறை என்ற சொல்லால் தமிழ்மறையை எட்டிடங்களில் குறிப்பிடுகின்றார். வடமொழி வேதத்தை அச்சொல்லால் கூறுங்கால் 'நான்மறை நவின்ற', 'உரையாத பழமறையின்', 'எழுதாமறையோடு' என்பனபோன்ற அடைமொழிகளால் வேறுபடுத்திக் காட்டும் போக்கும் காணப் படுகிறது. ஆதலின் பழமறை என்ற சொல் வடவேதத்தைக் குறித்தது என உ. வே. சா. பொருள் கொண்டது பொருந்தாது என்பது விளங்கும். 'தமிழ்மறை' எது என்ற வினா எழும்.

''தேவாரம் தமிழ் வேதம் எனப் போற்றப்படும். அதனாலேயே தொன்றுதொட்டு உற்சவ காலங்களில் வேதம் ஓதுவதுடன், தேவாரம் ஓதுவதும் வழக்கமாய் இருந்து வருகிறது ... ... சைவ சமயத்துக்கு அடிப்படையாய் இருப்பது தேவாரம்'' என்று கலைக்களஞ்சியம் கூறுவதால் தமிழ்மறையாக

நாயன்மார் பக்திப் பாசுரங்களைக் குறித்தமை புலப்படும். அடுத்து, அதன் தொடர்பான பழம்பாடல், என்ற சொல்லின் பொருளைக் காணுதல் வேண்டும்.

2. பழம்பாடல் என்ற சொல்லுக்குத் தமிழிலுள்ள பழைய பாடல் என்பதே இயல்பாகப் பொருளாயிருக்க, வடமொழி வேதம் எனப் பொருள் கொள்ளுதல் - வலிந்து பொருள் கொள்வதாகத் தோன்றுகின்றது. மேலும், "தேவாரம் பழம் பெருமை வாய்ந்த பக்திப் பாடல்களாக இருப்பதோடு மட்டும் அல்லாமல், ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த நாட்டின் இசை மரபுகளைக் காத்துவரும் பழைய இசைச் செல்வமாகவும் இருந்து வருகிறது ... ... இவ்வளவு பழமையான இசைச் செல்வம் உலகில் எங்கும் இந்த அளவிற்குக் கிடைக்க வில்லை" என்ற கூற்றும் தேவாரப் பாட்ல்களைப் பழம்பாடல் களாகக் கருதுவதற்குத் துணை செய்கிறது. அடுத்து ஒரே பாடலில் தமிழையே இருமுறை கூறியதேன்? என்ற ஐயம் எழுகிறது.

### 3. இருமுறை அடுக்கிக் கூறியதன் காரணம்

உ.வே.சா. 'கடவுட் பழம்பாடல்' என்பதற்கு 'வேதம்' எனப் பொருள் கொண்டமைக்கு வேறு காரணமும் உண்டு. அது,

1. "தொடுக்குங் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே"
2. "துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே"

என ஒரே பாடலில் மொழியோடு தொடர்புபடுத்தி அம்மையை விளிப்பதாகும். அதனால் ஒன்று வடமொழி (வேதம்) மற்றொன்று தமிழ் எனப் பொருள் கொண்டு இருமொழியும் இணைந்தவளாக அம்மையைக் குமரகுருபரர் கூறுவதாக உ. வே. சா. கருதுகின்றார். ஆனால் ஒரே பாடலில் 'தமிழையே இருமுறை அடுக்கிக் கூறும்' போக்கு இவர் பாடலில் வேறிடத் திலும் காணப்படுகின்றது. முருகனைக் கூறுமிடத்தும்,

(1) "கேள்வி நலம் கனியக் கனிய அமுதூறும் கடவுள் மறையும்

(2) முதற்சங்கத் தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்"

(மு.கு. சா.பி.4:1 – 2)

என இம்முறை காணப்படுகின்றது. எனவே, தமிழை இருமுறை அடுக்கிக் கூறுதல் இவரின் தனித்தன்மை என்பதனை அறியலாம். மேலும் 'கடவுட் பழம்பாடல்', 'துறைத்தீந் தமிழ்' என்பவற்றின் விளக்கமாகவும் இப்பகுதி அமைவதையும் காணலாம். இவ்வாறு தமிழையே அடுக்கிக் கூறுவது ஏன்? என்ற ஐயம் எழும். இதற்கு விளக்கம் காணும்போது குமரகுருபரர் இறைவியைப் (முருகனையும்) புதுமையும் கற்பனையழகும் தோன்றப் படைத்துள்ளமை புலனாகின்றது. மேற்குறித்த (முருகன்) பகுதிக்கு, கா. சு. பிள்ளை 'தமிழ்மறையும் முதற்சங்கப் பாவலர் பாநயமும் கனிந்த பசுந்தமிழ்' எனப் பொருள் கொள்ளுதலும் சிந்திக்கத் தக்கது. மேலும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் நீராடற் பருவத்தில் இடம்பெறும் ''துறைத்தமிழ்'' என்ற சொல்லுக்கு 'துறைத் தமிழாவது அகமும் புறமுமாகிய துறைகளை – யுடைய தமிழ்' என உ. வே. சா. விளக்கந் தருதலும் காணத் தக்கது. இங்கு முதற்சங்கப் புலவர் எனக் குமரகுருபரர் குறிப்பிட்டது பொதுவாக சங்கப் புலவர்களை நினைத்தேயாகும்; அவர் காலத்தில் முச்சங்கம் பற்றிய தெளிவான கால வரையறையினை அறிந்திருக்க வாய்ப்பில்லை. அதனால் அவர் அவ்வாறு கூறியிருக்கலாம்.

மேற்கூறியவற்றால் மீனாட்சியம்மையை, நால்வரின் பத்திப் பாடல்களின் பயனாகவும், சங்கத்தமிழ்ப் பாடல்களின் பயனாகவும் இருப்பதாகக் குமரகுருபரர் கூறுகின்றார் எனப் பொருள் கொள்ளலாம். இதனால், தமிழின் பயனும் பண்பும் கூறப்பட்டது.

> ''தித்திக்கும் தெள்ளமுதாய் தெள்ளமுதின் மேலான
> முத்திக் கனியேயென் முத்தமிழே''

எனத் தமிழ்விடு தூதும் தமிழின் பண்பும் (அமுது) பயனும் (முத்திக்கனி) கூறுவதும் ஒப்பிட்டுக் காணத் தக்கது. மேலும் இவர், சங்க நூல்களில் பயிற்சியுடையவர் என்பது இவர் பாடல்களால் அறியமுடிகின்றது.

சங்க காலத்தில் பாடுபொருளாய் அமைந்தது அகம் – புறம். நாயன்மார் (நால்வர்) பாடுபொருளாய் அமைந்தது இறைமை. இவ்விரண்டையுஞ் சுட்டி இரண்டின் தன்மையிலும் இறைவி யுள்ளாள் எனக் கூறும் குமரகுருபரரின் கருத்தழகு வேதம்

எனப் பொருள் கொள்ளும்போது வெளிப்படாதுபோதல் காணத் தக்கது. மேலும், 'தொடையின் பயனே', என்பதற்குத் தொடுக்கப்படும் தமிழ்ப் பாடல்களில் எதுகை, மோனை முதலிய தொடைகள் செம்மையாய் அமைந்துவிடுமானால் கவிஞர்க்குப் பேரின்பம் விளைப்பதாகும். அவ்வின்பமாய் அம்மை உள்ளாள் எனப் பொருள் கொள்ளலாம்.

"எத்தனையோ இன்பம் இந்த நாட்டிலே உண்டு
அத்தனைக்கும் பெரிய இன்பம் பாட்டிலே உண்டு"

என இருபதாம் நூற்றாண்டுக் கவிஞன் பாட்டிலே இன்பத்தைக் கண்டான். குமரகுருபரர் அவ்வின்பத்தை இறைவியாகக் கண்டார். காலத்தின் தாக்கம் கருத்தாக முகிழ்ப்பதைக் காண்கின்றோம். சங்கப் பாடல்களைவிட காலத்தின் வளர்ச்சி யால் தேவார திருவாசகப் பாடல்களில் தொடைநலன் சிறந்து விளங்குதலையும் நினைவிற் கொள்ள வேண்டும். இவ்வாறு பொருள் கொள்ளுங்கால் தேவார திருவாசகப் பாடல்கள் இவர் அறிந்து சுவைத்திருந்தாரா என்ற ஐயம் எழுகின்றது.

### 4. நால்வர் பாடல்களையும் அறிந்து சுவைத்தமைக்குச் சான்றுகள்

இவர் காலத்தில் தில்லையில் மூவர் பாடல்களும் மறைகளாகத் தொகுத்து வைக்கப்பட்டிருந்த செய்தியை இவரே, 'பரசிருக்குந் தமிழ்மூவர் பாட்டிருக்குந் திருமன்றில்' என்று குறிப்பிடுகின்றார். திருஞானசம்பந்தர் தம்மைப் பலவிடங்களில் 'தமிழ்விரகன்' எனத் தாமே கூறிக் கொள்வார். எனவே, அவரைத் தமிழ் விரகன் எனக் கூறுதல் மரபு. மாணிக்கவாசகரின் வாசகத்தில் உருகிய குமரகுருபரர் இம்மரபை மாற்றி மாணிக்கவாசகரைச் "சொற்றமிழ் விரகன்" எனக் குறிப்பிடுகின்றார். காசியிலுள்ள இறைவன் சுந்தரரின் பாடல்களையே தம்மிரு செவிகளிலும் குண்டலங்களாக அணிந்துள்ளான் எனக் குறிக்கின்றார். இவ்வகைச் சான்றுகளால் இவர் நால்வர் பாடல்களையும் அறிந்து சுவைத்திருந்தார் என்பது விளங்கும். மேலும், சைவந்தழைக்க ஊர்தோறும் சென்று தமிழால் பாடிய இவர்களின் பாடலைச் சைவமும் தமிழும் தழைக்க வடநாடு வரை சென்று பாடுபட்ட குமரகுருபரர் நினைத்துப் பாராட்டினார், எனக் கூறுதல் பொருத்தமுடையதாகும். எனவே அப்பாடல்களின் பயனாய்

இறைவி உள்ளாள் எனக் கூறினார். மேலும் இவர் வாழ்வின் முற்பகுதியில் வடமொழிப் பயிற்சி இல்லை. இவர் தந்தையாரும் வடமொழி கற்றவரல்லர். இவர் சிவ தீட்சை பெற்றாரே யொழிய வேதமுறைப்படி தீட்சை பெறவில்லை. எனவே, இப்பாடலை இயற்றுங்கால் இவர் வடமொழியைச் சுவைத் திருக்க வாய்ப்பில்லை. எனவே சுவைத்த தமிழின் பயனாகவே இறைவியைக் கண்டார், என்பதே பொருந்தும். இவ்வாறு கருதுங்கால், இறைவியைத் தமிழோடு மட்டும் இணைத்துக் கூறுவானேன் என்ற ஐயமே எழுகின்றது.

**5. அம்மையைத் தமிழோடு இணைக்கக் காரணம்**

இவர் வேறிடங்களில், 'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி' என ஐந்து முறை கூறுகின்றார். அம்மை, சிவன், முருகன் மூவரும் மதுரையில் வந்து ஆட்சிபுரிந்தமைக்குக் காரணம் குடும்பத்தோடு தமிழைச் சுவைக்க வேண்டுமென்ற விருப்பமே – எனக் காரணங் கற்பிக்கின்றார். எனவே, இவர் வடமொழியை விடுத்துத் தமிழோடு மட்டும் இறைவியை இணைத்துக் கூறும் போக்கு காணப்படுகின்றது. மேலும், சிவன், முருகன், கலைமகள் இவர்களையும் தமிழ்த் தெய்வங்களாகவே காணுகின்ற புதுமையும் இவரிடத்தில் காணமுடிகின்றது. இதனால் இவர் தமிழ்மீது கொண்டிருந்த பெரும் பற்று விளங்குகின்றது. அப்பற்றினாலேயே இவ்வாறு தமிழோடு இணைத்துப் பாடுகின்றார் என்ற உண்மை விளங்கும். தமிழினிடத்தே இம்முனிவர் தெய்வத் தன்மையைக் கண்டனர். அதனைத் தெய்வத் தமிழ் (49.152) என்று பாராட்டுகின்றார். தாம் பாராட்டும் தெய்வங்களையெல்லாம் தமிழ்த் தொடர்பும், தமிழின்பால் வேட்கையும் முடையவர்களாகக் கூறுகின்றனர் என உ. வே. சா. ஆராய்ச்சி முன்னுரையில் – கூறுவதும் இக்கருத்துக்கு அரணாகும். குமரகுருபரர் பாடல்களை ஆய்ந்து இம்முடிவுக்கு வந்தவர். குறிப்புரை எழுதும் போதும் வடமொழியோடு தொடர்புபடுத்திக் கூறுவது முரணாக அமைகின்றது. இதனால், ஆய்ந்து உண்மை காணுகின்ற போக்கும், சாதாரணமாகப் பொருள் குறித்துச் செல்லும் போக்கும் உ. வே. சா. விடம் காணப்படுகிறது. இதுவரை கண்டவற்றால், தமிழினியளாக, சுவையாக இறைவி இருப்பதைக் கூறுவதாக அறிந்தோம். அவ்வாறு, அவர்

கூறுங்கால் சங்கத்தமிழை முன்னர்க் கூறாது பக்திப் பாடலை முன்னர்க் கூறுவது ஏன்? என்ற ஐயம் எழுகின்றது.

**6. சங்கத் தமிழை முன்னர்க் கூறாது பக்திப் பாடலை முன்னர்க் கூறியது ஏன்?**

சங்கத்தமிழை முன்னர்க் கூறிப் பின்னர்ப் பக்திப் பாடல் களைக் கூறுவதே முறைமையாகும். ஆனால், இவர் இம் முறையை மாற்றிக் கூறியதற்கான காரணம் என்ன? என்ற வினா எழுதல் இயல்பே. ஈண்டும் ஒன்றை நாம் கருத்திற் கொள்ள வேண்டும். குமரகுருபரர் பாடுபொருளாகக் கொண்டதும் பாடுவதும் இறைமையை. எனவே, தம் கருத்துக்குத் துணையாயுள்ள பாடல்களை இறைவியைப் பாடும் பாடலில் முதன்மையளித்துப் போற்றுதல் பொருத்தமுடையதே. கால அடிப்படையைக் கொள்ளாது கருத்தளவில் முதன்மை தந்தார் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு பொருள் கொள்ளுதலின் பயனால்-இறைவியைப் புதுமையாகக் கற்பனை செய்து காணும் உண்மை புலப்படும். உள்ளுணர்வால் உணர்ந்த தமிழ் - இறைமை இவ்விரண்டையும் இணைக்கும் முயற்சியில் கற்பனை பயன்படுவதை அறியலாம். ஐம்புலன்களாலும், மனத்தாலும் உணரும் இன்பத்தை, பிற உணர்வுகளை, அறிவு களை ஏதேனும் ஒரு நிலையான ஊடுபொருள் வாயிலாக வெளியிடும்போது அது கலையாகின்றது என்ற கருத்தும் ஈண்டு நினைக்கத் தக்கது.

மேலும், இப்பாடல் வரி இவ்வாறு இருபொருள் கொள்ளும் படி அமைந்தமைக்கு வேறு காரணம் இருக்குமோ என்ற ஐயம் எழலாம்.

8. உரையாசிரியர்கள் (வேதம், தமிழ்ப் பாடல்களை) இருபொருள் கொள்ளும்படி அமைத்தமைக்கு அக்காலச் சூழலும் ஒரு காரணமாய் இருக்கலாம். அப்போது தமிழகத்தைத் தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட வடமொழி ஆதரவாளர்களாகிய நாயக்க மன்னர் ஆண்டனர். எனவே, வடமொழிப் பற்றாளரும் மகிழும்படி இருபொருள்படப் பாடியிருக்கலாம் எனக் கருதவும் இடமுளது. அவ்வாறாயின் அவர் அதனில் ஓரளவு வெற்றி பெற்றார் என்றே கருதலாம்.

**முடிவுரை**

மேற்காட்டிய சான்றுகளிலிருந்து, மறை என்ற சொல் இங்கு தமிழ்மறையைக் குறித்தது என்பதும் பழம்பாடல் என்பதும் தமிழ்ப் – பாடலையே குறித்தது என்பதும் தெரியவருகின்றது. பக்திப் பாடல்களின் பயனாகவும் சங்கப் பாடல்களின் சுவையா கவும் இறைவியைக் கண்டமையால் இருமுறை அடுத்துக் கூறுகின்றார். பக்திப்பாடலுக்கு (தேவார, திருவாசகம்) முதன்மை தந்தது கருத்தளவிலாகும். எனவே கடவுட் பழம் பாடல் என்பது தமிழ்மறையாகிய பக்திப் பாடல்களையே ஆகும்.

இவ்வாறு பொருள்கொள்வதால் குமரகுருபரரின் கருத்தழகும் புதுமையான கற்பனையும் மேலும் சிறப்புறுகின்றமை தெளிவாகின்றது.

# அம்மையும் அடிகளின் ஆன்மீக நோக்கும்

தி. கமலி, சென்னை

திருச்செந்தூர் முருகனது பேரருளால் ஆட்கொள்ளப் பட்டு, வாய் பேசும் சக்தி பெற்றுச் சகலகலா வித்தகராகி, நூற்றுக்கணக்கான பாடல்களை அருளியதோடு வடக்கே வாரணாசியில் உள்ள கேதார கட்டத்திலுள்ள குமாரசாமித் திருமடமும், தெற்கே தஞ்சை மாவட்டம் திருப்பனந்தாளில் விளங்கும் காசித் திருமடமும் ஏற்படுத்தி சைவசித்தாந்தக் கருத்துக்களை நாடெங்கும் பரப்பிய அரும்பணியாளர் குமரகுருபர அடிகள் ஆவர். அவர் 'சகலகலாவல்லிமாலை', 'மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை', 'மீனாட்சியம்மை குறம்', 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்', 'தில்லைச் சிவகாமி யம்மை இரட்டைமணிமாலை' ஆகிய நூல்களை இறைவியின் மீது பாடியுள்ளார். குமரகுருபர அடிகளது ஆன்மீக நோக்கினையும் அவர் கண்ட அம்மையின் இறைவடிவத்தினையும் பற்றிப் பரிசீலிப்பதாக இக்கட்டுரை அமைகிறது.

### சின்னஞ்சிறு சேய்

'அம்மை' யைக் குழந்தையாக்கிப் பிள்ளைத்தமிழ் பாடியவர் குமரகுருபரர். சிவனென்றால் இலிங்க வடிவமும், முருகனென்றால் ஆறுமுகத்தோற்றமும், பிள்ளையார் என்றால் பானைவயிறும் மனக்கண்முன் வருதல் போல் அம்மை என்றால் எவ்வடிவம் வந்து நிற்கும்? தாமரையை வைத்து இலக்குமி, வீணையை வைத்து சரசுவதி, கையிலேந்தும் கிளியை வைத்து மீனாட்சி (பசுமை நிறமும் கூட) என்று வேறு பிரித்தறிதல் கூடும். எனினும் தாயை 'சேயாக்கி' தாலாட்டிய தாய் குமரகுருபரராம். சேயைக் கணைக்கால் கிடத்திக் குளிப்பாட்டி, உச்சி முச்சிக் குஞ்சிக்கு நெய் போற்றி, வெண்காப்பும் இட்டு வளர் கொங்கையில் சங்கு வாக்கும் பாலாட்டி, வாய் நெரித்தூட்டி உடலில் பசுஞ்சுண்ணமும் திமிர்த்து, பைம்பொன் குறங்கினில் கண்வளர்த்திச் சிறிய பருமணித்

தொட்டிலேற்றித் தாலாட்டியாட்டும் செயல் வர்ணனையில் குமரகுருபரர் தாயாகிறார், அவர் மடியில் அன்னை சேயாகிறாள்.

**ஆடிவருந்தேன்**

சோலையில் தளிர்கொய்து விளையாடும் விளையாட்டு, வண்டல் கலம்பெய்து புழுதி விளையாட்டுடன், மயிற்குஞ்சு, மடவன்னப்பார்ப்பு, புறவு இன்னபிற வளர்த்து, கண்பொத்தி விளையாடி, கிள்ளை வைத்து முத்தாடி, பொற் கழங்காடி, தாமரைக்கை பழுத்துச் சிவந்த செய்தியைச் சொல்லும்போது, 'அம்மை' ஒரு குழந்தையாகிட, அவருடன் தானுமொரு குழந்தையாக உடனடி இன்புற்ற அனுபவப் பகிர்வு போல் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

முத்தப் பருவத்தை வாசித்துப் பொருள் உரைக்கும்போது மீனாட்சியம்மையே இளந்திருக்கோலமாகக் காட்சியளித்து ஒரு முத்துவடம் சுவாமிகள் கழுத்திலணிவித்துமறைந்தருளியதாகவும் சரித்திரம் உண்டு.

**உயிரோவியம்**

'ஊறுநறைக்கூந்தற் பிடியே' கொடி நுண்ணுசுப்பு ஒசிய வரு குங்குமக் குன்று இரண்டேந்தும் மலர்ப்பூங்கொம்பே! ... முக்கண் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய்! தொய்யில் எழுது தடந்தோட்குடைந்த தடம்பனை; பணைமென் முலைக்குடைந்த இணைமாமருப்பு என்றும்

'பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடுஞ்சிப்
பொலந்தேரொ டமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன் முலை மூன்றிலொன்று
கைவந்த கொழுநரொடு முள்ளப் புணர்ச்சிக்
கருத்தா கைத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண் வைத்திடுமொரு
கடைக்கணோக் கமுதமூற்ற
மெய்வந்த நாணினொடு நுதல் வந்தெழுங் குறு
வெயர்ப்பினொ டுயிர்ப்பு வீங்கும்
விம்மிதமு மாய் நின்ற உயிரோவம்'

(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–35.1–8)

போர்க்காலமே திருமணக்கோலமான பெண் 'புழுதிநெய்ச் சொக்கர் திரு அழகினுக்கு ஒத்த கொடியாள்' என்று சித்திரிக்கிறார்.

ஐயன் – அம்மை இருவரும் அன்பொத்த தம்பதியர். வையை உடைப்பை அடைக்கப் பிட்டுக்கு மண்சுமந்து அரிமர்த்தன பாண்டியனிடம் பிரம்படி பட்டவர் சொக்கர். மீனாட்சியம்மை நீராடுங்கால் குங்குமக் குழம்பு கரைந்து கரையில் படிதலால் அந்த வண்டல் மண்ணைச் சுமக்கச் சிவனார் விரும்பினாராம். அவர் மண் சுமந்த இடம் இதுவெனக் கேட்டு கசிந்து உள்ளுருகி ஆனந்த வெள்ளம் பொழிந்து நிற்கும் அன்னையின் செய்கை வையையில் மீண்டும் வெள்ளப்பெருக்கைக் கொண்டு வரக்கூடுமோ என்கிறார். அம்மைபால் அய்யனும், அய்யன்பால் அம்மையும் ஆழமான அன்பு கொண்டவராய், அவள் அத்தன் மனத்தெழுதிய உயிரோவியம்;. அழகு தழைத்த கலியாண சௌந்தரி; ஆகம் கலந்து பாகம் வகுந்த பெண்; ஆணிப்பொன் வில்லிப்புணர் மாணிக்கவல்லியவளது ஊடல் நீக்கச் சிவன் வணங்க அவளது திருவடிச் செம்பஞ்சுக்குழம்பு பட்டு இறைவன் திருமுடியிலுள்ள பிறை செக்கர் மதியாக, கங்கைவாணி நதியாக, சிவனது மகுட மழுத்திய சுவடு அவளது காலில் தெரிகிறது. சிவன் மேருவைக் கையால் வில்லாக வளைத்தார். உமையோ சிவனைத் தழுவுவதால் திருத்தோள்கள் எட்டையும் குழைத்தார் என்று கலவியும் புலவியும் மிகு உயிரோவியமாகச் சித்திரிக்கப்படுகிறார்.

**உலக அன்னை**

சக்தி வடிவமிகப் பற்றுக்கோடாக இருந்து உலகமுழுதையும் படைத்து அருளிய 'மறக்கருணைத்தாய்' 'உலக அன்னை'யாவாள். அண்டங்கள் யாவற்றையும் படைத்துக் காத்து ஒடுக்கி அருள்வது அவளுக்கொரு விளையாட்டு. வைத்த பகிரண்டமெனும் மணற் சிற்றில் இழைத்திழைத்தோர் பித்தனுடன் விளையாடும் பெய்வளையார்; நெக்குருகும் அடியார் நெஞ்சில் பெருகும் ஆனந்தப் பெருக்கு; சிறியேம் பெற்ற பெறும்பேறு; திக் விசயம் செய்து உலகை வென்றவர். தோல்வி அடையாத கொடி அவளது கொடி. சுற்று நெடுநேமிச் சுவர்க்கு இசைய எட்டுச் சுவர்க்கால் நிறுத்தி மேருத்தூண் ஒன்று நடுநட்டு வெளிமுகடு மூடியிருசுடர் விளக்கிட்டு முற்ற எற்றுப்புனலில் கழுவு புவனப் பழங்கலம் எடுத்து அடுக்கிப் புதுக்கூழ் இன்னமுதம் சமைத்து

அன்னை நீ பன்முறை இழைத்திட அழித்தழிந்தோர் முற்ற வெளியில் திரியும் அந்தப் பெரும்பித்தன் முன்னின்று தொந்த மிடவும் முனியாது வைகலும் எடுத்து அடுக்கிப் பெரிய மூதண்ட கூடமிடும் அன்னை என அம்பிகை உலகை ஆக்குதலும், சிவன் அழித்தலுமாகிய செயலைச் சொல்கிறார். வல்லி பூத்தலால் பூ எனப்பட்டது பூமி; பூத்ததுவும், ஈரேழ் புவனமேயப்புவனம் காத்ததுவும் அம்மை கருணையே என்று புவியை தோற்று வித்தவளும் அவளே; காத்து வருபவளும் அவளேயாக விளங்கும்- அருந்திறத்தைப் போற்றுகின்றார்.

கர்ட் லிவினின் (Kurt Lewins theory of personality) ஆளுமைக் கொள்கை மனித ஆளுமையைப் பல்வேறு நிலைகளில் பகுத்து இனங்காண முற்படுகிறது.

1) **இடக்கிடப்பியல் (Topology)** – 'முழுமையும், பகுதியும் ஒன்றற்கொன்று நெருங்கிய தொடர்புடையது. 'அன்னை' என்ற முழுமையான நிலையும், அன்னையைச் சேயாக பாவித்தல், மணாளனுடன் உறவாடும் மங்கையாகப் பாவித்தல் எனும் நிலையும் ஒன்றொற்கொன்று உறவுடையதேயன்றி முரணானது அன்று.

2) **வாழ்வுத்தளம் (Life space)** – மனித ஆளுமையும் அவரது சுற்றுச்சூழலும் சேர்ந்ததாக 'வாழ்வுத்தளம்' அமைகிறது. மனிதர் இருப்பதாக பாவிக்கும் அனைத்தும் அவர் வரையில் இருப்பதும், இல்லாததாகக் கருதுவது அவர் அளவில் இல்லாததுமாக அமைவது வாழ்வுத்தளம் என மேலும் விளக்கிடலாம்.

3) **நடத்தை** – செயல் (ஆளுமைத்திறன், சூழல்) = செயல் (வாழ்வுத்தளம்) வாழ்வு, மனிதர், வாழ்வுத்தளம் எனுமிவற்றுக் கிடையேயான உறவை காட்டலாம். குமரகுருபரது வாழ்வு ஆன்மீகத் தளத்தைக் கொண்டது. அத்தளத்தின் இயக்குவிசை யாக பக்தி அமைய அம்மை அனைத்துமாக பரிணமிக்கிறாள்.

4) **இடைகழி** – மனித இதயத்தின் பயணத்தில் பல்வேறு இடைகழிகளைத் தாண்டிச் செல்ல வேண்டியுள்ளது.

5) **பயணப்படி நிலைகள்:** இடைகழியைத் தாண்டி இயங்க வல்ல பரப்பும் அடுத்தடுத்த கட்டங்களது பயணமுமென வாழ்வுத்தளம் விரிவுறும் நிலையைக் காட்டலாம். வாய் பேசா

மூங்கைப்பிள்ளை ஒரு நிலை. ஆற்றல் கைவரப்பெற்றது அடுத்த நிலை. தமிழகத்தில் ஆன்மீகச் செல்வராய் வலம் வந்ததும், காசிக்கு இடம் பெயர்ந்ததுமென ஆன்மீகத்தளம் விரிவடைகிறது.

**6) குறித்த திசைசார் இயக்கம் (Vector):** பாதையின் இலக்கையும் திசையையும் பற்றியது. வாதில் வென்று உண்மைப் பொருளை நிலைநாட்டும் இலக்கினதாய் அவரது இயக்க மமைந்தது.

**7) இணைதிறம் (Valence)** – வாழ்வுத்தளத்தின் ஒருபகுதி ஈர்ப்பதாக இருந்தால் அது நேர்முக ஈர்ப்பையும், வெறுப்பூட்டு வதாக இருந்தால் அது எதிர்முக விலக்கையும் கொண்டிலங்கும்.

காசியில் மடத்தை நிறுவியதும், ஆன்மீகத்தை நிலை நிறுத்தியதும் வாதிட்டு வென்றதும் என நேர்முக ஈர்ப்புடன் விரைந்த பயணத்தளம் ஒருநிலையில் சொந்த மண்ணுக்குத் திரும்பும் விருப்பும் உருவான நிலையில் சற்றே தயங்கிச் சிந்திக்கிறது.

ஆன்மீக வாதியான குமரகுருபர அடிகளார் இறைவியை, மீனாட்சி அம்மையாகவும் தில்லைச் சிவகாமியம்மையாகவும், சகலகலாவல்லியம்மையாகவும் கண்டு பாக்கள் இயற்றியுள்ளார். பிள்ளைத்தமிழில் சின்னஞ்சிறு குழவியாக இறைவியைப் பாவித்துத் தாலாட்டும் தாயாக உருமாறுபவர் சேயின் வளர்ச்சியைப் பனுவல்களாக்குகிறார். அம்மை வளர்ந்து இளமங்கையாகவும் அடிகளுக்குத் தோற்றமளிக்க, அவ்வழகிய நங்கையை, அவள் அன்பு மணாளனுடன் உறவாடும் நிலையில் சித்திரிக்கும் அடிகள் உள்ளம் இறுதியில் அண்டசராசரங்களுக்கும் தாயாகவும், உயிர்களுக்கெல்லாம் தன்னேரில்லாத் தாயாகவும் கண்டு இறும்பூது அடைகிறது. ‘சேய் – இளமாது – அகிலத்தின் அன்னை’ என்று யாவுமாகி அவர் மனக்கண்முன் விரிந்து அன்னையின் தோற்றம் அடிகளை ஆட்கொண்ட ஆன்மீகவருள் நிலை வியத்தற்குரியது.

# மதுரைக் கலம்பகத்தில் தூது

பி. கரிகாலன், தஞ்சாவூர்.

பல்வகை மலர்களான் ஆன கதம்பம் என்ற குறிப்பில் கலம்பகம் என்ற சொல் அமைகின்றது. தொண்டரடிப்பொடி யாழ்வார் 'களிவண்டு மிடற்றிய கலம்பகம்' (பள்ளியெழுச்சி 5) என்று இச்சொல்லைக் கையாள்கின்றார். கலப்பு+அகம் என்பது மெலித்தல் விகாரம் பெற்றுக் கலம்பகம் என மருவியது. இவ்வாறு கதம்பமாய்ப் பல்வேறு துறைகளும் பொருண்மைகளும் பாக்களும் கலந்து இயற்றப்பட்ட நூலும் கலம்பகம் எனப்பெயர் பெற்றது. கலம் 12; பகம் 6 என்றும் 18 உறுப்புடையது கலம்பகம் என்றும் ஓர் கருத்து உண்டு. ஆயினும் கலம்பக நூல் களில் இவ்வெண்ணிக்கை முறையாய்ப் பின்பற்றப் பெறவில்லை. மேலும் பதினெண் உறுப்புக்கள் எவை எவை என்பதிலும் பாட்டியல் நூல்கள் வேறுபடுகின்றன. இந்நூல்களில் இலக்கண விளக்கமும், பிரபந்த தீபிகையும் தூதினையோர், கலம்பகக் கூறாகக் கொண்டுள்ளன. இதன் அடிப்படையில் மதுரைக் கலம்பகத்தில் அமைந்த தூது முறையை இக்கட்டுரை ஆய்கின்றது.

### தூது ஒரு பார்வை

ஒருவர் செய்தியைப் பிறிதொருவருக்குக் கூறுதல் தூது எனப்படும். சுந்தரர் பரவையாரிடத்து இறைவனையே தூதாக அனுப்பினார். தூதிலக்கிய முறைகளில் பறவை முதலான அஃறிணை பொருட்களே பெரும்பான்மை சுட்டப்பெறுகின்றன. நற்றிணையில் (70) தலைவி சிறு வெள்ளாங்குருகை தூது விடுக்கிறாள்.

அஃறிணைப் பொருட்கள் ஒருவர் சொல்லும் செய்தியைக் கேட்பதற்கோ கேட்பதைப் பிறர்பால் சென்று கூறவோ திறம் அற்றவை என்றாலும் அவற்றை விளித் துரைப்பதன் மூலம் இலக்கிய மாந்தர்தம் உள்ளவேட்கையை வெளிப்படுத்தும் இலக்கிய உத்தியாக அமைகிறது. காமம் மிக்க

கழிபடர்க்கிளவியாய் இது அமையும். இத்தகைய நுட்பத்தைத் தொல்காப்பியம்

"சொல்லா மரபின் அவற்றொடு கெழிஇ
செய்யா மரபின் தொழிற் படுத்தடக்கியும்
அவரவர் உறுபிணி தம்போற் சார்த்தியும்
(தொல்.பொருள்.194)

என்று கூறும். நன்னூலில்,

"கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயக்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப்படுமே" (நன். 409)

என்று வரும் சொல்லதிகார நூற்பா இத்தகைய வழக்காற்றை அடியொற்றியே எழுந்தது எனலாம். இவ்வாறு தூது விடுக்கும் பொருட்கள் பற்றி இரத்தினச் சுருக்கம் என்ற நூல்,

"இயம்புகின்ற காலத்து எகின மயில் கிள்ளை
பயம் பெறுமே கம்பூவை பாங்கி – நயந்தகுயில்
பேதை நெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்தும்
தூதுரைத்து வாங்கும் தொடை"

என்ற பாடலில் பத்துப் பொருட்களைச் சுட்டுகிறது. ஆயினும் பிற்காலத்தில் தூதுக்குரிய பொருட்கள் பலவாய்ப் பெருகின.

இத்தகைய தூதுப் பாடல்கள் தலைவனிடம் தன் குறை கூறவேண்டியும் அவன் அணிந்த மாலை வேண்டியும் அமைவனவாய்ப் பக்தி இலக்கியங்களில் காணலாம். இதன் வளர்ச்சியாய் தூதிலக்கியங்கள் கலிவெண்பாவாய் தனித்த இலக்கிய வகையாயும் அமைகின்றன. தனித்த இலக்கிய வகையாய் அமைந்த காலத்தும் கலம்பக உறுப்புக்களில் ஒன்றாய்த் தம் பொருண்மைச் சிறப்புக் குன்றாமல் வருவது குறிப்பிடத்தக்கது.

**மதுரைக் கலம்பகத்தில் தூதுப்பாடல்கள்**

தவராஜ சிங்கம் ஆதி குமரகுருபர அடிகளார் மதுரையின் கண் இருந்தபோது இயற்றப்பட்டது மதுரைக் கலம்பகம். இது மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராய் உடையது. மொத்தம் 103 பாடல் களை உடையது. இவற்றுள் மூன்று பாடல்கள் தூது அனுப்பும்

செய்தியை உடையன. அப்பாடல் எண்கள் 30, 53, 80 இப் பாடல்களில் தூதனுப்பும் பொருட்களாக நீர்வாழ் பறவைகள், கிளி, மேகம் ஆகியவை விளங்குகின்றன. இவற்றுள் தலைவி தூது விடுப்பது அன்றி, தலைவியின் நிலை கண்டு இறங்கி செவிலி தூது விடுப்பதாயும் ஒரு பாடல் அமைந்துள்ளது.

**நீர்வாழ் பறவைகள்**

தலைவனைக் காணாமை எண்ணி வருந்திய நிலையில் தலைவி உடல் வேறுபட்டு கலங்கி நிற்கிறாள். இது கண்டு இரங்கிச் செவிலி நீர்வாழ் பறவைகளைத் தூது அனுப்புவதாய் மதுரைக் கலம்பகப் பாடல் (30) அமைந்துள்ளது. எழுசீர் ஆசிரிய விருத்தத்தில் அமைந்த இப்பாடலில் 'நீர்வாழ் பறவை வருணனை சிறப்புற அமைகின்றது.

கரைபொரு திரங்கு கழிதொறும் இருந்து
    கயல்வர வுறங்கு புள்ளீரே
பருவமுக மிழந்தென் மகடுய ருழந்து
    படுவிர கமொன்று முள்ளீரே
அருமையொடு எங்கள் பெருமையை யறிந்தே
    யருள்புரிய வீங்கு வல்லீரே
மருவிய கடம்ப வனமது புகுந்தென்
    மதுரையரன் முன்பு சொல்லீரே

என்ற பாடலில் (30) 'மீன்வருமளவும் உறங்குவதாய் வாடியிருக்கும் நீர்வாழ் பறவைகளே! என் மகள் தன்னிளமையும், நலனையும் இழந்துற்ற காமநோயைக் கருதாமையென்ன. எங்களுக்கு நலஞ்செய்வதாயின் கடம்பவனம் சூழ் மதுரையில் எழுந்தருளியுள்ள இறைவனிடம் தலைவியின் துயரைச் சொல்லுக'' எனச் செவிலி தூது விடுக்கிறாள். அகப் பொருளமைதியில் தலைவியின் தூது தூதிலக்கியத் தன்மையாகப் பெரிதும் அமைகின்ற சூழலில் இப்பாடல் வேறுபட்டமைகிறது.

**கிளி**

திருஞான சம்பந்தர் தேவாரத்தில், சிறையாரும் மடக்கிளியே என்ற பாடலில், 'தோணிபுரத்தீசன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே' என்று தலைவி கிளியினை விளித்துக் கூறுவாள். அதுபோன்றே இறைவன் திருநாமம் கூறும் கிளியிடம் தலைவி தன்னிலைக்கு உதவ வேண்டுவதாய்க் குமரகுருபரரின்

பாடல் அமைகின்றது. இது மதுரைக் கலம்பகத்தின் தலைவி கூற்றில் கிள்ளைவிடு தூதாய் அமையக் காணலாம்.

புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்
சொக்கர்
அழகிய சொக்கர் கடம்பவனச் சொக்கர் அங்கயற்கண்
தழுவியசங்கத் தமிழ்ச்சொக்கர் என்றுஎன்று சந்ததம் நீ
பழகிய சொற்கு பயன்றேர்ந்து வாவிங்கென் பைங்கிளியே

என்ற கட்டளைக் கலித்துறைப் பாடலில் ''என்பைங்கிளியே புழுகுநெய்ச் சொக்கர், அபிடேகச் சொக்கர் எனப் பலவாறு இறைத்திருநாமமே கூறிப் பழகினாய். அதன் பயனாக நீயே சென்று சொக்கரிடம் என்நிலை கூறி பின்னிங்கு வா'' என்றமைகிறது. சொக்கநாதரின் பல்வகைப் பெருமைகளைத் திருநாம வழிபாடாய் தொகுத்துரைக்கும் பாங்கு இப்பாடலில் காணப்படுகிறது.

**மேகம்**

ஆண்டாள் திருமலை வேங்கடவற்கு 'விண்ணீல மேலாப்பு' என்ற பதிகம் முழுமையும் மேகங்களைத் தூது விடுத்துப் பாடுகிறாள். இத்தன்மையில் மதுரைக் கலம்பகத்தின் 80 ஆம் பாடல் தலைவனைப் பிரிந்த தலைவி அத்தலைவனிடம் மேகத்தைத் தூது விடுப்பதாய் அமைகிறது. இப்பாடல்,

ஏமவெற் பென்றுகயி லாயவெற் பென்றுமல
யாசலத் தென்று முறைவன்
கோமகட் கன்பர்மது ரேசர்முச்
சங்கம்கூடலில் சென்று புகலீர்
தாமரைக் கண்டுயிலும் மாலெனச் சந்தமலி
சாரலில் துஞ்சு முகில்காள்
மாமதிப் பிஞ்சுமிரை தேர்குயில் குஞ்சுமுயிர்
வாய்மடுத் துண்டொ ழிவதே

என எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைகிறது. இப்பாடலில் தலைவி செந்தாமரை மலர்போலும் திருக்கண் வளமும் திருமால் ஒத்தும் சந்தனமரம் சூழ் பொதிய மலையில் தங்கியும் திகழும் மேகங்களே, இளமதியும், குயில் கூவுதலும் தலைவன் இல்லாததால் ஏற்பட்ட பிரிவுத்துயரை பெரிதாக்கும் என் உயிர் இவ்வாறு அழிவதை பொன்மேருமலை; வெள்ளி

மலையாம் கயிலை; பொதிய மலை ஆகியவிடங்களில் எழுந்தருளியிருக்கும் தடாகையின் கணவருமான சிவபெருமானை சங்கமலி மதுரையில் கண்டு கூறிடுவிர் என்று கூறுகிறாள். இப்பாடலில் இறைவன் திகழும் இடங்களும், பெருமைகளும், மதுரையின் சிறப்பும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேகங்களின் வருணனையும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இவையேயன்றி, செவிலி வண்டுகளிடமும், தலைவி கிளியிடமும் கூறும் கூற்றுக்களும் காணப்படுகின்றன. இவை தூது அனுப்பும் பான்மையில் அமையாமல் அஃறிணைப் பொருட்களிடம் கூறி இரங்கும் தன்மையில் அமைந்துள்ளன. தூதுப் பொருளிலும், அஃறிணைப் பொருளுடன் பேசும் நிலையிலும் செவிலியின் பங்கு கொண்டிலங்குதல் குறிப்பிடத் தக்கது. இப்பாடல்களில் பாடல் தலைவன்; கிளவித்தலைவன் என்ற வேறுபாடின்றி இறைவனே பாட்டுடைத் தலைவனாயும் அகத்துறைத் தலைவனாயும் சுட்டப்பெறுகின்றான்.

இத்தூதுப் பாக்கள் இறைவனின் பல்வேறு திருநாமங்கள் இறைவன் எழுந்தருளிய இடங்கள், உமையன்னை, மதுரைச் சிறப்பு, சங்கம் வளர்த்த தமிழ் முதலிய செய்திகளைக் கொண்டு அமைகின்றன. அடிப்படையில் இறைப் பெருமை கூறுதலே நோக்கமாதலால் மதுரைக் கலம்பகத்தில் அமைந்த தூதுக் கூற்றுகள் அந்நோக்கத்தை நிறைவு செய்திடவுதவும் உத்திகளாக அமைகின்றன.

மேலும், அகப்பொருளமைதியில் குன்றாமல் முன்னை நாயன்மாரும், ஆழ்வாரும் பாடிய நாயக – நாயகி பாவத்தின் அடிப்படையில் சுவைபட அமையக் காணலாம்.

# குருபரரின் குழந்தை உளவியல்

கஸ்தூரி நாகராஜன், குற்றாலம்

குழந்தையாகப் பிறந்து மனிதனாகும் மனித வளர்ச்சியைப் பற்றிப் பல இலக்கியங்கள் பேசுகின்றன. 'மனிதனுடைய தந்தை குழந்தைதான்' (The Child is the father of the man) என்று கூறுவதால் குழந்தை வளர்ச்சி பற்றிய ஆய்வும் சமூகத்தில் இன்றியமையாத ஒன்றாக இருந்தது இருக்கின்றது. குழந்தை ஏதாவது ஒரு சூழ்நிலையில் பிறந்து வளர்ந்து, அச்சூழலுக்கு ஏற்ப தன்னை மாற்றிக் கொண்டு வளரும் குழந்தையின் செயல்களைப் பிள்ளைத்தமிழ் என்ற இலக்கிய வகையில் இலக்கியலார் கொண்டு வருகின்றனர். தமிழ் இலக்கிய உலகில் ஒட்டக்கூத்தர் எழுதிய 'குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்' முதல் பிள்ளைத்தமிழ் இலக்கியமாகப் பேசப்பட்டாலும் பெரியாழ்வார் 9 – ஆம் நூற்றாண்டில் கண்ணனைக் குழந்தையாகப் பாவனை செய்து தாலப்பருவத்தைப் பாடியுள்ளார். 17 – ஆம் நூற்றாண்டில் குமரகுருபரர் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழையும் குமாரசாமி பிள்ளைத்தமிழையும் பாடினார். இப்பிள்ளைத்தமிழ் இலக்கியங்களுக்கெல்லாம் வித்திட்டவர் தொல்காப்பியர். 'குழவி மருங்கினும் கிழவதாகும்' என்னும் செய்யுள் நூற்பா இதற்கு எடுத்துக்காட்டாகும். அயல் நாடுகளில் குழந்தை உளவியல் துறை 18–ஆம் நூற்றாண்டில் வளர ஆரம்பித்தது போன்று தமிழ் இலக்கியத்திலும் பிள்ளைத்தமிழ் என்ற சிற்றிலக்கிய வடிவத்தில் குழந்தை உளவியல் பேசப்பட்டது என்றால் தவறு இல்லை.

மனிதன் குழந்தையாகப் பிறந்து, வளர்ந்து, முதிர்ச்சி பெற்று, எல்லாத் திறமைகளையும் வெளிப்படுத்துகின்ற செயல் முறைகளையெல்லாம் குழந்தை உளவியலார் நன்கு ஆராய்ந்து கொண்டுள்ளனர். தற்கால அணுகுமுறைகள் அறிவியல் சார்ந்து காரண காரியத் தொடர்புடையதாக இருந்தால்தான் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் அறிவியல் சார்ந்த உண்மைகளை வெளிக்கொணர முடியும் என்னும் நோக்கத்தைக் கொண்டிருப்ப

தால் குமரகுருபரரின் மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் காணப்படும் கருத்துக்களை உளவியல் அணுகுமுறை கொண்டு ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உளப்பகுப்புக் கோட்பாட்டுக்கலையைத் தோற்றுவித்தவரான சிக்மன்ஃபிராய்டு குழந்தைகளின் நடத்தையைப் பற்றி ஆராய்ச்சி நடத்தியிருந் தாலும் இலக்கியலார் கொள்கை அடிப்படையில் குழந்தை உளவியலைப் பேசாவிட்டாலும் பிள்ளைத்தமிழ் வடிவம், பாடு பொருள் ஆகியன வழி உய்த்துணர வைத்துள்ளனர்.

குழந்தை மிக உயர்ந்த சார்ந்து வாழும் உயிர். மனிதக் குழந்தைகள் கருவறையினின்றும் வெளிவந்தவுடன் தம் இயக்கத் திற்குப் பெற்றோர்களைச் சார்ந்து இருக்கக் கூடிய உடல் கூறுடையன. தமிழ்ப் புலவர்கள் தாம் விரும்பும் தெய்வம், அரசன், வள்ளல், சான்றோர் ஆகியோரிடம் பாடப்படுவது பிள்ளைத்தமிழ் எனப்படும். இதனைப் பிள்ளைக்கவி என வெண்பாப் பாட்டியலும், பிள்ளைப்பாட்டு எனப் பன்னிரு பாட்டியலும் கூறுகின்றன. மூன்றாம் திங்கள் முதல் இருபத் தோராம் திங்கள் வரை ஒரு பருவத்திற்கு இரண்டு திங்கள் என வகுத்துக் கொண்டு, பத்துப்பருவங்களில் வைத்துப் பாடப்படுவது பிள்ளைத்தமிழ் ஆகும்.

குமரகுருபரர், மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்தில் அனைத்துத் தெய்வங்களும் குழந்தையாகிய மீனாட்சியைக் காக்க வேண்டும் என்று பாடுகின்றார்.

> ''அங்கயற் கண் அமுதை மங்கையர்க்கு அரசியையெம்
> அம்மனையை இனிதுகாக்க'' (பா. 1)

'மதுரை மரகத வல்லியைக் காக்கவே' என்றும் பாடுகின்றார். காப்புப் பருவம் என்பது இரண்டாம் மாதத்தில் பிள்ளையைக் காக்க என்று கடவுளை வேண்டுவதாகும். குழந்தை தாயின் கருவறையினின்றும் வெளிவந்தவுடன் தாயின் பாதுகாப்பில் வளர்வதுடன் மருத்துவ உதவியும் அதற்கு இன்றியமையாதது ஆகின்றது. ஆனால், 17-ஆம் நூற்றாண்டில் மருத்துவத்தையும், மனிதனையும் நம்புவதைவிடத் தெய்வ அருளால் குழந்தை காக்கப்பட வேண்டும் என்ற நம்பிக்கை உயர்ந்திருந்தது. குமரகுருபரரிடம் தெய்வபக்தி உயர்ந்திருந்ததால் தெய்வம் குழந்தையைக் காக்கப் பாடினார் என்று கூறுவதை விட நலம்

பெறவும் பாதுகாப்புப் பெறவும் இறைவனை நாடும், பண்பாடு மக்களிடம் பெருவழக்கில் இருந்தது என்னும் சமூக முறையினை அறிந்து கொள்ள முடிகின்றது.

**தசை இயக்கம்**

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் செங்கீரைப் பருவம் பற்றிக் கூறுகின்றார். இப்பருவம் ஐந்தாம் மாதத்திற் குரியது என்பது இலக்கணம். ஒரு காலை மடக்கி ஒரு காலைநீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்ந்து முகம் அசைய ஆடும் பருவம் என்பர். குமரகுருபரர் செங்கீரைப் பருவத்தில் அமைந்த பத்துப் பாடல்களிலும் மீனாட்சியம்மையைப் போற்றி வருணித்தாலும் பால் குடித்தல், முறுவல், விளையாட்டு, கண், எச்சில் ஒழுகல், மழலை ஆகிய குழந்மைக்குரிய செயல்பாடு களையும் கூறுகின்றார். குமரகுருபரர், ஐந்து மாதத்தில் குழந்தை சிரிக்கப் பழகிவிடும், கண்பார்வை சிறக்கும், சிறு பொம்மைகளைக் கொண்டு விளையாடும், என்னும் வளர்ச்சி நிலையை எடுத்துக் காட்டுகின்றார்.

> ''பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
> பாலமுதம் ஊட்டி யொரு நின்
> பால்நாறு குமுதம் கனிந்தூறு தேறல்'' (பா. 33)
>
> ''சிற்றில் விளையாடும் ஒரு பச்சிளம் பெண்பிள்ளை''
> (பா. 34)
>
> ''இதழ் விழிதேறல்'' (பா. 42)

என்றெல்லாம் பிறப்பியல் உளவியலை இங்குப் பேசுகின்றார். பிறப்பியல் துறையில் குழந்தைகளின் இயக்கநடத்தைக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. குழந்தையின் மனவாழ்க் கையும் சமூக வாழ்க்கையும் இயக்க நடத்தையுடன் தொடர் புடையன. குழந்தை தானே இயங்குகின்ற அசைவுகளெல்லாம் உயிரியைச் சார்ந்து நடைபெறுகின்றது. பால்குடிப்பதில் குழந்தை தன்னுடைய பயிற்சியையும் திறமையையும் காட்டுவதுண்டு. பால் குடிக்கும் செயல், குழந்தை பிறந்தவுடன் செயல்படத் தயாராக இருக்கின்றது.

தசை இயக்க முதிர்ச்சி என்பது குழந்தையின் பல்வேறு தசைகளையும் கட்டுப்படுத்திக் குறிப்பிட்ட செயலுக்கு நடத்திச் செல்வதாகும். உடல் உறுப்புக்களை அசைக்க அசைக்க அவை

களின் தசைகள் வலிமை அடைந்து எந்தச் செயலையும் செய்யத் தயாராகின்றது. இது, மாறுபட்ட தசைகளின் சுருக்கத்திற்கும்' நெகிழ்ச்சிக்கும் இடையில் ஒரு சமநிலையைச் சார்ந்த செயல் முறையாகும். தசைகள் வலுப்பெறும்போது குழந்தைகளின் ஆற்றல் வளரும். இதை வெளிப்படுத்துவதே செங்கீரைப்பருவம். தசைகளின் கட்டுப்பாடு கண் அசைவுகளிலும், புன்சிரிப்பிலும் மிக வேகமாக நடைபெறுகின்றது. எனவேதான், குமரகுருபரர் செங்கீரைப் பருவத்தில் முறுவல், கண் பற்றிய கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார்.

உளவியலார் தசை இயக்க முதிர்ச்சியில் குழந்தைகளிடம் பத்துவிதமான பிடிப்புக்களைக் கூறுகின்றனர். ஆனால், குமர குருபரர் கைவளைத்தல், தவழ்தல், கையினைப் பிடித்தல், ஏறுதல், தலையாட்டம், கால்அசைவு, இடைஅசைவு, ஆகியன வற்றைக் கூறுகின்றார். செங்கீரைப்பருவத்தில், குமரகுருபரர் பெருமூளையின் உதவியுடன் நடைபெறும் திட்டமிட்ட அசைவுகளைக் கூறுகின்றார். உட்கார்ந்த தோற்ற அமைவு, ஊர்தல், நகர்தல், நிமிர்ந்து இடம் விட்டு இடம் பெயர்தல் ஆகிய தன்னுரிமைச் (Autogeneous)செயல்களையும் கூறுகின்றார். இந்தச் செயல்கள் உற்சாகம் ஊட்டுதலின்றியும், கட்டளை யின்றியும், பாராட்டுதல் இன்றியும் நடைபெறும் என்பர் உளவியலார்.

**சமூக விழிப்புணர்வு**

மனிதன் மாறிக் கொண்டிருக்கும் சூழ்நிலையில் தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். கருவிலிருக்கும்போது ஒரு சூழல், பிறந்த பிறகு தொட்டிலில் தூங்கும்போது ஒலிகளையும், தாலாட்டுகளையும் கேட்கும் ஒரு சூழல். முதல் மாதத்திலேயே குழந்தை மனிதர்களின் குரலைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் பெறுகின்றது என்றாலும் ஏழு அல்லது எட்டாவது மாதத்திற் குரியதாகத் தாலப் பருவத்தைக் கூறுகின்றனர். குமரகுருபரர், குழந்தைக்கும் தாய்க்கும் உள்ள உறவை,

> "இளம் செம்கண் கயவாய்ப் புனிற்று எருமை
> இன்னம் பசும்புற் கறிக்கல்லா
> இளங்கன் னுள்ளி மடித்தல நின்
> றிழி பா லருவி" (பா. 23)

எனும் பாடல் வழி உணர்த்துகின்றார்.

பெறவும் பாதுகாப்புப் பெறவும் இறைவனை நாடும் பண்பாடு மக்களிடம் பெருவழக்கில் இருந்தது என்னும் சமூக முறையினை அறிந்து கொள்ள முடிகின்றது.

**தசை இயக்கம்**

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் செங்கீரைப் பருவம் பற்றிக் கூறுகின்றார். இப்பருவம் ஐந்தாம் மாதத்திற் குரியது என்பது இலக்கணம். ஒரு காலை மடக்கி ஒரு காலைநீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்ந்து முகம் அசைய ஆடும் பருவம் என்பர். குமரகுருபரர் செங்கீரைப் பருவத்தில் அமைந்த பத்துப் பாடல்களிலும் மீனாட்சியம்மையைப் போற்றி வருணித்தாலும் பால் குடித்தல், முறுவல், விளையாட்டு, கண், எச்சில் ஒழுகல், மழலை ஆகிய குழந்மைக்குரிய செயல்பாடு களையும் கூறுகின்றார். குமரகுருபரர், ஐந்து மாதத்தில் குழந்தை சிரிக்கப் பழகிவிடும், கண்பார்வை சிறக்கும், சிறு பொம்மைகளைக் கொண்டு விளையாடும், என்னும் வளர்ச்சி நிலையை எடுத்துக் காட்டுகின்றார்.

''பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுதம் ஊட்டி யொரு நின்
பால்நாறு குமுதம் கனிந்தூறு தேறல்'' (பா. 33)

''சிற்றில் விளையாடும் ஒரு பச்சிளம் பெண்பிள்ளை'' (பா. 34)

''இதழ் விழிதேறல்'' (பா. 42)

என்றெல்லாம் பிறப்பியல் உளவியலை இங்குப் பேசுகின்றார். பிறப்பியல் துறையில் குழந்தைகளின் இயக்கநடத்தைக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. குழந்தையின் மனவாழ்க் கையும் சமூக வாழ்க்கையும் இயக்க நடத்தையுடன் தொடர் புடையன. குழந்தை தானே இயங்குகின்ற அசைவுகளெல்லாம் உயிரியைச் சார்ந்து நடைபெறுகின்றது. பால்குடிப்பதில் குழந்தை தன்னுடைய பயிற்சியையும் திறமையையும் காட்டுவதுண்டு. பால் குடிக்கும் செயல், குழந்தை பிறந்தவுடன் செயல்படத் தயாராக இருக்கின்றது.

தசை இயக்க முதிர்ச்சி என்பது குழந்தையின் பல்வேறு தசைகளையும் கட்டுப்படுத்திக் குறிப்பிட்ட செயலுக்கு நடத்திச் செல்வதாகும். உடல் உறுப்புக்களை அசைக்க அசைக்க அவை

களின் தசைகள் வலிமை அடைந்து எந்தச் செயலையும் செய்யத் தயாராகின்றது. இது, மாறுபட்ட தசைகளின் சுருக்கத்திற்கும்' நெகிழ்ச்சிக்கும் இடையில் ஒரு சமநிலையைச் சார்ந்த செயல் முறையாகும். தசைகள் வலுப்பெறும்போது குழந்தைகளின் ஆற்றல் வளரும். இதை வெளிப்படுத்துவதே செங்கீரைப்பருவம். தசைகளின் கட்டுப்பாடு கண் அசைவுகளிலும், புன்சிரிப்பிலும் மிக வேகமாக நடைபெறுகின்றது. எனவேதான், குமரகுருபரர் செங்கீரைப் பருவத்தில் முறுவல், கண் பற்றிய கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார்.

உளவியலார் தசை இயக்க முதிர்ச்சியில் குழந்தைகளிடம் பத்துவிதமான பிடிப்புக்களைக் கூறுகின்றனர். ஆனால், குமர குருபரர் கைவளைத்தல், தவழ்தல், கையினைப் பிடித்தல், ஏறுதல், தலையாட்டம், கால்அசைவு, இடைஅசைவு, ஆகியன வற்றைக் கூறுகின்றார். செங்கீரைப்பருவத்தில், குமரகுருபரர் பெருமூளையின் உதவியுடன் நடைபெறும் திட்டமிட்ட அசைவுகளைக் கூறுகின்றார். உட்கார்ந்த தோற்ற அமைவு, ஊர்தல், நகர்தல், நிமிர்ந்து இடம் விட்டு இடம் பெயர்தல் ஆகிய தன்னுரிமைச் (Autogeneous)செயல்களையும் கூறுகின்றார். இந்தச் செயல்கள் உற்சாகம் ஊட்டுதலின்றியும், கட்டளை யின்றியும், பாராட்டுதல் இன்றியும் நடைபெறும் என்பர் உளவியலார்.

**சமூக விழிப்புணர்வு**

மனிதன் மாறிக் கொண்டிருக்கும் சூழ்நிலையில் தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். கருவிலிருக்கும்போது ஒரு சூழல், பிறந்த பிறகு தொட்டிலில் தூங்கும்போது ஒலிகளையும், தாலாட்டுகளையும் கேட்கும் ஒரு சூழல். முதல் மாதத்திலேயே குழந்தை மனிதர்களின் குரலைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் பெறுகின்றது என்றாலும் ஏழு அல்லது எட்டாவது மாதத்திற் குரியதாகத் தாலப் பருவத்தைக் கூறுகின்றனர். குமரகுருபரர், குழந்தைக்கும் தாய்க்கும் உள்ள உறவை,

> "இளம் செம்கண் கயவாய்ப் புனிற்று எருமை
> இன்னம் பசும்புற் கறிக்கல்லா
> இளங்கன் னுள்ளி மடித்தல நின்
> றிழி பா லருவி" (பா. 23)

எனும் பாடல் வழி உணர்த்துகின்றார்.

குழந்தையைப் பெற்றெடுத்த தாய்க்குக் கன்றை அண்மையில் ஈன்ற எருமைக்கும், சிசுவிற்கு, இளங்கன்றும் உவமையாகின்றன. மற்றும் தாலாட்டுப் பாடலில் சமூகத் தொடர்பினைக் குழந்தையிடம் ஏற்படுத்தும் வகையில் உழவர் வாழ்க்கை நெறி பேசப் படுகின்றது.

"வயல் மா மகளில் குழாஞ்சிறுசோ
றாக்கும் பெருந்தண் பணை மதுரை" (பா. 24)

என்று கூறுகின்றார்.

தாலப்பருவப் பாடல்களில் வீரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றார் குமரகுருபரர்.

"ஆனைத்திரளொடு குதிரைத் திரளையும்
அப்பெயர் மீனை முகந்
தம்மனை யாடு கடற்றிரை போல
அடற்றிரை மோத வெழும்
றானைக்கடலொடு பொலியும் திருமகள்
தாலோ தாலேலோ" (பா. 29)

என்கின்றார். சமூக விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையில் குமரகுருபரர் தாலப் பருவத்தைப் பாடியுள்ளார். குழந்தை சமூகத்துடன் இணைந்து செல்கின்றபோதுதான் அதன் மனவளர்ச்சி பாதிக்கப்படாமல் சமூகச் சூழலுக்கு ஏற்ப வாழ முடியும் என்பதை உணர்த்தும் பாடல்களாகத் தாலப்பருவப் பாடல்கள் உள்ளன. குழந்தையிடம் சமூக விழிப்புணர்வு ஏற்படுவதற்கு உறவுகள், விளையாட்டு, நண்பர்களிடம் கொள்ளும் நட்பு, தொழிலில் ஈடுபடும் மக்களிடம் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு ஆகியன துணை செய்யும் என்பது குமரகுருபரர் கருத்தாகும். இவ்வுறவுகள் நாட்டைக் காக்கும் நற்பண்பை ஏற்படுத்தும் என்பதைக் காட்டவே குமரகுருபரர் குழந்தையின் வீரத்தையும் பேசுகின்றார்.

ரேங்க் (Rank) எனும் உளவியலார் குழந்தையின் ஆளுமை வளர்ச்சிக்கு இரண்டு வகையான காரணங்களைக் கூறுகின்றார்.

1. வெளிப்புறத்தாக்கம்
2. உள்முக நிலை

வெளிப்புறத்தாக்கம் பெற்றோர்கள், சமூகம், ஒழுக்கம் ஆகியன வற்றைக் கொண்டுள்ளது. உள்முகநிலை இயற்கையான பசி

தாகம், ஓய்வு, பாலுணர்வு தொடர்புடையது. எப்போது குழந்தையின் வெளிப்புறத்தாக்கம் சிறப்பாக அமைகின்றதோ அப்போது அதன் ஆளுமை உயர்ந்த நிலையில் அமையும். அப்போது சமூகத்தின் மதிப்பினைப் பெறுவர். மனப்போராட்டம் தவிர்க்கப்படும். இவ்வுண்மைகளை உணர்ந்த இலக்கியலார் பிள்ளைத்தமிழில் முத்தப் பருவத்தைப் பேசுகின்றனர். குழந்தையை, முத்தம் தருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டிக் கொள்வது பதினொன்றாம் திங்களில் நிகழ்வதாகும். குழந்தை, பெற்றோர்களிடையே உள்ள அன்பையும், பாசத்தையும் வெளிப்படுத்தும் பருவமாகும். இப்பருவம் குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சிக்குத் துணையாக இருப்பதால் குமரகுருபரர்,

> "முத்தம் உகந்த நின் கனிவாய்
> முத்தம் தருக முத்தமே
> முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
> முலையாய் முத்தம் தருகவே" (பா. 46)

என்கிறார்.

**அடையாளம் காட்டல்**

வருகைப் பருவம் என்பது சிறுநடை எய்தும் பருவம். இது பதிமூன்றாம் திங்களில் நடைபெறும். குழந்தை நடக்கக் கற்கும்போது அதை ஊக்கப்படுத்த வேண்டும்.

> "விருந்தே வருக மும்முதற்கும்
> வித்தே வருக வித்தின்றி
> விளைக்கும் பரமானந்தத்தின்
> விளைவே வருக பழமறையின்
> குருந்தே வருக அருள் பழுத்த
> கொம்பே வருக" (பா. 62)

என்று குமரகுருபரர் குழந்தையைப் பாராட்டி அழைத்து அதற்கு நடக்க கற்பிக்கின்றார். குழந்தை யார் என்பதை இங்குக் குமரகுருபரர் அடையாளம் காட்டுகின்றார். கடவுள் பழம் பாடல், தமிழின் ஒழுகுநறுஞ்சாறு, விளக்கு, பொருப்பில் விளையாடும் இளமென்பிடி, உயிர் ஓவியம் என்றெல்லாம் குழந்தையை அடையாளம் காட்டி அழைக்கின்றார். இது ஒரு தற்பாதுகாப்பு முறையாகும். குழந்தையைப் பிற நல்ல எடுத்துக்காட்டுடன் ஒப்பிட்டுப் புகழும்போது, அதன் ஆளுமை

வளர்ச்சி சிறக்கும். தான் எனும் ஆளுமை வளரும். பெற்றோர்கள் கூறும் கருத்துக்களையும் மதிப்புகளையும் கொண்டு சிறந்த சமூகவாதியாக மாற முடியும் என்பதை உணர்த்துகிறது குமரகுருபரரின் வருகைப் பருவம்.

**வண்ணம்**

அம்புலிப் பருவம் என்பது, வானத்திலுள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுவதற்குச் செவிலித்தாயர் அழைப்பது பதினைந்து அல்லது பதினெட்டாம் திங்களில் நடைபெறும்.

குழந்தைகள் 2 வயது முதல் 4 வயதில் நான்கு வண்ணங் களைப் புரிந்து கொள்ளும். 15-17 நாட்களிலேயே குழந்தைகள் வண்ணங்களைப் புரிந்து கொண்டு ஏதோ ஒரு இயக்கத்தை வெளிப்படுத்தும். உளவியலார் சிவப்பு, பச்சை, ஊதா வண்ண ஒளி விளக்குகளைக் காட்டியபோது ஊதா நிறத்தைப் பார்த்தவுடன் அழுகையை நிறுத்தியதை ஆய்வு மூலம் கண்டுள்ளனர். மற்றும் வண்ணங்களை அறியும் திறம் ஆண் குழந்தைகளை விடப் பெண் குழந்தைகளிடம் அதிகமுண்டு என்றும் ஆய்ந்து வெளியிட்டுள்ளனர். குழந்தைகள் ஊதா நிறத்தை விரும்புவதால் வானத்தையும் அதிலுள்ள நிலவையும் காட்டி விளையாட அழைத்துள்ளனர் என்பது தெரிகின்றது. குமரகுருபரர் அம்புலிப் பருவத்தில் நிலவினை வருணித்து அழைக்கின்றார்.

**விளையாட்டு**

விளையாட்டு நுண்ணறிவுச் செயலாகவும், பண்பாட்டை வெளிப்படுத்துவதாகவும், சமூக விருப்பச் செயலாகவும் உடலாற்றலை வெளிப்படுத்தும் செயலாகவும் இருக்கின்றது. விளையாடுவதற்கு மிகுதி ஆற்றலும் ஒரு காரணம். வில்லியம் மெக்டுகல் (William Medougall) என்பவர் விளையாட்டில் ஊக்கக் கோட்பாட்டைக் கூறுகின்றார். குழந்தைகளின் விளையாட்டுக்கள் தன்னியல்பான விளையாட்டுக்களாகவே உள்ளன. உளவியலார் ஷெர்லி குழந்தைகளின் விளையாட்டை முதல்நிலைத் திறமைகள், இரண்டாம் நிலைத் திறமைகள், மூன்றாம் நிலைத் திறமைகள், நான்காம் நிலைத் திறமைகள் எனப் பிரிக்கின்றார். பாசாங்கு விளையாட்டும் உண்டு. சிறு வீடுகட்டி விளையாடுதலை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். அம்மானைப் பருவம், ஊசற்

பருவம், சிறுதேர் உருட்டல், சிறுபறை முழக்கி விளையாடுதல் போன்ற பல்வகையான குழந்தை விளையாட்டுக்களைச் சிற்றிலக் கியங்கள் கூறுகின்றன. பெண் குழந்தைகளுக்குரிய விளை யாட்டுக்கள் அம்மானை, ஊசல் ஆகியன. ஆண் குழந்தைகளுக் குரியனவாகச் சிறுதேர் உருட்டல், சிறுபறை முழக்கல் கருதப் படுகின்றன. ஆண் குழந்தை விளையாட்டுக்கள் வீரத்தின் அடிப் படையில் அமைந்துள்ளன. பெண் குழந்தைகள் விளையாட்டு மென்மைக்குரியனவாக உள்ளன.

குமரகுருபரரின் அம்மானை காயினை உருவகம் செய்தல், ஆடும்திறம், தோழியருடன் ஆடும் முறை, தோழியருள் தலைவி சிறந்து ஆடுதல் போன்ற கருத்துக்களை விளக்குகின்றது.

இவ்விளையாட்டுக்களினால் குழந்தைகளிடம் கூட்டுறவு, கட்டுப்பாடு, உடல் உறுப்புக்களின் அமைப்பியல் செயல்முறை, உடற்கூறு அமைப்பு ஆகியனவற்றில் மாற்றம் ஏற்படும். வேகம், வலிமை, ஒருமைப்பாடு, தனிமனித முக்கியத்துவம் வளரும். மற்றும் பிறர் விளையாட்டைப் பார்க்க வாய்ப்பு ஏற்படும், சுதந்திரமாக வாழ வாய்ப்பும் ஏற்படுத்தும். விளையாட்டுத் திறமை வலிமையின் அடிப்படையிலேயே அமைகின்றது. அந்த வலிமை தலைமைக்குரிய குழந்தையிடமே காணப்படும் என்பது குமரகுருபரர் கருத்து.

**நீராடல்**

பிள்ளையை நோக்கி மகளிர் ஆற்று வெள்ளத்தில் நீராடக் கூறுதல் நீராடற் பருவமாகும். குமரகுருபரர் நீராடற்பருவத்தில் அமைந்த பாடலில் துறையில் நீராடு என்று கூறுகின்றார். ஆடும் முறையைக் கூறுகின்றார். துறையின் பெருமையைக் கூறுகின்றார். தோழியருடன் ஆடுதலை வருணிக்கின்றார்.

> “துளிக்கும் பனித்திவலை சிதறக் குடைந்தாடு”,
>
> “பொருநைத் துறைவன் பொற்பாவாய்
> புதுநீராடி அருளுகவே”

என்றெல்லாம் பாடுகின்றார். நீராடும் பருவம் புறச்சூழலுக்குக் குழந்தையைப் பழக்கும் பருவமாகும். உடலின் வெப்பநிலையைச் சரிப்படுத்த நீராடுதல் முறையைத் தொன்மைக் காலத்தில் பின்பற்றியுள்ளனர்.

**முடிவுகள்**

பேச்சாற்றல் வந்தவுடன் குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடி மதுரை மீனாட்சியின் பேரருளைப் பெற்றவர். பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கியத்தினை ஆராய்கின்ற போது காரணகாரிய தொடர்புடைய பல கருத்துக்கள் பொதிந்து கிடப்பது கண்டுபிடிக்கப்பட்டது. குழந்தை உளவியலைக் காணும் படியான வருணனைகளையும், கற்பனைகளையும், அழகியலையும் குமரகுருபரர் விட்டுச் சென்றுள்ளார். ஒவ்வொரு பருவச் செய்திகளிலும், தோலையும் கொட்டையையும் நீக்கினால் பலாச்சுளை எப்படி வெளிப்படுமோ அப்படி உளவியல் கருத்துக்கள் வெளிப்படுகின்றன. படைப் பாளன் உள்ளத்தில் அவனையும் அறியாமல் கிடக்கும் அறிவியல் சிந்தனைகள் அவன் படைக்கும் இலக்கியத்தில் வெளிப்படும் என்பது மறுக்க முடியாத உண்மை. இன்று அறிவியல் வளர்ச்சி பெற்று விளங்கினாலும் அதற்குரிய வித்துக்களைத் தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன; இதற்கு குமரகுருபரர் விதி விலக்கல்ல.

# மதுரைக் கலம்பகம்-ஒரு சமூகவியல் பார்வை

இரா. காசிராசன், மதுரை

தமிழ் இலக்கியப் படைப்பில் அறிவு பூர்வமான சிந்தனைத் தளம் - உணர்வு பூர்வமான நம்பிக்கைத் தளம் (Intelectual system and belief system) - இந்த இருமை எதிர்வுகள் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொண்டன; அல்லது கலந்தன; ஒன்று முன்னிருத்தப்பட்டபோது மற்றது பின்னுக்குத் தள்ளப் பட்டது; இரண்டும் சமநிலை பெற்றதில்லை. இந்த நிலை சங்ககாலம் தொடங்கி 18-ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்தது எனலாம். நவீன கால இலக்கியம், நம்பிக்கைத் தளத்தை மூடநம்பிக்கை எனப் பின்னுக்குத் தள்ள முயன்றாலும், சமூகத்தில் - அது வலுவான இடத்தைப் பெற்றுள்ளதை யாராலும் அசைக்க முடியவில்லை. இதற்கான வலுவான அடித்தளம் 6-ஆம் நூற்றாண்டு முதலாகத் தொடங்கிய பக்தி இயக்கம், அதன் வெளிப்பாடான பன்னிரு திருமுறைகள், நாலாயிர திவ்யபிரபந்தம், புராண - இதிகாச காவியங்கள், தல புராணங்கள், பிரபந்த இலக்கியங்கள் முதலான அமைந்தன. ஆழ்வார்கள் - நாயன்மார்கள் வாட்டிய சமயச் சிந்தனைகளின் வெளிப்பாடாகத் தமிழகத்தில் கட்டிக் குவிக்கப்பட்ட எண்ணற்ற கோவில்களும், வழிபாடுகளும் ஆகமங்களும் இதனை வலுப்படுத் தின. காப்பிய வீழ்ச்சிப் பின்னணியில் கி. பி. 9 முதல் 17-ஆம் நூற்றாண்டு வரை ஏராளமான புராண காவியங்கள் காப்பிய அமைப்பில் பாடப் பெற்றன. என்றாலும், பெரிய புராணம், திருவிளையாடல் புராணம் நீங்கலாகப் பிற புராண காவியங் களின் இலக்கிய வறட்சி காரணமாக, காப்பியக் கூறுகளான உலா, தூது, பரணி, பிள்ளைத்தமிழ் முதலான பற்றிய பிரபந்த இலக்கியங்கள் முனைப்போடு அற்புத நவிற்சி இயக்கப் பின்னணியில் எழலாயின. இவற்றில் அதீத கற்பனை, அதியற் புதமான கவித்துவ மேன்மை, உணர்ச்சி பூர்வமான பாலியல் தொடர்பான அதீத காதல்-இவை போற்றப்பட்டன. இத்தகைய பிரபந்த வகையில் ஒன்றே கலம்பகம்.

கலம்பக இலக்கியத்தின் தொடக்க காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டு என்பர். அது முதல் 17, 18-ஆம் நூற்றாண்டு வரை இப்படைப்பு பல கவிஞர்களை ஈர்த்துள்ளது. கலம்பகம் என்ற இலக்கிய வகையே ஒருவகை 'மரபு மாற்றம்' என்பதை நமக்குச் சுட்டுகிறது. கவிதை யாப்பு, பா வகை, ஓசைமாற்றம், உலா, தூது, அகம், புறம், கைக்கிளை என்ற இலக்கிய வகைமை எனப் பல்வேறு கலப்பு நிலை இதன் கட்டமைப்பில் காணப்படுகிறது. பேரிலக்கியமோ அல்லது சிற்றிலக்கியமோ ஏதாவது ஒரு யாப்பமைதியைப் பின்பற்றுவதே இலக்கிய மரபாக உள்ளது. சிலபோது பொருளுக்கு ஏற்ப யாப்பமைப்பு மாறுபட்டாலும் பெருத்த மாற்றம் என்பது அவற்றில் குறைவே. ஆயின் கலம்பகத்தில் எந்த யாப்பும், எந்தப் பா அமைப்பும், எந்த இலக்கிய வகையும் முதன்மை பெறுவதில்லை. இன்றைய மொழியில் சொல்வதானால், இதன் அமைப்பு ஒருவகைக் 'கட்டுடைப்பு' (deconstruction) எனலாம். என்றாலும் இந்த மரபு ஒருவகையில் மரபு மாற்றமானாலும், அதற்குப் பின்னமைப்பியலின் யதார்த்தமோ, தருக்க-தத்துவ சிந்தனையோ கிடையாது. இது அப்பட்டமான ஒரு பண்டித மரபாக உருப் பெருகின்றது என்பதே உண்மை. எல்லா வகையான பா அமைப்பிலும் தனக்குப் பாடத் தெரியும் என்பதை உறுதிப் படுத்துகிற போக்கில் இக்கவிஞர்கள் தம் படைப்பை ஆக்கித் தருவதே இதற்குக் காரணம் எனலாம். அதோடு 17, 18ஆம் நூற்றாண்டுகளிலும், அதற்கு முந்திய சில கால கட்டங் களிலும் அற்புத நவிற்சி இயக்கம் உலக இலக்கியங்களில் செங்கோல் ஓச்சியது போல, கலம்பக இலக்கியங்களில் இத்தகைய போக்கு பின்பற்றப் படுவதைக் காணலாம்.

இவ்வகையில், குமரகுருபர சுவாமிகளின் 'மதுரைக் கலம்பகம்' அற்புத நவிற்சி இயக்கப் பின்னணியில் எழுந்தது என்பதை உணரலாம். மடக்கணியாக அமைந்த, அவரது அதியற்புதமான கவிதை யாப்பு இவ்வற்புத நவிற்சிக்கு ஒரு முத்தாய்ப்பு.

தொடுத்த ணிந்தது மம்புத ரங்கமே
சுமந்தி ருந்தது மம்புத ரங்கமே
எடுத்து நின்றது மாயவ ராகமே
எயிரி றுத்தது மாயவ ராகமே

அடுப்ப தந்தணர் பன்னக ராசியோ
அணிவ துஞ்சில பன்னக ராசியே
கொடுப்ப தையர் கடம்பவ னத்தையே
கொள்வ தையர் கடம்பவ னத்தையே

இங்கு வரும் மடக்கு அணி, அம்புதர் அங்கம், அம்பு தரங்கம்; மாயவர் ஆகம், மாய வராகம்; பன்னகர் ஆசி, பன்னக ராசி; ஐயர் கடம்ப வனம், ஐயர்தம் பவனம் – என சொற்சிலேடை யாக அமைந்து கவித்துவம் பெறுகின்றது. இதே போன்று,

''மட்டறுக டற்புவிய னைத்துமொரி மைப்பினின்ம
றைத்துடன்வி டுத்தி டுவன்மற்
றெட்டுவரை யைக்கடலை முட்டியுற டக்கிடுவன்
இத்தனையும் வித்தையலவால்
துட்டமத னைப்பொடிப டுத்திமது ரைக்குளுறை
சொக்கர் குண மெட்டி னொடுமா
சிட்டர்கடு தித்திடும கத்துவம னைத்துமொரு
செப்பினுள டக்கி டுவனே''

என்ற பாடலில் சொற்களை உடைத்து கவிதையின் ஓசையினை பொருட் சிறப்பினை விளக்குகிறார். இங்கு 'மட்டறு கடற்புவி அனைத்தும் ஓர் இமைப்பினில் மறைத்து உடன் விடுத்திடுவன்' என்ற தொடரை உடைப்பதால் கவிதை புதிய மகத்துவமும் பொருட் சிறப்பும் பெறுகின்றது. இத்தகைய கவிதை யாப்பு அற்புத நவிற்சிப் பின்புலம் சார்ந்தது.

கலம்பக இலக்கியம் பாடப்பெறும் மரபு பற்றிய சிந்தனையும் இங்குக் குறிப்பிடத் தக்கது. இது தேவர்களுக்கு – 100 – பாடல்; முனிவர்களுக்கு – 95; அரசர்களுக்கு – 90; அமைச்சர்க்கு – 70; வணிகர்க்கு – 50; வேளாளர்க்கு – 30 எனப் பாடப்பெறும் என்ற மரபு, இவ்விலக்கியப் படைப்பு, ஒருவகை மரபு மாற்றமாக – சமூகத்தில் ஏற்பட்டுள்ள சாதீய சிந்தனையை – சமூக ஏற்றத் தாழ்வை அடித்தளமாகக் கொண்டுள்ளதை அறியலாம். இதன் உறுப்பு 18 – என்றாலும் – இந்த எண்ணிக்கை, பாடல் அளவு என்பன, முறையாக எந்தக் கலம்பகத்திலும் பின்பற்றப் படவில்லை என்பதும் குறிப்பிடத் தக்கது. ஆக இந்த இலக்கிய வகையே ஒருவகையில் 'மரபுமீறல்' என்ற சிந்தனைத் தளத்தைக் கொண்டதாகத் தெரிகிறது. இன்றைய 'மாற்று மரபு' அல்லது 'முரண் கோட்பாடு' என்ற நிலையில் பார்க்க முடியாது

என்றாலும் அன்றைய காலத்திய 'மரபு மீறலாக' இதனை ஏற்பதில் தவறில்லை. இப்படித்தான் பாடவேண்டும் என்ற மரபை மீறி, எப்படியும் பாடலாம் என்ற மரபு மீறலே கலம்பகம் எனக் கொள்ளலாம்.

மதுரை மீனாட்சியம்மன் கோவிலுள் உறை சொக்கநாதரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட, குமரகுருபரரின் 'மதுரைக் கலம்பகம் 102 – பாடல்களைக் கொண்டது. கலம்பக உறுப்புகள் 18 – உடன், பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் முதலான துறைகளையும் கொண்டது. ஆகப் பா எண்ணிக்கையிலும், துறை வகையிலும் இப்படைப்பு மரபு மீறலாகவே அமைகின்றது.

குமரகுருபரர் அடிப்படையில் ஓர் ஆன்மீக வாதி. பிறப்பால் சைவர்; சிவத் தொண்டு செய்தவர்; இல்லறம் துறந்த நம்பி; இப்படி அவர் வாழ்க்கை அமைய, அவரது இலக்கியப் படைப் பான இக் கலம்பகத்தில் 90 விழுக்காடு அகத்திணை மரபு சார்ந்த பாடல்களாக அமைவது குறிப்பிடத்தக்கது. இறை இன்ப அனுபூதியை, உலகாயதம் சார்ந்த இல்லற இன்பத்தோடு – அகன் ஐந்திணை மரபோடு இணைப்பது ஒருவகையில் இணை எதிர்வாக (Bineries) அமைகின்றது. மாணிக்க வாசகர் முதலானோர் தோற்றுவித்த நாயகி – நாயகன் பாவனை இங்கு அடிநாதமாகிறது; என்றாலும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தம்மை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் கொண்டு இறைவனை அடைய எண்ணும் இச்சிந்தனை மரபு சற்றே விலகி, உலா இலக்கியத் தலைவியின் காதலாக இங்கு நாயகி – நாயகன் பாவனை சித்திரிக்கப் படுகிறது.

தலைவி, தோழி, நற்றாய், செவிலி கூற்றுக்களாக பல பாடல்கள் அமைகின்றன. லவ்கீக இன்பத்தையும் ஆன்மீகத்தையும் இணைக்கிறார் சுவாமிகள். அவர், இல்லற இன்பத்தை வெறுத்துத் துறவியாக உலக வாழ்க்கையில் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ள, அவரது கவிதை மரபு முழுக்க முழுக்கத் தலைவனைப் பிரிந்த தலைவியின் பிரிவுத்துயரை – காதலை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. ஆக, இறை அனுபூதி எப்படிப்பட்டது; இறைத்தேடல் எத்தன்மைத்து என்ற கேள்விக்கு, அது காதலி காதலன்பால் கொண்டுள்ள அளவிலா காதலுக்கு – அன்புக்கு இணையானது என்று உணர்த்துகின்ற

ஒரு இருமை இயல்பை இங்குக் காட்டுகிறார் குமரகுருபரர். இது கிட்டத்தட்ட துறவியான திருத்தக்க தேவர் மணநூலாகச் சிந்தாமணியைப் படைத்ததற்கு நிகரானது. இதற்கான அடிப் படை என்ன என்பது சமூகவியல் நோக்கில் விளங்கவில்லை யாகினும் 17, 18-ஆம் நூற்றாண்டு அற்புத நவிற்சி இயக்கச் சிந்தனையோடும், தத்துவச் சிந்தனையோடும் இணைத்துப் பார்க்கிற போது, ஓரளவு இதற்கான காரணம் விளங்கும். உணர்வு பூர்வமான – பாலியல் தொடர்பான அதீத காதல் அற்புத நவிற்சிக் கவிதையின் பாடுபொருளாக அமைவது இங்குக் குறிப்பிடத் தக்கது. இந்தப் பின்னணியில், சங்க அகத்திணை மரபையும் இணைத்து, தம் கலம்பகப் படைப்பை வெளியிட்டுள்ளார் குமரகுருபரர்.

இங்குத் தலைவி வருத்தங் கண்டு செவிலி கூறுவதாகப் பல பாடல்கள் அமைகின்றன (5, 14, 17, 28, 30 முதலான). இங்குச் சோமசுந்தரர்பால் காதல் கொண்ட தன் மகளின் துன்பம் போக்கி அவரைக் கூடுக என வேண்டுவதாகப் பாடல்கள் அமைகின்றன. அவளுக்கு நின்மலர் மாலை தருக; அவளை மணந்து கொள்க; தேவர்களுக்கும் அவர் மனைவியர்க்கும், அருளிய நீ (நஞ்சு உண்டு) எளிய எம் மகளுக்கு அருளாதது ஏன்? பறவைகளே! என் மகளின் வருத்தத்தை சோமசுந்தரக் கடவுளுக்குக் கூறுக' எனப் பாடல்கள் அமைகின்றன.

தோழி கூற்றில், இறைவன்பால் காதல் கொண்ட தலைவியின் அறியாமை (6), சுடுகாட்டில் ஆடுவான் பின் மனம் சென்றதே எனல் (8), அவள் மனநிலை அறிந்து கூடுக என இறைவனை வேண்டுதல் (18); காமன் 80-கோடி கணைகளால் தலைவியைத் துன்புறுத்துகிறான்; அதிலிருந்து அவளைக் காப்பாற்றுக என வேண்டல் (25); தலைவியைக் கூடாது ஒழியின் அவள் இறந்து படுவாள்; ஆகலின் பெண் கொலை செய்த பாவத்தை அடையாது காக்க எனல் (29). இறைவன் புன்சிரிப்பு அருள் செய்வதன்று; அது இவள் உயிரை ஒழிப்பது என்னை (30) என்றிவ்வாறு பல அகத்திணைக் கூறுகள் இடம்பெறுகின்றன.

தலைவி கூற்றில், தன் காதல் நோய் தீர்க்காத இறைவன் உறையும் மதுரை அறம் சிறிதும் இல்லாதது (9); தன்னைச் சோம சுந்தரர் எப்படியும் கூடுவார் என்ற நம்பிக்கையைத் தோழிக்குக் கூறுதல் (19, 21) உலா வரும் இறைவனைக் கண்டு காமுற்று,

காமன் அம்பு தனக்கு எமனாக அமைந்ததை எடுத்துரைத்தல் (27), தன் நோய் தீர்க்க வல்லான் இறைவனே எனல் (31) சங்க இலக்கிய மரபை மீறி, இறைவன் அருளவில்லையாகின் மடல் ஏறுவேன் எனத் தலைவி கூறுதல் (33) என்பன அமையும்.

ஆக, இறை அனுபவத்தை, இறைக் காதலை – தேடலை உலகியல் காதலுடன் சமப்படுத்துகிறார். இறைவன் வளையல் விற்பது மகளிர் வளையலைக் கொள்ளை கொள்ளவோ (6,7) என்பதும், அம்மானை ஆடும் மகளிர் இறைவன் காமனிடம் தோற்றத்தைச் சிறப்பித்தலும் (13), இறைவன் – இறைவி (உமை) ஊடலும் (22) அற்புத நவிற்சியின் காதல் கருவேயாம். சொக்க நாதர் முன் வாள் எடுத்து ஆடும் 16 – வயது மதங்கியார்பால் காமுகன் காதல் கொண்டதாகப் பாடுவதும் (15), பிச்சியார் என்ற காமக் கூத்தியைக் காமுற்றான், அவளைப் பிச்சை ஏற்றுத் திரிந்த சிவனாகக் காண்பதும் (32) இடைச்சியாரைக் காமுற்றான் கூறுவதும் (62), கைக்கிளை கிள்ளைவிடு தூது, மேகவிடு தூது எனப் பல துறைகள் அமைவதும் இறை அனுபவத்தைக் காதல் அனுபவத்துடன் சமப்படுத்துவதேயாம்.

கட்குடியன், அதனால் பெறும் போதை நிலையை இறை அனுபவத்துடன் சமப்படுத்துவதும் இங்கு நோக்கத்தக்கது (24); பனைமரம் – ஆச்சாரிய மூர்த்தி (படைப்பாளி); பனங்கள் – கலைஞான நூல்; கள் அருந்தும் சுகம் – இறை இன்பம் என்கிறார். இவை அற்புத நவிற்சிக் கவிதை இயலை நினைவு கூர்தலோடு, இக்கால கட்டத்தே செல்வாக்குப் பெற்ற தத்துவ இயக்கமான பயன்பாட்டுவாதமும் (Pragmatism) இத்தகைய படைப்பிற்கு அடித்தளமாக அமைந்தன எனலாம்.

'அதிகபட்ச ஆதாயகரமான பயன்பாட்டு வரவுகளை இந்த உலகுடன் ஏற்படுத்திக் கொள்வது எப்படி என்பதை அறிந்து சொல்வதே பயன்பாட்டு வாதம். மனிதன் சஞ்சலத்தை, கவலையை, கஷ்டத்தை ஏற்படுத்துகிறான். மனிதனால் பிரச்சினைகளை அறிய முடியாது; அவற்றின் காரணத்தையும் அறிய முடியாது; எது அவனது மனச் சஞ்சலத்தை நீக்க அதிகம் பயன்படுகிறதோ அதுவே சிறந்த கருவி; மதமும் சடங்குகளும் வேறு பல நம்பிக்கைகளும் ஒரு மனிதனுக்கு மன நிம்மதியைத் தரும் எனில் அவனைப் பொருத்தமட்டில் அவையே உண்மை யாகும். எது பொது உண்மை? எது புறவய உண்மை என்ற

கேள்விக்கு அர்த்தம் கிடையாது. உண்மை அதன் பயன்பாட்டால் மட்டுமே நிருபணம் பெறுகிறது'* இந்தப் பின்னணியில் மனிதனுக்கு நிம்மதிதருவது இறை நம்பிக்கையே என்ற போக்கில், அற்புத நவிற்சியாகத் தன் படைப்பை ஆக்கித் தருகிறார்; குமரகுருபரர்.

அடுத்துச் சமய நிலையில் இறைவன் திருவிளையாடல்கள் பல இருப்பினும், பிட்டுக்கு மண் சுமந்தது, மீனவனாக வந்து வலை வீசியது, வளையல் விற்றது ஆகிய மூன்று மட்டுமே திரும்பத் திரும்பப் பேசப்படுகின்றன. இவை மூன்றும் பெண்ணோடு தொடர்புடையவை என்பது இங்கு நினைவு கூரத் தக்கது.

இறைவன் சுந்தர பாண்டியனாக வந்தது (1), அரிமர்த்தன பாண்டியனால் பிரம்படி பட்டது (1), அபிடேக பாண்டியன் முன் கல்யானைக்குக் கரும்புத் தளை கொடுத்தது (20), கூன் பாண்டியனுக்கு ஞானசம்பந்தர் திருநீறும் (65), பொற் றாளமும் (11) அளித்தது, மாணிக்கவாசகர் பொருட்டு இறைவன் நரியைப் பரியாக்கியது (71) இராஜசேகரப் பாண்டியனுக்காக இறைவன் கால் மாறி ஆடியது (82) பொன்னை மணி முத்தாற்றில் போட்டு, திருவாரூர்க் கமலாலயப் பொய்கையில் எடுக்க அருளியது (74) முதலான வரலாற்றுப் பழங்கதை நிகழ்வுகள் எடுத்துரைக்கப் படுகின்றன.

இறைவன் காமனை எரித்தது(19), கபாலம் ஏந்திப் பிச்சை ஏற்றது (4), பாற்கடல் கடைந்த காலத்து எழுந்த ஆலகால விடத்தை உண்டு தேவர்களையும் அசுரர்களையும் காத்தது (28, 63, 64) ஆகிய புராண நிகழ்வுகளும் திரும்பத் திரும்ப வருகின்றன.

சைவ – வைணவ இணைப்பும் இங்குக் குறிப்பிடத்தக்கது. திருமாலுக்குரிய மலரும், மலர்ப் பொய்கையும் இருக்கும் இடமாக மதுரைத் தலம் குறிப்பிடப் படுகிறது (3). திருமால் அம்சமான இடபக் கொடியை உடையவர் சோமசுந்தரர்(4). சிவன் தோள் நரசிங்கத்தை அடக்கியது (11). பன்றி அவதாரத்தில் திருமால் பூமியைக் கோட்டால் குத்தித்

* முனைவர் ந. முத்துமோகன் – 'அமைப்பியல் பின் அமைப்பியல்' – பக்; 29 – 30

தூக்கினார்; இறைவன் (சிவன்) பன்றி அவதாரம் எடுத்துப் பன்றிக் குட்டிகளுக்குப் பால் ஊட்டினார் (34). பிச்சைக்கு வரும் கொற்றியார் எனும் வைணவப் பெண் சிவ நாமம் உச்சரித்தால் தேவர் – முனிவர்தம் சிறப்புப் பெறலாம் என்கிறார் (35). வெண்ணிற நாமம் இட்ட அளவில் இதனைப் பெறலாம். திருமால் கையில் உள்ள சக்கரம் அருளியவர் சிவபிரான் (72). திருமால் நடுங்க அவர் மகன் காமனை எரித்தவர் சிவன் (93). திருமால், திருமகள் – நிலமகள் என இருதாரத்தான்; அப்படிப் பட்டவன் சிவனுக்குக் காதலியாக நின்றான்; சிவன் ஆண்பாதி – பெண்பாதியாக நின்றது இதனாலன்றோ? (95). இறைவன் திரிபுரம் எரிக்கத் திருமாலையே அம்பாக ஏவி எரித்தான் (98). இங்குச் சைவ – வைணவ இணைப்பு சமப்படுத்தப் பட்டாலும், இலைமறை காயாக சைவம் உயர்த்தப்படுகிறது.

இத்தகைய தலபுராணச் செய்தி, வரலாற்றுப் பழங்கதைப் புனைவுகள், புராண நிகழ்வுகள், திருமால் பற்றிய புராணீயம் ஆகிய அனைத்துமே சமூகத்தில் சமய நம்பிக்கையை உருவாக்கும் நோக்கில் பாடப் பெற்றவை என்பது தெளிவு. ஆக இடையறாது, நம்பிக்கைச் சமூகச் சூழலை உருவாக்குவதில், தமிழ் ஆன்மீக இலக்கியவாதிகள் மேற்கொண்ட முயற்சிகளில் சுவாமிகளும் தம் பங்கினைச் செம்மையாக ஆற்றியுள்ளார்; அவரது பிற படைப்புகளும் இதற்கு ஆதரவாகவே அமைகின்றன.

மதுரை பற்றி ஆசிரியர் நினைக்கிறபோது தமிழோடு தொடர்பு படுத்துகிறார். மும்மைத் தமிழ் மதுரை, மும்மைத் தமிழ்க் கூடல், தெய்வத் தமிழ்க் கூடல், சங்கத் தமிழ்க் கூடல், முத்தமிழ் மதுரை என்கிறார் (23, 36, 48, 70, 72) வடமொழி. தமிழ்மொழி – பிறமொழி வளரும் இடமாகவும் மதுரை அமைகிறது (78). முச்சங்கம் வளர்ந்த மதுரை (80), என்றும், அறமும் வளமும் நிறைந்தது; முக்தி பெற்றவரும் விரும்புவது; அனைத்து வளமும் ஒருசேரப் பெற்றது; நீதிநெறி தவறா ஆட்சி பெற்றது (16, 18, 39) என்றும் மதுரை உயர்த்தப் படுகிறது. இத்தகைய மொழி ஆர்வமும் அற்புத நவிற்சி இயக்கக் காலச் சூழலையே விளக்குகிறது எனலாம்.

# குருபரரின் பிள்ளைத்தமிழ்ச் சிறப்பு

இரா. காஞ்சனா, மதுரை

இலக்கிய வகை வளர்ச்சி நோக்கில் தமிழில் தோன்றியுள்ள பிள்ளைத் தமிழ் நூல்களின் வளர்ச்சிப் படிநிலையில் குமரகுருபரரின் பிள்ளைத்தமிழ் நூல்கள் பெறும் இடம் பற்றிக் கணித்துக் கூறுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

ஒரு இலக்கிய வகையின் தோற்றத்திற்கான மூலக் கூறுகளைக் காலத்தால் அதற்கு முந்திய இலக்கியங்களின் கால்வழியே காண முனைவர். ஏனெனில் முன்னைய இலக்கியங்களில் பின் வந்த இலக்கிய வகைகளுக்கான மூலக் கூறுகள் அமைந்திருக்கும். இவ்வாறான மூலக்கூறுகளை மரபுக் கூறுகளின் அடையாளங்கள் (Genetic Signals) என்பார் அலாஸ்ட்டின் ஃபௌலர் என்பார் (Kinds of literature – Introduction to the theory of Genre & modes P. 106) சில மூலக் கூறுகள் வகைமைகளை வெளிப்படுத்தும் தனித் தன்மையுடையனவாக அமையும். பெரும்பாலும் மூலக்கூறு ஒவ்வொன்றும் ஓர் இனம் (Kind) அல்லது இலக்கியவகை (Genre)க்குரிய தோன்றிய புதிய பிள்ளைத்தமிழ் வகை எனலாம். சுப்பிரமணியக் கடவுள் உறையும் நூறு தலங்கள் கோவைப் படுத்தப்பட்டு பாடப்படுகின்றன.

பின்னாளில் வந்த சில பிள்ளைத்தமிழ் நூல்கள் பெயர் அமைப்பில் வேறுபடுகின்றன. தத்துவராயரின் **பிள்ளைத் திருநாமமும்**, கிருஷ்ணாபுரம் சுவாமி திருவேங்கடமுடையான் **பிள்ளைத் திருநாமமும்**, திருவல்லிக்கேணிப் பெருமாள் **பிள்ளையின்பமும்** பிள்ளைத்தமிழ் பெற்ற பெயர் வேறுபாடுகள். (ச. வே. சுப்பிரமணியன், மு. நூ. ப. 401)

பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய குலோத்துங்கன் பிள்ளைத்தமிழே (ஒட்டக்கூத்தர்) இவ்வகையின் முதல் நூல்.

அடுத்து 15 ஆம் நூற்றாண்டில் ஒரு முருகன் பிள்ளைத்தமிழும் 17 ஆம் நூற்றாண்டில் முருகனுக்கு மூன்றும் அம்மைக்கு மூன்றுமாக ஆறு நூல்களும் தோன்றியுள்ளன. 18 ஆம் நூற்றாண்டில் முருகன், விநாயகர், அனுமார், ஏசுபிரான், இறைவி ஆகியோர் மீது பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப் பட்டுள்ளன. 19 ஆம் நூற்றாண்டில்தான் 47 பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப்பட்டுள்ளன. 19-20 ஆம் நூற்றாண்டுகளில் 52 பிள்ளைத்தமிழ் நூல்கள் தேவர்களைக் குறித்தும் வள்ளுவர், மறைமலையடிகள், ஆதிசங்கரர், வள்ளலார், காந்தியடிகள், பாரதியார், பெரியார், பாரதிதாசன், அண்ணாதுரை, கலைஞர் கருணாநிதி, எம். ஜி. ஆர், காமராஜர், ராஜாஜி போன்ற சமய, சமுதாய, அரசியல் தலைவர்கள் பற்றியும் பல பிள்ளைத்தமிழ் நூல்கள் உருவாகியுள்ளன. இந்த ஆண்டு சி. போஸ் என்பவர் திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ் இயற்றியுள்ளார். இவ்வாறு 160-க்கும் மேற்பட்ட நூல்கள் தோன்றியிருப்பினும் குமரகுருபரரின் பிள்ளைத்தமிழ் நூல்களே குறிப்பிடத் தகுந்த சாதனை படைத்தவை என்பார் தெ. பொ. மீ. (T. P. Meenakshi sundaram. A history of Tamil Literature, P. 146) பிள்ளைத் தமிழின் இலக்கண வரம்பும் மரபு நிலையும் கெடாத வகையில் பாட முன்னின்ற புலவர் மிகச் சிலரே. அவருள்ளும் குமரகுருபரர் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்-(புள்ளிருக்கு வேளூர் வைத்தீசுவரன் கோவில் - முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்), பெண்பாற் பிள்ளைத்தமிழ் (மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ்), ஆகிய இரு வகைகளையும் பாடிய பெற்றியையுடையவர்.

இவருடைய பிள்ளைத்தமிழ் நூல்களுள் மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழின் அரங்கேற்றம் பற்றிக் காணும்பொழுது, இந்நூலில் சிறப்பறிந்த திருமலை நாயக்க மன்னர், மீனாட்சி யம்மன் கோவிலில் இதை அரங்கேற்றம் செய்தார் எனவும், மீனாட்சி அம்மையே குழந்தையுருவில் எழுந்தருளி வந்து கேட்டு இன்புற்றார் என்றும் குறிப்பார். எங்கோ அப்பாலுக் கப்பாலாய் இருக்கும் பாட்டுடைத் தலைவியை அருகில் வருக! வருக! என அழைத்து, வாய் குளிர, மனம் குளிர அழைத்து, "தொடுக்குங் கடவுற் பழம்பாடல் தொடையின் பயனே! தீந்தமிழின் ஒழுகு நறுஞ்சுவையே! தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே! இளமென்பிடியே! உயிரோவியமே! இளவஞ்சிக் கொடியே! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே!

வருக வருகவே!'' (61) எனப் பாடிய பொழுது மீனாட்சியம்மை மனம் குளிர்ந்து, கருணை கூர்ந்து, குழந்தை வடிவாக எழுந்தருளி அருள் புரிந்தார் என்றும் கூறுவர். (முத்தப் பருவத்தை அரங்கேற்றுகையில், மன்னன் திருக்கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலை ஒன்றை எடுத்து இவருக்கு அணிவித்து மறைந்தனள் என்றும்) காந்திமதியம்மைப் பிள்ளைத் தமிழ் அரங்கேற்றத்திலும் இத்தகு காட்சியை அழகிய சொக்கநாத பிள்ளையும் வள்ளல் முத்துசாமியும் கண்டனர்.

''வாராதிருந்தால் இனிநான் உன்
வடிவேல் விழிக்கு மையெழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகமிடேன்
மணியால் இழைத்தயணி புனையேன்'',

பேசேன், முகம் பாரேன், ஊட்டேன், வளங்காட்டேன், முத்தமிடேன், சீராட்டேன் என வஞ்சினம் கூறி வருகென்றழைக்க, காந்திமதிக் குழவி, கவிஞரை நோக்கித் தவழ்ந்தோடி வந்தாற் போன்ற காட்சியைக் கண்டவர் எழுந்து நின்று, கைகூப்பி வணங்கினார். தாமணிந்திருந்த விலை மதிப்பில்லா வைரக் கடுக்கனைக் கழற்றிக் கவிஞருக்குத் தானே அணிவித்துச் சிறப்புச் செய்தார் என்பர்.

குமரகுருபரர் தருமபுரக்குருபீடத்து மாசிலாமணித் தேசிகர் ஆணைப்படிச் சிதம்பரம் சென்று வரப் புறப்பட்டு, வழியில் புள்ளிருக்கு வேளூர் எனும் வைத்தீஸ்வரன் கோயிலில் தங்கியிருந்த காலத்து முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழைப் பாடினர் என்பர். முருகப்பெருமானைத் தமிழோடு இயைபு படுத்திக் கூறுவதுடன் பல சித்தாந்தக் கருத்துக்களையும், பல புராண வரலாறுகளையும் கந்தபுராணச் செய்திகளையும் கூறுவது இந்நூல். குமரகுருபரரிடம் முருகவேளே அர்ச்சகர் வடிவில் வந்து, அருள் பாலித்துத் தன்னைப் பற்றிப் பிள்ளைத்தமிழ் பாடுகவெனக் கேட்டுக்கொண்டார் என்பதால் இந்நூல் சிறப்பு புலப்படும்.

**தலச் சிறப்பு**

குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் மதுரையைத் தமிழோடு இணைத்துத், தமிழ் மதுரை, தண்டமிழ்க் கூடல், சங்கத்தமிழ்கூடல், முச்சங்கம் வளர் கூடல் என்றெல்லாம் சிறப்பிப்பார். மீனாட்சியம்மையை 'மதுரைத் துரைமகள்'

என்பார். மதுரையின் வளத்தைச் செந்நெல் படைப்பை மதுரைப்பதி என்கிறார்.

**தீர்த்தம்**

இத்தலத்தின் தீர்த்தமாகிய வையையும் பொற்றாமரைக் குளமும் புகழ்ப்படுகின்றன. பொற்றாமரைத் தீர்த்தத்தைக் "கனக மன்னுதட நளினி" என்பர். இவ்வூரிலமைந்த கோவிலின் சிறப்பைக் கூறுகையில் சோமசுந்தரக் கடவுள் இந்திரவிமானத்துள் எழுந்தருளியிருப்பதும், அவ்விமானம் எட்டு யானைகளால் தாங்கப் படுவதும் குறிப்பிடப்படுகின்றன. மீனாட்சியம்மை அரசாண்ட சிறப்பையும் (13, 32) திக்கு விஜய சிறப்பையும் பல இடங்களில் கூறுகிறார். தாலப்பருவத்தின் ஒரு பாடலில் (21) முதுசொற்புலவர் தெளிந்த பசுந்தமிழ் நூல் பாழ்போகாமலும், கலியாகிய பகைவன் தமிழ் வழங்கும் தன்மையுடைய பாண்டிய நாட்டை ஆளாமலும், அகிலத்து உயிர்கள் மறந்தும் பிறவியாகிய கடலில் மூழ்காது இருக்கவும், சிதறுண்டு அரசு முனி நல்லறம் குடிவிட்டு மறைந்து போய்விடாதும் பாண்டியருக்குச் சோழர் நிகராகாத தன்மையையும் கொண்டு மதுரைமாநகர் செழிக்கும் படி வளரும் பைங்கொடி" என வருணிக்கிறார். உமையம்மை மதுரையிலே பிறந்தமையால் மதுரை பல வளமும் சிறப்பும் பெற்றது என்றார். எனவே, உமையைத் "தமிழோடு பிறந்து வளர்ந்த கொடி" எனவும், "தெய்வத் தமிழ்க் கூடல் தழையத் தழைத்தவள்" என்றும் பாராட்டுகிறார். சப்பாணிப் பருவப் பாடலொன்று, இந்திரன் ஆணையால் தேவர்கள் அளித்த ஒளிபொருந்திய விமானமும் கடம்பு பொதிகாடும், தடம்பணை விரிந்த தமிழ்நாடும், நெற்றிக்கண்ணுடன் அருள் புரியும் சோம சுந்தரக் கடவுள் நிறைந்து நிற்கும் அறுகால் பீடமும் குறிப்பிடப் படுகின்றன.

வைத்தீஸ்வரன் கோவில் மூர்த்திச் சிறப்பும், தலச்சிறப்பும் புள்ளிருக்கு வேளூரின் சிறப்பைக் குமரகுருபரர் குறிப்பிடும் பொழுது வைத்தீஸ்வரரைப் பற்றித் தீராதவினை "தீர்த்தத் தம்பிரான்" என்றும், முருகனைச் "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள' என்றும், தையல்நாயகியைத் "தீராத வினைதீர்த்த தம்பிரான் திருமேனியில் செம்பாதியுங் கொண்ட

தையல்நாயகி'' என்றும்சிறப்பிக்கின்றார். இராமர், இலக்குவனர், சடாயு, சம்பாதி, சூரியன், வேதங்கள் ஆகியோர் பூசித்த செய்தியைக் குறிப்பிடுவதால் இத்தலச் சிறப்பும் கூறப்படுகிறது.

இத்தலத்தின்கண் அமைந்த சித்தாமிர்தத் தீர்த்தத்தைப் பற்றியும் குமரகுருபரர் குறிப்பிடுகிறார். பையுணோய், ஊழிப் பெரும்பிணி முதலியவற்றையும், சந்திரனுக்குரிய கயரோகம் முதலியவற்றையும் நீக்குவதற்கு ''சித்தாமிர்தத் தடத் தீர்த்தத் துறைக் குறுந்திவலை யொன்றே யமையுமால்'' என்றும்

''பானாறு செந்நெற்பசுங்கதிர் கறித்து மென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணை மருப் பெருமை மடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச் செந்
தேனாறுடன் கடவுள் வானாறெனப் பெருகு
சித்தாமிர்தம்''

எனவும் – சித்தாமிர்தப் பெருந்தீர்த்தத்தைப் பாடுகிறார் குமரகுருபரர்.

**முருகனும் தமிழும்**

முருகனைத் தமிழோடு இயைபுபடுத்திப் பாடுகையில் ''சங்கத் தமிழின் தலைமைப் புதல்வா'' என்றும் ''தோலா முத்தமிழ் நாவா'' என்றும், ''தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ'' என்றும், ''தெளிதமிழின் வடித்திடு நவரசமே'' என்றும் ''தெளிதமிழின் மதவளி'' என்றும் அழைக்கிறார்.

தமிழைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது 'கொத்து முத்தமிழ்', 'கொழி தமிழ்', 'சங்கத் தமிழ்' 'தீஞ்சுவை கனியும் தண்டே னறையும் வடித்தெடுத்த சாரங்கனிந்தூற்றிருந்த பசுந்தமிழ்'', 'தெள்ளுதமிழ்' என்று பலபடப் பாடுகிறார். வேளூரையும் தமிழோடு இணைத்துப் பாடுகிறார்.

**கற்பனையும் வருணனையும்**

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்க் காப்புப் பருவத்தில் திருமகள் வணக்கத்தின் பொழுது, திருமகளின் மெல்லியல்பைப் புதுமையான கற்பனை நயத்துடன் வேண்டுகிறார்.

**காப்புப்பருவம்:** திருமாலின் திருமார்பில் குடியிருக்கும் திருமகளுக்கு அவர் அணிந்துள்ள கௌத்துவ மணி பருக்கைக்

கல்லாக உறுத்துகிறதாம்; பஞ்சூட்டிய சிற்றடிபதைத்து வருந்து கிறாளாம்; அம்மணியின் ஒளிவெயில் அவள் மெல்லுடலை வருத்த, அவள் ஒதுங்க நிழல்தேடி துளசிமாலையின் தொகுதி கண்டு அதன் தண்ணிழலில் தங்குகிறாளாம்.

**தாலப்பருவம்:** தாலப் பருவத்தில் மருதநிலச் சிறுமியர் சிற்றில் கட்டி, சிறுசோறு அட்டி விளையாடும் வருணனை நயம் மிக்கது. மணலை வளைத்து விளையாட்டயரும் மணற்சிற்றில் வீட்டுக் குடிபுகுந்து, சுடர் தூங்கு அழல் மாணிக்கக் கற்களைச் சூட்டடுப்பின் செந்தீயாகக் கொண்டு செழுந்தாட் பவளங்களை அடுப்பிலிடும் விறகாகக் கொண்டு, குடம் போன்ற நத்தைக் கூட்டை பானையாக்கி,அடுப்பிலேற்றி, அரித்தெடுத்த முத்தாகிய அரிசியை அவ்வுலையில் இட்டு சோறு வடித்தெடுத்து வயல் மா மகளிர் குழாம் சிறு சோறாக்கும் காட்சியைச் சித்திரிக் கிறார்.

மருத நிலப் பெண் குழந்தைகள் சிற்றில் அமைத்து விளையாடிய பெருமையைக் கூறியவர், அகில உலகுக்கும் தாயாகிய அகிலாண்டேசுவரியாம் மீனாட்சியம்மை அமைத்த சிற்றிலின் சிறப்பும் கூறுகிறார். அம்மை நெடிய சக்கிரவாள மலையாகிய சுவருக்குப் பொருத்தமாக அடை சுவர்களாக நடுவிலேமேருவாகிய தூணை நட்டு, எட்டுமலைகளை நிறுத்தி, ஆகாயமாகிய வெளியுச்சியை மூடி, சூரியன், சந்திரன் ஆகிய இருவிளக்குகளை அமைத்து, ஊழி வெள்ளத்தால் கழுவப்படும் புவனங்களாகிய பழைய பாண்டங்களை வரிசைப்பட அடுக்கி, புதுக்கூழ் இன்னமுதமும் சமைத்து, அன்னை நீ பன்முறை சிற்றில் இழைத்திட, சிவபெருமான் (தில்லையிலுள்ள பித்தனான) அவற்றை அடிக்கடி அழித்துவிட்டு, அன்னையின் முன்னின்று கூத்தாடுகிறார். ஆனால் அதற்காக வருந்தாது நாள்தோறும் அவற்றை வரிசையாக மீண்டும்அமைத்துப் பெரிய பழைய அண்டத்தை (உலகவீட்டை) மூடும் சிற்றில்லை உருவாக்கி விளையாடுகிறாள் எனக்காட்டுமுகத்தான்இறைவியின் ஆக்கும் சக்தியையும் இறைவனின் அழிக்கும் சக்தியையும் உருவகமாக்குகிறார்.

அம்மானைப் பருவத்தில் அம்மை முத்தால் செய்த அம்மானைப் பந்தை எறிந்து ஆடுவது மணப்பந்தரில் சிவபிரான் மேல் அம்மை அமுதத் திரளை எறிவதுபோல் உள்ளது என்றும்

செங்கையில் எடுத்தபொழுது செந்நிறமாகவும், கண்ணால் காணும்போது கருமை நிறமும் நகைத்தபோது வெண்ணிறமும் பெற்றதாகக் கற்பனை செய்வது மக்கள் உயிர்க்குரிய இயற்கை குணத்தை இராசதம், தாமசம், சாத்துவீகம் என்ற முக்குணங் களும் பற்றுவதை ஒக்கும் என்றும் உருவகிக்கிறார்.

வைகையில் நீராடச் சென்ற காலத்து அம்மையின் தோழி ஒருத்தி, நின் காதலர் முன்னாள் பிட்டுக்கு மண் சுமந்த இடம் இதுதான் என, காதலால் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி நிற்க மற்றொரு தோழி, இவ்வாறு கண்ணீர் வடித்தால் மீண்டும் வையையில் வெள்ளம் பெருகி, நின் காதலர் மீண்டும் மண் சுமக்க நேரிடும் என்கிறாள்.

மற்றொருத்தியோ நீ விரைவில் நீராடினால் உன் மேனிக் குங்குமச் சேறு வண்டலாகி நிறையும்; நின் காதலர் வறிதாய வண்டல் மண்ணையே சுமந்தவர். மணம்நிறை வண்டலைக் கண்டு விரும்பி வருவார்; நின் காதலரைக் காண இது நல் உபாயமாகும் – எனக் கூறிய நகைப்பேற்படுத்தும் காட்சிகளையும் காட்டுகிறார்.

ஊசற் பருவத்தில், அம்மையுடன் ஆடிய திருமகள், அம்மையின் திருவடிகளில் பிறையழுத்திய தழும்பு கண்டு அருகிருந்த வாணியிடம் அசதியாடியக் காட்சியைச் சித்திரிக் கையில், அம்மையின் நாணத்திற்கானக் காரணத்தை உணர வைக்கிறார். ஊடற்காலத்து சிவபிரானின் முடி அம்மையின் அடியிற் படிய, அதனால் முடியில் அணிந்துள்ள பிறைக்கோடு அழுந்தி வடு ஏற்பட்டதைத்தான் திருமகள் குறிப்பிடுகிறாள்.

இவ்வாறான கற்பனையும் உயர்வு நவிற்சியும் முத்துக் குமாரசாமிப் பிள்ளைத்தமிழிலும் ஏராளம் உண்டு.

குழந்தை முருகன் அம்மையின் வயிறு குளிரும்படித் தவழ்ந்தேறிச் சிவபிரானது திருமார்பிற் குரவையாடுகிறார். அவர் திருக்கரத்திலுள்ள உடுக்கையைச் சிறு பறைக்கொட்டு கிறார். கையிலுள்ள அக்கினியில் திருமுடியிலுள்ள கங்கை நீரை ஊற்றி அவிக்கிறார். பிறையை அணியாக உள்ள பாம்பின் வாயில் திணிக்கிறார். திருமுடியிலுள்ள அருகை அவர் கரத்து மானுக்களிக்கிறார். இத்தகு பிள்ளை விளையாட்டுக்கள் ஒரு பாடலில் (401) கூறப்படுகிறது.

மற்றொரு பாடலில் கற்பனையும் புராணக் குறிப்புகளுமாக அமைந்துள்ள பாங்கும் குறிப்பிடத்தக்கது. சிவபிரான் அணிந்துள்ள பிறையையும் அன்னையின் திருமுடியிலுள்ள முத்தாலியன்ற பிறையென்னும் அணியையும் இணைத்து முருகப் பெருமான் விளையாட, அதை முழுமதியென்றுக் கருதி, கேது வந்து படம் விரித்து ஆட, அப்பாம்பைத் தான் சூடும் காந்தளென்று எண்ணி முருகன் அதைப் பற்ற முனைய, அது வெருண்டோடுகிறதாம். சிவபிரான் தலையிலுள்ள பிரமன் தலை இயல்பாகவே நகுதலையாக இருப்பது. ஆனால் ஏமாற்ற மடைந்த முருகன் தன் செயல் கண்டு அது நகைப்பதாகக் கருதி, "எனைக்கண்டா நகைக்கிறாய்? முன்பு குட்டுப்பட்டதை மறந்துவிட்டாயா?" என்று கோபத்துடன் கூறி இதழதுக்கினார் என்பது அப்பாடல் கருத்து.

**தற்குறிப்பேற்றம்**

மீனாட்சியம்மை சந்திர வம்சத்தில் உதித்ததால் சந்திரனுக்கு ஏற்பட்ட பெருமையை எண்ணி ஞாயிறு முழு வெப்பத்தில் மூழ்கினான் என ஞாயிற்றின் வெப்பத்திற்குக் காரணம் சுட்டுவது குமரகுருபரரின் தற்குறிப்பே (13).

சப்பாணிப் பருவத்தில் அம்மையின் திருக்கரங்கள் சிவந்தமைக்கான காரணத்தையும் இவ்வாறே அமைக்கிறார். மணம் பொருந்திய மலர்களையும் தளிர்களையும் கொய்தமை யாலும், விளையாட்டு ஆயமொடு செப்புகளில் புழுதியையிட்டு மண் சோறு ஆக்கி விளையாடியதாலும், அழகிய மயிற்குஞ்சுக் களையும், அன்னங்களையும், புறாக்களையும் தன் கைகளில் வைத்து வளர்த்ததாலும், காந்தள் மலர்கள் செந்தாமரைப் பூவருகே மலர்ந்திருந்த செங்கழுநீர் மலர்களைச் சேர்ந்தது போலப் பெண்கள் கண்களைப் பொத்தி விளையாடியதாலும், கழங்காடியதாலும் இயல்பாகவே செந்தாமரை மலர் போன்று சிவந்த கைகளைக் கொட்டி சப்பாணியாடியருள வேண்டுகிறார்.

புள்ளிருக்குவேளூரின் தெய்வ மணங்கமழும் செந்நெற்கழனி பற்றிக் கூறும் பொழுதும் கற்பனைச் சிறக்கிறது. நுண்ணிடை மகளிர் யாழினுமினிய குரலில் குரவைப் பாட்டுப்பாட, அதற்கு அஞ்சிய வாளைகள் முகிற்கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு, விண்ணை முட்டப் பாய, தேவருலகத்து ஈன்றணிமை கொண்ட ஆவின் மடியை முட்ட, அப்பசு தன் கன்று முட்டுவதாகக்

கருதிப் பாலைச் சுரக்கிறதாம். அத்தீம்பால் கற்பக மலரின் தேனருவியொடுங் கலந்து தண்புனல் நன்னாட்டு ஏரிகளிலும் வாவிகளிலும் நிறைவதால் அவ்வூரில் தெய்வ மணங் கமழ்கிறதாம்.

**அம்புலிப் பருவச் சிறப்பு**

'காசினியிற் பிள்ளைக் கவிக் கம்புலி புலியாம்' என்ற பெருமை வாய்ந்த அம்புலிப் பருவத்தைக் குமரகுருபரர் சிறப்பாகப் பாடியுள்ளார். சந்திரனைச் சாம, பேத, தான, தண்ட நெறிகளில் அழைப்பது மரபு. மதியைக் குழந்தையுடன் விளையாட வருகவென்று கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்திக் கூறல், ஒறுத்தல் ஆகிய வழிகளில் அழைக்கும் போதும், பாட்டுடைத் தலைவனுக்கும், தலைவிக்கும் ஒப்புமை காட்டி அழைக்கும் பொழுதும், சொல்லாட்சித் திறனும், சிலேடை, உவமை, உருவகம் போன்ற அணி நலன்களும், கற்பனையாற்றலும் அமையக் குமரகுருபரர் பாடியுள்ளார்.

முருகப்பெருமானுக்கும் மதிக்கும் உள்ள ஒற்றுமைகளை யெல்லாம் எடுத்தியம்பி திங்கள் உள்ளத்தில் தன்னைப் பற்றிய ஓர் உயர்வான எண்ணத்தை ஏற்படுத்தி, அவ்வெண்ண மிகுதியால் அவனுடன் விளையாட மதியை ஓடி வரச்செய்ய முனைகிறார். 'மதியமே நீ அமுத மயமாக இருக்கிறாய். முருகனும் இன்ப வடிவினன். நீ மதிக் கடவுள், அவனும் பேரறிவு உடையவன். நீ கடலிடைத் தோன்றுகிறாய், அவனும் ஆனந்த மாக்கடலாம் சிவபெருமானிடத்தே தோன்றியவன். நீ குமுதம் மலரத், தாமரைக் குவியத் தோன்றுகிறாய். அவனும் வள்ளியின் இதழ்க்குமுதம் மலர, அவனது தாமரை புரையும் காமர் நலமுடைக் கையைக் குவித்து வணங்குகிறான். நீ பயிர்கள் தழைக்க நிலவு பொழிகிறாய், அவனும் உயிர்ப் பயிர்கள் தழைக்க திருவருள் சுரக்கிறான். நீ இறைவனின் கண்ணாக விளங்குகிறாய், இவனும் அப்பெருமானது கண்ணி லிருந்து தோன்றியவன் இவனுக்கும் உனக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன, எனவே நீ இவனோடு விளையாடல் தகும்' – என அழைக்கின்றார். வேறுபாடு சுட்டும்பொழுது, 'நீ பல விதங்களில் இவனோடு ஒவ்வாய். ஆயினும் நின்னைப் பொருட்படுத்தி அழைத்தும் வாராதிருத்தல் உனக்கு அழகன்று எனவும், புத்தேள் புவனமும், பொன்னுலகும், மண்ணுலகும் மற்றெவ்

வுலகும் நீ வேண்டின் தர வல்லோன்; அனைத்திற்கும் மேலாக அழியாத வீடும் தரவல்லவன். ஆகவே நீ முருகனுடன் ஆடவா'– என முருகனின் கொடைப் பெருமையைச் சொல்லி ஆட அழைக்கிறார். இதைச் சங்கத் தாயர் தம் குழந்தையுடன் விளையாட மதியை அழைத்து, நீ வருகுவையாயின் தருகுவன் பால் – என அழைத்ததன் வளர்ச்சியாகவே கொள்ளலாம்.

இறுதியில் வாராதிருந்தால் உளதாகும் அழிவையும் எடுத்துரைத்து, அச்சமூட்டி அழைக்கும்போது, முருகனின் புகழையும் வீரச் சிறப்பையும், சூரனை வென்ற திறத்தையும் முடிவிலாற்றல் உடைமையையும் எடுத்துரைக்கிறார். பருவந் தோறும் முருகப்பெருமானின் இளமைக் குறும்பு நிறைந்த விளையாடல்களையும், வள்ளியின் மணத்தையும், அடியவரை அஞ்சேல் என்று அளிக்கும் பண்பையும் கூறுகிறார்.

முருகப்பெருமான் பரசிவத்தினின்றும் வேறல்ல என்ற கொள்கையை உடையவர் குமரகுருபரர். கந்தர் கலிவெண்பாவில் பரசிவத்துக்குரிய இயல்புகள் அனைத்தையும் முருகனுக்கு அமைத்துப் பாடியவர், இங்கும் 'மறைமுடிவில் நின்று நிறை செல்வன்' – எனவும் 'தனிமுத்திக்கொரு வித்தே' – எனவும், 'தினகபுரித் தேவ தேவன்' – எனவும், 'ஆதிப்பிரானென்றும்', முழுமுதற் கடவுளும் அடித்தொழும் பாற்ற' – எனவும் 'முத்தேவாம் இறைவனே', முறைமுறை பணியவிருக்கும் முதற்றேவே - எனவும், 'முழுமுதலே' எனவும், 'தனி முதலே' எனவும் முருகனின் முழுமுதல் தன்மையைச் சுட்டுகிறார். சங்கரனே சண்முகன் என்பதையும் அன்னையும் அத்தனும் இவ்வுலகங்களையும் அண்ட கோள அமைப்புகளையும் விளையாட்டாகப் படைத்தும் காத்தும் கரந்தும் செயலாற்று வதையும் ஒரு பாடல் சுட்டுகிறது. (முத். பிள். 78)

மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழிலும் அம்புலிப் பருவத்துப் பாடல்களில் சிலேடையும் அணிகள் பலவும் அமைத்துப் பாடியுள்ளார். திருமாலின் தங்கை என்பது, இறைவன் ஆடும்போது அம்மை தாளங் கொட்டுவது, சதாசிவ மூர்த்தியின் மடியில் அம்மை வீற்றிருத்தல் (37) போன்ற பல செயல்களையும் தோற்றங்களையும் மேன்மை தோன்றப் பாடியுள்ளார்.

**தத்துவக் கருத்துக்கள்**

மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில், வருகைப் பருவத்தில் உள்ள, தொடுக்கும் கடவுள் பழம் பாடல் - எனும் பாட்டில் *அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர்* எனும் அடியில் மூலமலமாகிய நான், எனது எனும் அகந்தை மக்களின் உள்ளமாகிய பள்ளத்தில் வேரூன்றிக் கிழங்கு போல் பருத்து இடங்கொண்டிருப்பதால் அதனைக் கிழங்கு எனவும், அக்கிழங்கினை வேருடன் பறித்தெடுத்தவரே தொண்டராவார் எனவும், அவர் உள்ளமே தெய்வத்திற்குத் திருக்கோயில் ஆகும் என்றும் ஆழ்ந்த தத்துவக் கருத்தை எளிமையாகக் கூறிவிடுகிறார்.

மற்றொரு பாடலில் காலத்தையும் கற்பனையையும் கடந்து நிற்கும் கருவூலத்துப் பழம்பாடல்களின் உண்மைப் பொருளாகக் கலைமா முனிவர்கள் கருதும் தெய்வ மணி எனவும் உயிராகிய பாத்தியில் அறிவாகிய நீரைப்பாய்ச்சிவிட்டு வளர்க்கின்றவர்கட்கு ஒளியாகிய மலரைத் தோற்றுவித்து அருளாகிய பழத்தை வழங்கும் கற்பகம் எனவும் மீனாட்சி அம்மையை உருவகிக்கும் குமரகுருபரர், மற்றொரு பாடலில் (செங். ப. 16.) அங்கண் நெடு ஞாலத்து, வித்தின்றி வித்திய அனைத்துயிர்களும் தளிர்ப்ப, அருள் மடை திறந்து கடை வெள்ளம் பெருக்கெடுத்து அலையெறிந்து உகளவும், செங்கயல் கிடக்கும் கருங்கட் பசுந்தோகை - என விளிக்கையில் அம்மையின் திருநோக்கு ஐயனின் உள்ளமாகியக் கடலை இன்பப் பெருவெள்ளம் நிரப்ப அதனால் உயிர்களும் தளிர்க்கின்றன என்பது விளக்கப்படுகிறது.

> ''யாதொரு தெய்வங் கண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
> மாதொரு பாகனார் தாம் வருவார்''*

என்பது சிவஞான சித்தியார். இக்கருத்தையே குமரகுருபரர், ''வீட்டின் பயன் துய்க்கும் உள்ளக் கருத்தால் பிறிதொன்றை, உண்மைப் பொருளென்று உள்ளவுந் தம், உணர்விற் றெய்வம் கடைக் கூட்ட உறுதி கிடைத்தபடி போலும்'' என்ற அடிகளில் சுட்டுகிறார்.(முத். பிள்.)

இறைவன் உருவாய், அருவாய், அருவுருவாய்த் திருமேனி கொண்டவன். உயிர்களின் கருமேனியைக் கழிப்பதற்கே இறைவன் இவ்வாறு முத்திருமேனிகளைக் கொள்கிறான். இதனால் இறைவனின் பேரருட் தன்மை விளங்கும். ''செப்பிய மூன்றும் நந்தம் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே'' என்பார் அருள்நந்திச் சிவாச்சாரியார்.

இதனையே குமரகுருபரரும், ''அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவனோடு அம்புலி ஆடவாவே'' – என்கிறார். ''பரநாதத் தொலியென அநுபூதி பலித்தவர் நெக்குருக ... ... முழக்குக சிறுபறையே'' – எனும் பாடலடியில் பற்றற்ற யோகியர்கள் இறைவனது திருவடியைச் சிந்தித்து இருக்குங்கால் அவனது திருச்சிலம்போசையைக் கேட்பர் என்ற கருத்தை விளக்குகிறார்.

அம்மையையும் முருகனையும் போற்றும் இடங்களில் எல்லாம் இறைவனின் திருவிளையாடல்களை இறைவியின் மேல் ஏற்றியும், முருகனின் மேல் ஏற்றியும் கூறுவதுடன், தனித்தனியே அம்மையின் அருட்செயல்களையும், முடிவிலாற்றலையும் கூறவும் முருகனின் மேன்மையைக் கூறவும் புராணக் கதைக் கூறுகளை எடுத்தாள்கிறார்.

பிள்ளைத்தமிழ் எனும் இலக்கிய வகையின் மூலக்கூறுகள் தொல்காப்பியத்தில் வித்து நிலையில் இருந்து, சங்க இலக்கியங் களில் சான்றுப் பாடல்களைப் பெற்று, பக்தி இலக்கியங்களில், அதிலும் குறிப்பாக ஆழ்வார்கள் பாடல்களில் இடம்பெற்று, வகை முன் மாதிரிகள் ஆயின. இன்று பிள்ளைத்தமிழுக்குரி யனவாகக் கூறப்படும் பத்துப் பருவங்கள் சிலவற்றுடன், இதில் இணைக்கப்படாத வேறு சில கூறுகளையும் அவை பெற்றிருந்தன. முழுமையான பிள்ளைத்தமிழ் உருவானது கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில்தான், ஒட்டக்கூத்தரின் குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழே பிள்ளைத்தமிழுக்குரிய எல்லாப் பருவங்களும் அமைந்த முதல் நூல். அதற்கு அடுத்தது காங்கேயன் பிள்ளைத்தமிழ். இது கொடிக்கொண்டான் பெரியான் அதிச்ச தேவன் பாடியது. அடுத்தாற்போல் பழைமை வாய்ந்தது அந்தகக்கவி வீரராகவ முதலியார் பாடியது. சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் (கி. பி. 1654). 17-ஆம் நூற்றாண்டில் ஆண்பாற் பிள்ளைத்தமிழும் பெண்பாற் பிள்ளைத்தமிழும் மேலும் உருவாயின. அவற்றுள் பல திறனாய்வாளர்களாலும் சமயச் சான்றோர்களாலும் சிறந்ததாக ஏற்றுக் கொள்ளப்பட்டவை குமரகுருபரரின் மீனாட்சி அம்மைப் பிள்ளைத்தமிழும் முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழும் எனலாம். இவை யிரண்டும் உளம்தோய்ந்து கற்பாருக்குச் சொல்வன்மையையும், கவியாற்றலையும், இலக்கிய இன்பத்தையும் நல்கும் தனித் தன்மைகளைப் பெற்றுள்ளன. அத்துடன் அவை இறையருள் பெறவும் வழிவகுப்பன.

# குருபரரின் தல யாத்திரை நூல்கள்

ஆ. காளியம்மாள், திருச்சி.

ஒரு மனிதன் இன்று பூசல், சச்சரவு, குடும்பபாரம், துன்பங் களிலிருந்து மீள தல யாத்திரை மேற்கொள்கிறான். அதில் வெற்றியும் கொள்கிறான். நம் நாட்டில் ஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோர்கள் தலப் பயணம் மேற்கொண்டு பல தல புராணங்களைப் படைத்தனர். கி.பி. 17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபர அடிகள் தம் தல யாத்திரையின்போது பல கவிகளைப் படைத்து, கற்பனையைக் கலந்து கடவுளின் வழி செல்ல அவர்கள் வழங்கிய நூல்களைப் பற்றி இங்கு நோக்குவோம்.

இறையியல் கோட்பாடு, என்பது பொதுவாக இருந்த இடத்திலிருந்து போதிப்பதுதான். முதன் முதலில் சமணம், சைவம், பௌத்த மதங்கள் இக்கோட்பாட்டின்படி அமைந்த வையே. ஆனால் 7, 9-ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோர் தலங்கள் சென்று பாடல்களைப் பாடினர். வழி நடையாகச் சென்று இறையியல் கோட்பாட்டை நிலை நாட்டினார்கள். அவர் களைப் பின்பற்றி அருணகிரிநாதர் "நாத விந்துகலாதி நமோ நம" என்கிறார். பின் 17-ம் நூற்றாண்டில் குமரகுருபரரும் தல யாத்திரையை மேற்கொள்கிறார்.

குமரகுருபரர் அவர்கள் திருநெல்வேலியில் பிறந்தவர். பிறவியில் ஊமையாக இருந்த இவர் பின் திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் திறம் பெற்று, பின் அவராலேயே "குருபரர்" என்ற பெயரும் பெற்றார்.

அடிகள் தனது முதல் தல யாத்திரை நூலாகக் கந்தனைக் கவி நயத்துடன் பாடுகிறார்கள்.

அதுதான் "கந்தர் கலிவெண்பா".

அதற்குப் பிறகு அடிகள் தல யாத்திரையாக திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருவாடானை, திருப்புனவாயில், திருப்புவனம், திருப்புத்தூர், திருப்பெருந்துறை முதலிய ஊர்களுக்குத் தலயாத்திரை மேற்கொண்டு இறைவனைத் தரிசித்து விட்டு மதுரையை அடைந்தார்கள்.

மதுரையில் இருந்தபொழுது அவர்கள் மீனாட்சியம்மையின் அருளால், ''மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழைப்'' பாடினார். இந்நூல் ஒரு கற்பனைக் கவியாகும். இந்நூலில் இறைவியோடும், இறைவனோடும் தமிழை இணைத்து உயிரோவியமாய் ஆக்கிய முறை புதுமையும் பொலிவும் பெறுகிறது.

''தொடுக்குங் கடவுட் பழம் பாடல்
தொடையின் பயனே நறை பழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே''

எனப் பாடுகிறார்.

இந்நூலின் அரங்கேற்றத்திற்கு மீனாட்சி அம்மையே நேரில் வந்து திருமலை நாயக்கர் மடியில் அமர்ந்து கேட்டதாகவும், அரசன் கழுத்திலிருந்த முத்து மாலையை எடுத்து குமர குருபரருக்குப் பரிசாக அளித்தார்கள் என்று நாம் அறிய முடிகிறது. இதிலிருந்து அடிகளின் தமிழ்ப் பற்றை அறிய முடிகிறது. இப்பாடல் ஐம்புலனுக்கும் இன்பம் தருவதாய் அம்மையைக் கற்பனை செய்வது பாராட்டத்தக்கது.

இந்நூலில் அடிகள் மரம், நீர், ஆகாயம், உயிரினங்கள் அனைத்துடன் ஒவ்வொரு இடத்தையும் தன் கற்பனையின் திறத்தால் செந்தமிழில் வடித்துள்ள விதம் மிக அருமையானது. பாண்டிய நாட்டை வருணிக்கும் பொழுது, கமுக மரமொன்று மிக உயர்ந்துள்ளதாம். வானுலகில் ஐராவதத்தின் மத்தகத்தில் அமர்ந்துள்ள இந்திராணிக்கு அருகில் அதன் உச்சி சென்று தன் பாளையாகிய வெண் சாமரத்தை அவளுக்கு விசிறுகின்றதாம். (மீ. அ. பி. த. (வரு)-5) அதுபோல் தத்துவத்தை விளக்கும் பொழுது,

''தனிமுதல் யாமென் பார்க்கு அம்மனையாய் அவர்
தம்மனை யானவள்'' (மீ. அ. பி. த (அம்மா) – 9)

ஆடல் புரிகின்ற இறைவனுக்கு இறைவி, மனைவி, தாய், தங்கை, மகள் என்ற முறையுள்ளவளாக இருக்கின்றாள். இது என்ன விந்தை எனக் கூறுவது காணத்தக்கது.

மேலும் அடிகள் "மீனாட்சியம்மை குறம்" மற்றும் "நீதி நெறி விளக்கம்" போன்ற நூல்களைப் பாடினார். இந்நூலின் கருத்துக்கள் மிக ஆழமான ஒன்று. இதற்காகப் பொன்னும் பொருளும் பெற்றதோடு அரிய நாயகிபுரத்தையும் நன்கொடையாகப் பெற்றார்.

அடிகள் அம்மையைப் பாடியது போன்று அப்பன் சொக்கனையும் பாட நினைத்து "மதுரைக் கலம்பகம்" என்ற நூலைப் படைத்தார். அப்பொழுது வைணவ தொண்டரிடம் வாதாடியும் வென்றார்.

பின்னர் மதுரையிலிருந்து தலப்பயணமாக திருக்கானூர், திருமழபாடி, திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருப்பழனம் முதலிய பதிகளை வழித்தடத்தில் வணங்கினார்கள். பின் திருக்குடந்தை, திருவிடை மருதூர் முதலிய பெரும்பதிகளை வணங்கி திருவாவடுதுறையை அடைந்தார். அங்கிருந்து தருமபுரவாதீனம் சென்று அம்மடத்தின் தலைவராகிய மாசிலாமணி தேசிகரைக் கண்டார். பின் தேசிகரிடம் திலகம் பெற விரும்பினார். தேசிகர், அடிகளைச் சிதம்பரம் சென்று திரும்பும்படி பணிக்கவே, அவர்கள் தலப் பயணமாக தருமபுர ஆதீன முதல் பரமாச்சாரியார் வீற்றிருந்த **திருவாரூர்** சென்று இறைவனை வழிபட்டார். திருவாரூர் பயணத்தில் அடிகள் பாடிய நூல் "நான்மணிமாலை" திருவாரூர் தியாகேசன் முன் அரங்கேற்றம் பெற்றது.

பின் அங்கிருந்து வைத்தீஸ்வரன் கோவிலை அடைந்தார்கள். மருந்தீசரையும், தையல்நாயகியையும், முத்துக்குமாரசாமியையும் தரிசித்தார்கள். அங்கு அவர்கள் "முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழை"ப் பாடினார்கள். இப்பாடல்கள் மிகுந்த கற்பனைவளம் செறிந்தது.

உதாரணமாக, சோழ நாட்டின் வளத்தைக் குறிப்பிடும் பொழுது, எருமை ஒன்று வளமான உணவை உண்ட காரணத்தால் அதன் மடியிலிருந்து பால் பெருக்கெடுத்தோடுகின்றதாம். அது தாமரை மலர்களை அசைத்து அதிலுள்ள தேனை வழியச்

செய்கின்றதாம். அத்தேனும் ஆறுபோல் பெருக்கெடுத்துப் பாலும் தேனும் வைத்தீஸ்வரன் கோயிலில் உள்ள சித்தாமிர்தம் என்னும் குளத்தை நிறைக்கின்றதாம். (மு. கு. பி. த (காப்பு. 7) இப்படி இந்நூல் அவ்வூரின் வளத்தை உணர்த்துகிறது.

பின் வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து தல யாத்திரையாகத் தில்லையை அடைந்தார். அங்கு இறைவனின் திருநடனம் கண்டு ''சிதம்பரச் செய்யுட்கோவை''யைப் பாடினார். இப்பாடல் யாப்பிலக்கணம் செறிந்த ஒன்று.

அதற்குப் பிறகு ''சிவகாமியம்மை ''இரட்டை மணி மாலையை'' இயற்றினார்கள். இந்நூல் மிகச் சிறப்புடைய ஒன்று.

பின், தருமபுரம் வந்து தேசிகரிடம் ஞான உபதேசம் பெற்று, ''பண்டார மும்மணிக்கோவை'' என்ற நூலைப் பாடினார். திருவாரூர் நான்மணிமாலை என்ற நூல் கற்பனை வளம் கொண்டது. உதாரணமாக

> ''முக்கட் கரும்பான இறைவனின் நெற்றிக் கண்
> தியாகப் படைத்திருக்கின்றானாம்''
>
> (தி. நான்மணிமாலை–34)

இறைவன் ஒருவிழி திறந்தால் பகற்பொழுதும், மறுவிழிதிறந்தால் இரவும், 3 வது விழி திறந்தால் இவ்விரண்டும் இடைப்பட்ட மாலைப்பொழுதும் தோன்றுகிறது என்று (சித. மும். ம. கோ-25) கற்பனையை வடித்துள்ளார்கள்.

பிறகு, அடிகள் திருவேகம்பம், திருக்காளத்தி இறையை வழி பட்ட பிறகு துண்டி விநாயகர் மீது ஒரு பதிகம் பாடினார்கள். காசியை அடைந்து ''காசிக் கலம்பகம்'' என்ற நூலை இயற்றினார்கள். இங்கு அரசனின் ஆதரவைத் தனது வாக்குச் சாதுர்யத்தால் பெற்றார். இந்துஸ்தானி மொழியைக் கைவரப் பெற்றுக் கவியும் பாடினார். அப்பொழுதுதான் ''சகலகலாவல்லி மாலை'' என்ற நூல் மலர்ந்தது. நூல்களின் நாயகியாகிய சரஸ்வதியைப் பாடினார்கள். அடிகள் அங்கிருந்து பல ''பதிகங் களை''ப் பாடினார்கள். அவர்களுடைய நூல்கள் அனைத்தும் வளம் கொண்டவை.

குமரகுருபரர் அவர்கள் சைவ சமய மெய்யன்பராய், சமய ஒழுக்கசீலராய், சமயப் பேரறிஞராய், சிவானுபவம் பெற்றுச்

சிவஞானியாய் விளங்கினார்கள் என்பதற்கு அவர்களின் சிறந்த நூல்களே ஆதாரமாக உள்ளன. குமரகுருபரர் தமது தல யாத்திரையில் யாரும் சித்திரிக்காத, சாதிக்காத ஒன்றை சாதித்துக் காட்டியுள்ளார்கள். தாமிரபரணி ஆற்றுக்கரையில் பிறந்து, கங்கைக் கரையில் காசி மடம் நிறுவினார்கள். முகமதியர்கள் வாழும் இடத்தில் சைவ மடம் நிறுவிச் சமய ஒற்றுமையை வளர்க்கப் பாடுபட்ட ஞானியாக விளங்கினார்கள்.

தலயாத்திரை, மற்றும் நடைப்பயணங்களின் மூலம் ஒரு மனிதன் துன்பத்தை அறிய முடிகிறது. சமுதாயத்தை உணர முடிகிறது. இசை பிறக்கிறது, தத்துவத்தை உணர முடிகிறது. பௌத்தம், சமணம், கிருத்துவம், இஸ்லாம், படைத்தவர்கள் தங்கள் தலயாத்திரைகளின் மூலம்தான் ஞானத்தைப் பெற முடிந்தது. அவர்களைப் பின்பற்றி பக்திமார்க்கங்களைப் பலர் கடைப்பிடித்தனர். இதனால் ஆன்மீகம் வளர்கிறது. பரம் பொருளை உணர முடிகிறது என்பதை நாம் அறிந்த ஒன்று. அறிவியலும் இதைத்தான் சொல்கிறது. நடைப்பயனத்தால் இரத்த ஓட்டம் சீராகி, சிந்தனை சிறக்க வழி பிறக்கிறது. கற்பனை பிறக்கிறது. காவியம் படைக்க முடிகிறது.

இங்குக் குமரகுருபரரும் தலயாத்திரை மூலம் மொழி, இனம், சமய உணர்வு மிக்கவராய் விளங்குகின்றார் 17–ம் நூற்றாண்டில் **தொண்டு – படைப்பு – கற்பனை – ஆற்றல்** இவற்றால் தமிழிலக்கிய வரலாற்றில் குமரகுருபரர் தனி யிடத்தைப் பெறுகின்றார். இவரது தலயாத்திரை ஒரு சமூக நோக்கம் கொண்டது. இவரது நூல்களான திருச்செந்தூர் **கந்தர் கலிவெண்பா** முதலாக அனைத்து நூல்களும் அடிகளின் வழித்தடத்தில் வெளிப்பட்ட நூல்களே. இவரது கற்பனையைப் பின்பற்றித்தான் பாரதிதாசன் போன்றோர் எழுச்சி கொண்டனர் எனலாம்.

# அடிகள் சுட்டும் மகளிர் ஒழுகலாறு

ப. கிருட்டிணம்மாள், புதுவை.

மனிதச் சமூகம் ஆண் – பெண் என்ற இரு பிரிவை உள்ளடக்கியது. ஆண் – பெண் படைப்பாளர்களால் உருவாக்கப் பட்ட படைப்புகள் மனிதப் பிறவிகளின் உணர்வுகளைப் பல கோணங்களில் பிரதிபலிக்கின்றன. இக்கோணங்களின் வாயிலாக, புதிய சிந்தனைகளும், கருத்தாக்கங்களும் பிறக்கின்றன. இக்கருத்துருவாக்கத்தால், பெண் பற்றிய பார்வைகளும், விமர்சனங்களும் இன்று பரவலாகக் காணப் படுகின்றன.

இந்நிலையில் குமரகுருபரரின் படைப்புகள் மீனாட்சி யம்மைப் பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மைக் குறம், மீனாட்சி யம்மை இரட்டை மணிமாலை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, சகலகலாவல்லி மாலை போன்றவை பெண் தெய்வத்தை மையமிட்டு இயற்றப்பட்டு உள்ளதாலும், நீதிக் கருத்தை வலியுறுத்தும். இவர் பெண்களுடைய ஒழுகலாறுகளை எவ்வாறு சித்திரித்துள்ளார் என்பதனை ஆராயும் நோக்கத் தோடு இக்கட்டுரை அமைகிறது.

### நீதிநெறி விளக்கமும் குமரகுருபரரும்

தமிழ் இலக்கியங்களை, சங்க இலக்கியம், சமய இலக்கியம், நீதி இலக்கியம், சிற்றிலக்கியம், புத்திலக்கியம் எனப் பல வகையாகப் பாகுபாடு செய்யலாம். சங்க இலக்கியத்தினை அடுத்து, சிறப்புடையனவாகப் போற்றப்படுவன நீதி இலக்கியமும், சமய இலக்கியமும் ஆகும். சங்க காலத்திற்குப் பின் நீதிநூல்கள் பல உருவாயின. இவற்றுள் திருக்குறளே முதன்மை பெற்று விளங்குகிறது. சமய மலர்ச்சிக் காலத்திற்கு முன்னும், பின்னும் பல நீதிநூல்கள் தோன்றியுள்ளன. இந் நூல்கள் எல்லாம் திருக்குறளை அடியொற்றியே எழுதப்பட்ட வையாகும். இதில் குமரகுருபரரின் நீதிநெறி விளக்கம் மட்டும் விதிவிலக்காக அமையவில்லை. மேலும், திருக்குறள் போல

ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப்பட்டது, இந்நூலின் சிறப்பினை எடுத்துக்காட்டுகிறது.

குமரகுருபரர் இந்நூலில், கல்வி, பொருள், நட்பு, மன்னன், சான்றோன், துறவு; முயற்சி போன்றவற்றின் கருத்துக்களை விளக்குகிறார்.

கல்வி அழகே சிறந்த அழகு; கல்வியே இன்பம், எனக் கல்வியின் பெருமையை இயம்புகிறார். அவையில் உதவாக் கல்வி வீணானது என்றும், கற்றோனுக்கு அஞ்சாமையும், உய்த்துணர்ந்து அறியும் திறனும், சொல்வன்மையும் வேண்டும் என்றும் தெளிவாகக் கூறுகிறார்.

வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. அப்பொருளை சேர்க்கும்போது விலக்கவேண்டியவற்றைக் கூறி, அறவழியில் பொருள் ஈட்டுதல் சிறந்தது என்கிறார்.

> "நட்பிடைக் குய்யம் வைத்து எய்யாவினைசூழ்ந்து
> வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் – திட்பமாம்
> நாளுலந்த தன்றே நடுவன் நடுவின்மை
> வாளா கிடப்பன் மறந்து"

என நட்பைப் பற்றிக் கூறுகிறார்.

மன்னன் வழி மன்னுயிர் இருப்பதால், மன்னனுடைய நடத்தைகள், அமைச்சனின் கடமைகள் போன்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன. மன்னன் நீதி வழங்கும்போது உண்மை அறிந்து வழங்குதல் வேண்டும்.

சான்றோர் மேலான செயல்களை மட்டுமே செய்வர். அவர்கள் தவறான செயல்களில் ஈடுபடக்கூடாது. சான்றோருக்கு மானங்காத்தல் தலையாயக் கடமை என்பதனை வலியுறுத்து கிறார்.

மெய்யுணர்வில் உண்டாகும் இன்பமே இன்பம். எனவே மெய்ஞ்ஞானியர் ஐம்புலனைக் காத்தல் வேண்டும். காமநோக்கு நோக்காதவரே துறவியர். துறவு வாழ்க்கை மேற்கொள்பவர் உண்ணும் உணவையும், பொய்யான தவக்கோலம் கொள் வதையும் தீயொழுக்கம் என்று கூறுகிறார்.

ஒருவன் வாழ்க்கையின் உயர்ந்த நிலையை அடையவேண்டு மானால் அவனுக்கு முயற்சி முதற்படியாக இருக்கவேண்டும்.

எனவே, ஆராய்ந்து முயற்சி செய்தல் வேண்டும், தளர்வின்றிப் பணியாற்றுதல் வேண்டும். இறுதிவரை முயலவேண்டும் எனக் கூறுகிறார்.

**பெண் ஒழுகலாறுகள்**

இந்தச் சமுதாயமும், மொழியும் ஆணால் உருவாக்கப் பட்டவை. இதன் அடிப்படையில் தோன்றும் இலக்கியமும், இத்தன்மையைக் கொண்டதெனில் வியப்பில்லை. எனவே, ஆணால் உருவாக்கப்பட்ட படைப்பில், ஆண் சார்ந்த கருத்துக் களும், ஆண்சார்ந்த விருப்பு வெறுப்புகளும் பதிவு செய்யப் பட்டுள்ளன. இவ்வகையில் படைப்புகளெல்லாம் ஆணுக்குச் சாதகமாகவே, அவனுடைய அதிகாரத்தை வெளிப்படுத்தும் தன்மையைக் கொண்டே அமைந்தன.

குமரகுருபரர் நீதிநெறி விளக்கத்தில் கூறும் கல்வி, நட்பு, முயற்சி, துறவு, சான்றோன், மன்னன் போன்றவற்றில் ஆணுக்கு வலியுறுத்தும் ஒழுக்கங்களின் வாயிலாக பெண் ஒழுக்கங்களை உவமையாகவும், ஒப்புமைப் படுத்தியும் விளக்குகிறார்.

**கற்புடைய மகளிர்**

மனிதன் தொடக்க காலத்தில் எந்தவித கட்டுப்பாடும் இல்லாமல், தன்போக்கில் உணவுக்கோ, உறைவிடத்திற்கோ, ஏன் உடலின்பத்திற்கே கூட விலங்கு வாழ்க்கை வாழ்ந்தவன். பின், அவனுடைய வலிமையை உணரும்போது, அவன் பெண்களைத் தன் ஆதிக்கத்தின்கீழ் செயல்படுத்தினான். இங்கு தான் கற்பு என்பது பெண்ணுக்கு மட்டும் என்ற நிலை உருவானது. அது இன்றைக்கும் தொடர்ந்து இலக்கியங்களிலும், நடைமுறை வாழ்க்கையிலும் பேணப்பட்டு வருகின்றது. கற்பு என்பது இருபாலருக்கும் பொதுவானது என்பதனை,

> ''கற்புநிலையென்று சொல்ல வந்தார் இரு
> கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்''

எனப் பாரதி கூறுகிறார். இவரை அடுத்து பாரதிதாசனும், பெரியாரும் இருபாலருக்கும் பொதுவான கற்பைப் பற்றிப் பேசுகின்றனர். இன்றைக்குப் பெண்ணியம் பேசுபவர்கள், ஆண் பெண் கற்பு முக்கியமான விஷயமாகப் பேசப்படுகின்றது. குமரகுருபரர், கற்புடை மகளிர் பற்றிக் கூறும்போது,

"கல்லானாலும் கணவன்
புல்லானாலும் புருஷன்"

என்ற பழமொழிக்கேற்ப, கணவனே தெய்வம் என்கிறார். இத் தன்மையிலிருந்து "மாறுபடும் பெண்பிறப்பே பாவம்," கற்புக் குணம் இல்லாத பெண்ணின் கவனம் பிற ஆண்மகன்மீது செல்லும். பிற ஆடவனுடன் வயப்படல் கூடாது. கற்புடை பெண்ணிற்குக் குழந்தை பெறல் இன்றியமையாதது. கற்பில்லாத மகளிர் பொது மகளிரை விடக் கொடியவர். இல்லற வாழ்க்கை சிறக்க ஆண் மகனுக்குக் கற்புடைய மனைவியின் நல்லகுணம் இன்றியமையாதது. கற்புடைய மகளிரின் வாழ்க்கை தவ வாழ்க்கைக்கு ஈடாகாது, எனப் பலவாறாகக் கூறுகின்றார். பெண் கற்பு பேசும் குமரகுருபரர், அதே நேரத்தில் ஆணுக்குப் பொருந்தும் என்பதனைக் கூறவில்லை. மாறாகப் பிறன்மனை நயவாமை என்பதனை ஒரே ஒரு பாடல் (80 பா)மூலம் விளக்குகிறார்.

**பொது மகளிர்**

கற்பு, பேசப்பட்டக் காலத்திலிருந்து இன்று வரை பொது மகளிர் பற்றிய கருத்து பொருள் சார்ந்து இருந்து வந்துள்ளதனை அறியமுடியும். இவ்வகையான மகளிர் இருப்பதற்குக் காரணம் நம் சமூகச் சூழலமைப்பே ஆகும்.

பொதுமகளிரிடம் அன்பு பணங்கொடுத்து வாங்குதல் வேண்டும். அது போலி அன்பாக மட்டுமே இருக்கும். மேலும் அவர்களுக்குப் பணம் குறிக்கோளாக இருக்கின்றது, என்பதனை

"நெய்யற்ற கண்ணே அறுமே, அவரன்பும்
கையற்ற கண்ணே அறம்" (371)

நாலடியார் பாடல் விளக்குகிறது.

குமரகுருபரர் இதே தன்மையில் பொதுமகளிர், பொதுவான செல்வத்திற்குச் சமம் என்கிறார். மேலும் கற்பில்லாத பெண்கள் பொது மகளிரைவிடக் கொடியவர்கள். அதாவது பொதுமகளிர் தன் வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களுக்கு மட்டுமே இத்தகைய இழிச்செயல்களைச் செய்கின்றனர். ஆனால் கற்புடைய பெண்களுக்கெல்லாம் எல்லாப் பொருளும் இருந்து தீயச்செயலை மேற்கொள்ளும்போது அவர்கள் பொதுமகளிரை விட கொடுமையானவர்கள், என்கிறார்.

**கைம்பெண்**

ஒரு காலகட்டத்தில் பால்ய விவாகத்தின் காரணமாகக் கைம்பெண்கள் அதிகமாக இருந்தனர். அவர்கள் மேற்கொள்ளும் கைம்மை நோன்பு மிகக் கடுமையாக இருந்ததால் உடன்கட்டை ஏறவும் முற்பட்டனர். இத்தகைய போக்கு மாறினாலும், விதவை மறுமணம் என்பது, இன்றைக்கும் நடைமுறையில் பரவலாக் இல்லை.

"கோரிக்கை யற்று கிடக்குதண்ணே – இங்கு
வேரில் பழுத்த பலா"

எனக் கைம்பெண்களைப் பற்றி பாரதிதாசன் கூறுகிறார்.

குமரகுருப்ரர் கைம்பெண் யாருக்கும் பயன்பட மாட்டார் என்றும், கற்புடைய கைம்பெண்டிர் இறத்தற்கும் அஞ்ச மாட்டார்கள் என்றும் கூறுகின்றார்.

**மேலும் பெண்களைப் பற்றி**

மேற்கூறிய மூன்று பெண்கள் மட்டுமல்லாமல், பெண்களைப் பற்றிச் சில கருத்துக்களை நீதிநெறி விளக்கத்தில் முன் வைக்கிறார். நல்ல துறவியர் பெண்களைப் பார்த்தல் கூடாது; பெண் இன்பம் இல்லாதவரை எல்லோரும் தொழுவர். பெண்ணும் துய்க்கும் இன்பம் சிற்றின்பம் என்றும் பெண்ணைக் குறைத்து மதிப்பிடும் குமரகுருபரர், அழகான மனைவியின் இன்பத்தை அனுபவித்தால் நன்மை கிடைக்கும்; மனைவியை விற்று உண்பதும், தாயைக் கொலை செய்வதும் இழிவான செயல் என்றும், ஆண்மை இழந்த பேடு பெண்ணின்பத்தை நுகர முடியாதது என்றும் சுட்டுகிறார். மேலும் ஆரம்பத்தில் துன்பந்தரும் கல்வியானது, தொடரத் தொடர இன்பந்தரும். எனவே அக்கல்வியைக் கற்க வேண்டும் என்றும்,

"பலகற்றேம் யாம் என்று தற்புகழ வேண்டா" (79) (அ. நெ. சா.) என்ற வரிக்கேற்ப கற்ற கல்வியானால் செருக்குக் கொள்ளக் கூடாது எனப் பெண்ணை விளித்துக் கூறுகிறார்.

**முடிவுரை**

இன்றைய காலகட்டம் வரை பெண் பற்றிய கருத்துருவாக் கத்தை எடுத்துக் கொள்வோமேயானால், இலக்கியமாகட்டும்,

சமூகமாகட்டும், ஏன் நடைமுறை வாழ்க்கையாகட்டும், பெண் என்பவள் தாயாகவும், தெய்வமாகவும், போற்றியும் உயர்த்தியும் வழிபட்ட நிலையில், மென்மையானவள்; . உண்மையானவள்; பெருந்தன்மையானவள்; பயன்பாடு உடையவள்; பொறுமைக்கு உறைவிடமானவள்; அழகானவள்; பிறர்நலம் உடையவள் எனப் பலவாறாகச் சித்திரிக்கப்படுவது ஒரு நிலை. இந்நிலைக்கு மாறாக, போகப் பொருளாகவும், சடப்பொருளாகவும், நசுக்கப் பட்ட நிலையில், வக்கிரமானவள்; தன்னலம் உடையவள்; குறுகிய மனப்பான்மை உடையவள்; அறிவில்லாதவள்; சிந்திக்கத் தெரியாதவள்; பலமில்லாதவள்; என்ற கருத்துருவாக்கம் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றன.

# குருபரரின் பிள்ளைத்தமிழில் உருக்காட்சி

இரத்தின. கிருட்டினமூர்த்தி, பழனி

குமரகுருபரரின் ஞான அனுபவம், இறையன்பு, கவித்திறம் ஆகியவற்றைப் புலப்படுத்துவதாக உள்ளன பிள்ளைத்தமிழ் நூல்கள்.

உருக்காட்சி என்னும் இலக்கியவுத்தியைத் திறம்பட ஆள்வதன் வாயிலாக இந்நூலைத் தனிச்சிறப்புள்ள படைப்பாக அளித்துள்ளார் குமரகுருபரர். அவரது ஆட்பண்பு, இயற்கையியல் ஈடுபாடு, தத்துவ உணர்வு, கூர்த்த நோக்கு, கற்பனைத்திறன் ஆகியவற்றை வெளிப்படுத்துவதாக இப்பிள்ளைத்தமிழ் விளங்கு கிறது. இறையருளால் பாடப்பெற்ற இந்நூல் குமரகுருபரரின் முயற்சியுடன் கூடிய செய்திறனும் கற்பனைத்திறனும் இணைந்த இலக்கியப் படைப்பாகத் திகழ்கிறது.

சொல்லோவியம் என்று உருக்காட்சியைக் குறிப்பதுண்டு. ஓர் அடைமொழி, ஓர் உருவகம், உருக்காட்சியைப் படைத்து விடும். வருணிக்கும் போக்கில் தோன்றி புறத்தில் தோன்றும் உண்மைக்கும் மேலான ஒரு முழு உணர்வை நம் கற்பனைக்கு உருக்காட்சி வழங்கும். ஒரு நல்ல எழுத்தாளனின் கையில் புதுமையும் தெளிவும் உடைய உருக்காட்சி ஒரு பொருளை அழுத்தமுறத் தெரிவிக்கவும், தெளிவுபடுத்தவும் உயர்வுபடுத்தவும் முழுக்க முழுக்கப் பயன்படுத்தப்படுகிறது. ஓர் இலக்கியப்படைப் பின் உள்ளடக்கத்தைப் படிப்பவர் மனத்தின்கண் பதிவிக்கும் திறனுடையதாக உள்ளது என்ற கருத்துக்கள் உருக்காட்சி பற்றிய விளக்கமாக உள்ளன.

"உருக்காட்சி என்பது காட்சிப்புலத்தைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும் என்றில்லை. எல்லாவிதக் கற்பனைச் சித்திரம் அல்லது பிற அனுபவம் உருக்காட்சியாகலாம். எவ்வாறுவரினும் புலன்கள் வழியில் மட்டுமின்றி கவிஞன் தனது மனம், உணர்ச்சிகள் வழியாகப் பெறினும் கற்பனைச் சித்திரத்தை

அல்லது அனுபவத்தை உவமை உருவகம் என்ற வடிவங்களின் ஒப்புமையின் பொருட்டும் பயன்படுத்துகிறான்'' என்று குறிப்பிடும் கரோலின் ஸ்பர்ஜன் அம்மையார், ''குறியீடு, ஒரு சொற்குறிப்பு, கற்பனையினால் பெறப்படும் நுட்பமான புனைவு, தற்குறிப்பேற்றம், தெளிவான வினைச்சொல், உருவகம் என்ற வகைகளில் அந்தக் கற்பனைச் சித்திரம் வரக்கூடும் என்றும் இயம்புகின்றார். எண்ணத்திற்குத் தரத்தைத் தருவதாகவும் சூழலைப் படைப்பதாகவும் உணர்ச்சியைத் தெரிவிப்பதாகவும் உருக்காட்சி விளங்குகிறது என்றும் இயம்புகின்றார்.

உவமையாக, உருவகமாக அடைமொழியாக வருவன உருக்காட்சியாக அமைகின்றன. கவிதையின் இன்றியமையாத உறுப்பாகவும், பிரித்தற்கியலாத பகுதியாகவும் உருக்காட்சி விளங்குகிறது. புத்தம் புதிய தன்மை (Freshness) செறிவு (Intensity) கவிதை உணர்ச்சியை அப்படியே படிப்பவரும் அடைதற்கு உதவும் கிளர்ச்சியூட்டும் ஆற்றல் (Evocative Power) ஆகியவற்றை உருக்காட்சி உத்தியில் காணலாம்.

இக்கருத்துக்களை நினைவிற் கொண்டு குமரகுருபரரின் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் உருக்காட்சி உத்தி ஆளப் பெற்ற திறத்தைக் காணலாம். இயற்கை, அன்றாட வாழ்வு என்ற பெரும் பிரிவுகளாகப் பகுத்துக்கொண்டு குமரகுருபரர் ஆளும் உருக்காட்சி பற்றி ஆய்வு மேற்கொள்ளலாம்.

குமரகுருபரர் படைத்துள்ள பிள்ளைத்தமிழில் ஐம்புலத்திற்கும் உரிய உருக்காட்சி, புலன்மாற்று உருக்காட்சி (Synaesthetic Image) மனவுணர்வு, முரணணி, அடைமொழி இவற்றின் வழி அடையப்பெறும் உருக்காட்சி என்பனவற்றை ஆய்ந்து அறிவதற்கு அதிக வாய்ப்புள்ளது. கேள்விப்புல உருக்காட்சி பற்றிய ஆய்வுக்கு இந்நூலில் அமைந்துள்ள பாடல்களின் சந்த வேறுபாடு இடம் தரும். குமரகுருபரர் ஆண்டுள்ள உருக்காட்சி பற்றி ஆய்வதை நோக்கமாகக் கொண்டது இக்கட்டுரை.

அனைத்தையும் தழுவியதாகவுள்ள காட்சிப்புலத்தின்வழி வாழ்வின் பெரும்பகுதி கவிஞனைச் சென்றடைகிறது. இயற்கை என்ற பிரிவில் இடம் பெறும் ஞாயிறு நிலவு, மேகம், வெள்ளம், ஆறு, கடல், நிலத்தின் வளர்வனவாகிய வித்து, பயிர், மலர், இயங்குதிணையாகிய விலங்கு, பறவை என்பனவும் அன்றாட

வாழ்க்கைப் பிரிவில் இடம்பெறும் மக்கள், அணிகள் முதலிய வையும் காட்சிப்புல உருக்காட்சிகளாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன.

ஞாயிறு, நிலவு போன்ற உருக்காட்சிகள் தமிழ்க் கவிஞரால் இலக்கியத்தில் ஆளப்பட்டு வருகின்றன.

செங்கீரைப் பருவத்தின் முதற்பாடலில் குமரகுருபரர் முத்துக்குமாரசுவாமியின் தோற்றப் பொலிவை ஞாயிறு உருக்காட்சியால் சிறப்பிக்கின்றார். நெற்றியில் பொட்டு, சுட்டி, பட்டம் ஆகியவற்றின் ஒளி, இடுப்பில் கட்டப்பெற்றுள்ள பொன் அரைஞாண் ஒளி ஆகியவற்றுடன் முத்துக்குமார சுவாமிக் கடவுள் இள ஞாயிறு உதிப்பதைப் போன்று விளங்குகிறது என்கிறார் ஆசிரியர். ''இருள்நீங்குமாறு ஒளிவிடும் உன் திருவடிவின் பேரொளியை இளஞாயிறெனக் கருதித் தாமரைப் பூக்காடு சரவணப் பொய்கையில் அரும்பு விரிந்து மலர்கின்றது'' என்றும் அவர் குறிப்பதுண்டு. பொருத்தம், புதுமை, கிளர்ச்சியூட்டும் திறன் கொண்டு விளங்கி முத்துக் குமாரசுவாமிக் கடவுளைக் கண்முன் காணுமாறு செய்கிறது இவ்வுருக்காட்சி.

தெய்வக் குறப்பெண் வள்ளியின் நுதல் முருகனின் குமுதவிதழ்கனி போன்ற வாயமுதூறிய குறுநகை, உமையின் நெற்றி, மகளிர் அம்பவளத்து அரும்புநகை, விரிந்த முழுநகை என்பனவற்றை நிலவு உருக்காட்சியால் ஆசிரியர் வருணிக் கின்றார். தீற்றும் சுதையொளியை நிலவொளியாகக் குறிப்பிடுவதுமுண்டு.

மரம் விழுதுவிடுவது நிலவு கதிர்விடுவது போன்று உள்ளது எனச் சிறுபறைப் பருவத்தில் ஆசிரியர் குறிப்பது புதுமையாக உள்ளது. அவுணக் கருங்கங்குல் என்ற தொடரில் இரவுப் பொழுது உருக்காட்சியாக உள்ளது.

கடலலை எறியும் நெடுமீன்கள் வானமீன்கள் போன்று ஒளிவிடுவதாகச் சிறுபறைப் பருவத்தில் குறிப்பிடுகிறார் ஆசிரியர். பச்சைப் பசுங்கொண்டல் என்று திருமாலைக் குறிப்பது மேக உருக்காட்சியாக உள்ளது. அரமகளிர் ஆயத்தின் மிகுதியைக் குறிக்கும் வகையில் வெள்ளத்தை உருக்காட்சியாகப் படைக்கிறார் ஆசிரியர்.

"பால்நாறு செந்நெல் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப்பெருமை மடுமடிமடைதிறந்ததீம்
பாலாறு பங்கயச் செந்
தேனாறுடன் கடவுள் வானாறு எனப்பெருகு
சித்தாமிர்தம்"

என்று குமரகுருபரர் கந்தபுரியிலுள்ள தீர்த்தத்தின் சிறப்பை ஆறு உருக்காட்சியால் சிறப்பிக்கின்றார். எருமையின் மடியாகிய மடுவின் மடை திறந்து பாலாறு ஓடியதாக வருணிக்கும் குமரகுருபரர் கந்தபுரியின் வளத்தை நயம்படக் கூறுகிறார். தேவேந்திரன் பற்றிய காப்புச் செய்யுளில் இக்கற்பனை இடம் பெற்றுள்ளது. சப்பாணிப்பருவப் பாடலில் காரவுணக்கடலின் உடலிற் பெருகிய குருதிக்கடல் பிண ஓங்கலொடு ஓங்க அமைத்துப் பகைவர்களைத் தோல்வியுறச் செய்த முருகன் வீரத்தை ஆசிரியர் புகழும் செய்தி, கடல் உருக்காட்சியாக அமைந்து கரியநிற அவுணர்தம் எண்ணிக்கை மிகுதியையும் அவர்தம் உடலிலிருந்து பெருகிய குருதியின் மிகுதிப்பாட்டையும் உணர்த்துகிறது.

நிலம் என்ற பிரிவில் அடங்கும் மலை உருக்காட்சி மகளிர் மார்பின் பொலிவு முருகனின் தோள்களின் தோற்றம், யானையின் வடிவம், சிவபெருமானின் வில்லாகிய மேரு, அவருடைய தோள்வலி ஆகியவற்றைச் சிறப்பிக்கும் மரபு உருக்காட்சியாக வருவதுண்டு.

நிலைத்திணை சார்ந்த வளர்வன என்ற பிரிவில் இடம்பெறும் வித்து, முளை என்பன சிற்றிற்பருவத்தில் முறையே சிவனார், முருகன் ஆகியோரைக் குறிப்பிடும் உருக்காட்சிகளாக உள்ளன. "உமையன்னை படைக்கும் பகிரண்ட மணற்சிற்றிலை ஒரு கணத்தில் அழித்து ஆடும் சிவனாரின் மகனே! எமது சிற்றிலைச் சிதைக்கத் தொடங்கிவிட்டாய். வித்தும் முளையும் வேறன்று என்ற மொழியின் உண்மையை இச்செயல் காட்டுகின்றது" என்று சிறுமியர் குறிப்பிடுகின்றனர்.

தனிமுத்திக்கொருவித்தே என்று தாலப் பருவத்தில் முருகனைக் குமரகுருபரர் போற்றுகின்றார். ஆன்மகோடிகள் முத்தி நலம் என்னும் விளைவைப் பெறுதற்கு முருகன் வித்தாக

விளங்குகின்றான் என்பது கருத்து. ஆசிரியர்தம் தத்துவ உணர்வை இவ்வுருக்காட்சி உணர்த்துகிறது. உயிரைப் பயிர் என்றும் ஆசிரியர் குறிப்பதுண்டு.

"கொத்து முத்தமிழ்மொய்த்த கந்தபுரி" என்று காப்புப் பருவத்தில் குமரகுருபரர் முத்தமிழை மூன்று மலர்கள் இணைந்து விளங்கும் ஒரு மலர்க்கொத்தாகக் காட்சிப்படுத்துகிறார். கந்த புரியில் முத்தமிழ்வளம் செழித்திருக்கும் மாட்சியை இவ்வாறு உணர்த்துகிறார்.

"நின்னைப் பொருட்படுத்து ஒருவிரல் தலைசுட்டி
நீள்கழல்தாள் உதைந்து
நெடுமலர்கண் பிசைந்து அழுது அழுது அழைத்தனன்"

முருகன் என்று அம்புலியிடம் கூறுவதாக அமைந்துள்ள அன்னையின் மொழியில் முருகன் விழிகள் மலர் உருக்காட்சியால் சிறப்பித்துக் காட்டப்படுகின்றன. பெரியபுராணத்தில் "கண் மலர்கள் கைம்மலர்களால் பிசைந்து" என்பார் சம்பந்தர் அழுத காட்சியைச் சேக்கிழார்.

கொடி, கொம்பு போன்ற உருக்காட்சியால் மகளிர் இடையை, வடிவைக் குமரகுருபரர் வருணிக்கின்றார்.

செங்கீரைப் பருவத்தில் முருகக் கடவுளை "அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி" எனவும், தாலப்பருவத்தில் "முக்கண் கனி கனியும் சுவையே" எனவும், முத்தப் பருவத்தில் பாடல்கள் 4, 5, 6, 7, 8 ஆம் பாடல்களில் முருகனின் திருவாயினைச் "செங்கனி வாய்" எனவும் குறிப்பிடும் ஆசிரியர் இப்பருவத்தின் 9-வது பாடலில் கற்பகக் கனியின் இனிய! என்று போற்றுவது சிந்தனைக் குரியதாக உள்ளது. நுகர்வுப் புல உருக்காட்சியாக அமைந்துள்ள கனி உருக்காட்சி முருகக் கடவுளின்பால் ஆசிரியர் கொண்டுள்ள பக்தியின் ஆழத்தைக் காட்டுகிறது. "கனியினும் கட்டிபட்ட கரும்பினும் இனியன் ஈசன்" என்று நாவரசர் பாடுவது இங்கு நினைத்தற்குரியது. அமரகவி பாரதியார் "கண்ணம்மாவைப் பிள்ளைக் கனியமுதே" என்று அழைக்கும் திறன் தனி உருக் காட்சி, தமிழ்ப் பாவலர்தம் இதயத்தில் சிறப்பிடம் பெற்ற ஒன்று என்பதைக் காட்டுகிறது. கனி ஒன்றிற்காக முருகன் பிரபஞ்சத்தை மயிலின் மீது அமர்ந்து வலம் வந்தபின்பு சிவனாரிடமிருந்து அதனைப் பெறமுடியாமல் சினங்கொண்டு

தனித்து நின்ற காலத்து 'நீயே கனி' என்று சிவனாரால் அன்புடன் அழைக்கப்பெற்ற புராண நிகழ்வின் நினைவுடன் குமரகுருபரர் இவ்வுருக் காட்சியினை ஆண்டுள்ளார் எனலாம். தொடர் உருக் காட்சியாக (Iterative image) அமைந்து பிள்ளைத்தமிழ் இலக்கியப் படைப்பின் கட்டமைப்புக்குரிய ஒன்றாக இவ்வுருக் காட்சி விளங்குகிறது. ''குறப்பெண் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்'' என்று குமரகுருபரர் செங்கீரைப் பருவத்தில் குறிப் பிடுவது நுகர்வுப் புல உருக்காட்சியாக உள்ளது. குறப்பெண் வள்ளியின் தினைப்புனத்தில் தினைமாவும் தேனின் தெளிவும் உண்டு சுவை கண்டவன் என்று உன்னைக் குறிப்பிட்டோம். அவளுடைய மிச்சிலை நீ உண்டதையும் ஆசையுடன் அவளுடைய குமுதம் போன்ற இதழமுதத்தை விருந்தாடிய செயலையும் நாங்கள் சொன்னோமோ? என்று சிறுமியர் முருகனிடம் வினவு வதில் நுகர்வுப் புல உருக்காட்சி அமைந்துள்ளது. தன் மீது அன்பு மிகக் கொண்டுள்ள வள்ளியிடம் முருகன் பேரன் புடையவன் என்பதை ஆசிரியர் இவ்வுருக் காட்சியால் சிறப்பித்துக் காட்டுகின்றார்.

முத்தப் பருவத்தில் உமையன்னையின் குருகு நாறும் செந்தளிர்க்கை, துழாய்ச் சருகு நாறும் திருமாலின் முடைத் தலை மாலை நாறும் சிவனார் திருக்கரம், குரவ மலரும் அருகும் மிடையப் பெற்ற மாலை நாறும் முருகன் திருமேனி, பற்றிய வருணிப்பில் முகர்வுப் புல உருக்காட்சியைக் குமரகுருபரர் படைத்துள்ளார். முருகு நாறும் செங்கனிவாய் முத்தம் தருக முத்தமே என்பதில் முகர்வுப் புல உரு சிறப்புடன் அமைந் துள்ளது.

கலைப் பகுதிகள் நிறைந்த பேரறிவில் கல்விச் செல்வர்தம் கேள்வி நலம் கனியக் கனிய அமுதூறும் வேதமும், முதற் சங்கப் பாவலர்தீம் சுவைக் கனியும் தண்தேன் நறையும், வடித்தெடுத்த சாரம் கனிந்து ஊற்றிருந்த பசுமைத் தமிழும் மணக்குமாறு பெரிய கரையினை மோதும் கடல் சூழ் உலகையும் அனைத்து அண்டங்களையும் பலமுறை ஈன்ற பின்பும் அழகு மேன் மேலும் முதிருமாறு என்றும் முதுமையடையாத இளமைப் பொலிவுடன் விளங்கும் அம்மையாகிய உமையின் முலைப்பால் நாறும் செங்கனி வாயினால் முத்தம் தருவாயாக என்று முருகனை வேண்டுவதாக அமைந்த பாடற் செய்தியில் நுகர்வு, முகர்வு என்ற புலத்தைச்

சார்ந்த உருக்காட்சிகள் இணைந்து குமரகுருபரர்தம் ஆழ்ந்த முருக பக்தியையும் தமிழ்ப் பற்றின் ஆழத்தையும் தெரிவிக் கின்றன. ''வடித்தெடுத்த சாரம்'' என்ற தொடர் வினைச்சொல் உருக்காட்சியாக உள்ளது.'' கன்னலிலே சாறெடுத்துத் தமிழ் குழைத்துக் கனியிதழால் பரிமாறும் இனிய சொல்லாள்'' என்று பாவேந்தர் பாரதிதாசன் பாண்டியன் பரிசு நூலில் குறிக்கும் போக்கு குமரகுருபரர் உருக்காட்சி வழிப்பட்டதாக உள்ளது.

தம்பிரான் தழல் உருவில் ஒருபாதி குளிர ஒருபுறம் நின்ற தையல்நாயகி என்ற வருணனை ஊற்றுப்புல உருக்காட்சியில் இடம் பெறும் தண்மை உருக்காட்சியாக உள்ளது. ''வேதா முடித்தலை மோது கைக்காய்ப்பொடு திருவடித்துணை என் முடி பதித்தவடு ஆறாத மெய்ப்புகழ் ஆளி என்று குமரகுருபரர் பாடுவது அவரது பக்தியுணர்வைக் காட்டும் பொருத்தமான கிளர்ச்சியூட்டும் திறம் கொண்ட ஊற்றுப்புல உருக்காட்சியாகும். தொடுநீர்ப்பரவை முகம் புழுங்கத் தோன்றும் பரிதி என்ற தொடரில் உதய ஞாயிற்றை ஓவியப்படுத்தும் ஆசிரியர் வெம்மை உருக்காட்சியைப் படைக்கிறார்.

பொழிகின்ற கருணைப் பெரு வெள்ளம் கடல் போல் பெருகி, அலையெறிய, பொங்கியெழுந்த பெரும் காதல் உணர்ச்சி புளகம் போர்ப்ப மலர் போன்று விழியும் மனமும் குளிர்ச்சியடைய, வரி நீர்ச் சடிலத் தொருவனாகிய சிவனின் இரு வீணைக்கு உதவுகின்ற திருசெவிகள் விருந்தாட்டு அயர்வதற்கேற்ப மனம் நிறைந்து வழியும் கொழுந்தேனைப் பிழிந்து, மதுரமான அமுதத்தைக் குழைத்து ஊற்றும் மழலை மொழி ததும்புமாறு பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தையாகிய பிரணவத்தை மொழியும் பவளச் செங்கனி வாயினால் முத்தம் தருக என்று ஆசிரியர் குறிப்பது புலன்மாற்று உருக்காட்சியாக விளங்குகிறது.

''உருகும் அடியர் இதயம் நெகிழ
உணர்வில் எழுநல் உதயமே''

என்று வருகைப் பருவத்தில் குமரகுருபரர் முருகனைப் போற்று கின்றார்.

''கலையும் நிறையும் அறிவும் முதிர
முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் நெடிய
கருணை பெருகு சலதியே

அலகில் புவன முடியும் வெளியில்
அளியும் ஒளியின் நிலயமே
அறிவுள் அறிவை அறிவு மவரும்
அறிய அரிய பிரமமே''

என்று அவர் முருகனை அடுத்து அடுத்துப் போற்றிப் பரவுவதாக அமைந்துள்ள தொடர்கள் மனவுணர்வு உருக்காட்சியாக அமைந்து முத்துக்குமாரக் கடவுளின் திருப்புகழ் போற்றியாக விளங்குகின்றன. குமரகுருபரர் தம் பக்தியுணர்வின் வெளியீடாக விளங்குவதுடன் அவரது மெய்ப்பொருள் உணர்வின் சான்றாகத் திகழ்கின்றன.

நீண்ட நெடுங்காலமாக மக்களிடையே வழங்கி வரும் கடவுளர், தேவர், முனிவர் தொடர்பான கதைகள் இதிகாசப் புராணச் செய்திகள் உருக்காட்சிகளாக இலக்கியங்களில் இடம் பெறும். பழங்கதை உருக்காட்சி என்ற பகுப்பில் இவை இடம் பெறும். படிப்பவர் மனத்தைக் கவர்கின்ற வகையில் விளங்கி, பாடற் செய்திக்குத் தரத்தையும் உயர்வையும் தரும் திறம் இவற்றிற்குண்டு.

மலர் மணம் கொண்ட கரிய கூந்தலின்கண் மலர்ந்த பூந்துகள் கூட்டம், மணம் பொங்கிய நறும்புகைப் படலம் ஆகியவை பருவத்தில் மழை பொழியும் மேகத்தைப் படைக்கின்றன. தாமரை முகத்தின் சோதி தோன்றிய பொழுது சிறுமுறுவல் தண்ணிலவைப் படைக்கிறது. தழல்மணிக் கலன்களின் ஒளி வெயிலை உண்டாக்குகிறது.நிதம்பம் கடலையும், மார்பு மலையையும் படைக்கின்றன, மணம் வீசும் கூந்தலை யுடையீராகிய நீவிர் கோசிகச் செம்மலைப் போன்று புதிய உலகத்தைப் படைக்கும் ஆற்றல் கொண்டு விளங்குகின்றீர்கள் என்று முன்பொருகால் கூடி நடுவில் பிரிந்தவர்கள் சொன்ன சொற்களைப் பசுங்கிளிகள் சொல்வதைக் கேட்டு மனம் குழையும் பெண்கள் வாழும் வேளூர் என்று ஆசிரியர் வருணிப்பது பழங்கதை உருக்காட்சியாக அமைந்துள்ளது.

குறியீட்டு உருக்காட்சி (Symbolic Image) பொருத்தமுற குமரகுருபரரால் ஆளப்பட்டுள்ளது. எண்ணக் கோவை (Association of ideas)-யை படைப்பதாகவும் இவ்வுருக்காட்சி விளங்கும்.

முத்தப்பருவப் பாடலில், இயற்கைப்பிரிவில் இடம்பெறும் நீர்வாழ் உயிர்கள் என்பனவற்றுள் அடங்கும் வாளைமீன் குறியீட்டு உருக்காட்சியாக உள்ளது.

கடைசியர் கூட்டத்தின் குரவையொலியின் தாக்கத்தினால் மேகக் கூட்டங்கள் ஓரிடத்தில் குவிகின்றன. வானை நோக்கித் தாவும் இளமையான பகட்டு வாளை மீன் மிகத் தொலைவிலிருக்கும் தேவருலகுக்குச் சென்று விடுகிறது, அங்கு அண்மையில் கன்று ஈன்ற இளமையான பசுவின் மடியில் முட்டுகிறது. தனது கன்றுதான் தன்னை முட்டுகின்றது என எண்ணிய அப்பசுவின் பெரிய மடியிலிருந்து மடை திறந்து பால் சொரிகிறது. கற்பக மரத்திலிருக்கும் மலர்களிலிருந்து சொரிகின்ற தேனுடன் பசுவின் பால் கலந்து அருவி போன்று பெருகி ஏரிகள், கால்வாய்கள் நிறையுமாறு செய்கிறது. இதன் விளைவாக வயல்களில் சேறு உண்டாகிறது. சேற்று வளத்தால் நாற்று வளம் பெருகிச் செந்நெற் பயிர்கள் கரும்பைப் போல் வேளூரில் செழித்துள்ளன. இத்தகைய வளம்சான்ற வேளூர் இறைவனே! முத்தம் தருக என்று வேண்டுவதாகப் பாடல் விளங்குகிறது. பிள்ளைத் தமிழில் விண்ணுலகு மண்ணுலகு இரண்டையும் இணைத்து வருணிக்கும் கற்பனைப் போக்கு சிறப்பிடம் பெற்றுப் படைப்புக்குத் தனிச்சிறப்பைத் தருகிறது. பகட்டுவாளை என்பது குறியீட்டு உருக்காட்சியாக விளங்கி, இறையன்புமிக்க ஆன்மாவின் எழுச்சி பெற்ற பேரின்பப் பெரு நிலை, இறையருள் பொழிவு என்பனவற்றைக் குறிப்பாக உணர்த்துகிறது எனலாம். இதனை நனவிலிப் பொருண்மை (Unconscious meaning) என்று அறிஞர் வை. சச்சிதானந்தன் குறிப்பிட்டமை இவண் நினைவிற்கு வருகிறது.

வருகைப் பருவத்தில் குறிப்பிடப் பெறும் 'வெடிபோம் வரி வாளை மீன்', சிற்றிற் பருவத்தில் குறிப்பிடப்பெறும் 'வாளைப்பகடு', சிறுதேர்ப்பருவத்தில் குறிப்பிடப்பெறும் ''வெடிவாளை'' என்பன குறியீட்டு உருக்காட்சியாக அமைந்துள்ளன.

மேகத்துடன் விண்மீன்கள் பரவியோடுமாறு துள்ளும் வெடிவாளை மதியின் வயிற்றைக் கிழித்து விடுவதால் ஊற்றும் தெள்ளமுத அருவி பெருகி வருவதால் சண்பக மலர்த்தேன்

மழை போலப் பெருகும் காவிரியாற்றினை ஆயிரம் முகம் கொண்ட கங்கையாகச் செய்து ஐராவதம் என்ற யானை பிளிறும்படி மீண்டும் தாவிக் கற்பகக் காட்டினை உழக்குகிறது. பொன் ததுவினை எழுப்புகிறது. அந்தப் பூந்துகள் படலத்தினால் தெய்வ நதியையும் பொன்னி நதியாகச் செய்கிறது. யோகநெறியின் படிநிலைகள், ஆன்ம வளர்ச்சி, விளையும் பயன் ஆகியவற்றை மறைபொருளாகக் கொண்ட தொரு குறியீட்டு உருக்காட்சியாக இத்தொடர் உருக்காட்சி (Iterative image) விளங்குகிறது. காட்சிப்புலம் பிரிவில் அன்றாட வாழ்க்கை தொடர்பானவற்றை ஆசிரியர் உருக்காட்சியாகப் படைப்பதுண்டு.

முன்னர் ஒருவர் கட்டி வைத்த வீடு நீண்ட காலத்துக்குப் பின்பு மற்றொருவரால் சீர் செய்யப்படுவதும் புதுப்பிக்கப் படுவதும் உண்டு. இச் செயல்பாட்டை உருக்காட்சியாகப் படைக் கிறார் குமரகுருபரர்.

மும்முதல் கடவுளும் இளைப்பாறுதற்காக உலகெலாம் தலையளித்துப் போற்றும் திறத்தில் பழைய வேதத் தலைவன் பிரமன் அமைத்த பகிரண்டங்களைப் புதுக்குவதைப் போன்று, நெடுவெளி முகட்டுக்கு விரிகின்ற புதுநிலாவின் ஒளிக்கற்றையை இட்டு, பொழியும் மழையுடன் கூடிய கரு மேகப் படாத்தை வெண்பட்டுப் படாமாக அமைத்து, கடலால் சூழப் பெற்ற புவனமாகிய பெருந்தட்டுடன் அண்டச் சுவர்களுக்கு வெள்ளைப் பூச்சு செய்து தவள மாடங்களை வேளூரில் கொண்டுள்ளான் முருகன் என்பதாகச் சிறுபறைப் பருவத்தில் ஆசிரியர் வருணிக் கின்ற திறன் இதற்குச் சான்றாகும். வேளூரின் சோலைகளில் பெரிய மலர்களைக் குடைந்து தேனை அருந்தி மல்லிகை மலர்ப் படுக்கையில் வடித்த பைந்தமிழின் இசையைப் பயின்ற பெடையுடன் துயின்று இனிமையான செவ்வழிப்பாட்டினை வீணை இசைக் கலைஞர் ஆகிய மதங்கர் என்பவர்களும் திகைப்பும் மயக்கும் அடையுமாறு முரன்று, நெடிய வைகறைப் பொழுதில் செழுமையான மலர்கள் உள்ள இலஞ்சிகளில் வண்டுகள் உலவுகின்றன என்று காப்புப் பருவத்தில் குமரகுருபரர் வண்டின் செயல்பாட்டை ஓர் இசைக் கலைஞனின் செயலாகக் காட்டுவது மக்கள் உருக்காட்சியாக (Class image) அமைந்துள்ளது.

தனிச்சிறப்பு மிக்க இலக்கியப் `படைப்பாக முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் விளங்குவதற்கு உருக்காட்சி பெரிதும் உதவுகிறது. முருக பக்தியில் முழுக்க முழுக்க ஆழ்ந்த ஒருவரால் தான் இத்தகைய இலக்கியத்தைப் படைக்க முடியும் என்ற நினைவு படிப்பவர் மனத்துள் எழுவது இயல்பே.

# அடிகளாரின் வாழ்வியல் சிந்தனைகள்

அ. கோபிநாத், திருச்சி

குமரகுருபர சுவாமிகள் பல்வேறு இலக்கியப் பனுவல் களையும் சமயத் திரட்டுக்களையும் நமக்கு வழங்கியுள்ளனர். அவற்றுள் நீதிநெறி விளக்கம் கூறும் வாழ்வியல் சிந்தனைகளை இக்கட்டுரை வழங்குகின்றது.

காப்புச் செய்யுளின்று, நூற்றொரு பாடல்கள் கொண்ட நீதிநெறி விளக்கம் வாழ்வியலை விளக்கும் வண்டமிழ் களஞ்சிய மாகும். முதலெட்டுப் பாடல்களில் கல்வியின் இயல்பும், பயனும், கல்வியின் சிறப்பால் பெறும் பயன், சொல்வன்மை, கவித்துவம், புதியன கற்பதனினும் கற்றன பாதுகாத்தலே சிறப்பு என்பன போன்றனவும், பின்னர் அமைந்த பாடல்களில் பொருளால் பயன், பொருளின் சிறப்பு ஆகியனவும், அரசியல்பு பற்றிப் பதினைந்து பாடல்களும், மேலும் அரசர்க்கு வேண்டிய முயற்சி, ஆள்வினை ஆகியனவும், எட்டுச் செய்யுட்களால் இன்பம் பற்றிய செய்திகளும் என அறம், பொருள், இன்பம் கூறி இறுதியாக 84–ஆம் செய்யுள் தொட்டு 101 இறுதியாகத் துறவற இலக்கணம் கூறிச் சுவாமிகள் முடிக்கின்றார்.

காப்புச் செய்யுளின்கண் வாழ்வியலில் நாம் காணும் இளமை, செல்வம், யாக்கை ஆகிய இவற்றின் நிலையாமையைக் காட்டி அமைத்துள்ளார். இச்செய்யுளே நூலாசிரியரின் சிதம்பரச் செய்யுட்கோவையிலும் இடம் பெற்றுள்ள தன்மையைக் காண இயலுகின்றது. அக்காப்புச் செய்யுள்

> "நீரிற் குமிழ் யிளமை நிறை செல்வம்
> நீரிற் சுருட்டு நெடுந் திரைகாள் – நீரிற்
> எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
> வழுத்தாத தெம்பிரான் மன்று" (காப்பு)

என்பதாகும். நீராகிய ஓரினப் பொருளையே உவமை கூறியதன் வழி இது மரபு உவமை என்பர் மாறனலங்காரமுடையார்

(சூ 105). நிலையில்லாத இளமை நீரிற் குமிழியாகவும் செல்வமானது 'செல்வோம் – செல்வோம்' என அடித்துச் செல்லும் திரைகளாகவும், நீரில் எழுதிய எழுத்தின் நிலைபேறின்மை போல நாமெடுத்துள்ள யாக்கையும் நிலையற்றது என்பதனைக் காட்ட நீரில் எழுத்தாகிய யாக்கையும் எனச் சுவாமிகள் கூறுதல் காணத்தக்கது.

வாழ்க்கையில் மேம்படவும், நாற்பொருளைத் தரவல்லதுமான கல்வியின் சிறப்பை,

"அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும் – உறுங்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை" (பா. 1)

என்ற பாடல்வழிச் சுவாமிகள் வழங்குகின்றார். 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்' என்ற புறநானூற்று வரிகளை ஒட்டி, இவண் கவலையுற்றவிடத்து கைகொடுப்பது கல்வி எனக் காட்டுவது காணத்தக்கது. அறம், பொருள், இன்பம் வீட்டைத் தருவதும், இம்மைப் புகழையும் அளித்து மானிட உயிர்க்கு உற்ற துணையாகவும் விளங்குகின்ற கல்வியின் சிறப்பினை இவண் மொழிகின்றார்.

குமரகுருபரர் வாழ்வில் மக்கள் கொள்ள வேண்டிய கல்வியின் அழகை மற்றொரு பாடலில்,

"கற்றார்க்கு கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம் – முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகு செய்வார்" (பா. 12)

எனக் கூறுகின்றார். கல்வியே ஓர் அழகு; அணிகலம்; அக்கல்வியறிவுடையாருக்குப் பிற அணிகள் எற்றுக்கு? அழகுக்கு அழகு செய்வார் யார்? என வினாவடியாகக் கல்வி அழகின் அழகினைக் காட்டுகின்றார். "குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும் மஞ்ச ளழகு மழகல்ல நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையாற் கல்வி யழகே அழகு" நாலடி – 131) என்ற பாடற் கருத்தும் இவண் ஒப்பிடத் தக்கதாம்.

தொல்காப்பியர் காட்டும் மெய்ப்பாடுகள் எட்டனுள் 'பெருமிதம்' ஒன்றாம். அஃது கல்வி, தறுகண், இசைமை, கொடை என நான்கன் வழி அமையும். கல்வி கற்று விட்டோம் என்ற நிலையில் அது ஆணவச்செருக்காக மாறிவிடக் கூடாது என்ற தன்மையில் 'தம்மில் கற்றாரை நோக்கிக் கருத்தழிக' எனச் சுவாமிகள் கூறுதல் காணத்தக்கது. கற்றவர் ஓரெல்லை யுடன் தாம் கற்றன போதும் என எல்லை கொள்ளாது - கோலாது மேலும் மேலும் நுணுகிக் கற்க வேண்டும் என்ற வாழ்வியல் கோட்பாட்டைக் கொண்டவர் நம் சுவாமிகள். நல்ல கல்வித்திறம் - தரம் உடையவர் தாம் கற்றவற்றைப் பிறர்க்கு விற்கத் துணியார் என்ற அவர் கருத்து "கற்பார் பொருள் காணார் காசு பணம் காணில் உனை விற்பார் அவர் பால் நீ மேவாதே" என்ற தமிழ் விடு தூதின் (184) எதிரொலி யாக இவண் கேட்கின்றோம்.

குற்றமற்ற கல்வி உடையார்க்கே வன்மை உண்டாம் என்பதற்குக் குமரகுருபரர் காட்டும் காட்டு காணத்தக்கதாம்.

"போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொ ணகையிவார் வாய்சேரா - தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்" (பா. 23)

இப்பாடலில் ஆண் உருவத்தை எடுக்க விரும்பும் பெண் தோற்றத்தால் பேடு உடையதென்றாலும் பிற மாதரிடம் பெறும் பெண்ணின்பம் இவள் தாராள் அது போல உள்ளீடல்லாத நகையுடையார் கற்றலிற் கருத்தைச் செலுத்தாமல் நகைத்து வீண்பொழுதைப் போக்குவர் எனும் குறிப்பையும் இவண் காணுகின்றோம்.

மக்கள் வாழ்வில் காணக் கூடிய எளிய செய்தியையும் இடத்திற்கேற்ப சுவாமிகள் அமைக்கத் தவறவில்லை. வயல் களில் புல்லினால் சமைத்த பதுமைகளை மனித வடிவில் அமைத்து நிறுத்திப் பறவை, விலங்குகள் வந்து பயிரை அழிக்காதிரும் பொருட்டு ஆக்கும் திறத்தை,

"கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாத்தைவா யங்காத்தல் - மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பனவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்" (பா. 22)

என்ற பாடலில் கூறுகின்றார். கல்விச் சிந்தனை பற்றிக் கூற வந்த சுவாமிகள் கற்றற்குரிய நல்லூழ் அற்றவர் கற்றவர் சபையில் சென்று உரைப்பது எவ்வாறு அமையுமெனில் புல் பதுமையை வயல் வெளியில் பறவை விலங்குகளை ஓட்ட வைத்திருப்பது போன்றமையும் எனக் காட்டுவர்.

அரசியல்பு பற்றி இருபத்தைந்து முதல் முப்பத்தொன்பது வரையான பாடல்களிலும் காணலாம்.

யார் யாருக்கு யார் இறை? என்ற பொருள் தரும் பாடலொன்று.

''குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் – அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம் பூணிறை'' (பா. 26)

எனக் கூறும். கற்புடைய இல்லத்தரசிக்குக் கணவன் இறை ஆவான். புதல்வர்க்குத் தந்தையும் தாயும் தெய்வம் ஆவர். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென்ற' கொன்றை வேந்தன் கூற்றும் காண்க! அறவோர்க்குக் குருவாவார் அடிகள் ஆவர்; அனைவர்க்கும் இறையாக விளங்கிக் காப்பவன் மன்னனே! உலகபாலர் உருவில் நின்று காப்பவன் அவனே என்ற திருக்குறள் உரைக் கருத்தும் இவண் ஒப்பிடத்தக்கதாம்.

அரசன் கொள்ளும் வரி அளவிற்கு மிகாமலும் அதே வேளையில் மக்கள் செலுத்தும் அளவிற்கு ஏற்பவும் அமைதல் வேண்டும். அவ்வாறு அமையாத மன்னன் அரச இயல்பிற்கு உரியவனல்லன். ஆறலைக்கும் வேடனோடு அவன் உவமிக்கப் படுவான் என்ற கருத்தும் காணத்தக்கது. கொடுங்கோலனான மன்னன் உண்டு, உடுத்தி பூசித் திகழ்வான் ஆயினும் அவன் நெட்டுயிர்ப்போடு உற்ற பிணமாகவே கருதப்படுவான் (நீ.நெ.வி. 29, 30) எனச் சுவாமிகள் மொழிகின்றார்.

தான் துறவியாயினும், தக்க மன்னன் கையில் நாடு அமைந்து நல்லாட்சி மலர வேண்டும் என்ற சுவாமிகளின் நாட்டத்தை இதனால் அறியலாம். துறவிக்கு வேந்தனும் துரும்பு என்றாலும் வடஇந்திய இசுலாமிய மன்னனிடம் நிலம் பெற்று 350 ஆண்டுகட்கு முன்னர் காசியில் மடமமைத்த

சுவாமிகள் நிலை இதனால் அறியலாம். நல்லாட்சி வேண்டும் காரணமும் தெளிவாகும்.

அவ்வாறே நாட்டைப் பராமரிக்கும் தலைமைப் பொறுப்பிலுள்ள கொற்றவன், யாரையும் எளிதில் நம்புவதோ யார் கூறினும் ஏற்பதோ நாட்டையும் மன்னனையும் பாழாக்கும். இதனை,

"ஏதிலார் யாதும் புகல யிறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு" (பா. 32)

என்னும் பாட்டில் சுவாமிகள் நிலை நாட்டுவர். வெள்ளைக் காக்கை உண்டென்று கூறுவார் கூற்றையும், தாயைக் கொலை செய்வது சால்புடையது என்று கூறுவார் கூற்றையும் அரசன் தன் ஞானத்தால் அளந்தறிதல் வேண்டும். அத்தகைய அரசன் இளவயதினன் ஆயினும் அறிவால் முதிர்ந்தவன் ஆகின்றான். "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" (திருக்குறள் – 423) என்ற திருக்குறள் கருத்தை மனங்கொண்டு அடிகள் இச்செய்யுளை அமைத்துள்ளது காணத்தக்கது.

முறையாக வரும் வருவாயில் சற்றுக் குறையினும் அதனால் அரசனுக்கு ஏற்படும் இழப்பு ஏதும் இல்லை. அதனால் வேறு பலர் பிழைப்பர். இதனைத் தக்க காட்டுடன் சுவாமிகள் காட்டுவதனை,

"வாங்கும் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா ஆங்கதுகொண்
ரூரு வெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று" (பா. 37)

என்னும் இச்செய்யுளால் அறியலாம். யானைக்கு வழங்கப் பெறும் பெருஞ்சோற்றுக் கவளத்துள் ஒரு பகுதி சிதறிக் கீழே விழுமாயினும் அசைந்தாடும் இயல்பு கொண்ட களிறோ துன்புறுவதில்லை. ஊர்ந்து செல்லும் இனம் அதனை உண்டு வாழும். அவ்வாறே மன்னவனும் அமைதல் வேண்டும் என்ற கருத்தை இவ்வழி விளக்குகின்றார்.

நிலையாமையை மானத்தின் வாயிலாகச் சுவாமிகள் காட்டுவதும் காணத்தக்கது. 40,41,42 ஆகிய பாடல்களில் நிலை யாமையின் இயல்பினைச் சுவாமிகள் விவரிக்கின்றார். நாற்பதாம் பாடலில்,

"தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினும் ஓம்புக – பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்" (பா. 40)

என்று மொழிவதால் நிலையில்லாத உயிரை நீத்து, நிலைத்த புகழுடைய மானத்தைக் காக்க வேண்டும் என்ற கருத்தை இவண் வெளிப்படுத்துகின்றார். 'மானமாவது எக்காலத்தும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் என்ற உலகத்திருமறையின் உரையும் இங்கு ஒப்பிடத் தக்கதாம்.

வாழ்க்கையில் முன்னேற வேண்டுவோர் மேற்கொள்ள வேண்டிய வாழ்வியல் கோட்பாட்டைச் சுவாமிகள் மிகத் தெளிவாக விளக்குகின்றார். அத்தகையோர் தம் மெய்வருத்தம் பார்க்கக் கூடாது; பசியைக் குறித்துக் கவலை கொள்ளக்கூடாது; உறக்கத்தை மறக்க வேண்டும் பிறர் என்ன கூறுவார்களோ? அவமதிப்பார்களோ எனக் கவலைப்படக் கூடாது. தாம் மேற்கொண்டுள்ள செயலைப் பற்றியே சிந்திக்க வேண்டும். அத்தகைய முயற்சி உடையவர்க்கே வெற்றி நிச்சயம் அமையும் என்பது அடிகளின் கருத்தாம் (நீ.நெ. 52)

தன்னைப் பற்றிச் சிந்தியாது பிறரைப் பற்றி பழி கூறுதலையே சிலர் தொழிலாகக் கொண்டிருப்பர். அத்தகை யார்க்கு அறிவுரை கூறுமுகத்தான் சுவாமிகள்

"பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனாகக் கொள்வான் பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக்
கொல்வான்போல்
கைவிதிர்த் தஞ்சப் படும்" (பா. 72)

என்று கூறுவது காணத்தக்கது. தமக்குப் பகையின்றியும் அடுத்தவர் பற்றி பழியும், பகையும் கூறுவார் நிலையும் அஞ்சப் படும் நிலைக்குரியதாகும்; அது தேவையற்ற வீணான செயலாகும் என்பது சுவாமிகள் கருத்தாம்.

துறவிகள் மேற்கொள்ள வேண்டிய துறவற நெறிகளை 84 முதல் 101 வரையாக பதினெட்டுச் செய்யுட்களில் சுவாமிகள் விளக்கியுள்ளார். துறவறம் பூண்டார்க்குப் பொருந்தாத செயல்களாக,

> "பெண்மை வியவார் பெயரு மெடுத் தோதார்
> கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார் – பண்ணொரு
> பாடல் செவி மடார் பண்பல்ல பாராட்டார்
> வீடில் புலப்பகை யினார்" (பா. 84)

எனப் பெண்மையை வியந்து போற்றாமலும், அவர்கள் பெயரை எடுத்துக் கூறாமலும்,கீழ் நோக்கில் பார்க்காமலும், அவர்கள் பாடல்கள் செவியில் ஏற்குமாறு இராமையும் தரும் எனக் கூறுகின்றார். போலித் துறவிகளை நோக்கிச் சுவாமிகள் 'யாரையும் வஞ்சித்தே மென்று மகிழன்மின்' என்று கூறி அனைவரையும் பார்த்துக் கொண்டிருப்பவன் ஒருவன் உண்டென அறிமின் என அறிவுறுத்துகின்றார். உலக நுகர்ச்சியை அறியாத உண்மைத் தொண்டரைப் போற்றவும் சுவாமிகள் தயங்கவில்லை 'விழித்துறங்கும் தொண்டரான' அவர்களைப் பாராட்டுகின்றார்.

ஆக இதுகாறும் கண்டவற்றால் குமரகுருபரர் காட்டும் வாழ்வியல் சிந்தனைகளுள் கல்வி, அரசியல்பு துறவிகள் கொள்ளற்கும் தள்ளற்குமுரியன ஆகிய செய்திகளை இக்கட்டுரை விளக்கியுள்ளது.

# மதுரைக் கலம்பக இலக்கியம்

மு. கோவிந்தராசன், சென்னை.

## இறை வழிபாடு

சிவன் மீது குமரகுருபரர் பாடும் தமிழ்க் கலம்பக நூலுக்கு விநாயகர் உதவி நாடுகிறார். முதற் பாடல், தரவும், தாழிசையும், அராகமும் முதலில் வந்து மீண்டும் தாழிசைகளும் அம்போதரங்கங்களும் தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்று வந்ததால் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்று அழைக்கப் பெறும். இதனை 'ஒருபோகு' என்பர்.

இக்கலம்பக நூலினுள் காணப்பெறும் பாடல்கள் யாவும் நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், விருத்தக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, புயவகுப்பு, இயல் இடம் கூறல், கலித்தாழிசை, எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், வஞ்சித் துறை, வஞ்சி விருத்தம், ஊசல், எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், கொச்சகக் கலிப்பா, சந்த விருத்தம், எழுசீர்ச் சந்த விருத்தம், மருட்பா, பதினான்கு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம், நேரிசை ஆசிரியப்பா, தாழிசை, அறுசீர்ச் சந்த விருத்தம் முதலானவற்றால் குமரகுருபரரால் இயற்றப் பெற்றவையாகும்.

## தூது பற்றிய செய்திகள்

தூது இரண்டு வகைப்படும். பறவைகளையும் விலங்கு களையும் உயிர் இல்லாத மேகம், காற்று முதலியனவற்றையும் தூது அனுப்புவதாகக் கற்பனை செய்து பாடுவது காதல் பாட்டுக்களில் மிகுதியாகக் காணப்பெறுகிறது. இவற்றினை 'அகப்பொருள் தூது' என்றழைப்பர்.

ஒரு அரசன் மற்றோர் அரசனுக்கு ஒருவர் வாயிலாகத் தூது சொல்லி அனுப்புவது 'புறப்பொருள் தூது' ஆகும்.

இக்கலம்பக நூலில் அகப்பொருள் தூது காணப்பெறுகின்றது. சான்றாக, 'பறவை விடு தூது' இடம் பெற்றுள்ளது.

**பறவை விடு தூது**

"கரைபொரு திரங்கு கழிதொறுமிருந்து
கயல்வர வுறங்கு புள்ளீரே
பருவமு மிழந்தென் மகடுயருழந்து
படுவிர கமொன்று முள்ளீரே
அருமையொ டெங்கள் பெருமையை
யறிந்து மருள்புரி யவிங்குவல்லீரே
மருவிய கடம்ப வனமது புகுந்து
மதுரையரன் முன்பு சொல்லீரே"

இப்பாடல் எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆனது. இச்செய்யுளில் அடிதோறும் ஈற்றெழுத்துச் சில ஒற்றுமைப்பட்டு வந்தமையால் இயைபுத் தொடையாகும். இது தலைமகனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் நிலைமையை நோக்கிச் செவிலித்தாய் பறவைகளை விளித்துத் தூது கூறி வரும்படி சொல்லியது.

"கரைகளை மோதி ஒலிக்கின்ற உப்பங்கழிகள் தோறும் இருந்து, தமக்குத் தக்க இரையாகிய கெண்டை மீன் வருமளவும் உறங்குவதுபோல வாடியிருக்கின்ற நீரில் வாழ் பறவைகளே! என் மகளாகிய இவள், தலைவனுடன் கூடுதற்கு ஏற்ற இளம் பருவத்தையும் வீணாக இழந்து துன்பம் அனுபவித்துப் படுகின்ற காமநோயை ஒருசிறிதும் நினையாது இருக்கின்றீர். எங்களுடைய அருமையையும் பெருமையையும் தெரிந்து இப்பொழுது அருள்புரிய வல்லவர்களாகிய நீங்களே, சிவன் உள்ளம் உவந்து எழுந்தருளியிருக்கும் இடமாகிய கடம்பங் காட்டை அடைந்து அவனிடத்தில் எங்கள் துயரத்தைச் சொல்லுங்கள்" என்று செவிலித்தாய் தலைவியின் நிலையைப் பறவைகளிடத்தில் கூறுவதாக குமரகுருபரர் பாடியுள்ளார். இதனையடுத்து, நெஞ்சிற்குத் தூது விடுவதாக ஒரு பாடல் அமையப் பெற்றுள்ளது.

**நெஞ்சு விடு தூது**

"ஏனின் றிரங்குதி யேழைநெஞ் சேவன் டிமிர்கடப்பங்
கானின் றதுவுமோர் கற்பக மேய்ந்தக் கற்பகத்தின்

பானின்ற பச்சைப் பசுங்கொடி யேழுற்றும் பாலிக்குமாற்
றேனின்ற வைந்தருச் சிந்தா மணியொடத் தேனுவுமே''

கற்பகத்தையும் காமவல்லியையும் அடைந்து நற்பேறு பெற்ற நீ கொண்டு நிற்கும் இரக்கத்தை நீக்கிக் கொள்வாய் என நெஞ்சிற்கு அறிவுறுத்துவதாக அமைவது இப்பாடலாகும்.

''ஏழை நெஞ்சே! அறியாமையை யுடைய மனமே! என்ன காரணங் கொண்டு கவலைப் படுகின்றாய். வண்டுகள் இரைகின்ற கடம்பவனத்தில் நிற்பதும் ஒரு கற்பக மரமே! அந்தக் கற்பகத் தருவின் ஒரு பக்கத்திற் பொருந்திய இளைய பசுமை நிறம் வாய்ந்த கொடி போன்ற உமாதேவியே! தேன் பொருந்திய ஐந்து தருக்களையும் சிந்தாமணியையும், காமதேனு வையும் எல்லாவற்றையும் அடியார்க்குக் கொடுத்தருள்வார்'' என்கிறார் குமரகுருபரர்.

**கிள்ளை விடு தூது**

அழகரிடம் கிளியைத் தூது விட்டுப் படிப்போர் நெஞ்சினைக் கிளர்ந்தெழச் செய்தவர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர். இச்செய்தி 'அழகர் கிள்ளை விடு தூது, என்னும் நூலினுள் காணப்பெறுகிறது. 'அரி, தத்தை, சுகம், வன்னி, குதிரை, கிள்ளை, கீரம்' எனப் பல்வேறு பெயர்களில் கிள்ளையை அழைக்கிறார் கவிஞர் சொக்கநாதப் புலவர்.

இதனைப் போன்றே குமரகுருபரரும் 'கிள்ளை விடு தூது' பற்றிய செய்தியினை மதுரைக் கலம்பகத்தினுள் குறிப்பிட் டுள்ளார். அவற்றினை இனிக் காண்போம்.

எனது பச்சைக் கிளியே! நீ பழகிய சொல்லுக்குப் பயனாகச் சென்று சொக்கநாதரிடம் பேசி எனது வருத்தத்தை அவருக்கு எடுத்துரைத்து வா எனத் தலைவி தலைவனிடம் கிளியைத் தூது விடுத்தனள்.

புழுகுநெய்ச் சொக்கர், அபிடேகச் சொக்கர், கர்ப்பூரச் சொக்கர், அழகிய சொக்கர், கடம்பவனச் சொக்கர், அங்கயற் கண்ணம்மையைத் தழுவிய சங்கத்தமிழ்ச் சொக்கர் என்று நான் சொல்லச் சொல் எப்பொழுதும் நீ பயின்று வந்த சொல்லுக்குப் பயனைத் தெரிந்து இவ்விடத்தில் மீண்டு வா என்கிறார் குமரகுருபரர்.

இதனையடுத்து மற்றோரிடத்தில், ஒரு பாடலில்,

"வாழிமடக் கிள்ளாய் மதுரா புரிவாழு
மூழி முதல்வர்க் குருவழிந்தேன் - ஆழியான்
சேய் தொடுத்த வம்போ திரண் முலையுங் கண்மலருந்
தாய் தொடுத்த வம்போ தலை''

என்று குறிப்பிட்டுள்ளார் குமரகுருபரர்.

இளங்கிளியே வாழ்வாயாக! தலைமகள் கிளியை நோக்கிக் கூறியிருப்பது பின்வருமாறு அமையப் பெற்றுள்ளது.

மதுரையம்பதியில் எழுந்தருளியிருக்கும் ஊழிக்காலத்து முதல்வரான சிவபெருமானைக் கண்டு என் வடிவு மாறிக் காமநோய் கொண்டேன். சக்கரபாணியான திருமாலின் குமரனான மன்மதன் செலுத்திய அம்புகளோ திரண்ட முல்லை மலரும் தேனையுடைய மற்றை மலர்களும் ஆம். என் தாயானவள் தொடுத்துச் சொல்லும் பழிச்சொல்லோ அவற்றினும் கொடியது என்று தலைமகள் கிளியிடம் கூறினாள்.

**மேக விடு தூது**

நந்திக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவனான மூன்றாம் நந்திவர்மன் தன் தலைவியை நினைத்து மேகத்தைத் தூது விட்டான் என்ற செய்தியினை அறிய முடிகின்றது. அதே போன்று, மதுரைக் கலம்பகத்தில், தலைவனைப் பிரிந்த தலைவி அத்தலைவனிடம் மேகங்களைத் தூது விடுத்தாள் எனக் குறிப் பிட்டுள்ளார் குமரகுருபரர். சான்றாக,

"ஏமவெற் பென்றுகயி லாயவெற்பென் றுமல
யாசலத்தென்று முறைவார்
கோமகட் கன்பர்மது ரேசர்முச் சங்கம்வளர்
கூடலிற் சென்று புகலீர்
தாமரைக் கண்டுயிலு மாலெனச் சந்தமலி
சாரலிற்றுஞ்சு முகில்காண்
மாமதிப் பிஞ்சுமரை தேர்குயிற் குஞ்சுமுயிர்
வாய்மடுத் துண்டொழிவதே''

என்னும் பாடலைக் குறிப்பிடலாம்.

செந்தாமரை மலர் போன்ற திருக்கண் வளர்கின்ற திருமால் போலச் சந்தன மரங்கள் நிறைந்த பொதிய மலையின் பக்கங் களிலே தங்கியிருக்கின்ற மேகங்களே!

அழகிய இளமதியும் இரையைத் தேடுகின்ற குயிற்குஞ்சும் எனது உயிரை வாயினுட் கொண்டு புசிக்க நான் ஒழிவதை, பொன் மயமான மேருமலையிலும் வெள்ளிமயமான கைலாய மலையிலும் பொதிய மலையிலும் எழுந்தருளியிருப்பவரும் மலையத்துவச பாண்டியன் மகளான தடாதகைப் பிராட்டியின் கணவரும் மதுரையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு, மூன்று தமிழ்ச் சங்கங்களும் வளர்த்த மதுரையில் போய்ச் சொல்வீர்களாக!'' என்று தலைவி மேகங்களிடம் கூறினாள்.

**வண்டு விடு தூது**

தலைவி, தலைவனிடத்தில் வண்டு மூலம் தூது விடுக்கும் செய்தி இங்குக் கூறப் பெற்றுள்ளது. அவற்றை இனிக் காண்போம்:

மயக்கத்தைக் கொண்டு நாமே முதற்கடவுள் என்று கூறிச் செருக்கித் திரியும் தேவர்கள், திருப்பாற்கடலைக் கடைந்த அந் நாளில் பரமசிவனே உனக்கு அபயம் அளித்துக் காக்கப்படும் பொருள் ஆவோம். நாம் என்னும் குறையைச் சொல்லி முறையிட அதற்கு இரங்கி, இறக்கச் செய்யும் நமனையொத்த நஞ்சைப் பருகி அத்தேவர்களின் மனைவிமார்களுக்கு ஓலை என்னும் காதணியை வாங்காதபடி, (மாங்கலியப் பிச்சை) கொடுத்த திருவருளை உடைய சிவபெருமானது மதுரையில் பெரிய சோலைகளிலுள்ள வண்டுகளே!

சோமசுந்தரக் கடவுள் தமது சிவந்த பாதி உடம்பு முழுவதும் கருமையான பாகம் ஆக அழகிய தோளும் மார்பும் தழும்பு பட்டதும் கண்ட பின்பும், எம் கருவிழிப்பாவை போன்ற அரிய மகளை அழகிய சித்திரப்பாவை போலச் செயலற்றுக் கிடக்கும் படி செய்துள்ளார். எளிய மகளிரை வருத்துகின்றதனால் இவர்க்கு என்ன பயன் உண்டாம்? வருத்தாது இருக்குமாறு அவரிடத்தில் வண்டுகளே! நீங்கள் சென்று தெரிவிக்க வேண்டும் என்பது பாடலால் பெறப்பெற்ற கருத்தாகும்.

**துணங்கைக் கூத்து**

திருமுருகாற்றுப்படையில் வேலவன் சூரர்களை வென்ற போது பேய் மகள் ஆடிய துணங்கைக் கூத்து கூறப்பெற்றுள்ளது. வெற்றியைப் பேய்க் குழுவினர் ஆடியதாக,

"வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணநிதின் வாயன் துணங்கைத் தூங்க"

என்னும் வரிகள் வெளிப்படுத்துகின்றன. இக்கூத்தின் சிறப்பினைப் பதிற்றுப்பத்தும் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அரும்பத உரையாசிரியராலும் உணர முடிகின்றது. குமரகுரு பரரும் மதுரைக் கலம்பகத்தில் துணங்கைக் கூத்தினைப் பற்றிப் பின்வருமாறு குறித்துள்ளார். இங்குப் புயவகுப்பால் கூறப் பெற்றுள்ளது. பிரபந்தத் தலைவனின் தோள்களை வருணித்தல் புயவகுப்பாகும்.

செந்தமிழ் வழங்கும் மதுரையில் தடாதகைப் பிராட்டி என்னும் மகளை மணஞ்செய்து கூடிய சௌந்தர பாண்டி யருடைய பெரிய அழகிய தோள்கள் இசைப்பாட்டையுடைய வண்டுகள் நெருங்கி மொய்த்த கொன்றைப் பூ மாலையுடன் தெய்வப் பெண்களின் கண்களாகிய கரு நெய்தல் மலர்க் கூட்டத்தை அடைந்திருந்தன; திங்களில் நடு இடம் உடையுமாறு நீண்ட வானத்தில் மேல் உச்சியை அடையும்படி உயர்ந்த பொன் மயமான இமயமலை வில்லாக வளையும்படி விளங்கின; இளமை யான சூரியனது ஒளியைப் போன்ற ஒளியை வீசுகின்ற காந்தியை யுடைய தோள்வளைகளை அணிந்து உலக முழுவதையும் தாங்கின;

தோள்களின் வலிமையையும் பகைவரைக் கொல்லும் திறமையையும் வரிசை வரிசையாகப் புகழ்ந்து பேய்கள் ஆடுகின்ற துணங்கை என்னும் கூத்துக்கு இசைந்திருந்தன.

**வைணவச் செய்தி**

அருநாம மரசிவசங் கரநாமமெனக் கொண்
டவற்றொருநாமம் பகர்ந்தோர்க் கரியயணிந் திரனாம்
பெருநாமங் கொடுத்தவர்தங் கருநாமந் துடைக்கும்
பெற்றியார் தமிழ்மதுரைக் கொற்றியார் கேளீர்
ஒருநாமம் பயந்தவர்முன் றருநாமந் வியந்திங்
திகுல கரிடு நாமமதொன்றுள்ளநீர் வெள்ளைத்
திருநாம மிட்டவன்றே கெட்டதன்றோ விமையோர்
தெரித்திடு நாமமுனிவோர் தரித்திடுநா மமுமே"

இப்பாடல் 'கொற்றியார்' என்னும் உறுப்பில் அமைந்துள்ளது.

வைணவச் சின்னம் அணியப் பெற்று, வீதியில் பிச்சைக்கு வருகின்ற ஒரு பெண்ணை முன்னிலைப் படுத்திக் காமுகன் ஒருவன் தன் காதலைப் புலப்படுத்திப் பேசுவது 'கொற்றியார்' என்ற உறுப்பின் இலக்கணமாகும். உடம்பிற் பல இடங்களில் நாமம் தரித்தலின் அவர்களைக் குறித்துப்(சோமசுந்தரர்) பேசும் பேச்சாகிய இச்செய்யுளில் 'நாமம்' என்ற சொல்லைப் பல இடங்களில் அமைத்தது ஒரு பேராற்றலாகும். சிவன்– அடியார்க்கு மங்கலத்தைச் செய்பவன். சங்கரன்– இன்பத்தைச் செய்பவன். அரி – அழிப்பவன். அயன் – திருமாலிடமிருந்து தோன்றியவன். தேவ மாதர்கள் கொண்டுள்ள திலோத்தமை முதலான பெயர்களும் இமையாக் கண்ணராதலின் இமையோர் எனப்பட்டனர். உம்மைக் கண்டு காதல் கொண்டு பெயரும் பெருமையும் அழிந்தனர் என்பது கருத்தாகும்.

### தமிழ் உணர்வு

தேனைச் சொரிகின்ற கொன்றை மலர் மாலையை உடைய வனான சிவபெருமானின் தெய்வத் தன்மையையுடைய தமிழ் வழங்கும் மதுரையில் உள்ள, பெரிய தந்தங்களையுடைய எட்டு யானைகள் தங்கள் மதம் ஒடுங்கும்படி மேற்கொண்டு சுமந்த, பெரிய வானுலகத்தினின்றும் வந்த இந்திர விமானத்தை யாம் வணங்கினோம். ஆதலால், கூற்று எமைவிட்டு ஏகு அவிமானம் உனக் கேன்? – இயமனே! எங்களை விட்டுச் செல்வாயாக, உனக்குச் செருக்கு எதற்காக? விட்டுவிடு என்பதாகும்.

தெய்வத் தமிழ் என்றது, பரமசிவனே தானே அகத்திய னார்க்கு அருளினார். தொண்டர்கள், நாயன்மார்கள் கடவுளை வழிபட்டது இம்மொழியிலேயாகும். தமிழ்மொழி ஒன்றே வட மொழியொடு ஒப்புமையுடையதாகும் என்று குமரகுருபரர் கூறி, தம்முடைய தமிழ் உணர்வை மதுரைக் கலம்பகத்தில் வெளிப் படுத்துகிறார். இவைமட்டுமின்றி, பிறிதோரிடத்தில், வண்டுகள் வீணைப் பாடல் போல ஒலி செய்யத் தேனைச் சொரிகின்ற குளிர்ச்சியுள்ள மலர்களை அணிந்த கூந்தலை உடையவரான மானிட மகளிர், பளிங்குக் கற்களினாலாகிய வெண்மையான நிலா முற்றத்திலே தூய்மையான நிலவு போல ஒளி வீசும் வெள்ளிய முத்துக்களினால் ஆகிய பந்தலிலே கண் இமைத்தல் செய்யாமல் தெய்வப் பெண்களுடனே அம்மானை ஆடா நிற்க,

அயிர்ப்பு நுட்பமான இடையின் அளவில் மட்டுமல்ல வென்று கருதி, தேவர்களும் திகைக்கும்படியான தெளிவான தமிழ் வழங்கும் மதுரையில் எழுந்தருளிய வலிமையுடைய பாம்புகளை மாலையாகச் சூடிய சடையை உடைய சோமசுந்தரக் கடவுளே!

முழக்கத்தையுடைய கடல் நீராற் சூழப்பெற்றுள்ள உலக முழுவதையும் ஒருசேரப் பெற்றவளாகிய உமாதேவி த்டாதகைப் பிராட்டி என்று திருப்பெயரைப் பெற்று மதுரையில் வந்து தோன்றினாய். ஒப்பற்ற முதற் கடவுளாகிய நீ சுந்தரபாண்டியன் ஆகி மதுரையை ஆள வந்தாய். முருகக் கடவுள் உக்கிரகுமார பாண்டியன் என்று பெயர் கொண்டு வந்து மதுரையில் பிறந்தாய். குளிர்ந்த தமிழ்மொழியின் சுவையைக் கொள்ளை கொண்டு நுகர்தற்கு உண்டான விருப்பத்தால் என்றால் தெளிவுபடுத்தப் பெற்ற இத்தமிழினது பெருமையை எவர் அறிந்து சொல்ல வல்லவர்? என்கிறார் குமரகுருபரர்.

**திருவிளையாடற் புராணச் செய்தி**

இக்கலம்பகத்தில் ஆங்காங்கு, திருவிளையாடற் புராணச் செய்திகளைக் குமரகுருபரர் எடுத்துக் காட்டியுள்ளார். சான்றாக, ஒரு பாடலில் (ப. 135), தலைவனைப் பிரிந்த தலைவியின் கூற்றாக வருமிடத்தில் காணலாம்.

மதுரையில் வேளாளன் தன் மனைவியுடனே சிவனடியார் பூசனையை நாள்தோறும் இடைவிடாமல் செய்து வந்தார். ஒரு காலத்தில் பரமசிவன் அவனுடைய நற்குணத்தின் அருமை பெருமைகளை அனைவருக்கும் அறிவிக்கக் கருதி அவனிடம் வறுமை உண்டாக்கினார். அவன் அதனால் மிக வருந்தியும் விடாமல் தான் முன் கொண்ட விரதத்தை நடத்தி மிக்க கடன்பட்டு ஒரு நாள் தானும் தன் மனைவியும் பட்டினியாய்க் கிடந்து பின் சோமசுந்தரக் கடவுளை அடைந்து முறையிட்டான். அவர் எடுக்க எடுக்கக் குறையாதிருக்கும்படியான ஒரு நெற்கோட்டையை அவன் வீட்டிற் சென்றிருக்கும்படி அருள் புரிந்தனர். அவனும் குறை தீர்ந்து பெருவாழ்வுடன் மகிழ்ந்தனன் என்பது திருவிளையாடற் புராணத்தில் உலவாக் கோட்டை அருளிய படலக் கதையாகும்.

இக்கதையினைக் குமரகுருபரர் கூறுகையில்,

திருமால் நடுக்கத்தை அடையுமாறு அவன் மகனாகிய கருப்பு வில்லையுடைய மதனைக் கோபித்து எரித்தவராகிய

கடம்பவனத்திலுள்ள கடவுளே! ஓர் அடியவர்க்கு அக் காலத்தில் மனம் பொருந்திக் குறைதல் இல்லாத நெற்கோட்டையைச் சுமந்துகொண்டு போய்க் கொடுத்தீர்! அஃது இருக்க, உயிர் களின் மேல் தொடுக்கின்ற அம்புகளையுடைய மன்மதனுக்கும் எடுக்க எடுக்கக் குறைதல் இல்லாத அம்பறாத் தூணியைத் தந்தருளினீர் போலும்!

ஆதலால், மன்மதன் எடுக்கும் அம்புகள் ஐந்தாம். என்மேல் எய்த அம்பு எண்ணிக் கணக்கிட அளவு படாவாம். என் செய்கேன் என்கிறார்.

### வரலாற்றுச் செய்தி

இக்கலம்பகத்தில் வரலாற்றுச் செய்திகளையும் குமரகுருபரர் குறித்துள்ளார். சான்றாக, வெள்ளானைக்கருள் புரிந்த வரலாற்றினைக் காண்போம்.

காசியிற் சிவபூசை செய்து கொண்டிருந்த துருவாச முனிவர்க்குச் சிவனருளால் அவர் முடியில் இருப்பதொரு தாமரை மலர் தம் கையில் விழப் பெற்று மகிழ்ந்து தேவலோகம் சென்று ஐராவதத்தில் ஏறிப் பவனிவரும் தேவேந்திரனிடம் கொடுக்க, அம்மலரை அவன் செருக்கால் மதியாது ஒரு கை நீட்டி வாங்கி யானைத் தலைமேல் வைத்தனன். அவ் யானை அம்மலரைத் துதிக்கையால் இழுத்துத் தள்ளிக் காலால் மிதித்துத் தேய்த்து விட்டது. இதனால் கோபங் கொண்ட முனிவர் அவ் யானையைக் காட்டானையாகச் சபித்தார்.

தேவர்கள் முறைப் பாட்டுக் கிசைந்து நூறு ஆண்டு கழிந்ததும் மீண்டும் தேவயானையாகும் என அருள்புரிந்தார். ஆண்டு கடந்த போது ஒருநாள் கடம்பவனம் அடைந்தது' பொற்றாமரைக் குளத்தில் நீராடி இறைவனைப் பூசித்தது. இறைவனருளால் தன் பழவடிவம் அடைந்தது; வானுலகை அடைந்தது.

'நற்றவத்தோர்' ஈசனார் சாத்தும் எழில் மலரைக் கால் சிதைத்த, வாசவனார் வெள்ளானை மண்ணிழந்து பூசனை செய்து, அல்லற்படு சாபம் தீர்த்த அருள்போற்றி' என்ற திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா அடிகளும் இதனை விளக்கும்.

விக்கிரம பாண்டியனைச் சமணர்கள் செய்த அபிசார யாகத்தில் தோன்றிய யானையைக் கொல்லும்படி சோழ மன்னன் ஏவ, அதனை அறிந்த சோமசுந்தரக் கடவுள் பாண்டியனுக்கு இரங்கி, வீரனாகச் சென்று அம்பெய்து வீழ்த்தினர் என்பது, ஓரானைப் போருக்கு ஒரு கணை தொட்டு எய்த வரலாறாகும்.

இவ்விலக்கியத்தினுள் குமரகுருபரர் பற்றிய செய்தியும் கலம்பகத்திற்குரிய விளக்கமும் குமரகுருபரரின் வழிபாடும் மதுரைக் கலம்பகம் பற்றிய செய்திகளும் சுருக்கமாகத் தரப் பெற்றுள்ளன.

தூது பற்றிய செய்திகள், துணங்கைக் கூத்தைப் பற்றிய குறிப்பு, வைணவச் செய்தி, குமரகுருபரரின் தமிழ் உணர்வு, திருவிளையாடற் புராணச் செய்தி, வரலாற்றுச் செய்தி முதலியன யாவும் ஒருசேர, அதே நேரத்தில் சுவைபடக் குறிக்கப் பெற்றுள்ளது.

# மதுரைக் கலம்பகத்தில் மடற்கூற்றுகள்

பா. சங்கரேஸ்வரி, தஞ்சை.

தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று கலம்பக இலக்கியமாகும். இது பதினெட்டு உறுப்புகளைக் கொண்டு பலவகைப் பாக்களால் பாடப் பெறுவதாகும். கலம்பக இலக்கியம் தெய்வங்கள், அடியார்கள், அரசர்கள் முதலியோரைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பெறும். இவ்வாறு அமைந்த கலம்பகங்களில் குமரகுருபரர் அருளிய மதுரைக் கலம்பகத்தில் இடம்பெறும் மடற்கூற்றுப் பாடல்கள் இரண்டினை இக்கட்டுரை ஆய்கின்றது.

தனித்த இலக்கிய வகையாகவும் பதினெட்டு உறுப்புகளன்றிப் பிற்காலத்தார் கலம்பகத்தில் அமைத்துப் பாடிய ஓர் உறுப்பாயும் மடல் அமைகிறது. அக இலக்கியங்களில் திணைப் பகுப்பு, கைக்கிளை, அன்பின் ஐந்திணை, பெருந்திணை என அமையும். 'ஏறிய மடற்றிறம்' என்று தொல்காப்பியர் பெருந் திணைக்குரிய கூறாகக் கூறுகிறார்.

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலோடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

தொல். அகத். 54)

தான் நுகர்ந்த இன்பம் இன்ன தன்மைத்து என்று புறத் தார்க்குக் கூற இயலாததாகையால் அதனை அகம் என்றனர். அவ்வரையறையை மீறித் தன் காதல் வேட்கையை பலபடக் கூறுவது, அளவறிந்த அன்பின் ஐந்திணையில் மிக்க ஒன்றாகப் பெருந்திணையில் சுட்டப்படுகிறது. மடலேறுதல் என்ற இத் துறை ஆண்களுக்குரிய ஒன்றாக இருந்தது. இதனை வள்ளுவர்

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்" (குறள் - 1137)

என்று வலியுறுத்தக் காணலாம். ஆனால் இடைக்காலத்தில் இம்மரபில் மாற்றம் ஏற்பட்டிருப்பதைப் பன்னிருபாட்டியல் மூலம் அறிய முடிகிறது.

"மடல்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங்காலை" (பன். பாட். 147)

இவ்வாறு நூற்பா செய்தமைக்குக் காரணம் திருமங்கை யாழ்வார் செய்த சிறிய, பெரிய திருமடல்கள் ஆகும்.

தமிழ் இலக்கியத்தில் 'காதல்' என்ற தமிழ்ச்சொல் அன்பு, வேட்கை, ஆவல் என்ற பொருள்களில் இடம் பெற்றுள்ளது. சங்கச் சமுதாயம் மன்னனை உயிராகக் கொண்டது. ஆனால் பக்தி இலக்கியக் காலத்தில் இறைவனைத் தலைவனாகக் கொண்டு விளங்கியது. அன்பு நிறைந்த உணர்ச்சியைத் தலைவன் தலைவிமேல் ஏற்றிப் பாடல்களாய்ப் புனைந்த சங்கப் புலவர்கள் போன்றே பக்தி இலக்கிய அருளாளர்களும் படைப்பாளர்களும் அவ்வன்பை இறைவன்பால் செலுத்தினர். பக்தி இலக்கியங் களில் காதல் என்ற உணர்வு பக்தி அல்லது அன்பு மேலீடாகக் காணப்பட்டது. சங்க இலக்கியத்தில் நாம் பார்த்த காதலுக்கு எந்த வகையான அழுத்தம் இருக்கிறதோ அதைப் போன்றே பக்தி இலக்கியத்திலும் காணப்படுகிறது. இறைவனை இறை வனாகக் கொண்டு பக்தி செலுத்துவதற்குப் பதிலாக இறை வனைத் தலைவனாகக் கொண்டு பாடுபவர் தம்மைத் தலைவி யாகப் பாவித்துப் பாடிய நாயகன் நாயகி பாவத்தைப் பக்தி இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது.

**மடல் விளக்கம்**

ஆறாக் காதல் கொண்ட அணங்கினை அடைய முடியாத ஆடவன் மார்பிலே எலும்பு மாலையும் தலையிலே எருக்கம் மாலையும் கொண்டு பனைமடல்களால் செய்த குதிரையின் மீதமர்ந்து தான் காதலுற்ற மங்கையின் உருவம் தீட்டிய கிழியை ஏற்றி ஊரறியத் துன்புறுதலை மடலேறுதல் என்னும் அகப்பொருள் துறையாக அறிஞர் குறிப்பர்.

மடல் பற்றிய பிரபந்தங்களில் மடல், உலா மடல் என இரு வகை உண்டு. அவற்றில் முதல்வகை பாட்டுடைத் தலைவன் பெயருக்கு எதுகைத் தொடையாக தனிச் சொல் இல்லாத கலிவெண்பாவில் பாடுவது வளமடலாகும். இதனை நவநீதப் பாட்டியல், பன்னிரு பாட்டியல் விளக்குகின்றன.

''சீரானைச் செங்கண் நெடியானைத் தேன் துழாய்த்
தாரானைத் தாமரை போற் கண்ணானை
யெண்ணருஞ்சீர்ப்
பேராயிரமும் பிதற்றிப் பெருந்தெருவே
ஊரா திகழினு மூரா தொழியேன் நான்
வாரார் பூம் பெண்ணை மடல்'' (சிறிய திருமடல் – 768)

இது வளமடலில் அமைந்த சிறிய திருமடலாகும்.

கனவிலே ஒரு பெண்ணைக் கண்டு கலவி இன்பம் நுகர்ந்தான் ஒருவன் கண் விழித்தபின் அவள் பொருட்டு மடல் ஊர்வேன் என்று கலிவெண்பாவால் பாடுவது உலாமடல் என இலக்கண விளக்கம் கூறுகிறது.

**மதுரைக் கலம்பகம் கூறும் மடற் கூற்றுகள்**

குமரகுருபரர் அருளிய மதுரைக் கலம்பகத்தில் இரண்டு பாடல்களே உள்ளன. தலைவி மடலேறுவதாக ஒரு பாடலும், தலைவன் மடலேறப் போவதாக ஒரு பாடலும் அமைந்துள்ளன.

**தலைவி மடலேறுதல்**

''இடங்கொண்ட மானும் வலங்கொண்ட
வொண்மழு வும்மெழுதும்
படங்கொண்டு வந்தனை யானெஞ்ச
மேயினிப் பங்கயப் பூந்
தடங்கொண்ட கூடற் சவுந்தர
மாறர்பொற் புள்பெயர்த்து
நடங்கொண்ட தோர் வெள்ளிமன்றே
றதுமின்று நாளையிலே'' (மது. க. 33)

இப்பாடல் மடல் ஏறுதல் என்னும் துறையைச் சார்ந்தது ஆகும்.

மடலேறப் போவதாக தன் மனத்திடம் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. ஏனைய மடற்கூற்றுகள் தலைவனிடமோ, தோழியிடமோ, பாணனிடமோ கூற்று நிகழ்த்தல் முறையில் அமையும். இந்நிலை மாறி மனத்திடம் சூளுரைப்பதாக இப் பாடல் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. கடவுளர் தலைவராய் வருங்காலை பெண்கள் மடலூர்வர் என்ற பன்னிருபாட்டியலின் நூற்பாவிற்கு இப்பாடல் பொருந்துகிறது. ஓர் எழுத்து

எதுகையாய் அமைந்துள்ளமையால் வள மடலுக்கு எடுத்துக் காட்டாக இப்பாடலைச் சுட்டலாம்.

தலைவியானவள் தன் மனத்திடம் 'இடக்கையால் மானையும் வலக்கையிற் ஒளிபொருந்திய மழு என்ற ஆயுதத்தையும் கொண்ட சிவபெருமானது படத்தைக் கொண்டு வந்தாய். இனிமேல் பொற்றாமரைக் குளத்தையுடைய மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுள் தூக்கிய காலை நிறுத்தி, நிறுத்தியக் காலைத் தூக்கி, திருநடனம் புரியும், பலரும் கூடும் வெள்ளியம்பலத்தில் இன்றைக்காயினும், நாளைக்காயினும் நான் மடலூருவேன்'' என்று சூளுரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

அகத்துறைப் பாடல்களில் மடலூருவதாக வரும் பாடல்கள் தலைவன் தலைவியருக்கு இடையேயுள்ள அன்பு மேலீட்டை விளக்குவனவாக அமையும். ஆனால் இறைவனைத் தலைவனாகக் கொண்டு மானிடர் பாடும்பொழுது அவ்விறைவன் மேல் கொண்ட பக்தி மேலீட்டை இதுபோன்ற மடற்கூறுகள் சிறப்பாக விளக்குகின்றன. வெள்ளியம்பலத்துச் சோமசுந்தரக் கடவுளின் பெருமைகளைக் கூறுவதற்காகவே இப்பாடல் அமைந்துள்ளது எனலாம்.

**தலைவன் மடலேறுதல்**

மதுரைக் கலம்பகத்தில் மற்றொரு பாடல் தலைவன் மடலேறப் போவதாகத் தோழியிடம் கூறும் போக்கில் அமைந்துள்ளது.

> ''இன்னீரமுதுக் கிடமுங் கடுவுக்
> கெழிலார் களனுங் களனா வருனா
> நன்னீரமுதக் கடலாகியுள்ளார்
> நரியைப் பரியாக்கி நடத்தினரா
> லந்நீர்மையின் மிக் கென்னீர் மையென
> வடன்மா மடன்மா வரமாறுசெயா
> மைந்நீரளகத் திளமானை யன்னீர்
> வருவேன் மதுரைத் திருவீதியிலே'' (ம. க. 71)

இப்பாடல் 'மடலேறும்வகை உரைத்தல்' என்னும் துறையைச் சார்ந்தது. தலைவன் தான் நாணிழந்தமையால் வெளிப்படையாக நான் நாளை உன் ஊர்த் தெருவில் மடலூர்ந்து வருவேன் எனக் கூறுகிறான்.

“அஞ்சனம் போலும், கரிய தன்மையையுடைய கூந்தலை யுடைய பார்வையால் இளமானைப் போன்ற மகளிரே! இனிய தன்மையையுடைய உமாதேவியாகிய அமிழ்தத்திற்கு இடப் பக்கத்தையும் விடத்திற்கு அழகமைந்த கழுத்தையும் இடமாகக் கொடுத்தருளிய சோமசுந்தரக் கடவுள் நரியைப் பரியாக்கினார். அத் தெய்வத் தன்மையினும் என்னுடைய தன்மை சிறந்ததென்று மடல்களையுடைய பனைமரம் வலிமையுடைய குதிரையாய் வரும்படி மாற்றி, மதுரையின் அழகிய வீதியில் நாளை நான் மடலூர்வேன்” என்று தலைவன் தோழியிடம் சூளுரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது காணத்தக்கது.

இப்பாடலில் சோமசுந்தரக் கடவுள், காட்டிலுள்ள நரிகளைத் தான் குதிரைகளாக மாற்றினார். ஒரு விலங்கை இன்னொரு விலங்காக்குவது எளிய செயலல்ல. நான் மரத்தைக் குதிரை யாக்குவேன் என்று தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

மதுரைக் கலம்பகத்தில் சிவபெருமானுடைய பெருமையை இயம்புவதற்காக ஆங்காங்கே திருவிளையாடற்புராணக் கதைக் கூறுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேற்கண்ட பாடலில் திருவாதவூர் அடிகள் பொருட்டுச் சோமசுந்தரக் கடவுள் காட்டிலுள்ள நரிகளைப் பரிகளாக்கி அரிமர்த்தனப் பாண்டிய னிடம் கொண்டு வந்து கொடுத்த புராணக் கதை சுட்டப் படுகின்றது.

### பாடல்கள் கூறும் இறைமைத் தன்மை

பக்திப்பாடல்கள் முழுமையுமே இறைவனின் புகழை எடுத்துக் கூறுவனவாகவே அமைந்துள்ளன. குமரகுருபர அடிகள் தாம்சோமசுந்தரக் கடவுளை அடைய முடியாமையாலே எழுந்த ஏக்கத்தில் மடற்கூற்றுப் பாடல்களைப் பாடியுள்ளமை விளங்கு கின்றது. தலைவி நிலையில் நின்று தம் இறையுணர்வை வெளிப்படுத்துவதுபோல் இப் பாடற்கூற்றுக்கள் அமைந்துள்ளன. இவ்வுலகில் குடியிருக்கும் இறைவனை அடைந்து இன்பம் பெறுவதே இம்மனிதப் பிறவியின் பயனாகும் என்கிறார்.

இவ்வாறு குமரகுருபரர் தலைவன் – தலைவி காதல், மடலேறுதல் என்ற பண்டைத் தமிழ் அகப்பொருள் மரபுகளைப் பின்பற்றியும், தம்மைத் தலைவியாகக் கொண்டும் இறைவனைத் தலைவனாகக் கொண்டும் மடல் என்ற இலக்கியக் கூறை அடிப் படையாகக் கொண்டும் இறைவனது போற்றற்குரிய பெருமை களையும் தம் இறை உணர்வையும் இறை அன்பையும் வெளிப்படுத்தக் காணலாம்.

# குறம் உணர்த்தும் நாட்டுப்புறக் கூறுகள்

வே. சசிகலா, குற்றாலம்.

## குறம்

குறத்தி குறி சொல்வதாக அமையும் இலக்கிய வகைகள் குறம், குறவஞ்சி என இருவகைப்படுகின்றன. அவற்றுள் 'குறம்' என்பது குறத்தியின் கூற்றாக மட்டும் அமையும். குறவஞ்சியில் குறத்தியின் கூற்று மட்டுமின்றி வேறுபலர் கூற்றுக்களும் இடம் பெறும். ஒரு தலைவன்பால் காதல் கொண்டு வருந்தும் தலைவிக்குக் குறத்தி குறி கூறுவதாக அமைவதே இவ்விலக்கியங் களின் மையப் போக்காகும்.

களவுக் காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை கண்டு செவிலியும், நற்றாயும் குறிபார்த்த செய்திகளைச் சங்க இலக்கியங்களும் உணர்த்துகின்றன. குறி பார்த்தலில் கட்டு வைத்தல், கழங்கு வைத்தல் என்று இருவகை உண்டு. இதனைத் தொல்காப்பியம்,

> "கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
> ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்".
>
> (தொல். பொருள். 24)

என்று குறிப்பிடுகிறது. நெல்லைப் பரப்பிக் குறி பார்த்தல் 'கட்டு' எனப்படும். கழங்காடும் காய்களை வைத்துக் குறி பார்த்தல் 'கழங்கு' ஆகும். கட்டுபார்க்கும் பெண் 'கட்டுவிச்சி' என்று அழைக்கப்பட்டாள். குறுந்தொகை கட்டு விச்சியை 'அகவன் மகள்' என்று குறிப்பிடுகிறது. அகவன் மகளிர் கைகளில் நுண்ணிய சிறிய கோலை ஏந்தி இருந்தனர் என்பதும் சங்க இலக்கியம் உணர்த்தும் கருத்தாகும். இப் பெண்டிரே காலப் போக்கில் குறத்தியர் என்று குறிப்பிடப் பட்டிருக்கலாம். இத்தகைய குறவரினப் பெண்ணாம் குறத்தி தலைவியின் காதலை உணர்ந்து அவளுக்குக் குறி சொல்வதாக அமையும் ஒரு பாட்டு வகையே 'குறம்' என்பது புலப்படுகிறது.

குறி சொல்லும் குறத்தி முக்காலம் உரைக்கும் திறத்தினள் என்பது ஒரு கருத்து. பன்னிரு பாட்டியல் குறத்திப்பாட்டு என்றொரு பிரிவைக் குறிப்பிடுகிறது. அப்பாட்டு கடந்தகால, நிகழ்கால, எதிர்காலத் திறன்களை எடுத்துரைக்க வல்லது.

> ''இறப்பு நிகழ்வு எதிர்வென்னு முக்காலமும்
> திறப்பட உரைப்பது குறத்திப்பாட்டே''.
>
> (பன்னிரு பாட்டியல் – 217).

என்பது பன்னிரு பாட்டியல் அஃதன்றி கலம்பகத்திற்குப் பதினெட்டு வகை உறுப்புக்கள் உண்டு. அவற்றுள் 'குறம்' என்பதும் ஒன்று.

**மீனாட்சி அம்மை குறம்**

மதுரைச் சொக்கநாதர்பால் காதலுற்ற ஒரு தலைவியின் கையைப் பார்த்துக் குறத்தி குறி கூறுவதாக அமைந்துள்ள பாடலே மீனாட்சி அம்மை குறமாகும். இதன் பாட்டுடைத் தலைவி அங்கயற்கண் அம்மை ஆவாள். குறத்தி குறி சொல்லுமுன் அதற்கான ஏற்பாடுகள் செய்து தன்குல குடிப்பெருமை கூறிப் பின் நிமித்தங்கள் கண்டு தலைவருடன் தலைவி இணைவாள் என்று குறி சொல்லி முடிக்கிறாள். இதுவே மீனாட்சி அம்மை குறம் உணர்த்தும் கருத்தாகும்.

சிற்றிலக்கிய வகைகளை ஆராய்ந்த முனைவர் முத்துச் சண்முகன், நிர்மலாமோகன் ஆகிய அறிஞர்கள் அவற்றை மூவகைகளாகப் பிரிக்கின்றனர். அவை,

1. புலமை இலக்கியம்
2. நாட்டுப்புறப் புலமை இலக்கியம்
3. நாட்டுப்புற இலக்கியம்

ஆகியனவாம். குறம், குறவஞ்சி, பள்ளு, கீர்த்தனை, நொண்டி நாடகம், குளுவநாடகம், கலம்பகம் முதலானவை புலமை இலக்கிய இயல்பும், நாட்டுப்புறப் புலமை இலக்கிய இயல்பும் நாட்டுப்புற இலக்கிய இயல்பும் கலந்தவையாக விளங்குகின்றன என்பது அவர்கள் கருத்து. நாட்டுப்புறப் புலமை இலக்கியங்கள், சொல் அல்லது வரிகள் திரும்பத் திரும்ப வருதல், ஒரே சொல் முடிவு பெற்றிருத்தல், தாழ்ந்த குலத்து மக்களது வாழ்க்கை நிலை உணர்த்தல் போன்றவற்றை விளக்கும் தன்மையன என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள். மீனாட்சி அம்மை குறமும்

மேற்கண்ட செய்திகளைப் பெற்றிலங்குவதால் அது நாட்டுப்புறப் புலமை இலக்கிய வகையைச் சார்ந்தது என்று கருத இடமுண்டு. மீனாட்சி அம்மை குறத்தில் காணப்படும் நாட்டுப்புறப் புலமை இலக்கியக் கூறுகள் இங்கு விளக்கம் பெறுகின்றன.

**பாடல்கள் இயல்பு**

மீனாட்சி அம்மை குறத்தில் பாடப்பட்டுள்ள பாடல்களில் இலக்கிய நயமும் எளிமையும் விரவிக் காணப்படுகின்றன. குறத்தில் காணும் பாடல்களின் சொற்கள் எளியவை. மனிதரின் அன்றாடப் பேச்சில் புழங்குபவை. இப்பாடல்களில் சொற்களும், சொற்றொடர்களும் திரும்பத் திரும்ப வருகின்றன. இங்ஙனம் திரும்பத் திரும்பப் பாடும் இயல்பு நாட்டுப்புறப் பாடலுக்கு உண்டு. இப்படிச் சொன்னதையே சொல்வதால் சலிப்பு ஏற்படுவதில்லை. இதுவும் நாட்டுப்புறப் பாடலின் தனித்தன்மை. சான்றாக,

> "திங்கள் முடி சூடும் மலை தென்றல் விளையாடும் மலை
> தங்குபுயல் சூழுமலை தமிழ் முனிவன் வாழும் மலை,
> பொங்கருவி தூங்கு மலை பொதிய மலை".
>
> (மீ. கு. 13)

என்ற பாடலடிகளில் 'மலை' என்ற சொல் திரும்பத் திரும்பப் பயின்று வருகிறது. மேலும் ஒரே சொல் முடிவு பெற்றமையும் பாடல்களையும் காண முடிகிறது.

> "மந்த மாருதம் வளரும் மலை எங்கள் மலையே
> வடகலை தென்கலை பயிலும் மலை எங்கள் மலையே
> கந்தவேள் விளையாடும் மலை எங்கள் மலையே
> கனக நவமணி விளையும் மலை எங்கள் மலையே"
>
> (மீ. கு. 15)

என்ற பாடல் 'எங்கள் மலையே' என்ற ஒரே சொல் முடிவை எல்லா அடிகளிலும் பெற்று வருகிறது. இங்ஙனம் ஒரே சொல் முடிவைப்பெற்ற பாடல்கள் தொடர்ந்து பாடப்பட்டிருக்கின்றன. ஒன்பது பாடல்களில் 'பாடநான்' என்பதும், பதினொரு பாடல் களில் 'பாடுவேன்' என்பதும் தொடர்ந்து வரும்சொல் முடிவு களாக விளங்கி நாட்டுப்புறப் பாடல் தன்மையை அளிக்கின்றன.

மீனாட்சி அம்மை குறத்தில் வழக்குச் சொற்கள் மிகுதியும் கையாளப்படவில்லை. ஒன்றிரண்டு சொற்கள் தவிர எஞ்சியவை

செவ்விலக்கியங்களில் பயிலும் சொற்களே. ஆழ்ந்த தமிழ்ப் புலமையும், இளமை முதல் கற்ற தமிழ்க் கல்வியும் பெற்ற புலவராகிய குமரகுருபரரால் ஓர் இலக்கியத்தில் கொச்சைச் சொற்களைப் பயன்படுத்த முடிவில்லையோ என்று கருதத் தோன்றுகிறது. 'ஆர்சொலும் பரியாசம்,' 'இராமேசம்', 'திருப்புத்தூர்,' 'உடுப்பு' போன்ற ஒன்றிரண்டு சொற்கள் பேச்சுவழக்கின், 'யார்', 'ஆர்' என்றும், 'பரிகாசம்', 'பரியாசம்' என்றும், 'இராமேசுவரம்', 'இராமேசம்' என்றும், 'திருப்பத்தூர்', 'திருப்புத்தூர்' எனவும் பேச்சுவழக்குப் பெற்றன.

மீனாட்சி அம்மை குறம் ஆசிரிய விருத்தம், கொச்சகக் கலிப்பா, சிந்து ஆகிய பாவகைகளைப் பெற்று இலங்குகிறது, இவற்றுள் குறத்திக்கேற்ற சந்தங்கள் பயின்று வருகின்றன.

**குறவர் வாழ்வியல்**

நாட்டுப்புறப் புலமை இலக்கியங்கள் உழைக்கும் எளிய மக்களது வாழ்க்கையைச் சித்திரிக்கும் இயல்பின. மீனாட்சி அம்மை குறத்தில் 'குறவர்' என்னும் குலத்தினரது வாழ்நிலை விளக்கப்படுகிறது. குறவரது குலமாண்பு, தொழில் முறை. வாழிடம், உணவு, உடை, உறையுள் போன்ற அவர்களது வாழ்க்கைச் சூழல் நன்கு விளக்கப்படுகிறது.

மீனாட்சி அம்மை குறத்தில், தன் குறக்குடி மிக மேன்மை வாய்ந்ததெனக் குறத்தி மொழிகிறாள். முருகனுக்குப் பெண் கொடுத்த குலம் தன் இனம் என குல மேன்மையினைக் குறிப்பிடுகிறாள். தன் பாட்டி, பெரிய தாய், நற்றாய் சொன்ன குறிகள் அனைத்தும் மெய்யாயின என்பதை உலகறியும் என்கிறாள். தம் இனத்தார் சொல்லியபடி தான் எல்லாம் நடக்கும் என்பதுடன் பொய் கூறும் வழக்கம் தமக்கில்லை என்றும் கூறுகின்றாள். மேலும் தான் சொன்ன குறி எந்நாளும் தப்பியதில்லை என்றும் குறிப்பிடுகிறாள். தடாதகைப் பிராட்டி உலகமுழுதாள்வாள் என்று தான் சொன்னதும், பிஞ்ஞகனே அவளுக்கு மணவாளன் என்று தான் குறிப்பிட்டதும், அவளுக்கு ஆண்மகவு உண்டென்று கூறியதும் அத்தனையும் பலித்தன என்றும் குறத்தின் குறத்தி குறிப்பிடுகிறாள். தன் குறியில் ஐயம் வேண்டாம் என்றும் தெளிவுபடுத்துகிறாள்.

கொழுவிய கொடியிலிருந்து வள்ளிக்கிழங்கை அகழ்ந்து எடுப்பது குறவர் தொழிலாகும். நல்ல வளம் நிறைந்த மலைப்

பகுதியே அவர்கள் வாழிடமாகும். மலையில் பூக்கும் குறிஞ்சி மலரை முல்லையுடன் தொடுத்து அணிவது அவர்களது வழக்கம். பசுந்தழையும், மரவுரியுமே அவர்களது ஆடைகள். நல்ல விளைந்த தினையையும் நறிய தேனையும் தாம் உண்பதுடன் விருந்தினர்க்கும் கொடுத்து உபசரிப்பர். சினம் பொருந்திய வேங்கைப்புலியின் தோலே அவர்களது பாயல். மலைப்பாறைகளில் பல விலங்குகளை வளர்க்கும் இயல்பினர். விலங்குகளைப் பிடிப்பதற்குப் பார்வை விலங்கை வளர்ப்பதும் உண்டு. வேங்கை, மான் போன்ற விலங்குகள் அவர்கள் வாழிடங்களில் திரியும் மலைப் பாறைகளில் தினையை இடிப்பதற்கு உரல்கள் செதுக்கப்பட்டிருக்கும். முற்றத்தில் குறத்தியர் தினையைக் காய வைத்திருப்பர். வீட்டின் இறப்பில் வலைகளும், வார்களும் தொங்கிக் கொண்டிருக்கும்.

குறவரினப் பெண்டிரின் முக்கியத் தொழில் குறி சொல்லல். மீனாட்சி அம்மை குறத்தில் வரும் குறத்தி மிக நேர்த்தியாகக் குறி உரைக்கிறாள். குறி சொல்லு முன் குறத்தி அங்கயற்கண் அம்மையை மனத்துள் நினைத்துக் குறி கூறத் தொடங்கு கின்றாள். குறி சொல்லு முன் குறத்தி செய்து கொள்ளும் ஏற்பாடுகளை 'மீனாட்சி அம்மை குறம்' தெளிவாக எடுத்துரைக்கிறது. முதலில் குங்குமத்தையும் சந்தனத்தையும் குழைத்துத் தரையை மெழுகிக் கோலமிடுகிறாள். பின் தென்மேலை மூலையில் பிள்ளையார் உருவைப் பிடித்து, நறிய மலர் சார்த்தி, நிறைகுடம் வைத்து, அறுகம்புல், தண்ணீர் விளக்கு ஆகியவற்றை வைக்கிறாள். நிறை நாழி நெல்லளந்து குங்கிலியக் கொழும்புகை காட்டிச் செங்கனக நவமணிகளை நாற்றிசையும் பரப்பிக் குறி சொல்வதற்கான ஏற்பாடுகளைக் குறத்தி செய்கிறாள் என்பது மீனாட்சி அம்மை குறம் உணர்த்தும் செய்தி.

குறி சொல்லத் தொடங்கும் குறத்தி, முந்நாழி நெல்லில் ஒரு நாழி நெல்லை முக்கூறுபடுத்தி ஒரு கூற்றை இரட்டைப்பட எண்ணுகிறாள். அது ஒற்றைப்பட முடிவில் அமைகிறது. அது நல்ல குறிக்கு அடையாளம்.

குறிசொல்லும் குறத்தி நற்குறிகள் பலவற்றையும் சுட்டிக் காட்டுகிறாள். எல்லாவற்றையும் கணக்கில் கொண்டு தலைவிக்குக் காதல் கைகூடும் என்ற குறி உரைக்கிறாள்.

மீனாட்சி அம்மை குறம் மேற்கண்டவாறு நாட்டுப்புற மக்களின் பல பழக்க வழக்கங்களைக் குறிப்பிட்டுச் செல்கிறது. குறி கூறுதலில் மட்டுமே

1. நெல்பரப்பி எண்ணல்
2. பல்லி சொல்
3. கற்புடைப் பெண்டிர் பேச்சும், தும்மலும்
4. ஆந்தைக் குரல்

போன்ற பழக்கங்கள், நிமித்தங்கள் குறிப்பிடப்படுகின்றன.

குறவரின் வாழ்வை விரிவாகப் படம் பிடிக்கும் மீனாட்சி அம்மை குறம் அவர்களது வறுமைச் சூழலையும் குறிப்பிடத் தவறவில்லை. மலை உணவை உண்டு வாழ்வதாகக் குறத்தி கூறினாலும் அவளுடைய வயிற்றுப் பசியும் நூலில் குறிக்கப் படுகிறது. தலைவியிடம் ஒரு கலயம் கஞ்சி தருமாறு கேட்கிறாள். குறத்தி தன் சிறிய தலைக்கு எண்ணெயும் வேண்டுகிறாள். அத்துடன் ஆடையும் வேண்டி நிற்கிறாள்.

''ஒரு கலங் கஞ்சியும் என குஞ்சு தலைக்கு எண்ணெயும் ஓர்
கூடுப்பும் ஈ'' (மீ. கு. 24)

என்ற வரிகள் குறத்தியின் வறுமையைச் சுட்டுகின்றன.

**முடிவுரை**

மதுரை மீனாட்சிஅம்மையின் பால் அளவிறந்த அன்புடையவர் குமரகுருபரர். மீனாட்சியாலேயே திருமலை மன்னரின் அவையில் பாராட்டவும் பெற்றவர். அதே அம்மையின் மேல் அன்னார் பாடிய நூலே மீனாட்சியம்மை குறம். எனினும் இந்நூலில் அங்கயற்கண் அம்மையின் புகழையும் விட மேலோங்கி நிற்பது குறவர் வாழ்வியலே. இருபது கண்ணிகளில் அங்கயற் கண்ணியின் புகழ் பாடிய புலவர் நூலின் எஞ்சிய பெரும் பகுதியில் கைக்குறி, மெய்க்குறி, முகக்குறி கண்டு குறிசொல்லும் குறத்தியின் கூற்றுக்கும், வாக்குக்கும் முக்கியத்துவம் தருகிறார் என்பது தெளிவு. எனவே குறவர் வாழ்க்கையைச் சித்திரிக்கும் மீனாட்சி அம்மை குறம் நூல் முழுவதும் பரக்க நாட்டுப்புறக் கூறுகளைப் பெற்றிலங்கும் நாட்டுப்புறப் புலமை இலக்கியம் என்பது பொருந்தும்.

# குருபரரின் வருணனைத் திறம்

சோ. சண்முகம், அண்ணாமலைநகர்

அன்பு மேலீட்டால் இல்லாத ஒன்றையும், இருக்கும் எல்லோருக்கும் தெரிந்த புகழ் வாய்ந்த ஒன்றையும் இருப்பதாகக் கூறிக் கேட்போர் மகிழும் வண்ணம், பாராட்டுவதாகக் கூறுவது தான் வருணனை. இமயம் மேல் உயர்ந்தவன் என்றால் இமயமலை உயரமுடையது. எல்லோருக்கும் தெரிந்தது. அதைப் போலவே நீயும் உள்ளத்தில் மிகவும் உயர்ந்த உள்ளமுடையவன், எல்லோராலும் புகழப்படுபவன் என்று பொருள். "முகம் தாமரையோ" "நீ முக்கனி சர்க்கரையோ" எனத் தாய் தன் குழந்தை மேலுள்ள அன்பு மேலீட்டால் கொஞ்சுகின்றாள். இங்கு முகத்திற்கு உவமையாக தாமரை கூறப்பட்டது. தாமரை மலர் எல்லோரையும் கவர்வது. மென்மையானது. நன்மணம் வீசக் கூடியது. வண்டுகளுக்கு எதையும் எதிர்பாராமல் தேனைத் தரக் கூடியது. அதுபோலவே நீயும் சிவந்த, மென்மையான தாமரை மலரைப் போல முகம் உடையை மலர் தேன் தருதலைப்போல நீயும் மழலைச் சொல்லைத் தருகின்றாய். தேன் இனித்தல் போல உன்னுடைய மழலைச் சொல்லும் இனிக்கின்றது. தாமரை மலர் இதழ் மென்மையானது போல நின்முகமும் மென்மையானது உன் உதடும் இதழ் போல சிவந்து மென்மையானது என்று குழந்தையைத் தன் தாய் வருணித்து மிஞ்சும் பாசத்தால் கொஞ்சி மகிழ்கின்றாள். இவ்வாறு உயர்ந்த, எல்லோருக்கும் தெரிந்த பொருளை – மற்றொரு பொருளுக்கு, உயிருள்ள, உயிரற்ற பொருள்களுக்கு இருப்பதாகக் கற்பனை செய்து, கற்பனை மூலம் வருணித்துக் கூறுவது தான் வருணனை ஆகும்.

**பிள்ளைத்தமிழில் வருணனை**

பிற இலக்கியங்களில் காணப்படும் வருணனைகளைக் காட்டிலும் பக்தி இலக்கியங்களில் வருணனைகள் அதிகம் கையாளப் படுகின்றன. எடுத்துக்காட்டாக சேக்கிழார் எழுதிய

பெரியபுராணத்தில் ''கற்பகத்தின் பூங்கொம்போ! காமன்தன் பெருவாழ்வோ, பொற்புடைய புண்ணியமோ என்ற வரி மூலமும், ''முன்னேவந்தெதிர் தோன்றும் முருகனோ'' என்ற வரி மூலம் வருணனை மிளிர்கின்றது. வள்ளலார் எழுதிய அருட்பாவில்

பொங்குபல சமயமெனும் நதிகளெல்லாம் என்றும் பாடலில் கங்குகரை காணாத கடலே, கண்ணாகக் காண்கின்ற கதியே, மயற்சோலையெல்லாம் தணிக்கின்ற தருவே, பூந்தடமே, ஞானச் செங்குமுதம் மலரவரும் மதியே'' என்று வள்ளலார் இறைவனை வருணிக்கின்றார். அதைப் போலவே குமரகுருபரரும் இங்கு முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் வருணனையை அதிக இடங்களில் கையாளுகின்றார். விநாயக வணக்கம் முதலாக காப்பு முதல் சிறுதேர்ப் பருவம் வரை பத்துப் பருவங்களிலும் இறை வனாக உள்ள முருகனைக் குழந்தையாக நினைத்து வருணிக் கின்றார்.

'பொன்பூத்த குடுமி' என்ற பாடலில் ''பொன் பூத்த குடுமி'' என்பது புலவர்கள். ஆசிரியர், குமரகுருபரர் மங்கலச் சொல்லை முதன் முதலாக ஆள வேண்டும் என்ற நோக்கத்தில் சொல் கின்றார் என்று பிள்ளைத்தமிழுக்கு விளக்க உரையெழுதிய வர்கள் கூறினாலும் இங்கு இமய மலையை பொன் பூத்த குடுமி என்பதனால் இயற்கையாக உடலுக்கு இமயமலை குடுமியாகவும், பொன் பூத்த என்பதனால் சூரிய ஒளிக்கற்றைகள் இமயமலையில் பட்டு காலையில் செஞ்ஞாயிற்றின் ஒளியை பொன்னிறத்தில் ஒப்புமை கூறி குருபரர் வர்ணிக்கின்றார். அழகு அமைந்த குடுமியாகிய பொற்சிகரங்களுயுடைய மேலாக இமய மலையில் தோன்றி பொறிக்கப்பட்ட வெண்ணிலவு தவழ்கின்ற நிறை வாகிய வெள்ளி மலையிலுள்ள ஒப்பற்ற போர் யானையைக் கூடி என்று கூறுகின்றார். இங்குச் சிவபெருமானைப் போர் யானை என்று கூறுவது வருணனை மூலம் ஆண்யானை என்ப தனையும், களிறு என்றதனால் வலிமையுள்ளம், உடைய சிவபெருமானை ''போர்க்களிறு என்றார். சிவபெருமான் பார்வதியுடன் காமத்தில் போர் புரிகின்றான் அத்தகைய சிவனை அடைந்த பார்வதியின் குமரனே என்று கூறுகின்றார் குருபரர். இதைவிட குமரகுருபரர் வருணனைக்கு எடுத்துக்காட்டும் வேண்டுமோ! பொன்பூத்த குடுமி என்பது முருகக் கடவுள் திருவருள் வழி வானொலியாகக் கிடைத்தது.

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் பாடிய குமரகுருபரர் எல்லாம் வல்ல கலைகளைத் தரக் கூடிய கலைமகளிடம் முருகக் குழந்தையைக் காக்க என்று கூறுகின்ற பொழுது, அவளுடைய பெருமையை, பிரம்மனது நாவிலே இருக்கின்ற காரணத்தால் அவன் சிவந்த நிறத்தில் அவளுடைய வெண்நிறம் அழிந்து, சிவப்பு நிறம் பொருந்தாமலும் பழமையாகிய வேதங்கள் முதிர்ந்து ஊறி வருகின்ற மேல்வாய்ப் பல் நீர் சுரத்தலால், அந் நீரில் கலைமகளின் வெண் ஆடை நனையாமலும் இருப்பவளை'' நாத்தழும்பேறத் துதிப்போம் என்று தற்குறிப்பேற்ற அணி மிளிரும் வண்ணம் வர்ணிக்கின்றார். அதைக் கீழ்க்கண்ட பாடல் வரிகள் மூலமறியலாம்.

''துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்து தன்
சுதை நிறஞ் சிதைவுறாமே
தொன்மறை கனிந்தூறும் அண்பல் நீரூறலில்
தூத்துகில் நனப்புறாமே''

பிள்ளைத்தமிழில் முருகப் பெருமானைக் கூறுகின்ற பொழுது எல்லா இடங்களிலேயும் சாதாரணமாக முருகனைக் காணாமல் அடைமொழி போட்டு வர்ணித்துதான் ''செங்கீரை ஆடியருளே'' என்று கூறுகின்றார். கிழக்கோலத்தை, திருக்கோலம் என்றும், அக்கோல அழகுடன் மணக்கோலம் கொண்டான் என்றும் கூறுகின்றார்.

திருக்கோலம் உடனொடு மணக்கோலமானவன்
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே!

என்றார். மேலும் சிவனிடத்தில் பாதி உடல் பகிர்ந்து கொண்ட தைல்யநாயகியின் புதல்வனே என்றும்

''செம்பாதியுங் கொண்ட தையனாயகி குமர
செங்கீரை ஆடியருளே''

என்றும்,

திக்கெட்டும் வினையாடு சேனாபதிக் கடவுள்
செங்கீரையாடி யருளே''

என்றும்,

''தேனூறு கிளவிக்கு வாய் ஊறி நின்றவன்''

என்றும் முருகனை அழகாக வர்ணிக்கின்றார். திருவெம் பாவையில் மணிவாசகர், பாவையர் நீராடுகின்ற பொழுது

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாட
சீதப் புனல் ... ... ...

ஆடுவதாக கூறுவது போலவும், தில்லையிலே நடராஜப் பெருமான் நடனம் ஆடிய போது, நிகழ்ந்த நிகழ்ச்சி போலவும்,

செம்பொன் அடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை அரைஞாண் அரைமணி யொடுமொளி
திகழரை வடம்ஆடப்
பைம்பொன் அசும்பிய தொந்தியோ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டோடு வேட்டச்
சுட்டி பதிந்தாடப்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழ
காதும் அசைந்தாடக்
கட்டிய சுழியும் உச்சியும் முச்சிக்
கதிர்முத் தொடும் ஆடி
அம்பவ ழத்திரு மேனியும் ஆடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத பரிக்குகன்
ஆடுக செங்கீரை.

ஆடுவது போலவும், இங்கு முருகப் பெருமான் செங்கீரை ஆடுகின்ற பொழுது திருவடியில் செம்பொன்னால் செய்யப் பட்ட கிண்கிணிகளோடு சிலம்புகள் கூடியாடவும், திரு அரையில் அரைநாணும் உடை மணியோடும் ஒளி விளங்குகின்ற அரை வடங்கள் ஆடவும், பசும் பொன்போல் ஒளிவீசுகின்ற தொந்தி யுடனே, சிறுவயிறும் சரிந்தாடவும், நெற்றிச் சுட்டியும் குண்ட லமும், குழையோடு கூடிய காதும், அசைந்தாடவும், சுழியும் முச்சியும் முத்துக்களோடு ஆடவும், பவளம் போன்ற அழகிய திருமேனி ஆடவும் என்று முருகப் பெருமான் ஆடிவருகின்ற பொழுது ஏற்படுகின்ற மாற்றத்தை நம் முன்னே கண் கொள்ளாக் காட்சியாக வர்ணித்துள்ளார்.

செங்கீரை ஆடியருளே என்று கூறுவது முருகப்பெருமான், அடியார்கள் மீது கருணை கூர்ந்து அருளை அள்ளி வீசி வர வேண்டும் என்பதற்காக மறைமுகமாக அடியார்கள் சார்பாக ஆடியருளே என்று செயலிலும் பாடல்களிலும் செங்கீரைப் பருவத்தில் கூறுகின்றார். மேலும் அவர் முருகனைக் குழந்தை யாக நினைத்து, அவன் உதடு கடிப்பதனால் வழிகின்ற எச்சில் காயாமல் இருக்க வேண்டும், அழுவதினால் முருகன் தொண்டை கம்மாமல் இருக்கவேண்டும். அழுகின்ற பொழுது கண்மை கரைந்து கண் சிவக்காமல் இருக்க வேண்டும். உடலில் புழுதி படிந்து சுருங்காமல் இருக்க வேண்டும். தொட்டிலில் ஆடுகின்ற பொழுது கையையும் காலையும் போட்டு உந்தும் பொழுது பாதம் நோகாமல் இருக்க வேண்டும், எழுந்திருக்கும் பொழுது கை நோகாமல் இருக்க வேண்டும் என்று குழந்தையின் இயல்பை முருகனுக்குரியதாக எண்ணி வர்ணித்து இறையன்பர் மனதை மெய் உருகச் செய்கின்றார்.

பில்கும் பசுந்தேன் அசும்பியிருந்த
பின்தாழ் அளகத் தரமகளிர்

சிந்துகின்ற பசிய தேன் சிந்துகின்ற பின்னே தொங்குகின்ற அளகத்தையுடைய தெய்வப் பெண்கள், அறியாமையானே குறும்பாக விளையாடுகின்ற பெரிய மகளிர் கூட்டத்தின் சிறிய இடைக்கு, தோய்கின்ற பூங்கொடிகள் சென்று அசையாமல் நிற்றலானும், உயர்ந்த பளிங்கினால் செய்யப்பட்ட நிலா முற்றத்தில், உயர்ந்த சிகரத்தில் மரகதத்தின் ஒளிவீசுவதாலும், அவற்றையெல்லாம் பார்த்து, தெளிந்த விண்ணுலகத்தில் உள்ள தெய்வம் பசுக்கள், அலை வீசுகின்ற நெடிய கங்கைக் கரையில் உள்ள பசும்புல் சிவந்த நாவினை வளைத்து ஏமாற்றமடை கின்றன. அத்தகைய சிறந்த செல்வவளம் மிகுந்த, பொன்னாற் செய்யப்பட்ட மாடங்கள் நிறைந்த, செல்வப் பெருக்கமைந்தகந்த புரி வாழ்வோனேதாலே தாலேலோ என்று சிறப்பாக வர்ணனை செய்துள்ளார் ஆசிரியர்.

சப்பாணி பருவத்தில் முருகனாக விளங்கக் கூடிய குழந்தையை கையைத் தட்டுக என்று கூறி அந்த முருகன் கை தட்டுகின்ற அழகில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கின்றார் ஆசிரியர். அப்படி அவர் உள்ளத்தை முருகனிடத்தில் தன்னை யறியாமல் அன்பு மேலீட்டால் வர்ணிக்கின்றார்.

வளரிள வனமலை மலைமக
ளுக்கொர்த வப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணைகொ
ழித்தபெ ருக்காறே
கலைமறை ஞெமரல் வரியளி
மொய்த்தம லர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி
கொட்டுக சப்பாணி

என்ற பாடலில் மலையரையன் பெண்ணான பார்வதிக்கு ஒப்பற்ற தவப் பயனே என்றும், மடங்குகின்ற அலைகள் மோத உயர்ந்த கருணையாகிய நீர் எறிகின்ற வெள்ளம் புரளும் நதியே! கனிந்த இனிய அமுதமானது தோன்றிய தேனே! அறநெறியானது பெரிய தவத்தோடு வளரும்படி வளர்கின்ற நல்ல தாயே! கனியையுடைய மயிலைச் செலுத்தி விண் உலகம் முழுதும் முடுக்கின தெய்வமே! நூல்கள் வேதங்கள் என்ற வரி வண்டுகள் நெருங்கின பூஞ்சோலையே! தமிழ் பயின்ற மத வலியே! கையைக் கொட்டுக என்று முருகனை வேண்டுகின்றார். இவ்வாறு வர்ணனைக்குக் குன்றின் மேலிட்ட விளக்காக குமரகுருபரர் பிள்ளைத்தமிழில் வைத்தீஸ்வரன் கோயில் முத்துக்குமரசாமியை வர்ணித்து இருப்பது தமிழ் இலக்கியச் சோலையில் சிந்தும் தேனாகும்.

குமரகுருபரர் முத்தப் பருவத்தில் முருகப் பெருமானை முத்தம் தருக என வேண்டுகின்ற பொழுது

கோடுபரு கொங்கை வேட்டுக் கிணைத்திட்ட
கொடியினிடைக் கடைசியர் குழாம்
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒரு மகன்
கனிவாயின் முத்த மருளே...

என்ற பாடலில் புள்ளிருக்கு வேளூரின் செல்வச் செழிப்பை வருணிக்கின்றார். யானைக்கொம்பு போன்ற தனமலையின் பாரத்தால் மெலிந்தகொடி போலும் இடையினையுடைய கடைசியர் கூட்டம், குரவைப் பாட்டு பாடுகின்ற சத்தத்தினால் மேகங்கள் ஒரிடைத்து சேர இளமையான வாளை மீன்கள், ஈன்ற ஆவின் மடியில் முட்டுதலும், தன் கன்று என நினைத்த ஆக்கள் பெரிய மடியாகிய மடைதிறந்து ஒழுகுகின்ற இனிய பாலானது இனிய கற்பகத் தருவில் ஒழுகும் தேனுடன் கலந்து,

ஏரிகள் நிரம்பி கழனியும் சேறுமணம் விடுத்து தெய்வமணம் கமழும் வளமைமிகுந்த புள்ளூரனே! கங்கைக்கும், திருமாலின் தங்கை உமாதேவிக்கும் ஒப்பற்ற புதல்வனாக இருக்கக் கூடியவனே முத்தம் அருள் என்று வருணனையை மிகவும் உயர்வான நிலைக்கு கொண்டு செல்கின்றார்.

முருகன் சிறுபறையைத் தட்டுகின்ற ஓசையைக் கேட்டு உலகியலில் என்னென்ன நிகழ்கின்றன என்பதை

மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை
மடமயி லினம் அகவ
மால்கட லோவிடும் ஒலியென ரிக
மடந்தையர் மனநெகிழப்
பழமறை ஆர்ப்பென ஆகுதி வேட்டெழு
பண்ணவர் உளமகிழப்
பரநா தத்தொலி யெனஅனு பூதி
பலித்தவர் நெக்குருக
அழலவியர் சோதியெம் ஐயன் நடஞ்செய
ஆயிரம் அங்கையினோர்
அண்ணல் துவைத்திடு குடமுழ வொடுசுடர்
ஆழி யவன்கொட்டும்
முழவென அமரரும் முனிவரும் ஆர்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே.

இப்பாடல் மூலம் இந்திர ஞாலம் என்று சொல்லப்படுகின்ற திண்ணிய தேரை உருளாது நிற்கும்படி நியமித்தவனே! திருவளர கந்தபுரிவளர் இளங்குமரனே சிறுதேர் உருட்டி அருள் என்ற குமரகுருபரர், அவனை தேர் உருவருமாறு அழைக்கும் பொழுது "இந்திர ஞாலம் தேரையே உருளாது நிற்கச் செய்தவனே என்று முத்தமிழ் வேலோனை பெருமை பட வர்ணித்துள்ளார் என்பதைக் கீழ்க்கண்ட பாவரிகள் தெளிவாக விளக்குகின்றன.

ஒல்லென் பறநதலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட இந்திர ஞாலத்
திண்தேரை உருளாது நிற்கல் பணித்தவன்
சிறுதேர் உருட்டியருளே

திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே

என அவனை அழைக்கும் பொழுது அவனுடைய பெருமையைக் கூறி அழைக்கின்றார்.

**முடிவுரை**

இப்படி பெருமையாகப் பிள்ளைத்தமிழ் பாடிய பேரருளாளருக்கு மருவுக்கு வாசனை வாய்த்தாற்போன்று பக்தி ஞானவைராக்கியங்கள் உண்டாகி வளர, ஒரு தெய்வம், ஒரு மொழி, ஒரு கலை, ஒரு நாடு என்னும் வரையறையின்றிப் பல தெய்வங்களையும், பல மொழிக் கருத்துக்களையும், பலகலைச் செய்திகளையும், பல நாட்டு வருணனைகளையும், பயன்படுத்துவதற்கு இவரது நீண்ட பயணமும், விரிந்த உலகியலறிவும், பரந்த நோக்கும் ஆகும். இவர் பாடிய பிள்ளைத்தமிழ் பத்துப் பருவங்களிலும், முருகன், பெருமை, போர்த்திறன், அவன் உறையும் தலப் பெருமை, கீர்த்தி, முத்தமிழ் சொல்லாட்சி முறை, இயற்கை வருணனையைக் கண்கொள்ளாக் காட்சியாக காட்டும் திறன் இவைகளெல்லாம் தமிழ் இலக்கியச் சோலையில் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் பூத்துத் தேன் சிந்தும் மலராக மலர்கின்றன.

பிள்ளைத்தமிழ் பாடிய ஞானி அவர்கள் தாமிரபரணி ஆற்றங்கரையில் பிறந்து – தவழ்ந்து, வைகை ஆற்றங்கரையில் வாழ்ந்து, காவிரி ஆற்றங்கரையிலும், கங்கை ஆற்றங்கரையிலும் மடமமைத்து, தமிழையும், சைவத்தையும் வளர்த்து கங்கை ஆற்றங்கரையில் இறைவனுடன் சேர்ந்து விட்டார் குருபரர். இயற்கையழகு மிக்க இத்தகு சூழலும், கங்கை போல் காவிரி போல் வற்றாது வளஞ்சுரக்கும் இவரது முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் வருணனை ஊற்றுக்கு காரணமாயிற்றெனலாம்.

# குமரகுருபரர் பாடல்களில் மருட்பா

வெ. சத்யநாராயணன், தஞ்சை

பத்தியாலும் புலமையாலும் தமிழிற்கு ஆரம் புனைந்த அருளாளர் பலர். அத்தகைய அருளாளர் பலருள்ளும் குறிப்பிடத் தக்க ஒருவர் அருட்டிரு தவராசசிங்கம் ஆதிகுமரகுருபர அடிகள் ஆவர். அவர்தம் பத்திமை நெறி அவரை ஓதாதுணர்ந்த முனி எனப் பேச வைத்தது. இலக்கியச் சிறப்பு, சிற்றிலக்கிய வேந்தர் எனக் கூறி நிற்கும். அடிகள்தம் இலக்கியச் சிறப்பிற்கு இலக்கணப் புலமை ஊடிழையாக நிற்கிறது. அதனுள் அடிகளின் மருட்பாக்கள் மட்டும் ஈண்டுப் பொருளாகின்றன.

**புலமைத்திறம்**

அருட்டிரு மாசிலாமணி தேசிகர் ஆணையின்படித் தில்லை வந்து வழிபட்டிருக்கும் நாளில், தில்லைச் சிற்றம்பல மும்மணிக் கோவை பாடினார். அது போழ்து 'அடிகள் இலக்கியப் பயிற்சி மட்டுமே உரியரோ' எனச் சிலர் ஐயுற்றனர். அடியார்தம் ஐயம் தீர்க்கும் வகையில், தில்லைப்பெருமான் அருளுடன் சிதம்பரச் செய்யுட் கோவையைப் பாடினார்.

யாப்பருங்கலக் காரிகை கூறும் பா, பாவினங்கட் பல வற்றிற்குச் சான்றாய் அமையும் இக்கோவைப் பாடல்களுக்கு அடிகளே இலக்கண நுட்பத்துடன் குறிப்புரை வரைந்தார் என்ற கருத்துமுண்டு. மாலிய நெறியில் அமைந்த பாப்பாவினச் சான்றுப் பாடல்கள் போலச் சிவ பரத்துவம் கனிந்த பாடல் களாய் இவை அமைந்தன.

**மருட்பா இலக்கணம்**

வாழ்த்தியல் வகை நாற்பாக்கும் உரியது என்று கூறிய தொல்காப்பியர்,

> புறநிலை, வாயுறை, செவியறி வுறாஉஎனத்
> திறநிலை மூன்றும் திண்ணிதில் தெரியின்
> வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
> பண்புற முடியும் பாவின மென்ப (செய். 154)

என்ற நூற்பாவில் வெண்பாவாகி ஆசிரியத்தாலும் அவை முடியும் என்கிறார். இதுபோன்று கைக்கிளையும் வெண்பாவாகி ஆசிரியத்தாலும் முடியும் (செய். 115). இதுவே மருட்பாவிற்கு அடிப்படை விளக்கமாய் அமைகிறது.

தொல்காப்பியர் பாக்களையும் அவற்றிற்குரிய பொருண்மை களையும் ஆங்காங்கு உரைத்துச் சென்றுள்ளார். தொல்காப்பியம் அகத்திணையியலில் கலி, பரிபாட்டு ஆகிய இரண்டும் அகத் திணைப் பொருண்மையவாய் அமையும் என்றார். அதுபோல்

"... ... ...கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை என்றிவை
தொகை நிலை மரபின் அடியில் என்ப" (செய். 153)

என்ற நூற்பாவில் மருட்பாக்களின் பொருளமைதி செவியறி வாயுறை புறநிலை, கைக்கிளை என்ற நான்கன்றிப் பிற வாரா என்ற குறிப்பில் பொருளமைதி கொண்டு பா சுட்டப்பெறுகிறது. தொல்காப்பியப் புறத்திணையியலில் (புறத். 29) வாயுறை வாழ்த்து செவியறிவுறூஉ புறநிலை வாழ்த்து கைக்கிளை ஆகிய மருட்பாக்களுக்குரிய பொருண்மைக் கூறுகள் சுட்டப்பெற்று உள்ளன. இளம்பூரணர் கருத்தின்படிக் கைக்கிளைப் பொருண்மை வெண்பாவில் வரின் அகத்திணையாயும் ஆசிரியமாய் வரின் பாடாண் (புறத்) திணையாயும் அமையும் (செய். 114. உரை).

இவை பொருள் தொடர்ச்சிக்கு ஏற்ப நீண்டு அமையப் பெறும். தனித்த அடியளவில்லை. கைக்கிளை யாப்பிற்கு விளக்க மளிக்கையில் இளம்பூரணர் (செய். 115 உரை) 'கைக்கிளைப் பொருண்மை வெண்பாவினால் வருதலன்றி முதலிரண்டடியும் வெண்பாவாகிக் கடையிரண்டடியும் ஆசிரியமாகி இரு பாவினாலும் வரும் என்ல் நோக்கத்தக்கது. இவ்விரு கருத்தின் அடிப்படையில் மருட்பா சமனிலை வியனிலை எனப் பிற்காலத்து உணர்த்தப் பெற்றது. இப்பாகுபாடு கைக்கிளைக்கேயன்றி வாழ்த்தியல் மருட்பாக்களுக்கும் உரியவாயிற்று.

ஓசை நிலையில் மருட்பாவிற்குத் தனி ஓசை இல்லை. வெண்பாவும் ஆசிரியமும் உறுப்பாக இவ்விரண்டின் ஓசையே அதற்கும் ஓசை என அமைகிறது (செய். 81). தொல்காப்பியம் கலியும் வஞ்சியும் மருட்பா நிலைபெறா என்றமையால் பிற்காலத்து எழுந்த காரிகை (36) துணிந்து 'வெண்பா முதல்

வந்து அகவல் பின்னாக விளையும்’ என்று விதி வகுக்கிறது. இக்காரிகையின் உரையில் கைக்கிளை எல்லா பாவகையிலும் வரப்பெறும். மருட்பாவில் அமையின் வெண்பா முதலாய் ஆசிரியம் ஈறாய் ஆசிரியம் இரண்டேயடியாய் அவற்றுள் ஈற்றயலடி முச்சீரான் வரும் என்று குணசாகரர் விளக்கம் அளிக்கிறார். மேலும் இவ்வாறு அடி ஒத்து வரும் மருட்பாக்கள் சமனிலை என்றும் ஒவ்வாதன வியனிலை என்றும் குறிப்பிடுகிறார்.

**குமரகுருபரர் பாடிய மருட்பா வகைகள்**

குமரகுருபரர் யாத்த பனுவல்களாய்க் கிடைப்பனவற்றுள் காசிக்கலம்பகம் மதுரைக்கலம்பகம் சிதம்பரச் செய்யுட்கோவை ஆகியன மருட்பாக்களை உடையன. கலம்பகங்களில் ஒவ்வொன்றும் சிதம்பரச் செய்யுட்கோவையில் நான்கும் என மொத்தம் ஆறுபாக்களை உடையன. ஆறு பாக்களுள் கைக்கிளைப் பாடல்கள் மூன்று. அவற்றுள் ஒன்று செய்யுட் கோவையிலும் பிற இரண்டு கலம்பகம் இரண்டினுள்ளும் அமைகின்றன. புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ ஆகிய மூன்றும் செய்யுட்கோவையில் மட்டும் அமைந்துள்ளன.

**கைக்கிளைப் பாடல்கள்**

கைக்கிளைப் பொருள்மேல் பாடப்பட்ட பாடல்கள் மூன்று. இவற்றுள் ஆசிரிய அடிமிக்கு வியனிலைப் பாடல்களாய் இரண்டு அமைகின்றன. காசிக் கலம்பகத்தில் (69) வரும்

> விண்ணமிர்து நஞ்சாம் விடமும் அமிர்தமாம்
> உண்ணமிர்த நஞ்சோ டுதவலால் – தண்ணென்
> கடலோடு பிறந்தன போலும் தடமலர்க்
> கடிநகர்க் காசியுண் மேவு
> மடலவிழ் கோதை மதர்நெடுங் கண்ணே

என்ற பாடலில் தலைவன் தலைவியினைக் கண்டுக் காதலுறும் வேட்கைப் புலனாகின்றது. கைக்கிளையாய்த் தலைவி செய்த நோய் உணர்த்தப்பெறுகிறது. அடிகள் நஞ்சும் அமுதும் போல் இருதன்மைத்தாய் தலைவியின் கண்கள் விளங்குதல் பாற்கடலில் அமுதும் ஆலமும் தோன்றியதற்கு ஒப்பாம் என நயம்பட உரைக்கிறார். இந்நயம்

இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து (குறள்–1091)

என்ற திருக்குறளுடன் ஒப்பிடத்தக்கது.

சிதம்பரச் செய்யுட்கோவையில் அமைந்த வியனிலை மருட்பா (82),

பருந்தளிக்கும் முத்தலைவேய் பண்ணவற்கே பன்றி
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்குந் – திருந்த
வலனுயர் சிறப்பின் மன்ற வாணனக்
குலமுனி புதல்வனுக் கீந்த
வலைகட லாகும்இவ் ஆயிழை நோக்கே

என்று அமைகிறது. இப்பாடலுக்குக் கைக்கிளைப் பொருள் மேல் வருதலின் கைக்கிளை மருட்பா வெள்ளடி குறைந்து ஆசிரிய அடி மிகுதலின் இது வியனிலை என்ற குறிப்புக் காணப்படுகிறது. இப்பாடலில் சிதம்பரநாதன் சிறப்பு, சுட்டப் பெறுகிறது. களவித் தலைவன் தில்லைவாணர், அகத்தியனுக்கு அருளிய கடல்போல் தலைவியின் நோக்கு வருத்துவதாய்க் கூறுகிறான்.

அஞ்சேன் மடநெஞ்சு அபிடேகச் சொக்கரருட்
செஞ்சே வடிக்கடிமை செய்யார்போல் – துஞ்சா
தெறிதிரைக் கருங்கடல் ஏய்க்கும்
மறலியற் கூந்தல் காடமர்க் கண்ணே

என்றமையும் மதுரைக் கலம்பக மருட்பா (44) 'வெள்ளடியும் ஆசிரியமும் சமமாய் நிற்றலின் சமனிலை மருட்பாவாய் அமைகிறது. இப்பாடலிலும் மதுரைச் சொக்கநாதர் அருள் பெறார் அல்லலுறல் போன்று தலைவியின் கடலொத்த கருங்கண்ணால் தான் வருந்துவதாய் இக்கூற்று அமைகிறது.

இம்மூன்று பாடல்களிலும் தலைவியின் கண் தன்னை வருத்துவதாய்க் கூறுதல் தலைவியை முதலில் கண்ட காட்சி என்ற அகக் கூற்றினை ஒத்ததாய் அமைகிறது. கைக்கிளைக் குரிய பொருளமைதியில் குன்றாமல் சொல்லெதிர் பெறாது, தான் சொல்லி இன்புறும் குறிப்பாய் அமைகின்றன. இவை மூன்றும் ஆண்பாற் கைக்கிளைக் கூற்று. மேலும், இவை குணசாகரர் குறித்ததுபோல் சமனிலையாய் மட்டும் அமைய வில்லை. வியனிலையாயும் அமைந்துள்ளன.

**வாயுறை வாழ்த்து**

வாயுறை வாழ்த்தினுக்கு இலக்கணம் கூறும் தொல் காப்பியர் 'வேம்பும் கடுவும் போல் வெஞ்சொல் இன்றி நற்சொற்களுடன் பயனுடையதாய்க் கூறுதல் வாயுறையாகும்' (வாயுறையாவது சொல் மருந்து). சிதம்பரச் செய்யுட் கோவையில் (83)

> வம்மி னமரங்காண் மன்றுடையான் வார்கழற்கண்
> உய்ம்மின் உறுதி பிறிதில்லை - மெய்ம்மொழியிற்
> தென்மொழி பிழையா தாகும்
> பின்வழி நுமக்குப் பெரும்பயன் தருமே

என்ற மருட்பா அமைகிறது. இது சமனிலை மருட்பா. இப்பாடலில் மன்றுடையான் அடியில் சேர்ந்திடக் கூறும் அருளாளர் தமிழ் பிழையன்று உய்விக்கச் செய்யும் திருவடி, பின்னர் பேரருட்பயன் தருமென உய்யும் முறைகளை எடுத்துரைப்பதாய் அமைகிறது.

**செவியறிவுறூஉ**

செவியறிவுறூஉ என்பது பெரியோர் சொல்பேணி ஒழுகுதல் நன்றாம் என அறிவுறுத்தும் பாங்கில் அமைவது. 'இச்செவியறி வுறூஉ மருட்பா வியனிலையாய்

> வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
> தாழ்த்துமின் சென்னி தலைவர்க்கு - வீழ்த்த
> புறநெறி யாற்றா தறநெறி போற்றி
> நெறிநின் றொழுகுதீர் மன்ற
> துறையறி மாந்தர்க்குச் சூழ்கடனிதுவே

என்ற செய்யுட்கோவைப்பாடல் (84) அமைகிறது. இப்பாடலில் தில்லைத்தலம் வாழ்த்தி, பொன்னம்பலம் நினைத்து பரமனை வணங்கிச் சிவநெறி போற்றி ஒழுகுதல் மாந்தர்க்கு உரிய கடன் என்று அறிவுறுப்பதாய் அமையக் காணலாம்.

**புறநிலை வாழ்த்து**

தொல்காப்பியர் புறநிலை வாழ்த்தினை,

> வழிபடும் தெய்வம் நிற்புறங் காப்பப்
> பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
> பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்து

என விளக்குகிறார். செய்யுட்கோவையில் (81)

அரசியல் கோடா தரனடியார் பேணும்
முரசியல் தாணைவேன் மன்னர் – பரசோன்
கழலிணை பொதுவில் காப் பாக
வழிவழி சிறந்து வாழியர் பெரிதே

என்ற பாடல் அமைகிறது. இப்பாடலுக்கு இது முன்னர் வெண்பாவும் பின்னர் அகவலும் புறநிலை வாழ்த்தாய் வருதலின் புறநிலை வாழ்த்து மருட்பா. வெள்ளடியுஞ் ஆசிரியவடியுஞ் சமமாகலின் இது சமனிலை என்ற குறிப்புரை காணப்படுகிறது. அரசியல் பிழையாது சிவனடியாரைப் பேணும் மன்னவன் இறைவன் கழலே துணை நிற்க வழிவழியாய்ச் சிறந்திட வாழ்க என்ற வாழ்த்தியல் அமைப்புடன் அமைவதைக் காணலாம்.

குமரகுருபரர் பாடிய மருட்பாக்கள் யாவும் வெண்பாவில் தொடங்கி ஆசிரியத்தான் முடிகின்றன. அடிவரையின்று எனத் தொல்காப்பியர் கூறும் நிலையில் அடிகள்தம் மருட்பாக்கள் நான்கு அல்லது ஐந்தடிக்குள் அமைந்து விடுகின்றன. அவ்வப் பொருண்மைக்குரியவாய் பொருணிலை சிதையாது யாப்பியல் நுட்பம் வழுவாது நெறிப்படி அமையும் இப்பாடல்களில் இறைவன் பெருமையும் இலக்கியச் சிறப்பும் கலந்து திகழ்கின்றன. சிதம்பரச் செய்யுட் கோவையில் காணப்படும் யாப்பியல் குறிப்பு குமரகுருபரரால் எழுதப்பெற்றதா என அறியப் பெறவில்லை. எனினும் ஆசிரியரான் எழுதப்பெற்றிருக்கும் வாய்ப்பும் உண்டு.

# குமரகுருபரரின் கொஞ்சுந்தமிழ்

**மு. சதாசிவம், ஈரோடு**

"தமிழுக்கும் அமுது என்று பேர்" என்று பாடினார் பாவேந்தர் பாரதிதாசனார். தமிழுக்கு 'இனிமை' என்ற பொருளும் உண்டு என்று நிகண்டுகள் கூறுகின்றன. எனினும் தமிழ் அமுதாகவும், இனிமையாகவும், படிக்கப் படிக்க அல்லது பாடப்பாட நா இனிக்கக் கூடியதாகவும் உள்ளது என்பதை மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டியவர் குமரகுருபர அடிகளேயாவர். இவருடைய எல்லாப் பாடல்களிலும் பைந்தமிழ் கொஞ்சி விளையாடும்; இவர்தம் சொல்லமைப்புக்களும், சந்தங்களும் நவில்தொறும் நல்லின்பம் நல்கும். இவருடைய பாடல்கள் தரும் சொல்லின்பத்தில் மயங்கியே, முழு நாத்திகராக விளங்கிய பாவேந்தர் பாரதிதாசனார் இவரைப் புகழ்ந்து பாராட்டி யுள்ளார்.

குமரகுருபரர் நம் தமிழுக்குக் கொடுக்கும் அடைமொழி களைப் பார்க்கும்போதே அடிகளார் இன்பத் தமிழ் மீது எவ்வளவு ஈடுபாடு கொண்டிருக்கிறார் என்பது புலப்படும். (பிறையடைப்பில் பாட்டின் எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன); பைந்தமிழ் (3); மதுரம் ஒழுகிய தமிழ் (4); முத்தமிழ் (5); தெள்ளித் தெளிக்குந் தமிழ் (10); பண் உலாம் வடிதமிழ் (15); தென்னந் தமிழ் (24) பசுந் தமிழ் (32); செழுமறை தெளிய வடித்த தமிழ் (43); தெய்வத்தமிழ் (49) முத்தமிழ் (53); செஞ் சொற்றமிழ் (54); மதுரம் ஒழுகும் கொழி தமிழ் (55); நறை பழுத்த துறைத்தீந் தமிழ் (62); மும்மைத் தமிழ் (69); தீந் தமிழ் (105); வடிபசுந் தமிழ் (352); இழுமென் மொழித் தெளி தமிழ் (439); தெள்ளு தமிழ் (448); செழுந்தமிழ் (703); கலைத் தமிழ் (706); செந்தமிழ் (பக் : 594).

மேற்குறித்த அடைமொழிகள் அடிகளார் தமிழை வெவ்வேறு கோணங்களில் கண்டு அதன் சுவையைத் துய்த்து மகிழ்ந்தார் என்பதற்கு எடுத்துக்காட்டுக்களாய் உள்ளன.

இனிக் குமரகுருபரர் அடிகளாரின் கொஞ்சுந் தமிழ்ப் பாடல்கள், அழகுத் தொடர்கள், எதுகை, மோனையின்பம் பயக்கும் வரிகள், 'ழ' கரந்தரும் இன்பம் முதலியவற்றிற்கு, இடச்சுருக்கங் கருதி, ஒரு சில எடுத்துக்காட்டுக்களே ஈண்டுத் தரப்பெறுகின்றன. அடிகளாரின் அனைத்துப் பாடல்களுமே தமிழ் கொஞ்சி விளையாடும் அமுதக் கடலாக உள்ளதை நுண்ணுணர்வோர் உணர்வர்.

அடிகளார் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் பின்வரும் அமுதப் பாடலைப் பாடிய பொழுது மீனாட்சியம்மையே மகிழ்ந்து ஒரு பெண் மகளாக வந்து பொன்னாரம் தந்து மறைந்ததாகக் கூறுவர். இப்பாடலின் சுவையில் தம் நெஞ்சத்தைப் பறிகொடுத்த, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பிறங்கிய பெரும்புலவர் உலக ஊழியனார் அவர்கள் தாம் சொற்பொழிவாற்றத் தொடங்கும் ஒவ்வொரு முறையும் கடவுள் வாழ்த்துப் பாடுவது போல இப்பாடலை முழுவதும் பாடிவிட்டே சொற்பொழிவைத் தொடங்குவார். இப்பாடலின் ஒவ்வொரு சொல்லிலும் அமுதச் சுவை சொட்டி நிற்கிறது. அப்பாடல் வருமாறு;

"தொடுக்குங் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறை பழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கை அகழ்ந்து
எடுக்குந் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே வளர் சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்து நின்ற
ஒருவன் திருவுள்ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோவியமே மதுகரம் வாய்
மடுக்குங் குழற்காடு ஏந்தும் இள
வஞ்சிக் கொடியே வருகவே,
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (62)

சிலேபி, அல்வா, மைசூர்ப்பாக் முதலிய இனிப்புத் தின்பண்டங்கள் எப்படி இனிக்கும் என்று எத்துணைச் சொற்களால் விளக்கினாலும் அவற்றின் இனிப்பு அனுபவத்தில் தோன்றாது; ஆனால் அவ்வினிப்புப் பண்டத்தைச் சிறிதே நாவினில் வைத்துச் சுவைக்கும்போதே அதன் இன்பத்தை எளிதில் அனுபவிக்க முடிகிறது. அதுபோலவே அடிகளாரின் கொஞ்சுதமிழ்ப் பாடலின் இன்பம் இப்படிப்பட்டது என்று சொற்களால் வர்ணித்துக் கூற முடியாது; வாய்விட்டுப் படிக்கும் போதே இன்பம் வாயூறி நிற்கும் பின்வரும் பாடலைப் பாடிப் பாருங்கள்:

"உருகி உருகி நெக்குநெக்குள்
உடைந்து கசிந்திட்டு அசும்பூறும்
உழுவ லன்பிற் பழவடியார்
உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்
பெருகு பரமா னந்தவெள்ளப்
பெருக்கே சிறியேம் பெற்ற பெரும்
பேறே ஊறு நறைக் கூந்தற்
பிடியே கொடிநுண் நுசுப்பொசிய
வருகுங் குமக்குன்று இரண்டேந்தும்
மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்
மதுரங்கனிந்த பசுங்குதலை
மழலை யரும்பச் சேதாம்பல்
முருகு விரியுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்மும்
முலையாய் முத்தந் தருகவே" (45)

மேற்குறித்த பாடல்களை எத்துணை முறை பாடினாலும் தெவிட்டாத இன்பம் உவட்டெடுப்பதைத் தமிழ் உணர்வாளர் அனுபவத்தில் அறிவர்.

அடுத்து, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் குழந்தை முத்துக்குமரன் செங்கீரை யாடுவதைச் சொல்லிலேயே ஆட்டத்தை வடித்துக் காட்டுகிறார், குமரகுருபர அடிகளார்.

"செம்பொன் அடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞாண் அரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்

பைம்பொன் அசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காதும் அசைந்தாடச்
சுட்டிய சூழியும் முச்சியு முச்சிக்
கதிர் முத் தொடு மாட
அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை'' (365)

இப்பாடலைச் சந்தத்துடன், தாளத்துடன் பாடினால், முத்துக்குமரன் முன்னின்று ஆடுதலை உணரலாம்.

இன்னொரு பாடல் அதே பிள்ளைத்தமிழில் சந்த விருத்தத்தில் அமைந்துள்ளது.

''தனன தனன தனன தனன
தனன தனன தத்தன

என்ற சந்தக்குழிப்பில் பாட வேண்டும். குழந்தை முத்துக் குமரனிடம் முத்தம் பெற வேண்டுமாயின் முத்துத் தமிழில் கொஞ்சிக் கொஞ்சிப் பேசவேண்டும் அன்றோ! இதோ குமரகுருபரரின் கொஞ்சுந் தமிழ்;

''மதியு நதியு மரவும் விரவு
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமு மகமும் மலர
மழலை ஒழுகு சொற் சொலும்
புதல்வ! விமய முதல்வி அருள்செய்
புனித அமரர் கொற்றவன்
புதல்வி தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய
கதிரு மதியு மொளிர ஒளிரும்
ஒளிய வளிய கற்பகக்
கனியின் இனிய உருவ! பருவ
மழையி னுதவு கைத்தல!

முதிரும் அறிவில் அறிஞர் உணரும்
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவுபருதி புரியின்
முருக தருக முத்தமே (398)

இதோ ஒரு ஊசல் பாட்டு நம்மை ஊஞ்சலாட்டி விடுகிறது:

"கொம்மைக் குவடசையக் கூர்விழிவேல் போராடக்
கம்மங் கலனுஞ் சிலம்புங் கலந்தார்ப்ப
மும்மைத்தமிழ் மதுரை முக்கணப்பன் சீர்பாடி
அம்மென் மருங்கொசிய ஆடுக பொன் னூசல்
அழகெறிக்கும் பூண்முலையீர் ஆடுக பொன் னூசல்! (127)

முத்துக்குமரனை வருக வருக என்று அழைக்கும்போது குமரனைப் போலவே குமரகுருபரரின் தமிழும் கொஞ்சி நடை போடுகிறது.

"இழுமென் அருவி சொரியும் இமய
முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவும் அழகும்
எழுத அரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல
வதனன் வருக வருகவே
ஒருவன் இருவ ரொடுகை தொழுநல்
உபய சரணன் வருகவே
விழுது விடுவெண் நிலவு பொழியும்
நகையன் வருக வருகவே
விளரி பயிலும் அளியும் ஞிமிறும்
விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர
வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின்
மருவு குமரன் வருகவே" (409)

குறத்தியர் பேசுந் தமிழில் கூடச் சந்தமும், தாளமும் கும்மாளி யிடுவதைச் செவியால் கேட்டுக், கேட்டு இன்புறலாம். ஆயிரம் முறை படித்தாலும் சலிப்புத் தராத பாடல்கள் அடிகளாரின் பாடல்கள்.

"கொழுங் கொடியின் விழுந்த வள்ளிக்
கிழங்கு கல்லி யெடுப்போம்
குறிஞ்சி மலர் தெரிந்து முல்லைக்
கொடியில் வைத்துத் தொடுப்போம்.

பழம் பிழிந்த கொழுஞ்சாறுந்
　　தேறலும் வாய் மடுப்போம்
பசுந்தழையு மாவுரியும்
　　இசைந்திடவே யுடுப்போம்
செழுந்தினையு நறுந்தேனும்
　　விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித் தோலின்
　　பாயலிற்கண் படுப்போம்
எழுந்துகயற் கணி காலில்
　　விழுந்து வினை கெடுப்போம்
எங்கள் குறர் குடிக்கடுத்த
　　இயல்பிதுகாண் அம்மே　　(மீனாட்சி குறம்-18)

எதுகையின்பம் தரும் சில வரிகளை இனிக் காண்போம்.

"தெண்டிரை கொழித்தெறிய வெண்டிரை நெருப்பூட்டு
　　தெய்வக் குழந்தை" (38)
"ஆணிப்பொன் வில்லி புணர் மாணிக்க வல்லியுடன்
　　அம்புலி ஆடவாவே". (68)
"வஞ்சகம் பழகும் அஞ்சனக் கள்வர்" (587-20)
"வஞ்சி யேஅப ரஞ்சி யேமட மயிலே வரிக்குயிலே
　　கொஞ்சி யேபழி யஞ்சி யாருனைக் கூடுவார்
　　　　இனி யம்மே" (பக். 595)

29 ஆம் பாடல் முழுதும் எதுகையின்பம் பயக்கின்றது. அதனை நூலின்கண் படித்துணர்க. (அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பு) இனி, மோனையின்பம் பயக்கும் சில வரிகளைக் காண்போம்.

"அஞ்சிலம் போலிட அரிக்குரற் கிண்கிணி
　　அரற்று செஞ் சீறடி" (54)
"ஆனேறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும்
　　அருமருந்த தாகிநின்ற ஆதிப்பிரான்" (364)

தமிழுக்கே உரிய சிறப்பெழுத்தான 'ழ' கரத்தில் அடிகளாருக்கு ஈடுபாடு மிகுதி. ழகரத்தை மிகுதியாக வரச்செய்து அமிழ்தத்தை வடித்துத் தருகிறார்;

"குழலிசை பழகிய மழைமுகில் எழ எழு
　　கொம்பே" (22)

"எழுதாக் கிளவியின் ஏழிசை பழுத்த
இழுமென் குரல மழலைத் தீஞ்சொல்". (312)

"இழுமென் மழலை இன்னமுது உறைப்பப்
பிழிதேன் ஒழுக்கின் ஒழுகுமின்" (656)

இறுதியாகச் சில அழகுத் தொடர்களைப் படித்து அளப்பில் இன்பம் உறுவோம்.

"தெள்ளமுது இறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்" (58)

"அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி
ஆடுக செங்கீரை" (366)

"வழியும் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர அமுது குழைத் தூற்றும் மழலை" (392)

"அழகுபொலி கந்தபுரி தழைய வரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே" (412)

"கச்சைப் பொருது மதர்த் தெழுந்து
கதிர்த்துப் பணைத்த மணிக்கொங்கை" (பக். 598)

"எழுதாக் கிளவியின் ஏழிசை பழுத்த
இழுமென் குரல மழலைத் தீஞ்சொல்" (312)

இவ்வாறு எங்கெங்கு படித்தாலும் குமரகுருபர அடிகளாரின் எல்லாப் பாடல்களிலும் தமிழ் கொஞ்சி விளையாடுவதைக் கண்டு களிபேருவகை கொள்ளுகின்றோம்.

# மதுரைக்கலம்பகத்துள் வலைவீசு புராணம்

சொ. சந்திரவாணன், குற்றாலம்

குமரகுருபர சுவாமிகள் பாடிய பிரபந்தங்களில் ஒன்று மதுரைக் கலம்பகம். அக்கலம்பகத்துள் இறைவனின் திருவிளை யாடல்கள் சிலவற்றைக் கையாண்டுள்ளார். அவற்றில் ஒன்றான வலைவீசு புராணத்தை எந்த இடத்தில் எவ்வாறு கையாண் டுள்ளார் என்பதையும், அப்புராணக் கருத்தைக் கூறுவோர் உள்ளத்திற்கேற்ப ஏற்படும் மாற்றங்களைப் பற்றியும் எடுத்துக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். மேலும் அண்மையில் தொல்பொருள் துறையால் தென்காசியில் கண்டுபிடிக்கப்பட்ட கி.பி. 18-ஆம் நூற்றாண்டுச் செப்பேடு இப்புராணக் கதையினை எடுத்துக் கூறும் தன்மையும் ஒப்பு நோக்கப்படுகிறது.

### கலம்பகம்

சுருங்கச் சொன்னால் தெய்வங்களையோ அன்றி மக்களில் சிறந்தாரையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவ்வவர் களின் புகழ்பெறு செயல்களைப் பற்றி அகம் புறம் எனும் பொருட்துறைகள் விரவப் பல்வகை உறுப்புகளாலும், பல வகைப் பாவினங்களாலும் பாடப்படுவது கலம்பகமாகும். அவ்வகையில் கி. பி. 9-ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த 'நந்திக் கலம்பகமே' நமக்குக் கிடைத்துள்ள கலம்பக நூல்களில் பழமை யானதாகும். இருப்பினும் கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் சுவாமிகள் பாடியருளிய மூன்று கலம்பகங்களில் ஒன்றான மதுரைக் கலம்பகமே இங்கு ஆய்வுப் பொருளாகிறது.

### மதுரைக் கலம்பகம்

மேற்சொன்ன இலக்கண முறையோடு மதுரையின் புகழ் பரப்பும் கலம்பக நூலாதலின் 'மதுரைக் கலம்பகம்' என்று பெயர் பெற்றது. நான்மாடக்கூடலாம் மதுரையுள் சுவாமிகள் அதிக காலம் தங்கியதால் இறைவன் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களும் சுவாமிகள் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து

விட்டன எனலாம். அப் பதிவே அவரது இலக்கியமான மதுரைக் கலம்பகத்தில் பல இடங்களில் பிரதிபலித்துள்ளன. அவ்வறுபத்து நான்கு திருவிளையாடல்களில் 24 திருவிளையாடல்களைத் தம் நூலுள் கையாண்டுள்ளார்.

சுவாமிகள் கையாண்டுள்ள இவ்விருபத்து நான்கு திருவிளை யாடல்களையும் சுருங்கக் கூறி விளங்க வைக்கும் வகையில் ஓரிரு வரிகளில் தொடங்கி நான்கு வரிகளுக்குள்ளோ அன்றி அதற்கு மேலோ தேவைப்படுகின்ற இடத்தில் கையாண்டுள்ள விதம் அவரின் தொன்னூலின் ஆழ்ந்த புலமையை வெளிப் படுத்துவதாய் அமைகிறது எனலாம்.

**வலை வீசு புராணமா? வலை வீசு படலமா?**

புராணம் என்ற சொல்லுக்குப் பண்டைய வரலாறு என்பது பொருள். இது ஆய கலைகள் அறுபத்து நான்கினுள் ஒன்று. அது 'உலகின் தோற்றம், உலகக் கேடு, பாரம்பரியம், மந்வந்தரம் பரம்பரைக் கதை' ஆகிய இவ்வைந்து இலக்கணத்திற்குட்பட்டு நல்ல நீதிகளைக் கதை மூலம் எடுத்தோதி மக்களை நல்வழிப் படுத்துவதாகும்.

இறைவனின் 64 திருவிளையாடல்களை ஒருசேர எடுத்துக் கூறுவது திருவிளையாடற் புராணமாகும். அதில் ஒன்று வலை வீசு படலம். அப்படலத்துள் இறைவன் வலை வீசுபடவனாய் வந்த திருவிளையாடலைக் கதையாகக் கூறுவது எனப் பிரிக்கலாம்.

பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடற் புராணத்தி லுள்ள வலைவீசின படலத்திலும், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலும் நந்தி தேவரே 'மகர மீனாக' வந்தார் என்று கூறப்படுகின்றது. ஆனால் 'வலை வீசு புராணம்' என்ற நூலில் 'இறைவன் பார்வதி தேவிக்கு வேதப் பொருளை உணர்த்திய போது முருகன் வண்டுருக் கொண்டு பார்வதி தேவியின் கூந்தலில் மறைந்திருந்து கேட்டார். அதனால் சினம் கொண்ட சிவன் முருகனை மகர மீனாகச் சபித்தார்' என்று கூறப்படுகின்றது. தென்காசிப் பாண்டியர் காலத்துச் செப்பேட்டிலும் மகரமாக வந்தது முருகனே என்று கூறப் படுகின்றது.

மகர மீனாக வந்தது யார் என்பதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டாலும் அம்மகரத்தைப் பிடிக்க இறைவன் வலையோடு வந்தான் என்பதில் நூலாசிரியர்களுக்கு வேறுபாடில்லை. வலையோடு வந்ததின் நோக்கம்; 'மகரம் பிடிப்பவர்களுக்குத் தம் மகளை மணமுடித்துத் தருவதாகச் சொன்ன மீனவர் தலைவனின் கூற்றை மெய்ப்பிக்கவே' என்பது யாவரும் அறிந்ததே.

ஆனால் சுவாமிகள், மதுரைக் கலம்பக நூல் பகுதியில் இறைவன் வலை சுமந்து வந்தது எதற்காக என்பதைக் கூறும் பாடலில்;

ஊன் வலையில் அகப்பட்டார்க்கு
உட்படாய் நின்புயத் தோர்
மீன் வலை கொண்டதும் ஒருத்தி
விழிவலையிற் பட்டன்றே' (ம. க. பா. 1)

என்று குறிப்பிடுகின்றார். 'உடம்பாகிய வலையிலே அகப்பட்ட மனித உயிர்களுக்கு அறியப்படாதவனாகிய நீ உனது தோளில் மீன் வலையோடு வந்தது உமையாகிய ஒரு பெண்ணின் விழியில் அகப்பட்டதால் தானே' என்பது எண்ணற்பாலது. எவ்வளவுதான் மனிதன் வழிபட்டாலும் அவனது உள்ளத்து அகப்படாத இறைவன் பாவை ஒருத்தியின் விழியாகிய வலையில் அகப்பட்டுக் கொண்டான் என்று நகையெழக் கூறுகின்றார்.

இப்பாடலில் மனித உடலை ஓர் வலையாகவும், பெண்களின் கண்களை வலையாகவும் ஒப்பிட்டுக் கூறும் பாங்கு சிறப்பினது. மற்றொரு பாடலில்,

''மொழிக்கயலாகி வேத முடிவினின் முடிந்து நின்ற
விழிக்கயலாகா கூடல்வலை வாணர் பெருவாழ்வன்னீர்
கழிக்கயல் விற்பீர் மற்றிக் காசினியேழும் உங்கள்
விழிக்கயலுக்கே முன்றும் விலையென்ப விளக்கிட்டீரே''
(ம. க. பா. 66)

என்று மொழிகளால் விளக்கிக் கூறப்படாத அளவிற்கு இருக்கின்ற இறைவன் மீனாட்சியின் விழிப் பார்வைக்கு அகப்பட்டார் என்று கூறுகின்றார். அம்மையின் பார்வைக்குக் காசினி எழும் உங்கள் விழிக் கயலுக்கே முற்றும் விலையாம்' என்பதை எடுத்துக் காட்டுகின்றார். அது மட்டுமல்ல; தோள்

மீது வலை சுமந்து செல்லும் இறைவனைக் 'கூடல் வலைவாணர்' என்று சிறப்புப் பெயர் சூட்டிப் பார்க்கிறார் சுவாமிகள்.

மொழிக் கயலுக்கு அப்பாற்பட்ட இறைவன் மீனாட்சி அம்மையின் விழியாகிய கயலுக்கு அகப்பட்டான் என்று சொற்பொருள் நயம் படக் கூறுகின்றார். 'மொழிக் கயல் ஆகி' எனக் கொண்டால்; மொழியாகிய தமிழ்க் கடவுளாம் முருகனைப் பிடிக்க வலையோடு வந்தான் என்ற உட்பொருளும் தொனிக்கக் காணலாம். சுருங்கச் சொன்னால்; 'பரதவப் பெண்ணாய் வந்த உமையன்னையின் விழிக் கயலைப் பிடிக்க வந்த சிவபெருமான் மொழிக் கயலைப் பிடித்துக் காத்தார் என்று கொள்ள இடமுண்டு.

சுவாமிகள், இறைவன் கொண்டுவந்த வலை எப்படிப் பட்டது என்பதைத் தெரிவிக்க மறந்தாலும் அதன் செயல் சிறப்பானது என்பதை நுட்பமாகக் கூறிச் சென்றார். ஆனால் செப்பேட்டில் வலையின் அமைப்பு எப்படிப்பட்டது என்பதைக் கூறுமிடத்து,

'வலை நூல் நூற்கப் பயன்படும் தக்களியின் அடிச் சில்லாகச் சந்திரனை வைத்து அதன் நடுவில் கதிராகக் காலனையும் கோர்த்து, நாலு வேதத்தை நூலாக்கி அதன் முனையில் தக்களிக் கதிரைக் கொளுவி முறுக்குமிடத்து அறுந்த நூலை மறுபடிச் சுருட்டி இந்திரனை ஊசியாக்கி அதில் நூல் கோர்க்குமிடத்துச் சூரியனை வைத்துக் கோர்த்து முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்து நாற்கோடி ரிஷிகளும், நக்ஷத்திர பதவிகளும் மணியாக வைத்தும், வலையின் சுற்றுக் கயிராகக் காலனை வைத்து; உள் கயிறு பிரமாவாகவும், திருக்கை சூலமாகவும் கொண்டு முழு வலையும் சூரியனாகவும் வலை முடிவில் வான் கயிறு விஷ்ணு ஆதி சேடனாகவும் கொண்டு வலை பின்னப்பட்டதாகக் கூறப்படுகிறது'.

மேற்சொன்ன வலை பற்றி விளக்கமாகச் சுவாமிகள் கூறாவிடினும் 'கூடல் வலைவாணர்' என்ற பெயரில் வலையில் மேன்மையுடையவன் சிவன் என்ற பொருள் தொனிப்பதைக் கணிக்க முடிகிறது. சிவனின் செயல்கள் பெரும்பாலும் தண்டிப்பது போல இருந்தாலும் முடிவில் ஆணவம் அழிக்கப் பட்டு அருளுவது போன்று அமையும். அதே போன்று இவ்வலை வீசு புராணத்துள்ளும் நடந்தது இவற்றை எல்லாம் விளக்கமாய்

அறிந்த சுவாமிகள் தம் பாடலில் நுட்பமாய் இதனை உணர்த்தி நின்றார்.

**செப்பேடு எண்: 1**

**பக்கம் – 1**

**2 சிவன் படவர்**

1) பல்லான்டுயிருடன் சொல்லாண்டுலகிய
பருதியுஞ் சோமனும்

2) பாரேளுலகம் படைத்தருளீசன் பூலோகத்தின்
புதுமை தா

3) ன் பார்க்க மாலுடன் தேவர் வாவென்றளைத்து
அன்புடன் கேள்க்க

4) அப்போதுமையாளக மகிழ்ந்து எப்போது நாம்
யேகுவதல்ல நார

5) த முனியை யளைத்து பார்மீதிற் போய் பார்த்து
வா வெனவே இமைய

6) பருவதம் நந்தாபருவதம் எம்கூட பருவதம் வடவிந்த
பருவதம் நிடதப

7) ருவதம் கந்தமா பருவதம் நீலகிரி பருவதம் சூள்ந்த
மய்யத்தில் வெ

8) ள்ளியங்கிரியில் யகாசூ கொடு முடியும் ஐறாவதம்
புண்டரீகம்

9) குமுதம் புடம் சேந்தன வாமன்ன சுப்ராதிபன்
சார்வ பூமன அஞ்சன்

10) னதிக்கேசங்க ளெட்டுமுடைய திசைதனிலே
தோன்றி நின்ற ச

11) ண்டன் ருத்திரன் வருணன் வங்கிஷத்தில்
அதியாசன் நாரத முனி

12) யை நன்றாய் தொழுது பார்மீதில் வந்து
நாம் பணிவிடை செய்

13) ய யேதென வென்று யியல்வுடன் கேள்க்க
வாரும் பிள்ள

14) ாய் தியாசா வாரதி சூள்ந்த வையகமான
காஞ்சி புரத்தில் சிலா

15) சாதனத்து குடையவனாகவும் காஞ்சி புரத்துக்கு
தெற்கு வெ

16) கோவாசி அதின் தெற்கு தூசி மாமண்டுருருக்கு
அதின் தெற்கு வந்த

17) வாசி அதின் தெற்கு வெள்ளிமேடு அதின் தெற்கு
அருணாசலம்

18) ஜென்ன பட்டணம் மயிலாப்பூர் முகத்துவார
வாரதியில் அ

19) தி அரசனுமத்துண்டாகிய ஜனங்களு மிருந்தார்கள்
அச்சம

20) யத்தில் சிவன் பார்வதிக்கு உபதேசம் பண்ணு-
மிடத்தில் சுப்பிர

21) மணியர் திருச் செவியில் வண்டு ரூபமாய்
கேட்டதினாலே சு

22) ப்பிரமணியரை மகரமாகவும் பார்வதியை
அதி அரசனு

23) க்குப் பெண்ணாகவும் பிறக்க சிவன் அனுக்கிரகம்
பண்ணினாற்

24) அந்தப்படிக்கிப் பிறந்திருக்கிர காலத்திலே சமுத்-
திரத்தில்

25) பார் படவு வோட முதலான தெல்லாஞ் சமுத்திரத்தில்
ஓடாம

26) ல் சனங்களுக்கு பிளைப்பில்லாத படியினாலே
தட்டி பரை சா

27) த்தச் சொல்லி மகரம் பிடித்தவர்களுக்கு நம்முடைய
பெண்

28) ணைக் குடுக்கிறோ மென்றதாகச் சொன்னார்
அதினாலே அனே

29) க கோடி சனங்களிறந்தார்கள் அந்தச் சமயத்தில்
பரம

30) சிவனார் மகரம் பிடிக்கிறோ (ம்) நமக்கு பெண்
கொடுப்பீறா என்

31) று கேட்டார் அப்போது அதிஅரசன் சுவாமியைப்
பா

32) ர்த்து அப்படி ஆகட்டும் என்றான் அந்தப்படிக்கு
தேவர்க

33) ள் முதலான நக்ஷத்திர பதவிகள் காலன் தூதன்
எமன் மு

34) தலான தேவர்களெல்லாம் வலையாக வுண்டுபண்ணி
சமுத்தி

35) ரத்தை வளைந்து மகரம் பிடித்தார் அப்போது சிவன்

36) ஏறிவந்த படகு சாய்ந்தயிடத்தில் ஒரு பிரம்கயிலை
யங்

37) கிரி தாங்கவும் ஒரு பிரமிவன் தாங்கவும் அப்போது
சிவன்

38) கண்டு சந்தோஷப்பட்டு நம்முடைய சிவன்
படவனோ என்று

39) பெயருங்குடுத்து வேண்டிய வெகுமதியும்
பண்ணினார் சிவனு

40) க்குகலியாணமுடித்து சாயங்காலஞ்சந்தி பண்ணு
கிர கால

41) த்தில் சிவன் பாதத்தில் மச்சங்களெல்லாஞ் சூள்ந்த
படியி

42) னாலே வாரும் பிள்ளாய் சிவன் படவர் இந்த
மச்சம் பிடித்த

43) தாமரை இலையை திருக்கையால் சுருட்டி இந்த
அளவிட

44) சதிரம் போல வுண்டு பண்ணி கொண்டுயிந்த
மச்சம் பிடி

45) யும் பிள்ளாயென்று கொடுத்தார் சிவன் படவன்
பாத தெரி

46) சனை பண்ணி வனங்கினான் தாமரையிலை
அளவில் வலை

47) முடிக்க சந்திரனை சில்லாக்கி காலன்றன்னை
நல்ல கதிறாய்

48) திற் கோர்த்து நாலு வேதத்தையு நூலாய் நூல்
முனையி

49) ல் கொமுனையி முகித் தொடையில் வைத்து நூல்
முறுக்கி அருந்த நூ

50) லை கதிரதனிலே அரும்பதாச் சுருட்டி இந்திரனை
ஊசி யென்

51) று வைத்து அதில் நூலிட்டு சூரியனை வைத்து
அடியிற் கோ

52) ர்த்து முப்பத்து முக்கோடி தேவர் நாற்பத்து நாற்
கோடி ரி

53) ஷிகள் நக்ஷத்திர பதவிகளுமணியாக வைத்து
காலனை சுற்

54) று கயிறாக வைத்து உள் கயிறு பிரமாவாகவும்
திருக்கை

55) சூலமாகவும் வைத்து வலை சூரியனாகவும்
வலை முடிவில் சுவா

56) மீ கையில் முத்தரி மோதிரம் போட்டு வான்
சுயிரு ஷ ஷ க
ண

57) லையில் சேடனாகவும் போட்டு சுவாமி பாதத்தில்
வைத்து சுவா

58) மி திருக்கையால் கொடுத்து நீங்கள் உபயகுல
வங்கிசம் யெ

59) ன்று பேறும் கொடுத்து வெகுமாணம் ரிசபக
கொடி ம

60) கரக் கொடி தாமரைக் கொடியும் கொடுத்து
கைலாச

61) பரம்பரையில் மடாதிபதிகளில் கைலாச கிரியில்
சி

62) நந்த மேல் கோபுர வாசல் மடத்தி பாவம்ச பரம்
பரையா

63) என காஞ்சி புரம் ஓங்கள் நயினார் சிவ(ந்)தபாத
ஊருடைய

64) தேசிகரிடத்தில் ஜன்ம சவுக்கியமும் சிவபக்தியும்
ஒங்களு

65) க்கு புத்திர களத்திர பரம்பரையாய்வரிடம்
பிரசாதம் பெற்

66) றுக் கொள்ளுங்க ளென்று திருவுளம்
பற்றினா ருடனே சி

67) றிது சனங்கள் பூலோகத்தில் நம்முடைய
நயினார் சிவச்த

**பக்கம் – 2**

68) பாதமுருலிடய தேசிகர் தூசி மாமண்டூர் பாலா

69) த்தங் கரையில் தல வாசமாயிருக்கிற நாளை

70) யில் வந்து கண்டார்கள் நமுடைய நயினார்
வாரு

71) ம் பிள்ளாயதி அரசரென்று தீக்ஷையும் பள்ளி

72) னி குருமொழிப்படி யிரும் பிள்ளா யென்று

73) திருவுளம் பற்றினார் சாலிவாகன சகாப்த்தம்
சூ உற சா

74) மேல் செல்லா நின்ற கொல்லம் சுப திரிபுவன
வீர

75) சந்திரகுலம் பிரதீப மதுரமாகேந்திர சேர்ந்த

76) மங்கல பிரபலாதிசுராஜ்ய மங்கள நாரசிங்க

77) கேரள தமோ திவாகர சோள சிந்து வடவால

78) நாயக சாயுச்சிய சார்வ பௌம் தெய்வ
பிறாம

79) ண ஸா பனா சாரிய றாசாதி றாசன் றாச
த
பரமேசுரன் நாச மா

80) ர்த் தாண்டன் றாஜ கெம்பீரன் ஸ்ரீ பெருமாள் அ

81) ளகம் பெருமாளிறந்த கால மெடுத்த சீவல
வர

82) குணராம பாண்டிய குலசேகர ராம தேவ தீக்ஷ,

83) தருக்கு சளறாயசஞு சார்வரி ஞு சித்திரை யக உ

84) சுக்கிர வாரமும் பூர்வ பஷத்து பஞ்சமியும் பூச

85) நக்ஷத்திரமும் சவுபாக்கிய யோகமும் சிங்ககர

86) ணமும் ஆதித்தன் சுக்கிரன் உச்சமாயிருக்கிற
சுபதி

87) னத்தில் காசி கண்ட பராக்கிரம ராஜா திருமுன்பாக

88) விசுவேசுரர் சன்னதியில் அபிஷேக மடம் சிவ

89) ந்த பாத மூருடைய தேசிகருக்கு புத்திர பவுத்திர
பரம்ப

90) ரையாய் குருசாமிக்கு சாதனம்யெழுதிக் கொ

91) டுத்தபடி சொக்கலிங்கம் பூசை நைவேத்தியத்

92) திற்காக வருசம் கரு தலைக் கட்டுக்கு கலியாண

93) த்தில் மாப்பிள்ளைக்கு யம்உ பெண்ணுக்கு
ய

94) ம் உ வெத்திலை பாக்கு ளம் யெங்களவர் மடி

95) தப்பினவர்களுக்கு வாக்குங் கடமையும் சுப

96) முதலாகிய காரியங்களுக்கு தலைக்கட்டு கக்கு

97) ய ம் 2 ம் தீனஷ கு யம் ஙயரும் ஆண்டவர்

98) கற்பித்தருளிய ஊளியமுஞ் செய்துக் கோ

99) ண்டு வருவோ மாகவும் இது தவறினவர்கள்

100) செங்கைக் கரையில் காராம் பசுவை கொ

101) ன்ற தோசத்திலு மாதா பிதா கொன்ற தோசத்தி

102) லும் போ வோமாகவும் இந்தப் படிக்கு சரியான

103) நடந்தவர்கள் அஷ்ட்டா ஐ சுவரியமும் பெற்று

104) இருப்பாற்களாகவும் இந்தப் படிக்குருசாமிக்கு சா

105) தனம் யெழுதிக் கொடுத்தோம் உபையகுல

106) வருண வம்சத்தார் களாகிய சிவன் படவன் அ

107) டக்கம் யெல்கையாவது மலைக்கும்கிளக்கு

108) கடலுக்கு மேற்கு காசிக்கும் தெற்கு கன்னி

109) யாகுமரிக்கும் வடக்கு

**குறிப்பு:** இவ்வரிகளுடன் செப்பேடு முடிந்தது போல உள்ளது, இருப்பினும் இவ்வரிகளுக்குக் கீழாக எழுதுவதற்கு ஏற்ப கோடுகள் போட்டு வைத்துள்ளமையையும் அறிய முடிகிறது.

# பிரபந்தத்திரட்டுப் பதிப்புகள்

ச. அ. சம்பத்குமார், திருப்பனந்தாள்

ஒருநாட்டு மக்களின் வாழ்க்கை முறைகளையும் உயர்ந்த பண்புகளையும் அம்மக்களுடைய தாய்மொழியில் காணப்படும் நூல்களால் நன்கு அறியலாம். ஒரு நாட்டின் முன்னேற்றம் பற்றி அறிய அந்நாட்டின் அறிஞர்கள் இயற்றிய நூல்கள் பெரிதும் துணைபுரிகின்றன.

தமிழ் மொழியில் புலவர் பலரால் இயற்றப்பட்ட பிரபந்தங்கள் பல இருக்கின்றன. அவற்றில் சில பிரபந்தங்களே பலரால் பயிலப்பட்டு வருகின்றன. 17 – ஆம் நூற்றாண்டில் தோன்றிய குமரகுருபரர் சுவாமிகள் தமது பாடல்களால் தமிழ் இலக்கியத்தையும் சைவ சமயத்தையும் மேம்படுத்தியவர். குமரகுருபர சுவாமிகளுடைய நூல்கள் அனைத்தையுமே அவை பாடிய காலம் முதல் அறிஞர்கள் மட்டுமல்லாமல் மற்றவர்களும் விரும்பிப் படித்து வருகிறார்கள்.

குமரகுருபரர் சுவாமிகள் இயற்றிய நூல்களின் தொகுப்பு குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு என்று அழைக்கப்படு கிறது. அப்பிரபந்தத்திரட்டு பல பதிப்புகளாக வெளிவந்துள்ளன. அப்பதிப்புகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 1. ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் பதிப்பு

ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் சிதம்பரம் ஈசானிய மடத்தைச் சார்ந்தவர். இவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் நண்பர் டாக்டர் உ. வே. சா. அவர்கள் தாம் படித்துப் பாது காத்து வந்த குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்களின் ஏட்டுப் பிரதியை இராமலிங்க சுவாமிகள் பெற்று, பூண்டி அரங்கநாத முதலியார் அவர்களின் பொருளுதவியுடன் 1859–ஆம் வருடம் நூலாகப் பதிப்பித்து வெளியிட்டார்கள்.

## 2. சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழக வெளியீடு

ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் பதிப்பில் காணப்படும் அருஞ் சொல் குறிப்புரை படிப்போருக்குப் போதுமானதாக இல்லை.

இதனால் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் 1925-ஆம் ஆண்டு, திருநெல்வேலி இந்துக் கல்லூரி பேரா. வி. சிதம்பர இராமலிங்க பிள்ளை அவர்கள் மூலம் 'குமரகுருபர சுவாமிகள் நூற்றொகுதி' என்ற நூலை வெளியிட்டனர். இந்நூலில் குமரகுருபர சுவாமிகள் பாடிய கைலைக் கலம்பகம் என்னும் நூலைச் சேர்த்து வெளியிட்டனர். இந்நூல் இதற்கு முன் எவரும் பதிப்பித்து வெளியிடவில்லை. இந்நூல் முன்னுரை, நூலாசிரியர் சிறப்புப்பாயிரம் குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சாரப்பஞ்சகம் குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் குமரகுருபரரின் பதினைந்து நூல்களும், அதன் பிறகு ஒவ்வொரு நூலுக்கும் அரும்பொருள் விளக்கம் ஆகியவற்றோடு, இறுதியாகப் பாட்டு முதற்குறிப்பு அகராதியும் காணப்படுகின்றன. எளிதிற் பொருள் விளங்கும் சில செய்யுட்களைத் தவிர ஏனைய பாடல்களுக்குக் குறிப்புரை எழுதியுள்ளார்கள்.

**3. டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு**

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் சங்க இலக்கியங்களையும் காப்பியங்களையும் முதன் முதலில் நல்ல முறையில் அச்சிட்டுத் தமிழில் ஒரு புதிய மலர்ச்சியை உண்டாக்கியவர். இவருடைய பதிப்புகளைத் தமிழ்ப்புலவர்களும் ஆராய்ச்சியாளர்களும் போற்றிப் பாதுகாக்கின்றனர். குமரகுருபரர் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டு 1939ஆம் ஆண்டு திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 19ஆம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் அருளாணையின் வண்ணம் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டைப் பதிப்பித்து வெளியிட்டார்கள். டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தாம் திருவாவடுதுறை ஆதீனத்தில் படிக்கும் காலத்தில் வைத்திருந்த! ஏட்டுப் பிரதிகளையும், பிறகு தாம் யாத்திரை செல்லும்போது ஆங்காங்குக் கண்ட குமரகுருபரர் பிரபந்த ஏட்டுச்சுவடிகளில் உள்ள பாடல்களையும் தமது கைப் பிரதியில் குறித்துக் கொண்டு வந்தார். அவற்றில் பல திருத்தங்கள் கிடைத்தன.

இப்பதிப்பில் முகவுரை, சில தனிச் செய்யுட்கள், சிறப்புப் பாயிரம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் சரித்திர சுருக்கம், ஆராய்ச்சி, மூலமும் குறிப்புரையும், செய்யுட் முதற் குறிப்பு அகராதி, அரும்பதம் முதலியவற்றின் அகராதி ஆகியவை காணப்படுகின்றன. இப்பதிப்பில் பதிப்பித்த நூல்களின் விபரம் 1. கந்தர்

கலிவெண்பா 2. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 3. மதுரைக் கலம்பகம் 4. நீதிநெறி விளக்கம் 5. திருவாரூர் நான்மணி மாலை 6. முத்துக்குமர சுவாமி பிள்ளைத்தமிழ் 7. சிதம்பர மும்மணிக்கோவை 8. சகலகலாவல்லி மாலை 12. கைலைக் கலம்பகம் 13. காசித்துண்டி விநாயகர் பதிகம்.

ஒரு நூலில் முடிவுரையே அந்நூலில் நுழைவாயில் என்று கூறுவார்கள். இது நூற்பதிப்பின் தரத்தை மதிப்பிடப் பெரிதும் உதவுகிறது. குமரகுருபரர் பிரபந்த நூல்களின் எண்ணிக் கையில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் பதிப்பில் காணப்படும் சில கைலைக் கலம்பகச் செய்யுட்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. காசித்துண்டி விநாயகர் பதிகம்கிடைக்கவில்லை. மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, மீனாட்சியம்மை குறம், சிவகாமி அம்மன் இரட்டைமணிமாலை ஆகிய மூன்று நூல்களும் குமரகுருபரர் இயற்றியனவாகச் சில அச்சுப் பிரதிகளில் காணப்பட்டாலும் அவை காசி மடத்துப் பிற ஏட்டுப் பிரதிகளில் காணப்படாத தாலும் பரம்பரையாகப் பாடம் சொல்லுபவர்கள் இம்மூன்றை யும் குமரகுருபரர் நூல்களாகச் சேர்த்துச் சொல்லாததாலும், சொற்பொருள் அமைதிகளாலும் முன்கூறிய பதின்மூன்று மட்டுமே குமரகுருபரர் அருளியவை என்று முடிவு செய்கின்றார். பதிப்பாசிரியர், இருப்பினும் இம்மூன்று நூல்களையும் இந்நூலின் பின்னால் தனியே சேர்த்திருக்கிறார்.

இந்நூல் ஆக்கத்திற்குப் பெரிதும் உதவி புரிந்த காசிமடத்து அதிபர் சுவாமிநாத சுவாமிகளின் புலமை நயத்தையும் அருட் பெருமைகளையும் பதிப்பாசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். இப்பதிப்புக்கு உதவியாக இருந்த பிரபந்தத்தொகுதி முழுவதும் உள்ள ஏட்டுச் சுவடிகளையும், தனிப்பிரபந்தங்களின் பிரதிகள் பட்டியலையும் அவற்றைக் கொடுத்து உதவியவர்களின் விபரங் களையும் நன்றியுடன் எடுத்துக் கூறியுள்ளார்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் பகுதியில் குமரகுருபரரின் பிறப்பு, வளர்ப்பு, கல்விஞானம் ஆகியவற்றை யும் அவர் காசியில் திருமடம் நிருவிய வரலாற்றையும் எடுத்துக் கூறியுள்ளார். பிறகு காசிமடத்து தலைவர்களின் பெயர் களையும் கால வரிசைப்படிக் கொடுத்துள்ளார்.

நூலாராய்ச்சி என்ற பகுதி நூலைக் கற்க விழைவோருக்குத் துணையாக அமைகிறது. மேலும் நூலின் பகுப்பாய்வாகவும்

இது அமைகிறது. குமரகுருபர சுவாமிகளின் தமிழ்ப்பற்று, தமிழ்ப்புலமை, அவரது கவிதை நயங்கள் பல்வேறு இலக்கணக் குறிப்புகள் அவரது நீதிகள் சைவ சித்தாந்தக் கருத்துகள், பல்வேறு தலங்களின் பெருமைகள் ஆகியவை இப்பகுதியில் அமைகின்றன. மேலும் நூலாசிரியரின் சைவ சமய பற்றும் நூலாராய்ச்சி மூலம் தெரிகிறது.

நூலும் குறிப்புரையும் என்ற பகுதியில் ஒவ்வொரு பாடலுக்கும் அடியில் குறிப்புரை கொடுக்கப்பட்டுள்ளது. இப் பிரபந்தத் திரட்டின் குறிப்புரையைப் படிக்கும்போது இந்நூலில் பாடுபொருளை அறிந்துகொள்ளமுடிகிறது. ஆங்காங்கே எடுத்துக் காட்டியிருக்கும் பிற செய்திகளையும் பிற நூல்களின் கருத்து களையும் இந்நூல் வாயிலாகப் படித்து துய்க்க முடிகிறது. இப்பகுதி மூலம் பதிப்பாசிரியரின் பல நூலறிவை நன்கு அறிய முடிகிறது.

இப்பிரபந்தத் திரட்டில் ஒரு குறிப்பிட்ட பாடலின் முதற் குறிப்பை நினைவுக்குக் கொண்டுவர இயலாத நிலையிலும் பாடலிற் பொருந்தும் ஓர் அறிய சொல் அல்லது ஓர் அழகிய தொடர், உவமை இவற்றினடையாக பாடலைக் கண்டுபிடிக்க அரும்பதம் முதலியவற்றின் அகராதி நன்கு பயன்படுகிறது.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பையே காசித் திருமடம் 1947 இல் கலியாணசுந்தர ஐயர் அவர்கள் மூலம் இரண்டாம் பதிப்பாவும் 1952 இல் சு. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் மூலம் மூன்றாம் பதிப்பாவும் 1961 இல் குமரகுருபரன் பிள்ளை அவர்கள் மூலம் நான்காம் பதிப்பாவும் வெளியிடப் பட்டது.

### 4. அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பு

காசிமடத்து தற்போதைய அதிபர் அவர்கள் குமரகுருபரர் பிரபந்தத்திரட்டை மாணவர்களும் தமிழ் அன்பர்களும் பெரிதும் பயன்படுத்த வேண்டும் என்ற திருவுளம் கொண்டார்கள். அதனால் 1988 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக் கட்டளையின் வாயிலாக இந்நூல் வெளியிடப்பட்டது. 1939 ஆம் ஆண்டு டாக்டர் உ வே. சா. பதிப்பித்த வண்ணமே இந் நூல் வெளியிடப்பட்டது. மாணவர்களும் தமிழ் அன்பர்களும் இந்நூலை அடக்கவிலையில் பெற்று பயன் அடைகின்றார்கள்.

# குருபரர் காட்டும் புறத்துறைகள்

இரா. சாந்தி, தஞ்சாவூர்.

தமிழ்மொழி மிகவும் பழமைமிக்க மொழி என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். 'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடி' என்ற முதுமொழி இதனை நிறுவுகின்றது. இத்தகைய உயர்தனிச் செம்மொழியாகிய தமிழின் இலக்கியங்கள் பரந்துபட்டவை. அவை அனைத்தும் எண்ணிலடங்கா. அவ்வகை இலக்கிய வகைகளுள் சிறப்பான இலக்கிய நயம் படைத்தவை சிற்றிலக்கியங்கள் ஆகும். இத்தகைய சிற்றிலக்கியத்துள் கலம்பகம் என்னும் சிற்றிலக்கியம் பல வகையான இலக்கியச் சுவைகள் நிரம்பியனவாகப் பாடப் பெற்றவையாகும். இவற்றுள் குமரகுருபரர் அருளிய மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம் இரண்டிலும் புறப்பொருள் வெண்பாமாலையோடு பொருந்தி வருகின்ற புறத்துறைகள் சிலவற்றை இக்கட்டுரை ஆய்கின்றது.

**கலம்பகப் பொருண்மை**

1) கலப்பு அகம் கலம்பகம் என்றாயிற்று என்பர் அறிஞர். பாவும், பாவினங்களும் பல வகையான அகப்பொருள், புறப் பொருட்டுறைகளும் கலந்து வரப் பாடுவதால் இப்பெயர் வந்திருக்கலாம் என்பர். ஒன்பான் சுவைகளும் இதன்கண் மிளிர்தல் காணலாம்.

2) ஒருபோகு, வெண்பா, கலித்துறை என்னும் மூன்றும் கலம்பகத்தின் முதற்கண் அமைதல் வேண்டும் என்பது மரபு. இவற்றை 'முதலுறுப்பு' என வெண்பாப் பாட்டியல் குறிப்பிடுகிறது.

3) சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலிய பிரபந்த இலக்கணம் தரும் பிற நூல்களிலும் பதினெட்டு உறுப்புகளே சுட்டப்படுகின்றன. என்றாலும் வெண்பாப் பாட்டியலிற் காணும் ஊர், மடக்கு என்னும் இரண்டு உறுப்புகள்

இல்லை. இவற்றிற்குப் பதிலாகக் 'குறம்' என ஒரு புதுப்பொருள் காணப்படுகிறது.

4) சிற்றிலக்கியங்கள் பொதுவாகத் தெய்வங்களையும் அரசர்களையும் தலைவர்களாகக் கொண்டு பிறந்துள்ளன. எனினும் பக்தியெழுச்சியின் காரணமாகத் தெய்வங்களின் மேல் பாடப்பெற்ற இலக்கியங்களே மிகுதியாகவுள்ளன. இத்தகைய இலக்கியங்களுக்குத் தெய்வங்கள் எழுந்தருளியுள்ள ஊர்ப் பெயரைச் சார்த்தியே வழங்கப்படுகின்றன. (உ-ம். மதுரைக் கலம்பகம், தில்லைக் கலம்பகம்)

5) கலம்பகப் பாடல்கள், தேவர்க்கு நூறும், மறையார்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சர்க்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதும் பாடுவது மரபு என்பர். நூறு என்னும் பேரெல்லையைக் கடந்தும் சில கலம்பகங்கள் உள்ளன. (உ-ம். மதுரைக் கலம்பகம்-102, புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம்-101).

6) பதினெட்டு உறுப்புகளன்றி வெவ்வேறு புதிய பொருள்களும் பாடுபொருளாகக் கொள்ளப் பட்டுள்ளன. பிச்சியார், கொற்றியார் என்பவற்றைப் போலவே வலைச்சியார், இடைச்சியார், கீரையார், யோகினியார் என்னும் பொருள்கள் எழுந்துள்ளன. புய வகுப்பினைப் போலவே சிலர் திருவடி வகுப்பும் பாடியுள்ளனர். இவற்றிற்கு மேலும் ஆற்றுப்படை, பள்ளு, சிலேடை, மடல், வெறிவிலக்கு என்பவற்றையும் கலம்பக உறுப்புக்ளாக ஒரு சிலர் கொண்டுள்ளனர்.

**கலம்பகங்களுள் அகப்புறத் துறைகள்**

குமரகுருபரர் அவர்களின் இருகலம்பகங்களிலும் அதிகமாக அகத்துறைகளையே காணமுடிகிறது. வண்டுவிடுதூது, மேகவிடு தூது, பாண், தழைவிருப்புரைத்தல், தலைவியிரங்கல் அன்றியும் மடல், கொற்றியார், பிச்சியார், இடைச்சியார், வலைச்சியார் போன்றவையும், பெரும்பாலும் கைக்கிளையும், பெருந்திணையும் அமைந்திருப்பதையும் காணமுடிகிறது. இவை தவிர ஏனைய அனைத்தும் புறப்பொருட்டுறைகளே.

**தமிழில் அகம் - புறம் பாகுபாடு**

பண்டைத் தமிழ் மக்கள் உயிருணர்ச்சியை அகப்பொருள் என்றும், அஃதொழிந்த ஏனையெல்லாவற்றையும் புறப்பொருள்

என்றும் பகுத்து ஆய்ந்துள்ளனர் என்பதை இலக்கண இலக்கியங்கள் மூலம் அறிகிறோம். அகம், புறம் என்ற இருபெரும் பிரிவு தமிழில் மட்டுமல்லாது உலக மொழிகள் அனைத்திலும் இருப்பதை ஒப்பிலக்கிய வழி அறியமுடிகிறது. இலக்கிய வழக்கில் மட்டுமன்றி உலகியல் வழக்கிலும் காதலையும், வீரத்தையும் பெரிதும் போற்றி வந்தனர். அகம் என்பது வீட்டில் வாழ்கின்ற அன்பு நிலை, புறம் என்பது வீட்டை விட்டு வெளிப்போந்து ஆற்றுகின்ற வீரம், கொடை, புகழ்ச் செயல்கள் முதலியனவாகும். இத்தகைய வாழ்வியலை அடிப்படையாகக் கொண்ட பிற்கால இலக்கியங்களும் இயற்றப்பெற்றன.

மன்னனைத் தலைவனாகக் கொண்ட செவ்வியல் இலக்கியங்களைப் போல பக்தி இலக்கிய காலத்தில் இறைவனைத் தலைவனாகக் கொண்டு இலக்கியங்கள் செய்த இனிய மரபைக் காண முடிகிறது. இறைவனுக்கும், மனிதனுக்கும் உறவு கற்பித்துப் பல கோணங்களிலிருந்து பார்ப்பது பக்தி நெறியினது. எத்தகைய உறவு நிலை அங்கு நிகழ்கிறதோ அதன் அடிப்படையில் சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம் என்றெல்லாம் வகைப்படுத்தப் படுகிறது. மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம் இரண்டும் சிவபெருமானைத் தலைவனாகக் கொண்டு அகப்பொருட்டுறைகள், புறப்பொருட்டுறைகள் அமைந்து, சங்க மரபை அடியொற்றி அமைந்துள்ளமையைக் காணலாம்.

புறப்பொருட்டுறைகள் மிகுதியாக இருந்தாலும் புறப்பொருள் வெண்பா மாலை புறத்துறை இலக்கணத்தை அடியொற்றி வந்த களி, பாணாற்றுப்படை, மறம் ஆகிய மூன்று துறைகளை இக்கட்டுரை ஆய்கின்றது.

**களி**

'களி' என்பது கள்ளுண்பவன் கூற்றாகக் கலம்பகத்தில் வரும் உறுப்பாகும். மதுரைக் கலம்பகத்தில் ஒரு பாடலும், காசிக் கலம்பகத்தில் ஒரு பாடலும் இடம் பெறுகிறது.

தமிழ் இலக்கண நூல்கள் 'களி' என்னும் கலம்பக உறுப்பின் உட்பொருளை உண்டாட்டு என்னும் துறையாகக் கூறுகின்றது.

**உண்டாட்டு விளக்கம்**

'தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று' (பு. வெ. மாலை, சூ. 15)

கட்டி ஆர்க்கும் வீரக்கழலினையுடைய வெட்சி மறவர்கள், தாம் வென்ற மகிழ்ச்சியாலே கள்ளுண்டு களித்து ஆடியது ஆகும்.

வெட்சித் திணையில் மறவர்கள் தாம் கொண்ட வெற்றியை அனுபவிப்பதாக இத்துறைவிளக்குகிறது. ஆனால்கலம்பகங்களில் சோமசுந்தரக் கடவுளின் பெருமையை கள்ளுண்ட ஒருவன் கூறுவதாகப் பாடல்கள் அமைகின்றன.

''அழகு உற்றது ஓர் மதுரேசனை அமரஈசன் எனக்கொண்டு
ஆடுங்களியால் நின்று இசைபாடும் களியேம்யாம்
பொழுதைக்கு இருகலம் ஊறுபைந்தேறல் பனையினை நாம்
போற்றிக் குருமூர்த்திக்கு இணை சாற்றத் தரும்''.
(ம. க. பா. 24)

கள்ளுண்ட ஒருவன், அழகு அமைந்ததாகிய ஒப்பற்ற மதுரைத் தலைவனான சோமசுந்தரக் கடவுளைத் தேவர்கட் கெல்லாந் தலைவர் என்றெண்ணிக் கொண்டாடுவதனாலாகிய களிப்பினால் நின்று இனிய பாடல்கள் பாடுகின்ற கட்குடிய ராவோம் நாம் என்கிறான். பனையின் சிறப்பை சோமசுந்தர கடவுளின் சிறப்புக்கு ஒப்பிட்டுக் கூறுவதாகப் பாடல் அமைந் துள்ளது.

காசிக் கலம்பக பாடலில் 'கள்ளுண்டு களிப்பவன் எனது ஒழுக்கமே மேலானது என்று கூறுவதாய் அமைந்துள்ளது. ஊன் காரணமாகவே யாகம் சிறப்புப் பெற்றது என்றும் கள் சக்தியின் வரப்பிரசாதம் என்றும் கூறுவதாக (காசிக்கலம்பகம் பா. 39) அமைந்துள்ளது.

**பாணாற்றுப்படை**

''சேணோங்கிய வரையதரிற்
பாணனை ஆற்றுப்படுத்தன்று'' (பு.வெ.மாலை.சூ. 27)

மிகவும் உயர்ந்த மலைவழியிடத்துப், பாணனை அவன் செல்லற்கான வழியிலே செலுத்தியது, பாணாற்றுப்படை ஆகும் என்று புறப்பொருள் வெண்பா மாலை விளக்குகிறது.

பரிசில் நாடிச் செல்லும் பாணனைப், பெற்று வரும் பாணன் ஒருவன் வழியிடைக் கண்டு, தனக்கு அளித்த வள்ளலிடத்தே செல்லுமாறு ஆற்றுப்படுத்தியது. ''பெற்ற பெருவளம் பெறா அர்க்கு அறிவுறீஇர் சென்று பயன் எதிர சொன்ன பக்கம்' என்று தொல்காப்பியம் கூறும்.

காசிக் கலம்பகத்தில் ஒருபாடல் இத்துறையில் அமைந்துள்ளது.

''இழுமென் மழலை யின்னமுதுறைப்பப்
பிழிதேன் ஒழுக்கின் ஒழுகும் இன்நரம்பின்
வள்ளுகிர் வடிம்பின் வரன்முறை வருடத்து
எள்விளி எடுக்குஞ் சீறியாழ்ப் பாண
வாழிய கேண்மதி மாற்றமொன்றியானும்
ஏழிசைப் பாணன் மற்றிறைமகனலனே'' (கா. க., பா. 57)

இப்பாடலில் பரிசு பெற்று வந்த பாணன் அரசன் போல காணப்பட்டதாகவும் வறுமையில் வாடிய பாணன் அவனைப் புகழ்வதாகவும் அவன் நானும் பாணன்தான், அரசனல்ல என்னைப் புகழ்வது வேண்டாம் என்று கூறி வறுமையில் வாடும் பாணனுக்கு தனக்குப் பரிசில் வழங்கிய தலைவனிடம் செல்லுமாறு வழிப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது. புறப்பொருள் வெண்பாமாலை இலக்கண அடியொற்றி அவ்வாறே செய்திருப்பது சிறப்புக்குரியதாகும்.

**மறம்**

தமிழ் இலக்கண நூல்கள் 'மறம்' என்னும் கலம்பகத் துறையின் உட்பொருளை

1. மகட்பாற்காஞ்சி
2. மகண் மறுத்து மொழிதல்
3. மகட்பால் இகல்

என்னும் புறத்துறைகளில் அமைந்து விளங்குகின்றன. நிகர்த்து மேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட் பாலானும் என்னும் துறையில் தொல்காப்பியம் இம்மறத்தின் இயல்பினைக் குறிப்பிட்டுக் காட்டும், புறப்பொருள் வெண்பா மாலையும் இதனை மேற்கண்ட மூன்று துறையாகப் பேசும்.

**1) மகட்பாற்காஞ்சி**

ஏந்திழையாட் தருகென்னும்
வேந்தனொடு வேறுநின்றன்று

அழகிய அணிகலன்களுடைய நின் மகளை எனக்குத் தருக என்று சொல்லும் அரசனோடு மாறுபட்டு நின்றது.

### 2) மகண்மறுத்து மொழிதல்

வெம்முரணான் மகள்வேண்ட
அம்மதிலோன் மறுத்துரைத்தன்று

வெவ்விய பகையை உடையவனான உழிஞையரசன் நொச்சியினது மகளைத் தனக்கு மணம் செய்து தரும்படி வேண்டா நிற்ப, அழகிய அரணகத்திலுள்ள நொச்சி மன்னன் அவன் வேண்டுகோளை மறுத்துக் கூறுவது.

### 3) மகட்பாலிகல்

மயிற்சாயன் மகள் வேண்டிய
கயிற்கடிலோ னிலையுரைத்தன்று

மயில் போன்ற மென்மையினை உடைய மகளை வேண்டிய மூட்டுவாயால் சிறந்த வீரக்கழலினை உடையான் முறைமையைச் சொல்லியது என காஞ்சி, நொச்சி, உழிஞை என்னும் மூன்று திணையில் அமைத்துக் காட்டும்.

### பொது அமைப்பு

'மறம்' என்னும் உறுப்பு பல கலம்பகங்களிலும் சிறப்பான இலக்கிய நயம் இயையப் பாடப் பெற்றுள்ளது. இதன் பொது அமைப்பு கீழ்க்கண்டவாறு குறிப்பிடலாம்.

1) மறக்குடித் தலைவன் பேசுவதாக அமையும்
2) மறக்குடியின் பெருமையைப் பேசுவதாக அமையும்
3) தூதனுப்பிய மன்னனையும், பொதுவாக மன்னனையும், பொதுவாக மன்னர் குடியையும் இகழ்ந்து பேசுவதாக அமையும்.
4) சில சொற்களும், சொற்றொடர்களும் இருபொருள் (சிலேடை பொருள்) படும்படி பாடப்பெறும்.
5) கடிதம் என்னும் பொருள் உடைய திருமுகம் முதலான சொற்கள் பெரும்பான்மையும் இடம்பெறும்.

### மதுரைக் கலம்பகம்

மதுரைக் கலம்பகத்தில் 'மறம்' என்னும் துறையில் ஒரு பாடல் அமைந்துள்ளது.

தருமுகத்து நிமிர்குடுமி மாடம் கூடல்
சவுந்தர பாண்டியர் குடியாம் சமரில் ஆற்றாது
ஒரு முகத்தில் ஒரு கோடி மன்னர் மடிந்து ஒழிந்தார்
உனைவிடுத்த மன்னவன்யார் உரைத்திடுவாய் தூதா
மருமுகத்த நெறிக்குடில் எம்மடக்கொடியை வேட்பான்
மணம் பேசி வரவிடுத்த வார்த்தைசொன்னாய்
திருமுகத்தில் எழுத்து இது ஏல் திருமுடியின் எழுத்தும்
தேர்ந்து அறிய சென்று சிகையினொடும் சென்றே.
(ம. க., பா. 76)

தூதனே! சவுந்தர பாண்டிய மன்னரின் குலத்தில் பிறந்தவர்கள் நாங்கள். ஒரே போரில் ஒரு கோடி மன்னர் அழிந்தார். உன்னைத் தூது அனுப்பிய மன்னவன் யார் திருமுகத்தில் (ஓலையில்) எழுதியுள்ள எழுத்து இதுவானால் அழகிய தலையிலுள்ள விதியெழுத்தையும் நாம் ஆராய்ந்தறியும்படி நீ போய்க் குடுமியோடு (பிடித்துத்தள்ளிக்) கொண்டு வருவாயாக என்று ஓர் அரசனால் அனுப்பப்பட்ட தூதனை நோக்கி மறவர்கள் மறுத்து அவ்வரசனை இகழ்ந்து பேசுவதாக இச்செய்யுள் அமைந்துள்ளது. இப்பாடல் மறக்குடித் தலைவன் தம் மறக்குடிப் பெருமையைப் பேசுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

**காசிக் கலம்பகம்**

வையம் முழுதும் ஒருங்கீன்ற விடப்பாகர்
ஆனந்த வனத்தில் வாழும்
வெய்ய தறு கண்மறவர் குலக்கொடியை
வேட்டரசன் விடுத்த தூதா
கையில் அவன் திருமுகமோ காட்டிருகண்
டொட்டுமுட்டைக் கதையிற் தாக்கிச்
செய்யகொடி றுடைத்தகல்வாய் கிழித்தறிவோம்
நாசியொடு செவியுந் தானே. (கா. க., பா. 44)

இப்பாடல் மறவன் (போர்வீரன்) கூற்றாக அமைகின்றது. மறவர் மகளை அரசன் எளிமையாகக் கருதித் தூதுவன் கையில் தரும் ஓலை வாயிலாக தனக்குத் தருமாறு கேட்க அவருள் ஒருவன் சினந்து சோமசுந்தரர் வாழும் ஆனந்த வனத்தில் வாழ்வதாகக் கூறி மகள் வேண்டிய மன்னனை இகழ்ந்து பேசுவதாக அமைந்துள்ளது.

பக்தி இலக்கியவழி, பக்தி நெறியோடு கருத்துக்களைக் கூறாமல் சங்க இலக்கிய மரபில் கலம்பக உறுப்புக்களோடு அகப்புறத்துறைகளைப் புகுத்தி குமரகுருபரர் அருளியது சிறப்புக்குரியதாகும். பக்தி இலக்கியங்கள் இறைவன் புகழை மட்டும் வெளிப்படுத்த வேண்டும் என்றில்லாமல், தாய் இலக்கியங்களைப் போல அமைந்திருப்பது போற்றத் தகுந்ததாகும்.

கலம்பக உறுப்புக்களாக அகப்புறத் துறைகள் அமையும் நிலையில் குமரகுருபரர்கள் இயற்றிய மதுரைக் கலம்பகம், காசிக் கலம்பகம் ஆகியவற்றில் புறத்துறைகள் பல காணப்படுகின்றன. இவை சங்க மரபின்படி குமரகுருபரர் கலம்பகம் யாக்கும் திறனைக் காட்டுகின்றது. இவற்றுள் களி, பாணாற்றுப்படை, மறம் ஆகிய புறத்துறைகள் அமைந்த பாடல்கள் புறப்பொருள் வெண்பா மாலையில் காணப்படும் உண்டாட்டு, பாணாற்றுப்படை, மகண்மறுத்துமொழிதல், மகட்பாற் காஞ்சி ஆகியவற்றோடு முறையே ஒத்து அமைகின்றன.

இவற்றுள் பாணாற்றுப்படை துறைக்குறிப்பு மற்றும் துறை விளக்கம் ஆகியன ஒத்து அமைகின்றன. மகண்மறுத்து மொழிதல் என்னும் துறை 'மறம்' என்று சொல்லால் குறிக்கப் படுகிறது. ஆனால் துறை விளக்கம் பொருந்தி அமைந்துள்ளது. 'களி' என்ற கலம்பக உறுப்பு வெட்சித்திணையின் உண்டாட்டு என்னும் துறையோடு ஒருசார் ஒப்புமையுடையது.

மேற்கண்ட விதத்தில் இப்புறத்துறைகள் குமரகுருபரரின் கலம்பகங்களில் இறைவனைப் புகழ்ந்து பாடுவதற்குரிய வடிவங்களாயும், கலம்பக உறுப்புக்களாயும் திகழ்கின்றன.

# மீனாட்சி வருகைப் பருவச் சிறப்பு

ச. சாம்பசிவனார், மதுரை

**முன்னுரை**

குமரகுருபர அடிகள் அருளிய 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்', விநாயகர் கடவுள் துதிப்பாடல் ஒன்று நீங்கலாக ஒரு நூறு பாடல்கள் கொண்டது; பத்துப் பருவங்கள் உடையது. அவற்றுள் 'வருகைப் பருவச்' சிறப்புக் குறித்து ஒருசிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**தமிழுக்கு ஏற்றம்**

தமிழில் உள்ள சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும். அவற்றுள் பிள்ளைத்தமிழும் ஒன்று. இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகையாகப் பகுக்கப்படும். இவ்விருவகைப் பிள்ளைத்தமிழ் நூல்களையும் இயற்றிய பெருமை குமரகுருபரர்க்கு உண்டு' அவை (1) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (பெண்பாற் பிள்ளைத்தமிழ்); (2) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் (ஆண்பாற் பிள்ளைத்தமிழ்); சிற்றிலக்கிய வகைகளில், 'தமிழ்' என்ற சொல்லோடு இணைத்துப் பேசப்படுவது 'பிள்ளைத்தமிழ்' இலக்கியம் ஒன்றேயாம். இதன் தலைப்பே, தமிழுக்கு ஏற்றம் தருவதாக உள்ளது எனலாம்.

**நூற் பெயர்**

தமிழகத்தில் உள்ள அனைத்துச் சிவத்தலங்களிலும் எழுந்தருளியிருக்கும் இறைவன் – இறைவிக்குத் தூய – நல்ல தமிழ்ப் பெயர்களே இருந்தன. வடவர் வருகையால், அனைத்துப் பெயர்களும் வடமொழியாக மாற்றப்பட்டுவிட்டன என்பது வரலாறு காட்டும் உண்மை. அவ்வாறே மதுரைச் 'சொக்க நாதர்' – 'சுந்தரேசர்' ஆனார்; 'அங்கயற்கண்ணம்மை'– 'மீனாட்சி' ஆனார்.

இப்பிள்ளைத்தமிழில், அங்கயற்கண்ணம்மையைப் பற்றிப் பல்வேறு பாக்களில் அடிகள் குறிப்பிடுகின்றார். அவை

வருமாறு: மலைவல்லி, கர்ப்பூரவல்லி, அபிராமவல்லி, மாணிக்கவல்லி, மரகதவல்லி, அபிடேகவல்லி, அங்கயற் கண்ணமுது, மங்கையர்க்கரசி, கயற்கட்குமாரி, பாண்டிப் பிராட்டி, கவுமாரி, தடாதகை, கயற்கண் நாயகி, வைகைத் துறைவி, மதுராபுரித் தலைவி, கல்யாண சவுந்தரி, மதுரைப் பெருமாட்டி, மதுரை நாயகி, சுந்தரவல்லி – இவ்வாறு பட்டியல் நீண்டு செல்லும். ஆனால், இப்பெயர்களில் 'மீனாட்சி' எனும் சொல், யாண்டும் காணப்படவில்லை என்பது கருதத்தக்கது.

எனவே இந்நூலுக்கு 'அங்கயற்கண்ணம்மை பிள்ளைத் தமிழ்' எனும் பெயர் அமைதலே ஏற்புடைத்து. பிற்காலத்து வந்தோர், 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' எனப் பெயரிட்டனரோ என்று எண்ணத் தோன்றுகின்றது!

**வருகைப் பருவச் சிறப்பு**

ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு வகையில் சிறப்புடைத்தே. எனினும் 'வருகைப் பருவம்' அதனினும் சிறப்புடைத்து எனல் சாலும்.

ஆறாவது பருவமாக அமைவது இது. தளர்நடையிட்டு வரும் குழந்தையை, நற்றாய் முதலியோர் தம்பால் 'வருக, வருக' என அழைப்பதாகக் கூறும் பருவம். இதனை 'வாரானைப் பருவம்' என்றும் கூறுவதுண்டு. இஃது குழந்தை பிறந்த 12ஆம் திங்களில் நிகழ்வதாகப் பாடுவது மரபு.

இப்பருவச் சிறப்புக்களுள் ஒருசில இவண் சுட்டப்படுகின்றன.

அ) இறைவியைச் 'சீறடி பெயர்த்து வருக' என வேண்டும் போது,

"… … … … அரம்பையர்கடம்
மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையு மெந்தைகுடி
வளரிளம் பிறையு நாடி…………" (வருகை. 1:1–2)

என்பர். அம்பிகையின் திருவடிகளில் வானத்து அரம்பையர்கள் தம் தலைதாழ்ந்து பணிந்து வணங்குவர்; அதனால் அவர்களது கூந்தலில் உள்ள 'பிறை' என்ற அணியானது, அம்பிகையின் திருவடியில் பட்டுத் தழும்பாகக் காட்சியளிக்கின்றது.

அவ்வாறே சிவபெருமானும், ஊடலை நீக்கும் பொருட்டு அம்பிகை காலில் விழுந்து வணங்குகின்றான்; அதனால்

அவனது திருமுடியில் உள்ள 'பிறை'யின் அடையாளம் காணப்படுகின்றது.

இவ்விரு நிகழ்ச்சிகளில் முன்னது ஏற்புடைத்து எனலாம். ஆனால் பின்னது குறித்து ஐயம் எழுதல் இயல்பு.

"ஊடற்காலத்தில் தன் தலைவி காலில் தலைவன் வீழ்ந்து பணியலாம்" என்பது தொல்காப்பிய விதி.

"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய" (கற்பியல்)

என்பது தொல்காப்பிய நூற்பா. மனைவியின் ஊடலைத் தணிக்க இத்தகு செயல் நிகழ்தல் உண்டு. எனவே இறைவனும் இவ்வாறு செய்தான் என அடிகள் குறிப்பிடுவது தொல்காப்பிய விதியை உட்கொண்டேயாம்.

இதே கருத்தை மேலும் சுவையூட்டிப் பின்னர் வரும் ஒரு பாடலிலும் குறிப்பிடுகின்றார் அடிகள்.

"தேனொழுகு கஞ்சப் பொலன்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின் குழம்பாற்
றெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்
செக்கர்மதி யாக்கரை பொரும்
வானொழுகு துங்கத் தரங்கப் பெருங்கங்கை
வாணிநதி யாச்சிவ பிரான்
மகுடகோ டீரத்தடிச்சுவ டழுத்தியிடு
மரகதக் கொம்பு... ... ..." (வருகை. 5 : 1 - 2)

அவ்வாறு இறைவன் வணங்கும்போது, அம்பிகையின் திருவடியில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு, இறைவனின் திருமுடியில் உள்ள பிறையும் கங்கையும் செந்நிறமடைந்து விட்டன என்கின்றார் அடிகள். அரிய கற்பனைக்கு இஃது ஒரு சான்று.

ஆ) திருமகளும் கலைமகளும் வெறும் தாமரை மலரில் குடிபுக, இறைவியோ, சிவமணம் கமழும் அடியார்களின் மனமாகிய தாமரை மலரில் குடி கொள்பவள் என்கின்றார் குமரகுருபரர்.

"வண்டுபட முண்டக மனைக்குடி புகச்சிவ
மணங்கமழ விண்ட தொண்டர்

மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லி'' (வருகை. 2;2)

இதன்கண் 'வேற்றுமையணி' அமைந்து, கற்பார்க்கு இன்பம் அளித்தல் கண்கூடு.

''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்'' (திருக்குறள்-3)

எனும் குறட்கருத்து இவண் ஒப்புநோக்கத்தகும்.

இ) மருதநிலம் சூழ அமைந்திருப்பது 'மதுரை'. ஆதலின் இதனை 'மருதை' என்று கூறுவதும் உண்டு. குமரகுருபரர், மருத நிலத்தைத் தச்சனாக உருவகித்துப் பாடுகின்றார்.

''தண்ணங் கமலக் கோயில்பல
சமைத்த மருதத் தச்சன் முழுத்
தாற்றுக கமுகு நாற்றியிடும்
தடங்கா மணப்பந்தரில் வீக்கும்!'' (வருகை. 7:2)

என்பது அடிகள் வாக்கு. திருமணப் பந்தல் காலில் பாக்கு மரத்தைக் குலையுடன் கட்டி அழகுபடுத்துவது தமிழர்களின் வழக்கம். இதனை உட்கொண்டு அடிகள், ஓர் அழகான உருவக அணி மூலம் அரிய கற்பனைக் காட்சியைக் கண்முன் கொண்டு வருகின்றார்.

மருதத் தச்சன், குளிர் தாமரை என்னும் அழகிய கோயில் பலவற்றைச் சமைத்தவன்; பெரிய 'சோலை' எனும் மணப் பந்தரில், நன்கு முதிர்ந்த காய்க்குலைகள் கொண்ட பாக்கு மரங்களைத் தொங்கவிட்டுள்ளான்! மதுரையின் வளப்பத்தை இரண்டே அடிகளில் விளக்கும் அரிய சித்திரம் இது!

ஈ) இவ்வருகைப் பருவத்தில், அடியவர் பலரையும் கவர்ந்த அரிய தெய்வத் திருப்பாட்டு ஒன்று உண்டு.

''தொடுக்குங் கடவுட் பழம் பாடல்
தொடையின் பயனே... ... ... ...'' (வருகை. 9)

என்பதே அது. அங்கயற்கண்ணம்மை அருந்தமிழின் வடிவமாகவே அடிகளுக்குக் காட்சி நல்குகின்றாள்.

1) தொடுக்கப்படும் தெய்வத் தமிழ்ப் பழம் பாடல்களாகிய மாலையின் பயனாக உள்ளவள்; 2) தேன் ஒழுகும் இனிய

தமிழின் நறுஞ்சுவையாக இலங்குபவள்; 3) ஆணவக் கிழங்கைத் தோண்டி எடுக்கும் சிவனடியார்தம் உளக்கோயிலில் ஏற்றப்படும் ஒளிவிளக்காக இருப்பவள்; 4) வளர்கின்ற உச்சியையுடைய இமயமலையில் விளையாடி மகிழும் இளம் பெண் யானை போன்றவள்; 5) அலைகளை ஆடையாக உடுத்தியிருக்கும் இவ் வுலகத்தைக் கடந்து நிற்கும் ஒப்பற்ற சிவபெருமான் திரு வுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்துக் கொண்டிருக்கும் உயிர் ஓவியமாக ஒளிர்பவள்; 6) வண்டுகள் தம் வாய் வைத்து உண்ணுமாறு மணம் கமழ் கூந்தல் காட்டைக் கொண்டு திகழும் இளவஞ்சிக் கொடியாக இருப்பவள்; 7) மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வாக மிளிர்பவள் - இத்தகு சிறப்புப் பெற்ற அம்பிகையே வருக வருக! என்பது கருத்து.

இத்திருப்பாட்டு, பல்வேறு நலங்களும் பெற்றுச் சிறந்து விளங்கும் ஓர் அரிய பாட்டாகும்.

1) தெய்வத் தமிழ்ப் பாக்களாலான மாலைகளைச் சிவபெருமானுக்கு அடியவர் பலர் சூட்டி அருள் பெற்றுள்ளனர். சங்க காலத்திற்கு முன்பிருந்தே சிவனைக் குறித்த தமிழ்ப் பாடல்கள் உள்ளன எனலாம். தொல்காப்பியத்தில் வரும், 'சேயோன் மேய மைவரை உலகம்' (அகத்திணை) என்பதற்கு 'முருகன் பொருந்திய குறிஞ்சி' என்று பொருள். எனினும், 'சேயோன்' என்பதற்குச் 'செந்நிறக் கடவுளான சிவபெருமான்' என்று பொருள் கூறுவதும் உண்டு. கலித்தொகையில் சிவபிரானைக் குறித்த செய்திகள் உண்டு. ''சங்கத்தே வீற்றிருந்து தமிழாய்ந்தவன்'' எனும் பொருளில்,

> ''கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
> பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந்தமிழ்''
>
> (திருவிளையாடற் புராணம்)

எனப் போற்றுவர் பரஞ்சோதியார். அப்பர் பெருமான், கயிலையை அடையாமைக்குச் சேக்கிழார் கூறும் காரணம்:

> ''அன்ன தன்மையர் கயிலையை அணைவதற் கருளார்
> மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த''
>
> (திருநாவுக். புராணம்)

நாவரசர், இப்புவியில் அழியாத - இனிய தமிழைப் பாட வேண்டும் என இறைவன் எண்ணினான் என்கின்றார் சேக்கிழார்,

எனவே, 'தொடுக்கும் கடவுட் பழம் பாடல்' என அடிகள் குறிப்பிட்டது, சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் போன்ற சைவ அருளாளர்கள் பாடிய பாடல்களையே எனல் தவறாகாது.

2) தமிழ், 'அகம், புறம்' எனும் இருபெரும் பிரிவுகளாகக் கொண்டது. இவை, என்றும் ஆராஇன்பம் தருவன. அகப்புறத் துறைகளிலமைந்த இன்றமிழ் எக்காலத்தும் நறுஞ்சுவை நல்கும் ஆதலின், 'நறுஞ்சுவையே' என்றார் அடிகளார்.

3) சைவ சித்தாந்தம் சிறப்பாகப் பேசப்படும் பொருள் மூன்று. அவை: பதி, பசு, பாசம்.

''பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல்'' (சிவப்பிரகாசம்–13:1)

என்பது சிவப்பிரகாசம். திருமூலரும்,

''பதிபசு பாசம் எனப்பகர் மூன்று'' (திருமந்திரம்–114: 1–2)

என்பர்.

''சிவபெருமான் ஒருவனே முத்தொழிலுக்கும் முதல்வனாய் நின்று, இறுதிக்காலத்தில் எல்லாவற்றையும் எஞ்சாமல் ஒடுக்குகின்ற முற்றழிப்பைச் செய்வான். முற்றழிப்பு, 'மகாசங்காரம்' எனப்படும். அதைச் செய்பவன் 'மகா சங்கார காரணன்' எனப்படுகின்றான்''

(ஆ. ஆனந்தராசன், சிவஞானபோத வழித்துணை விளக்கவுரை, ப. 15)

என்னும் பொருள்பட வருவது, 'அவன் அவள் அது' (சிவஞான போதம், 1) எனும் சிவஞானபோத முதல் நூற்பா. எனவே சிவபெருமானே – முதல்வன் – ஒப்பற்றவன் – எண்குணத்தான்! இதனை உட்கொண்டே அடிகளும்

''உடுக்கும் புவனம் கடந்துநின்ற ஒருவன்''

என்றருளினார். இவ்வகையில் இத்திருப்பாட்டில் 'பதி'யின் சிறப்பை உணர்த்தியுள்ளார் எனலாம்.

'பசு' என்பது உயிர்களைக் குறிக்கும். பெறற்கரிய மனிதப் பிறவி பெற்றோர், இறைவனது திருவடியினை அடையத்தக்க வழிவகைகளை மேற்கொள்ள வேண்டும். இதனைக் குறித்துச் சிவஞானபோதம் கூறுவது:

"செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"
(சிவஞானபோதம்-12)

தம்மைப் போல் அயரா அன்பினையுடைய மெய்யடியார் களோடு கூடியிருத்தல் வேண்டும்; அவர்களின் திருவேடத்தையும் திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும் சிவன் எனவே தெளிந்து வழிபட வேண்டும். இக்கருத்தை உட்கொண்டே அடிகளார், 'தொழும்பர்' எனும் அருந்தமிழ்ச் சொல்லை ஆண்டுள்ளார் எனலாம்

'பாசம்' என்பது 'தளை'. அது மூவகைப்படும்: ஆணவம், கன்மம், மாயை. இவற்றில் ஆணவமலம் மிகமிகக் கொடுமை யானது. இதனைப் 'பொல்லாத ஆணவம்' என்பர். குமரகுருபரர், தமது கந்தர் கலிவெண்பாவில், 'ஆணவமான படலம்' என்பர். இங்கே ஆணவத்தை, 'அகந்தைக் கிழங்கு' எனக் குறிப்பிடு கின்றார். ஆணவம், மனம் எனும் நிலத்தில், மிகமிக ஆழமாகப் பதிந்து கிடக்கின்றது அதனைத் தோண்டி எடுத்தல் என்பது அத்துணை எளிய செயலன்று, அதனால்தான், 'அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுத்து' என்றார் அடிகளார்.

மெய்கண்டார், 'அம்மலம் கழீஇ' என்றது உன்னத்தக்கது. 'கழீஇ' என அளபெடை கொடுத்தது, கண்டிப்பாக அதனைக் கழித்தல் வேண்டும் என்பதற்காகவாம். ஆணவம் அகன்றபோதே இறையருள் கிட்டும். அஃது அகல்வதற்கு, மெய்யடியாரோடு சேர்ந்திருக்க வேண்டும். 'அகந்தை' எனும் ஆணவக் கிழங்கைத் தோண்டி எடுத்த சிவனடியார்தம் உள்ளமாகிய கோயிலில் வீற்றிருப்பவள் அங்கயற்கண்ணம்மை என அடிகள் கூறுவது, சைவ சித்தாந்தக் கோட்பாட்டை உட்கொண்டதாம்.

சத்தியும் சிவமும் என்றும் இணைந்தே இருக்கும். சத்தியின்றிச் சிவமில்லை; சிவமின்றிச் சத்தியில்லை. எனவே இறைவன், தன் திருவுள்ளத்தில் என்றும் சத்தியை அழகு ஒழுக எழுதிப் பார்த்துக் கொண்டே இருக்கின்றான். உலகத்து ஓவியத்துக்கு உயிர் இல்லை; ஆனால் இறைவனது திருவுள்ளத்தில் எழுதப்பட்ட அந்த ஓவியத்துக்கு உயிர் உண்டு. எனவே 'உயிர் ஓவியமே' என்றார்.

இறைவியின் கூந்தலுக்கு இயற்கையாகவே நறுமணம் உண்டு. 'கொங்குதேர் வாழ்க்கை' எனும் சங்கப்பாடல் இங்கு எண்ணத் தக்கது. இதுபற்றி நக்கீரருக்கும் இறைவனுக்கும் நடந்த உரையாடல்களைத் திருவிளையாடற் புராணம் விரித்துரைக்கும். இதனை உணர்த்துவது அடிகளின் 'மதுகரம் வாய்மடுக்கும் குழற்காடு' எனும் தொடர்.

இவ்வாறு பல்வகை நயங்களும் பாங்குறக் கொண்டு விளங்கும் பாட்டு 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்' ஆகும்!

அதனால்தான், திருமலை மன்னரும் பிறரும் கூடியிருந்த பேரவையில், மதுரைச் சொக்கநாதர் கோயில் அறுகால் மண்டபத்தில், குமரகுருபரர் இப்பாடலைப் பாடி அரங்கேற்றிய போது – அங்கயற்கண்ணம்மையே சிறு குழந்தை வடிவில் வந்து, மன்னன் மடியில் அமர்ந்து, அவரது கழுத்தில் இருந்த முத்து மாலையைக் கழற்றிக் குமரகுருபரரது கழுத்தில் அணிந்துவிட்டு மறைந்தருளினள்!

எனவே இது, 'தெய்வத் தமிழ்த் திருப்பாட்டு' எனல் முற்றிலும் பொருந்தும்.

**முடிவுரை**

இக் கட்டுரை வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. 'பிள்ளைத்தமிழ்' என்பது தமிழ் என்பதோடு இணைந்து தமிழுக்கு ஏற்றம் தருவதாக உள்ளது;
2. 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' என்பதற்கு மாறாக 'அங்கயற்கண்ணம்மை பிள்ளைத்தமிழ்' எனல் சாலும்;
3. இப்பிள்ளைத்தமிழில் 'வருகைப் பருவம்' சிறப்புடையது;
4. வருகைப் பருவத்தில் இடம்பெறும் 'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' பல்வேறு சிறப்புக்களையும் தன்பாற் கொண்டது;
5. 'வருகைப் பருவம்' என்பதற்கு ஏற்ப இப்பாடலை அடிகள் அரங்கேற்றியபோது, அங்கயற்கண்ணம்மையே குழந்தையாக எழுந்தருளி வந்து, அடிகளுக்குச் சிறப்புச் செய்தாள்;
6. இத்திருப்பாட்டை நாளும் ஓதி வழிபடல் நற்பயன் நல்கும்.

# இரு நீதிநூல்கள் ஒப்பீடு

நா. சாமிநாதன், தஞ்சாவூர்.

உலகில் மாந்தரினம் ஒற்றுமையுடன் ஒத்துவாழ, வளர, வளம் பெற, நலம் பெற; இறையருள் பெற்று வீடுபேறு பெற, பல அற நூல்கள் படைக்கப் பெற்றுள்ளன. இந்த அற நூல்களில் சாதி, சமய, மொழி, இனம், இடம், காலம் இவற்றிற்கெல்லாம் கடந்த நிலையில் நிலைத்து நிற்பது திருக்குறள் ஒன்றே. முருகனின் அருள்பெற்ற தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அருளிய அற நூலான **'நீதிநெறி விளக்கம்'** நிலைபேறு உடைத்து, இவ்விரண்டு நூலின் ஒப்பீடே இக்கட்டுரை.

## 1. இலக்கிய ஒப்பீடு

"இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம் மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து", (திருக்குறள்-532) மனித குலம் வாழ்வில் உயர ஒப்பு நோக்கவேண்டியுள்ளது என்பது புலனாகிறது. எனவே ஒப்பீடு இன்றியமையாதது. ஒப்பீடு செய்வதால் இலக்கியப் பண்பாட்டையும், இனப் பண்பாட்டையும் அறியலாம். மேலும் புலன் அல்லாதனவற்றைப் புலனாக்கி, அவற்றின் சிறப்பினைத் தேர்ந்து தெளியலாம்.

## 2. ஒப்பிலக்கிய நெறி

"உலகில் என்று மனிதன் எண்ணத் தொடங்கினானோ அன்றே ஒப்பிட்டு நோக்கும் முறையும் உடன் தோன்றியது எனலாம். ஒற்றுமைகளை ஒத்துக் காண்பதும் வேற்றுமைகளைப் பிரித்து அறிவதும் அவன் தன் இயற்கை ஆயிற்று. மேலும் மனிதனின் கற்பனை ஒப்பீட்டு முறை உருவாவதற்கு உறுதுணையாய் உள்ளது" (கதிர். மகாதேவன், அவர்களின் 'ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், பக்கம்-24).

### 3. அழகு இலக்கியம்

''செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின் அவ்வகை தானே அழகு எனப்படும்'' தொல்காப்பியம். உலகம் போற்றும், பெரு நூலாகிய **'திருக்குறளின்'** சாரமாக விளங்குவதும், சொற்சுவை, பொருட்சுவைகளை யுடையதும், பத்தழகுகளைக் கொண்டு செந்தமிழ் நடையில் அமைந்ததும், அணி நலம் பல சிறக்கப் பெற்றதுமான நீதி நூல் **'நீதிநெறி விளக்கம்'**. இருநூல் களும் தொல்காப்பிய வழி அழகினைப் பெற்றன.

### 4. புலமை

''எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பால்
இல்லாத வெப்பொருளு மில்லையால்''
— மதுரைத் தமிழ் நாயகனார்

''தெய்வப்புலவர் திருவள்ளுவர்'' என அனைவராலும் அழைக்கப்படுகிறார். புலத்துறை முற்றிய செந்நாப்புலவர். கவிநலம் கனிந்த கவிஞர், தெய்வத்தன்மை பெற்றவர், மன்னா உலகத்து மன்னுதல் குறித்து நூற்பல படைத்தவர். பிற புலவர்கள் பயன்படுத்த உதவும் சொற்கள், சொற்றொடர்கள், அடிக்கருத்துக்கள், உவமைகள், உருவகங்கள் பிற அணிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தி வழிகாட்டியுள்ளார்.

''திமிரம தகற்றுந் தெய்வக் கவிஞன்
குமர குருபரன் குரை கழல் வெல்க''.
— தனிப்பாடல்

''செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதாதுணர்ந்த போதனாய் முன்னர்த்
... ... ... ... ... ... ... ...
தீதெலா மொருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றேதமிழ் பனுவலும்
— தேவர் பிரான் கவிராயர்.

திருவள்ளுவர் ஒத்த மேற்கண்ட புலமை பெற்றவர். பாடுதல் - இயற்கை. எழுதுதல் - செயற்கை. இவ்விருவரும் பாடுதலும் எழுதுதலுமுடையவர் என்பது சிறப்புடைத்து.

**5. இலக்கிய நடை**: இலக்கிய நடை ஏழுவகை கூறுகள் செல்வாக்கைப் பெறுகின்றன! 1. ஆசிரியர் வழி, 2. கால வழி,

3. மொழி வழி, 4. கருத்து வழி, 6. நில வழி, 6. கேட்போர் வழி, 7. பயன் வழி, திருக்குறளும், நீதிநெறி விளக்கமும் வாழ்வியல் இலக்கணக் கருத்துக்களைக் கூறுவதால், கருத்து வழி நடையாகிய 1. நீதி விளக்க நடை, 2. தத்துவ விளக்க நடைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன.

**6. பாவகை:** இருநூலும் செப்பலோசையை உடைய வெண்பா வகையைச் சார்ந்தவை. ஆனால் திருக்குறள் இரண்டடி கொண்ட வெண்பா. நீதிநெறி விளக்கம் அளவடி யாகிய நான்கு அடிகளைக் கொண்ட நேரிசை வெண்பா. எனவே பாவகையாலும், ஓசையாலும் ஒற்றுமையும் அடிவகையால் வேற்றுமையும் உண்டு.

**7. பொருள் வகை:** திருக்குறள் உறுதிப்பொருள் நான்காகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றுள் முதல் மூன்றையும் முப்பாலாகவும் கொண்டு உள்ளது. வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின் துறவறம் ஆகிய காரண வகையான் கூறப்படுவதல்லது இலக்கண வகையான் கூறப்படவில்லை. நீதிநெறி விளக்கமும் அத்தகையதே. இரு நூலுக்கும் பலர் உரை எழுதியுள்ளனர். கற்றோர்க்கே பயன்படும் உரையும், மற்றையோருக்கு உதவும் உரைகளும் உள்ளன.

**8. நுவலும் முறை:** திருக்குறள் அறம், பொருள், இன்பம் எனும் முப்பால் என்னும் பெரும் பிரிவினையும், நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களையும், ஒவ்வொரு அதிகாரத் திற்கும் பத்துப் பாடல்களையும் உடையது. ஒழுங்கு முறையில் எழுதப்பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலும் ஒரு மெய்ப் பொருளை உணர்த்துவதாக அமைந்து உள்ளது. சில இடங்களில் விளக்குமுறையில் மேலும் தொடர்புடைய கருத்து விளக்கப்படும்.

நீதிநெறி விளக்கம் நூற்று இரண்டு பாடல்களை உடையது. ஒரு பாடலில் பல கருத்துக்கள் கூறப்படுகின்றன. உறுதிப் பொருள்களை உடையது.

**9. திருக்குறள் வழி நீதிநெறி விளக்கம்**

நீதிநெறி விளக்கம், திருக்குறள் கருத்துக்களை வேறு உருவத்தில் அமைத்துக் கூறினாலும், சில இடங்களில்

திருக்குறளிலுள்ள சொற்றொடர்களைப் பொன்னேபோல் போற்றிக் குமரகுருபரர் எடுத்தாண்டுள்ளார். சான்றுகள்.

1. **அறிவகற்றும்** ஆகலூழுற்றக்கடை — குறள் – 372
மடங்கொன் **றறிவகற்றுங்** கல்வி — நீதி. 3

2. **மனைத்தக்க** மாண்புடைய ளாகி — குறள் – 51
**மனைத்தக்க** மாண்பில லாயின் — நீதி. 10

3. **பழைமை** யெனப்படுவதி யாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு — குறள் – 801

**பழமை** கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறித் தொன்றுங் கொள்ளார் — நீதி. 47

4. **முயற்றின்மை**, இன்மையுகுத்தி விடும் — குறள் – 616
முயலாது வைத்து **முயற்றின்மை** யாலே — நீதி. 50

5. **கொடிறுடைக்குங்** கூன்கையர் — குறள் – 1077
**கொடிறுடைத்துக்** கொள்வான் போற்கை விதிர்த்து — நீதி. 73

## 10. ஒப்பீடுகள்

### 1. நிலையாமை

நீதி. 1: நீரிற் குமிழி இளமை நிறை செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள், – நீரில்
எழுத்தாகும் யாக்கை ... ...

குறள் 333: அற்கா இயற்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

334: நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.

336: நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமையுடைத்து இவ் வுலகு.

### 2. கல்வியின் பயன்

நீதி. 2: அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்; – உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

குறள் 398: ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து.

400: கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடுஅல்ல மற்றை யவை.

399: தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

421: அறிவு அற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்.

**3. கல்விச் செல்வம்**

நீதி . 4: கல்வியே கற்புடைப் பெண்டிர் அப் பெண்டிர்க்குச்
செல்வ புதல்வனே ஈர்ங்கவியாச்...

குறள் 60: மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

நீதி. 6: அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும்...
பூத்தலிற் பூவாமை நன்று.

குறள் 650: இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்ற
உணர விரித்துரையா தார்.

**4. வறிஞர் கல்வி நலன்**

நீதி. 10: எனைத்துணைய வேணும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பாடிலவாம்...

குறள் 1046: நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

**5. எல்லார்க்கும் நன்றாம் பணிதல்**

நீதி. 16: கல்வியுடைமை பொருளுடைமை யென்றிஉண்டு
செல்வமும் செல்வம் எனப்படும்...
தலை வணங்கித் தாழப் பெறின்.

குறள் 128: எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

குறள் 396: கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

**6. தற்புகழ்ச்சியால் விளையும் கேடு**

நீதி. 18: உரைப்பாயிரம் அறமாவது மனு முதலிய நூல்களில்
விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலும் ஆம்.

குறள் : விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே...

7. தற்புகழ்ச்சியின் இகழ்ச்சி

நீதி. 19: தன்னைவியப்பிப்பான் தற்புகழ்த்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்...

குறள் 121: அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும்.

8. பிறர் நன்மதிப்பு பெறும் வழி

நீதி. 20: பிறரால் பெருஞ்சுட்டுவேண்டுவான் யாண்டும் –
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

குறள் 415: நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

9. கற்றபடி ஒழுகுதல்

நீதி. 21: கற்றுப்பிறர்க்குரைத்துத் தாம் நில்லார்
வாய்பீடுஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை.

குறள் 391: கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

10. தெய்வம்

நீதி. 27: குலமகட்குத் தெய்வங் கொழுநனே; மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் – அறவோர்க்
கடிகளே தெய்வம்;...

குறள் 55: தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

குறள் 544: வானோக்கி வாழும் உலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

389: முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

11. ஆளும் திறமை

நீதி. 28: கண்ணிற் சொலிச் செவியின் நோக்கும்
இறைமாட்சி/
தண்ணியால்/மன்மதை ஓம்பாதார்க் கென்னாம்?

குறள்: இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுத் திரு.

**12. அளவறிந்து வரிகொள்ளும் முறை**

நீதி. 29: குடிகொன் றிறைகொள்ளுங் கோமிற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே –
குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

குறள் 386: இயற்றலும் ஈட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

**13. கொடுங்கோல் அரசன் இயல்பு**

நீதி. 30: இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான் – ஆறலைக்கும்
வேடவன் வேஞ்சம் அலன்.

குறள் 560: வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுக்
கோலொரு நின்றா னிரவு.

குறள் 558: கொலைமேற் கொண்டாரிற் கொடிதேயலை
மேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

**14. அரசனின் பேரறிவு**

நீதி. 33: ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார்?
தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு.

குறள் 423: எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

**15. பெரியோரைப் பிழையாமை**

நீதி. 36: பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினால் தாழ்வார்க் – கணிய
திளையான் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே –

குறள் 896: எரியாற் சுடப்படினும் உண்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு பவர்.

**16. மேன்மக்களின் ஈகைக் குணம்**

நீதி. 38: வாங்குங் கவனத்தொரு சிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா –

குறள் 524: சுற்றக்கால் சுற்றப்பட ஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

**17. புகழுடம்பு பெறுதற்கு வழி**

நீதி. 40: களைகாணாத் தம் மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைபுன்னி வெற்றுடம்பு தாங்கார் – தளர்நடை
தானுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம்.

குறள் 72: அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

**18. வலியும் மானமும் இழத்தல்**

நீதி. 41: தம்முடை ஆற்றலும் மானமுந் தோற்றுத் தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக.

குறள் 968: மருந்தோமற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து.

இவ்வாறே அமைச்சரின் கடமை, மன்னர் கடமை, முயற்சியுடைமை சிறுபகையைக் களைதல், உட்பகைக்கு அஞ்சுதல், புல்லியர் ஆரவாரம் தீயவர் ஆக்கம், காமத்தின் தீமை, நன்மக்கட் சிறப்பு; துறவியர் கடமை, மெய்யுணர்ந்தோர் தன்மை எனப் பலவற்றிலும் ஒப்புமையைக் காணலாம்.

# குருபரரின் வருணனைக் கோட்பாடுகள்

ச. சிவகாமி, சென்னை

இலக்கியத்தில் மட்டுமின்றி வாழ்வியலிலும் தனியாட்சி செய்யும் சிறப்புடையது வருணனை. கவிஞனின் கவித்துவத்திற்கு வடிகாலாய், புலமைத்திறனுக்கு எடுத்துக்காட்டாய்த் திகழ்வது இவ்வருணனை. எக்கால இலக்கியமாயினும், எவ்வகை இலக்கிய மாயினும், எவர் இயற்றினும் தவிர்க்க இயலாததோர் இலக்கியக் கூறாயமைவது வருணனை. இதனைப் பக்திப் பாவலர் குமரகுருபரர் கையாண்டுள்ள முறைமையும் அதன் வழிப் பெறும். எண்ணங்களும் இக்கட்டுரையுள் நோக்கப்பட்டுள்ளன.

**வருணனை - விளக்கம்**

வர்ணனை என்றும் அழைக்கப்படும் வருணனை, புனைவுரை, தோத்திரம் என்று பொருள்படுகிறது (Tamil Lexicon – Vol. 6) நேரில் பார்ப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தும் பேச்சு அல்லது எழுத்து என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்க மளிக்கிறது.

இலக்கியத்தின் இன்றியமையாக் கூறாக இலங்கினும் இலக்கியத்தை அழகு செய்யும் இவ்வருணனைக்கு அணியிலக் கணங்களில் நேரிடை விளக்கம் இல்லையெனினும், பிறவற்றிற்கு அளிக்கும் விளக்கங்களில் சிலவும், இலக்கியங்களில் வருணனை யாகக் கருதப்படும் இடங்களும் ஒத்துச்செலக் காணலாம். தொல்காப்பியம் தொட்டே இதனைக்காண முடிகிறது.

> வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று
> அன்னபிறவும் அதன் குணம் நுதலி
> இன்னது இது எனவரூஉம் இயற்கை
> என்ன கிளவியும் (தொல். 899)

என்று பண்புத் தொகைக்குத் தொல்காப்பியம் தரும் விளக்கம் வருணனைக்கும் பொருந்துகிறது. இது போன்றே, பாடாண் திணையுள் கூறப்படும் கடவுள் வாழ்த்து (1034) விளக்கு நிலை

(1036 : 7), துயிலெடைநிலை, ஆற்றுப்படை, பெருமங்கலம், சிறந்த சீர்த்தி, மண்ணுமங்கலம், குடைநிழல் மரபு, வாள் மங்கலம், மன்எயில் அழித்த மண்ணுமங்கலம் (1037); அகப் பாடலில் இடம்பெறும் மெய்ப்பாட்டின் நான்காம் பகுதியான பாராட்டு எடுத்தல் (1210) முதலானவையும் வருணனைக்கு வழி காட்டுகின்றன.

> எவ்வகைப் பொருளும் மெய்வகை விளக்கும்
> சொன்முறை தொடுப்பது தன்மை யாகும் (28)
>
> அதுவே,
> பொருள், குணம், சாதி, தொழிலொடு புலனாம் (29)

எனும் தண்டியின் தன்மையணி விளக்கமும் வருணனையை நினைவூட்டுகிறது.இவற்றிற்கு ஏற்ப குமரகுருபரரின் வருணனைப் பகுதிகள் அமைவதும் சுட்டத்தக்கது.

உயர்ந்த ஒரு பொருளை அதனிடத்துள்ள பலவிதமான இயல்புகள் விளங்கும்படி அழகுறக் கூறுதல் பொருள் தன்மை நவிற்சியாகும். இறைவனின் இயல்பாக மதுரைக் கலம்பகம்,

> அவன்அவள் அதுஎனும் அவைகளில் ஒருபொருள்
> இவன்என உணர்வுகொடு எழுதரும் உருவினை
> இலதென உளதென இலதுஉளது எனுமவை
> அலதென அளவிட அரியதொர் அளவினை
> குறியிலன் அலதொரு குணமிலன் எனநினை
> அறிபவர் அறிவினும் அறிவரு நெறியினை
> இருமையும் உதவுவன் எவன் எனநினது
> அருமையை உணர்வுகளின் அமிழ்தினும் இனிமையை (2)

எனப் போற்றுவது இதற்குச் சான்றாகும்.

ஒரு குறிப்பிட்ட இனம் பற்றிய வருணனை சாதித் தன்மை யணியாம். 'உருகி உருகி நெக்கு நெக்கு உள் உடைந்து கசிந்திட்டு அசும்பூறும் உழுவலன் அன்பின் பழவடியார் உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப் பெருகு பரமானந்த வெள்ளப் பெருக்கே' (மீனாட்சி. பிள்ளை. 45) என்பதில் இறையடியார் எனும் குழுவினரின் இயல்பு இயம்பப்பட்டுள்ளது.

ஒன்றன் குணத்தை உள்ளபடியே வருணிக்கும் குணத் தன்மை நவிற்சி,

அந்நலம் விழைந்தவர்க்கு அறமும் ஆயினை
பொன்னலம் விழைந்தவர் பொருளும் ஆயினை
இன்னலம் விழைந்தவர்க்கு இன்பும் ஆயினை
மெய்ந்நலம் விழைந்தவர் வீடும் ஆயினை (59:39-42)

எனும் சிதம்பரச் செய்யுட் கோவையுள் இடம் பெற்றுள்ளது.

ஒரு வினை நிகழும் தோற்றத்தை இயல்பு கடவாதபடி அழகுற உரைக்கும் தொழிற்றன்மைக்கு,

குங்குமம் சந்தனக் குழம்பில் குழைத்துத் தரைமெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும் புகையும் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசை நான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனில் பிள்ளையார் வைத்துப்
பொங்கு நறுமலந் அறுகோடு ஐங்கரர்க்குச் சாத்திப்
புழுகு நெய்வார்த்து இடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையநக்கு அரசி எங்கள் அங்கயற்கண் அமுதை
மனத்துள் வைத்து நினைத்தகுறி இனிச் சொலக்
கேள்ம்மே (மதுரை ... ... குறம். 25)

என்பதைச் சான்றாக்கலாம்.

பிற்காலத்தெழுந்த குவலயானந்தம் எனும் அணியிலக்கணம் தரும் 'எழிற்பொருள் உவமை'யணி இயற்கை வருணனையின் விளக்கமெனக் கருதச் செய்கிறது.

எழில்பெறு பொருளை ஒப்பனையாகத்
தொழில் செய்து கூறினும் இயல்பாய்க் கூறினும்
எழிற் பொருள் உவமை என்று இயம்பினர் புலவர் (110)

எழிற் பொருள் உவமை இயம்பிடும் காலை
வினா மொழிதனினும் விளம்பப் பெறுமே (111)

என்பன எழிற்பொருள் உவமையை விளக்கி நிற்கின்றன. இந்நூல் மட்டுமே உரைக்கும் இவ்வணி, இயல்பு, உயர்வு நவிற்சி அல்லது வினா எனும் (மீனாட்சி. பிள்ளை. 63) வடிவங்களில் வருணனை அமைவதை ஏற்றுக் கொள்கிறது.

விரல்சுவை உண்டு கனிந்து அமுதுஊறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்து அலறி உன்
மென்குரல் கம்மாமே

கரைவுறும் அஞ்சன நுண்துளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலுழிப் புனல் அருவி படிந்துஉடல்
கருவடிவு உண்ணாமே
உருவ மணிச்சிறு தொட்டில் உதைத்துநின்
ஒண்பதம் நோவாமே
ஒருதாள் உந்தி எழுந்து இருகையும்
ஒருங்கு பதித்து நிமிர்ந்து
அருள்பொழி திருமுகம் அசைய அசைந்துஇனிது
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாதபுரிக் குகன்
ஆடுக செங்கீரை (முத்து. பிள்ளை. 19)

எனும் குருபரரின் பாடல் இதற்குப் பொருத்தமுறக் காணலாம்.

வருணனைகளில் இடம்பெறும் அடைகள் பற்றி இந்நூல் தரும் விளக்கங்களும் குமரகுருபரரின் வருணனைகளில் ஏற்றமுற்றுள்ளன. 'மகரக் கருங்கட் செங்கனிவாய் மடமான் கன்று வருகவே' (மீனாட்சி. பிள்ளை. 61) என்பதில் வருணிக்கும் அடை இயல்பாய்ப் பொதுவானதாய் அமைந்து 'பரிகாரம்' (குவலயா. 49, கருத்துடை அடையெனச் சந்திராலோகம் – 49) எனும் அணி பெறுகிறது. 'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டியருளே' (மீனாட்சி. பிள்ளை 36) என்பதில் உள்ள அடை பொதுவாய் நிற்றலன்றித் தனிச் சிறப்புடன் அமைதலின் 'பரிகாராங்குரம்' (குவலயா. 50, கருத்துடை அடைகொளி – சந்தி. 50) ஆகிறது.

சொல் விளக்கம், இலக்கணச் சிந்தனை, குருபரரின் எடுத்துக் காட்டு எனும் இவற்றை இணைத்து நோக்கும்பொழுது, வருணனையை, 'ஏதேனும் ஒரு இயற்கை அல்லது செயற்கைப் பொருளை, காட்சியை, செயலை முழுமையாக அல்லது பகுதியாக நேரில் பார்ப்பது போன்ற உணர்வு தோன்றும் வண்ணம் இயல்பாக அல்லது உயர்வு நவிற்சி தரும் மிகையாக அல்லது கற்பனையாகப் புனைந்துரைத்தல்' என நவிலலாம்.

"சொற்களாலும் தொடர்களாலும் கண்முன் காட்சிப் படுத்தும் பாங்கில் தரப்படும் விரிவான விளக்கங்கள் வருணனை யாகின்றன. ஐம்புலன்களாலும் உணரும் இயற்கையையும்,

இயல்புப் பொருள்கள் பிறவற்றையும் நிறங்களால் ஓவியப் படுத்தியும், வடிவங்களால் சிற்பமாக்கியும் தரும் பிற கலை யியல்புகளை, சொற்களாலேயே வருணித்து வடித்துத் தரும் பாங்கினை இலக்கிய ஆசிரியரிடம் காண்பது வருணனை எனப் படுகிறது. ... ... ... சொல்லோவியங்களாகக் காட்சிப்படுத்தும் இவற்றில் இட வருணனை, பொழுது வருணனை, செயல் வருணனை, உருவ வருணனை, பண்பு வருணனை ... போன்ற பல அமையலாம்'' என்பர் (சு. வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 328).

வருணனைக்கும் கற்பனைக்கும் இடையே நிலவும் நெருக்கமும் இங்கு எண்ணப்பட வேண்டியதாகும். படைப்பாளன் கற்பனையின் முழு வெளிப்பாடே இலக்கியமாகும். அவன் கற்பனைத் திறனின் உச்சியை உணர்த்துவதாக வருணனை சிறப்புறுகிறது. இதனால்தான் தன்னுணர்வு மற்றும் கதை யிலக்கியங்களின் இன்றியமையாத கூறாக வருணனை மேன்மை படுத்தப்பட்டு அவற்றின் வெற்றிக்கும் அடித்தளமாகக் குறிக்கப் பட்டுள்ளது. (Joseph T. Shipley, Dictionary of World Literary Terms, P. 77).

முதல், கருப்பொருட்கள் வழி இலக்கியத்துள் இடம்பெற்ற வருணனை, அகமாந்தரின் உணர்வுகளைப் புலப்படுத்தும் கூறாகச் சங்கயிலக்கியத்துள் சிறந்தது பாட்டுடைத் தலைவரைப் போற்று தலாகக் காப்பியத்துள் கனிந்தது. இறைமையை இயம்புவதாக, உணர்த்துவதாக, சிறப்பிப்பதாகப் பக்தி யிலக்கியத்துள் பரிமளிக்கிறது.

### குமரகுருபரரின் வருணனை

நீள் கவிதைகள், நெடுஞ் செய்யுட்கள், விரிந்த இலக்கியங்கள், விளக்கமாக அமையும் பாடல்கள் மட்டுமின்றி இறைவன் புகழ்படும் பக்திப் பனுவல்களிலும் வருணனை சிறக்க முடியும் என்பதை இவரின் பிரபந்தங்கள் உணர்த்துகின்றன.

இறைவன், இறைவி, ஆசிரியர், இறையடியார் முதலான இவரை வருணிப்பதில் உருவ வருணனை அமைகிறது. மிகுதியும் முழு உருவ வருணனையாகத் தரினும் அரிதாக,

தன்ஒக்கும் செல்வக் கமலைப்
பிரான் செஞ் சடாடவி மற்று
என்ஒக்கும் என்னின் எரிஒக்கும்
கொன்றை எரியிலிட்ட
பொன்ஒக்கும் வண்டு கரிஒக்கும்
கங்கையைப் பொன் செய்விக்கும்
மின்ஒக்கும் பொன்செய் கிழக்கொல்லன்
ஒக்கும்அவ் வெண்பிறையே (திருவாரூர் ... மாலை-39)

எனப் பகுதி நிலையில் உறுப்பு வருணனை அமைகிறது.

திருவாரூர் (திரு ... மாலை – 41), தில்லை (சிதம்பர ... கோவை, 29), காசி (காசி. 58) என ஊர் வருணனைகளும் இடம் பெற்றுள்ளன. இறைவனை வருணிப்பதில் மிகுந்த ஈடுபாடு காட்டிடினும்

தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்
ஏரினை நோக்கியே எழுவர் சிற்சிலர்
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்
மாரினை நோக்கியே மருள்வர் சிற்சிலர்
(சிதம்பர ... கோவை–58)

எனக் காட்சி வருணனையும், செயல் வருணனையும் (மதுரைக். 24), ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

**வருணனை உத்திகள்**

வருணனைகளைத் தம் பாடல்களில் மிகுதியாகப் பயன் படுத்தியுள்ள குமரகுருபரர் அவற்றை வெளியிடுவதில் சில உத்திகளைக் கையாண்டுள்ளார்.

1) கேசாதி பாதம், பாதாதி கேசம், தசாங்கம் எனும் தனித்த இலக்கிய வகைமைகள் வருணனைக்குச் சிறப்பிடம் நல்குவனவாகும். இவற்றைக் குருபரர் தம் இலக்கியத்துள் ஒரு கூறாக இணைத்து, இறைவன், இறைவியை வருணிக்கப் பயன் கொண்டுள்ளார். கந்தர் கலிவெண்பாவில் முருகப்பெருமானின் கேசாதிபாத வருணனையைக் (36–58) காணலாம். சுடர் உருவில் ஆரம்பித்து சுடரில் முடிக்கும் திறன் இதில் பாராட்டிற்குரிய தாகிறது. இதில் அமையும் அறுமுக, பன்னிருகை வருணனை திரு முருகாற்றுப்படையை நினைவூட்டுகிறது. இதனுள்ளும் தசாங்கம்

(65–74) அமைந்துள்ளது. மீனாட்சியம்மை குறம் 31 முதல் 39 வரையான பாடல்களில் மீனாட்சியம்மைக்குத் தசாங்கம் தந்துள்ளது. இது பெண்மைக்கு அமைந்துள்ள முதல் தசாங்கம் எனக் கருதலாம். முத்து…பிள்ளை.யில் 17ஆம் பாடல் முருகனைப் பாதாதிகேசமாக வருணித்து அவனது அணிகலன்களால் அழகூட்டுகிறது.

2) உவமை (திருவாரூர்…மாலை 33), உருவகம் (மதுரைக். 103), தற்குறிப்பேற்றம் (மீனாட்சி. பிள்ளை. 67) முதலான அணிகளின் வழியும் வருணனை அமைகிறது.

3) 'மால் இமயத்து மடப்பிடி பெற்று வளர்த்த இளங் கன்றே, மழவிடையே, திருமா மடிகட்கென் வைத்த கவுத்துவமே, மூலமெனக் குலம் நான் மறையோலிடு முழுமுதலே, மூவா முக்கட் கனிகனியும் சுவையே தனிமுத்திக் கொரு வித்தே' (முத்து… பிள்ளை. 27) என்பது போன்று விளித் தொடர்களாலும் வருணனையைச் சிறப்பித்துள்ளார்.

4) இறைப் போற்றலிலும் வருணனை விளங்குவதை,

முத்தொழிலின் வினை முதல் நீ மூவர்க்கு முழுமுதல் நீ
எத்தொழிலும் இறந்தோய் நீ இறவாத தொழிலினை நீ
இரு விசும்பின் மேயோய் நீ எழில்மலரின் மிசையோய் நீ
அரவணையில் துயின்றோய் நீ ஆலின் கீழ் அமர்ந்தோய் நீ

எனும் சான்றில் காணலாம். இவரில் இது மிகுதியாக உள்ளது. இவற்றில் வருணனை முன்னிலையாக அமைதலும் சுட்டத் தக்கது.

5) 'அம்மகோ எனும், விழும், அழும், எழுந்து நின்று அருவி நீர் விழிசோர விம்மும், ஏங்கும், மெய் வெயர்த்து வெய்து உயிர்க்கும் என் மெல்லியல்' (மதுரைக். 118) என்பது போன்று சிறு சிறு தொடர்களை அடுக்கி வருணித்தல் இவருக்கு மிக உவப்பான தொன்றாக அமைகிறது.

**வருணனை இயல்பு**

இவரது வருணனைகள், 'உடைதிரைக் கங்கை நெடுநதித் துறையின் வலம்புரி என்ன ஆங்கு இடம்புரி திங்கள் வெள்ளி வீழன்ன விரிநிலாப் பரப்பும்' (காசிக். 101) என்பது போன்று சுருங்கிய நிலையில் அமையும் வருணனைகளை விட விரிந்து

பரந்த வருணனைகளே இவரிடம் அதிகமாகத் தோன்றுகிறது. இறை இயல்பையும், இறை தத்துவத்தையும் விளக்கும் கந்தர் கலிவெண்பாவின் முதல் 36 கண்ணிகளை இதற்கு எடுத்துக் காட்டாக்கலாம்.

இயல்பு வருணனை (பண்டார. 20)யை விட உயர்வு நவிற்சி வருணனையே மிகுதியாக அமைகிறது. (மதுரை. குறம்-16, 19).

இவரது வருணனைகளில் ஓசைநயம் சிறந்து விளங்கல் (மதுரைக். 13) மற்றொரு சிறப்பியல்பாகும்.

வருணனையில் பொருளுக்கு வரும் அடையும் அடை பெறு தலைக் காண முடிகிறது. சான்றாக, 'கருந்தாது கடுத்த பெரும் பணை தாங்கும் படர்மருப்பு எருமை' (திருவாரூர்...மாலை-17) என்பது சான்றாம்.

இவரது இயற்கை வருணனைகளில் பலாவும் அதனை உருட்டும் குரங்கும் மீண்டும் மீண்டும் இடம் பெறுகின்றன. ஆசிரியரின் தமிழ்ப்பற்று வருணனைகளிலும் வளம் காட்டுவது தனித்துக் குறிப்பிடத்தக்க சிறப்புடையதாம். 'பொழிந்து ஒழுகு முதுமறையின் சுவை கண்டும் புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழின் மழலை செவி மடுத்தனையே' (மதுரைக். 2) என்பதில் ஆசிரியரின் தமிழின் பாலுள்ள ஆராக்காதல் புலப்படுகிறது.

**வருணனைக் கோட்பாடுகள்**

இதுகாறும் கூறியன வழி, குமரகுருபரர் வெளிப்படுத்தும் வருணனை பற்றிய எண்ணங்களாகக் கீழ்வருவன அமைகின்றன.

1. அணிகளின் தோற்றத்திற்கு உவமை அடிப்படை எனில் அவற்றிற்கு வடிவம் நல்குவதில் வருணனை முன்னிற்கிறது.

2. எடுத்துக் கொண்ட பொருளைச் சிறப்பிக்க உதவும் உத்தியாகவும் வருணனை சிறப்புறுகிறது.

3. கற்பனைப் பெருக்கின் வடிகால் வருணனை.

4. இலக்கியத்தை அணிசெய்வதில் வருணனைக்கும் பெரும் பங்குண்டு. வருணனை யில்லா இலக்கியம் மணமற்ற மலர் என்று இவர் கருதுகிறாரோ என்று எண்ணும் அளவிற்கு இவரது படைப்புகளில் வருணனை பேரிடம் கொண்டுள்ளது.

**நிறைவுரை**

இறையுணர்வோடு ஒன்றிய வாழ்க்கையினர் என்பதை இவரது வருணனைகள் வெளிப்படுத்துகின்றன. தன்னுணர்வு, தன்னிரக்கம், பெண்பழிப்பு, நிலையாமை, பிறசமயக் காழ்ப்பு எனும் பக்தியிலக்கியப் பொதுப்பண்புகள் இவரிடம் இன்மை சிறப்பாகும். பாடற்றலைமையும், பாடுபொருளும் குறுகிய வட்டத்துள் அமைந்துள்ளமையால் பல்வகைப் பிரபந்தங்களைப் பாடியிருப்பினும் அவற்றுள் வருணனை சிலவிடங்களில் கூறியது கூறலாக அமைந்துள்ளது. கற்பனை நலன் சான்ற கவிஞரிடம் இது தவிர்க்கப்பட்டிருக்கலாம். எனினும் வருணனை வெளிப்பாட்டில் இவர் காட்டியுள்ள பல்வேறு உத்திகளும் எளிமையும், படைப்பு நோக்கின் நிறைவேற்றமும் இவரை உயர் கவியாகவே மிளிரச் செய்கின்றன.

# நீதிநெறி விளக்கத்தில் உவமை நலம்

ஏ. சிவசங்கரன், அரக்கோணம்

குமரகுருபர சுவாமிகள் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். இவருடைய காலத்தில் மதுரையில் திருமலை நாயக்கர் ஆட்சி புரிந்து வந்தார். ஒருநாள் நாயக்கர் வெகுநேரம் வரையில் உணவு கொள்ளாமல் அரசு காரியங்களில் ஈடுபட்டிருந்ததைக் குமரகுருபரர் கண்டு,

''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது''.

என்ற திருக்குறளை எடுத்து விளக்கினார். அதனைக் கேட்ட மன்னர் மகிழ்ந்து இது போன்ற நீதிநூல் ஒன்று செய்தருளும்படி வேண்ட, அவ்வாறே ''நீதிநெறி விளக்கம்'' என்னும் ஓர் அரிய நீதிநூலை அருளிச் செய்தார்.

நீதிநெறி விளக்கத்தில் 102 அரிய பாடல்கள் உள்ளன. இவை பெரும்பாலும் திருக்குறளில் உள்ள முக்கிய கருத்துக்களை நான்கு அடிகளில் சிறிது விளக்கமாக சிறந்த உவமைகள் மூலம் பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் இயற்றியுள்ளார். முதல் பாடல் கடவுள் வாழ்த்தாகும். இந்தப் பாடல் அடிகளாரின் 'சிதம்பரச் செய்யுட்கோவை', என்ற நூலிலும் சேர்க்கப் பட்டுள்ளது.

இளமையும் செல்வமும் உடலும் நிலையில்லாதன. ஆதலால் அவை நிலைத்துள்ள போதே விரைந்து கடவுளைத் துதிக்க வேண்டும் என்று அடிகளார் கூறுகிறார்.

''நீரிற் குமிழி இளமை, நிறை செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் – நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள்! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று

நீர்க் குமிழி தோன்றி அழிதல் போல, இளமை தோன்றி அழிதலின், ''குமிழி இளமை'' எனவும்; அலைகள் பெரிதாகத்

தோன்றிக் கரையினைச் சாரச் சாரச் சுருங்குதல் போலச் செல்வம் பெரிதாகத் தோன்றி வரவரச் சுருங்குதலின், ''நெடும் திரைகள் செல்வம்'' எனவும், நீரில் எழுதிய எழுத்து அப்பொழுதே அழிதல் போலத் தோன்றிய உடனே அழியுந் தன்மையாதலின்,

''நீரில் எழுத்தாகும் யாக்கை'' எனவும் கூறி, இம்மூன்று நிலையாப் பொருள்களைக் கொண்டு நிலைத்த பொருளாகிய கடவுளின் அருளைப் பெறவேண்டும் என்று அடிகளார் கூறுகின்றார். குமிழி, திரைகள், நீர்மேல் எழுத்து ஆகிய மூன்றும் நீரிலே தோன்றுபவைகள் நிலையாமையை விளக்க வந்த அருமையான உவமைகளாகும்.

மற்றொரு பாடலில் கல்வியின் இன்பம் எத்தகையது என்பதை அடிகளார் மிகச் சிறப்பாக விளக்குகிறார். இதோ அப்பாடல்,

தொடங்குங்கால் துன்பமாய், இன்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி – நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்!
பிற்பயக்கும் பீழை பெரிது.

போலிக்காம இன்பத்தை விட கல்வியால் வரும் இன்பமே சிறந்தது என்று கூறுகிறார். துவக்கத்தில் காமம் தரும் இன்பத்தைக் காட்டிலும் இறுதியில் தரும் துன்பம் மிகுதி என்ற குறிப்பினாலே கல்வியும் முதலில் தரும் துன்பத்தைக் காட்டிலும் பின்பு தரும் இன்பமே மிகப் பெரியதாயிருக்கும் என்பது உணர்த்தப்படுகின்றது. தவிர, ''மடங்கொன்று அறிவகற்றும்'' என்ற தொடரால் அறியாமை மீண்டும் உண்டாகாதவாறு கல்வி கெடுத்துவிடும் என்பதும் பெறப்படுகிறது. கல்வி, காமம் ஆகிய இரண்டின் தன்மையையும் அடிகளார் கூறும் பாங்கு எண்ணுந் தோறும் மகிழ்ச்சி தரவல்லது.

மற்றொரு பாடலில் (நீ. நெ. வி. (4)) அடிகளார் கல்விச் செல்வத்தின் தன்மையை அருமையாகக் கூறுகிறார். ஒவ்வொரு வரும் கல்வி, கவிபாடும் திறம், பாடம் சொல்லும் வண்ணம், சொல்வன்மை ஆகியவற்றைப் பெற முயலவேண்டும் என்று கூறப்படுகிறது. இவ்வாழ்க்கைக்கு இன்றியமையாதவர் கற்புடைய பெண்டிர் ஆதலின், அவளை இம்மை மறுமைக்கு

இன்றியமையாத கல்விக்கு உவமை ஆக்கியும், இல்வாழ்க்கைக்கு அழகு, பிள்ளைப்பேறு ஆதலின் புதல்வரைத் தாம் இயற்றும் கல்விக்கு உவமை ஆக்கியும், மனைவி, மகனைப் பெற்றும் கற்றவற்றைப் பிறர்க்குப் பாடம் சொல்லும் திறமை இல்லாவிடின் பயன்படாமையால் சொல்வளத்தைச் செல்வத்துக்கு உவமை ஆக்கியும் கூறினார். ஒருவன் கல்வியும் கவிபாடும் திறமும், பாடம் சொல்லும் வளமும் பெற்றிருப்பினும் நல்லவையில் சொற்பொழிவு செய்வது அருமை என்று அடிகளார் கூறுகிறார். கல்வியுடன் கூடிய ஒருவன் வாழ்க்கை நல்ல மனைவியுடன் கூடி வாழும் இல்வாழ்க்கையை ஒக்கும் என்று பெறப்படுகிறது.

ஏழாவது பாடலில் பிரம்மனையும் புலவரையும் ஒப்புமைப் படுத்திஇருவரது தொழிலில் புலவர் செய்யும் நூல் புகழைப் பெற்று அழியாமல் நிற்கும் என்று கூறுகிறார்.

> கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
> மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் – மலரவன்செய்
> வெற்றுடம்பு மாய்வன போல் மாயா புகழ் கொண்டு
> மற்றிவர் செய்யும் உடம்பு.

பிரம்மன் படைக்கும் மனித உடல் காலவெள்ளத்தால் அழிந்து விடுகிறது. ஆனால் அழியும் மனிதனால் படைக்கப்பட்ட நூல் புகழைப் பெற்று அழியாமல் நிலைத்து நிற்கும் என்று கூறுகிறார். இந்த உவமை என்றும் எண்ணி மகிழத்தக்க ஒன்றாகும். தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், பட்டினத்தார், இராமலிங்க அடிகள் போன்ற அருளாளர்கள் அவதரித்து வாழ்ந்து மறைந்து விட்டனர். ஆனால் அவர்களால் அருளிச் செய்யப்பட்ட தெய்வமணம் கமழும் தீந்தமிழ்ப் பாடல்கள் இன்றும் புகழ் பெற்று விளங்குகின்றன.

இருபத்தாறாவது பாடலில் அறிவுடையோர் மாட்சிமை பற்றி கூறுகிறார். கல்வியில் சிறந்தவர் எங்கிருப்பினும் சீரும் சிறப்பும் தாமே அவரைத் தேடிச் சென்றடையும் என்பது விளக்கப்படுகிறது. அதாவது அரண்மனை வாயிலில் நிற்கும் யானை போர்க்காலத்தில் பயன்படுதல் போலப் பெரியோர் அரசனுக்கு அருகில் இல்லாவிடினும் தக்க சமயத்தில் பயன்படுவர் போலப் பெரியோர் என்பதும், அந்தப் புரத்திலுள்ள

பூனை சோர்வறிந்து அங்குள்ள உணவுகளை உண்டு அவமதிப்பு அடைதல் போலச் சிறியோர் அரண்மனையைக் காத்திருந் தாலும் ஒரு சிறப்பும் இல்லாது அவமதிப்பு அடைவர் என்பதும் இங்கே அறியத் தக்கன. யானை பூனையிலும் சிறப்புடையது போல மேலோர் கீழோரிலும் சிறப்புடையவராவர்.

முயற்சியின் சிறப்பினைப் பற்றி மற்றொரு பாடலில் (நீ. நெ. வி. 56) தெளிவாக விளக்குகிறார். எல்லாம் ஊழ்வினைப்படியே நடக்கும் என்று கருதி யாரும் சும்மா இராமல் தன்னால் இயன்ற முயற்சினை மேற்கொள்ள வேண்டும் என்று அடிகளார் கூறுகிறார். எண்ணெய் திரி முதலியன குறைந்ததனால் எரிவதற்கு சக்தியற்ற விளக்கு அணைந்துவிடுவது இயல்புதானே என்று கருதி காற்றடிக்கும் இடத்தில் ஏற்ற மாட்டார்கள்; அது சிறிது நேரமாவது எரியும் என்று எண்ணிப் பயன்பெற அதனைப் பாதுகாப்பார்கள். அதுபோல ஊழ்வினையின் வலியினைக் கருதி வாளா இராமல் தம்மால் இயன்ற முயற்சி செய்து ஏற்ற பயனைப் பெறுவர்.

அறுபத்தாறாவது பாடலில் மேலோருடைய செல்வம் எல்லார்க்கும் பயன்படும்; மத்திமருடைய பொருள் அவர்க்கு மட்டும் பயன்படும்; கீழோருடைய பொருள் அவர்க்கும் பிறர்க்கும் பயன்படாது என்று அருமையான உவமைகள் மூலம் அடிகளார் விளக்குகிறார்.

இதோ பாடல்:

பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்;
குலமகளே ஏனையோர் செல்வம் – கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம் போற் கடையாயர்
செல்வம் பயன்படுவ தில்.

செல்வர்கள் மூன்று வகையினராகப் பிரிக்கப்படுகின்றனர். பலர்க்கும் பயன்படுவோர், தமக்கு மட்டும் பயன்படுவோர், யாவர்க்கும் பயன்படாதவர் என மூவகையினராகப் பிரித்துத் தலையாயவர், ஏனையோர், கடையோர் எனக் கூறினார். பலர்க்கும் பயன்படுதல் பற்றித் தலையாயர் செல்வத்திற்கு பொதுமக்கள் நலத்தையும் தமக்கு மட்டும் பயன்படுதல் பற்றி இடையாயர் செல்வத்திற்குக் குலமகள் நலத்தையும் ஒருவர்க்கும் பயன்படாமை பற்றிக் கடையாயர் செல்வத்திற்கு

கைம்பெண்டிர் நலத்தையும் உவமை கூறியது மகிழ்ந்து போற்றத் தக்கதாகும்.

இருபத்தொன்பதாம் பாடலில் அளவறிந்து வரி கொள்ளும் முறை பற்றி அடிகளார் கூற்று என்றும் போற்றி பின்பற்று தற்குரியதாகும். குடிமக்களை வருத்தாது அளவறிந்து வரி வாங்கும் அரசனிடத்தில் செல்வம் வெள்ளம் போல் நிற்கும் என்று கூறுகிறார். வரி வசூல் எப்படி இருக்க வேண்டுமெனில் பாலினைக் கன்றும், தேனினை வண்டும் கவர்தல் போலக் குடிமக்கள் வருத்தமடையாமல் அருளோடும், அன்போடும் அவரவர் தகுதிக்கேற்ப வரியைச் சிறிது சிறிதாக வசூலிக்க வேண்டும் என்று குமரகுருபரர் வலியுறுத்துகிறார்.

குமரகுருபர அடிகளாரின் பாடல்களில் உள்ள எண்ணற்ற உவமைகளில் சிலவற்றை இக்கட்டுரையில் சுவைத்தோம். பிறவற்றையும் அன்பர்கள் முழுவதும் படித்து பயன் பெறுவார்களாக.

# அடிகளின் பெண்ணியப் பார்வை

நா. சிவா, புதுவை.

மனித மனம் மாற்றத்திற்குள்ளாவது போல இலக்கியங்களும் மீட்டுருவாக்கம் பெறுவது காலத்தின் தேவையாகின்றது. சமூகத்தில் ஒழுக்கக் கேடுகள் உருவானதும் அவற்றைச் சரி செய்யும் பொருட்டு எழுந்ததே நீதி இலக்கியங்களாகும். வாழ்க்கையோட்டத்தின் ஒன்றான சக்கரங்களாக ஆண், பெண் இருபாலாரும் கருதப்படுவது இயல்பான ஒன்று. இதில் மாறுபாடு நிகழும்போது சிக்கல்கள் முகிழ்க்கின்றன. இந்தச் சிக்கலின் விளைவே பெண் விடுதலை, பெண்ணியம் போன்றவைக்கு அடித்தளமாகும். இலக்கியங்கள், மெய்ப்பொருள் காண்பது அறிவாகும் என்பதால் நீதிநெறி விளக்கத்தில் பெண்ணியம் எவ்வாறு நோக்கப்படுகிறது என்பதை விளக்க இக்கட்டுரை முனைகிறது.

நீதிநெறி விளக்கத்தில் நூற்றிரண்டு செய்யுள்கள் உள்ளன. அவற்றில் இருபத்திரண்டு செய்யுள்கள் பெண்ணோடு தொடர்பு படுத்திப் பேசப்படுகின்றன. கால எல்லைக்குட்பட்டு அந்தச் செய்யுட்களின் மூலம் பெண்ணியப் பார்வையை விளக்கலாம். பெண்ணியப் பார்வையை விளக்குவதற்கு முன்னர், அவற்றை விளங்கிக் கொள்வது ஏற்புடைத்து. பெண்ணியத்தை ஓரிரு சொற்றொடர்களில் விளக்குவது அரிது. இருப்பினும், பெண்களின் சுய உரிமை பாதுகாக்கப்படுவதும், அதற்கான வழிமுறைகளை ஏற்படுத்துவதும் பெண்ணியப் பார்வை எனலாம்.

### கல்வியில் பெண்கள்

"கல்வியே கற்புடை பெண்டிர்", "கலைமகள் வாழ்க்கை முகத்தது", "கடும்பகல் ஏதிலான் பாற்கண்ட இல்லினும்", "மனைத்தக்காள் மாண்பிலனாயின்", "கனங்குழாய்", "தாக் கணங்கும் ஆண் அவாம் பெண்மையுடைத்தெனினும் பெண்ணலம் பேடு கொளப்படுவதில்" முதலிய தொடர்கள் கல்வியை விளக்கப் பெண்ணைப் பயன்படுத்திய இடங்களாகும். பெண்ணை

உவமையாக்கியுள்ளது. மற்ற உவமிக்கப்படும் பொருள்களுள் பெண்ணும் ஒன்று என்ற கருத்தாக்கமாகும்.

"கல்வியே கற்புடைப் பெண்டிர்" இத்தொடர், ஒருவன் தான் கற்ற கல்வியே கற்புக் குணம் பொருந்திய மனைவியாகும் என விளக்குகிறது. கற்புக் கோட்பாடு பெண்ணை ஒடுக்குவதற் காகச் சமூகம் பெண்ணுக்குத் திணித்த ஒன்றாகும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. கற்புடைய பெண்கள் பத்தினிப் பெண்கள் எனப் போற்றப்பட்டு நான்கு சுவருக்குள் ஒடுக்கப் பட்டனர். பெண்களும் தம்மைக் கல்விக்கு ஒப்பாக நினைக் கின்றார்கள் என நினைத்து அதைப் பெருமையாகக் கொண்டனர். கற்புடையப் பெண்கள் கணவனுக்கு மட்டும் பயன்படுவர். கல்வி அப்படி இல்லை. இருந்தும் கற்போடு தொடர்புபடுத்திப் பேசப் பட்டது. கற்பை வலியுறுத்த எழுந்த விதிமுறையாகும்.

"கலைமகள் வாழ்க்கை முகத்தது என்பது "கல்விக்குரியவள் கலைமகள்" – அவள் புலவரின் நாவில் இருந்து கவி வடிக்கிறாள். எனவே தெய்வமாகிய கலைமகளே இவற்றையெல்லாம் நவில்கிறார், 'அதைத் தள்ளாதே' என வலியுறுத்துகிறது. பெண் தெய்வம் சொன்னால் மறுப்பதற்கு யாருளர்? இத்தொடர் பெண்ணுக்குப் பெருமை சேர்க்கவில்லை. மாறாக ஆணின் சொல்லைக் கேட்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

கற்றது செலச்சொல்லார், நண்பகலில் வேறொருவனிடம் வயப்பட்டிருக்கும் மனைவியைவிட தீய பயனைத் தரும். ஏனென்றால் அவளைத் தீயவள் என்று உலகம் ஒதுக்குவது போன்று தான் கற்ற கல்வியை நீக்குவது அரிதாகும். காமக் கிழத்தி, பரத்தை, பொது மகளிர் முதலியவை ஆண் மகனின் ஒழுக்கம் மிகவும் இழிவானது என விளக்கிச் செல்லும். ஆனால் அப்போதுகூட, அது "பேராண்மை" கிடையாது; ஆதலால் உனக்குப் பெருமை இல்லை; அதை விட்டொழி என்று விளக்கப் படுகிறது. ஆனால் பெண் வேறொருவரிடம் வயப்பட்டதும், சமூகம் அவளை ஒதுக்குகிறது. இந்த முரண்பாடு பெண் ஆணுக்குக் கட்டுப்பட்டவள் என்பதை நிரூபிக்கும். (மனைவியை நீக்கிவிடலாம் என்பதால் இன்னொரு பெண்ணை மணம் முடிக்கலாம் எனப்பொருள்படும்.) ஆனால் தான் கற்ற கல்வியை நீக்க முடியாது. ஆகவே கல்வியைவிடக் கூர்மையாகக் கண்காணிக்கப்பட வேண்டியவள் பெண் என்பதாகும்.

இல்லறத்தில் பெண் மாண்புடையவளாக இருந்தால்தான் கணவன் புகழ்பெற முடியும். கணவன் எவ்வளவு கல்வி கற்றவனாக இருந்தாலும் மனைவி மாண்பிலாளானால் அவனுக்கு இழிவு ஏற்படும். இதையே மறுதலையாகப் பெண்ணை வைத்து இக்கேள்வியை யாரும் எழுப்பியதில்லை. இதிலிருந்து ஆணின் சுயநலத்திற்காகவே பெண் தன்னைத் தியாகம் செய்ய வேண்டும் எனக் கருதமுடிகிறது. "கனங்குழாய்" என்று விளித்துச் சொல்லப்படுவது பெண் நுகரப்படும் பொருள் என்பதையும், பெண் வழி சொன்னால் ஆண்கள் செவிமடுப்பர் என்பதையும் பெற வைக்கிறார். மேலும், தாக்கி வருத்தும் ஆடவர் விரும்பும் பெண் தன்மையுடையது என்றாலும் பெண் இன்பம் பேடுகளால் அனுபவிக்கப் படுவதில்லை. அதுபோல நகைத்து வீண்பொழுது போக்கும் மக்களிடத்துக் கல்வி சேராது என்கிறார். ஆண் பேராண்மை உடையவன். அவன் பெண்மைத் தன்மை கொண்டால், ஆணினத்திற்கே இழுக்கு. ஆகவே விளையாட்டுக்குணம் பெண்ணுக்கே உண்டு. அதை ஆண்கள் கைக்கொண்டால் அவர்களிடம் கல்வியும் சேராது. பெருமையும் வாராது என அறிவுரை கூறுகின்றார்.

இக்கருத்துக்களைப் பெண் கண்கொண்டு பார்க்க வேண்டும். ஒரு பெண் அப்பாடலை எழுதியிருந்தால் இப்படியெல்லாம் தன்னை இழிவுபடுத்திக் கொள்வாளா? அன்றும் இன்றும் குடும்ப நிறுவனங்களில் ஆணும் பெண்ணும் ஒழுக்கக் கேடு கொண்டவர்களாகத் தொடர்ந்த வண்ணம் உள்ளனர். இவற்றை நோக்கினும் ஆண்களே அதிக ஒழுக்கக் கேடு நிறைந்தவர்களாக குன்றின் மேல் இட்ட விளக்குபோல வெளிப்படுகின்றனர். இதைப் பெருமையாகவும் கருதுகின்றனர். 'கற்பு நிலை என்று சொல்லவந்தார் இருகட்சிக்குமதைப் பொதுவில் வைப்போம்' என்ற நிலையிலாவது சமூகம் இன்றும் விழிப்படையவில்லை.

**கணவனே கண்கண்ட தெய்வம்**

தெய்வம் என்ற ஒன்றே கேள்விக்குறியாக இருக்கும்போது, காணாத அருபப்பொருளைக் கணவனோடு தொடர்பு படுத்துவது மிகவும் வருந்தத்தக்கது. மனைவிக்குத் தெய்வம் கணவனாவான், –'குலமகட்குத் தெய்வம் கொழுநனே' என்ற சொல்லாக்கத்தை ஆண் சமூகத்தைத் தவிர யார் கட்டமைத்

திருக்க முடியும்? இது பெண்ணின் மீது திணிக்கப்பட்ட வரையறையாகவே படுத்துக்கொள்ள நேரிடுகிறது.

ஸ்ரீதேவி அல்லது திருமகள் என்ற சொல்லை இழிவுபடுத்த மூதேவி என்ற பெண் சார்ந்த சொல்லை வைத்தே இழிவு படுத்துகிறோம். பெரியவரை வரவேற்காது அவர் தம்மிடம் வரும் வரை காத்திருப்பது திருமகள் சேர்க்கை உள்ளதாயினும் மூதேவியின் சேர்க்கையை அடைதல் தொலைவில் இல்லை எனப்பொருள்படும்,–''இளையாள் முயக்கெனினும் சேய்த்தன்றே மூத்தாள் தொலையாத போகம்'', என்ற தொடர் கையாளப் படுகிறது. பெரியவர் என்று இந்த இடத்தில் சொல்லப்படுவது ஆண் மகனையே குறிக்கும் தன்மையுடையது. இன்னாத கூறலின் போது பெண்ணை முன்னிலைப்படுத்திப் பேசுவது பெண் தாழ்ந்தவள் என்பதைக் குறிப்பதுவேயாகும்.

கற்புடைய கைம்பெண்டிர் கூற்றுவன் உயிர் கவர்வதற்கு எதிர்த்து வந்தாலும் அஞ்சமாட்டார்கள் – 'கலனழிந்த கற்புடைப் பெண்டிர் அஞ்சார் முரண்மறலி தும்பை முடிசு டினும்' – எனக் கூறுகிறது இப்பாடல். கைம்பெண்ணாயினும் கற்பு நிலை தவறக் கூடாது என்பது வலியுறுத்தப்படுகிறது. மாறாக மனைவியை இழந்த கணவன் நிலை பற்றி எதுவும் குறிப்பிடவில்லை.

**பொருள் ஈட்டுதலில் பெண் நிலை**

வஞ்சனையால் தேடும் பொருள் அழியும் – என்பதை, 'பொம்மன் முலைபோல் பருத்திடினும் மற்றவர் நுண்ணிடை போல் தேய்ந்து விடும்' என்ற அடிகள் விளக்குகின்றன. செல்வம் பெண்களின் கொங்கைகளைப் போல் பெருகுவதாய் விளங் கினாலும் அப்பெண்களின் சிறிய இடையைப் போல் குறைந்து விடும். 'உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும்' எனக் கூற வந்தவர் பெண்ணின் உறுப்புக்களை வைத்து விளக்குகின்றார்' ஆண்கள் எவற்றைப் பார்த்தாலும், பெண்ணை முன்னிறுத்தியே பார்க்கின்றனர். அவர்கள் இன்பம் அனுபவிக்கும் நிலையிலேயே உள்ளனர் என்பதற்கும் இது ஆதாரமாக அமைகிறது.

'பொது மகளே போல்வ தலையாயார் செல்வம்', என்ற செய்யுளில் கருணை உள்ளம் கொண்ட தலையாயார் செல்வம் பொது மகளிரைப்போல எல்லோருக்கும் பயன்படும், இடைப் பட்டவரின் மிதமான பொருள்கள் கற்புடை மகளிரைப் போல

தன்னை உடையவருக்கே பயன்படும். கடைப்பட்டவரின் வஞ்சனைப் பொருள் தாலியை இழந்த கைம்பெண்ணின் பெண்மையழகைப்போல் எவர்க்கும் பயன்படா, என்பன பெண்ணை முன்னிறுத்தி பேசப்படுகின்றன. இதில் முரண்பாடுகள் நிறைந்துள்ளன. பொது மகளிர் எல்லோருக்கும் பயன்படுவர் என்பதை ஒப்புக்கொண்டவர் இழிகுணம் கொண்டவர் என்கிறார். இழிகுணம் கொண்டவரை நல்ல உவமையோடு ஒப்பிடுவது எங்ஙனம் பொருந்தும் எனத் தெரியவில்லை. ஆகவே பெண்கள் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற ஆணின் மேலாதிக்கம் தலைதூக்கியது தெரிய வருகிறது. செல்வத்தோடு பெண்ணை ஒப்பிடுவது ஒரு பொருளை ஒப்பிடுவது போல அஃறிணைப் பாற்படும்.

**பிறன் மனைவி நுகர்வால் இழிவு**

'பிறன்வரை நின்றார்' - என்ற பாடலில் பிறன் மனைவி இல்லிடத்தில் சென்றால் அது அறமாகாது. அப்படி அறச் செயலாயினும் இன்பம் உடையதாய் அது ஆகாது, பிறர் மனைவியை இன்பம் துய்ப்பதானால் உடல் நடுங்க, மனமும் நடுங்கும். அப்படியிருக்க முழுமையான இன்பத்தை எவ்வாறு அடைய முடியும்? இறுதியில் இன்பத்திற்கு மாறான துன்பமே ஆட்கொள்ளும். பிறன் மனைவி விழைவு கூடாது என்று நேராகச் சொல்லவில்லை. மாறாக அது 'அறம்' ஆகும் என்ற ஒப்புதலும் தந்து, முழுமையான இன்பம் நுகர ஆண்மகனுக்கு வாய்ப்பில்லை. எனவே அதைக் கைவிடு என்பதாகக் கூறுகின்றார். ஆணுக்கு இழிவு கூற வந்தவர் அவன் இன்பத்தை நிலை நிறுத்துகிறார்.

கற்பில்லாத பெண் பிறவி பெரும் பாவச் செயலாகும் என்று சொல்கிறார். ஆணுக்கு நிகரான சொல்லை பயன்படுத்தவில்லை. ஆண் வீடுபேறு பெற்று முக்தியடைய தடையாகப் பெண்கள் உள்ளனர் என்பது, பெண்கள் மீது வைக்கும் குற்றச்சாட்டாகும். முழுக்க முழுக்க சுயநலம் நிறைந்த துறவியர் செயல்கள் பெண்ணை நோக்கியே உள்ளதால் அவர்களுக்கு அவர்கள் மேல் வெறுப்பு உண்டாகிறது. துறவியர் காமத்தை அடக்கப் பார்க்கின்றனர். அது முடியாதபோது பழியைப் பெண்கள் மீது சுமத்துகின்றனர். புகழுக்கு இழுக்கு நேராதவாறு துறவியர் தம்மை முழுமைப்படுத்த முயற்சிக்கின்றனர்.

இதுகாறும் கண்டவற்றால் கீழ்க்காணும் முடிவுகள் பெறப் படுகின்றன.

1. ஒழுக்கக் கேடு நிறைந்த சமூகத்தை நெறிப்படுத்த விழைந்ததன் விளைவே நீதி நூல்கள்.
2. பெண்ணோடு கல்வியைத் தொடர்புபடுத்தி, ஆனால் பெண்ணுக்குப் பெருமை சேர்ப்பதாகக் குமரகுருபரர் பாடல்கள் போற்றப்படவில்லை.
3. கற்புக் கோட்பாட்டை ஒருதலை பட்சமாகப் பெண்ணை மட்டுமே முன்னிறுத்தி வரையறைப் படுத்துகின்றது.
4. ஆணுக்குப் பெண் கட்டுப்பட்டவள் என்பதை நீதிநெறி விளக்கம் இலைமறை காய்போல் சுட்டுகின்றது.
5. இல்லம் சிறக்க பெண்ணல்லால் முடியாது.
6. பெண் தன்னைத் தியாகம் செய்து ஆணுக்குப் பெருமை தேடித்தருவதாகத் திட்டமிட்டு அமைக்கப்பட்ட சமூக மரபையே காண முடிகின்றது.
7. பெண்ணைத் தெய்வத்தோடு தொடர்புபடுத்தி அவர் களின் உரிமையைச் செயலிழக்கச் செய்திருப்பது தெரிய வருகின்றது.
8. ஆண்டாண்டு காலமாக வளர்க்கப்பட்ட இத்தகைய பண்புகள் சமூக இயல்பு போல தோற்றமளிக்கின்றது.
9. கற்புக் கோட்பாடு பேசப்படும்போது ஆணுக்கு நெகிழ்வுத் தன்மை கொடுக்கப்படுகிறது.
10. பெண்ணை எந்த ஒரு உவமைக்குப் பயன்படுத்தினாலும் அவள் போற்றப்படுவதில்லை. மாறாக தன் உரிமையை மறக்கச் செய்யும் மனநிலையை ஏற்படுத்துவதாக அமைகிறது.
11. ஆண் தன் ஆதிக்கத்தை தக்கவைத்துக் கொள்ள கையாண்ட ஒரு தந்திர உத்தி கற்புக் கோட்பாடாக விளங்குகிறது.
12. குடும்பம் சிதைந்து விலங்கு வாழ்வுநிலை ஏற்படும் என்பதற்காகக் கற்பை நிலைநிறுத்த வந்தவர் நடுவு நிலை தவறியதே சிக்கலுக்குரிய செய்தியாகும்.

# குமரகுருபரர் தசாங்கம்

பெ. சீதாலட்சுமி, தஞ்சை

பொருண்மை மற்றும் பா எண்ணிக்கை அடிப்படையில் அமைந்த சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று தசாங்கமாகும். இது பாட்டுடைத் தலைவனின் பெருமைக்குரிய பத்து அங்கங்களாகப் பாடும் ஓர் இலக்கிய வகையாகும். தொல்காப்பியம் அரசர்க்குரிய பத்துப் பொருட்களை,

"படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய மரபு. (72)

எனக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியங்களில் இப்பொருட்கள் தனித்தனிப் பாடல்களில் பேசப்படுகின்றன. எனினும் இவையும் இவ்விலக்கிய வகையின் மூலக் கருவாய் எண்ணத்தக்கன. பாட்டியல் நூல்களில் இலக்கண விளக்கப்பாட்டியல் (22)

"மலை நதி நாடூர் புனை தாரி வுளி
கொலை மதக்களிறு கொடி முரசாணை
யிவையே தசாங்கம் என்மனார் புலவர்"

எனத் தசாங்கம் பொருட்களைக் கூற வெண்பாப் பாட்டியல் (19) ஆணை என்பதற்குப் பதில் செங்கோலைக் குறிப்பிடுகிறது. மேலும் இந்நூல் நஞ்செழுத்து கலவாது பாடுதல் நலம் என்கிறது.

தசாங்கம் என்ற இலக்கிய வகையினின்று கிளைத்த வகை யாகத் தசாங்கப்பத்து தசாங்கத்தயல் சின்னப்பூ, தசாங்கப் புயவகுப்பு ஆகியன திகழ்கின்றன. இவ்விலக்கிய வகையின் முன்னோடியாக மாணிக்கவாசகரின் திருத்தசாங்கம் அமைகிறது. திருத்தசாங்கத்தில் இறைவன் திருநாமம், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, மாலை, கொடி ஆகியன போற்றப் பெற்றுள்ளன. இவ்வகைப் பொருட்கள் மாணிக்கவாசகரின் கீர்த்தித் திருவகவலிலும் போற்றப்பெறுதல் நோக்கத்தக்கது.

தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் மன்னரின் பொருட்கள் போற்றி ஓதப்பெற்றன. அவை மாணிக்கவாசகர் காலத்தில் தொகுக்கப்பெற்றுத் தனி இலக்கிய அமைப்பாக இறைவனைப் பாடுவதாய் மாற்றம் பெற்றது. இம்மரபில் சைவ அருளாளர் குமரகுருபரரைப் போற்றும் வகையில் குமரகுருபரர் தசாங்கம் இயற்றப்பட்டுள்ளது.

**குமரகுருபரர் தசாங்கம்**

நேரிசை வெண்பாவில் ஸ்ரீ குமரகுருபரர் தசாங்கம் அமைந்துள்ளது. இப்பத்துப் பாடல்களில் குமரகுருபரரால் மலை, நாடு, ஊர், ஆறு, தார், முரசு, புரவி, களிறு, கொடி, ஆணை ஆகிய பத்து அங்கங்களாகச் சுட்டப்பெறுகின்றன. இத்தசாங்கம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் காறுபாறு சுவாமிகள் கயிலை தவத்திரு. குமாரசாமித் தம்பிரான் சுவாமிகளால் இயற்றப் பெற்றுள்ளது.

தம் மடாலய ஆதி குருவாய்த் திகழும் தவராஜ சிங்கம் குமரகுருபரரின் பெருமைகளையும் அருட் செயல்களையும் விளக்கும் வண்ணம் இத்தசாங்கம் அமைந்துள்ளது. தொல்காப்பிய அகமரபில், அஃறிணைப் பொருட்களை விளித்துரைப்பது,

''சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇ
செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்
அவரவர் உறுபிணி தம்போற் சார்த்தியும்''

(தொல். பொருள். 194)

என்று கூறப்பெறும். இவ்வாறு அகப்பொருளமைதியுடன் மாணிக்கவாசகரின் திருத்தசாங்கத்தின் ஒவ்வொரு பாடலிலும் அஃறிணைப் பொருளாகிய கிளியை விளித்து முன்னிலைப் படுத்திக் கூறப்படும் போக்காகக் காணலாம்.

இம்மரபிலேயே குமரகுருபரர் தசாங்கத்திலும் அகப்பொருள் தன்மையுடன் கிளியை இளங்கிளி, அஞ்சுகம், செவ்வாய்க்கிளி, பாசிநிறக் கிள்ளை, குழக்கிளி என்று தலைவி விளித்துரைக்கிறாள். இவ்வாறு கிளியை விளித்துத் தலைவனின் ஊர் முதலிய பத்து அங்கங்களாகக் கூறித் தலைவி தன்னெஞ்சை ஆற்றியிருப்பதாகக் குமரகுருபரர் தசாங்கம் அமைகின்றது. இனி, இந்நூலுள் கூறப்பெறும் பத்து அங்கங்களைக் காணலாம்.

**மலை:** குமரகுருபரருக்கு உகந்த மலையாக ஆசிரியர் கைலை மலையைக் குறிப்பிடுகிறார். இறைவன் பற்று நீக்கும் பனி மலையில் தங்கியிருப்பதனால் குமரகுருபரருக்கும் அதுவே உகந்த தாயிற்று என்று குறிப்பிடுவதன் மூலம் இறை இருப்பிடமே குமரகுருபரருக்கும் உகந்தது என ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**நாடு, ஊர்:** அடியார்தம் அறியாமையைத் தீர்க்கும் குமர குருபரரின் நாடு தென்பாண்டி நாடாகும். மேலும் சீவைகுண்டம் என்ற ஊர் குமரகுருபரரைப் பெற்றதால் மிகுந்த புகழைக் கொண்டது. இச்செய்திகளின் மூலம் குமரகுருபரரின் நாடும் ஊரும் போற்றப்படுகிறது.

**ஆறு:** குமரகுருபரர் கங்கைக் கரையில் அமைந்த காசியில் குமாரசாமி மடத்தை அமைத்துச் சைவத் தொண்டு புரிந்தார். அங்கேயே அருள் சமாதியையும் பெற்றார். இதனடிப்படையில் ஆசிரியர் குமரகுருபரருக்கு உகந்த ஆறெனக் கங்கையைக் குறிப்பிடுகிறார். பல்வகைப் பாவங்களையும் தீர்க்கவல்ல கங்கை, திருநெறிக் கருணை மழையாளனாகிய குமரகுருபரரின் ஆறு எனக் குறிப்பிடுகிறார்.

**மாலை:** அடியார்கள் அனைவரையும் ஆளுகின்ற குமரகுருச் செம்மலுக்கு அடியார்கள் அன்புடன் அளிக்கும் குளிர்ச்சியினைக் கொண்ட பூமாலை தசாங்கத்தின் பத்துப் பொருள்களுள் ஒன்றாகச் சுட்டப்படுகிறது.

**முரசு:** குமரகுருபரரின் பெருமைகளை வெளிப்படுத்துகின்ற வகையில் அமைந்து இலங்குவன அவர் பாடிய அருட்பாக்கள். எனவே ஆசிரியர் அவருடைய பிரபந்தங்களையே முரசாக உருவகித்துச் சிறப்பிக்கிறார். இதனை,

> "சீரார் செவ்வாய்க்கிளியே செய்யன் குமரகுரு
> ஏரார் திருமுரசம் ஏதென்றால் – போராடும்
> எம்மதமும் ஒன்றிணைக்கச் செப்பும் பிரபந்தச்
> செம்முரசே அம்முரசாய்ச் செப்பு"

எனக் குறிப்பிடுகிறார்.

**புரவி:** தில்லிப் பாதுஷா இவருடைய தவ வலிமையைக் கண்டு அவர் மேல் ஐயுற்றுத் தெய்வச் செயல்கள் நிகழ்த்தக் கூறுகிறான். அப்போது அவர் காளியின் அருளால் சிங்கம் ஒன்றின் மீது ஏறி அந்த மன்னன் அஞ்சும் வண்ணம் அவையில்

புகுந்ததாகக் கூறுவர். அவ்வகையில் அச்சிங்கமே குமரகுருபரரின் ஊர்தியாக அமைகின்றது. இந்தச் சிங்கத்தைத் திருமலைக் காட்டில் பார்த்த கிராம மக்கள் அஞ்ச அதனைத் தன் தவவலிமையால் அடக்கிக் காசிக்குச் சென்றதாக ஜிப்லி தமிழகராதி குறிப்பிடுகிறது. இச்செய்தியின் பின்னணியில் சிங்கம் ஊர்தியாகக் கூறப்படுகிறது, எனலாம். இதனை

"மாலொக்கும் கிள்ளையே மால்தீர் குமரகுரு
பாலொக்க ஏறுபரி என்னென்றால் – வேலொத்துத்
துங்கமுறு பாதுஷா துண்ணென் றெழவந்த
சிங்கப் புரவி எனச் செப்பு"

என்ற பாடலின் மூலம் காணலாம்.

**களிறு:** ஓர் அரசனுக்கு உரிய சிறப்புகளுள் பட்டத்து யானையும் ஒன்று ஆகும். அவர் கொண்ட சைவ சித்தாந்தச் செழுமை மற்றும் தவமே அவர்க்குரிய களிறு என ஆசிரியர் சுட்டுகிறார். இங்கு நுண்பொருள் பருப்பொருளாக உவமிக்கப் பட்டுள்ளது.

**கொடி.:** குமரகுருபரர் காசியில் ஏற்றிய கொடியாக ஆசிரியர் கூறுகையில் பாசமாகிய வினையைப் போக்க உதவும் அன்னக் கொடி என்கிறார்.

**ஆணை:** மன்னர்க்குரிய சிறப்புகளுள் ஆணையும் ஒன்று. உலக வாழ்க்கையைப் பல நிலைகளில் கண்டு ஆய்ந்து வெளிப் படுத்திய குமரகுருபரரின் அறிவுரைகளே அனைவரும் செயல் படுத்தத் தக்க ஆணை எனக் குறிப்பிடுகிறார்.

குமரகுருபரடிகள் கந்தர் கலிவெண்பாவில் (66–74) மலை, நாடு, நகர், ஆறு, பரி, யானை, மாலை, கொடி, முரசு, ஆணை முதலிய பத்து அரச உறுப்புகள் முருகனுக்குரியவாய்க் கூறுகிறார். குமரகுருபரர் தசாங்கத்தில் சிவஞானத்தைக் களிறாக உவமிப்பது கந்தர் கலிவெண்பாவில் காணும் "தோய்ந்து களித்தோர் துதிக்கையினாற் பஞ்சமலம் காய்ந்த சிவஞானக் கடாக்களிறும்" என்ற கருத்தினை ஒட்டி அமைந்ததாகும்.

திருத்தசாங்கத்தில் அமைந்த பத்துப் பொருட்களில் பெயர் படை என்பனவற்றிற்குப் பதிலாகக் குமரகுருபரர் தசாங்கத்தில்

களிறும் ஆணையும் சுட்டப்படுகின்றன. இத்தசாங்கம் குமரகுரு பரரைப் பின்பற்றவேண்டும். அவரருள் பெறவேண்டும். அவர் புகழ் பரப்பவேண்டும் எனப் பல நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. திருத்தசாங்கம் இறைவன் பெயரில் அமைய இது இறையடியார் பெயரில் அமைந்த சிறப்புடையது. இப்பத்துப் பாடல்களும் நேரிசை வெண்பாவாய் அமைந்துள்ளன. இந்நூல் அகப்பொருள் அமைதியுடன் அமைந்து குமரகுருபரர் பெருமையைச் சுட்டுவதாய் அமைகின்றது. மாணிக்கவாசகரின் திருத்தசாங்கமும் கந்தர் கலிவெண்பாவில் அமைந்த பத்து அங்கம் பற்றிய குறிப்புகளும் ஸ்ரீகுமரகுருபரர் தசாங்கத்திற்கு முன்னோடியவாய் அமைகின்றன.

# அடிகள் சுட்டும் மதுரைத் திருவிளையாடல்

யாழ். சுந்தரம், மதுரை

செந்தூரிற் பிறந்த குமரகுருபரர் வாழ்கையில் பெருந் திருப்புமுனைகளாகத் திகழ்ந்த நகரங்கள் இரண்டு. அவை காசியும் மதுரையும் ஆகும். இவ்விரு தலங்களையும் தமது படைப்புகளுள் பலவிடத்தும் குறிப்பிடுகிறார். அவற்றுள் மதுரைக் கலம்பகத்துள் மதுரைத் திருவிளையாடல்கள் இடம் பெறுமாற்றைக் காண்போம்.

**மதுரைக் கலம்பகம்**

குமரகுருபரரால் மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம் என இரு கலம்பகங்கள் இயற்றப்பட்டன. கலம்பகம் என்பதற்குப் பலவகைப் பொருள் கூறப்படினும் பலவகை மலர்களும் கலந்த மைந்த கலம்பகமாலை என்று பொருள் கொள்வதே பொருந்தும் என்பர். (பதி: சாமிநாதய்யர். உ. வே., குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ஆராய்ச்சி: IXXIX")

மதுரைக் கலம்பகத்துள் குமரகுருபரர் பரம்பொருளான சிவபெருமானின் பெருமைகளைப் போற்றுகிறார். அப்படிச் சிறப்பிக்கும் முகத்தான், மதுரைச் சொக்கநாதப் பெருமான் புரிந்த திருவிளையாடல்களை விவரிக்கின்றார்.

**மதுரைக் கலம்பகத்துள் மதுரை**

மதுரைக் கலம்பகம் என்ற குமரகுருபரரின் படைப்பு, மதுரைத் தலத்தை அடிப்படையாகக் கொண்டது, அதன் காரணமாக, மதுரை தொடர்பான செய்திகள் அவ்விலக்கியத்துள் இடம்பெறுகின்றன. இதனைத் தல சம்பந்தமாக அமைந்த பிரபந்தங்களில் அவ்வத் தல வரலாறுகளை இடைப் பெய்து விளக்குதல் கவிஞர் இயல்பு என்ற கருத்து அரண்செய்கிறது (மேலது ப. XXXVI). அவ்வகையில் மதுரைக் கலம்பகத்தில், மதுரைத் தலத்தில் இறைவன் இயற்றிய பல திருவிளையாடற் செய்திகள் இடம்பெறுகின்றன எனலாம். சிவபெருமானைப்

போற்றும் பலரும் திருவிளையாடல் செய்திகளைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் சுருக்கமாகவும் விரிவாகவும் தொன்று தொட்டுப் பிற்காலம் வரை கூறி வந்துள்ளனர் ; (பெரியகருப்பன் இராம., திருவிளையாடல் முன்னோடி ப. 351) என்ற கருத்திற் கேற்பத் திருவிளையாடல்கள் பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெறுகின்றன எனலாம்.

**திருவிளையாடல்கள்**

மதுரைக் கலம்பகத்தில் இறைவியையும் சொக்கேசப் பெருமானையும் போற்றும் குமரகுருபரர் இறைவனது அறுபத்து நான்கு திருவிளையாடல்களுள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். அவை வருமாறு

* இந்திரன் பழி தீர்த்த படலம்
* வெள்ளையானைச் சாபம் தீர்த்த படலம்
* திருநகரங் கண்ட படலம்
* திருமணம் புரிந்த படலம்
* எழுகடல் அழைத்த படலம்
* கடல் சுவற வேல் விட்ட படலம்
* விருத்த குமார பாலரான படலம்
* பழியஞ்சின படலம்
* அங்கம் வெட்டின படலம்
* உலவாக் கோட்டை அருளிய படலம்
* வளையல் விற்ற படலம்
* மாபாதகந்தீர்த்த படலம்
* விறகு விற்ற படலம்
* இசைவாது வென்ற படலம்
* கரிக்குருவிக்கு உபதேசம் செய்த படலம்
* வலை வீசின படலம்
* மண் சுமந்த படலம்

இவற்றுள் சில திருவிளையாடல்கள் பலமுறை குமர குருபரரால் மதுரைக் கலம்பகத்துள் சுட்டப்படுகின்றன.

பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் மூன்று முறையும், வளையல் விற்றபடலம், இசைவாது வென்றபடலம், பழியஞ்சின படலம், பதஞ்சலி முனிவருக்கு அருளியமை, கடல் சுவற வேல் விட்ட படலம் முதலிய திருவிளையாடல்கள் இரண்டு முறையும்

இடம் பெறுகின்றன. ஏனைய திருவிளையாடல்கள் ஒவ்வோ ரிடத்தில் குறிப்பிடப்படுகின்றன.

**இடம் பெறும் சூழல்**

குமரகுருபரர் இறைவனது திருவிளையாடல்களை மதுரைக் கலம்பகத்துள் இறைவனது பெருமையைச் சுட்டும் முகத்தான் பயன்படுத்துகிறார். சான்றாகப் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலை மூன்று இடங்களில் குறிப்பிடுவதனைக் காண்போம்.

இறைவற்கு உள்ளன்போடு படைப்பதே செம்மையான பூசனை என்பதனையும், இறைவன் அன்பிற்கு அகப்படும் மலை என்பதனையும் சுட்டும் முகத்தான்

''அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவள்
தரும்பிட்டு பிட்டுண்ட தலையன்பிற் கட்டுண்டே''
(மதுரைக் கலம்பகம் தாழிசை–2)

எனவும்,

பிட்டுக்கு மண் சுமந்த பெருமானை நாயக்க அரசர் யானைமேலேற்றி விழா நடத்துவதனை,

''கடங்கரைக்கும் வெற்பிற் கரைகரைக்கும் வைகைத்
தடங்கரைக்க ணின்றவர் நீர்தாமோ'' (ம. க: 131, 132)

எனவும் குறிப்பிடுகிறார்.

பிறிதோரிடத்தில், பெம்மான் மீது ஆசைகொண்ட பெண்ணொருத்தி தனக்கு உண்டான காமநோய்க்கு காரண மாகப் பிரம்பால் மொத்துண்ட பெம்மானின் வலி சகல உயிர்களுக்கும் பரவியதைச் சுட்டுகிறார்.

**இசைவாது வென்ற படலம்**

இறைவனது புயவலிமை கூறுமிடத்தில் பாணபத்திரனுக்காக விறகு சுமந்தமையைக் குறிப்பாகச் சுட்டுவதோடு இறைவன் சாதாரிப் பண்பாடியமையையும் குறிப்பிடுகிறார். மேலும் கரும்பொறிச் சுரும்பர் செவ்வழி பாட என இறைவன் பாடிய பண்ணினையும் குறிப்பிடுகிறார்.

**பழியஞ்சின படலம்**

பழியஞ்சின படலக் கதை பெண் கூற்றாகவே மதுரைக் கலம்பகத்துள் இடம் பெறுகிறது எனலாம்.

முன்னர் பெண்கொலையால் வரும் பழியை அஞ்சிய சொக்கருக்கு இப்போது தலைவிக்கு அருள் செய்யாமையால் பழி வரும் எனத் தோழி கூற்றாக

''ஓவமே யன்னா உயிர் விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியாஅஞ் சொக்கருக்கே''
(ம. க. 133, 134)

குறிப்பிடுகிறார்.

**சொக்கத்தாண்டவம்**

''பதஞ்சலிக்கருளிய பரம நாடகம்''

எனக் கீர்த்தித் திருவகவலில் மணிவாசகப் பெருமான் குறிப்பிடு கிறார். அக்குறிப்பின் வழி பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடலைத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் குறிப்பிடும். அதனைக் குமரகுருபரர்,

''அடுத்த பதஞ்சலியா ரஞ்சலியா நிற்ப
எடுத்த பதஞ்சலியா ரேனும் – தடுத்தவற்கா
மாறிக் குனித்தார் மலைகுனிதென் மாமதனார்
சீறிக் குனிதத்தார் சிலை'' (ம. க. 186)

எனக் குறிப்பிடுகிறார். தோழி கூற்றாகிய இப்பாடலில் கால்மாறியாடியதனையும் சுட்டுகிறார். பிறிதொரு பாடலில் ஆனந்தத்தாண்டவச் சுட்டுகிறார். இவ்விரு குறிப்புகளும் இறைவன் அடியார் மீது கொண்ட பெருங்கருணைத் திறத்தைச் சுட்டி தன்மீது அன்பு செலுத்தக் கோரும் தலைவியின் வேண்டு கோளாக அமைகின்றது.

**அங்கம் வெட்டின படலம்**

கலம்பகம் என்றும் இலக்கிய வகையுள் அம்மானை இடம் பெறுதல் மரபு. அவ்வகையில் கலித்தாழிசையில்,

''இருவருக்குங் காண்பரிய வீசர்மது ரேசனார்
விருதுகட்டி யங்கம் வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம் வெட்டி வென்றனரே யாமாகில்
அருமையுடம் பொன்றிருகூ றாவதே னம்மானை
ஆனாலும் காயமிலை யாலவர்க் கம்மானை''
(ம. க. 117)

என அம்மானைப் பாடலை அமைக்கின்றார். அஃதாவது, ஆசிரியருக்குத் தீங்கிழைத்த சித்தன் என்னும் மாணவனைச் சோமசுந்தரக் கடவுள் வென்றார். தோற்ற சித்தனது அங்கங்கள் கூறாயின என்பது உலகியல். ஆயின், வென்ற இறைவன் இருகூறாக உள்ளது என்னே? என இறைவனது அர்த்தநாரீசுவர வடிவத்தைச் சுட்டிப் போற்றுகிறார் எனலாம்.

இவ்வாறாகக் குமரகுருபரர் இறைவனது அறுபத்துநான்கு திருவிளையாடல்களுள் சிலவற்றைத் தமது மதுரைக் கலம்பகத்துள் குறிப்பிடுகிறார். அவை, பாட்டுடைத் தலைவனாம் இறைவனது வெற்றியைப் போற்றும் உத்தியாக அவரால் கையாளப்படுகின்றன. மேலும், அவர் கையாண்டுள்ள திருவிளையாடல்கள், நாயக்கர் காலத்தில் மதுரையில் நிகழ்ந்த விழாக்களை மையமிட்டுள்ளன. அதாவது நாயக்கர் ஆட்சிக் காலத்தில் மதுரையில் இருந்த குருபரர், தாம் கண்ட விழா நிகழ்ச்சிகளின் பின்னணியில், தமது படைப்பில் திருவிளையாடல் குறிப்பினைக் கையாண்டார் எனலாம். இத்தகு ஆய்வு விரிவாகச் செய்யப்படும்போது நாயக்கர் காலச் சமூக அமைப்பினை அறிவதோடு, குருபரரது காலம் பற்றிய கணிப்பும் வலுப்பெறும் எனலாம்.

# அடிகளும் குருவருள் நெறியும்

பெ. சுப்பிரமணியன், பூண்டி.

தமிழும் தமிழரும் இவ்வுலகில் வாழும் வரை மறக்க முடியாத – தமிழ்ப் பெருங்கவிஞர் – அருளாளர் – தமிழின் பெருமையைக் காசி வரை சென்று பரப்பிய தமிழ்த்தொண்டர் குமரகுருபர அடிகள். அடிகள் தோன்றிய காலம் நாயக்கர்கள் தமிழகத்தை ஆண்ட காலம். தமிழக வரலாற்றை உற்றுக் காணும்போது தமிழ்மொழிக்கும் தமிழருக்கும் ஊறு நேரும் போதெல்லாம் சான்றோர்கள் தமிழ் மண்ணில் தோன்றி தாய்த்தமிழை நிலைநிறுத்தினர் என்பதை அறியலாம். 7–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருமுறைச் சான்றோர்கள் தோன்றி வேற்றவர் ஆட்சியினை மாற்றினர். காலந்தோறும் தமிழகத்தில் இவ்வாறான நிலை இருந்தது 17–ஆம் நூற்றாண்டில் தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட நாயக்கர்கள் தமிழகத்தை ஆண்டனர். தெலுங்குமொழி வளர்ந்தது. தமிழ்மொழி நலிந்தது. அந்த இழிநிலையைக் களைந்து தமிழின் பெருமையை நிலைநிறுத்த இறைவன் திரு வருளால் தோன்றியவரே குமரகுருபர முனிவர். துறவியாகிய இவர் வடபுலத்தில் வாழ்ந்த காலத்திலும் தமிழையும், தமிழ் மண்ணையும் தமிழர்தம் பத்திநெறியுடன்கூடிய பண்பாட்டையும் துறவாமல் காசி நகரில் தேமதுரத் தமிழோசையைப் பரப்பிய தமிழ்ச் சான்றோராதலின் பாவேந்தர் போன்ற கடவுள் மறுப் பாளராலும் போற்றப்பெற்றவர். இவர் செந்தமிழ்ச் சிவநெறி மரபுக்கேற்ப, குருவருள் பெற்றுத் திருவருளை யடைந்தவர். அதற்குரிய சான்றுகள் அவரது அருட்பாடல்களில் இடம்பெற்றி ருப்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### 'குருவருள் நெறி' விளக்கம்

குருவருள் பெறாமல் இறைவன் திருவருளை அடைய முடி யாது என்பது சைவசித்தாந்த சாத்திரங்களும் சிவநெறியைப் போற்றும் நூல்களும் வலியுறுத்தும் முடிபு. இறைவனே

குருவாக ஆன்மாக்களின் பக்குவத்திற்கேற்ப (மந்ததரம், மந்தம், தீவரம், தீவரதரம் ஆகிய நிலைகளுக்கு ஏற்ப) எளிவந்த கருணையுடையவனாகி எழுந்தருளி வந்து குருவருள் அளித்து, (தீக்கைஅளித்து) ஆட்கொள்கிறான் என்பது நமது சான்றோர்கள் காட்டிய நெறி. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகைப் படிநிலைகளில் நின்று ஆன்மா இறைவன் திருவடியடைய இறைவன் அருள் முன்னிற்க வேண்டும். ''அவனருளாலே அவன்தாள் வணங்கி'' என்பது திருவாசகம். மணிவாசகர் குதிரை வாங்கச் சென்று, திருப்பெருந்துறையில் குருவருள் பெற்றுக் கோயில் எழுப்பிய வரலாற்றைத் தமிழுலகம் அறியும். அவர் தாம் குருவருள் பெற்ற அனுபவத்தை,

''அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையை''

(போற்றித் திருவகவல்)

என்னும் அடிகளால் விளக்கினார்.

திருமூலதேவர் சிவநெறி குருநெறி என்பதைச்,

''சைவப்பெருமைத் தனிநாயகன் நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய
வையத்துள்ளார்க்கு வகுத்துவைத் தானே''

(திருமந்திரம்-1478)

என்னும் பாடலால் விளக்குகின்றார். சைவ நெறிக்குப் பெருமையைத் தரும் ஒப்பற்ற தலைவனாகிய சிவன் ஆன்மாக்கள் உய்திபெறுவதற்காக அமைத்த ஒளிநெறி ஒன்றுண்டு. அதுதான் தெய்வச் சிவநெறியாகிய சன்மார்க்கம். அந்நெறியைச் சேர்ந்து உய்தி பெறுமாறு இவ்வுலகத்தவர்க்கு சிவபெருமான் அமைத்துக் கொடுத்தான் என்பது இப்பாடற் கருத்து.

கு – இருள்; ரு – நீக்குபவன் – ஆன்மாக்களை மறைத்துள்ள மலவிருளை, அறியாமையிருளை நீக்கி ஞான ஒளியை வழங்குபவன் குரு என்பது சொற்பொருள். ஆகவே, குருநெறிக்கு ஒளிநெறி என்று பெயர். உள்ளத்தினுள்ளே ஒளிவடிவமாக விளங்கும் இறைவனை ஒளியால் கண்டு வணங்க வேண்டும். அகவழிபாட்டிற்கு அழைத்துச் செல்லும் மார்க்கம் சன்மார்க்கம். சன்மார்க்கம் என்றால் நன்னெறி எனப்படும்.

"உயிராவணமிருந்து உற்றுநோக்கி
உள்ளக்கிழியில் உருவெழுதி
உயிராவணம் செய்திட்டு உன்கைத்தந்தால்
உணரப்படுவா ரோடொட்டி வாழ்தி
அயிராவணமேறாது ஆனேறேறி
அமரர் நாடாளாதே ஆரூராண்ட
அயிராவணமே யென்னம்மானே நின்அருட்கண்ணால்
நோக்காதார் அல்லாதாரே"

(திருநாவுக்கரசர். 6–ஆம் திருமுறை)

என்னும் பாடல் அப்பரடிகள் அகவழிபாட்டினை உணர்த்திப் பாடியதாகும். புற ஆரவாரங்களை விடுத்து அகவழிபாட்டுக்கு ஆன்மாக்களை அழைத்துச் செல்லும் ஞானநெறி – ஒளிநெறி – தெய்வச் சிவநெறி-நன்னெறி – சன்மார்க்கம் என்றும் சித்தாந்தச் செந்நெறியாகும். சிவநெறியின் முடிந்த முடிவாகச் சொல்லப் படுவது சன்மார்க்கம் எனலாம். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகைப்படி நிலைகளையும் உணர்த்தும் நால்வகை மார்க்கங்கள் தாசமார்க்கம், சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. சன்மார்க்கம் ஞானவழி பாட்டு நெறியாகும். இந்நெறி திருமுறைச் சான்றோராலும் பின்வந்த சான்றோராலும் சொல்லப்பட்டிருந்தாலும் திருஅருட் பிரகாச வள்ளலாரால் சென்ற நூற்றாண்டில் அருட்பெருஞ் சோதியாக மக்களுக்குத் தெளிவாக உணர்த்தப்பட்டமை அறியலாம்.

இறைவனே உயிர்களிடம் இரக்கம் கொண்டு குருவாக வந்து ஆன்மாக்களின் மலத்தினைப் போக்கித் துணைசெய்வான் என்பதை அறியாத அறிவிலிகள், பாசம் பற்றியவர்கள் குருவைத் தம்மோடு ஒப்பவைத்து எண்ணுவர். சிவபுண்ணியமுடைய ஞானியர் சிவனே இவன் என்று அடிபணிந்து வணங்குவர் என்னும் உண்மையைத் திருமூலர்,

"சுத்தசிவன் குருவாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணா அதிமூடர்
பொய்த்தகு கண்ணான் நமரென்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே"

(திருமந்திரம்–1578)

என்னும் பாடலால் விளக்குகின்றார். மேலும்,

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென்பது குறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே"

(திருமந்திரம்-1581)

என்னும் பாடலிலும் குருவாக வருபவர் சிவபரம்பொருளே என்பதைத் தெளிவாக்குகிறார்.

சித்தாந்த சாத்திர நூல்களும் இக்கருத்தினையே வலியுறுத்து கின்றன என்பதற்குக் கீழ்வரும் சான்றுகளைக் காணலாம்.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அக்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"

(சிவஞானபோதம்-நூ. 8)

"அறியாமை உள்நின்று அளித்ததே, காணும்
குறியாகி நீங்காத கோ" (திருவருட்பயன்-41)

பக்குவமுடைய உயிர்கள் இறைவன் திருவருளால் அவனை உணர்ந்து "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்று அருணகிரிநாதர் வேண்டுவது போன்று வேண்டுகின்றன. அவனருளை முழுமையாக நல்க இரக்கம் கொண்டு ஆன்மாக் களை நாடி இறைவன் குருவாக வருகிறான் என்பது குருவருள் நெறியின் தெளிந்த உண்மை.

**குமரகுருபரர் குருவருள் பெற்றது எவ்வாறு?**

குமரகுருபரர் ஐந்து வயது வரை ஊமையாயிருந்து திருச்செந்தூர் முருகன் அருள்பெற்று கந்தர் கலிவெண்பா பாடினார் என்று அடிகளின் வரலாற்றில் ஒரு நிகழ்ச்சியைச் சொல்வதுண்டு. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் பாடல் வடிவில் எழுதிய குமரகுருபர சுவாமிகள் சரித்திரத்தைத் தழுவி, பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களும் இவ்வற்புத நிகழ்ச்சியை மாறுபடாமல் தாம் எழுதிய குமரகுருபர அடிகள் வரலாற்றில் வெளிப்படுத்தி யுள்ளார்கள். முருகன் அருள்பெற்று கலிவெண்பா பாடியதற்கு அடிகளின் பதினான்கு நூல்களிலும் அகச்சான்று இல்லை. அடிகள் குருவருள் பெற்றது தருமையாதீனக் குருமணியாய் விளங்கிய மாசிலாமணி தேசிகரிடத்தில்தாம் என்பது அடிகள்

வரலாற்றாலும் அவர் பாடிய 'பண்டார மும்மணிக்கோவை' யாலும் அறியப்படும் உண்மையாகும். ''அருளாளர்கள் இறைவன் திருவருள் பெற்றபின் மற்றோர் இடத்தில் திருவருளைப் பெற்றதாக வழக்காற்றிலும் வரலாற்றிலும் காணப் படாமையால் குமரகுருபரர் இளம் பருவத்தில் முருகனுடைய திருவருளைப் பெற்றுப் பாடினார் என்பதும் பிற அருளாளர் வரலாற்றோடு முரண்படுகிறது'' என்பது முதுபெரும் புலவர் அ. நடேசமுதலியார் கூற்று. சிவநெறிப்படி குருவருள் பெற்ற பின்னரே திருவருளைப் பெற முடியும். நால்வர் வரலாற்றில் இறைவன் தங்களைத் தடுத்தாட்கொண்டு குருவாக வந்து ஞானத்தை உணர்த்தியருளியதால் அவனருளை முழுமையாகப் பெற்றதாக அறிய முடிகிறது.

ஆகவே, அடிகள் மற்றைய அருளாளர்களைப் போன்று முருகன் திருவருளை முதலில் பெற்றிருப்பாராயின் தருமை யாதீனக் குருமணியிடம் குருவருள் பெறும் வாய்ப்பில்லை; அடிகளின் பெருமையை அருளாற்றலை வெளிப்படுத்த வேண்டும் என்ற வேட்கையில் அடிகளுக்குப் பின் தோன்றிய வர்கள் முருகன் அருள்பெற்று ஊமைத் தன்மை நீங்கியபின் பாடினார் என்று அடிகள் வரலாற்றில் ஒரு நிகழ்ச்சியைச் சேர்ந்திருக்க வேண்டும் என்று கருத இடமுள்ளது. செயற்கரிய செயல் செய்தவரை அருளால் செய்ததாகப் பாராட்டும் நம் நாட்டு மரபுவழி இயல்பாகவே இச்செயல் பேசப்படுகிறது. வேறு யாரும் செய்யமுடியாத பெருஞ்செயல்களை அயலார் ஆட்சி நிலவிய – அயல்மொழிச் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் அடிகள் செய்தது அவர்களின் பேராற்றலையே விளக்குவதாகும்.

அடிகள் சில ஆண்டுகள் செம்மையாகப் பேசாதிருந்து, பின்னர் பன்னூற் பயிற்சியால் நுண்ணறிவின் ஏற்றத்தினால் பல பிறவிகளில் செய்த நற்றவப் பயனால் கல்வி, கேள்விநலம் சான்ற நற்றமிழ்ப் புலவராய்த் தருமை யாதீனத் தவமுதல்வராம் மாசிலாமணி தேசிகரிடம் திருவருள் பெற்ற தவமுனியாய் விளங்கித் தன்னிகரில்லாத் தனிப்பெருந்தமிழ்க் கவிஞராய், இன்பத்தமிழின் சுவையமுதூட்டும் செந்தமிழ்த் தாயின் சீரிய புதல்வராய் விளங்கினார் என்பதே சாலப் பொருந்தும்'' என்று முதுபெரும் புலவர் அ. நடேசமுதலியார்

கூறுவதும் கருதத்தக்கது. இளமையில் திருத்தமுறப் பேசாம லிருந்து, பின் பல நூலறிவினாலும் தம் நுண்ணறிவினாலும் தமிழ் பாடும் திறம்பெற்று முதலில் வாழ்த்துப்பாட்டாக, தென்பாண்டி நாட்டார் போற்றும் தண்டமிழ்த் தெய்வமாகிய செந்தில்மேய வள்ளி மணாளனைப் பாடினார் என்று கொள்வது அறிவுக்குப் பொருத்தமானதாகும். இப்படிச் சிந்திப்பதால் அடிகளின் தமிழாற்றலுக்கு அருட்பெருமைக்குக் குறைவு வராது. தருமையாதீனக் குருமணியிடம் குருவருளைப் பெற்றுப் பின் தம் சாதனையால் - தவவலிமையால் இறை யருளை பூரண - சிவஞானமாகிய திருவருளைப் பெற்று, சிவத்துடன் கலந்து பேரின்பவீடு பெற்றார் அடிக்ள் என்பது சிவநெறி மரபிற்கு ஏற்புடைய கருத்தாகும்.

**குரு காட்டும் தெய்வ வடிவம் ஒளியே**

இறைவன் ஒளிமயமாக விளங்குகிறான் என்பதைச் ''சொற்றுணை வேதியன் சோதிவானவன்'', ''இல்லகவிளக்கது இருள்கெடுப்பது சொல்லக விளக்கது சோதியுள்ளது'', ''திருவையாறு அகலாத செம்பொற்சோதி'' என்னும் அப்பரடிகள் வழக்குகளாலும் ''சோதியே சுடரே சூழொளி விளக்கே'' என்னும் மணிவாசகர் வாக்காலும் அறியலாம். குமரகுருபரர்க்குப் பின் தோன்றிய வள்ளலாரும், ''அருள் விளக்கே அருட்சுடரே அருட் சோதி சிவமே'' என்றார். குருபரர் தாம் அருளிய கந்தர் கலிவெண்பாவில்,

> ''நாதக் கழலும் நகுமணிப் பொறகிண் கிணியும்
> பாதத் தணிந்த பரிபுரமும் - சோதி
> இளம்பருதி நூறாயிரங்கோடி போல
> வளந்தரு தெய்வீக வடிவும் - உளந்தனிற்கண்
> டாதரிப் போர்க்காருயிரா யன்பர் - அகத்தாமரையின்
> மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே - ஓதியவைந்
> தோங்காரத் துள்ளொளிக்கும் உள்ளொளியாய்
> ஐந்தொழிற்கும்
> நீங்காத பேருருவாய் நின்றோனே'' (56-59)

என்று முருகனை ஒளிமயமானவனாக என்று வாழ்த்தும் திறம் அறியலாம். கருவூர்த்தேவர் தஞ்சை இராசராசேச்சுரத்தைப் பாடும்போது, ''உலகெலாம் தொழ வந்து எழுகதிர்ப் பரிதி ஒன்று நூறாயிரம் கோடி அலகெலாம் பொதிந்த திருவுடம்பு

அச்சோ'' என்றார். அதனை நினைவுபடுத்துவதுபோல கந்தர் கலிவெண்பாவில் முருகனது தெய்வ வடிவை,

''சோதி இளம் பருதி நூறாயிரம் கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவம்''

என்று குருபர முனிவர் போற்றுவது அறிந்துஇன்புறத்தக்கதாகும்.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில்,

''காலத்தொடு கற்பனை கடந்த''

எனத் தொடங்கும் முத்தப்பருவ முதற் பாடலில்,

''உயிர்த்துணையாம் தோன்றாத்துணைக்கோர் துணையாகித்
துவாதசாந்தப் பெருவெளியில் துரியங்கடந்த பரநாத
மூலத்தலத்து முளைத்த முழுமுதலே முத்தந்தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய் முத்தந்தருகவே''

என்றருளினார். இவ்விடத்தில் துவாதசாந்தப் பெருவெளியில் காணும் அற்புதக் காட்சி அருட்சோதிக்காட்சி என்பது உணர்த்தப் படுகிறது. மேலும், இப்பிள்ளைத்தமிழின் வருகைப் பருவத்தில்,

''தொடுக்கும் கடவுட்பழம் பாடல்''

என்னும் பாடலில்,

''தொழும்பா உளக்கோயிற் கேற்றும் விளக்கே''

என்று அருளியதும் சிந்தனைக்குரியது. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் முருகன் அழகுக்கு இளஞாயிறு உவமையாகக் கூறப்படுகிறது. தெய்வப்பேரொளி வடிவமான முருகனின்அழகை,

''இளஞாயிறு உதயஞ்செயும் உருக்கோலமும்''
(செங்கீரை)

''இருளற இமைக்குநின் திருவுருவின் அலர்சோதி
இளஞாயிறு என'' (வருகை)

என்னும் பாடல் அடிகளால் குருபரர் விளக்குகின்றார். இவ்வாறு அடிகள் தம் படைப்புக்களில் பலவிடங்களில் இறைவன் ஒளிமய மானவன் என்பதை விளக்குகின்றார்.

**குருவருளனுபவம்**

நம் உள்ளே உள்ள ஒளியைத் தம் அருளால் (தீட்சையால்) தொட்டுக் காட்டுபவர் குரு. குரு அருள் செய்யும்முறை நயன தீட்சை, ஸ்பரிசதீட்சை, மானஸ தீட்சை, வாசகதீட்சை இவ்வாறு

ஏழுவகைப்படும். குருவின் சம்பந்தம் பட்டவுடனே சீடனின் மும்மல இருள் நீங்கப்பெறுகிறது. உள்ளத்தின் உள்ளே உள்ள ஒளி தோன்றுகிறது. அவ்வொளியைப் பார்த்துப் பார்த்துப் பழகித் தியானித்து, சாதனை செய்தால் அருட்பெருஞ்சோதி மயமாக விளங்கும் ஆண்டவனை உணர்ந்து அருளனுபவத்தைப் பெறமுடியும். இந்த அனுபவம் குருவருள் இல்லாமல் அமையாது. ''தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது'' என்பது பழமொழி. நமது புருவமத்தியாகிய சுழுமுனைத்தலம், மூலாதாரம் முதலாகச் சொல்லப்படும் ஆறு ஆதாரங்களில் ஆறாவதாகும். புறக்கண்ணைமூடி அகவிழியை – நெற்றிவிழியைத் திறக்கச்செய்து அதன் துணையால் மெய்ப்பொருளைக் காணும் போது அருட்பெருஞ்சோதியாக இறைவன் விளங்குகிறான். அவன் நம்மையும் அச்சிவவொளிக்குள் ஒளிக்குள் ஒளியாக ஐக்கியப்படுத்திக் கொள்கிறான் என்பது நமது ஞானிகள் அருளிய ஞான நூல்களின் முடிவு. திருமூலர்,

''நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி
உற்றுஉற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடஞ்
சிற்றம்பலம் என்று சேர்ந்து கொண்டேனே''

(திருமந்திரம் – 2770)

எனும் பாடலைப் போல திருமந்திரத்தில் பல இடங்களில் அருளியுள்ளார். மூன்றாம் தந்திரத்தில் 'தியானம்' எனும் பகுதியில் வரும் பல பாடல்கள் சிந்தனைக்குரியவை. 'உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கலும்' (603) 'நாட்டம் இரண்டும் நடு மூக்கில் வைத்திடில்' (604) 'நயனம் இரண்டும் நாசிமேல் வைத்து' (605) இவ்வாறு வருபவை சிவத்தியானத்தின்வழி ஒளிக்காட்சியை அனுபவிக்க முடியும் என்பதேயாகும்.

### குருவருளனுபவத்தின் பயன்

சிற்றொளி (அண்ட ஒளி) பேரொளியுடன் (அகண்ட ஒளி) கலப்பதே, இறைவன் திருவடிப்பேறு எய்துதலாகும்.

''அண்டவொளியும் அகண்ட வொளியுடன்
பிண்டவொளியாற் பிதற்றும் பெருமையை
உண்டவெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே'' (2806)

நம் உடலும் சாதனையால் ஒளிவடிவைப் பெற்று பரமாகாய வொளிக்குள் கலந்துவிடும் என்பது இதன் கருத்து. திருமூலர் மரபில் வந்த குருவருள் பெற்ற ஞானச்சித்தர்கள் இவ்வனுபவத் தைப் பெற்றுவிடுகின்றனர் என்பதை அறிகிறோம். அருளாளர்கள் சோதியில் கலந்ததாகக் கூறுவது இவ்வழியில்தான் எனவும் இதுதான் குருவருள் அனுபவத்தின் பயன் எனவும் அறியலாம்.

### குமரகுருபரர் குருவருள் அனுபவம்

அடிகள் தமக்கு குருவருளை வழங்கிய தருமையாதீனத் தவமுனிவர் அருட்குருமணி மாசிலாமணிதேசிகர் அவர்கள் மீது பாடிய பண்டார மும்மணிக்கோவையில் தம் அனுபவத்தை விளக்கியுள்ளார். சிவபெருமானே தமக்கு ஞான குருவாக வந்து அருள் செய்தமையை விளக்கும் வகையில் ''மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட்டம்ம'' என்றும் ''மோனவாழ்வளிக்கும் ஞானதேசிகன்' என்றும் போற்றுகின்றார்.

''தானின் றெனைத் தனக்குள்ளே யொளிக்கும்
என் தன்மை நிற்க
யானின்ற போதெனக்குள்ளே ஒளித்திடும் இப்பரிசே
வானின்ற சின்மய மாமாசிலாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணேன் இதற்கொத்த
நன்மணியே'' (ப. மு. கோ. 4)

என்னும் பாடல் அவர் பெற்ற குருவருள் அனுபவம். மேலும், ''அடங்கா ஐம்புலன்'' எனத் தொடங்கும் 26-வது பாடலில் அவர் குருவின் அருளால் பெற்ற சிவயோக அனுபவத்தின் அக நிகழ்வுகளை – பேரின்ப மேலீட்டினை விளக்கும்போது ''கட்புலனறியாக் கதிரொளி''யாகச் சிவத்தைக் கண்டு போற்று கின்றார்.

இதுகாறும் கண்டவற்றால் செந்தமிழ்ச் சிவநெறி குருவருள் நெறி என்பதும், குருவருள் பெற்ற பின்னரே திருவருள் பெற முடியும் என்பதும் விளக்கப்பட்டன. மேலும், குருவருள் பெற்று உயர்ந்த அருளாளர் வாழ்வு, வாக்கு ஆகியவற்றின் அடிப்படை யைக்காட்டி அவ்வழியில் குமரகுருபர முனிவரும் குருவருள் பெற்றுக் குவலயம் வாழ அருட்பாடல்களை அருளியவர்;பிறருக்கு ஞானக் கல்வியை வழங்கிய ஞான வள்ளலாகவும் விளங்கிய ஞானத்தமிழ் மாமுனிவர் என்பதையுணர்ந்து அடிகளின் திருவடித் தாமரைகளைச் சிந்தித்து நாமும் உயர்வோம்!

ஏழுவகைப்படும். குருவின் சம்பந்தம் பட்டவுடனே சீடனின் மும்மல இருள் நீங்கப்பெறுகிறது. உள்ளத்தின் உள்ளே உள்ள ஒளி தோன்றுகிறது. அவ்வொளியைப் பார்த்துப் பார்த்துப் பழகித் தியானித்து, சாதனை செய்தால் அருட்பெருஞ்சோதி மயமாக விளங்கும் ஆண்டவனை உணர்ந்து அருளனுபவத்தைப் பெறமுடியும். இந்த அனுபவம் குருவருள் இல்லாமல் அமையாது. ''தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது'' என்பது பழமொழி. நமது புருவமத்தியாகிய சுழுமுனைத்தலம், மூலாதாரம் முதலாகச் சொல்லப்படும் ஆறு ஆதாரங்களில் ஆறாவதாகும். புறக்கண்ணைமூடி அகவிழியை – நெற்றிவிழியைத் திறக்கச்செய்து அதன் துணையால் மெய்ப்பொருளைக் காணும் போது அருட்பெருஞ்சோதியாக இறைவன் விளங்குகிறான். அவன் நம்மையும் அச்சிவவொளிக்குள் ஒளிக்குள் ஒளியாக ஐக்கியப்படுத்திக் கொள்கிறான் என்பது நமது ஞானிகள் அருளிய ஞான நூல்களின் முடிவு. திருமூலர்,

''நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி
உற்றுஉற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடஞ்
சிற்றம்பலம் என்று சேர்ந்து கொண்டேனே''

(திருமந்திரம் – 2770)

எனும் பாடலைப் போல திருமந்திரத்தில் பல இடங்களில் அருளியுள்ளார். மூன்றாம் தந்திரத்தில் 'தியானம்' எனும் பகுதியில் வரும் பல பாடல்கள் சிந்தனைக்குரியவை. 'உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கலும்' (603) 'நாட்டம் இரண்டும் நடு மூக்கில் வைத்திடில்' (604) 'நயனம் இரண்டும் நாசிமேல் வைத்து' (605) இவ்வாறு வருபவை சிவத்தியானத்தின்வழி ஒளிக்காட்சியை அனுபவிக்க முடியும் என்பதேயாகும்.

**குருவருளனுபவத்தின் பயன்**

சிற்றொளி (அண்ட ஒளி) பேரொளியுடன் (அகண்ட ஒளி) கலப்பதே, இறைவன் திருவடிப்பேறு எய்துதலாகும்.

''அண்டவொளியும் அகண்ட வொளியுடன்
பிண்டவொளியாற் பிதற்றும் பெருமையை
உண்டவெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே'' (2806)

நம் உடலும் சாதனையால் ஒளிவடிவைப் பெற்று பரமாகாய வொளிக்குள் கலந்துவிடும் என்பது இதன் கருத்து. திருமூலர் மரபில் வந்த குருவருள் பெற்ற ஞானச்சித்தர்கள் இவ்வனுபவத் தைப் பெற்றுவிடுகின்றனர் என்பதை அறிகிறோம். அருளாளர்கள் சோதியில் கலந்ததாகக் கூறுவது இவ்வழியில்தான் எனவும் இதுதான் குருவருள் அனுபவத்தின் பயன் எனவும் அறியலாம்.

## குமரகுருபரர் குருவருள் அனுபவம்

அடிகள் தமக்கு குருவருளை வழங்கிய தருமையாதீனத் தவமுனிவர் அருட்குருமணி மாசிலாமணிதேசிகர் அவர்கள் மீது பாடிய பண்டார மும்மணிக்கோவையில் தம் அனுபவத்தை விளக்கியுள்ளார். சிவபெருமானே தமக்கு ஞான குருவாக வந்து அருள் செய்தமையை விளக்கும் வகையில் "மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட்டம்ம" என்றும் "மோனவாழ்வளிக்கும் ஞானதேசிகன்' என்றும் போற்றுகின்றார்.

"தானின் றெனைத் தனக்குள்ளே யொளிக்கும்
என் தன்மை நிற்க
யானின்ற போதெனக்குள்ளே ஒளித்திடும் இப்பரிசே
வானின்ற சின்மய மாமாசிலாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணேன் இதற்கொத்த
நன்மணியே" (ப. மு. கோ. 4)

என்னும் பாடல் அவர் பெற்ற குருவருள் அனுபவம். மேலும், "அடங்கா ஐம்புலன்" எனத் தொடங்கும் 26-வது பாடலில் அவர் குருவின் அருளால் பெற்ற சிவயோக அனுபவத்தின் அக நிகழ்வுகளை – பேரின்ப மேலீட்டினை விளக்கும்போது "கட்புலனறியாக் கதிரொளி"யாகச் சிவத்தைக் கண்டு போற்று கின்றார்.

இதுகாறும் கண்டவற்றால் செந்தமிழ்ச் சிவநெறி குருவருள் நெறி என்பதும், குருவருள் பெற்ற பின்னரே திருவருள் பெற முடியும் என்பதும் விளக்கப்பட்டன. மேலும், குருவருள் பெற்று உயர்ந்த அருளாளர் வாழ்வு, வாக்கு ஆகியவற்றின் அடிப்படை யைக்காட்டி அவ்வழியில் குமரகுருபர முனிவரும் குருவருள் பெற்றுக் குவலயம் வாழ அருட்பாடல்களை அருளியவர்;பிறருக்கு ஞானக் கல்வியை வழங்கிய ஞான வள்ளலாகவும் விளங்கிய ஞானத்தமிழ் மாமுனிவர் என்பதையுணர்ந்து அடிகளின் திருவடித் தாமரைகளைச் சிந்தித்து நாமும் உயர்வோம்!

# மதுரைக் கலம்பகத்தில் சிருங்கார ரசம்

சுப்புலெட்சுமி, குற்றாலம்

செந்தமிழ் மொழியில் 'கலம்பகம்' என்பது பல்வகை வண்ணமும் மணமும் கொண்ட மலர்களால் கட்டப்பட்ட கதம்பம் போன்ற சிற்றிலக்கியமாகும். இவ்விலக்கியம் அகம், புறம் என பல்துறைச் செய்யுட்களும் வெண்பா முதலிய பலவகைப் பாக்களும், தாழிசை முதலிய பாவினங்களும் கலந்து, புயவகுப்பு, தவம், வண்டுவிடுதூது, ஊசல், களி, மடக்கு, ஊர், மறம், காலம், தழை விருப்புரைத்தல், இரங்கல், சம்பிரதம், தூது ஆகிய பதினெட்டு உறுப்புக்களையும் பெற்று வரும். இவ்வகை சிற்றிலக்கிய வகைகளுள் குமரகுருபர அடிகளால் இயற்றப்பெற்ற 'மதுரைக் கலம்பகம்' சொற்சுவை, பொருட்சுவை நிறைந்த ஓர் அரிய படைப்பாகும். மதுரையிலே எழுந்தருளி யிருக்கின்ற சோமசுந்தரக் கடவுளைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்ட இவ்விலக்கியத்தில் அகத்துறைப்பாடல்களே மிகுதியான இடத்தைப் பெறுகின்றன. இப்பாடல்கள் இன்பச்சுவை நிறைந் தவை. இன்பச் சுவையை வடமொழியாளர் 'சிருங்கார ரசம்' என்பர். சிருங்கார ரசம் சார்ந்த இப்பாடல்களை வடமொழி யாளரின் இரசக் கோட்பாட்டின் அடிப்படையில் ஆராய்வதே இங்கு ஆய்வு நோக்கமாகக் கொள்ளப் படுகின்றது. இலக்கியத் திறனாய்வில் இரசக் கோட்பாடு இன்றியமையாத ஆய்வு என்பதை நாம் அறிவோம். ஏனெனில் "இலக்கியங்கள் புலவர் களின் அனுபவங்களினால் ஏற்படும் உணர்ச்சிகளின் வெளிப் பாடாகும். இலக்கிய உணர்ச்சி என்பது படைப்பாளனின் உணர்ச்சியையும், அவனால் படைக்கப்படும் மாந்தர்களின் உணர்ச்சியையும், அதனைப் படிப்போர் உணர்ச்சியையும் குறிப்ப தாகும்" (வி. சி. சசிவல்லி அழகியல் சிந்தனைகள், ப. 76) இத்தகு உணர்ச்சிகள் பற்றித்திறனாய்வாளர்கள் பல்வேறு நோக்கத்தில் ஆராய்ந்துள்ளனர். அவ்வகையில் மதுரைக் கலம்பகமும் ஆய்விற்கு உள்ளாகின்றது.

**இரசக் கோட்பாடு**

இரசம் என்பது தமிழில் சுவை எனப்படும். நாட்டிய சாஸ்திரத்தின் ஆறாவது அத்தியாயத்தில் பரதர் இரசம் பற்றி விரிவாகப் பேசுகிறார். இரசம் எப்படித் தோற்றுவிக்கப் படுகின்றது என்பதையும் சுவைஞர்களிடையே சுவையுணர்வு (இரசானுபவம்) எப்படி உருவாக்கம் பெறுகின்றது என்பதையும் விளக்குவதே இரசக் கோட்பாடு. மனித உணர்வோடு தொடர்புடைய இரசங்களை, பரதர் சிருங்காரம், வீரம், கருணை, ஹாஸம், உருத்திரம், பயானகம், பீபத்ஸம், அற்புதம் என எட்டுவகைப்படும் என்கிறார். இதனையே தொல்காப்பியர் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எட்டுவகை என்கிறார். பரதர் இரசத் தோற்றத்திற்கு அடிப்படையாக இருப்பது பாவம் (Bhava) என்கிறார். அதாவது இரசம் என்பது விபாவம், அனுபாவம், வியபிசாரி பாவங்களின் சேர்க்கையினால் தோன்றுகின்ற தென்கிறார் பரதர். இதனை

"விபாவனுபாவவ்ய பிசாரி சம்யோகாத் ரஸா நிஷ்பதீ:"
(De. Sushilkumar, Some Problems of Sanskrit Poeties P. 191)
என்னும் நாட்டிய சாத்திர சூத்திரத்தால் அறியலாம். நாட்டியக் கலையை அடிப்படையாகக் கொண்டு பரதர் கூறும் இக்கோட்பாடு இலக்கியங்களுக்கும் பொருந்தும். ஏனெனில் உணர்வுகளைச் சித்திரிக்காத இலக்கியங்கள் உப்பில்லாப் பண்டம் போன்றதே. சோமசுந்தரக் கடவுளின் பெருமை கூறும் மதுரைக் கலம்பகத்தில் இன்பச் சுவையைத் தோற்றுவிக்கும் சிருங்கார ரசப்பாடல்கள் பாவம் நிறைந்தவை. குமரகுருபரர் தன்னைத் தலைவியாகப் பாவித்துக் கொண்டு தலைவனான இறைவனை அடையத் துடிக்கும் பாவங்களின் வெளிப்பாடுகளாகவே அப்பாடல்கள் அமைகின்றன எனலாம். இப்பாடல்கள் தலைவியின் கூற்றுக்களாக மட்டுமன்றி, தோழி, செவிலி போன்றோரின் கூற்றுக்களாகவும் சிருங்கார ரசத்தைத் தோற்றுவிக்கின்றது. குமரகுருபரரின் கலம்பகப் பாடல்களில் சிருங்கார ரசம் புலப்படும் தன்மையைக் காணலாம்.

**விபாவம்** (இரசத் தோற்றக் காரணங்கள்)

மனித உள்ளத்தின் உணர்வுகளைத் தூண்டுவதற்குரிய காரணங்களே 'விபாவம்' எனப்படும். எண் வகை உணர்வுகளும்

தோன்றுவதற்குரிய காரணங்கள் உண்டு. சிருங்கார ரசத் தோற்றத்திற்கு காதல் உணர்வுவயப்பட்ட தலைவன், தலைவி, அவர் தம் உருவச்சிறப்பு, ஒப்பனை, தென்றல், நிலா, சோலை போன்ற புறச்சூழல்களும் காரணமாக அமைகின்றன.

மதுரைக் கலம்பகத்தில், ''போகமாக விளைந்த, புவனமாகப் பொலிந்த, ஏகமாக இருந்த'' (மதுரைக் கலம்பகம், பா. 1) இறைவனைச் சேர இயலாத தலைவி பிரிவாற்றாமையால் வருந்துகிறாள். விரகவேதனை அவளைத் துன்புறுத்துகின்றது· பிறையோ வருத்துகின்றது. தோழியரை அழைத்து,

'கனியிருக்குங் கடம்பவனேசனார்
கண்புகுந்தென் கருத்துளிருக்கவும்
பனியிருக்கும் பிறைக்கூற்ற முற்றியென்
பாவியாவியை வாய் மடுத்துண்பதே'' (9)

என வருந்துகிறாள். நிலவின் துன்பத்தைப் பொறுக்கலாற்றாத தலைவி இறைவனுடைய புயத்தோடு கூடுகின்ற பெரும்பேறு தனக்குக் கிடைக்காதா? எனவும் ஏங்குகிறாள். ''வையைக் கரையில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே! உன்புயம் கிடைக்கா விட்டால் மன்மதனின் தொடுக்கின்ற அம்பே எனக்கு எமனாகும்'' (மதுரைக் கலம்பகம், பா. 28). ஏனெனில் கூடல் என்னும் மதுரையே எனக்குச் சிறந்த வாசஞ்செய்யும் இடமாகும். ஆனால் மன்மதன் எண்பது கோடி அம்புகளைச் செலுத்துவது முறையாகுமா? என்று புலம்புகின்றாள்.

தலைவனோடு கூடுகின்ற பெரும்பேறு இன்பம் கிடைக்குமா? என்ற ஐயப்பாடு தலைவியின் உள்ளத்தில் எழுகின்றது. எனவே

''தழைத்திடுங் கூடலார் குழைத்துடன் கூடலார்
பிழைத்திடுங் கூடலே இழைத்திடுங் கூடலே'' (21)

என்று கடற்கரை மணலில் கூடலிழைத்துப் பார்க்கிறாள். இன்னும் அவளது ஆசை நிறைவேறவில்லை. மேலும் மேலும் வருத்துகின்றது.

''கூற்றொன்றல பொருகோடி கெட்
டேன் கொழுந்தொன்று தென்றற்
காற்றொன் றிளம்பிறைக் கீற்றொன்று
கார்க் கடலொன்று கண்ணீர்
ஊற்றிறொன் றிவளுக் குயிரொன்
றிலை யுண்டு டம் பொன்றுமே'' (4)

எனும் இப்பாடலில் குளிர்ந்த தென்றல், இளவாடை, பிறைச் சந்திரன், கடல் போன்றவை தலைவியின் துன்பத்தை மிகுவிக்கின்றது. இங்கே காம வேதனைப்படும் தலைவி ஆலம்பன விபாவம் ஆகும். இவ்வுணர்வைத் தூண்டுகின்ற தென்றல், முதலானவை உத்தீபன விபாவம் ஆகும்.

இதற்கும் மேலாக சிருங்கார ரசப்பாடல்களுள் தூது இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. நெஞ்சு, வண்டு, பறவை போன்றவற்றைத் தூது விடுகின்ற மரபினைப் பக்தி இலக்கியங்களிலும் காணுகிறோம். மதுரைக் கலம்பகத்திலும்,

"வீரம் வைத்தவில் வேள்களை மெய்த்தன
பாரம் வைத்த பசும்புண் பசும்புணே" (பா. 41)

என வருந்தும் தலைவி

"கரைபொருதிரங்கு கழிதொறுமிருந்து
கயல்வர வுறங்கும் புள்ளீரே" (பா. 30)

எனப் பறவையை அழைத்து என் காமநோயைக் கடம்பவனத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் சொல்ல மாட்டாயா? என்று கெஞ்சுவதும் சிருங்கார ரசத்தைத் தோற்றுவிக்கின்றது. தலைவி படும் துன்பம் கண்டு மதுரைச் சொக்கர் இரங்கவில்லையே, எனத் தோழி, பாங்கி, செவிலி முதலானோர் இறைவனிடம் முறையிடுவதாக அமைந்த பாடல்களும் சிருங்கார ரசம் சார்ந்தவை. இங்கே தெய்வக்காதல் மீதுறப் பெற்ற குமர குருபரரின் உள்ளமே புலப்படுகின்றது.

### அனுபாவம் (புறவெளிப்பாட்டு உணர்வுகள்)

அனுபாவங்கள் என்பன விபாவத்தால் தோன்றும் உணர்வுகள் புறத்தார்க்குப் புலனாகுமாறு வெளிப்படுத்தும் மெய்ப்பாடுகளாகும். சான்றாகப் புருவங்களை நெறித்தல், கண்ணீர் மல்குதல், புலம்புதல், கோபம் கொள்ளுதல் போன்றவை. இலக்கியத்தில் இத்தகைய பாவங்களைப் படைப்பாளனின் கருத்து வெளிப்பாட்டுத் திறனில் காணலாம்.

சொக்கநாதரின் மாலைக்காக ஏங்கும் தலைவிக்கு அது கிடைக்கவில்லை. தோழியரிடம் முறையிடுகிறாள். ஆனாலும் பயனில்லை! இவளது உணர்வுகளை,

"அம்ம கோவெனும் விழும் அழும் எழுந்து நின்
றருவி நீர் விழி சோர
விம்மு மேங்கு மெய் வெயர்த்து வெய் துயிர்க்கும்" (16)

என்று குமரகுருபரர் சித்திரிக்கின்றார். இங்கே விழுதல், எழுதல், ஏங்குதல், கண்ணீர் நிறைதல், உடம்பு வியர்த்தல் போன்ற உணர்வுகளே அனுபோகங்களாகும். இரசத் தோற்றத்திற்கு அனுபாவங்கள் காரணமாக அமைகின்றன என்பதை இங்கு உணர்கிறோம்.

**வியபிசாரி பாவங்கள்** (நிலையற்ற துணையுணர்வுகள்)

நிலையற்ற கணநேர உணர்வுகளே வியபிசாரி பாவங்கள் எனப்படும். "கடலில் அலைகள் தோன்றி மீண்டும் நீர்ப்பரப்பில் மறைவது போல இவை தோன்றிச் சிறிது நேரம் நிலையான ஸ்தாயி பாவத்திற்கு ஊட்டம் கொடுத்து அதிலேயே மறைந்து போகும் இயல்பின" (வி. சி சசிவல்லி, அழகியல், சிந்தனைகள், 0.50) எனவே நிலையற்ற உணர்வுகள் மறைந்து போன பின்பு மீண்டும் தலையாய பாவமே நிலைத்திருக்கும்.

மதுரைக் கலம்பகத் தலைவி தன் விருப்பத்தை நிறை வேற்றாத இறைவனை இழிவாகப் பழித்துரைக்கிறாள். 'ஒரு பெண்ணைப் பாதி உடம்பில் வைத்துக் கொண்டு அவளால் மார்பு தோறும் வடுப்பட்டும் மற்றொரு பெண்ணைக் காதலித்து வருத்துவது என்ன உயர்ந்த செயலா? எளியோரை வலியோர் வருத்துவது எவ்வளவு இழிவான செயல்? என ஏளனப்படுத்து கிறாள்! இதற்கும் மேலாக தனது காதலை ஊரார் அறியும்படி உணர்த்துவதற்குத் தயங்காத தலைவி, மடல் ஏறப் புறப்படு கிறாள். இறைவனது கையில் ஏந்திய மான், மழு இவற்றை எழுதிய படத்தைக் கொண்டு வந்து,

"... ... ... ... பங்கயப்பூந்
தடங்கொண்ட கூடற் சவுந்தர
மாறர் பொற்றாள் பெயர்த்து
தடங்ககொண்டதோர் வெள்ளி மன்றே
றுது மின்று நாளையிலே" (பா. 33)

என்று தன் காதலைப் பறைசாற்றிக் கொண்டு வெள்ளியம் பலத்தில் ஏறி வீதியில் உள்ளவர்களுக்கு அறிவிப்பேன் என்கிறான். இது தலைவியின் வெகுளியையும் (உருத்திரம்) வீர உணர்வையும் வெளிப்படுத்துகின்றது. இருப்பினும் இவ்வுணர்வுகள் கணநேரமே

நிலைத்திருக்கும். இவை சிருங்கார ரசத்தின் அடிப்படையில் தோன்றுகின்ற துணையுணர்வுகளாகும்.

இவ்வாறு இலக்கியப் படைப்பாளர்கள் உணர்த்த விரும்பும் உணர்வுகள் சுவைஞர்களின் அனுபவிக்கும் திறத்தையும் பொறுத்து அமைகின்றது இதனையே தொல்காப்பியரும்,

''கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதின் உணரும்
உணர்வுடைய மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள் கோள் எண்ணருங் குரைத் தே''

என்னும் நூற்பாவில் பொருத்தமுறக் கூறியிருக்கிறார். எனவே படைப்போர் உணர்ச்சி படிப்போரையும் சார்ந்தது.

விபாவ அனுபாவ வியபிசார பாவ சேர்க்கையினால் இரசம் தோற்றம் பெறுகிறது என்பதற்கு மதுரைக் கலம்பகத்தில் இடம் பெறும் சிருங்கார ரசப்பாடல்கள் சிறந்த எடுத்துக் காட்டு களாகும்.

மதுரைக் கலம்பகம் மனித உணர்வுகளை, குறிப்பாகக் காதல் உணர்வை (சிருங்கார ரசம்) சித்திரிக்கின்ற சிறந்த படைப்பாகும். இங்கே குமரகுருபரர் தன்னைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் பாவித்துப் பாடுகின்ற பாடல்கள் நுணுக்கம் வாய்ந்தவை. இரசத் தோற்றத்திற்குக் காரணமாக விபாவம், அனுபாவம், வியபிசாரி பாவங்கள் இப்பாடல்களில் நேர்த்தியாக அமைந்து இரசத் தோற்றத்தை உருவாக்குகின்றது. அதோடு இறைவனோடு இரண்டறக் கலந்து ஐக்கியப்பட்டு வாழும் பேரின்ப வாழ்க்கை நமக்குக் கிடைக்காது என்று எண்ணுகின்ற குமரகுருபரரின் உணர்வுகளே சிருங்கார ரசப் பாடல்களில் வெளிப்படுகின்றது. இந்த வெளிப்பாட்டில் குமரகுருபர அடிகளின் இலக்கியப் புலமையும் உயர்வானது என்பதை மறுக்க இயலுமா?

# பிள்ளைத்தமிழில் நாட்டுப்புற விளையாட்டு

சி. சுடலைமணி பாண்டியன், குற்றாலம்

நாட்டுப்புற மக்களின் வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டும் நாட்டுப்புறவியலின் ஒரு கூறாக நாட்டுப்புற விளை யாட்டுக்கள் திகழ்கின்றன. இவை நாட்டுப்புற மக்களின் பழக்க வழக்கங்களோடும் பண்பாட்டோடும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. விரும்பி விளையாடப்படும் விளையாட்டுக்கள் பொழுது போக்கிற்காக மட்டுமல்லாது உடல் வளத்திற்கும், உள்ள நலத்திற்கும் உறுதுணையாக உள்ளன. மனித இனம், தோற்றம் பெற்ற காலம் தொட்டுப் பல்வேறு சமுதாய மாற்றங் களைச் சந்திக்க நேரிட்டது. அதற்குப் பல பயிற்சிகள் தேவைப் பட்டன. அப்பயிற்சிகள் மனித குலத்திற்குப் பல நிலைகளில் முன்னேற்றம் காணத் துணை நிற்கின்றன. நாளடைவில் அவை நாள்தோறும் விளையாடும் பலவகையான விளையாட்டுக்களாக விரிவடைந்தன. விளையாட்டுக்கள் அவற்றை விளையாடுபவரின் இயல்புகளை வெளிப்படுத்துவதோடு எதிர்வரும் காலங்களில் நல்லதொரு வாழ்வினை அமைப்பதற்குரிய வழிகாட்டியாகவும் அமைகின்றன எனலாம். ஏட்டில் எழுதப்படாத இலக்கியங்களே பல ஏட்டிலக்கியங்களாக முகிழ்க்கக் காரணமாக இருந்தது போன்று நாட்டுப்புறத்திலே விளையாடி மகிழ்ந்த விளை யாட்டுக்கள் பல எழுத்திலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளன.

சிற்றிலக்கியம் தோன்றிய காலத்தில் மனிதனை ஆட்டு விக்கும் ஆண்டவனைக் குழந்தையாக்கிப் பிள்ளைத்தமிழ் பாடிப் பரவசம் அடைந்தனர். திருவிளையாடல்கள் பல புரியும் இறை மகன் குழந்தையாக வந்து சிறுவிளையாடல்கள் பல விளையாடு வதாகக் கூறுகின்றபோது நாட்டுப்புற விளையாட்டுக்கள் இடம் பெற்றுள்ள பாங்கினை புலப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சிற்றிலக்கியங்களில் பிள்ளைத்தமிழ்

மிக நீண்டதொரு இலக்கிய வரலாற்றைப் பெற்றுத் திகழ்கின்ற தமிழ்மொழியில் பல்வேறு காலச் சூழலின் காரண

மாகப் புதுப்புது வகையான இலக்கியங்கள் தோற்றம் பெற்றன. பக்தி இயக்கத்தின் காரணமாகச் சிற்றிலக்கியங்கள் பல்கிப் பெருகின.

"பிள்ளைக் கவி முதல் புராணம் ஈறாகத் தொண்ணூற்றாறு (பிரபந்த மரபியல் நூற்பா – 1.7). என்று கி. பி. 16–ம் நூற்றாண்டைச் சார்ந்த பிரபந்த மரபியல், சிற்றிலக்கியங் களின் எண்ணிக்கையினை முதன் முதலாக வரையறை செய் கின்றது. இவ்வாறு வரையறை செய்யப்பட்டச் சிற்றிலக்கியங் களில் பிள்ளைத்தமிழும் ஒன்றாகும். இதனைப் பாடிய புலவர்கள், தங்கள் உள்ளம் கவர்ந்த தெய்வத்தையோ, அரசனையோ, வள்ளலையோ, சான்றோரையோ குழந்தையாகப் பாவித்துப் பாடி மகிழ்ந்தனர். முருகப்பெருமானின் திருவருளால் பேசும் திறம்பெற்ற குமரகுருபரர் வைத்தீஸ்வரன் கோவிலில் எழுந் தருளியுள்ள முத்துக்குமரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு" முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்" எனும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ் நூலையும் மதுரை மீனாட்சியம்மையைத் தலைவியாகக் கொண்டு "மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்" எனும் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூலையும் பாடியருளினர். கி. பி. 17–ம் நூற்றாண்டில் முகிழ்த்த இவ்விரண்டு பிள்ளைத் தமிழ் நூல்கள் பக்தி இலக்கிய வரலாற்றில் பெரும் புகழ் படைத்துள்ளன.

### விளையாட்டு

மனித சமுதாயத்தைப் போன்றே விளையாட்டும் பழமை யானதொன்றாகும். இயற்கையோடு இணைந்த வாழ்வினை மேற்கொண்ட தொடக்ககால மனித இனத்தினை விளையாட்டு பலவாறு வழி நடத்தியுள்ளது. எனவே தான் அகிலத்தைப் படைத்த ஆண்டவனைப் பல்வேறு விளையாடல்களை விளையாட அமைத்து அதன்வழி உலகமக்களுக்கு நன்னெறியினை ஆன்றோர் புகட்டியுள்ளனர். இறைவனின் பெருமைகளையும் அருமைகளையும் பிற இயல்புகளையும் மக்களிடைப் புலப்படுத்தி பக்தியுணர்வூட்ட நாட்டுப்புற விளையாட்டுக்கள் சிறந்த காரணிகளாக திகழ்ந்துள்ளமையினைப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம்பெறும் நாட்டுப்புற விளையாட்டுக்கள் சான்று பகர்கின்றன.

### கண்பொத்தி விளையாட்டு

சிறுவர் சிறுமியர் பலர் இணைந்து குழுவாக விளையாடும் 'கண்ணாமூச்சி' விளையாட்டே மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் நூலில் 'கண்பொத்தி' விளையாட்டு என்று கூறப்பட்டுள்ளது. விளையாட்டுக் குழுவில் இடம் பெறும் ஒருவர் கண்களைத் துணியினாலோ அல்லது கைகளாலோ மூடிக் கொண்டு விளையாட்டுக் குழுவில் இருக்கும் மற்றவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். பிடிபட்டவர் அடுத்த ஆட்டத்தில் இதே போன்று கண்களை மறைத்துக் கொண்டு விளையாட்டில் கலந்து கொள்பவர்களைக் கண்டுபிடிக்க வேண்டும். இப்படியே விளையாட்டு தொடர்ந்து கொண்டு இருக்கும். இக்கண்ணாமூச்சி விளையாட்டினை முத்துக்குமாரசாமியும் மீனாட்சியம்மையும் விளையாடியதாகக் குமரகுருபரர் கற்பனை செய்து பார்க்கிறார் என்பதனைக்,

'காந்தள் செங்கமலத்த கழுநீர், மணந்தெனக்
கண்பொத்தி விளையாடியும்'
(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 35-4)

எனும் பாடல் வரிகளால் அறியலாம்.

கண்களை மூடிய நிலையில் தன்னோடு விளையாடும் ஏனையோரைக் கண்டடைய வேண்டும் என்ற ஒரே எண்ணத்தில் உள்ளம் ஒருநிலைப்படுவதால் இவ்விளையாட்டு உள்ளத்தை ஒருநிலைப்படுத்தப் பயிற்சி தருகிறது. இப்பயிற்சிதனை மீனாட்சி யம்மையின் பக்தர்களும் பெறவேண்டும் என்று குமரகுருபரர் எண்ணியிருக்கலாம்.

### ஊஞ்சல் விளையாட்டு

நாட்டுப்புறங்களிலே குளத்தங்கரை, ஆற்றங்கரை மரங்களில் ஊஞ்சல் கட்டி அல்லது அம்மரக்கிளையே ஊஞ்சலாக்கி விளையாடும் விளையாட்டு பழங்காலந்தொட்டு இருந்து வருகின்றது. சிறுவர், சிறுமியர் இவ்விளையாட்டினை விளையாடி மகிழ்ந்ததனால் இவ்விளையாட்டினை,

''மஞ்சக் குருவி ஊஞ்சலாடும்
மகா தேவனுக்குப் பூசைக்காகும்'' – (வாழைப்பழம்)
'ஆட்டிவிட்டால் ஆடுவது அந்தரத்தில் தொங்குவது' –
(ஊஞ்சல்)

என்று விடுகதைகள் அமைத்து மகிழ்ந்துள்ளனர். மேலும்

'கள்ளிமரத்தாலே ஊஞ்சலுங்கட்டி
கத்தாழை மரத்தாலே விட்டமும் பூட்டி
பள்ளி பறைச்சி இருந்தாட
பண்டாரச் சுப்பன் உதைத்தாட'

(ஊஞ்சல் இலக்கியம், ப. 5)

என்று ஊஞ்சல் அமைத்துச் சாதி பேதமின்றி விளையாடி இன்புற்ற நிலையை நாட்டுப்புறப் பாடலும் உணர்த்துகின்றது. வாய்மொழி இலக்கியங்களில் காணப்படும் ஊஞ்சல் பற்றிய செய்திகள் சூழலுக்கேற்ப பல்வேறு வகையான நிகழ்வுகளுடன் தொடர்பு கொண்டுள்ளன.

சங்ககாலம் முதல் இவ்விளையாட்டு மகளிருக்கு மட்டுமே உரியதாகக் கருதப்பட்டுள்ளது. காதல், விளையாட்டு ஆகிய இரு நிலைகளிலும் ஊஞ்சல்கள் அமைந்திருந்தன என்பதற்கும் பல சங்கப் பாடல்கள் சான்றாகின்றன. இவ்வாறு மானுடர்கள், குறிப்பாக மகளிர் விளையாடிய விளையாட்டாகத் தொடங்கித் தலைவி தலைவர் இடம் பெற்ற ஊஞ்சல் விளையாட்டாக வளர்ந்து பக்தி இயக்க காலத்தில் இறைவனைப் புகழ்ந்து பாடும் ஒரு தனி இலக்கியமாகவும் வளர்ச்சியடைந்தது. பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் ஊஞ்சல் பருவம் அமைத்துக் குழந்தையைப் புகழ்ந்து ஊஞ்சல் ஆடுமாறு வேண்டியுள்ளனர். குமரகுருபரரும் மீனாட்சியம்மையைப் பவளத்தால் ஆகிய காலின் மேல் வைக்கப்பட்ட வயிரவிட்டத்தில் நாலவிடப்பட்ட முத்துவடத்தில் கட்டப்பட்ட மாணிக்கப்பலகை மீது அமர்ந்து ஊஞ்சல் ஆட வேண்டுகிறார். இவ்விளையாட்டு இரத்த ஓட்டம் உடலில் ஒரே சீராக அமைந்து உடல் நலம் பேணுகின்றது எனலாம்.

**புழுதி விளையாட்டு**

கிராமப்புறங்களிலே சிறுமியர் சிறுவீடு அமைத்து சிறு சோறு சமைத்து விளையாடும் விளையாட்டினைக் குமரகுருபரர் தம் பிள்ளைத்தமிழ் நூற்களில் 'புழுதி விளையாட்டு' எனக் குறிப்பிடு கின்றனர். ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில் பருவத்தில் அமைந்த பத்துப்பாடல்களும் சிறுமியர் சிறுவீடு கட்டி விளையாடு கின்றபோது அதனைப் பாட்டுடைத்தலைவர் அழிப்பதாகவும் தங்களது வீட்டை அழிக்க வேண்டாம் எனச் சிறுமியர் வேண்டுவ தாகவும் பொருள்பட அமைந்துள்ளன.

"பொய்தற் பிணாக்களோடு வண்டற் கலம் பெய்து
புளூதி விளையாட்டு அயர்ந்தும்" – (மீ. பி. 35)

"... ... ... ... ... ... எம்பேராய
வெள்ளம் அமைத்த சிறுசோறு
வேண்டின் இடுகேம் அலது எளியேம்
விளையாடிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ" –
(மு. பி. சிற்றில். 7)

"... ... ... ... ... ... வண்டலடைகிடப்ப
மருவீற்றிருந்த குழல்மகளிர்
வண்டல் துறைக்கு மணல் சிற்றில்
மனைகோலுவது மற்றடிகேள்
வகுக்கும் தொழிற்கு மாறன்றே (மு. பி. 10)

எனும் பாடல் வரிகள், நாட்டுப்புறத்துச் சிறுமியர் மணல்வீடு கட்டி மணற்சோறு சமைத்து விளையாடும் விளையாட்டினையே புழுதிவிளையாட்டு எனச் சுட்டி நிற்றலைக் காட்டுகின்றன. குழந்தைகளை எதிர்கால வாழ்க்கைக்குத் தயார்ப்படுத்தும் வகையில் இவ்விளையாட்டு உள்ளது. அத்துடன் பெண் என்பவள் சமைப்பதற்கு மட்டும் உரியவள் அல்லள். கட்டடம் கட்டுதல் போன்ற தொழில் நுட்பங்கள் அறிந்து செயல்படுவதற்கும் உரியவளே என்பதையும் புலப்படுத்துகிறது எனலாம்.

**கழற்சிக்காய் ஆடல்**

கழற்சிக்காய்களை மேலே எறிந்து புறங்கைகளில் ஏந்தி விளையாடும் விளையாட்டே கழங்காடல் விளையாட்டாகும். மேலே எறியப்பட்ட காய்கள் கீழே விழுவதற்கு முன்பாகக் கைகளைத் தரையில் தொட்டும், தரையில் இருக்கும் பிற காய்களை எடுத்தும் விளையாடுவது இவ்விளையாட்டின் முறையாகும். இவ்விளையாட்டே பின்னர் அம்மானை என்ற பெயரில் வழங்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. பொன்னால் செய்த கழங்கினை முற்றத்திலிருந்து விளையாடியதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவ்விளையாட்டினையே கிராமப் புறங்களில் கற்கள் கொண்டு விளையாடும் 'தட்டாங்கல்' அல்லது 'தாச்சிக்கல்' என்றழைக்கின்றனர்.

மீனாட்சியம்மை பாண்டிய மன்னனின் மகளாதலின் அவள் நாட்டிலுள்ள குமரித்துறையில் உண்டாகிய முத்தும், கொற்கைத்துறையில் முத்துக்குளிப்போர் மூழ்கி எடுத்த சிற்பி

முத்தும், பொருநை ஆற்றில் படு தெளிந்த நிலா ஒளிவீசும் முத்தும், அழகிய குளிர்ச்சி நிறை பொதியமலைச்சாரலில் அருவி சொரியும் குளிர்முத்தும் கொண்டு ஆடினாள் என்கிறார் குமரகுருபரர்.

**அம்மானை**

கழங்காடுகின்ற செய்தியினை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் நூலின் பிற பருவங்களில் இடம் பெறச் செய்வதோடு அதன் வளர்ச்சியாகிய அம்மானை விளையாடலை அம்மானைப் பருவத்தில் விளக்குகின்றார். கழங்கினை மேலே வீசி விளையாடும் அம்மானை விளையாட்டில் முத்தாலும் செம்மணியாலும் ஆகிய கழங்கினைக் கொண்டாடினாள் என்று கூறுகின்றார். இதுபோன்ற விளையாடல்கள் உடலுக்கும் உள்ளத்திற்கும் பயிற்சி அளிக்கும் சிறந்த பணியினைச் செய்கின்றன.

அழகிய மனையில் இருந்து கொண்டு மகளிர் ஆடிய இவ்விளையாட்டினைப் பின்பற்றி இறைவனைத் தலைவனாகக் கொண்டு மணிவாசகர் திருவம்மானை பாடியுள்ளார். 15–ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தத்துவராயரும் அம்மானைப் பாடல் புனைந்துள்ளார். கலம்பகத்திலும் அம்மானை ஓர் உறுப்பாக அமைந்துள்ளது. இராமப்பையன் அம்மானை, மூவரம்மானை, மதுரை வீரன் அம்மானை போன்ற பல கதைப்பாடல்கள் அம்மானை என்ற பெயர் தாங்கியுள்ளன. எனவே இவ் விளையாட்டும் மிகப் பழமையானதொரு நாட்டுப்புற விளையாடலே ஆகும்.

**நீராடல்**

பண்டைக் காலத்தில் தமிழகம் நீர் வளம், நில வளம் கொண்ட நாடாகத் திகழ்ந்தது. எனவே ஏரி, குளம், அருவி, ஆறு போன்ற நீர்நிலைகளில் நீந்தி விளையாடுதலைப் பொழுது போக்காகக் கொண்டிருந்தனர். நாட்டுப்புறச்சிறார்கள் இன்றும் நீர் நிறைந்த ஏரி, குளம் போன்றவற்றில் திடும் என விழுந்து கண்கள் சிவக்க நீண்ட நேரம் நீந்தி விளையாடுதலைக் காணலாம். இவ்வாறு காலம் காலமாக விளையாடி வரும் நீர் விளையாட்டினைத் தம் பாட்டுடைத் தலைவியும் விளையாட வேண்டி மகிழ்வதை நீராடல் எனும் பருவத்தில் அமைந்த பத்துப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

**சிறுதேர் உருட்டல்**

பழங்காலந்தொட்டு இவ்விளையாடல் ஆண் குழந்தை களால் விளையாடப்பட்டு வருகின்றது. மூன்று சக்கரங்களைக் கொண்ட வண்டிகளை அல்லது தேர்களை அகன்ற தெருவீதி களில் குழந்தைகள் உருட்டி விளையாடினர் என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்து உரைக்கின்றன. குழந்தை நடை பழகுதற்கு மூன்று சக்கர வண்டி பயன்படுத்தப்பட்டுள்ளது. அவ்வண்டி மரத்தால் செய்யப்பட்டிருக்கும். பனங் கூந்தலில் உருளை செய்து இரு உருளைகளைக் கம்பினால் இணைத்து வண்டியாக உருட்டி மகிழும் நிலையினையும் கிராமத்தில் காணலாம். அத்துடன் சோழத்தட்டையின் உள்ளே இருக்கும் மென்மையான பழுப்பினால் வண்டி அமைத்து உருட்டி விளையாடுவதையும் காணலாம். பிள்ளைத்தமிழ் நூல்களில் பாட்டுடைத் தலைவன் இறைவன் ஆகையினால் அரசன் போன்றோர் ஊர்ந்து செல்லும் தேர் போன்ற தோற்றம் பெற்ற சிறுதேரினை உருட்டி விளையாடுவதாகப் புனைந்துரைக் கின்றனர். குமரகுருபரரும் தாம் அருளிய முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் நூலில் சிறுதேர்ப் பருவம் எனும் பருவத்தில் முத்துக்குமரனின் அருமை பெருமைகளைக் கூறிச் சிறுதேர் உருட்டி விளையாடுமாறு வேண்டுகின்றார். இவ்விளையாட்டு குழந்தைக்கு நடைப் பயிற்சி அளிப்பதுடன் உடல் பயிற்சி யாகவும் அமைந்து உடல் வலிமைக்கும் உதவுகின்றது எனலாம்.

**முடிவுகள்**

நாட்டுப்புறங்களிலே பொழுது போக்கிற்காக, மட்டுமே விளையாட்டுக்கள் பல விளையாடப்பட்டன. என்றாலும் அவை உடல் வளத்தை அதிகரிக்கின்றன. மன மகிழ்ச்சியினையும், நட்புணர்ச்சியினையும் ஒற்றுமையினையும் வளர்க்கின்றன. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ வேண்டும் என்ற பண்பினையும் ஊட்டுகின்றன. எதிர்வரும் காலங்களில் ஏற்படும் சிக்கலைத் தீர்க்கப் பயிற்சி அளித்து வருங்காலத்திற்கு ஆயத்தப் படுத்துகின்றன. விளையாட்டினால் விளையும் சிறப்பியல்புகளை உணர்ந்த குமரகுருபரரும் அவற்றால் ஈர்க்கப்பட்டுப் பிள்ளைத் தமிழ் நூல்களில் நாட்டுப்புற விளையாட்டுக்களை இடம் பெறச் செய்துள்ளார். பக்தி உணர்வினை ஊட்ட நாட்டுப் புறவிளையாட்டுக்கள் காரணிகளாகின்றன. இறையடியவர்களை நன்னெறிப்படுத்த நாட்டுப்புற விளையாட்டு பயன்பட்டுள்ளது. உள்ளத்தை அலைபாய விடாது ஒருமுகப்படுத்தும் பயிற்சியினை விளையாட்டு வழி அளிக்கின்றார்.

# அடிகளார் கண்ட இறை உருவங்கள்

மா. செந்தில்செல்வக்குமரன், திருநெல்வேலி

மூர்த்தி தலம் தீர்த்தம் எனும் மூன்றையும் சிறப்பித்து நூல் யாப்பது மரபு. இம் மூன்றினுள் மூர்த்தங்களைப் பற்றிக் கூறு மிடத்து திருவுருவ அழகினை, அமைதியினை, சிறப்புக்களை எடுத்துக் கூறுவது நூலாசிரியர் செயலாம். அவ்வழியினைப் பின் பற்றியே சமயக் குரவர் நால்வரும் சிவனின் பல்வேறு கோலங் களை விவரித்தனர். இவர்களுள் முன்னரே சங்க இலக்கியங்கள் ஒரு சில இறை உருவங்களின் அமைதியை எடுத்தியம்பியுள்ளன.

குமரகுருபரர் சிவனின் திருமூர்த்தங்களை அவரின் பல்வேறு வடிவங்களைத் தமது படைப்புகளில் ஆங்காங்கே சுட்டிச் செல் கின்றார். அவ்வகை நூல்களுள்; மதுரைக் கலம்பகத்துள் சிவனின் திருவுருவங்களை எவ்வெவ்வாறு நோக்குகின்றார் எனத் தொகுத்துக் கூறுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

சிவனின் திருவுருவங்களை ரூபம், அருரூபம், அருவம் என்று முன்னிலைகளில் காண்பர் முனியுடையோர். அவற்றுள் அரு ரூபமாக லிங்க வடிவத்தையும், ரூபமாக பல்வேறு திருமூர்த்தங் களையும் குறிப்பிடுகின்றார். தொல்லியல் அடிப்படையில் அரூபம் முதற்படியாகவும், அருரூபம் இரண்டாம் படியாகவும், வளர்ந்த நிலையில் ரூபமாகவும் வழிபாட்டு வளர்ச்சி பெற்றது. ஆனால் முக்தி நிலைக்கு ஏற்ப மேற்சொன்ன மூன்றும் எதிர் நிலை பெற்றது.

அருரூபமாகிய சிவலிங்கத்தைத் தவிர்த்து சிவனின் பல்வேறு திருக்கோலங்களை ஆய்வு செய்து சிவனின் திருவுருவங்களை 112 வகையில் அமைந்துள்ளதாகப் படிமக் கலை வல்லுனர்கள் குறிப் பிட்டுள்ளனர். இவ்வகைகளுள் பல உருவ அமைதிகளைத் தம் பிரபந்த நூல்களில் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார். ஆய்வுப் பகுதியாக எடுத்துக்கொண்ட மதுரைக் கலம்பகத்துள், சண்டேசுவர அனுக்கிரகமூர்த்தி, சந்திரசேகரர், உமாசகித சந்திரசேகரர், காமதகன மூர்த்தி, அர்த்தநாரி, பிக்ஷாடனர்,

நடராசர், சோமாஸ்கந்தர், கஜசம்ஹாரமூர்த்தி போன்ற திருவுருவங்கள் விளக்கிக் கூறப்படுகின்றன.

**சண்டேசுவர அனுக்கிரக மூர்த்தி**

மணலால் அமைத்த லிங்க உருவிற்குப் பாலாபிஷேகம் செய்ததைப் பொறாத தந்தை அவ்விலிங்கத்தைக் காலால் உதைத்தார். தந்தை என்றும் பாராது அருகில் கிடந்த ஒரு தருப்பைப் புல்லால் தந்தையின் காலில் அடிக்க; தருப்பை மழுவாக மாற; தந்தையின் கால் துண்டாயிற்று. சிவத் துரோகம் செய்தது தந்தையேயாயினும் தண்டித்தார். அவரது சிவ பக்தியை மெச்சி அருரூபமாய் இருந்த சிவன் உருவமாய்க் காட்சி தந்து அருள்பாலித்துச் சிவத் தொண்டர்களுக்கெல்லாம் தலைவர் ஆக்கித் தாம் ஏற்றுக் கொண்ட அமுதும், பரிவட்டமும், மலர்மாலையையும் கொடுத்துச் சண்டேசுவரர் பதம் தந்தருளினார் என்பது புராண வரலாறு.

இச்சண்டேச அனுக்கிரக மூர்த்தியை விளக்கு முகமாகச் சில கோயில்களில் கோட்டச் சிற்பமாக வடிக்கப்பெற்றிருப்பதைக் காண முடிகிறது. இச்சிற்பத் தொகுதியில் சிவன் அருகில் வணங்கியமர்ந்திருக்கும் சண்டேசுவரர்க்குத் தலை மாலை சூட்டுவதாக அமைக்கப்பட்டிருக்கும். தஞ்சைப் பெரிய கோயில் மற்றும் கங்கை கொண்ட சோழபுரம் கோயிலின் வடக்குப் புறம் சுவர்ப் பகுதிக் கோட்டங்களில் காண முடிகின்றது. இதே போன்று மதுரை, சுசீந்திரம், காஞ்சிபுரம் போன்ற ஊர்ப் பகுதிகளிலும் காணப்படுகின்றது. இச்சிற்பத் தொகுதி இருக்கும் இடத்தை ஒட்டியே கோமுகத்தின் அருகில் தெற்கு நோக்கிய நிலையில் சண்டிகேசுவரர்க்கென்று தனித் திருச்சுற்றுக்கோயில் அமைக்கும் வழக்கம் ஏற்பட்டது.

இச் சண்டேச அனுக்கிரக மூர்த்தியைத் தம் பாட்டில் குறிப்பிடுகின்ற குமரகுருபர சுவாமிகள்,

"... .... ... மதுரையும் குமரியும்
மலர்த்தாமம்
தம்மினேனெனும் தவப்பயன் பெரிதனும்
தந்தைதாள் எறிந்தார்க்கே" (ம. க. பா. 14)

எனக் குறிப்பிடுகின்றார்.

**சந்திரசேகரர் (அ) உமாசகித சந்திரசேகரர்**

தமது இயல்பான உடையில் தனியாக நின்ற சிவனின் கோலத்தைக் 'கேவல சந்திரசேகரர்' என்றும், உமையோடு நின்ற கோலத்தை 'உமாசகிதசந்திரசேகரர்' என்றும் குறிப்பிடுவர். கங்கையையும், மூன்றாம் பிறைச் சந்திரனையும் கொன்றை மாலையையும் தலையில் சூடிப் பறவைகளின் இறகு களையும் அலங்காரமாகச் செருகி இருப்பது சந்திரசேகரர் திருக்கோலமாகும். இதனை விளக்க வந்த சுவாமிகள்,

"ஆறுதலை வைத்த முடி நீணிலவு எறிப்ப
 எமையாளுடைய பச்சைமயிலோடு
ஈடுமுதல் அற்ற மதுராபுரியில்
 உற்ற பரமேசர் ... ..." (மு. க. பா. 20)

என்ற அடிகளின் வழியே சுவைபடக் கூறியுள்ளார். இம் மூர்த்தம் பெரும்பாலும் சிவன் கோயில்களில் எழுந்திருந்த திருக்கோலமாகச் செய்து வைத்திருப்பர்.

**காமதகன மூர்த்தி**

சிவனின் தவத்தைக் கலைக்க; மலர்க்கணை தொடுத்த காமனைத்(மன்மதனை) தன் நெற்றிக்கண்ணால் சுட்டெரித்தார். இதனை விளக்கும் சிற்பத் தொகுதிக்கு 'காமதகன மூர்த்தி' என்று பெயர். நெற்றிக் கண்ணால் எரித்து சாம்பலான மன்மதனின் மனைவி ரதி கேட்டுக் கொண்டதற்கு இணங்க; உன் கண்களுக்கு மட்டும் தெரியும் வகையில் அருருபமாய்க் காண்பாய் என இறைவன் வரம் நல்கினார் என்பது புராணம். உடம்பில்லாத மன்மதனுக்கு 'அனங்கன்' என்னும் பெயரால் அழைப்பது வழக்கம். நீறான மதன் வேருருக் கொண்டதை விளக்கப் புகுந்த சுவாமிகள் தம் பாடலில்,

'நீறுபடு துட்ட மதன் வேருருவெடுத்து
 அலரினீள் சிலை குனித்து வழிதேன்
ஊறுகணை தொட்டு வெளியே சமர்
 விளைப்பதும் என்னூழ் வினை பலித்ததுவே'
(ம.க.பா. 20)

என்று கூறுவது உற்று நோக்கத் தக்கது. இவ்வாறு காமனை எரித்த இடம் தஞ்சை மாவட்டத்துத் திருக்குறுக்கை வீரட்டானம் எனும் தலமாகும்.

**அர்த்தநாரி**

தேவர்களும் முனிவர்களும் சிவனையும் அம்மையையும் சேர்த்தே வழிபட்டு வருகின்றபோது; பிருங்கிமுனிவர் என்பவர் மட்டும் அம்மையைத் தவிர்த்துச் சிவனை மட்டுமே வலம் வந்து வணங்குவதைத் தம் கொள்கையாகக் கொண்டிருந்தார். இது கண்டு கோபமுற்ற உமையம்மை சதையற்ற உடலாகப் போகும்படி அம் முனிவரைச் சபித்தார். இதனால் என்பு தோலுருக் கொண்ட அம் முனிவர் மேல் இரங்கிச் சிவன்; அவருக்கு மூன்றாவது காலொன்றைக் கொடுத்து வலம் வரச் செய்தார். அம்மை இதனைக் கண்டு இறைவனிடத்தே தம்மையும் அம் முனிவர் சுற்றிவரச் செய்யுமாறு கேட்கின்றார். அதற்காக எடுக்கப்பட்ட உருவமே 'அர்த்தநாரி' உருவாகும். இவ்வுருக் கண்டும் கலங்காத முனிவர் வண்டுருக் கொண்டு உமையொருபாகனின் உடலைத் துளைத்துக் கொண்டு சென்று சிவனை மட்டும் வலம் வந்து வணங்கினார். முனிவரின் அளவிடற்கறியா பக்தி கண்டு மெச்சி உமை அம்மையும் அகமகிழ்ந்து வரம் பல தந்ததாகக் கூறப்படுகின்றது.

இவ்வாறு ஆண் பாதி, பெண் பாதியாகி நின்ற திருக்கோலத்தைக் குமரகுருபரர் தம் பாடலில்,

'செம்பாதி மெய்யும் கரும்பாதியாகத்
திருத்தோளும் மார்பும் வடுப்பட்டது கண்டு'
(ம.க.பா. 28)

என்றும்,

'ஏதமில் நின் திருவுரு வொன்று
ஈருருவாய் நின்றதினும்' (ம.க.பா. 95)

என்றும் கூறி விளக்கி நிற்கின்றார்.

இத்திருக்கோலத்தைக் கல்லிலும் செம்பிலும் வடித்து வழிபட்டனர் தமிழ் மக்கள். இவ்வுருவினைக் கும்பகோணம் திருப்பூந்துருத்தி முதலான இடங்களில் கோட்டத் தெய்வமாகவும், வாசுதேவநல்லூரில் மூலத்தானத் தெய்வமாகவும் காணலாம். செம்புருவில் தஞ்சைக் கலைக் கூடத்துள் இன்றும் காண முடிகின்றது. வடமாநிலத்துப் பாதாமியில் பிருங்கி முனிவரின் உருவம் எலும்புருவாக அஞ்சலித்த கோலத்தில் காட்டப்பட்டுள்ளது.

**பிக்ஷாடனர்**

சிவனைப் போன்றே பிரம்மனுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. அதனால் செருக்குற்று அலைந்த பிரமன் அகந்தையோடு சிவனைப் பழித்து வந்தான். சினங்கொண்ட சிவனோ பிரம்மனின் ஐந்தாம் தலையைக் கொய்யப் பைரவரை ஏவினார். பைரவர் சிரம் கொய்ய; கொய்த சிரம் பைரவர் கையோடு ஒட்டிக் கொண்டது. அது போக்க பிரம்மனிடமே யோசனை கேட்க, பிரம்மகத்தி தோஷம் போக வேண்டுமெனில் பிச்சை எடுத்துத் திருமாலைக் கண்டு வருகவென்றார்.

திருமாலைக் காணச் சென்ற பைரவரைத் திருமாலின் வாயிற் காவலனான விசுவச்சேனன் தடுக்க முற்பட அவனைக் கொன்றார் பைரவர். அப்பாவமும் கங்காளமாகி அவரைச் சேர்ந்தது. இவ்விரு பாவங்களையும் போக்கக் காசியடையத் தீர்ந்தது என்பது புராணம்.

இக் கதையிலும் வேறுபட்ட ஒரு கதை உண்டு. அது; தாருகாவனத்து ரிஷிபத்தினிகள் பற்றியதாகும். அவர்கள் உலக வாழ்வைத் துறந்து ரிஷிகளுடன் இணைந்து தவம் மேற்கொள்கின்றனர். இதனை மாற்றி அவர்களை மீண்டும் உலக வாழ்வில் ஈடுபடச் செய்ய வேண்டும் என்று நினைத்த சிவபெருமான் ஆடையற்ற அழகுடைத் திருமேனியராய்த் தாருகாவனத்து முனிவர்களிடம் பிச்சை கேட்கச் சென்றார். அவர் அழகில் மயங்கிய அவ் ரிஷிபத்தினிகள் உலக வாழ்வில் ஈடுபட்டனர்.

இவ்விரு கதைகளையும் விளக்குமுகமாக மூன்று வெவ்வேறு திருவுருவங்களைப் படைத்தும் செல்வது மரபு. ஆடையற்றுக் கபாலமாலை அணிந்து கபாலம், சூலம் தாங்கி, நின்ற கோலத்தில் நாய் ஒன்று அவரின் பின்னர் நிற்பது போன்ற கோலத்தில் அமைப்பது பைரவர் திருவுருவாகும். இத் திருவுருவினைச் சிறியதாகவோ அன்றிப் பெரியதாகவோ அமைத்துச் சிவன் கோயிலின் வடகிழக்கு மூலையில் தனிச் சன்னதியாக அமைப்பது மரபு.

தாருகாவனத்துள் பிச்சை புக பிச்சைப் பாத்திரம் ஏந்தி ஆடையற்ற நிலையில் நடந்து வரும் கோலத்தில் காட்டப்படுவது. நான்கு கரங்கள் கொண்டும்; தட்டேந்தி வரும் குள்ளச்

சிறு பூதம், துள்ளி நிற்கும் மான் இவற்றுடன் காட்டப்படுவது பிக்ஷாடனர் திருவுருவமாகும்.

ஆடையணிந்து டமருகம் அடித்து வரும் நிலையில் பின்புறம் தோள் பட்டையில் திரிசூலத்தின் கங்காளம் இருக்க நடந்து வரும் கோலத்தில் காட்டப்பெறும். குள்ளச் சிறு பூதமும், மானும் அருகில் உண்டு. சில இடங்களில் ரிஷிபத்தினிகளும் தன்னிலை மறந்து நிற்பது போன்று காட்டப்படுவதுண்டு.

தாருகாவனத்து ரிஷிபத்தினிகள் பின்தொடரப் பிச்சைப் பாத்திரம் ஏந்தி ஆடையற்ற நிலையில் புன்முறுவல் காட்டி வருவதுதான் பிக்ஷாடனர் திருக்கோலம் என விளக்கிக் கூறவந்த சுவாமிகள் இரண்டு பாடல்களில்,

''....கடைப் பிச்சைக்கு இச்சை
பேசும் அப்பிச்சன் எனச் செல்வீர்
கடைக்கண் நோக்கமும் புன் முரலும் உயிர்
கவர்ந்து கொள்ள விடுத்தகபாலிபோல்
பிடித்த சூலமும் கைவிட்டிலீர்....'' (ம. கா. பா. 32)

என்றும்;

''.....பிச்சை என்று நம்மனை
தொறும் திரிவார் பிச்சையிட்ட போது
அதிலோர் பிச்சையும் கொள்ளார்
கொள்கின்றது இங்கு அறிவு நாண் நம்
ஆவியுமே கொலாம்'' (ம. க. பா. 53)

என்றும் கூறுகின்றார்.

இவ்வாறே நடராசர், சோமாஸ்கந்தர், கஜசம்ஹாரமூர்த்தி வடிவங்களையும் பாடுகின்றார் குமரகுருபரர். சிவமூர்த்தங்களைக் கலம்பகப் பாடலுக்கு ஏற்ப குமரகுருபர சுவாமிகள் கையாண்டு கொண்ட விதம் போற்றத்தக்கது. அவர் சிவமூர்த்தங்களைக் கூறும்போது, சாதாரண மூர்த்தம் தொடங்கி, அருள் வழங்கு மூர்த்தங்களும், அழிக்கும் திரு மூர்த்தங்களையும் தமது பாடல்களில் எடுத்துக் காட்டியுள்ளார். சில மூர்த்தங்களைப் பாடும் போது சிற்ப நூல்களில் காட்டப்படுவது போன்று பாடியுள்ள பாங்கு இவருக்குச் சிற்ப நூலில் இருந்த புலமையைக் காட்டுவதாகத் தெரிகிறது. சிவமூர்த்தங்களே யன்றிப் பிற மூர்த்தங்களாக; கணபதி, முருகன், திருமால், உமை எனும் உருவங்களையும் கூறிச் செல்கின்றார்.

# கலிவெண்பா காட்டும் இறைதத்துவம்

த. செல்லம்மாள், தஞ்சை

தாமிரபரணி ஆற்றங்கரையில் பிறந்து – தவழ்ந்து வைகை ஆற்றங்கரையில் வாழ்ந்து – காவிரி ஆற்றங்கரையிலும் கங்கை ஆற்றங்கரையிலும் மடங்கள் அமைத்துத் தமிழோடு சைவத்தையும் வளர்த்தவர் குமரகுருபரர் ஆவார். ஞானச் செல்வர் ஆகிய குமரகுருபரர் திருச்செந்தூர் முருகன் மீது பாடியருளிய நூலே கந்தர் கலிவெண்பா ஆகும். இக்கந்தர் கலிவெண்பா சைவ சித்தாந்தத்தின் சாரமாக அமைந்துள்ளது. 'குட்டிக்கந்தபுராணம்' இதனுள் இடம்பெற்றிருக்கிறது என்று கூறும் அளவுக்கு முருகனின் தோற்றத்தை அழகுறச் சித்திரிக் கிறது.

குமரகுருபரர் ஐந்து வயது வரை பேச்சாற்றல் இன்றி இருந்து திருச்செந்தூர்க் குமரன் அருளால் பேசும் திறம் வரப்பெற்றார். ஊமைத்தன்மை நீங்கப்பெற்று முதலில் பாடியது கந்தர் கலிவெண்பாவையே. மதுரை மடத்தில் தங்கி இருக்கும்போது மீனாட்சியம்மை குறம், மீனாட்சி அம்மை இரட்டை மணிமாலை ஆகிய நூல்களைப் பாடினார். திருவாரூரில் திருவாரூர் நான்மணிமாலை பாடினார். சைவ சமயத்தை நிலைநாட்ட காசியில் மடம் அமைத்து சைவ சித்தாந்தத்தை வடநாட்டினர் அறிவதற்கு உதவினார்.

கந்தர் கலிவெண்பா, கலிவெண்பா யாப்பில் பாடப்பெற்ற நூலாகும். இந்நூல் நூற்று இருபத்து இரண்டு கண்ணிகளை உடையது. வழிபாட்டு நூலாக அமையும் தகுதியை உடையது. சாத்திரமணம், தோத்திர மணம், வழிபாட்டு மணம் என மூன்றும் ஒருங்கே அமையப் பெற்றுள்ளது. முத்தி அடைவதற்குரிய வழிமுறைகளையும் அறியக் காட்டுகிறது.

**சாத்திரமணம்**

சைவ சமய சாத்திரம் கூறும் இறை (பதி), உயிர் (பசு), தளை (பாசம்) என்னும் முப்பொருள்களின் இயல்புகளைத்

தெளிவாக விளக்குவது கந்தர் கலிவெண்பா. இம்முப்பொருள் களின் உண்மையினை எளிமையாக விளக்குகிறது.

உயிர்வினைகளில் கட்டுண்டு நிற்பது, உடலால் வாழும் நிலையினை சகலநிலை என்றும் வினைநீக்கம் பெற்று, இறை இன்பத்தைப் பெறுவதே சுத்த நிலை எனவும் விளக்குவர், சாத்திரநூல் அறிஞர்கள். உயிர்கள் தங்களைப் பிடித்துள்ள மும்மலக் கட்டினின்றும் நீங்கி இறைவனடி பெற இறையருளே துணை நிற்கிறது.

இறைவன் ஒருவன் உளன். அவனை அடைவதே உயிர் பெறும் பயன் ஆகும். திருவள்ளுவரும்,

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழஅர் எனின்"

என்று இறைவனை வணங்குவதே சிறந்தது என்கின்றார். இறைவனை மனம், மொழி செயல்களால் வழிபட்டு வருதலே உயிர்க்கு உரிய கடமையாகும். ஒருவன் பிறவி எடுத்ததன் பயன் அதுவேயாகும்.

இறைவன் ஆகிய முருகனது ஆறெழுத்து மந்திரம் சிறப்பாகப் பேசப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| திருப்பரங்குன்றம் | – | மூலாதாரம் | சகர ஒலி அமைவும் |
| திருச்செந்தூர் | – | சுவாதிட்டானம் | ரகர ஒலி |
| திருவாவிளங்குடி | – | மணிப்பூரகம் | வகர ஒலி |
| திருவேரகம் | – | அனாதகம் | ணதர ஒலி |
| குன்றுதோராடல் | – | விசுத்தி | பகர ஒலி |
| பழமுதிர்ச்சோலை | – | ஆஞ்ஞை | வகர ஒலி |

தோத்திர நூலாக இது அமையும்.

சிவனுக்குரிய மந்திரம் ஐந்தெழுத்து (சிவாயநம) முருகப் பெருமானுக்குரியது ஆறெழுத்து மந்திரம் (சரவணபவ). இந்நூலில் இவ்விரண்டும் விரித்துக் கூறப்பெற்றுள்ளன.

மனம், மொழி, மெய் என்று மூன்றினால் உயிர்கள் செயல்படுகின்றன. இதைப்போன்றே இறைவனும் விருப்பாற்றல் (இச்சாசக்தி), அறிவாற்றல் (ஞானசக்தி), தொழில் ஆற்றல் (கிரியாசக்தி) ஆகிய மூவகை ஆற்றல்களால் உயிர்களை ஒடுக்கியும் காத்தும் பனடத்தும் வருகின்றான்.

இறைவனுக்கு உரிய விருப்பம், அறிவு, தொழிற்பாடு ஆகிய மூன்று ஆற்றல்களால் ஒடுக்கம், நுகர்வு, செயற்பாடு ஆகிய மூவகைச் செயல்களைச் செய்பவனாக விளங்குகிறான்.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் இறைவனுக்கே உரியன. உயிர்களை இறைவன் சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றிலும் படிப்படியாகச் சேர்ப்பித்து அவற்றின் துணையால் சாலோகம், சாமீபம், சாரூபம் என்றும் மூவகைப்பத முத்திகளையும் நுகரச் செய்து அதனால் தெளிந்த அறிவை மேலும் விரிவடையச் செய்து நால்வகையான அருட்பதிவை வழங்குவதற்கு நல்வினை, தீவினை என்னும் இருவினைகளையும் ஒப்பக்கருதும் காலம் உண்டாகி ஆணவ மலம் ஒழிதற்குரிய பக்குவநிலை வரும் வரை இவ்வாறு உயிர்கள் பன்னெடுங்காலமாகப் பிறந்து இறந்து வருந்துதலை அருட்கண்ணால் நோக்கி அருள் பாலிப்பதும் இறைவன் ஆவான்.

உயிர்களுக்கு வரும் தன்முனைப்பும், எனது எண்ணும் பொருள் விருப்பும் நீங்கிய இடமே திருவடியாகவும் இறைவனது திருவருளே திருமேனியாகவும் கருணை சிவந்த கைம்மலர்களா கவும், பொருந்திய இப்பேருலகமே திருக்கோவில் ஆகவும் கொண்டு பேரொளிப் பிழம்பு ஆக விளங்குபவன் இறைவன்.

**ஆணவமலம்**

ஆணவமலத்தை இருள் மலம் என்பது வழக்கம். இருள் மற்றைய பொருள்களை அடையாளம் காட்டாது; தன்னை யேனும் காட்டும். ஆணவம் தன்னையும் வெளிப்படுத்தாது. பிறவற்றையும் அறிந்து கொள்ளவிடாது. உயிர்களுக்கு வரும் துன்பத்திற்கு எல்லாம் காரணமாய் இருப்பது ஆணவமாகும். மும்மலங்கள் உடையாரை சகலர் என்று ஞானநூல்கள் கூறும். அவர்களுள் சகலர்க்கு அருளுமாற்றை முக்கண்ணையும் மழுப்படையையும் உடைய சிவன் ஆகவந்து அருளி ஆணவம், கன்மம், மாயை என்று கூறப்படும் கட்டுக்களாகிய வேர் அறுத்துத் திருவருள்பாலிப்பவன் இறைவன். அவனே நிறைவான வீடு பேற்றினை அளிக்கக் கூடியவன்.

''யான்எனது என்னும்செருக்கு அறுப்பாள் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்''

என்று திருவள்ளுவ நாயனார் கூற்றுப்படி தனக்குரிய பற்றும் தான் என்னும் எண்ணமும் நீங்கப் பெற்றால் திருவருட் காட்சி புலன் ஆகும்.

உயிர்கள் சரியை, கிரியை, யோகம் செய்யவே உயிர் ஞானம் பெற்றுவீடுபேறு அடையும். உயிர்கள் பிறந்து பிறந்து வருவதனை காற்றாடியும் வண்டியின் உருளையும் போல சுழன்று வருவது போல உவமை காட்டுகிறார் குமரகுருபரர். பலவகைப் பிறப்பால் பிறந்து இணைந்த உயிர்கள் இறுதியில் வீடுபேறு பெறுதற்குரிய நிலையை வந்து பெறும்.

**எண்வகை வடிவினை உடையவன்**

"தொண்டுபடும் ஆவிப்புலனுக்கு அறிவு அளிப்ப
ஐந்தொழிலும்
ஏவித்தனி நடத்தும் எங்கோவே - மேவ
வரும் அட்டமூர்த்தமாம் வாழ்வே (64-65)

நிலம், நீர், காற்று, விண், கதிரவன், சந்திரன், உயிர் என்னும் எட்டு உருவோடு கூடிய திருவுருவமாம், "வானாகி மண்ணாகி" எனவரும் திருவாசகப்பாடலும் இறைவனது உருவத்தை விளக்க எழுந்ததுவே. உலகமே உருவமாகக் கொண்டவன் இறைவன். பலகோடி அண்டங்களையும் உருவமாகக் கொண்டவன். சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணினின்றும் ஒருங்கே ஆறு நெருப்புப் பொறிகளை வெளிப்படுத்த, காற்றின் கடவுளிடம் இறைவன் எடுத்துச் செல்ல அருள அவனும் தீக்கடவுளிடம் கொடுத்து, அவனும் குளிர்ந்த கங்கை நதியில் இட அக்கங்கையும் ஒருசிறிது நேரம் கூட அவ்வெம்மையைத் தாங்க முடியாமல் அவ்வழற் பொறிகள் ஆறும் ஆறு இளங்குழவிகளாய் கார்த்திகைப் பெண்களால் அமுதூட்டப் பெற்று உமையம்மை தன் இருகைகளாலும் ஒருசேர அணைத்து எடுப்ப, ஆறு திருவுருவங்களும் ஒன்றாகப் பொருந்திக் கந்தர் எனும் திருப் பெயர் பெற்றது. உமையும் சிவனும் உளம்மகிழுமாறு உயர்ந்து விளங்கும் பெருமான் முருகனின் சிறப்பினைக் குமரகுருபரர்,

"சைவத்தின் இளங்கொழுந்தே! மழைவேண்டுழி உதவும் தெய்வயானையைத் திருமணஞ் செய்து கொண்டவனே! சூரனை அழித்த வீரஞ் செறிந்த வேலினை உடையவனே!" என்றெல்லாம் புகழ்ந்து கூறுகிறார்.

### முருகன் தோற்றம்

இறைவன் கருணைமிக்கவன். கதிரவனிடமிருந்து அதன் ஒளி பிரிக்கப்படாதிருப்பது போல இக்கருணை என்றும் பிரிக்க இயலாதது. இறைவன் விருப்புவெறுப்பு அற்றவன். உயிர்கள் வினையைத் தீர்த்தற்குரிய ஒருமுகம். அதுவே சூரபதுமனையும் அவனைச் சார்ந்தவர்களின் உயிரையும் போக்கிய வீரத்திருமுகம். உயிர்களுக்கு பழவினைகளைப் போக்கி அழியாத பேரின்பப் பெருவாழ்வைத் தந்தருளும் சிவந்த தாமரை மலர் போன்ற திருமுகம், உயிர்களின் ஆணவ இருளை ஓட்டிய ஒளி பொருந்திய முகமும், வள்ளிக்கும் தெய்வயானை அம்மைக்கும் ஆர்வ மிகுக்கின்ற திருமுகமும், தன்னையே பற்றுக்கோடாக எண்ணி வந்து நிற்கும் அடியவர்கள் மனம் மகிழுமாறு வேண்டிய வரங்கள் பலவற்றை வழங்கும் தெய்வத்தாமரை போன்ற திருமுகமும் ஆகிய ஆறு திருமுகங்களை உடையவன் முருகன்.

### முருகனுக்கு உரிய இருமலர்கள்

கடம்பமலரும், குராமலரும், முருகனின் வலிமைமிகு தோள் களை அலங்கரிப்பன. முருகன் உயிர்கட்கு நுகர்வையும் (போகம்) ஞானத்தையும் (யோகம்) ஒருங்கே வழங்கவல்லவன். கடம்ப மலரும் குராவும் இவற்றின் அடையாளங்கள் சாவா மருந்தாகிய நிறைந்த அமிழ்தத்தைத் தேவர்க்கு வழங்கும் திருக்கை ஒன்றும், தேவமகளிர் அன்போடு அணுக அவர்களைத் தழுவிக் கொள்ளற் கென அமைந்த மென்மையான திருக்கை ஒன்றும், பூமாலைகள் அணிந்த திருக்கை ஒன்றும், திருமார்பில் வைத்து அருளிய திருக்கை ஒன்றும், உடுக்கையைக் கொட்ட கரமும் குங்கில் வைத்த திருக்கை ஒன்றும், ஒலியெழுப்புதற்குரிய மணியைப் பிடித்திருக்கின்ற கையும், போர் செய்தற்குரிய அங்குசம் பிடித்த கை ஒன்றும் அடைந்தும், கேடயப்படையைத் தாங்குகின்ற அழகிய திருக்கை ஒன்றும், வாளைப் பிடித்த திருக்கை ஒன்றும் வேலைப் பிடித்த திருக்கைஒன்றும், மழைபொழிதற்கு உதவுகின்ற திருக்கை ஒன்றும் ஆக பன்னிரண்டு திருக்கைகளும் உடையவன் முருகன்.

ஓர் இலக்கம் கோடி இளங்கதிரவர்கள் ஒளிபரப்பினாற் போல ஒளிமிகுந்த தெய்வத்தன்மை வாய்ந்த திருமேனியை உடையவர். அன்பர்களின் அகத்தாமரையில் வீற்றிருக்கும்

விளக்கொளியானவனே! தெய்வத்தன்மை மிக்க முருகனை யாரொருவார் உங்குவார் உள்ளத்து உள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற திறமும் தோன்றும் என்று அப்பர் அடிகளின் கூற்றுப்படி நினைப்பவர் நினைத்த வடிவில் முருகன் விரைந்து சேரும் இயல்பினன்.

அரச உறுப்புக்களை தசாங்கம் என அழைப்பது மரபு. அரசர்க்குரிய அரச உறுப்புக்கள் பத்தினையும் புலவர்கள் புகழ்ந்து போற்றுதல் மரபு.

மலை, நதி, நாடு, ஊர், வளைதார், இவுளி, கொலைமத களிறு, கொடி, முரசு, ஆணை என வரும் இலக்கண விளக்கப் பாட்டியல் சூத்திரத்தால் இப்பத்து உறுப்புக்களையும் அறியலாம். இப்பத்து உறுப்புக்களும் முருகனுக்கு உரியதாக அமைத்துப் பாடுகிறார் குமரகுருபரர்

இம்மைப் பிறப்பினை இருவாதனை அகற்றி மும்மை பெரு மலங்களையும் நீக்கி ஒழுக்கமுடன் கூடிய அறிவையும் தந்து உதவுபவன். இத்தகைய முருகனை மன ஒருமையுடன் வணங்கு வதால் பேரின்ப நிலை அடையலாம் என்பதே கந்தர் கலிவெண்பா காட்டும் உண்மையாகும்.

# குமரகுருபரரும் தாயுமானவரும்

கு. சேகர், தருமபுரம்

சைவ சமயத்தில் இறைவனிடம் முழுநம்பிக்கை வைத்து, தாம் செய்கின்ற எச்செயலும் இறைவனின் செயல் என்ற எண்ணத்துடனும் மன உறுதியுடனும் செயல்படுகின்ற தூய தொண்டுள்ளம் கொண்டவர்கள் சிவனடியார்கள். இவர்கள் பிறர் துன்பத்தைத் தன் துன்பமாக ஏற்று, அதற்குத் தீர்வும் கண்டவர்கள்.

"அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தந்நோய்போற் போற்றாக் கடை" (குறள்–315)

எனும் குறள் வழி வாழ்ந்தவர்கள். இவ்வுலகில் வாழும் உயிர்களின் நலன்நோக்கியே இவர்களின் தவம் தொடர்ந்தது; சிவனையும் சிவநேசர்களையும் போற்றி வாழ்வதே தம் தொண்டாகக் கொண்டவர்கள். இச்சிவனடியார்களின் வரலாற்றைப் பெரியபுராணம் தொகுத்துக் கூறுகிறது. இது போன்றே குமரகுருபரரும் தாயுமானவரும் சில சிவனடியார்களைத் தத்தம் நூல்களுள் குறித்துப் போற்றுகின்றனர். இவ்விரு ஆசிரியர்களும் போற்றும் சிவனடியார்கள் யாவர்? அவர்களது தொண்டை இவர்கள் காணும் முறை யாது? திறன் யாது? வேறுபடும் நிலை யாது? என்பன குறித்து காண்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

**சிவனடியார்கள் யார்?**

"அளவிலா பெருமையராகிய
அளவிலா அடியார் புகழ் கூறுவேன்" (தி. தொ. பு. 2)

எனச் சேக்கிழார் குறிப்பது போல் இவர்கள் அளவற்ற பெருமைக்குரியவர்கள். இவர்கள் முப்போதும் திருநீறு பூண்டவர்கள்; திருநீறு போன்றே புனிதமுடைய மனம் கொண்டவர்கள். நாளும் ஐந்தெழுத்து மந்திரமாகிய 'சிவாயநம' எனும் திருநாமத்தை ஜெபிப்பவர்கள். இவர்களின் இயல்பு பற்றி,

"பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓதுகாதல் உரைப்பின் நெறிநின்றார்
கோதி இலாத குணப்பெருங் குன்றனார்".

(தி. தொ. பு. 8)

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்." (தி. தொ. பு. 9)

எனப் பாராட்டுவர். எனவே, இறைவனை மறக்காத நெஞ்சும்; எப்பொருள் மேலும் ஆசையறா உளமும்: வற்றாத அன்பும் கொண்ட குணப்பெரும் குன்றாக அமைபவர்கள் ஆவர். எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் வாழ்ந்தவர்கள். இறை தொண்டு, மக்கள் தொண்டு எனும் கோட்பாட்டைக் கொண்ட பெருமைக்குரியவர்கள்.

**சிவனடியார் பெருமைகள்**

ஒருமுறை ஔவையும் முருகப் பெருமானும் சந்திக்க நேர்ந்தது. அப்பொழுது, முருகப் பெருமான் ஔவையிடம் கேட்டார். ஔவையே! 'உலகில் மிகப்பெரியது எது'? என்றார். ஔவை பல்வேறு பொருள்களைக் கூறி இறுதியில் எல்லாம் 'மாதொரு பாகராகிய இறைவர்தான்' என முடித்தார். முருகர் மீண்டும் 'இறைவன் தான் மிகப் பெரியவரா?' எனக் கேட்டார். "இல்லை, இல்லை, இறைவரோ தொண்டருக்குள் ஒடுக்கம். தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிது" என்றார். ஔவையாரின் இவ்வாக்கால் அடியவர்களது அளப்பரிய பெருமையை அறியலாம்.

பெரியபுராணத்தில் இறைவன் தம் அடியார்களது பெருமையை,

"பெருமையால் தம்மை ஒப்பார்;
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்;
ஊனமேல் ஒன்று மில்லை;
அருமையாம் நிலையில் நின்றார்;
அன்பினால் இன்பம் ஆள்வார்

(தி. தொ. பு. த. பு. 196)

என அருள்வதால் அடியார்களது சிறப்பை உணரலாம். மேலும் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு அடியேன் (த. பு. 193) என்றும், 'தொண்டர் அன்பெனும் தூயநீர் ஆடுதல் வேண்டி (அ. பு. 19 : 1) எனவும் வரும் தொடர்கள் வழி இறைவன் எத்துணை அளவிற்கு அடியார்களை விரும்பிப் போற்றியுள்ளான் என்பது எண்ணத்தக்கது.

**தாயுமானவரும் குமரகுருபரரும்**

ஸ்ரீவைகுண்டத்தில் அவதரித்த குமரகுருபரரும், திருமறைக் காட்டில் அவதரித்த தாயுமானவரும் சிறந்த இலக்கிய வாதிகள் மட்டுமல்லர் நிறைந்த சிவயோகிகளுமாவர். இவ்விரு ஆசிரியர் களும் தம் மனம் கவர்ந்த அடியவர்களது பெருமையைத் தத்தம் நூல்களில் குறிப்பிட்டு பாடியுள்ளனர்; போற்றியுள்ளனர்.

**குமரகுருபரர் குறித்துள்ள சிவனடியார்கள்**

இவர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர், சாக்கிய நாயனார், சண்டீசர், கண்ணப்ப நாயனார் முதலியோரைத் தம் நூல்களில் குறித்துள்ளார்.

**தாயுமானவர் குறித்துள்ள சிவனடியார்கள்**

இவர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர், பட்டினத்தார், திருமூலர், சித்தர்கள், சிவபக்தர்கள் முதலியோரைத் தம் நூலுள் குறித்துள்ளார்.

**குமரகுருபரரும் தாயுமானவரும் சிவனடியார்களைப் போற்றும்முறை**

**திருஞானசம்பந்தர்**

திருஞானசம்பந்தரைக் குமரகுருபரர் 'கழுமல மதலை யென்றும்', 'கவுணியர் பெருந்தகையென்றும்', 'புகலியர் குரிசி லென்றும்' பாராட்டுவர். மேலும், ஞானசம்பந்தர் தம்மூன்றாவது வயதில் ஞானப்பால் உண்டது; திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றது; வையையில் ஏடு எதிரே வரச் செய்தது; பாண்டிய நாட்டில் அமணரை வாதில் வென்றது, எனும் நான்கு நிகழ் வினையும் குறித்துப் பேசுகிறார்.

இங்கு குமரகுருபரர் ஞானசம்பந்தரை மூன்று தொடர் களால் குறிப்பிடுகிறார். அவற்றுள் முதலாவது புகலியர்குரிசில்

என்பதாகும். இத்தொடர் 'சீர்காழியில் அவுணர்களின் கொடுமைக்கு அஞ்சி, தேவர்கள் கந்தவேளைத் தந்தருளுமாறு புகலிடமாகப் புகுந்தார்கள். அதனால், இந்நகர் "புகலி" என்றாயிற்று. புகலியில் புகுந்த தேவர்கள் 'புகலியர் என்றாயினர். இப்புகலியர் போற்றுகிற அருளாளராக விளங்குபவர் சம்பந்தராவர். அதனால், இவரைக் குமரகுருபரர் 'புகலியர்குரிசில்' எனப் பாராட்டுகிறார்.

இரண்டாவது 'கழுமல மதலை' என்னும் தொடராகும். உரோம முனிவர் பூசித்து ஞானோபதேசம் பெற்று உலகில் உள்ள உயிர்களின் மலங்களைக் கழுவும் வரம் பெற்றார். அதனால் சீர்காழி 'கழுமலம்' எனப்பெயர் பெற்றது. எனவே, அத்தகைய தலத்தில் பூத்த ஞானக்குழந்தையாகிய சம்பந்தரைக் 'கழுமல மதலை' எனப் பாராட்டுகிறார்.

மூன்றாவது, 'கவுணியர் பெருந்தகை' என்னும் தொ டராகும். அந்தணர்'குலத்தில் மறைகளைக் கைப்படுத்திய பெருமையுடைய கவுணியர் கோத்திரத்தில் பிறந்த காரணத்தால் 'கவுணியர் பெருந்தகை' எனக் குறித்து குமரகுருபரர் போற்றுகிறார்.

மேலும், திருஞானசம்பந்தர் வாழ்வியலில் நடந்த நான்கு நிகழ்வுகளை மேற்காட்டியவாறு குமரகுருபரர் குறித்திருப்பதன் காரணம், அவை சம்பந்தர் வாழ்வில் பெரும் திருப்பத்தையும் சிறப்பையும் உருவாக்கியவையாகும். அவை,

1. **ஞானப்பால் உண்டது:** திருஞானசம்பந்தர் சீர்காழியில் அகிலாண்டேசுவரியாகிய ஆதிசக்தியின் அருளால் ஞானப்பால் உண்டதால்தான் ஒப்பற்ற கலை ஞானத்தையும் உணர்தற்கரிய மெய்ஞ்ஞானத்தையும் பெற்றார்.

2. **பொற்றாளம் பெற்றது:** திருக்கோலாக்காவில் பொற் றாளம் பெற்றமை, ஞானசம்பந்தர் தம் பாடலை இசையோடு பாடவேண்டும் என இறைவன் விரும்பியமையைக் காட்டுவ தாகும்.

3. **ஏடு எதிர்த்து வந்தமை:** வையை ஆற்றில் சம்பந்தர் எழுதி இட்ட ஏடு எதிர்த்து வந்த செயல், சம்பந்தரின் தமிழ் ஞானத்தையும் சிவஞானத்தையும் வெளிப்படுத்தியமை ஆகும்.

**4. சமணரை வாதில் வென்றது:** பாண்டிய நாட்டில் தம்மோடு வாதிட எவரும் கிடையாது எனும் ஆணவத்திலிருந்த சமணரை வாதில் வென்ற செயல் 'சைவம் தலையாய சமயம்' என்பதை உறுதி செய்தமை ஆகும். எனவே, குமரகுருபரர் குறிக்கும் இந்நான்கும் ஞானசம்பந்தரில் வாழ்வியலில் விளைந்த பெருமாற்றங்கள் அல்லது திருப்பங்கள் எனலாம். இக் காரணத்தில்தான் குமரகுருபரர் குறிப்பாக இந்நான்கினையும் எடுத்து உரைத்துள்ளார் எனலாம்.

தாயுமானவர் சம்பந்தரைக் குறித்து,

> ''வெப்பந் தீர்த்(து) உலகாள் வேந்தன் திருஞான
> சம்பந்தனை யருளாற் சாரு நாளெந்நாளோ''
>
> (தாயுமானவர், அடியார் வணக்கம், பா. 1)

உலகத்து சிவனடியார்களையெல்லாம் ஆட்கொள்ளும் ஆளுடைய பிள்ளையாக விளங்குபவர் சம்பந்தர். எனவே, சம்பந்தரை, சிவஞானத்தை உலக உயிர்களோடு சம்பந்தபடுத்துவராக, இறைத்தூதராக எண்ணுகிறார் தாயுமானவர்.

குமரகுருபரர் சம்பந்தரின் பெருமைக்கும் சிறப்புக்கும் காரணமான நிகழ்வுகளைக் குறித்துக் காட்டி போற்றுகிறார். தாயுமானவரோ, 'ஆட்கொள்ளும் அருளாளர்' என அருட் திறத்தை மட்டுமே குறித்துப் பேசுகிறார்.

**திருநாவுக்கரசர்:** குமரகுருபரர் நாவுக்கு அரசராகிய திருநாவுக்கரசு பெருமானின் சிறப்புக்களைக் குறிப்பிடுவதற்கு மாறாக, வாகீசர் எனப் போற்றப்படும் அவரின் வாக்கினைத் தம் பாடலில் பின்பற்றியுள்ளார். அவை,

> ''பொன்னார் திருவடிக் கொன்றுஉண்டு விண்ணப்பம்''

எனும் நாவுக்கரசர் தொடரை,

> ''பொன்னடிக் கொன்றிது பன்னுவன் கேண்மதி'' (469)

எனவும்,

> ''முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி''

என்னும் தொடரை ''மூலலிங்கம்'' (140, 206) எனத் தம் பாடல் களில் பதிவு செய்துள்ளார்.

தாயுமானவர், நாவுக்கரசரின் பெருமைக்கும் சிறப்பிற்கும் காரணமானத் தொண்டினைப் போற்றுகிறார். 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என உழவாரம் கொண்டு திருக்

கோவில்களைத் தூய்மை செய்த தூய நெறியாளர் என்பதையும், சிவபோகத்தைத் தனக்கு உரிமையாகக் கொண்டவர் என்பதையும் நினைந்து போற்றுகிறார். குமரகுருபரர் வாக்கைப் போற்ற, தாயுமானவர் செயலைப் போற்றுகிறார்.

**சுந்தரர்:** ஆரூராகிய சுந்தரரை 'நாவலர் பெருமான்', 'ஒரு பெரும் புலவன்' 'பாவலன்' எனவும் உரைக்கிறார் குமரகுருபரர். இறைவன் சுந்தரரிடம், "சுந்தரா" அர்ச்சனைப் பாட்டேயாகும்! எனைச் சொற்றமிழில் பாடுக! என விரும்பி கேட்டுள்ளார். எனவே, சுந்தரரைக் குமரகுருபரர் மேற்கண்ட தொடர்களால் புகழ்வது பொருத்தமானதாகும். மேலும், திருத்தொண்டத் தொகை பாடியது, ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தில் தேடியது, சிவபிரானை இருமுறை பரவையர்பால் தூது அனுப்பியது முதலிய செய்திகளைக் குறிப்பிடுகிறார்.

சுந்தரமூர்த்தி நாயனாரின் பெரும் சிறப்புக்களுள் ஒன்று அடியார் பெருமையைக் குறித்து, அவர் பாடிய திருத்தொண்டத் தொகையாகும். மேலும், அவர் அடியார்க்கும் அடியவராக இருந்து, சிவனடியார்களின் உயர்வினை உலகுக்கு உணர்த்திய பெரும் செயலாகும். பிற இரு நிகழ்வுகளும் சுந்தரருக்குப் பெருமான் எவ்வெவ் வகையெல்லாம் ஓடிவந்து எளிவந்த கருணையாளனாக அருள் புரிந்த செயலை விளக்குவதாகும்.

தாயுமானவர், சிவனடியார்களின் சொல்லில் மயங்கும் பித்தர் சிவபெருமான் என அறிந்து, 'சொற்றமிழ் மாலை பாடிய தமிழிலே வல்லவர் சுந்தரர்' எனவும் பரவைபால் பெருமானைத் தூது அனுப்பியவர் எனவும் போற்றுகிறார்.

இவ்விரு ஆசிரியர்களுமே சுந்தரது செந்தமிழையும், அவர் பெருமானைத் தூது அனுப்பிய உரிமைச் செயலையும் புகழ்ந்துள்ளனர்.

**மணிவாசகர்:** மணிவாசகர் என்றாலே அவரது மணிவாசகமாகிய திருவாசகம் தான் நினைவுக்கு வரும். குமரகுருபரரும் அவரது வாசகத்தைப் 'பைந்தமிழ் நவின்ற செந்நாப்புலவன்', 'சொற்றமிழ் விரகன்' என்றும், கோவையைக் 'காமஞ்சான்ற ஞானப்பனுவல்' என்றும் போற்றுகிறார். மேலும் சிவபெருமானைக் குதிரை வீரராக வரச் செய்தது; ஊமையைப் பேச வைத்தது; திருக்கோவையாருக்குப் பொருள் தில்லைப் பெருமான் என்றது முதலியனவற்றை மணிவாசகரின் அற்புத செயல்களாகக் குறிக்கிறார்.

மணிவாசகரிடத்து இறைவன் கொண்ட அருள் நிலையும் மணிவாசகரது அருளாற்றலும், தில்லைப் பெருமானைத் தன் வாக்கின் பொருளாகக் கொண்ட அன்புள்ளமும் இத்தொடர்களின் குறிப்புடைப் பொருளாக விளக்கப்படுகிறது.

தாயுமானவர், பௌத்தரை வாதில் வென்று தில்லையை 'ஞானமயமாகிய ஊர்' என அறிய வைத்தவர் என மணிவாசகர் பெருமையை உரைக்கிறார்.

இவ்விரு ஆசிரியர்களுமே மணிவாசகரின் வாக்கினைப் போற்ற தவறவில்லை. குமரகுருபரர் மணிவாசகரின் பல்வேறு சிறப்பினை எடுத்துரைக்கிறார். தாயுமானவரோ ஒன்றினைக் கூறுவதோடு நின்று விடுகிறார்.

**பிற சிவனடியார்கள்**

குமரகுருபரர் சாக்கிய நாயனார், சண்டீசுவரர், கண்ணப்ப நாயனார் போன்றோரின் அருளார்ந்த வாழ்வை அறியத் தருகிறார். தாயுமானவர், திருமூலர், பட்டினத்தார் முதலியோரின் ஞானவாழ்வின் நலமுரைக்கிறார்.

**முடிவுரை**

குமரகுருபரர், தாயுமானவர் இருவரும் இறையருள் பெற்ற ஞானிகள். இவர்கள் தம்மைப் போன்ற சிவநேசர்களை, சிவனருள் பெற்ற அடியவர்களை வணங்குவதிலும் போற்றி பரவுவதிலும் பேரார்வம் கொண்டுள்ளார்கள் என்பது அவர்களின் பேருள்ளத்தைக் காட்டுவதாகும்.

திருத்தொண்டர்கள்பால் எத்தனை பெருமதிப்புடையவர் குமரகுருபரர் என்பதை, 'விண்மிசையுலகையும் வேண்டார்', 'யமபயம் இல்லாதவர்', 'சிவஞானிகளை விழித்துறங்கும் தொண்டரெனவும்' புகழப்படும் உரைகளில் இருந்து அறியலாம்.

மேலும்,

"நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்குண்டோ பெறத் தகாதனவே" (460)

எனச் சிவனடியார்களின் தொடர்பால் பெறும் பயனையும் குமரகுருபரர் நினைந்து போற்றுகிறார்.

தாயுமானவர் சிவனடியார்களைக் குறிப்பாகப் போற்றி னாலும், அவர்களின் திருவருளுக்கு எங்கும் அடியவராகத் தன்னை அடையாளம் காட்டுகிறார். எனவே, இருவரும் சிவனடியார்களை வணங்குவதில் இருகரமாக இணைந்திருக் கிறார்கள் எனக் கூறுதல் பொருத்தமுடையதாகும்.

# குமரகுருபரரின் மொழி நடை

தூ. சேதுபாண்டியன், மதுரை

கண்ணைக் கவரும் வண்ண வண்ண ஓவியங்களை வரையும் ஓவியக் கலைஞனுக்கு வண்ணக்கலவை எப்படிப் பயன்படு கிறதோ; எண்ணத்தைக் கவர்ந்திழுக்கும் எழிலார்ந்த சிற்பக் கலைஞனுக்குக் கல் எப்படிப் பயன்படுகிறதோ; அவ்வாறே கருத்தைக் கவரும் இலக்கியப் படைப்பாளிக்கு மொழி பயன்படு கின்றது. மொழியின் சிறப்புப் பயன்பாடே இலக்கியமாகிறது. அதனால்தான் இலக்கியத்தை மொழிசார் கலை (Verbal art) என்கின்றனர். மொழிசார் கலையான இலக்கியம் மொழியால் அமைந்ததே எனினும் மொழியால் அமைவது எல்லாம் இலக்கியம் ஆவதில்லை. ஏனெனில் மொழியை அன்றாடம் நாம் பேசுவதற்குப் பயன்படுத்துவதிலிருந்து இலக்கியங்களைப் படைப்பதற்குப் பயன்படுத்தும் முறை சற்றே வேறுபட்டது. அவ்வாறு இலக்கியப் படைப்புக்கு மொழியைக் கையாள்வதில் ஒவ்வொரு படைப்பாளியும் மற்றவர்களிலிருந்து வேறுபடு கிறான். இவ்வேறுபாடே ஒரு படைப்பாளியின் மொழிநடையை இனங்காணுவதற்குத் துணை புரிகிறது. ஒரு படைப்பாளி தன் படைப்பினை உருவாக்கும்போது மொழியைக் கையாளும் திறனே மொழி நடையாகும். இந்த வரையறையின் அடிப்படையில் குமரகுருபரரின் மொழி நடையை விளக்க முயல்கிறது இக்கட்டுரை.

இந்த ஆய்வுக்குக் குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பா, கயிலைக் கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணி மாலை, மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, சிவகாமி யம்மை இரட்டை மணிமாலை, பண்டார மும்மணிக்கோவை, காசிக் கலம்பகம், சகலகலாவல்லிமாலை ஆகிய நூல்கள்

முதன்மைச் சான்றாக அமைகின்றன. நடையியல் குறித்து வெளிவந்த நூல்களும் கட்டுரைகளும் துணைமைச் சான்றா கின்றன.

எந்த ஒரு படைப்பாளியும் ஒரு பொருளை அல்லது நிகழ்ச்சியை வருணிக்கும் போதெல்லாம் ஒரே மாதிரியான சொற்றொடர்களை அல்லது கருத்தைக் கொண்டு வருணிப்பது இயல்பு. இதற்குப் படைப்பாளியின் உள்ளுணர்வே காரணமாகும். படைப்பாளியினுடைய அடிமனதில் ஆழப் பதிந்துள்ளவையே இவ்வாறு வருணனையாக வெளிப்படும். இத்தகைய வருணனை களே ஒரு படைப்பாளியை அடையாளம் காட்டுகின்றன. குமரகுருபரரை அடையாளம் காட்டும் சில வருணனைகளை அவருடைய படைப்புக்கள் முழுமையும் காணலாம்.

நிலையாமையைப் பாடும் போதெல்லாம் இவருடைய மொழியில் நிலையாமைத் தத்துவமும் அதனோடு நீர்க்குமிழி என்ற படிமமும் இணைந்தே வருவதைக் காணமுடிகிறது. இஃது அடிகளின் மொழி நடையில் காணலாகும் ஒரு தனித் தன்மையாகும். நீதிநெறி விளக்கப் பாடல் ஒன்றில் நிலை யாமையைப் பின்வருமாறு பாடுகின்றார்;

> நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
> நீரில் சுருட்டும் நெடுந்திரைகள் – நீரில்
> எழுத்தாகும் யாக்கை ... ... (நீதிநெறி விளக்கம்-1)

இதே போன்ற கருத்து சிதம்பரச் செய்யுட்கோவை 68ஆம் பாடலிலும் "நீரில் குமிழி தோன்றி அழியும் எல்லைதானும் நிலை பெறாத உடம்பு" என்று இடம் பெறுகிறது. இதனர்ல் குமரகுருபரர் எங்கெல்லாம் நீர்க்குமிழியைப் பாடுகிறாரோ அங்கெல்லாம் நிலையாமையைப் பாடுகிறார் என்றோ அல்லது எங்கெல்லாம் நிலையாமையைப் பாடுகிறாரோ அங்கெல்லாம் நீர்க்குமிழியைப் பாடுகிறார் என்றோ கொள்ளலாம்.

குமரகுருபரர் பெண்ணை வருணிக்கும் போதெல்லாம் பெண்களை ஆண்களிடமிருந்து வேறுபடுத்தும் உருவ வேறு பாடான பெண்களின் மார்பகங்களே முதலிடம் பெறுகின்றன. பெண்மையின் சிறப்பே தாய்மைதான். தாய்மையின் சின்னம் மார்பகங்களேயாம், என்பதும் இங்குச் சிந்தித்தற்குரியதாகும். அடிகள் பெண்ணை வருணிக்கும் இடத்தில் எல்லாம் – அது கலை

மகளாயினும் சரி; மலை மகளாயினும் சரி; திருமகளாயினும் சரி – வருணனையில் மார்பகங்கள் பெரும் இடம்பெறுவதைக் காண முடிகிறது. பின்வரும் பகுதிகள் இதற்குச் சான்றாகின்றன.

... ... முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் ...
(கந்தர் கலிவெண்பா–54)

குன்றிரண்டு சுமந்தொசியும் கொடியன்னீர்
(காசிக் கலம்பகம்–58)

கனதனக் குன்றும் ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே! (சகலகலாவல்லி மாலை–1)

முன்புல கீன்ற முகிழ்முலைக் கன்னியொடு ...
(சிதம்பரச் செய்யுட் கோவை–31)

இவ் வருணனை முறையை அடிகளின் நடையில் காணலாகும் தனித்தன்மை என்று கருதுவதனைக் காட்டிலும் அவர் காலத்தின் – சிற்றிலக்கியக் காலத்தின் – நடையியல் கூறு என்று கருத வாய்ப்புள்ளது. அவர் காலத்துத் தோன்றிய சிற்றிலக் கியங்கள் பலவற்றிலும் இத்தகைய வருணனைகளைக் காண முடிகிறது.

பக்தி இலக்கியக் காலம் தொடங்கி இறைவனைப் பாடிய வர்கள் இறைவனைச் சுவை தரும் உலகியல் பொருட்களாக உருவகிப்பது தமிழ் இலக்கிய மரபு. இம்மரபினைப் பின்பற்றியே குமரகுருபரரும் பாடுகிறார். குமரகுருபரருக்குப் பிடித்த இனிமை தரும் பொருளாகக் கரும்பு அமைகிறது. அக்கரும்பே அவர்பாடும் பாடல்களில் இறைவனையும், இறைவியையும் உருவகிக்கும் பொருளாக அமைகின்றது. பின்வரும் பாடலடிகள் இதற்குச் சான்றாகின்றன:

முக்கட் கரும்பே ... (திருவாரூர் நான்மணிமாலை – 34)

ஆட்டுகின்றோர் இன்றிமன்றுள் ஆடும்ஆ னந்தத்தேன்
காட்டுகின்ற முக்கட் கரும்பொன்று – ...
(சிதம்பர மும்மணிக்கோவை–1)

மேற்குறித்த பாடல்களில் முக்கட் கரும்பு என்ற தொடர் சிவபெருமானைக் குறிக்கப் பயன்படுகிறது. இதே கரும்பு என்ற சொல்லைக் கொண்டு கலைமகளைப் பாடுவதையும் இவர் பாடல்களில் காணமுடிகிறது. படைப்புக் கடவுளாகிய பிரமன்

மகிழ்ந்து சுவைக்கும் கரும்பாகக் கலைமகளை உருவகிப்பதைப் பின்வரும் பாடல் வரிகள் உணர்த்தும்:

... உண்டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகலகலா வல்லியே!

(சகலகலாவல்லி மாலை – 1)

... ... ஐம்பால்
காடும் சுமக்கும் கரும்பே
சகலகலா வல்லியே!

(சகலகலாவல்லி மாலை – 2)

குமரகுருபரரின் தமிழ்ப்பற்று அவர்தம் மொழிநடையில் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. அவர் தமிழ் என்ற சொல்லை பயன்படுத்தும் போதெல்லாம் அதற்கு ஏதேனும் ஒரு சிறப்புத் தரும் அடைச் சொல்லை இணைத்தே பயன்படுத்துவதை அவர் பாடல்கள் முழுமையும் காண முடிகின்றது. பின்வரும் பாடல் அடிகள் இதனை விளக்கும்.

பழுத்த தமிழ்ப் புலமை (கந்தர் கலிவெண்பா–119)

தண்டமிழ் (காசிக் கலம்பகம்–35)

... ... நறை பழுத்த
துறைத் தீந்தமிழ்... (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–61)

பைந்தமிழ் (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–2)

தருசுவை அமுதெழ மதுரமது ஒழுகு
பசுந்தமிழ் ... ... (மதுரைக் கலம்பகம்–4)

ஒன்துறைத் தமிழ். (கயிலைக் கலம்பகம்–5)

தெய்வத்தமிழ் (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–48)

குமரகுருபரர் அவர் வாழ்ந்த காலத்து வாழ்ந்த புலவர் களுள் ஒரு தனிச் சிறப்பு உடையவராக இருந்தபோதிலும் உண்மையான படைப்புத்திறன் வாய்ந்த பெருங்கவிஞராக விளங்கினாலும் அந்தக் காலத்தின் வேகம் அவரையும் விட வில்லை. அளவுகடந்த கற்பனை வருணனைகளை அமைப்பதில் அவருடைய புலமை நெஞ்சமும் ஈடுபட்டது. குமரகுருபரரின் பாடல்களில் கற்பனைவளம் பெருக்கெடுத்து ஒடுகிறது. கற்பனை வளம் பொருந்திய அடிகளின் நடைக்கு,

“மண்ணுலகின்கண் வாளை மீன் ஒன்று துள்ளிய துள்ளலில் விண்ணுலகத்தில் உள்ள காமதேனுவின் மடியில் மோதுகிறது. அந்தக் காமதேனு தன் மடியில் முட்டியது தன் கன்று என மயங்கிப் பாலைப் பொழிகிறது” என முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் இடம்பெறும் வருணனைப் பகுதியைச் சான்றாகக் கூறலாம்.

அடிகள் பலவகை யாப்பையும் கையாண்டுள்ளார். இவருடைய பாடல்களில் இலக்கிய நயம் என்பது பற்றிக் கூற வேண்டுமாயின் இவர் கையாண்ட யாப்பு வகையும் இலக்கிய நயத்துக்குத் துணைபுரிந்துள்ளமை தெரிய வருகிறது. அடிகள் இயற்றியுள்ள பாடல்களில் அடிவரையறையுள்ள வெண்பா யாப்பில் அமைந்த பாடல்களைவிட நீண்ட ஆசிரிய விருத்தப் பாக்களே இலக்கிய நயம் பொருந்தியனவாக உள்ளன. அடிகள் அருளிய இரண்டு பிள்ளைத்தமிழ்ப் பாக்களும் சந்த விருத்தங் களால் ஓசை நயமும் இலக்கிய நயமும் பொருந்த விளங்குவ தற்கு யாப்பும் ஒரு காரணமாகிறது. படைப்பாளி தன்னுடைய படைப்பில் தேர்ந்தெடுத்துக் கையாளும் யாப்பும் மொழி நடையைக் கட்டுப்படுத்தும் என்பதற்குப் பின்வரும் சான்றினைக் கூறலாம். நீதிநெறி விளக்கப் பாடல் ஒன்று பின்வருமாறு அமைகின்றது.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்இசையும் நாட்டும் – உறும்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை.

இப்பாடலில் முதல் அடியில் அமைந்துள்ள அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பெயர்ச் சொற்களும் ஒரே தன்மையுடையனவே. எனினும் முதல் இரண்டு சொற்களிலும்– உம் எனும் இடைச்சொல் இணைக்கப்படாததும், இன்பம், வீடு என்ற, பின்னால் வரும் இரண்டு பெயர்ச் சொற்களோடும் – உம் என்ற இடைச்சொல் இணைக்கப்பட்டிருப்பதும் வெண்பா என்ற யாப்பின் காரணத்தாலேயேயாம்.

தமிழ் மீது அளவற்ற பற்றுக் கொண்டிருந்த அடிகளின் பாடல்கள் பலவற்றில் பிறமொழிச் சொற்கள் இடம் பெற்றிருப்பதையும் காண முடிகிறது. இது அவர் வாழ்ந்த

காலத்தின் செல்வாக்கால் அமைந்த நடையியற் கூறு என்று கருதலாம். பின் வருவனவற்றை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

ஓர் காளை **கட்டுப்ரதாபன்**

(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்-2)

**மிருத்**தோடும் ஓடும் வினை (கயிலைக் கலம்பகம்-1)

டம்பம் (மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை-1)

இதே போன்று பிறமொழிக் கலப்புற்ற நடையைச் சித்தாந்தக் கருத்துக்களைக் கூறுமிடத்தும் காணமுடிகிறது. இங்கு இவர் எடுத்துக் கொண்ட பாடுபொருள் மொழி நடையை நிர்ணயஞ் செய்கிறது. சான்றாக

'சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து'

(கந்தர் கலிவெண்பா-20)

'சரியை கிரியாபோகம் சார்வித்து'

(கந்தர் கலிவெண்பா-18)

என்ற பாடலடிகளைக் கூறலாம்.

ஒவ்வொரு படைப்பாளியும் தம் படைப்புக்களில் ஒரு திட்டப் பாங்கினை (Fore grounding technique) அமைத்துக் கொள்வான். இத்திட்டப்பாங்கே படைப்பாளியின் படைப்புத் திறனை அடையாளம் காட்டும். இவ்வகையில் குமர குருபரருடைய படைப்பில் உள்ள சில திட்டப்பாங்கினைக் காணலாம்.

உயர் திணை மாந்தர்களை அஃறிணைப் பொருள்களாக நிலை மாற்றம் (Rank Shifting) செய்யும் – உருவகிக்கும் – ஓர் இலக்கியப் படைப்பாக்க உத்தியை இவர் பாடல்களில் பெரிதும் கையாள்கிறார். இதனைப் பின்வரும் சான்றுகள் விளக்கும்.

**சைவக் கொழுந்தே! தவக்கடலே!**

(கந்தர் கலிவெண்பா-105)

மதுரம் பழுத் தமுதம் ஒழுகும்
பசுங்குதலை மழலையஞ் சொல்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் **பசுங்கொண்டலே!**

(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்-1)

தெய்வதப் பிடியொடும் விளையாடும்
மழகளிறு (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்-14)

இதனாற்றான் அடிகளின் பாடல்களில் உவமையினும் உருவக அணியே பெருமிடம் பெற்று விளங்குவதைக் காண முடிகிறது. இதற்கு இவர் எடுத்துக்கொண்ட பாடுபொருளாகிய பக்தியும் ஒரு காரணமாகும்.

அடிகளின் பாடல்களில், மடக்கு போன்ற சொல்லணி அமைந்த பாடல்களில் இருவேறு புதையமைப்புக்கள் (Deep structure) அமைந்த தொடர்களை சில மாற்றங்கள் மூலம் ஒரே புற அமைப்பு (Surface Structure) உடையனவாக மாற்றிப் பயன்படுத்துகின்றமையை மற்றொரு திட்டப்பாங்காகக் கூறலாம். பின்வருவன இதற்குச் சான்றாகின்றன.

1. என்பு + அரவு + ஆமை ⟹ என்பரவாமை
2. ஏன் + பரவாமை ⟹ என்பரவாமை

இங்கு முதலில் உள்ள தொடரில் உள்ள புதையமைப்பு இரண்டாவது தொடரில் உள்ள புதையமைப்பிலிருந்து வேறு படுகிறது. ஆனால் பாடலில் இடம் பெறும் புற அமைப்பு இரண்டையும் ஒன்று போலவே அமைத்துக் கொண்டுள்ளதைக் காணலாம். இங்குத் தொடரினமைப்பில் கவனம் செலுத்தப்பட்டு

உரங்கொள் பல்கலன் என்பர வாமையே
உணர்வு றாமையும் என்பர வாமையே
(மதுரைக் கலம்பகம்)

என்று பொருண்மை மயக்கம் தரும் வகையில் அடிகளை அமைத்துள்ளமையைக் காணலாம்.

தொடர் நிலையில் உள்ள பொருண்மை மயக்கத்தைப் போலச் சொல் தேர்விலும் இரு பொருள் தரும் சொற்களைத் தேர்வு செய்வதன் மூலம் பொருண்மை மயக்கம் ஏற்படுத்தி பாடலின் சுவை பெருக்குவதை இவருடைய மற்றொரு திட்டப் பாங்காகக் கூறலாம். சான்றாக

மதி ⟶ நிலவு
மதி ⟶ அறிவு (மதுரைக் கலம்பகம்-63)

காயம் ⟶ புண்
காயம் ⟶ உடம்பு (மதுரைக் கலம்பகம்-13)

சந்தங்கள் மிகுந்த ஓசைநயம் இவருடைய பாடல்களில் காணலாகும் மற்றுமொரு சிறப்புக் கூறாகும். இதற்கு இவர் தேர்ந்தெடுக்கும் ஒரே மாதிரியான அலகுடைய ஒலிகளை அடுக்கு முறை காரணமாய் அமைகின்றது எனலாம். இதற்குப் பின்வரும் பாடலைச் சான்றாகக் கூறலாம்.

அவனவ ளதுவெனும் மலைகளில் ஒருபொருள்
இவனென வுணர்கொ டெழுதரு முருவினை
இலதென வுளதென விலதுள தெனுமவை
யலதென வளவிட வரியதொ ரளவினை
குறியில னலதொரு குணமில னெனநினை
யறிபவ ரறிவினு மறிவரு நெறியினை
இருமையு முதவுவ தெவனவ னெனநின
தருமையை யுணர்வுறி னமிழ்தி மினிமையை.

இப்பாடல் முழுமையும் குறில் அலகுடைய ஒலிகளையே தேர்வு செய்து ஓசை நயம்படப் பாடியுள்ளமையைக் காண முடிகிறது.

குமரகுருபரரின் விருப்பத்துகந்த சொற்களாகச் சிலவற்றை அவர் பாடல்களில் இனம் காணமுடிகிறது. அவற்றுள் சில வற்றைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம். பழுக்காய், பழுத்து, இளமென், மதலை, குதலை, மழலை, தந்தி, மழகளிறு ஆகியவை திரும்பத் திரும்ப இவருடைய பாடல்களில் பயின்று வருகின்றன. இதற்கான காரணம் மேலும் ஆய்தற்குரியது.

இதுகாறும் கூறியவற்றால் பின்வரும் முடிவுகளைப் பெற முடிகிறது.

1. வருணனையின் போது குமரகுருபரர் ஒரே மாதிரி தொடர்களை, கருத்தை, சொற்களைப் பயன்படுத்து கிறார்.
2. இவர் தமிழ் என்ற சொல்லை எப்போதும் அடையுடன் சேர்த்தே பயன்படுத்துவது இவர்தம் தமிழ்ப்பற்றை வெளிப்படுத்துகிறது.
3. இவர் பாடல்களில் வெண்பா யாப்பில் அமைந்த பாடல் களை விட ஆசிரிய விருத்தப்பாக்களே இலக்கிய நயம் பொருந்தியவையாயுள்ளன.
4. இவருடைய திட்டப்பாங்காக உருவகம், பொருண்மை மயக்கத் தொடர்களை ஆக்குதல், ஒலித்தேர்வு, சொல் தேர்வு ஆகியவற்றைக் கூறலாம்.

# சகலகலாவல்லிமாலை - விண்ணப்பப் பயன்

எம். ஞானப்பூங்கோதை, மதுரை

குமரகுருபர சுவாமிகளின் வாக்கில் மலர்ந்த பிரபந்தங்கள் அனைத்தும் தெய்வத் தன்மைப் பெற்று விளங்குதல் இயல்பே. அத்துடன், இவர்தம் செய்யுட்களில் சொல்லின்பத்தையும் நுகரலாம். விருத்தங்களிலும், வெண்பாக்களிலும், பொருட் சுவையை நுகரும் முன் சொற்சுவை - ஓசை நயம் மேம்பட்டு நம்மை ஈர்க்கின்றன. சொற்களும் சொற்றொடர்களும் ஒன்றனோடு ஒன்று செவிக்கின்பம் தரும் வண்ணம் பொருந்தி அமைந்துள்ளன. எதுகை மோனையும், தொடை நயங்களும் இயல்பாக வந்து, இனிமை தருகின்றன. இவர் சகலகலாவல்லி மாலையில் விடுத்த விண்ணப்பங்களைப் பற்றி இக்கட்டுரையிற் காண்போம்.

**மாலை எழுந்த சூழல்**

எத்தனைச் செல்வங்கள் ஒருவரிடம் இருப்பினும் இறுதியில் அவையெல்லாம் அந்நிலையிற் துணையாக வருவதில்லை. தொண்டொன்றே துணை நிற்கும். அதனால் தான் "தொண்டல்லால் துணையில்லை...". (தேவாரம்) என்கின்றார் உழவாரத் தொண்டால் உயர்கதி பெற்ற அப்பர் சுவாமிகள்.

இதனை உணர்ந்து கொண்ட குமரகுருபர சுவாமிகள் கோயிற் திருப்பணித் தொண்டில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். காசியம்பதியிலும் திருமடம் நிறுவி சிவதருமத்தை நிறைவேற்றத் திருவுளம் கொண்டார். இந்நிலையில் தரும மியற்றுவதற்குத் தேவையான இடம் பெறுவதற்கு, டில்லி பாதுஷாவுடன் அளவளாவ அவசியமான ஹிந்துஸ்தானி பாஷை தமக்குக் கைவல்லியமாக வேண்டி கலைமகளைப் பாமாலை பாடித் துதித்தார். அப்பதிகமே சகலகலாவல்லி மாலை எனப்பட்டது. கலைமகள் கடாட்சமும் அவருக்குக் கிட்டியது. ஹிந்துஸ்தானி மொழிப் புலமையும் எளிதில் கைவந்தது.

இம்மாலை, கட்டளைக் கலித்துறை என்னும் செய்யுளமைதி யுடன் அமைந்த பத்துச் செய்யுட்பாக்களைக் கொண்டதாகும்.

**கலைமகளைப் போற்றுதல்**

சைவ சமயக் கடவுளரைப் போற்றிப் பாராட்டும் இவர் ஏனைய தெய்வங்களையும் உரிய இடங்களிற் பாராட்டிப் புகழ்கிறார்.

> "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
> மாதொரு பாகனார் தாம் வருவர் ......" (சித்தியார்-115)

என்பதையும்,

> "சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
> உவந்தருள் உருத்திரன் தான்மால்அயன்ஒன்றினொன்றாய்
> ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
> நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்ப னென்பர்."
> (சித்தியார்-164)

என்பதையும்,

> "சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி
> ஒத்துறு மகேசையாகி உமைதிரு வாணி யாகி..."
> (சித்தியார்–165)

என்பதையும் நன்கு உணர்ந்து தெளிந்த குமரகுருபர சுவாமிகள்,

> "புண்டரிக வீட்டிற் பொலிந்து மதுரச்
> சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்
> றவளுநின் சொரூபம் ... ..."

என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் (95) கூறுகின்றார். 64 கலைகளுக்கும் அதிதெய்வமாகிய சகலகலாவல்லிபால் இவர் பேரன்பு பூண்டவர். கலைமகளின் திருவருட்குப் பாத்திரராகி நாவன்மை பெற்ற சுவாமிகள், கலைமகள் தம் நாவில் குடி கொண்டுள்ளார் என்பதை,

> "என்னாவி லுறைந்த வெள்ளை
> வள்ளக் கமலத்தவள் ... ..." (597)

என்று பண்டார மும்மணிக்கோவையிலும், தன் நெஞ்சில் உறைந்தவள் என்பதை

> "நளினப் பொகுட்டெமது நன்னெஞ்செனக்
> குடிபுகும் ஞானப்பிராட்டி ... ..." (357)

என்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலும் புலப்படுத்து ரைக்கின்றார்.

வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கும் கலைமகள் பிரமன் நாவில் இனிக்கும் கரும்பாக இருக்கின்றாள் என்றும், வெள்ளைத் தாமரையாகிய ஆசனத்தை ஒத்த, அன்னக்கொடியை உடைய பிரமதேவனது மனத்திலும், நாவிலும் வீற்றிருக்கின்றாள் என்றும் கூறுகிறார்.

கலைக்கொடி, சொற்கொடி, சொற்கடல், தெள்ளமுது என்றெல்லாம் கலைமகளை உருவகிக்கின்ற சுவாமிகள், பங்கய ஆசனத்தில் கூடும் பசும் பொற்கொடியே என்கிறார். கொடியில் பூ இருத்தல் இயல்பு. பூவின் மேல் வீற்றிருக்கும் கொடி என்ற இவரது முரண் நயம் ஓர் இனிமை. தமிழாகிய தெளிந்த அமுதை நிறைய உண்டு பின் உன் அருட்கடலில் குளிக்கும்படிச் செய்வாயாக என்று கலைமகளிடம் வேண்டுகிறார். குளித்து பின் உண்ணுதல் இயல்பாய் இருக்க, உண்ட பின் குளித்தலைக் குறிப்பிட்டது மற்றுமொரு நயமாகும்.

தெள்ளித் தெளிக்கும் பனுவல், புலவோர் கவிமழை சிந்தக் கண்டு களிக்கும் கலாப மயிலே என்றும், தொண்டர்கள் உள்ளத்திலிருந்து எழுதுகின்ற கலைத் தமிழாகிய இனிய பாலமுதத்தைப் பிரித்து அறியும் வண்ணம் எடுத்துக்காட்டுகின்ற வெண்மையான அன்னப் பறவையே என்றும் பல உருவக, உவமைகளைக் காட்டி சித்தரிக்கின்றார். பழுத்தத் தமிழ்ப் புலமை பெற்ற குமரகுருபர முனிகள்.

எழுமைக்கும் உடன் நிற்கும், ஒரு காலத்திலும் அழியாமையை அளிக்கின்ற கல்வியாகிய பெருஞ்செல்வத்தினது பயனாக விளங்கு கின்றாள் என்றும் அதற்கும் மேலாக, சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக விளங்குகின்ற மெய்ஞ்ஞானத்தின் தோற்ற மாகவே விளங்குகின்றாள் சகலகலாவல்லித்தாய் என்றும் சிறப்பிக்கின்றார்.

எழுதப்படாத வேதத்தின் வடிவாக இருக்கின்ற கலைமகள், விண், புவி, புனல், கனல், காற்று என ஐம்பூதங்களின் வடிவிலும், நிறைந்திருப்பதோடு அன்பர்களின் கண்ணிலும் கருத்திலும் நிறைந்திருக்கிறாள். அவள் வடநூற் கடலையும், செழுந்தமிழ்ச் செல் வத்தையும் தொண்டர்தம் செந்நாவிலே நின்று காக்கின்ற

கருணைக் கடல். பிரமதேவர் முதலான மேன்னை பொருந்திய பலகோடி தெய்வங்கள் இருப்பினும் சகலகலாவல்லியைப் போற் கண்கண்ட தெய்வம் உண்டோ? என்றெல்லாம் கல்விக்கு அதிதேவதையாம் நாமகளை தம் நாவாறப் போற்றிப் புகழ் கின்றார் சகலகலாவல்லிமாலையில்.

**விண்ணப்பங்கள்**

குமரகுருபர சுவாமிகள் ஐந்து வயதிலேயே சிவஞானம் பெற்றவர். இவ்வுலகியற் பொருள் எதிலும் விருப்பம் கொள்ளாத சிவஞானிகள், இறைவன்பால் அன்பையும், அவனது பேரருளையும் மட்டுமே வேண்டும் என்று விண்ணப்பம் செய்வர்.

"பொன்னார் திருவடிக்கு ஒன்றுஉண்டு விண்ணப்பம்......"

(தேவாரம்)

என்று விண்ணப்பிக்கிறார் அப்பர் சுவாமிகள்.

குமரகுருபர சுவாமிகளும், "பொன்னடிக் கொன்றிது பன்னுவன் கேண்மதி......" எனத் தொடங்கி "சிறியேற் கருளுதி செல்கதி செலவே......" என்று சிதம்பர மும்மணிக்கோவையில் விண்ணப்பம் செய்கிறார். மீண்டு இவ்வுலகிற்கு வாராத அத்தகைய செல்கதியைப் பெறுவதற்கு அவனது அருள் ஞானத்தைப் பெறுதல் ஒன்றே வழியாகும். "ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்" என்கிறது சிவஞானபோதம். அச் சிவஞானமாம் பரஞானத்தைப் பெறுவதற்கு வாயிலாக – சாதனமாகத் திகழ்வது அபரஞானம் என்னும் கலைஞானம் ஆகும்.

"... ... ... ... ... ... ...
மருவிடும் உயர்ஞான – மிரண்டாம் மாறா
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருள் ஒன்று, ஒன்று அதனைத் தெளிய வோதும்
சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே"

(சிவப். 10)

என்கிறது சிவப்பிரகாசம்.

ஞானப் பாலினை அருந்திய அந்நிலையிலேயே, சிவனடியே சிந்திக்கும் திருபெருகு சிவஞானமும், உவமையிலாக் கலை ஞானமும் ஒருங்கே பெற்ற திருஞானசம்பந்தரின் வழி பற்றிய குமரகுருபர சுவாமிகள், தமக்கு கலைஞானம் வாய்க்கப் பெற

வேண்டும் என்று பல பாடல்களில் விண்ணப்பிக்கிறார். சகலகலாவல்லி மாலையில் அவர் விடுக்கும் விண்ணப்பங்களைக் காண்போம்.

1. "நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
   பாடும் பணியிற் பணித்தருள்வாய்......"

(சகலகலாவல்லி மாலை – 701)

ஞானத்திற் சரியை நெறியிலே நிற்போர்க்குப் பாடும் பணியும் ஒன்று. "பாடும் பணியே பணியாய் அருள்வாய்......" என்கிறார் அருணகிரிநாதர் கந்தர் அனுபூதியில். பொருளின் சுவையும் சொல்லின் சுவையும் பொருந்த நான்கு வகைக் கவியும் பாடும் செயலில் தன்னை பணித்தருளுமாறு வேண்டுகிறார். அத்தகைய வல்லமை தனக்கு வாய்க்க வேண்டும் என்று விண்ணப்பிக்கிறார்.

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பவை நாற்கவி எனப்படும். வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா எனும் நான்கினைக் குறிக்கும் என்றும் கூறுவர். எனினும் குமரகுருபரர் கந்தர் கலிவெண்பாவில் "ஆசு முதல் நாற்கவியும்......" என்றே குறிப்பிடுகிறார்.

ஆசுகவி என்பது ஒரு புலவன் இவ்வெழுத்தால், இச் சொல்லால், இப்பொருளால், இவ்வணியால், இப்பாட்டால், இவ்வெழுத்து ஆதி, இவ்வெழுத்து அந்தம், இச்சொல் ஆதி, இச்சொல் அந்தம் ஆகப் பாடுவாய் என்று கூற, அப்பொழுதே அக்கருத்துக்கு ஒப்ப பாடுவதாகும்.

மதுரக்கவி என்பது சொல்லிலக்கணத்திலும், பொருள் இலக்கணத்திலும் வழுவாமல், எண்வகை மெய்பாடு தோன்ற எதுகை, மோனை முதலிய தொடைநலம் வாய்ப்பத்தன்மை, உவமை முதலிய அணிநலம் அமைய உள்ளத்துள்ளே கொள்ளும் மதுரம் எனக் கேட்போர்க்கு இனிமை மேம்படப் பாடப் படுவதாகும்.

சித்திரக்கவி என்பது மடக்குகள், கோமூத்திரி முதலாகச் சொல்லப்படுகின்ற கவித்துவம் அமையப் பாடப்படுவதாகும்.

வித்தாரக்கவி என்பது தொடர்நிலைப் பாட்டாகவும், பல அடியான் நடக்கும் தனிப்பாட்டாகவும் வருவதாகும்.

2. ''தூக்கும் பனுவல் துறைதோய்ந்த கல்வியும்
சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்வாய்...''
(சகலகலாவல்லி மாலை – 703)

பல துறைகளை உடைய தமிழ் நூல்களை ஆராய்ந்து அறியக்கூடியக் கல்வியும், சொல்லின் சுவை நிரம்பிய கவிபாடும் வல்லமையாம் வாக்குத் தன்மையும் பெருகும்படி பணித் தருள்வாய் என்று வேண்டுகிறார்.

கல்வியின் சிறப்பை நீதிநெறி விளக்கத்தில் பல இடங்களில் எடுத்துக் கூறுகிறார் குமரகுருபரர்.

''கற்றார்க்குக் கல்வி நலனே நலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம் – முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்....'' (நீதிநெறிவிளக்கம்–218)

என்று கல்வியழகே அழகு என்பதை உணர்ந்த சுவாமிகள், தனக்குக் கல்விச் செல்வம் பெருக வேண்டும் என்று சகலகலா வல்லி மாலையில் மூன்று இடங்களில் விண்ணப்பிக்கிறார். நூல்களைக் கற்றுப் பெறுகின்ற செயற்கை அறிவாம் கல்வியோடு, புண்ணியவசத்தால் எளிதில் கவியியற்றும் ஆற்றலாகிய இயற்கை அறிவாகிய வாக்கு எனப்படும் சொல்வன்மையும் தமக்கு அமைய வேண்டும் என்று வேண்டுகிறார்.

3. ''பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற் பனுவலும் –
யான்
எண்ணும் பொழுது எளிதெய்த நல்காய்''
(சகலகலாவல்லி மாலை – 705)

இசைத் தமிழாகிய பண்ணும், நாடகத்தமிழாகிய பரத நாட்டிய சாஸ்திரமும், இயற்றமிழாகிய கல்வியும், இனிய சொற்களால் தொடுக்கப்பட்ட கவியும், தான் விரும்பும் காலத்தது, தனக்கு எளிதில் வாய்க்கப் பெறும் வண்ணம் அருள் புரியுமாறு விண்ணப்பிக்கிறார்.

முல்லையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல்யாழ் என்பவை நாற்பெரும் பண்கள். அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்பவை அவற்றின் சாதிகள். பெரும்பண்கள்,

பண்ணியல், திறம், திறத்திறம் என மொத்தம் பண்கள் 103 ஆகும்.

4. "பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும்
பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கண் நல்காய்.
(சகலகலாவல்லி மாலை–706)

பொருள் தோய்ந்த பாட்டையும், அப்பொருள் உணர்ச்சியினால் கிடைக்கும் பயனையும் என்னிடத்தில் சேர்க்கும் வண்ணம் நின் கடைக்கண் பார்வையை – அருட்பார்வையை நல்குவாயாக என்று விண்ணப்பிக்கிறார்.

அன்னப்பறவை நீரையும் பாலையும் பிரித்தறியும் தன்மை உடையது. இவ்வுலகின்பத்தைத் தரும் பாட்டை நீரென்றும், வீட்டின்பத்தைத் தரும் பாட்டை பாலென்றும் கூறுகின்றார். அத்தகையப் பொருள் பொருந்திய பாட்டைப் பிரித்து உணரும் தன்மையையும், அதனால் கிடைக்கும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நற்பயனும் தமக்குக் கிடைப்பதற்கு சகலகலா வல்லியின் திருவருட் பார்வையை வேண்டுகின்றார்.

5. "சொல்விற்பனமும் அவதானமும் கல்வி சொல்லவல்ல
நல்வித்தையுந் தந்தடிமை கொள்வாய்".
(சகலகலாவல்லி மாலை–707)

இடத்திற்கேற்றவாறும், காலத்திற்கேற்றவாறும் பேசக்கூடிய சொற் சாதுரியத்தையும், ஒரே நேரத்தில் பல வினாக்களுக்கு விடையளிக்கும் அவதான சக்தியையும், பிறர்க்கு கல்வி கற்பிக்க வல்ல நல்ல வித்தையையும் கொடுத்தருளி தன்னை அடிமை யாக்கிக் கொள்ளுமாறு வேண்டுகிறார்.

டில்லி பாதுஷாவிடம் நிலம் பெறுவதற்கு சாதுரியமாகப் பேசும் நாவன்மையைக் கேட்கின்றார்.

அவதாநம் – கிரகித்தல் – ஞாபகசக்தி என்றும் கூறுவர். ஒரே நேரத்தில் பல வகையான வினாக்களையும் மனத்தில் நிறுத்திப் பின்னர் ஒவ்வொன்றிற்கும் முறையாக விடையளிக்கும் சக்தியை அவதானசக்தி என்பர். அஷ்டாவதானம், தசாதவதானம், சதாவதானம், சோடசாவதானம் என்று பல வகை அவதானங்கள் உண்டு. கந்தர் கலிவெண்பாவிலும் அஷ்டாவதானத்தை வேண்டிப் பெறுகிறார்.

தாம் கற்றவற்றை பிறர் அறியும் வண்ணம் கூறும் திறமையை நல்வித்தை என்கிறார். பல நூல்களிலும் நுண்மையான வற்றையும் பொருளாழமுள்ள இடங்களையும் ஆராய்ந்து அறிந்த கல்வி, பிறர்க்கு பயன்படாவிடில் அது மிகவும் தீயது (208) என்றும், அச்சொல்வன்மை நறுமணத்தைப் பெற்ற பொன் மலரைப் போன்ற தன்மை – உடையது (210) என்றும் நீதிநெறி விளக்கத்தில் எடுத்துரைக்கின்றார்.

6. ''மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேம்பட்டமன்னரும் என்
பண் கண்டளவிற் பணியச் செய்வாய்''.

(சகலகலாவல்லி மாலை – 709)

இவ் வுலகம் முழுவதையும் தம் வெண்கொற்றக் குடையின் கீழ் மேன்மையடையச் செய்கின்ற மன்னரும் தன் பாட்டைக் கேட்ட அளவில் வணங்கும்படிச் செய்யவேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கின்றார்.

கவி சொல்லவல்லவனுக்கு அரசனும் தாழ்தல் பிரத்தியக்ஷம். இச்சிறப்பைத் தரும் கண்கண்ட தெய்வம் சகலகலாவல்லித்தாய். டில்லி பாதுஷாவிடம் தாம் இடம் கேட்டு அளவளாவுவதற்காகத் தமக்கு இச்சிறப்பைத் தருமாறு வேண்டுகின்றார்.

**விண்ணப்பப் பயன்**

சகலகலாவல்லியில் குமரகுருபர சுவாமிகள் விடுத்த விண்ணப்பங்களுக்கு அவற்றின் பயனை உடனே முழுமையாகப் பெற்றார் என்பதை அவரது பிரபந்தங்களின் மூலம் அறிய முடிகிறது.

முதலில் நாற்கவியும் பாடும் திறனைப் பூரணமாகப் பெற்றார். இத்திறமையை, அவரது கலிவெண்பா, பிள்ளைத் தமிழ், கலம்பகம், நான்மணிமாலை, மும்மணிக்கோவை, இரட்டைமணிமாலை போன்ற குமரகுருபரரின் பிரபந்தங்கள் எடுத்துக் காட்டுகின்றன. மேலும் வெண்பா, வெண்டாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம், ஆசிரியப்பா, ஆசிரியத் தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம், கலிப்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம், வஞ்சிப்பா, வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம், மருட்பா ஆகிய செய்யுள் வகைகளும், அவரது கவித்திறமையைப் பறை சாற்றுகின்றன.

பூரண கல்வியறிவைப் பெற்றவர் குமரகுருபரர். பல நூல் களைக் கற்றுத் தெளிந்தவர் என்பது அவரது பாடல்களில் தெளிவாகும். திருக்குறளின் சாரமாகிய நீதிநெறி விளக்கம் இதற்கு ஒரு சான்றாகும். கந்தர் கலிவெண்பாவில் சிவஞான போதம், சித்தியார் போன்ற சித்தாந்த நூற் கருத்துக்களும், கந்தபுராணச் செய்திகளும் காணப்படுகின்றன. மேலும் தொல்காப்பியத்திலிருந்து சில சொற்றொடர்களை இவரது பாடல்களில் காணலாம்.

குமரகுருபர சுவாமிகள் பண்ணிடத்தும், பாடலிடத்தும் மிகுந்த விருப்பம் உடையவர். சகலகலாவல்லியின் அருளால் இசைஞானமும் கைவரப் பெற்றவர். இசை நூற் செய்தி களையும், பல இடங்களில் எடுத்துக் கூறுகிறார். பண்ணைப் பற்றிப் பொதுவாக பல பாடல்களில் (290, 539, 625, 705) கூறுவதோடு விளரிப் பண், (81) செவ்வழிப் பண் (151, 352) என்று குறிப்பிட்டும் எடுத்துச் சொல்கிறார். மந்தர, மத்திம, உச்ச ஸ்தாயிகளை மூவகை நிலயம் (581) என்று பண்டார மும்மணிக்கோவையில் குறிப்பிடுகிறார். ஏழு ஸ்வரங்களை ஏழிசை என்றும், ஏழு சுரம் என்றும் (312, 656) குறிப்பிடுகிறார் குழலிசையை வேயிசை (203), தீங்குழற் கானம் (677) எனப் பாராட்டுவதோடு வீணை வாசிப்போரை விபஞ்சிபயிறருமதங்கர் (352) என்கிறார். மகரயாழ், சீறியாழ் பற்றியும், யாழ் வாசிக்கும் முறை பற்றியும் பண்டார மும்மணிக்கோவையில் (581) விளக்குகிறார். சுவாமிகளுக்கு அமைந்த இத்தகைய இசை ஞானம் அவர் இசைவாணியிடம் விண்ணப்பித்துப் பெற்ற பயனே என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

பாட்டையும் அதன் பயனாம் வீட்டையும் குமரகுருபரர் பெற்றார் என்பது கண்கூடு. அவதான சக்தியையும் பெற்றிருந்தார். தாம் ஆராய்ந்து அறிந்து கற்றவற்றை பிறருக்கு எடுத்துரைப்பதில் வல்லவர் குமரகுருபர சுவாமிகள். வட நாட்டில் அவர் செய்த கம்ப இராமாயண சொற்பொழிவே துளசிதாசர் இந்தி மொழியில் இராமாயணம் எழுதுவதற்கு அடிப்படையாயிற்று என்று துளசிதாசரே தம் நூலில் கூறியுள்ளார்.

வடநூற்கடலும் தேக்கும் செழுந்தமிழ் செல்வமும் தொண்டர் செந்நாவினின்று காக்கும் கருணைக்கடல் என்று

சகலகலாவல்லியை அவர் போற்றிப் புகழ்ந்தமையால் வட மொழிப் புலமையைப் பூரணமாகப் பெற்றார். வடநாட்டில் திருமடம் நிறுவி சைவத்தைப் பரப்புவதற்கு அவரது வடமொழிப் புலமையே உறுதுணையாயிற்று. அவரது வாக்கில் பயின்று வரும் பல வடமொழிச் சொற்களும், வடமொழித் தொடர்களும் அவரது வடமொழிப் புலமையை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. உதாரணமாக, சித்ரம், தர்க்கம், ப்ரதாபம், பத்மம், ரத்னம், லோகம் போன்ற சொற்களும், உபய சரணன், அருண ரத்நம், சித்ர பதி, த்ரிகூடம், த்ரிசூலம், பக்த சகாயம், பானு கோபன், பானு விலோசன, குஞ்சித கமலம், மனோலயம் போன்ற சொற்றொடர்களும் இவர் பாடல்களில் பயின்று வருகின்றன.

மண் கண்ட வெண்குடைக் கீழாக மேம்பட்ட மன்னரும் என் பண் கண்ட அளவில் பணியச் செய்வாய் என்று அவர் சகலகலாவல்லியிடம் வேண்டிக் கொண்டதன் பயனாக, டில்லி பாதுஷா திருமடம் கட்டுவதற்கு இடம் அளித்து உதவியதோடு திருக்கேதார ஸ்தலத்திற்கு கருடன் வட்டமிட்ட இடம் முழுதும் அளித்து உதவி பெருமதிப்பளித்து குமரகுருபர சுவாமிகளை வணங்கினார் என்பதை அவர் வரலாற்றின் மூலம் நாம் அறியலாம்.

பாண்டி நாட்டு தாமிரபருணியாற்றின் கரையில் அமைந்த ஸ்ரீ வைகுண்டத்தில் பிறந்து, அலைகடல் கரையில் அமைந்த திருச்செந்தூரில் செந்திலாண்டவன் அருளைப் பெற்று, வைகையாற்றின் கரையில் அமைந்த மதுரையில் மீனாட்சி யம்மையிடம் அருள் மாலை பெற்று, காவிரியாற்றின் கரையில் அமைந்த தருமபுரத்தில் குருமூர்த்தி மாசிலாமணி தேசிகர் அவர்களிடம் ஞான உபதேசம் பெற்று, பின்னர் கங்கையாற்றின் கரையில் அமைந்த காசியம்பதியில் திருமடம் நிறுவி ஞான நூல்தனை ஓதல், ஓதுவித்தல், நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல், ஈனமிலாப் பொருள்தனைச் சிந்தித்தல் என்னும் எழில் ஞான பூசையைச் செவ்வனே செய்தருளி, சிவயோகத் திருந்து வைகாசித் திங்கள் கிருஷ்ணபட்சத் திருதியையில் பரமுத்தியும் பெற்ற நம் குமரகுருபர சுவாமிகள் நமக்காக அருளிச் செய்த அனைத்துப் பிரபந்தங்களிலும் அமைந்த விண்ணப்பங்களை நாம் ஒவ்வொருவரும் அறிந்து, உணர்ந்து, அவற்றின் பயனையும் அடைந்து இன்புறுவோம்.

## கலம்பகத்தில் திருவிளையாடற் புராணம்

இரா. தமிழ்ச்செல்வம், குறிஞ்சிப்பாடி

மதுரைக் கலம்பகம் என்னும் இந்நூல் குமரகுருபரரால் பாடப்பட்டதாகும். மதுரையில் கோயில் கொண்டிருக்கும் சொக்க நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சொற்சுவை, பொருட்சுவை விரவ இந்நூல் பாடப்பட்டுள்ளது. கூடல் மாநகரின் சிறப்பு இந்நூலின்கண் மிகுதியாகப் பேசப்படு கின்றன. இந்நூலாசிரியர் ''காசிக்கலம்பகம்'' என்ற மற்றொரு நூலையும் எழுதியுள்ளார். கலம்பக உறுப்புகள் பதினெட்டும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன். கலம்பக நூல்களில் மதுரைக் கலம்பகமே சிறப்புடையதாகும். எண்வகை சுவைகளும் இக் கலம்பகத்தில் காணப்படுகின்றன. திருவிளையாடற்புராண வரலாற்று நிகழ்ச்சிகளும் வேறு பல புராணச் செய்திகளும் இந் நூலின்கண் இடம் பெற்றுள்ளன. அது குறித்த தொகுப்பினைக் கீழ்க்கண்ட கட்டுரையில் காணலாம்.

### திருவிளையாடற் புராணச் செய்திகள்

#### பிட்டுக்கு மண் சுமத்தல்

மதுரை மாநகரை அரிமர்த்தன பாண்டியன் ஆட்சி செய்த போது வைகையாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. மன்னன் ஆணைப்படி மக்கள் ஆற்று வெள்ளத்திற்கு அணையிட முயல்கின்றான். பிட்டு விற்கும் வந்தி என்னும் மூதாட்டியின் கூலியாளாகச் சொக்கநாதர்செல்கின்றார். அம்மூதாட்டியிடத்துச் சுவையான பிட்டினை உண்டு உரிய முறையில் கரை அடைக் காமல் விளையாடுகின்றார். மன்னன் அளவற்ற சினத்துடன் பிரம்பினால் பெருமானார் முதுகிலே அடிக்கின்றான். அந்த அடி உலகத்து உயிர்கள் அனைத்தின் மீதும் படுகின்றது. வெள்ளம் சுருங்குமாறு கூடை மண் கொட்டிகரையினை உயர்த்தி மறை கின்றார் இறைவர். மூதாட்டியாகிய வந்தியையும் தூய விமானத்தில் ஏற்றி உடன்கொண்டு செல்கின்றார். விண்ணி னின்றும், மணிவாசகர்க்கு இழைத்த இன்னலின் காரணமாகவே

தாம் இவ்வாறெல்லாம் செய்ததாக மொழிகின்றார். அரிமர்த்தன பாண்டிய மன்னனும் வாதவூரரின் திருவடி பணிக்கின்றான்.

இச்செய்திகளைக் கீழ்வரும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே." (1)

"அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே."(1)

"உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துளி மேலிடு வெண்பிட் டுகந்தன
உறுதியொ டவண்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடை மனுந்திச் சொரிந்தன." (11)

"உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன." (11)

"அம்மாநம் மேலன்று பட்ட தருட்கூடற்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே." (56)

**விறகு விற்றது**

ஏமநாதன் என்ற வடநாட்டு யாழ்ப்பாணன் ஒருவன், இசையில் தனக்கு இணை எவருமிலர் எனச் செருக்குற்றிருந்தான். வரகுண பாண்டியனது அவைக்களம் சென்று இசையில் தன்னை வெல்பவர் எவருமிலர் என்று செருக்கோடு மொழிந்தான். வரகுணபாண்டியன் தன் நாட்டு இசைப்புலவர்களில் ஒருவராகிய பாணபத்திரரை ஏமநாதனை வெல்லும் வகையில் பாடப் பணித்தான். பாணபத்திரர் இறையன்பு மிக்கவர்; கண்ணுதற் கடவுளைக் கவலையுடன் வணங்கினார். இறைவர் விறகு விற்ப வராகத் தோன்றி ஏமநாதனின் இருப்பிடம் சென்று, அங்கு அமுதகீதம் பொழிந்தார். ஏமநாதனிடம் தான் பாணபத்திரரின் அடிமை என்றும் கூறினார். அதனால் அச்சங்கொண்ட ஏமநாதன் இருளிலேயே பாண்டிய நாடு விட்டு அகன்றான். பாணபத்தரரின், கனவில் தோன்றி விரிசடைக் கடவுள் நிகழ்ந் ததைக் கூறினார். நடந்ததை அறிந்த வரகுண பாண்டியன் பாணபத்திரருக்குச் சிறப்புச் செய்தான். பாணபத்திரர் இறைவரைப் பாடும் பணியில் ஈடுபட்டார். இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்க்காணும் மதுரைக்கலம்பகப் பாடல்வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண னொதுங்கத் திரிந்தன." (11)

**அங்கம் வெட்டியது**

மதுரை நகரை குலோத்துங்க பாண்டியன் ஆட்சி செய்து வந்தான். அவன் ஆட்சிக் காலத்தில் அங்கு வந்த வயது முதிர்ந்த வாளாசிரியன் ஒருவன் பலர்க்கும், வாள் வித்தை பயிற்றுவித்தான். வாள்வித்தை பயின்ற பலருள் சித்தன் என்பவனும் ஒருவன். நன்றி மறந்தவனாய்த் தனியே ஒரு வாள் பயிற்சிக் கூடத்தைத் தொடங்கினான் சித்தன். சித்தன் ஆசிரியரின் வருவாயைக் குறைக்க முற்பட்டதோடு, அவரது மனைவியிடமும் தகாத முறையில் நடக்க முனைந்தான். இந்நிகழ்ச்சியைக் கணவனிடம் கூறக் கலங்கிய அப்பெண் இறைவனை வழிபட்டு இரங்கி நின்றாள். சிவபெருமான் வயது முதிர்ந்த வாளாசிரியன் உருவில் தோன்றிச் சித்தனைப் போருக்கு அழைத்து அவனது அங்கங்களைக் கூறுகூறாக வெட்டி மறைந்தார். இறைவனின் கருணைச் செயலை உணர்ந்த குலோத்துங்க பாண்டியன் வாளாசிரியனையும், அவன் மனைவியையும் யானை மீது ஏற்றி நகர்வலம் செய்வித்துச் சிறப்புச் செய்தான். இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"இருவருக்குங் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர் காண்அம்மானை."
(13)

**வெள்ளை யானையின் வினை நீக்கியது**

துருவாச முனிவர் காசியம்பதியில் சிவபூசை செய்து கொண்டிருந்தார். இறையருளால் அவருக்கு இறைவனது திருமுடியில் இருந்த தாமரை மலர் ஒன்று கிட்டியது. பெருமகிழ்வடைந்த துருவாச முனிவர் அவ்விடம் விட்டு அகன்று விண்ணுலகம் சென்றார். விண்ணுலகம் செல்கின்ற வழியில் எதிரில் கண்ட இந்திரனுக்கு அம்மலரினை அன்புடன் கொடுத்தார். ஐராவதம் என்ற வெள்ளையானையின் மீது வந்த இந்திரன் அம்மலரினைச் செருக்கோடு ஒரு கையில் வாங்கி யானையின் மத்தகத்தின் மீது வைத்தான். வெள்ளையானை அம்மலரினைத் தன் துதிக்கையால் இழுத்துக் காலடியில் இட்டுச்

சிதைத்தது. இதனைக் கண்ணுற்ற துருவாச முனிவர் பெரும் கோபம் கொண்டார். இந்திரனையும் வெள்ளை யானையையும் சபித்தார். தேவர்கள் அனைவரும் வெள்ளையானைக்குச் சாபவிடை அளிக்குமாறு வேண்டினர். துருவாச முனிவரும் சினம் தணிந்தார். நூறு ஆண்டுகள் காட்டு யானையாகத் திரிந்த பின்னர் மீண்டும் பழைய தெய்வ நிலைமை அடையும் என்று அருள் புரிந்தார் துருவாசர். கடம்பவனத்தில் உறையும் இறைவனை வழிபட்டுக் குறிப்பிட்ட காலம் கழிந்து வெள்ளை யானை தன் வினை நீங்கித் தெய்வத் தன்மை அடைந்தது. இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்க்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

''காரானைப் போர்வைதழிஇ வெள்ளானைக் கருள்சுரந்த
கடவு ளேயோ.'' (17)

**கல்யானைக்குக் கரும்பளித்தது**

அபிடேகப் பாண்டியனுக்குச் சித்தர் ஒருவர்பால் அன்பும் அச்சமும் பெருகின. அவர் அரியவர் என்பதனை உணர்ந்தான். அபிடேகப் பாண்டியன் உள்ளத்தைச் சித்தர் அறிந்தார். அவர் கூடற்கோயிலின் வடமேற்குத் திசை சென்று அமர்ந்தார். பாண்டியன் மதுரை இறையனாரை வணங்கி வலம் வந்தான். பாண்டிய மன்னன் சித்தருக்கு என்னவேண்டும் என்று வினவினான். அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவன் யான். எட்டாத எல்லாப் பொருளும் வல்ல சித்தன் யான். எமக்கு நீ அளிக்க வேண்டுவது யாதுமில்லை எனச் சித்தர் கூறினார். அதனைச் செவிமடுத்த அபிடேகப் பாண்டியன் பெரு வியப்படைந்தான். சித்தரின் இறுமாப்பையும் செருக்கையும் அளவிட்டறிய எண்ணினான் பாண்டியன். அப்பொழுது அவ்வழியே உழவன் ஒருவன் செழித்த கரும்பொன்றைக் கையில் ஏந்தி வந்தான். அக்கரும்பை அரசன் கையில் வாங்கினான். அக்கரும்பைச் சித்தரிடம் நீட்டினான். அதனை அங்குள்ள கல்யானைக்கு கொடுக்குமாறு வேண்டினான்.

சித்தர் கல்யானையைக் கடைக்கண்ணினால் நோக்க, அது உயிர்பெற்று அக்கரும்பினை உண்டது. இச்செய்தியை மதுரைக் கலம்பகம்,

''பல்லாருயிர்க் குயிரா மதுரேசப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பன்று காண்.'' (20)

என்ற அடிகளில் கூறுகின்றது.

# கலம்பகத்தில் திருவிளையாடற் புராணம்

இரா. தமிழ்ச்செல்வம், குறிஞ்சிப்பாடி

மதுரைக் கலம்பகம் என்னும் இந்நூல் குமரகுருபரரால் பாடப்பட்டதாகும். மதுரையில் கோயில் கொண்டிருக்கும் சொக்க நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சொற்சுவை, பொருட்சுவை விரவ இந்நூல் பாடப்பட்டுள்ளது. கூடல் மாநகரின் சிறப்பு இந்நூலின்கண் மிகுதியாகப் பேசப்படு கின்றன. இந்நூலாசிரியர் ''காசிக்கலம்பகம்'' என்ற மற்றொரு நூலையும் எழுதியுள்ளார். கலம்பக உறுப்புகள் பதினெட்டும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. கலம்பக நூல்களில் மதுரைக் கலம்பகமே சிறப்புடையதாகும். எண்வகை சுவைகளும் இக் கலம்பகத்தில் காணப்படுகின்றன. திருவிளையாடற்புராண வரலாற்று நிகழ்ச்சிகளும் வேறு பல புராணச் செய்திகளும் இந் நூலின்கண் இடம் பெற்றுள்ளன. அது குறித்த தொகுப்பினைக் கீழ்க்கண்ட கட்டுரையில் காணலாம்.

### திருவிளையாடற் புராணச் செய்திகள்

#### பிட்டுக்கு மண் சுமத்தல்

மதுரை மாநகரை அரிமர்த்தன பாண்டியன் ஆட்சி செய்த போது வைகையாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. மன்னன் ஆணைப்படி மக்கள் ஆற்று வெள்ளத்திற்கு அணையிட முயல்கின்றான். பிட்டு விற்கும் வந்தி என்னும் மூதாட்டியின் கூலியாளாகச் சொக்கநாதர்செல்கின்றார். அம்மூதாட்டியிடத்துச் சுவையான பிட்டினை உண்டு உரிய முறையில் கரை அடைக் காமல் விளையாடுகின்றார். மன்னன் அளவற்ற சினத்துடன் பிரம்பினால் பெருமானார் முதுகிலே அடிக்கின்றான். அந்த அடி உலகத்து உயிர்கள் அனைத்தின் மீதும் படுகின்றது. வெள்ளம் சுருங்குமாறு கூடை மண் கொட்டிகரையினை உயர்த்தி மறை கின்றார் இறைவர். மூதாட்டியாகிய வந்தியையும் தூய விமானத்தில் ஏற்றி உடன்கொண்டு செல்கின்றார். விண்ணி னின்றும், மணிவாசகர்க்கு இழைத்த இன்னலின் காரணமாகவே

தாம் இவ்வாறெல்லாம் செய்ததாக மொழிகின்றார். அரிமர்த்தன பாண்டிய மன்னனும் வாதவூரரின் திருவடி பணிக்கின்றான்.

இச்செய்திகளைக் கீழ்வரும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே." (1)

"அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே."(1)

"உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துளி மேலிடு வெண்பிட் டுகந்தன
உறுதியொ டவண்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடை மனுந்திச் சொரிந்தன." (11)

"உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன." (11)

"அம்மாநம் மேலன்று பட்ட தருட்கூடற்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே." (56)

**விறகு விற்றது**

ஏமநாதன் என்ற வடநாட்டு யாழ்ப்பாணன் ஒருவன், இசையில் தனக்கு இணை எவருமிலர் எனச் செருக்குற்றிருந்தான். வரகுண பாண்டியனது அவைக்களம் சென்று இசையில் தன்னை வெல்பவர் எவருமிலர் என்று செருக்கோடு மொழிந்தான். வரகுணபாண்டியன் தன் நாட்டு இசைப்புலவர்களில் ஒருவராகிய பாணபத்திரரை ஏமநாதனை வெல்லும் வகையில் பாடப் பணித்தான். பாணபத்திரர் இறையன்பு மிக்கவர்; கண்ணுதற் கடவுளைக் கவலையுடன் வணங்கினார். இறைவர் விறகு விற்ப வராகத் தோன்றி ஏமநாதனின் இருப்பிடம் சென்று, அங்கு அமுதகீதம் பொழிந்தார். ஏமநாதனிடம் தான் பாணபத்திரரின் அடிமை என்றும் கூறினார். அதனால் அச்சங்கொண்ட ஏமநாதன் இருளிலேயே பாண்டிய நாடு விட்டு அகன்றான். பாணபத்தரரின் , கனவில் தோன்றி விரிசடைக் கடவுள் நிகழ்ந் ததைக் கூறினார். நடந்ததை அறிந்த வரகுண பாண்டியன் பாணபத்திரருக்குச் சிறப்புச் செய்தான். பாணபத்திரர் இறைவரைப் பாடும் பணியில் ஈடுபட்டார். இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்க்காணும் மதுரைக்கலம்பகப் பாடல்வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண னொதுங்கத் திரிந்தன." (11)

**அங்கம் வெட்டியது**

மதுரை நகரை குலோத்துங்க பாண்டியன் ஆட்சி செய்து வந்தான். அவன் ஆட்சிக் காலத்தில் அங்கு வந்த வயது முதிர்ந்த வாளாசிரியன் ஒருவன் பலர்க்கும், வாள் வித்தை பயிற்றுவித்தான். வாள்வித்தை பயின்ற பலருள் சித்தன் என்பவனும் ஒருவன். நன்றி மறந்தவனாய்த் தனியே ஒரு வாள் பயிற்சிக் கூடத்தைத் தொடங்கினான் சித்தன். சித்தன் ஆசிரியரின் வருவாயைக் குறைக்க முற்பட்டதோடு, அவரது மனைவியிடமும் தகாத முறையில் நடக்க முனைந்தான். இந்நிகழ்ச்சியைக் கணவனிடம் கூறக் கலங்கிய அப்பெண் இறைவனை வழிபட்டு இரங்கி நின்றாள். சிவபெருமான் வயது முதிர்ந்த வாளாசிரியன் உருவில் தோன்றிச் சித்தனைப் போருக்கு அழைத்து அவனது அங்கங்களைக் கூறுகூறாக வெட்டி மறைந்தார். இறைவனின் கருணைச் செயலை உணர்ந்த குலோத்துங்க பாண்டியன் வாளாசிரியனையும், அவன் மனைவியையும் யானை மீது ஏற்றி நகர்வலம் செய்வித்துச் சிறப்புச் செய்தான். இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"இருவருக்குங் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர் காண்அம்மானை."
(13)

**வெள்ளை யானையின் வினை நீக்கியது**

துருவாச முனிவர் காசியம்பதியில் சிவபூசை செய்து கொண்டிருந்தார். இறையருளால் அவருக்கு இறைவனது திரு முடியில் இருந்த தாமரை மலர் ஒன்று கிட்டியது. பெருமகிழ் வடைந்த துருவாச முனிவர் அவ்விடம் விட்டு அகன்று விண்ணுலகம் சென்றார். விண்ணுலகம் செல்கின்ற வழியில் எதிரில் கண்ட இந்திரனுக்கு அம்மலரினை அன்புடன் கொடுத் தார். ஐராவதம் என்ற வெள்ளையானையின் மீது வந்த இந்திரன் அம்மலரினைச் செருக்கோடு ஒரு கையில் வாங்கி யானையின் மத்தகத்தின் மீது வைத்தான். வெள்ளையானை அம்மலரினைத் தன் துதிக்கையால் இழுத்துக் காலடியில் இட்டுச்

சிதைத்தது. இதனைக் கண்ணுற்ற துருவாச முனிவர் பெரும் கோபம் கொண்டார். இந்திரனையும் வெள்ளை யானையையும் சபித்தார். தேவர்கள் அனைவரும் வெள்ளையானைக்குச் சாபவிடை அளிக்குமாறு வேண்டினர். துருவாச முனிவரும் சினம் தணிந்தார். நூறு ஆண்டுகள் காட்டு யானையாகத் திரிந்த பின்னர் மீண்டும் பழைய தெய்வ நிலைமை அடையும் என்று அருள் புரிந்தார் துருவாசர். கடம்பவனத்தில் உறையும் இறைவனை வழிபட்டுக் குறிப்பிட்ட காலம் கழிந்து வெள்ளை யானை தன் வினை நீங்கித் தெய்வத் தன்மை அடைந்தது. இவ்வரலாற்றுச் செய்தியைக் கீழ்க்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

''காரானைப் போர்வைதழிஇ வெள்ளானைக் கருள்சுரந்த
கடவு ளேயோ.'' (17)

**கல்யானைக்குக் கரும்பளித்தது**

அபிடேகப் பாண்டியனுக்குச் சித்தர் ஒருவர்பால் அன்பும் அச்சமும் பெருகின. அவர் அரியவர் என்பதனை உணர்ந்தான். அபிடேகப் பாண்டியன் உள்ளத்தைச் சித்தர் அறிந்தார். அவர் கூடற்கோயிலின் வடமேற்குத் திசை சென்று அமர்ந்தார். பாண்டியன் மதுரை இறையனாரை வணங்கி வலம் வந்தான். பாண்டிய மன்னன் சித்தருக்கு என்னவேண்டும் என்று வினவினான். அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவன் யான். எட்டாத எல்லாப் பொருளும் வல்ல சித்தன் யான். எமக்கு நீ அளிக்க வேண்டுவது யாதுமில்லை எனச் சித்தர் கூறினார். அதனைச் செவிமடுத்த அபிடேகப் பாண்டியன் பெரு வியப்படைந்தான். சித்தரின் இறுமாப்பையும் செருக்கையும் அளவிட்டறிய எண்ணினான் பாண்டியன். அப்பொழுது அவ்வழியே உழவன் ஒருவன் செழித்த கரும்பொன்றைக் கையில் ஏந்தி வந்தான். அக்கரும்பை அரசன் கையில் வாங்கினான். அக்கரும்பைச் சித்தரிடம் நீட்டினான். அதனை அங்குள்ள கல்யானைக்கு கொடுக்குமாறு வேண்டினான்.

சித்தர் கல்யானையைக் கடைக்கண்ணினால் நோக்க, அது உயிர்பெற்று அக்கரும்பினை உண்டது. இச்செய்தியை மதுரைக் கலம்பகம்,

''பல்லாருயிர்க் குயிரா மதுரேசப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பன்று காண்.'' (20)

என்ற அடிகளில் கூறுகின்றது.

**உலவாக்கோட்டை அருளியது**

கூடல் நகரில் அடியார்க்கு நல்லான் என்ற உழவர் மரபு வழிந்தோன்றலாகிய சான்றோன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி தர்மசிலை பண்பின் சிகரமாய் விளங்கினாள். அவர்கள் அடியார்க்கு உணவு நல்கும் பணியை மேற் கொண்டனர். அவர்கள் வளம் மிகுந்த செல்வத்தினை மிகுதியாக அடைந்தார்கள். செல்வங் குன்றினும் மெய்யன்பர்கள் கொள்கை குன்றார் என்பதனை மாநிலத்தார்க்கு அறிவிக்க மதுரேசன் மனங்கொண்டார். அடியார்க்கு நல்லான் வாழ்க்கையில் வறுமை பற்றியது. அடியவர்களுக்கு அமுதளிக்க இயலாது வருந்தினான் அவன். அவன் ஆலவாய் அண்ணாலாரை வணங்கி வேண்டினான். அண்ணலாரும் எடுக்குந்தோறும் குறையாத செந்நெற்கோட்டை ஒன்றை அவனுக்கு வழங்கினார். அடியார்க்கு நல்லானும் அதனைப் பெற்று அனைவர்க்கும் அமுதளித்து இறுதியில் சிவனடி சார்ந்தான். இவ்வரலாற்றுச் செய்தியினைக் கீழ்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"அடுத்தங் குலவாக் கோட்டைசுமந்
தளித்தீர் ஒருவர்க் கதுநிற்க." (93)

**பிற புராணச் செய்திகள்**

1. திருமால் நரசிங்காவதாரம் எடுத்து இரண்ய கசிபு என்னும் அரக்கனைக் கொன்று அவனது குருதி முழுவதையும் குடித்து மயங்கிச் செருக்குற்றார். அதனால் திருமால் மூன்று உலகங்களுக்கும் வருத்தமிழைத்தார். பிரமன் முதலிய தேவர் களால் இச்செய்தியினையறிந்த சிவபெருமான் சாப உருவத்தைக் கொண்டு நரசிங்கத்தைக் கொன்று அதன் தோலை மேற் கொண்டார். இவ்வரலாற்றுச் செய்தியினைக் கீழ்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

"புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீரமொடுங்கத் துறந்தன." (11)

2. சோழநாட்டில் சீர்காழி என்னும் பகுதியில் அந்தணர் குலத்தில் கௌணியர் கோத்திரத்தில் சிவபாத இருதயர்க்குத் திருக்குமாரராய் இறையருளால் தோன்றியவர் ஞானசம்பந்தர். இவர் திருக்கோலக்கா என்னும் திருப்பதியை அடைந்தார்.

அங்கு அவர் திருக்கோயிலை வலம் வந்தார். இறைவனது அத் திருக்கோயில் முன்னின்று கைகளால் ஒத்தறுத்துத் திருப்பதிகம் பாடினார். இறைவன் அவர்க்குப் பொற்றாளம் அளித்துச் சிறப்புச் செய்தார். இவ்வரலாற்றுச் செய்தியினைக் கீழ்காணும் மதுரைக் கலம்பகப் பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

''புகலியர் குரிசில்பண் ணொடுதமி ழருமை
யறிந்தொரு தானம் வழங்கப் புகுந்தன'' (11)

3. சுந்தரமூர்த்தி நாயனார் தன் மனைவி பரவை நாச்சியார்க்குப் பங்குனி உத்தரத் திருவிழாச் செலவிற்குப் பொருள் கொடுத்ததற்காகப் பொன் கொண்டு வரும் பொருட்டுத் தலயாத்திரை மேற்கொள்கின்றார். திருமுதுகுன்று என்னும் திருப்பதிக்குச் சென்று அங்குள்ள இறைவனை வணங்கி வலம் வந்து திருப்பதிகங்கள் பாடுகின்றார். திருமுதுகுன்றூர் இறைவர் சுந்தரமூர்த்தி நாயனார்க்கு அருள் செய்கிறார். இறைவர் சுந்தரருக்குப் பன்னீராயிரம் பொன் கொடுத்தருளினார். இறைவன் ஆணைப்படி சுந்தரர் அப்பொன் முழுவதையும் மணிமுத்தாற்றில் புகவிட்டார். பிறகு அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங்களில் உள்ள இறைவனை வணங்கிச் சென்றார். பின்னர்த் திருவாரூர் சென்றடைந்தார். ஒரு நாள் சுந்தரர், தன் மனைவியரொடுங்கோயில் சென்று வன்மீகநாதரை வணங்கி நின்றார். அக்கோயிலின் மேற்றிசையில் இருக்கின்ற கமலாலயக் குளத்தை அடைந்து அதில் இறங்கினார். அங்கே பதிகம் பாடி இறையருளால் பொற்காசுகளை எடுத்துக்கொண்டார் என்பது கதை.

''கொங்குரை யாற்றிலிட்டுக் குளத்தினில் தேட''

என்பது அப்பாடல் வரியாகும்.

இதைத் தவிர பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்த படலம் இங்கு 34-ஆம் பாடலிலும், இந்திரன் பழி தீர்த்த படலம் 42, 86-ம் பாடல்களிலும், விருத்த குமார பாலரான படலம் 68-ஆம் பாடலிலும், பலகையிட்ட படலம் 47-ஆம் பாடலிலும், பழியஞ்சிய படலம் 29, 54-ம் பாடல்களிலும், இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம் 61-ஆம் பாடலிலும், கரிக்குருவிக்கு அருள் புரிந்த படலம் 87-ஆம் பாடலிலும், எழுகடல் அழைத்த படலம் 90-ம் பாடலிலும், நரியைப் பரியாக்கிய படலம் 71-ஆம்

பாடலிலும், கால்மாறியாடிய படலம் 82-ஆம் பாடலிலும், நாரைக்கு முத்தியளித்த படலம் 87-ஆம் பாடலிலும்; தடாதகைப் பிராட்டியார் திருமணப்படலம் 60, 77, 92 ஆகிய பாடல்களிலும் கூறப்படுகின்றன.

இங்ஙனம், மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதப் பெருமானை பாட்டுடைத் தலைவராகக் கொண்டு குமர குருபரரால் எழுதப்பட்ட மதுரைக் கலம்பகமாகிய இந்நூலில் திருவிளையாடற் புராணச் செய்திகளும், வேறு சில புராணச் செய்திகளும் இடம் பெற்றுச் சிறப்பிடம் பெறுகின்றன. இவை குமரகுருபர அடிகளின் பல திறப்பட்ட அறிவைப் புலப்படுத்து கின்றன. கேட்பவர்க்குத் தேனாக இனித்துப் பேரின்பத்தை நல்கும் இப்பாடல்களை படித்து இன்புற வேண்டியது மிக மிக அவசியமாகும்.

# முருகவேள் வடிவழகு

இராம. தனசேகரன், மதுரை

குமரகுருபரர் தாமும் ஞானம் பெற்று, பிறருடைய ஞானப்பசியையும் போக்க வேண்டி துறவு மேற்கொண்டு, தவ வாழ்வு வாழ்ந்த தவசீலர். இவர் கர்சியில் மன்னர் பாதுஷாவின் உதவியுடன் கங்கைக்கரையில் கேதார கட்டத்தில் குமாரசாமி மடமும், கேதாரீசுவர் கோயிலும் நிறுவிச் சைவமும் தமிழும் தழைக்க அரும்பாடு பட்டவர். இத்தகு சிறப்பு வாய்ந்த குமரகுருபரரின் முதல் பேச்சே 'கந்தர் கலிவெண்பா' என்பது குறிப்பிடத்தக்கது. முருகப்பெருமானிடம் மிகுந்த ஈடுபாடு கொண்ட குமரகுருபரர் அவனது அழகிய திருவுருவச் சிறப்பினைக் கேசாதிபாத முறையில் கந்தர் கலிவெண்பாவில் வெளிப் படுத்தியுள்ள திறனை மதிப்பிடும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

## முருகவேள் வடிவழகு

இளமையும் அழகும் கொண்டு மன்மதனை ஒத்த பேரழகும் வாய்ந்தவன் முருகவேள். இவன் பண்டைத்தமிழரின் முழுமுதற் கடவுளாவான். முருகை உடையவன் முருகன். 'முருகு' என்பது மணம், இளமை, கடவுட்டன்மை, அழகு ஆகிய நான்கு பொருளடங்கிய ஒரு சொல். இச்சொல்லால் பண்டைத் தமிழர்கள் முழுமுதற் பொருளை அழைத்தனர்.

தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க அசுரர்களின் அநீதியை அழிக்க சிவபெருமானின் நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றியவன் முருகன். சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்ற, அவற்றை வாயுதேவன் தாங்கிச் சென்று அக்கினி தேவனிடம் கொடுக்க, அக்கினி தேவன் கங்கையில் விட, கங்காதேவி அவற்றைச் சரவண பொய்கையில் விடுத்தனள். சரவண பொய்கையில் ஆறு பொறிகளும் சேர்ந்து ஆறு உருவங் களாய் உருவாகி, கார்த்திகை மகளிர் அறுவர் பாலூட்ட வளர்ந்து, உமாதேவி எடுத்தணைக்க ஆறுமுகங்களும் பன்னிரு

திருக்கரங்களும் கொண்ட ஒருருவாய் முருகவேள் எழுந்தருளினன் (அபிதான சிந்தாமணி – ப. 474).

சிவபெருமானின் நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றியதால் ஞானமும், அம்பிகையிடம் பாலுண்டதால் அருளும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற முருகவேள் உயிர்க்கூட்டங்கள் உய்வு பெற வேண்டுமென்ற பெருங்கருணையினால், அவை கண்களால் கண்டு இன்புறுதற் பொருட்டு அழகிய திருவுருவம் கொண்டு, கோலம் காட்டுகின்றான்.

குமரகுருபரர் முருகவேளின் அழகிய திருவுருவச் சிறப்பினை அவனது திருமுடி தொடங்கி திருவடி முடிய கேசாதிபாத முறையில் வருணித்துள்ளார். முருகவேளின் பொன்னாலியன்ற திருமுடி, பிறைச்சந்திரனை ஒத்த அழகிய நெற்றி, செந்தாமரைக் கண்கள், மகரக்குழை அணிந்த செவிகள், செவ்விதழ்வாய், திருமொழி, ஆறு திருமுகங்கள், பன்னிரு தோள்கள், அவற்றில் அணியப் பெற்றுள்ள மலர் மாலைகள், பன்னிரு திருக்கரங்கள், அகன்ற மார்பு, அந்த மார்பில் அணியப் பெற்ற முப்புரி பொன் நூல், உருத்திராட்ச மாலை, இடையை அலங்கரிக்கும் பட்டாடை, பொன் அரைஞாண், கச்சை மற்றும் திருவடியில் அணியப்பெற்றுள்ள பொன்னாலான கிண்கிணி, சிலம்பு முதலானவற்றைத் தலையில் தொடங்கிப் பாதம் வரை மேலிருந்து கீழாக (கேசாதிபாதம்) வருணித்துள்ளார்.

**திருமுடி முதலியன**

குமரகுருபரர் முதலாவதாக முருகவேள் தலையில் அணிந்துள்ள திருமுடியின் சிறப்பு மற்றும் அவனது அழகிய முகத்தின் உறுப்பு நலன்களைக் குறிப்பிட்டுள்ளார். முருகவேள் நவரத்தினங்கள் பதித்து, பசும்பொன்னாற் செய்யப் பெற்ற மின்னொளி பொருந்திய அழகிய மணிமுடியினைத் தன் தலையில் அணிந்துள்ளான். அவனது நெற்றி கலைகள் குறைந்த ஆறு பிறைத் துண்டங்களை வரிசையாகப் பதித்தாற் போன்று அமைந்து அவற்றில் திருநீற்றுப் பட்டையும் குங்குமப் பொட்டழகும் சிறக்க அமைந்துள்ளன. முருகவேளின் பன்னிரு கண்களும் செந்தாமரை மலர்கள் பூத்தாற்போல அருளைப் பொழியும் தன்மை கொண்டுள்ளன. அவனது திருச்செவிகள் ஒளிபொருந்திய பன்னிரண்டு மகரக்குண்டலங்களால் அழகுற

அமைந்துள்ளன. குளிர்ச்சி பொருந்திய புன்முறுவல் பூத்த குமுதமலர் போன்ற செவ்வாய் இதழ்களும், அவற்றிலிருந்து வெளிப்படும் அருள் மொழிகளும் பல சென்மங்களில் வந்த தாபங்களைப் போக்கும் தன்மை கொண்டு அமைந்துள்ளன. இதனைக் குமரகுருபரர்,

"மின் உருவம் தோய்ந்த நவரத்னச் சுடர்மணியால்
செய்த பைம்பொன் வாய்ந்த கிரண மணிமுடி,
தேய்ந்த பிறைத்துண்டம் இருமூன்று நிரை தோன்றப்
பதித்தனைய புண்டரம் பூத்த நுதற் பொட்டழகு,
விண்ட பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்கு
அருள் பொழியும் கண்மலர் ஈராறு,
பருதி பலவும் எழுந்து சுடர் பாலித்தாற் போலக்
குலவும் மகரக்குழை, நிலவு உமிழும்
புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாய்,
சென்ம விடாய் தீர்க்கும் திருமொழி"

(கந்தர் கலிவெண்பா- 36-41)

என்று குறிப்பிடுகின்றார்.

### திருமுகங்கள்

முருகவேளின் ஆறுதிருமுகங்களும் அறுவகை செயல்களைச் செய்யும் திறன் கொண்டவை. ஆறுதிருமுகங்களின் செயற்பாடுகள் குறித்து அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களை அளித்துள்ளனர். சிங்காரவேலு முதலியார் அபிதானச் சிந்தாமணியில், "முருகப்பெருமானின் ஆறுதிருமுகங்களும் முற்றறிவு, அளவிலின்பம், வரம்பிலாற்றலுடைமை, தன்வயமுடைமை, பேரருளுடைமை, இயற்கையறிவு என்னும் ஆறு குணங்களைக் கொண்டு திகழ்வதாகக் குறிப்பிடுகின்றார்.

நக்கிரர் திருமுருகாற்றுப்படையில், முருகவேளின் ஆறு திருமுகங்களும் முறையே, "உலக இருளைப் போக்குகின்ற சுடர்களைத் தோற்றுவித்தல், அன்பர்கள் வேண்டும் பொருள்களை வழங்குதல், அந்தணருடைய வேள்விகட்கு இடையூறு நேரா வண்ணம் காத்தல், நூல்களால் விளக்க முடியாத மெய்ப்பொருளை அன்பர்களுக்கு உணர்த்துதல், போரில் அசுரர் முதலியோரை அழித்து மறக்கள வேள்வியை நிகழ்த்துதல், குறவள்ளியுடன் மகிழ்ந்து இன்புறுதல் போன்ற செயல்களை நிகழ்த்துவதாகக் குறிப்பிடுகின்றார்.

முருகவேளின் ஆறுதிருமுகங்களின் செயற்பாடுகள் குறித்த நக்கீரரின் விளக்கத்தினை அடியொற்றி சிறிது வேறுபாட்டுடன் குமரகுருபரர் கந்தர் கலிவெண்பாவில் விளக்கம் தந்துள்ளார். முருகவேளின் ஆறுதிருமுகங்களும் முறையே, "கொடிய அரக்கனாகிய சூரனையும் அவனைச் சார்ந்த பகைவர்களையும் அழித்து அவர்களுக்கு அருளுதல், உயிர்களின் வினைத்துன்பங்களைப் போக்கிப் பேரானந்தம் அளித்தல், அடியவர்களுக்கு வேதங்கள், ஆகமங்கள் ஆகியவற்றில் ஏற்படும் ஐயங்களைத் தெளிவித்தல், அன்பர்களின் அக இருளைப் போக்கி மெய்ஞ்ஞான ஒளியினை வழங்குதல், வள்ளி தேவயானையுடன் இங்கிதமாக அன்புமொழி பேசுதல், மற்றும் தன்னைச் சரண் புகும் அன்பர்களுக்கு வேண்டிய வரங்களை வழங்குதல்" போன்ற செயல்களைச் செய்வதாகக் குறிப்பிடுகின்றார். இதனைக் குமரகுருபரர்,

> "வெஞ்சூரனைத் தடிந்து
> தெவ்வர் உயிர்சிந்தும் திருமுகம், எவ்வுயிர்க்கும்
> பேரின்ப வாழ்வுதரும் செய்ய மலர் முகம்,
> சூழ்வோர் வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள்
> யாவும் முடிக்கும் கமல முகம்,
> விடுத்து அகலாப் பாசஇருள் துறந்து
> பல்கதிரிற் சோதிவிடும் வாச மலர்வதன மண்டலம்,
> நேகமுடன் போகம்உறும் வள்ளிக்கும் புத்தேளிர்
> பூங்கொடிக்கும் மோகம் அளிக்கும் முகமதி,
> தாகமுடன் வந்து அடியிற் சேர்ந்தோர் மகிழ
> வரம் பலவும் தந்தருளும் தெய்வ முகத்தாமரை"
>
> (க. க, 42-47)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

குமரகுருபரர் குறிப்பிட்டுள்ள முருகவேளின் ஆறுதிருமுகங்களின் செயற்பாடுகளை அறிஞர் கி. வா. ஜகந்நாதன். "வீரத் திருமுகம், இன்பத்திருமுகம், ஞானத்திருமுகம், ஒளித்திருமுகம், அன்புத்திருமுகம், அருள்திருமுகம்" என்று வகைப்படுத்தியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

'அகத்தின் அழகு முகத்தில்' என்றாற் போல் முருகவேளின் அருள் உள்ளம் அவனது ஆறுமுகங்களின் செயல்களின் வழி வெளிப்படுத்தப் பட்டுள்ளமையை உணரலாம்.

**திருத்தோள்கள்**

முருகவேள் பன்னிரு திருத்தோள்களைக் கொண்டுள்ளான். அவை மலை போன்ற தோற்றத்தினைக் கொண்டுள்ளன. அவற்றில் கடம்ப மலர், குரவ மலர் ஆகியவற்றால் ஆகிய மலர் மாலைகள் அணியப் பெற்றுள்ளன. இதனைக் குமரகுருபரர்,

"கொந்து அவிழ்ந்த
வேரிக்கடம்பும் விரைக்குரவும் பூத்து அலர்ந்த
பாரப்புய சயிலம் பன்னிரண்டு (க. க. 47-48)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

**திருக்கரங்கள்**

முருகவேள் பன்னிரு திருக்கரங்களைக் கொண்டு திகழ்கின்றான். அவனது பன்னிரு திருக்கரங்களும் தேவர்களுக்கு அருளல், மழை பெய்வித்தல், அணிகலன்கள் அணிந்திருத்தல், போர்க்கருவிகள் தாங்கியிருத்தல் போன்ற நிலையில் அமைந்துள்ளன.

முருகவேளின் பன்னிரு திருக்கரங்களின் செயற்பாடுகளைக் குமரகுருபரர் குறிப்பிடும்பொழுது அவை முறையே, தேவர்களுக்கு அமுதம் வழங்குதல், தேவமகளிர்களை விரும்பி அணைந்து அவர்களுக்கு அருளல், இடைவிடாது மழையைப் பெய்வித்தல், மலர் மாலைகளை ஒருங்கே அணிதல், தன் மார்பின் மீது வைத்துக் கொண்டிருத்தல், இடப்பக்க இடுப்பில் வைத்துக் கொண்டிருத்தல், மேல்தொடையைத் தொட்டுக் கொண்டிருத்தல், வீர வளையை அணிந்திருத்தல், மணி பொருந்தியிருத்தல், அங்குசப் படையைத் தாங்கி நிற்றல், கேடகப் படையைச் சுழற்றுதல், மற்றும் வாட்படையினை அசைத்தல் போன்ற செயல்களைச் செய்வதாகச் சுட்டுகின்றார். இதனை,

"ஆரமுதம் தேவர்க்கு உதவும் திருக்கரம்,
சூர்மகளிர் மேவக்குழைந்து அணைந்த மென்கரம்,
ஓவாது மாரி பொழிந்த மலர்க்கரம்,
பூந்தொடையில் சேர அணிந்த திருக்கரம்,
மார்பகத்தில் வைத்த கரம், வாம மருங்கிற் கரம்,
உய்த்த குறங்கில் ஒருகரம், மொய்த்த சிறுதொடி சேர்கை,
மணி சேர்ந்த தடங்கை, கறுவுசமர் அங்குசஞ் சேர்கை,
தெறுபோர் அதிர் கேடகம் சுழற்றும் அங்கை,
கதிர்வாள் விதிர்க்கும் கரம்" (க. க., 48-52)

என்று குமரகுருபரர் கூறுவதிலிருந்து அறியலாம்.

**திருமார்பு முதலியன**

முருகவேளின் திருமார்பானது தேவமகளிர்கள் விரும்பித் தழுவுகின்ற சிறப்பிற்கும், அழகிய பொன்னாலும் மணிகளாலும் அமைந்த அணிகலன்கள் அணியப்பெற்றதும் அகன்றதுமான நிலையில் உள்ளது. அந்த மார்பில் பசும்பொன்னால் செய்த முப்புரி நூலும், உருத்திராட்ச மாலையும், அழகுற அணியப் பெற்றுள்ளன. அடுத்து முருகவேளின் இடையழகினைக் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார். முருகவேளின் இடையில் பூவேலை பாடமைந்த பட்டாடைகள் புனையப் பெற்று, பொன் அரைஞாண் பூட்டி அதன்மேல் அழகிய கச்சு அணியப்பெற்று அலங்கரிக்கப்பட்டுள்ளது என்கிறார். இதனை,

'செவ்வாய்க் கொடி இடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூண் அகல் மார்பு
பைம்பொற் புரிநூலும் கண்டிகையும்
பூம்பட்டுடையும் அரைஞாணும்
கச்சை அழகும் - திருவரையும்' (க. க., 53-55)

என்ற குமரகுருபரரின் கூற்று மெய்ப்பிக்கின்றது.

**திருவடி**

முருகவேள் திருப்பாதத்தில் நாததத்துவமே கழலாக அமைந்து விளங்குகின்றது. அத்துடன் பொன்னாலான கிண்கிணியும், சிலம்பும் அணியப்பெற்று அவை முறையே ஒலிக்கும் சிறப்புடன் திகழ்கின்றன. இதனை,

'நாதக்கழலும் நகுமணிப் பொன் கிண்கிணியும்
பாதத்து அணிந்த பரிபுரமும் ஒலிக்க' (க. க., 56)

என்று குமரகுருபரர் குறிப்பிடுகின்றார்.

**தோற்றப்பொலிவு**

பேரழகும் தெய்வீக வடிவுங்கொண்ட முருகவேள் தோன்றும் காட்சி மிகவும் ரம்மியமானதாகும். அவன் நூறாயிரம் கோடி இளங்கதிர்கள் ஒருங்கு தோன்றினாற் போன்று, கிளுகிளுக்கச் செய்யும் செக்கச்சிவந்த ஒளிப்பிழம்பாக தெய்வத்திருமேனி கொண்டு தோன்றி, அன்பர்களுக்குக் காட்சி வழங்குகின்றான். முருகவேள் கோலங்கொண்டு வழங்கும் திருக்காட்சியினைக் குமரகுருபரர்,

"சோதி
இளம்பருதி நூறாயிரங் கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவு" (க.க., 56-57)

என்று குறிப்பிடுகின்றார்.

முருகவேள் செக்கச்சிவந்த ஒளிப்பிழம்பாகத் திருமேனி கொண்டு தோன்றிய அழகிய தோற்றப் பொலிவு, அவன் அணிந்துள்ள ஆடை, ஆபரண, அணிகலன்கள் போன்றவை கண்களுக்கு இனிமை பயப்பதாகவும், உயிர்க்கூட்டங்களுக்கு அவன் செய்கின்ற அருட்செயல்கள் மனத்திற்கு இனிமை பயப்பதாகவும் அமைந்துள்ளன எனலாம்.

**நிறைவு**

1. முருகவேள் சிவந்த ஒளிப்பிழம்பாகத் தெய்வீக வடிவு கொண்டு அன்பர்களுக்குக் காட்சி வழங்குகின்றான்.
2. முருகவேள் தலையில் பசும்பொன் மணிமுடியும், பிறைச்சந்திரனை ஒத்த அழகிய நெற்றியும், அருளைப் பொழிகின்ற செந்தாமரைக் கண்களும், மகரக்குண்டலங்கள் அணியப்பெற்ற செவிகளும், புன்முறுவல் பூத்த செவ்வாய் இதழ்களும், அவற்றில் வெளிப்படும் அருள் மொழியும் கொண்டு திகழ்கின்றான்.
3. முருகவேளின் ஆறுதிருமுகங்கள் முறையே வீரம், இன்பம், ஞானம், ஒளி, அன்பு மற்றும் அருள் ஆகியவற்றினை வெளிப்படுத்தும் நோக்கில் அமைந்துள்ளன.
4. முருகவேளின் பன்னிருதோள்கள் மலையினை ஒத்தும், அவற்றில் மலர்மாலைகள் அணியப் பெற்ற சிறப்பிற்கும் உரியன. திருக்கரங்கள் பன்னிரண்டும் தேவர்களுக்கு அருளல், மழை பெய்வித்தல், அணிகலன்கள் அணிந்திருத்தல், போர்க்கருவிகள் கொண்டிருத்தல் என்ற நிலையில் அமைந்துள்ளன.
5. முருகவேள் மார்பு தேவமகளிர் விரும்புகின்ற சிறப்பும், அழகிய ஆபரணங்கள் அணியப்பெற்றும், அகன்றும் விளங்குகின்றது. அவனது இடையினைப் பட்டாடை, பொன் அரைஞாண், கச்சு போன்றவையும் திருவடியினைக் கிண்கிணி, சிலம்பு போன்றவையும் அலங்கரிக்கின்றன.
6. முருகவேளின் அழகிய தோற்றப்பொலிவு கண்ணிற்கும், அவனது அருட்செயல்கள் மனத்திற்கும் இனிமை பயப்பனவாய் அமைந்துள்ளன.

# நீதிநெறி விளக்கத்தில் கல்விச் சிந்தனை

அ. தனலெட்சுமி, நாகப்பட்டினம்

காலத்தால் அழியாத மானுட உண்மைகளை மையமாகக் கொண்ட இலக்கியம் நிலைபேறடையும். சமுதாயம் எவ்வாறு இருக்கிறது என்பதைப் பாடாமல், எப்படி இருக்க வேண்டும் என்றும், அது உயர்வடைவதற்கான வழிவகைகளையும் கூறும் குறிக்கோள் இலக்கியமே காலத்தை வெல்லும் இலக்கியமாகச் சிறக்க முடியும். அவ்வகையில் நிலைபேறுடைய இலக்கியங்களுள் ஒன்றான நீதிநெறி விளக்கத்தில் கல்வி, அரசியல், சமுதாயம், இல்லறம், துறவறம் முதலியவை குறித்து சமூக வளர்ச்சிக்கு வேண்டிய நெறிமுறைகளைத் தெளிவு படுத்தியுள்ளார் குமரகுருபர அடிகளார். ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி என்பது மக்களின் கல்வியறிவைக் கொண்டே அளவிடப் படுகின்றது. அவ்வகையில் நீதிநெறி விளக்கத்தில் கல்விச் சிந்தனை குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

பிறவிகளிலேயே பெறுதற்கரிய சிறப்புடையது மானுடப் பிறவியாகும். மானுடம் சிறக்க முதல் தேவை கல்வியறிவைப் பெறுதலேயாகும். விலங்குகளினின்றும் மக்களை வேறுபடுத்துவது கல்வியறிவுதான். மக்களை வளப்படுத்தும் கல்வியறிவுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் குமரகுருபர அடிகளார் தம் நீதிநெறி விளக்கத்தில் முதற்கண் கல்வி பற்றி வலியுறுத்துகின்றார். கல்வியின் இயல்பு, கல்வியின் சிறப்பு, கற்ற கல்வியைப் போற்றித் தாம் பின்பற்றலுடன் மற்றவர்க்கும் அறிவுறுத்துவது, கற்ற கல்வியைப் பொருளாசை கொண்டு பிறருக்கு விலைகூறி விற்பதன் இழிவு முதலியவை பற்றித் தெளிவுபடுத்தியுள்ளார் குமரகுருபர அடிகளார்.

> 'அன்னசத்திரம் ஆயிரம் அமைத்தல்
> ஆலயம் பதினாயிரம் நாட்டல்
> அன்ன யாவினும் புண்ணியம் கோடி
> ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்'

என்பார் பாரதியார் 'அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே' எனக் கூறிய முன்னோர்கள் அறிவுபெறுதலை நூற்பயனாக இணைக்க மறந்தனர். 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று கூறியவர்கள் கல்விச்சாலை இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கூறவில்லை. மக்களின் உடல் நோய்க்கு மருத்துவம் போல மடமை நோய்க்கு மருந்தாக விளங்கும் கல்விச்சாலைகள் மிக இன்றியமையாதவை.

**கல்வி**

எது சுதந்திரம் அளிக்குமோ அதுதான் கல்வி. சுதந்திரம் என்பதில் சகலவிதமான அடிமைத்தனத்தினின்றும் விடுதலை பெறுவதும் அடங்கும். இந்த லட்சியத்தைப் பெறுவதற்காக மட்டும் தேடும் அறிவே உண்மையான கல்வியாகும் என்பர் காந்தியடிகள். கல்வியென்பது வாழ்க்கையோடு தொடர்புடைய தாகவும் வாழ வழிவகுக்கிற நிலைக்களனாகவும் அமைய வேண்டும். இவ்வகையில் தொடர்பில்லாத கல்வியை எத்தனை ஆண்டுகள் எந்த மொழியில் படித்தாலும் நமக்குப் பயனில்லை. கல்வி என்பது மனிதனை முழுமையாக்க வேண்டும்; இல்லாவிடில் மனித மதிப்புகளையாவது வளர்க்க வேண்டும்; இரண்டும் இல்லாத நிலையில் வேறுபாட்டையாவது வளர்க்காமல் இருக்க வேண்டும் என்பர் இரா. பாலசுப்பிரமணியன் (சுவடுகள்-ப.103).

கல்வி என்பது மாணவரிடத்து ஒழுக்கத்தையும் நேர்மை யையும் வளர்க்க வேண்டும். அறிவுபெறுதல், ஆராய்ச்சி யாளராதல் மக்களுக்கு அறிவை எடுத்துச் சொல்லல் பிறரை எதிர்பார்க்காமல் சுதந்திரமாக வளமோடு வாழ்வதற்குத் துணை செய்தல் முதலியவற்றுக்கு படிப்பு அடிப்படையாய் அமைதல் வேண்டும்.

இன்று கல்வி கற்கும் முறையில் இலட்சியம் என்பது இல்லை. எதையோ படிப்பதும், படிப்பு வந்தால் படித்துக் கொண்டே போவதும், படிப்பு வராவிட்டால் நிறுத்திவிடுவதும், பட்டம் பெற்றுவிட்டால் அன்றுமுதல் வேலை தேடித்திரிவதும், ஏதோ கிடைத்த வேலையை ஒப்புக்கொண்டு வாழ்க்கை நடத்துவதும், தன் குடும்பம் மட்டும் முன்னுக்கு வரப் பார்ப்பதும், அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்வதும் இவைதான் இன்றைய கல்விநிலை. (பெரியாரியல்-கல்வி,

மா. நன்னன்) வயிற்றுப்பிழைப்புக்கு ஓர் ஆதாரமாகக் கருதியே கல்வி கற்றலும் கற்பித்தலும் இன்று நடைபெறுகிறது.

இன்று பட்டங்களுக்கும் பண்பாட்டுக்கும் உறவில்லை. பள்ளிக்கூடம் திருக்கோயிலைப் போல பேணப்படவேண்டும். ஆசிரியர் மாணாக்கரின் கூட்டு முயற்சியிலேயே கல்வியின் திறன் அமையும். வாழ்க்கை முழுவதும் நூல் படிக்கும் பழக்கம் தொடரின் இன்பம் பயக்கும். மனப்பாடம் செய்து தேர்வில் ஒப்பிப்பது மட்டுமே கல்வி என்ற நிலை அமையின் சிந்தனை ஊற்று தூர்ந்து போகும். எழுச்சி மிக்க படைப்பாற்றல் மிக்கதே கல்வி. மனிதனின் முதலும் முடிவுமான தேவை அறிவே. படிப்பறிவைவிட பட்டறிவு மிக்க பயன் தரும். வகுப்பறைக்குள் போதிப்பதைவிட வகுப்பறைக்கு வெளியே நிறைய கற்கலாம். சூழ்நிலையைத் தனக்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்ளப் போராடும் சுதந்திரமான கல்வியறிவே மனித இயல்பு என அறிவியல் சிந்தனையாளரும் ஆன்மீகச் செம்மலுமான தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிட்டுள்ளார். (சிந்தனைத்துளிகள் ப. 106-107).

**கல்வியின் இயல்பு**

மக்கள் சமுதாயத்துக்கு உறுதுணையாக விளங்குவது கல்வி மட்டுமே. அறியாமையை அகற்றி அறிவை விரிவுபடுத்தி புகழைக் கொடுப்பதுடன் துன்பம் வந்துற்றவிடத்து அத்துன்பத்தினின்றும் விடுபட உதவுவதும் கல்வியே என்கிறது நீதிநெறி விளக்கம்.

கல்வியைக் கற்கும்போது தொடக்கத்தில் சிறிது துன்பமாகத் தோன்றினாலும் பிறகு இன்பத்தையே தரவல்லது கல்வி. ஆனால் காமமோ தொடக்கத்தில் இன்பமளிப்பதுபோல் தோன்றி முடிவில் துன்பத்தையே கொடுக்கும் என கல்வி இன்பத்தைக் காம இன்பத்தோடு இயைபுபடுத்திக் கூறி காம இன்பத்தினும் கல்வியின்பமே ஏற்பதற்குரியது என வலியுறுத்துகின்றது நீதிநெறி விளக்கம்.

கற்றவற்றை உருப்போட்டு ஒப்பிப்பது மட்டுமே கல்வியாகிவிடாது. கருத்தைப் புரிந்துகொண்டு அறிவை வளர்த்துக் கொள்ளுதலும் இடத்துக்கேற்றவாறு பொருளை யூகித்து உணர்ந்து கொள்ளுகின்ற உய்த்துணர்வும் இல்லையெனில்

அக்கல்வியால் பயனில்லை. உய்த்துணரும் ஆற்றலுடன் சொல் வன்மையும் பெற்றிருத்தல் பொன்னால் செய்யப்பட்ட மலரானது மணத்தையும் பெற்றது போன்ற சிறப்புக்குரியது என்கிறார் குமரகுருபர அடிகளார்.

'எத்துணைய வாயினும் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்-உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னாகு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து' (நீ.நெ.வி. 5)

எதனையும் உய்த்துணருகின்ற ஆற்றலும் கற்றோர் நிரம்பிய அவையின்கண் தான் கருதிய ஒன்றை அச்சமின்றி உறுதியோடு எடுத்துரைக்கின்ற சொல்வன்மையும் கல்வியின் நோக்கங்களாக அமைய வேண்டும் என்கிறார்.

இக்கருத்து

இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார் (திருக்குறள்-650)

என்ற பொய்யாமொழியின் விரிவுரையாக அமைவது கருதத் தக்கது.

### பிரம்மனும் புலவனும்

கல்விக் கடவுளைக் கலைமகளாகக் கூறுவது மரபு. அக்கலை மகளை நாவில் ஏற்றிருக்கும் நிலையில், படைப்புக் கடவுளாகக் கூறப்படுகின்ற பிரம்மதேவனும் புலவனும் சமமானவர்கள். எனினும் பிரம்மதேவனால் படைக்கப்படுகின்ற வெற்றுடம்புகள் விரைவில் அழிந்துவிடும் தன்மையன. ஆனால் புலவன் படைக்கின்ற நூலுடம்புகளோ காலத்தை வென்று தலைமுறை களைக் கடந்து நெடுங்காலம் நிலைத்து நின்று புலவனின் புகழைப் பரவச்செய்து கொண்டிருக்கும் தன்மையுடையன. எனவே படைப்புக் கடவுளினும் புலவனே உயர்ந்தவன் என்கிறார். இவ்வாறு படைப்பாற்றல் கொண்ட புலவனைக் கடவுளினும் மேலாக உயர்த்திப் பெருமைப் படுத்துகின்றார்.

'கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் – மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு' (நீ. நெ. வி. 7)

புதிய செய்திகளை மேன்மேலும் கற்பது தேவையெனினும் முன்பு கற்றவற்றை மறவாமல் போற்றிப் பின்பற்றுவது சிறப்பானது. கற்றவற்றை மறந்துவிட்டு மேன்மேலும் கற்பது என்பது கையில் உள்ள பொருள்களைத் தூர எறிந்துவிட்டுப் பிறகு புழுதி மண்ணை அரித்து பொன்துகளைச் சேர்ப்பதற்கு நிகரானது என்கிறார். (நீ. நெ. வி. 9). கல்வி என்பது வாழ்வோடு தொடர்புடையதாக இருக்க வேண்டுமென்பதை இவ்விடத்து வலியுறுத்துகின்றார் குமரகுருபர அடிகளார். 'மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை' என முதுமொழிக்காஞ்சியும் இக்கருத்தை வலியுறுத்தும்.

**கல்வியே அணிகலன்**

கற்றோர்க்கு கல்வி நலனே சிறந்த அணிகலனாக அமைந்து சிறப்பு தரும். கல்வியறிவின் பெருமையை உணராதவர்களே பொன் முதலான பிற ஆபரணங்களை அணிந்துகொண்டு தம்மை அழகுபடுத்திக் கொள்வர்.

'கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம் (நீ. நெ. வி. 13)

என்கிறது நீதிநெறி விளக்கம். 'கல்வியழகே அழகு' என நாலடியாரும், இதனை முன்மொழியும். எனவே பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு, பொன்னையும் பொருளையும் சேர்த்து வைப்பதற்குப் பதிலாக அவர்களை அறிவாளியாகக் கல்வி வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கலாம். இதனையே வான்புகழ் வள்ளுவம் கேடில் விழுச்செல்வம் கல்வி எனச் சிறப்பிக்கும்.

எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற (நாலடியார் – 134)

என நாலடியாரும் வலியுறுத்தும். பொருட் செல்வத்தைத் தேடி வைப்பதைவிட கல்விச் செல்வத்தைத் தேடி வைத்தலே சிறப்பானது. நிலையானது. அழிவில்லாதது என்கிறது நாலடியார்.

**கல்விச் செருக்கு கூடாது**

'கற்றது கைமண்ணளவு, கல்லாதது உலகளவு' என்பது பழமொழி. அறிய வேண்டுவன அனைத்தையும் முழுமையாகக் கற்றுணர்ந்தவர் என்பார் இவ்வுலகினில் ஒருவரும் இல்லை. கொல்லனது உலைக்களத்திலுள்ள பெரிய சம்மட்டி கொண்டு தகர்க்க முடியாத பெரிய பாறையினை உருவத்தில் சிறிய

உளியினைக் கொண்டு தகர்த்துவிட முடியும். எனவே எல்லா வற்றையும் கற்றுவிட்டோம் என்று ஒருவன் செருக்குடன் திரிதல் ஆகாது.

'முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க – சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தினால் (நீ. நெ. வி. 14)

'கல்வி கரையில கற்பவர் நாள்சில மெல்ல வினைக்கின் பிணிபல' என்று நாலடியாரும் கல்வியின் விரிவைப் பறைசாற்றும்.

**கல்விச் செல்வமும் பொருட்செல்வமும்**

வாழ்க்கையில் இன்பம் என்பதும் துன்பம் என்பதும் அவரவர் மனநிலையைப் பொறுத்தது. கிடைத்த பொருளைக் கொண்டு நிறைவடையாமல் கிட்டாத பொருளை அடைவதற்கே ஆசை கொண்டு தடுமாறி அல்லலுறுவது மனிதமன இயல்பு. மகிழ்ச் சியையும் அமைதியையும் தேடி அல்லலுறுகின்ற மக்களைப் பார்த்து மனமகிழ்ச்சிக்கு வழிகாட்டுகின்றார் குமரகுருபர அடிகளார். தம்மைவிட செல்வத்தில் குறைந்தவரோடு தம் செல்வத்தை ஒப்பிட்டுப் பார்த்து அவரைவிட தம் செல்வம் எவ்வளவு மிகுதி என்று மகிழ்வடையவேண்டும். தம்மைவிட அறிவில் மிகுந்தவரோடு தம் அறிவை ஒப்பிட்டுப் பார்த்து தம் அறிவு எவ்வளவு குறைவானது எனக் கருதி மேன்மேலும் அறிவை வளர்த்துக்கொள்ள முயற்சிக்க வேண்டும்.

'தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரியதென் றகமகிழ்க – தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று. (நீ. நெ. வி. 15)

இப்படிப்பட்ட மனநிலையை அனைவரும் பெற்றால் உலகில் துன்பங்கள் குறைந்து இன்பம் பெருகும். ஆனால் மக்களின் மனநிலையோ எதிர்மாறாக உள்ளது. இந்நிலை மாறினால் நாட்டில் மகிழ்ச்சிப் பெருக்கமும் அறிவுப்பெருக்கமும் நிலை பெறுவது உறுதி.

**கற்றதன் வழி நிற்க**

கற்கவேண்டியனவற்றைக் கற்று அதன் வழி நடக்காமல் பிறருக்கு மட்டும் உபதேசம் செய்வதால் யாதொரு பயனும்

இல்லை. கற்ற கல்வி தமக்கும் பிறருக்கும் பயன்படுவதை எண்ணாமல் பொருளுக்காகப் பிறரிடம் விற்பது என்பது இழிவானது என்கிறது (நீதிநெறி விளக்கம்-22)

'கற்பார் பொருள்காணார் காசுபணங் காணிலுனை
விற்பார் அவர்பல்நீ மேலாதே' (தமிழ்விடுதூது-184)

என பொருளுக்காக விற்பவரிடத்து தமிழே நீ சென்றடையாதே' என்று தமிழ்விடுதூது மேற்கூறிய கருத்துக்கு அரண் செய்யும்.

மக்கள் முன்னேற, நாகரிக வாழ்வுபெற, உயர்ந்த வாழ்வைப் பெற அரசியல், தொழிலியல், பொருளியல் முதலியவற்றில் ஞானம்பெற அடிப்படையாக அமைவது கல்வியே. இக்கல்வியைச் சாதி வேறுபாடுகளின்றி ஆண்பெண் இருபாலரும் பெறவேண்டும் என்று கருதி பொதுநிலையில் கல்வியின் இயல்பு, சிறப்பு, சொல் வன்மையின் உயர்வு, கல்விச் செல்வம், பொருட்செல்வம் குறித்து மக்கள் அடைய வேண்டிய மனமாற்றம் முதலியன பற்றி தற்காலச் சூழலுக்குப் பொருந்தும் வகையில் கி. பி. 17ஆம் நூற்றாண்டிலேயே குமரகுருபர அடிகள் தம் நீதிநெறி விளக்கத்தில் கல்விக்கு முதலிடம் கொடுத்துப் போற்றியுள்ளமை யினை அறிய இயலுகின்றது.

# குமரகுருபரரும் ஔவையாரும்

தாயம்மாள் அறவாணன், கொடைக்கானல்.

கி. பி. பதினான்கு பதினைந்தாம் நூற்றாண்டுகளில் இசுலாமிய அரசை விரட்டும் முகமாக ஆந்திர தேசத்து விசயநகர நாயக்கர் அரசு, மதுரையை வெற்றி கொண்டது.

இந்து என்னும் சமயச் சார்பு தமிழரோடு ஓரளவு ஒத்திருந்த போதிலும் தெலுங்கு நாயக்கர் என்ற வேறுபாடும் தெலுங்கு ஆதிக்கமும் நாயக்கர் அரசியலில் இருந்தன. இச் சூழலில் நீறுபூத்த நெருப்பாக மறைந்து கிடந்த தமிழ் உணர்வும் தமிழர் உணர்வும் சிலரால் இலைமறை காயாக வெளிப்படுத்தப் பட்டன. தமிழ் பற்றிய புகழ்ச்சி உரைகளும் தமிழ்க் கடவுள் முருகன் பற்றிய புகழ்ச்சி உரைகளும் தமிழ் இசை மாண்புகளும் அன்னோரால் பல்வேறு தளங்களில் பேசப்பெற்றன. அவ்வாறு பேசியவர்களில் குமரகுருபரர் ஒருவர் ஆவார். பாண்டி நாட்டுத் திருவைகுண்டத்தைச் சார்ந்த குமரகுருபரர் தமிழ்க் கடவுள் முருகன் அருள் பெற்றுப் பேசத் தொடங்கிய வரலாறும் தம் படைப்புகளில் தமிழ் நேயத்தை புலப்படுத்தும் பாங்கும் அவரைச் சிவநேச செல்வராகக் காட்டியதுடன் ஒரு தமிழ்ப் பற்றாளராகவும் வெளிக்காட்டின. அயல் மொழிச் சூழலில் தமிழர் கல்லாது போய்விடக் கூடாது என்ற கவலை அவருக்கு இருந்திருத்தல் வேண்டும். எனவே அவர் தம் படைப்புகளில் கற்றலுக்கு முதன்மை கொடுத்து அவர் எழுதினார். அவர் படைப்புகளில் ஒன்றான நீதிநெறி விளக்கம் இதற்குத் தகுந்த சான்றாகும்.

நீதிநெறி விளக்கத்தில் இடம் பெற்றுள்ள கல்வி பற்றிய கருத்துகளும் ஏறத்தாழ அவருக்கு முன்னும் பின்னும் அதே அயல் மொழிச் சூழலில் வாழ்ந்த ஔவையார்கள் கல்வி பற்றிக் கூறிய கருத்துகளும் இக்கட்டுரையில் ஒப்பிட்டுக் காட்டப் படுகின்றன.

குமரகுருபரர் எழுதிய நீதிநெறி விளக்கம் பல்வேறு செய்தி களைக் கொண்ட நூல். கல்வியின் சிறப்பு, அரசு இயல்பு, நிலையாமை, ஊக்கம் உடைமை, ஈகை முதலாயவற்றை நயம்பட எடுத்துரைப்பது. இந்நூலில் வரும் கல்வியின் சிறப்புப் பகுதி மட்டும் ஒப்பீட்டு அளவில் இங்கே சுட்டப்படுகிறது. ஔவை யாரின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, கல்வி ஒழுக்கம் ஆகிய நூல்களில் வரும் கல்விக் கருத்துகள் ஒப்பிடப்பெறும்.

**கல்வியின் பயன்**

கல்வி அறம், பொருள், இன்பம், வீடு பயக்கும், உலகத்தில் குற்றமற்ற புகழையும் நிலைநிறுத்தும், துன்பத்தில் கை கொடுக்கும். ஆதலால், மக்களுக்குத் தக்க துணை கல்வியை விடப் பிறிதில்லை என்கிறது நீதிநெறி விளக்கப் பாடல் (2).

ஔவையார் கூறிய

கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி (கொ.வே. 22)
திருந்த ஓதத் திற முண்டாமே (கல்வி ஒழுக்கம்–38)
தெளிய ஓதத் திறமுண்டாமே (கல்வி ஒழுக்கம்)
தோழனாவது கல்வித் துணையே (கல்வி ஒழுக்கம்-42)

என்பன கல்விப் பயனாக ஒப்பிடப் பட்டன.

**அறிவை விரிவாக்குவது கல்வி**

கல்வியால் இன்பம் வரும்,
கல்வியால் மடமை அகலும்,
கல்வியால் அறிவு பெருகும்.
தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றும் கல்வி (நீ.நெ.வி. 3)

என்று கல்வியின் சிறப்பு உணரப்படுகிறது.

கூர்மையாவது குன்றாக் கல்வி (கல்வி ஒழுக்கம்–19)

என்கிறார் ஔவையார்.

அறிவு பெற நூல் பல கல் (ஆ.சூ. 70)
கேள்வி முயல் (ஆ.சூ. 39)
ஓதுவது ஒழியேல் (ஆ. சூ. 11)

எனக் கல்வி கற்கவும், பயன்பெறவும் வற்புறுத்தப்பட்டமை தெளிவு.

**கல்வியால் மதிநுட்ப அறிவு**

மதி நுட்பத்தால் நூல்களில் நுண்மையும், பொருள் ஆழமும் உடைய இடங்களை ஆராய்ந்து அறியும் பயன் கல்வியால் பெறப்படும். (நீதி. 4)

| | |
|---|---|
| நூல் பலகல் | (ஆ.சூ. 70) |
| கூர்மையாவது குன்றாக் கல்வி | (க.ஓ. 19) |

என்பன.

**கல்வி அழகுபடுத்துவது**

கல்வியால் இனிய கவித்துவமும் கவியால் சொல்கின்ற வளமும் சொல் வளத்தால் கற்றறிந்தவற்றை விரும்பியவர்க்குச் சொல்லும் வன்மையும் வரும் (நீ வி. 4)

சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம் என்பது சொல்லும் வளத்தைச் சுட்டுவது. எனவே, கல்வி வற்புறுத்தப் படுகிறது.

| | |
|---|---|
| இளமையில் கல் | (ஆ.சூ. 29) |
| இளமையில் கல்வி சிலையில் எழுத்து | (ஆ.சூ. 53) |
| பிழைபடச் சொல்லேல் | (ஆ சூ. 78) |
| நைபவர் எனினும் நொய்ய உரையேல் | (கொ.வே. 56) |
| பழிப்பன பகரேல் | (ஆ.சூ. 77) |
| மொழிவது அறமொழி | (ஆ.சூ 97) |
| வாது முற்கூறேல் | (ஆ.சூ. 100) |
| வெட்டெனப் பேசேல் | (ஆ.சூ 105) |
| ஊமை என்பவர் ஓதாதவரே | (க.ஒழு. 6) |

ஆகியன சொல்வன்மையையும் கல்வி கற்றலையும் எடுத்துரைப் பனவாகும்.

**அவையஞ்சாமை**

கற்றார் அவையில் அஞ்சி, உடல் நடுங்குவோர் கல்வி பயன்படாது (நீ.நெ.வி. 8) என்கிறது நீதிநெறி விளக்கம். நெடுநாளாகத் தம்மால் படிக்கப்பட்ட நூல்கள் அவையிலே எடுத்துரைப்பதற்குக் கூடாமல் தோல்வியுற்று அச்சம் அடைபவனுடைய கல்வி பயன்படாது என்கிறார் குமரகுருபரர்.

மேற்கண்ட கருத்தை அடியொற்றி மூதுரைப் பாடல் ஒன்று ஔவையாரால் எழுதப்பட்டுள்ளது.

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் – சபை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம் (மூதுரை-13)

என்று கற்றோர் அவையில் அஞ்சாது படிக்கத் தெரிதல் வேண்டும் என்பதை வற்புறுத்துவன மேற்கண்ட நூல்கள்.

பிழைபடச் சொல்லேல்
கழிக்கச் சொல்லேல்
சொற் சோர்பு படேல்
வெட்டெனப் பேசேல்
மிகைபடச் சொல்லேல்
மனம் தடுமாறேல் (90)

என்பவற்றை ஒப்பீடுகளாகக் காட்டி விளக்கம் பெறலாம்.

**எல்லாம் தெரிந்தவர் இல்லை**

முற்றும் உணர்ந்தவர் இல்லை. எல்லாம் தெரிந்தவர் உலகத்து இல்லை. எல்லாவற்றையும் கற்று விட்டோம் என்று செருக்கடைதலால் பயன் இல்லை.

முற்றும் உணர்ந்தவர் இல்லை (நீ.நெ.வி)

கற்றது கைம்மண்ணளவு
கல்லாதது உலகளவு
வல்லமை பேசேல் (ஆ.சூ. 99)
வாது முற்கூறேல் (ஆ.சூ. 100)

**கற்றபடி நடத்தல்**

ஒருவர் நூல் கற்று அதன்படி ஒழுகல் சாலச் சிறப்புடையது.

கற்றுப் பிறர்க் குரைத்துத் தாம் நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை நீதி (21)

என்ற நீதிநெறி விளக்கக் கருத்து.

நூல்முறை தெரிந்து சிலத்து ஒழுகு (கொ.வே. 53)
நிற்கக் கற்றல் சொல்திறம் பாமை (கொ.வே. 50)
பையப் பையப் படித்தே ஒழுகு (கல்வி ஒழுக்கம் - 66)

என்பவற்றோடு ஒப்பிடத்தக்கது.

# கலிவெண்பா காட்டும் இறையியல்பு

வெ. திருநாவுக்கரசு, தஞ்சை

திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் கந்தப் பெருமான் மீது கலிவெண்பா யாப்பில் இயற்றப்பெற்ற நூல் கந்தர் கலிவெண்பா. இந்நூல் சாத்திர, தோத்திர வரலாற்றுத் தாக்கங்களை ஒருங்கே பெற்றமைந்தது. இவற்றில் சாத்திரம் என்பது ஒன்றன் இயல்பினை முழுமையாகவும், தெளிவாகவும் விளக்குதல் என்பதாகும். சைவசமய சாத்திர நூல்கள் இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் இயல்புகளைத் தெளிவிக்கின்றன. இம் முப்பொருள்களில் இறையியல்பைக் கந்தர் கலிவெண்பா எவ்வாறு விளக்குகின்றது என்பதை வெளிக்கொணர்வதே இவ் ஆய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் முப்பொருள்களின் முறைவைப்பில் வேறுபடுகின்றன. சிவஞானபோதம் இறை, தளை, உயிர் என்று எடுத்து உயிர், தளை, இறை என முடிவில் அமைந்துள்ளது. சிவஞான சித்தியார் – சுபக்கத்துள் சிவஞான போதத்தை அடியொற்றியே அமைந்துள்ளது. சிவப்பிரகாசம், திருவருட்பயன் என்னும் இருநூல்களும் உயிர், இறை, தளை என்ற முறைவைப்பிலும், ஞானாமிர்தம் என்னும் நூல் உயிர், தளை, இறை என்ற முறைவைப்பிலும், உண்மை விளக்கம் என்னும் நூல் தளை, உயிர், இறை என்ற முறைவைப்பிலும் அமையப் பெற்றுள்ளன. குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவில் முதலில் இறை இயல்பையும், அடுத்து உயிர் இயல்பையும் விளக்கி இடையிடையே தளை இயல்பும் கூறப் பட்டுள்ளன. ஈண்டு இறை இயல்பு மட்டுமே ஆய்வு செய்யப் படுகிறது.

அறுசமயங்களும் தத்தம் கடவுளை வெவ்வேறு பெயரிட்டுக் குறிக்கின்றன. எனினும் கடவுளைத் தத்துவ முறையில் கூறும் பொழுது பதி எனக் குறிப்பிடப்பெறுவது பொதுவானதாகும். இப்பதியியல்புகள் பற்றிப் பல மதங்களும், உட்பிரிவுகளும்

ஆய்ந்து வெளிப்படுத்தியுள்ளன. இந்து சமயத்தின் உட்பிரிவாகிய சைவமும், கௌமாரமும் தந்தை மகன் என்ற முறையில் அமையப் பெற்றவையாகும். எனவே சிவபெருமானுக்கும், முருகப்பெருமானுக்கும் வேற்றுமையின்மையின் சிவபெருமானுக் குரிய சிறப்புகள் பலவும் முருகப் பெருமானுக்கு ஏற்றிக் கூறப் படுகின்றது. இம்முறையில் அமைந்த கந்தர் கலிவெண்பாவில் சைவ சமயக் கடவுளுக்குரிய குணங்கள், பெருமைகள் முருகனுக் குரியதாக ஏற்றிப் பாடப்படுவதால் சைவ சித்தாந்தக் கருத்துக் களின் தாக்கம் காணப்படுகின்றது.

இறை அநாதிப் பொருள் அநாதி என்பதற்குத் தோற்ற மில்லாதது எனப் பொருள். இறை என்றும் நிலைத்திருக்கும் நித்தப் பொருள். இது எங்கும் நிறைந்துள்ள பொருள். இதனைத் திருக்களிற்றுப்படியார்,

"வானகமும் மண்ணகமுமாய் நிறைந்த
வான் பொருளை" (பா. 49)

எனக் குறிப்பதன் வழி இறைவன் எங்கும் நிறைந்த பொருளாக இருப்பதைக் குறிக்கிறது. பாலில் நெய் போலவும், பழத்தில் சுவை போலவும், எள்ளில் எண்ணெய் போலவும் எங்கும் நிறைந்தவன் இறைவன் என்று அருணந்தி சிவாசாரியார் கூறுகிறார்.

திருவருட்பயன், அகரமாகிய உயிர் பிற எழுத்துக்கள் எல்லாவற்றிலும் பொருந்தி வேறற நின்றாற்போல, தனக்கோர் உவமை இல்லாத இறைவன் உலகம், உயிர் முழுவதிலும் நிறைந்து விளங்குகிறான் என்று கூறுகின்றது. இவ்வாறு இறைவன் எங்கும் நிறைந்துள்ள இயல்பைப் பற்றிச் சித்தாந்த நூல்கள் கூறும் நெறியைப் பின்பற்றிக் குமரகுருபரர் இறை இயல்பை விளக்குகிறார்.

உலகில் உள்ள பொருள்களுக்கு ஒரு பெயரிட்டு வழங்குதல் போல இறைவனுக்கு ஒரு பெயரிட்டு வழங்குதல் இல்லை. ஆனால் இறைவனுக்கு வழங்கும் பெயர்களெல்லாம் உயிர்கள் அன்பால் போற்றி, ஏற்றி உரைக்கும் பெயர்களே. எனவே ஒரு பெயரும் ஒருகுணமும், ஓர் உருவும் இல்லாமல் விளங்கும் இறைவன் எல்லாப் பொருளுமாய், எங்கும் நிறைந்திருக்கும் பொருளாய் விளங்குவதைக் குமரகுருபரர் சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவில்,

"குறியும் குணமும் ஒரு கோலமும் அற்(று) எங்கும்
செறியும் பரமசிவமாய்" (பா. 4)

எனக் கூறுகிறார். மேலும் இறைவன் இவ்விடத்து இருக்கிறான், இவ்விடத்து இல்லாதிருப்பான் என்பதன்றி அவன் எங்கும் நிறைந்திருப்பான் என்பதை,

"... ... ... ... ... எங்கும்
நீக்கம் அற நின்ற நிலை" (க. க., பா. 5)

என்பார்.

இவ்வாறு எங்கும் நீக்கம் அற நிற்கும் இறைவனின் வடிவம் உருவம், அருவம், அருவுருவம் என்ற மூன்று வகையினுள் அடங்கும் உருவம் இல்லாத ஒரு பொருளை மனிதர்கள் நினைக்கவோ, மனத்தில் இருத்தவோ வழிபடவோ இயலாது. எனவே உருவ நிலை கொண்டவைகளையே மனிதர்கள் எண்ண முடியும். இவ்வுளவியல் நோக்கிலேயே தமிழர்கள் இறைவனின் வடிவத்தை உருவநிலையில் வருணித்து வழிபட்டனர். பன்னிரு திருமுறைகளிலும் இறைவனின் உருவ வருணனை மிகுதியும் இடம் பெற்றுள்ளது. பன்னிரு திருமுறைகளும் இறைவனின் உருவ, அருவத் திருமேனியைப் பாடியிருப்பினும் உருவத் திருமேனியையே மிகுதியாகப் பாடியுள்ளதன் காரணம் சிந்தித்தற் குரியது. திருமுறையாசிரியர்கள் பாடிய பாடல்கள் அனைத்தும் அவரவர்களுடைய சிவானுபவ வெளிப்பாடாகும். அச் சிவானுபவத்தின்போது உள்ளங் கசிந்துருகி ஒன்றிய நிலையில் இறை அருட்திருமேனியில் அவர்கள் கொண்ட விடுதலறியா அன்பினால் உணர்ந்த இறை இன்பத்தைப் பாடல்களாக வெளிப்படுத்தியுள்ளனர் எனலாம்.

சித்தாந்த சாத்திர நூல்களில் இறைவனது உருவ வருணனை ஏதும் கூறப்படவில்லை. ஆனால் உமாபதிசிவம் தம் போற்றி பஃறொடை நூலில் தமது ஆசிரியரை இறைவனாகப் போற்று மிடத்தில் இறைவனின் உருவ வருணனையைக் குறிப்பிடு கின்றார். மேலும் இறைவன் உருவ நிலைக்கு எழுந்தருளுவதற்கு முன்னர் இருந்த நிலை அருவநிலை என்பதை "அருவமாகிய இறைவன் உயிர்கள் உணர்ந்து உய்ய உருவமாகி வருகிறான்" என்று திருவுந்தியாரும் கூறுகிறது. இவ்வாறு திருமுறைகளும், சித்தாந்த சாத்திர நூல்களும் போற்றிக் கூறும் இறைவனது

உரு, அருவ நிலைகளைக் கந்தர் கலிவெண்பாவில் சுவாமிகள் போற்றுகின்றார்.

சுவாமிகள் இறைவனின் உருவம், அருவம், அருவுருவம் ஆகிய நிலைகளைப் பாடியிருப்பினும் உருவத் திருமேனியையே மிகுதியும் உருவகித்துப் பாடியுள்ள காரணம் சிந்தித்தற்குரியது. சுவாமிகள் பிறந்து ஐந்தாண்டுகள் வரை ஊமையாயிருந்து திருச்செந்தூர் திருச்செந்திலாண்டவன் திருமுன்பு கிடத்திய பொழுது திருவருளால் பாடத் தொடங்கியவர் பாலனாயிருந்த காலத்து தன்னுள் கண்டு தொழுது மகிழ்வுற்ற இறைவனது திருமேனியைத் தொழுது, உருகித் திளைத்த காதலனுபவத்தால் இறை உருவத்தையே மிகுதியும் வருணித்துப் பாடியுள்ளார் எனலாம். மேலும் குழந்தையாயிருந்த குமரகுருபர சுவாமிகள் குழந்தை வடிவினனான குமரக் கடவுளைப் போற்றிப் பாடியருளியமைச் சிறப்பானதாகும்.

குமரகுருபர சுவாமிகள் இறைவனது வடிவ நிலைகளை உருவம், அருவம், அருவுருவம் என்ற மூன்று நிலைகளிலும் மட்டும் குறிப்பிடாது உயிர்களின் பக்குவ நிலைக்கேற்ப அருள் வழங்கும் பொருட்டு பல்வேறு திருவுருவங்களைக் கொள்ளும் கருணையாளனாக விளங்குவதை

> ''உருவும் அருவும் உருவருவம் ஆகிப்
> பருவ வடிவம் பலவாய்'' (க. க., பா. 11)

எனக் குறிக்கிறார். மேலும் இறைவன் உருவின்றி நின்ற கருவாய் விளங்கிடினும் உயிர்களை ஆட்கொள்வதற்கு எனக் கொள்ளும் அருளுருவங்கள் உள்ளன என்பதால் ''அருளே உருவின்றி நின்ற உருவாய்'' என்றார்.

இவ்வாறு அருள் தன்மையின் காரணமாக உயிர்களை உய்யக் கொள்ளுதற்காக இறைவன் மூவகைத் திருமேனிகளையும் கொள்கிறான். இவற்றில் நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன் எனக் கொள்ளும் உருவங்களெல்லாம் அவனது உருவத் திருமேனிகளாகும். சிவம், சக்தி, விந்து, நாதம் என்பன அவனது அருவத்திருமேனிகளாகும். சதாசிவம் என்பது அவனது அருவுருவத் திருமேனியாகும். உருவத் திருமேனியால் படைப்பு முதலிய செயல்களையும், அருவுருவத் திருமேனியால் காத்தலையும், அருவத் திருமேனியால் ஒடுக்கத்தையும் இறைவன் செய்வான். இம்மூவகை நிலையின் நீங்கி உயிர்களின் பக்குவ

நிலைக்கேற்ப இறைவன் ஆட்கொள்ளவரும் திருமேனி வடிவங்கள் பல என்பதை வேறு பிரித்தே சுவாமிகள் "பருவ வடிவம் பலவாய்" என்பார் எனலாம். இதனைச் சிவஞான சித்தியாரும் தெளிவிக்கும்.

சித்தாந்த சாத்திர நூல்கள் கூறும் இறை வடிவங்களைத் தவிர குமரகுருபர சுவாமிகள் இறைவடிவங்களை வரிசைப் படுத்துகிறார். வினை மாசு நீங்கிய உயிர் தன் அறிவால் காண இயலாத அறிவு வடிவாயும், கால எல்லைக்கு முற்பட்ட காலந் தொட்டு மனம் முதலிய கருவிகட்கு எட்டாத வடிவாயும் பல கோடி அண்டங்களையும், தம் திருவுருவங்களாகவும் கொண்டு விளங்குகிறான் என்பார். அண்டங்கள் எல்லாம் அவன் உருவமே என்றும், அவ் அண்டத்தில் உள்ள இயங்கும் பொருள் களும், இயங்கா பொருள்களும் அவனது உறுப்புக்களென்றும் கூறுகிறார். இயங்கும் பொருள் இயங்கா பொருள் என்ற இவ்விரண்டனுள் உலகப் பொருள்கள் அனைத்தும் அடங்கி விடுகின்றன. எனவே எல்லாப் பொருள்களும் இறைவடிவமே எனக் காட்டுகிறார்.

இறைவன் உலகிற்கு ஆதி, நடு, அந்தம் ஆனவன். இறைவன் உலகங்கள் எல்லாவற்றையும் தோற்றுவிக்கும் தன்மையில் முதல்வனாதலினால் அவனை ஆதி என்றும், அவ்வாறு தோற்று வித்த உலகங்கள் எல்லாவற்றையும் தோற்றுவித்த அவனே நிலைத்து நின்று இயங்கக் காரணமாய் நிற்றலின் நடு என்றும், இறுதியில் அவனே யாவற்றையும் தன்பால் ஒடுங்கச் செய்தலினால் அந்தம் என்றும் கூறப்படுவதால் இறைவன் தோற்றம் நிலைபேறு, அழிவு என்ற மூன்று நிலையினின்று இவ்வுலகங்களைத் தோற்றுவித்து ஒடுக்குகிறான் என்றும், இம்மூன்றும் கடந்த மெய்யறிவு இன்பமாய் அவன் விளங்கு கிறான் என்றும் சுவாமிகள் அருளுகிறார். இவ்வாறு இறைவன் ஒருவனே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில் செய்வதும் உணர்த்தப்படுகின்றது. இம் முத்தொழிலுடன் மறைத்தலையும், அருளலையும் சேர்த்து ஐந்தொழில்கள் எனக் கூறப்படும். இவ் ஐந்தொழில்கள் பற்றிச் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் கூறுகின்றன.

இறைவன் உயிர்கள் உய்வடைய வேண்டி உயிர்கள் செய்யும் வினைக்கேற்ப நுண்ணுடலையும், பருவுடலையும் அருளுகிறான்.

அவ்வுடலைக் கொண்டு உயிர்கள் உணர்ந்து, நுகர்ந்து, வாழ்ந்து இறுதியில் இருவினை ஒப்பும், மலநீக்கமும் நடைபெற்று வீடுபேற்றை அடையும். இச்செயல்கள் இறைவனது ஐந்தொழி லாற்றலால் நிகழ்வது. இவ் ஐந்தொழிலாற்றல் இறைவனது நினைவு மாத்திரத்தால் செய்யப்படுவது. இதனைக் குமரகுருபர சுவாமிகள் "ஐந்தொழிற்கும் அப்புறமாய்" என்பார். மேலும் ஐந்தொழில்களும் இறைவனால் இடையறாது நிகழ்ந்து வருதலை

"ஐந்தொழிலும் ஓவாது அளித்து" (க. க. 72)

என்றும்

"... ... ... ... ... ... சந்தமும்
நீக்கமின்றி ஆடி நிழலசைப்பான் போற் புவனம் ஆக்கி
அசைந்தருளும் ஆணையும்" (க. க. 72–73)

என்றும் அருளுவார். மேலும் ஐந்தொழில்களையும் இயற்று வதற்கு நான்முகன் முதலிய ஐந்துவகை கடவுளர்களாகவும் அமைந்து நிற்கின்ற பெரிய வடிவைக் கொண்டு விளங்குகின்றான் என்பதை,

"... ... ... ... ... ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே" (க. க. 59)

என்று இறை இயல்பை விளக்குகிறார்.

இறைவனுக்கும் இவ்வுலகத்திற்கும், உயிர்களுக்கும் உள்ள தொடர்பு அத்துவிதம் என்ற சொல்லால் குறிக்கப் பெறும். அத்துவிதம் என்பது வேற்றுமையின்மை அதாவது இரண்டாகப் பிரிந்து இல்லாமை என்று பொருள்படும். சைவ சித்தாந்தம் கூறும் அத்துவித விளக்கம் கலிவெண்பாவில் காணப்படுகின்றது.

இறைவன் உலக உயிர்களோடு ஒன்றாய், வேறாய் உடனாய் இருக்கின்றான் என்று குமரகுருபரர் கூறுகின்றார். இறைவன் உயிர்க்கு உயிராகி நின்று அறிவித்தாலன்றி உயிர் எதனையும் தாமாக அறிவதில்லை. உயிர்க்கு இறைவன் அறிவு தந்தருளி உணர்த்தி நின்றால் மட்டுமே உயிர்க்கு அறிவு செயல்படும். எனவே உயிரோடு இறைவன் கலந்து நின்று அறிவிக்க உயிர் அறிதலாலே இறைவன் உயிரோடு ஒன்றாய் இருக்கிறான் என்பது பெறப்படும்.

உயிர் படிப்படியாக வினை மாசு நீங்கப் பெற்றுப் பக்குவம் பெறும்பொழுதுதான் இறைவன் தன்னையும் அவ்வுயிரையும் பற்றிய அறிவு தந்து அருளுகிறான். இதற்கு இறைவன் அவ்வுயிரினின்று கடந்து நிற்கும் பொழுதே உயிர் உணரமுடிகின்றது. உயிர்க்கு உணர்த்தவும் முடிகின்றது. இவ்வாறு இறைவன் கடந்து நிற்கும் நிலையே வேறாய் நிற்றல் ஆகும். இதனைக் குமரகுருபர சுவாமிகள்,

> "அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டா
> நெறியிற் செறிந்த நிலை நீங்கி"

என்றருளுவதன் வாயிலாக உயிர்களோடு இறைவன் ஒன்றாய் நிற்றலையும், வேறாய் நிற்றலையும் உணர்த்துகிறார் எனலாம்.

உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும் நிற்கும் இறைவன் உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்குவதற்காக அவற்றோடு உடனாய் நின்று இயங்க வேண்டுவதாகிறது. இவ்வாறு இயங்கும்போது தனக்கென எந்த அனுபவமும் கொள்ளாமல் தனது அறிவு, விருப்பம் செயல்களை இயக்கு கிறான். இதனைச் சிறந்த உவமை வழி சுவாமிகள் விளக்கு கிறார்.

இல்லாததை உள்ளதாகவும், உள்ளதை இல்லாததாகவும் காட்டும் வித்தை இந்திரசாலம் எனப்படும். இவ்வாறு இந்திர சாலம் காட்டுபவன் மற்றவர்களை இவ்வித்தையில் மயங்கச் செய்வானேயன்றித் தான் அதில் ஒன்றி மயங்கமாட்டான். இந்திரசால வித்தையைக் காண்போருக்கு அவனும் அவ்வித்தையில் ஒன்றி நிற்பது போலத் தோன்றும். ஆனால் அவன் ஒன்றி நிற்கமாட்டான். இதைப் போன்றே இறைவனும் எல்லாப் பொருள்களையும் படைத்தும், காத்தும், கரந்தும் விளையாடி தான் அவற்றில் ஒன்றாது விளங்குவது அவனது சாராது சார்ந்து நிற்கும் நிலையாம். இது உடனாய் நிற்றலைக் குறிக்கும். இவ்வியல்பைச் சுவாமிகள்,

> "இந்திர சாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும்
> தந்திரத்தில் சாராது சார்வது போல்" (க.க. 8)

எனக் குறிக்கிறார். இறைவன் இவ்வாறு உயிர்க்கு உடனாய் நின்று உதவுவதைக் காணும் உபகாரம் என்றும், வேறாய்

நின்று உதவுவதைக் காட்டும் உபகாரம் என்றும் சாத்திர நூல்கள் கூறுகின்றன.

இறைவன் உயிர்களின் அறிவை விளக்கி அவைகளை அறியச் செய்வதே காட்டும் உபகாரம் எனப்படுகிறது.

"ஆணவமான படலம் கிழித்து அறிவில்
காணாரிய மெய்ஞ்ஞானம் கண் காட்டிப் - பூணும்
அடிஞானத்தால் பொருளும் ஆன்மாவும் காட்டிக்
கடியார் புவன முற்றும் காட்டி - முடியாது
தேக்கு பரமானந்தத் தெள்ளமுதமாகி எங்கும்
நீக்கம் அறநின்ற நிலை காட்டி" (க.க. 26 - 28)

என்ற குமரகுருபரரது பாடல் தொடர்களில் "காட்டி" என்பது காட்டும் உபகாரத்தை உணர்த்துகிறது எனலாம்.

உயிர்கள் அறியும்போது அறியப்படும் பொருளை இறைவன் தானும் உடன் நின்று அறிவது காணும் உபகாரம் ஆகும் இதனை,

"... ... ... ... ... எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே" (க.க. 36)

என்று கூறுவதால் இறைவன் திருவருளே உயிர்களுக்கு காணும் உபகாரத்தைச் செய்வதைக் கூறுகிறார் எனலாம்.

மேலும் குமரகுருபர சுவாமிகள் உயிர்களுள் மும்மல முடையார்க்கு இறைவன் குருவாகி அருளுதலையும், இருமல முடையோர்க்கு முக்கண்ணும் நான்கு தோள்களும் உடையனாய் உமையொரு கூறனாய் ஆனேற்றின் மீது இவர்ந்தருளி அருளு தலையும், ஒருமலமுடையார்க்கு உள் நின்றருளுதலையும் கூறுகிறார். இவ்வாறாகக் குமரகுருபர சுவாமிகள் சைவ சித்தாந்த சாத்திர நூல்களில் கூறப்படுகின்ற இறை இயல்பு களின் பிழிவாகக் கந்தர் கலிவெண்பாவினை இறைத் திருவருளால் பாடியுள்ளார் எனலாம்.

# குருபரர் சுட்டும் இல்லறமும் துறவறமும்

கு. திலகவதி, தஞ்சாவூர்

## இல்லறம்

மனிதன் நலமாக வாழ்வதற்கும், அந்நல்வாழ்வின் பயனாகிய இன்பத்தை அடைவதற்கும், அவன் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய நல்ல பழக்க வழக்கங்களையும், தீயவை என்று கடிந்து ஒதுக்கவேண்டிய செயல்களையும் அறிந்து நல்லனவற்றை மட்டுமே பின்பற்றி ஒழுகுவது இல்லறத்தில் ஈடுபடும் ஒருவனுக்குச் சிறந்த அறமாகக் கொள்ளப்படும். அவ்வறத்தை மனத்தறம், சொல்லறம், செயலறம் என மூன்றாகப் பகுக்கலாம். அம்மூன்றும் ஒன்று சேர்ந்த கூட்டமைப்பே 'அறச்செயல்' எனச் சிறப்பிக்கப் பெறும். தொல்காப்பியல் இல்லறத்தார் மேற் கொள்ளத்தக்க ஒழுக்கத்தை அறநெறியைப்-புறத்திணையியலில் (நூ. 17),

> ''கடிமனை நீத்த பாலின் கண்ணும்
> எட்டுவகை நுதலிய அவையகத்தானும்
> கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும்''

எனக் கூறியிருப்பதால், பண்டைக் காலந்தொட்டே தமிழர் அறத்தில் சிறந்து விளங்கியிருப்பதை உணரலாம். இல்லறம், துறவறம் ஆகிய இரண்டையும் ஒருங்குபடத் தொல்காப்பியர்,

> ''காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'' (கற்பியல் நூ. 51)

எனக் கூறியுள்ளதும் நோக்கத்தக்கது.

### அ) நீதிநெறி விளக்கத்தில் - இல்லற நெறி

குமரகுருபரர் நீதிநெறி விளக்கத்தில் இல்லறத்தைக் காட்டிலும் துறவு நெறிக்கே மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து அறம் கூறியுள்ளார். இல்லறத்தாருக்குரிய அறங்களைஆறு பாடல்

களிலும், துறவறத்தாருக்குரிய அறங்களைப் பதினெட்டுப் பாடல்களிலும் அமைத்துப் பாடியுள்ளார்.

இம்மை இன்பம் விழைந்து, தாம் காதலன்பு பாராட்டிய மனைவியோடு ஒருங்கிருந்து இன்பம் துய்த்தலே 'மெய்யான இன்பம்'என்றும்,காதலன்பு பாராட்டிய கற்புடைமனையாளுக்குப் பிறக்கும் குழந்தைகளே 'பெறற்கரிய செல்வமாகும்' என்றும் உடன்பாட்டு முறையில் குமரகுருபரர் இல்லறத்தாருக்கு அறம் எடுத்துரைப்பார். மேற்கூறியவாறு இல்லாமல், காமம் மீதூரப் பிறன் மனையாளை நயத்தல் அனைத்துத் தீயச்செயல்களுக்கும் காரணமாகும் என்பதை ஆடவர்க்குரிய அறமாக எதிர்மறை முறையில் கடிந்துரைப்பர். அவ்வாறே தம் கணவர் நிறைந்த (குறைவிலா) நலங்கள் பொருந்தியவராய் இருப்பினும், அவர்களை வெறுத்து வேற்று மனிதரை விரும்பும் கற்பில்லா மகளிர், பொது மகளிரைக் காட்டிலும் கடையராவார் எனக் கற்பின் மகளிரை மூன்று பாடல்களில் வலியுறுத்திக் கடிந்துரைப்பர். குமரகுருபரர் சமுதாயத்தில் இரு கண்களாக விளங்கும் ஆடவர், மகளிர் ஆகிய இருவரையும் ஒப்ப நோக்கி அறம் கூறியுள்ளது மிகுந்த சிறப்புடையதாகும். திருக்குறள், நாலடியார் சுட்டும் பிறன்மனை நயத்தல் என்பது தவறு செய்யும் ஆடவரை மட்டுமே கடிந்துரைக்கின்றன. கற்புடைய மகளிர் என்ற போர்வையில் தவறு செய்யும் மனையுறை மகளிரைக் கடியவில்லை. ஆனால் குமரகுருபரரோ பிறன்மனை நயத்தல் என்பது மனையுறை மகளிர், ஆடவர் ஆகிய இருவர்க்குமே தவறான செயலாகும் எனக் கூறியுள்ளது ஒரு புதுமையான பார்வையாகும். கற்பென்பது இருவர்க்கும் பொதுவானது எனக் கூறிய பாரதி, பாரதிதாசனுக்கு முன்பே அப்பார்வை குமரகுருபரர்க்கு இருந்துள்ளது என்பதை இதனால் உணர முடிகின்றது.

### 1. பிறன்மனை நயத்தல் (பிறன்மனையாளை விரும்புதல்) கூடாது

ஒருவன் பிறன்மனை நயத்தல் அவனுக்கு அறத்தைத் தராமல், இன்பம் பயவாமல் துன்பத்தையே அளிப்பதால் அதனை ஒழித்தல் வேண்டும் என்பர். அது உடலும் உள்ளமும் நடுங்க வருவதொரு நோய் என்பதை,

> "நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
> மெய்ந்நடுங்க உள் நடுங்கு நோய்" (நீ. நெ. வி. 77)

என்றுரைப்பர். இதனை நாலடியார், "அச்சம் பெரிதால் அதற் கின்பம் சிற்றளவால்" (81) எனவும், "புக்க இடத்து அச்சம், போதரும் போது அச்சம், துய்க்கும் இடத்து அச்சம், தோன்றாமல் காப்பச்சம், எக்காலும் அச்சம்" (83) எனவும் கூறியுள்ளது ஒப்பு நோக்கத்தக்கது. காமங்கதுவப்பட்டவர் கொலை செய்ய அஞ்சார்; பொய் கூற நாணார்; மானம் ஓம்பார்; களவாடுவார்; பழிபாவம் பாரார்; என்று காமத்தால் விளையும் தீமைகளையும், காமச் செயலே அனைத்துத் தீயச் செயல்களுக்கும் அடிப்படைக் காரணமாகும் என்பதையும் குமரகுருபரர் காமங்கதுவப்பட்டார் (79) பாடலில் எடுத்துரைப்பர். இதனையே வள்ளுவர் (குறள்-146) பகை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கு குற்றங்கள் பிறனில் விழைவானுக்கு ஏற்படும் என்பர்.

'திருமகள் ஒத்த மனைக்கிழத்தி இருக்க, அவளை விட்டுப் பிறன்மனைக்கு பீடழிந்து நிற்பவர், நல்ல சுவையுடையதாய் வாயில் இருக்கும் பொருளை உமிழ்ந்து விட்டுக் கடுக்காயை யொத்த கைப்புள்ள பொருள்களைத் தின்னும் தீய இயல்புடைய விலங்கிற்கு ஒப்பாவார்' என்று அவர்களில் தீய இயல்பை எடுத்துரைப்பர். இப்பாடலில் பிறனில் விழைவானைத் தீய விலங்கிற்கும், சுவையுள்ள பொருளை அவனுடைய கற்புடை மனைவிக்கும், பிறனுடைய மனைவியைக் கடுக்காயிற்கும் ஒப்புமை காட்டியுள்ள திறம் நயமிக்கது.

## 2. கற்புடைப் பெண்டிர்

இதுகாறும் எதிர்மறைக் கூற்றாக அறம் கூறிய ஆசிரியர் இனி உடன்பாட்டுக் கூற்றாக (நீ. நெ. வி. 78, 81) அறம் கூறும் திறம் மிக்க சிறப்புடையதாகும். கருமம் சிதையாமலும், கல்வி கெடாமலும் அறச்செயல் குறைவுபடாமலும், இனிய பண்பு நலன் குறைவுபடாமலும், கற்புடை மனைவியரது புரைபடாத நல்ல இன்பத்தை நுகர்தலே சிறப்புடைத்தாகும். கற்பு, அன்பு, நாணம், நற்குணம், நற்செய்கை உடைய மனையாளுக்குப் பிறக்கும் பிள்ளைகளே ஒருவனுக்குப் பெறற்கரிய செல்வமாகும். இத்தகைய சிறப்புடைய மனையாளை மனைவியாக வாய்க்கப் பெற்றவன், செய்யக்கூடிய வேறு தவம் இல்லையாகும் என்று இல்லறம், துறவறம் இரண்டையும் ஒரு பாடலிலேயே (81) சிறப்பித்துள்ள திறம் போற்றுதற்குரியது.

### 3. கற்பின் மகளிர்

காமங்கதுவப்பட்ட ஆணைக் கடிந்துரைத்த ஆசிரியர், காமவயப்பட்ட கற்பின் மகளிரையும் (நீ.நெ.வி. 82,83,84) கடிந் துரைத்து இச்செயல் ஏற்புடைத்தன்று, பெரும் பேதைமை யுடைத்து என்று அறம் உரைப்பர். எழுச்சியோடு கூடிய வனப்புடையோன்; இளமைப்பருவத்தான்; இசைவல்லான், பிற மகளிரின் கண்களைக் கவரும் பார்வையன்; இன்சொல்லன் என்று அவனுடைய குறைவற்ற நலங்களையெல்லாம் எடுத்துக் காட்டி, இத்தகைய நலங்கள் இருந்தும் பிற ஆடவரை விரும்பும் பெண் எத்தகையவளாக இருப்பாள் என்பதைக் கோடிட்டுக் காட்டு கிறார். தம் உடலினைப் பொருளுக்காக விலைப்படுத்தி வயிறு வளர்க்கும் பொதுமகளிர் கற்பில்லாத குலமகளைக் காட்டிலும் மிகவும் (நனி) நல்லவர்களாவர். ஏனெனில் பொது மகளிர் தமக்கும், சுற்றத்தார்க்கும், பிறர்க்கும் கேடு நினையாராதலின் அவரைப் ''பொற்றொடி நல்லார் நனி நல்லர்'' (83) என்று சிறப்பித்தும், கற்பில்லாக் குலமகளிர், தம் கணவர்க்கும், தமக்கும், களவில் தம் நலம் துய்க்கும் பிறர்க்கும், சுற்றத்தார்க்கும் பழி யினைத் தேடித் தருவாராதலின் இவர்கள் பொது மகளிரினும் கடையவராவர், என்று இழிவுபடவும் எடுத்துரைப்பர். உறவு முறை, குடிப்பெருமை, தகுதி, நிறை, நாண் ஆகிய இயல்புகளைக் கருதிப் பாராராதலின், இவர்கள் பெண்ணாய்ப் பிறந்து கற்பிழந்து நிற்பதைக் காட்டிலும் பிறவாதிருத்தல் பெரிதும் நன்மையுடைய செயலாகும் என்று கற்பின் மகளிருடைய பிறப்பு பெரும்பாவமுடைத்து எனக் காட்டுகிறார்.

### ஆ) துறவற நெறி

துறப்பதற்குமுன் ஒழுகப்பட்ட உலக ஒழுக்கத்தின் மேலும் இவ்வுடம்பிற்குத் தொடர்ச்சியான பொருள்கள் மேலும் பற்றற்று எல்லாவற்றையும் துறந்து தவம் பண்ணுதல் துறவுக்குரிய இலக்கணமாகும். தவம் என்பது கொலை, களவு, கள், காமம், வஞ்சனை முதலான தீயவற்றின்மேல் செல்லும் மனத்தை மீட்டுத் தமக்கு உறுதி பயக்கும் நெறியில் ஒருமைப்பட்டு நிற்றலும், யாக்கைக்கு ஓர் இடையூறுவரின் நிலையாத யாக்கையைக் கருதாமல் நிலையுடைய தவத்தைக் கருதலும் ஆகும். துறவறத்தார் தமக்கென்று சில ஒழுங்குமுறைகளைக் கடைபிடித்து வாழ்தல் சிறந்தது. புறத்தில் துறவு வேடம்

பூண்டு வாழ்தலைக் காட்டிலும், அகப்பற்று நீக்கித் துறவு மேற்கொண்டு வாழ்தலே சிறப்புடையது. தவம் செய்வார் தலைமயிரை மழித்தல், சடை வளர்த்தல், நீரில் மூழ்கல் ஆகிய புற வேடத்தைச் செய்யாது, உயர்ந்தோர் தவத்திற்கு ஆகா தென்று குற்றம் கூறிய ஒழுக்கத்தைக் கடிந்து, வாழ்தலே அறமுடையது.

அறவாழ்வு ஒருவனுக்கு இன்பத்தையும் மேன்மையையும் கொடுக்கும். பாவங்களிலிருந்து நீக்கி, முத்திப்பேற்றை நல்கும். துறவறம் இரண்டு நிலைகளில் பின்பற்றப்படுகிறது. இல்லற வாழ்வில் ஈடுபடாமல் துறவு மேற்கொண்டு வாழ்வது ஒரு நிலை. இல்லற வாழ்வில் ஈடுபட்டோர் படிப்படியாகப் பற்றற்றுத் துறவு மேற்கொண்டு வாழ்வது மற்றொரு நிலை. தொல்காப்பியர் புறத்திணையியலில் வாகைத்திணைக் கண் துறவு பூண்டோர் மேற்கொள்ளத்தக்கப் புற ஒழுக்கத்தை "நாலிரு வழக்கின் தாபதர் பக்கம்" (புறத். நூ. 16) எனவும், அகத்தில் கடைப்பிடிக்க வேண்டிய அக ஒழுக்கத்தை "அருளொரு புணர்ந்த அகற்சி யானும், காமம் நீத்த பாலினானும்" (புறத். நூ. 17) எனவும் கூறுவதால் அறியலாம். குமரகுருபரர் துறவோர் மேற் கொள்ளத்தக்க அகத்துறவு நிலைகளையும், புறத்துறவு நிலை களையும் எடுத்துக்காட்டி அதன்படி ஒழுக அறிவுறுத்தியுள்ளார். துறவுக்கென்று பதினெட்டுப் பாடல்களைப் பாடியுள்ளதால் துறவுக்குக் கொடுத்த முதன்மையை உணரலாம்.

## I. அகத்துறவு

### 1. காம இச்சை கொள்ளாமையும் புலனடக்கமும்: (பெண்ணாசையைத் துறத்தல்)

துறவு மேற்கொண்டோர் பெண்ணாசையை முதற்கண் துறக்க வேண்டும் என்பதைக் குமரகுருபரர் பல இடங்களில் வலியுறுத்தி யுள்ளார். பெண்ணாசைத் துறந்து, சிற்றின்பம் விழையாமல், ஐம்புலன்களையும் அடக்கி, உண்டியைச் சுருக்கி, உடம்பைப் பேணாமல் மெய்யுணர்வாகிய இறையுணர்வில் ஒன்றுபட்டு நிற்றலே உண்மையான துறவாகும் என்று ஆசிரியர் அகத்துறவு நிலைகளை விளக்கியுள்ளார்.

ஐம்புலன்களின்கண் பகைமை பூண்டு அவற்றை வெறுத்த துறவியரின் மனநிலையை ஆசிரியர்,

"பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார் – பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்"
(நீ. நெ. வி. 85)

என்று எடுத்தோதுவர்.

மேலும் துறவொழுக்கத்தில் தலைசிறந்தது புணர்ச்சி விரும் பாமையே என்றும், அதனை அகற்றிப் பாதுகாத்துக் கொள்ளும் மன வலிமை, உரனுடைய துறவோர்க்கே இயலும் என்றும், அத்தகைய துறவோரை அவர்களிருக்கும் திசை நோக்கிப் பகை வரும் கைதொழுவர் என்றும், பெண்ணாசை துறக்காதவர் தவ நெறியில் எத்துணைச் சிறந்தவராயினும் காமுகரும் அவரை அலர் (பழிமொழி) கூறித் தூற்றுவர் என்றும், புணர்ச்சி விரும் பாமை பாடலில் (89) வலியுறுத்தியுள்ளதால் உண்மைத் துறவிக்கும், பொய்த்துறவிக்கும் கிடைக்கும் சமூகத் தகுநிலை களை உணரலாம்.

## 2. தவக்கோலம்

தீய ஒழுக்கம் உடையவர்கள் தவக்கோலத்தை மேற் கொள்வது குற்றமுடைய செயலாகும். வஞ்சமனத்தானின் படிற்றொழுக்கத்தைக் கண்டு அவனுடைய ஐம்பூதங்களும் தமக்குள்ளே நகும். இதனைக் குமரகுருபரர் உள்ளப்பற்று நீங்கா மலும், புலனடக்காமலும் மனம் அயலதாகச் செல்ல துறந் தோரைப் போன்றோரின் தவப் போர்வை (பொய்வேடம்) கஞ்சுகம் (சட்டை) போன்றதாகாது. கஞ்சுகம் ஐம்புலங்களில் யாதொன்றையும் காக்காவிடினும் உடலைக் குளிர், பனி முதலிய வற்றினின்றும் பாதுகாக்கும்; ஆனால் இப்பொய்த்தவப்போர்வை உடம்பையும் பாதுகாத்தல் செய்யாதாகையால் அது போர்வை யன்று, பிறிதொன்றே ஆகும் என்பதை,

"நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே" (நீ. நெ. வி. 93)

என்று பொய்த்தவத்தோரின் நிலையை எடுத்துரைப்பர்.

## 3. உண்டி சுருக்கல்

பேரின்ப வீட்டைப் பெற விரும்பும் மெய்த்தவத்தோர் சிற்றின்பமாகிய பாழ் நரகத்தில் விழமாட்டார். பெண்ணின்பத் தையும், அதனைத் தொடர்ந்த ஏனைய இன்ப நுகர்ச்சிகளையும்

விழையத் தூண்டுவது வயிறு நிறைந்த உணவேயாதலால், அவ்வுணவைச் சுருக்கி உண்ணலே ஐந்தடக்கும் எளிய வழியாம் என்று அருந்தவத்தோர்க்கு 'உண்டி சுருக்கலின்' (நீ. நெ. வி. 86) அவசியத்தை வலியுறுத்தியுள்ளார்.

4. உடலோம்பாமை

பேரின்பம் விழையும் துறவோர், சிற்றின்ப வீடாகிய உடலைப் பேணிப் பாதுகாக்கமாட்டார். இவர்கள் பிற உயிர்களின்மேல் அன்பும் அருளும் உடையவராதலால் தம் உடம்பின்மீது பற்று வைத்துக் காக்கமாட்டார் என்பதனைக் குமரகுருபரர்,

> ''அன்பொடு அருளுடையரேனும் உயிர்நிலை மற்று
> என்பியக்கங் கண்டும் புறந்தரார் - புன்புலாற்
> பொய்க்குடில் ஓம்புவதோ'' (நீ. நெ. வி. 87)

எனக் காட்டுகிறார். இவ்வாறு விளங்கும் உரனுடை மெய்த்தவத்தோர் நிலையற்ற பொருள்களின் மீது புலன்களைச் செல்ல விடாது, தீய நெறிகளை விலக்கி, மெய்யறிவே கருத்தாகக் கொண்டு பரம்பொருள் ஒன்றையே நினைந்து மனத்தை ஒருமுகப்படுத்தி முத்திப்பேற்றை எய்துவர், என்று துறவோர் புலனடக்கி இன்ப வாழ்வு எய்தும் நிலையை (நீ. நெ. வி. 99) எடுத்துரைத்துள்ளார்.

இவ்வாறே புறத்துறவு பற்றியும் குருபரர் மொழிந்துள்ளார். தவம், பழிக்கு அஞ்சி நடத்தல், மெய்யுணர் இன்பம் காணல் போன்றவற்றையும் தம் அனுபவ முத்திரையுடன் குறித்துச் சென்றுள்ளார்.

# சாத்திர மணம் கமழும் முதற்பா

**எம். தேவகி, மதுரை**

அறிவியல் மிக வளர்ந்துள்ள இக்காலகட்டத்தில் ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையுமே இயந்திரத்தனமாகவும், துன்பங்களும் மனக்கவலைகளும் பெருகியுள்ள நிலையைக் காண்கிறோம். இத்தகைய ஒரு கடுமையான சூழ்நிலையில், இறை வழிபாடு ஒன்றே, மனித இனத்திற்கு அல்லல் அகற்றி, நல்வாழ்வு தரும் அருமருந்தாகவும், துன்பக் கடலினின்றும் நம்மைக் கரைசேர்க்கும் தோணியாகவும் உள்ளது. இப்பிறப்பில் வேண்டும் இன்பங்கள் நல்கி, அம்மைக்கும் இறைத் திருவருளை வாரி வழங்கவல்லது (சுந்தரர் தேவாரம்).

இறைவனைப் போற்றிப் பரவச் சிறந்த வழிபாட்டு நூலாகத் திகழும் பெருமை பெற்றது, குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பா நூலாகும். வழிபாட்டு நூலாகத் திகழ்ந்தாலும், சைவ சித்தாந்த சாத்திர மணம் கமழும் பெற்றியையும் நாம் மறுக்க இயலாது.

**அடிகள் போற்றும் சைவ சமயம்**

சிவபரம்பொருளே முதற்பொருள் என்று சிவனைத் தலைமையாகக் கொண்டு செயற்படுவது சைவ நெறி. இந்நெறி காலப் பழமைக்கு எட்டாதது ஆகும்.

''தொன்மைக் கோலமே நோக்கிக் குளிர்ந் தூதாய்க் கோத்தும்பீ''
(திருவாசகம், திருக்கோத்தும்பி–18)

என்று மணிவாசகர் கூறுவதால், இறைவனுடைய கோலம் தொன்மையானது என்று நாமறிவது போல, அவனை அடைவதற்கான சைவ நெறியும் மிகப் பழமையானது என்று உணர்கிறோம்.

''மறை முடிவாம் சைவம்'', ''திவ்வியம் பழுத்த சைவம்'' என்று சைவ சித்தாந்தச் செம்பொருளைப் பலவாறு போற்றுகின்றார் குமரகுருபரர் (பண்டார மும்மணிக்கோவை-5).

மேலும், "சைவ சித்தாந்தத் தேனமுது" என்று அவர் கூறும் பாங்கு இனியது.

இறைவன் பெருங்கருணையாளன். அவன் அனைவரும் பயன் கொள்ளும் பொருட்டு உழவுத் தொழில் செய்கின்றான். சுத்தமாயை என்ற வயலில் தன் திருவருளையே வித்திட்டு, தன் கருணையை நீராகப் பாய்ச்சி, வேதம் என்னும் பயன்மரத்தை நட்டு வளர்த்தான். அம்மரத்தின் பயன்களும் பலப்பல. அம்மரத்தின் இலைகளைப் பறித்துச் சென்றவர்கள் பலர்; வேறு பலர், தளிர்களை மட்டுமே பறித்து மகிழ்ந்தனர். இன்னும் பலர், அரும்பு, மலர், பிஞ்சு, காய் இவற்றைப் பறித்துச் சென்று, தாம் செய்ததே சரியானது என்று கூறி மகிழ்ந்திருந்தனர். அம்மரத்தின் உச்சியில் வேதாந்தம் என்னும் ஓர் அருங்கனி கனிந்தது. அவ் அருங்கனியின் சாற்றைப் பிழிந்து, கோதும் விதையும் நீக்கிச் சாரமாகிய சைவ சித்தாந்தத் தேனமுது அருந்தியவர் ஒருசிலரே. (பண்டார மும்மணிக்கோவை) என்று குமரகுருபரர் விதந்து கூறுகின்றார். மிகச் சிலருக்கே சைவ சித்தாந்தத் தேனமுது அருந்துவதற்கு வாய்த்தது, பலருக்கு வாய்க்கவில்லை என்பது முனிவரின் ஆதங்கம்.

இவ்வளவு உயர்வாக, சைவ சித்தாந்தத்தின் சிறப்பை உறுதிப்பாட்டுடன் எடுத்துரைத்தவர் குமரகுருபரரே ஆவர்.

உலகில் எண்ணற்ற சமயங்களும், பல்வேறு சாத்திர நூல்களும் உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் உயிர்களின் படிநிலை வளர்ச்சிக்கு உதவுவன ஆகும். சைவ சித்தாந்தம், மற்ற சமயத் தத்துவங்களிலிருந்து ஏற்புடையவற்றை எடுத்துக் கொண்டு பொருத்தமில்லாதவற்றைத் தள்ளி, சிறந்து விளங்கும் நெறியாகும். புறச்சமய நெறிகளில் ஒழுகியும், அகச்சமயவழிச் சென்றும், மனுநூல், மறைகள் வகுத்தபடி ஒழுகியும், அரிய தவங்கள், பல கலைகள், மறைகள், சிறந்த புராணங்கள், உபநிடதங்கள் இவற்றை ஆராய்ந்து தெளிந்து படிப்படியாக மேலேறிச் சென்றால், சைவ சித்தாந்தச் செந்நெறியினை மக்கள் தலைப்படுவர். பின் இந்நெறியில் கூறப்படும் சிலம், நோன்பு, செறிவு, அறிவு வழிபாடுகளைச் செய்து, முதிர்ந்ததன் வாயிலாக, ஞானத்தைப் பெற்று, அதனால் சிவபெருமானின் திருவடிகளை அடைந்து வீடுபேற்றைப் பெறுவர். ஒன்றோடு ஒன்று ஒவ்வாத சமயங்களுக்கும்,

நூல்களுக்கும் நடுவே, சைவ சமயமே சமயப்பிணக்கற்ற ஒருமை நெறியாகச் . சிறந்து விளங்குகிறது என அருள்நந்தி சிவாசாரியாரும் அறுதியிட்டுக் கூறுவர் (கு. சுந்தரமூர்த்தி, சிவஞான சித்தியார் தெளிவுரை, ப. 141)

"வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்" (சிவப்பிரகாசம் – 7) என்றும் உமாபதி சிவாசாரியர் சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பைக் கூறுவர்.

**குமரகுருபரர் கூறும் தசாங்கம்**

கந்தர் கலிவெண்பாவில் சிவபெருமானுக்குரிய சிறப்புக்களை முருகனுக்கு ஆக்கிக் கூறுகிறார். பின் திருவுருவ வருணனை, தசாங்கம் முதலியன கூறப்படுகின்றன.

**தசாங்கம்**

பாட்டுடைத் தலைவனுக்கு அவர்தம் பெருமை குறித்தற்கு ஏதுவாய பத்து உறுப்புக்களை அவரவர்தம் இயல்பிற்கும், தகைவிற்கும் ஏற்பக் கூறல் கவிஞர்தம் இயல்பு. அவற்றைத் தசாங்கம் எனப் பாட்டியல் நூல்கள் கூறும். அவையாவன:

மலை, நதி, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசு, ஆணை என்பன.

"மலைநதி நாடுஊர் வனைதார் இவுளிகொலை
மதகளிறு கொடிமுரசு ஆணை இவையே
தசாங்கம் என்மனார் புலவர்"

(இலக்கண விளக்க பாட்டியல்)

என்னும் இலக்கண விளக்கப் பாட்டியற் சூத்திரத்தால் இப் பத்து உறுப்புக்களையும் அறியலாம். திருச்செந்தூர் முருகன் அரசாட்சியில் இப் பத்துவகை உறுப்புக்களும் இருப்பதாகப் புலவர்கள் பாராட்டுவதாகக் குமரகுருபரர் கூறி மகிழ்கிறார்.

1. மெய்யன்புடையவர்கள் உள்ளத்தில் தன்னால் வழங்கப் பெறும் இன்பமே அவனது **மலை**.
2. அம்மலையினின்றும் மேன்மேலும் பெருகிவரும் இன்பப் பெருக்கே **பேராறு**.
3. அப்பேராறு பாய்வதற்குரிய இடம், 36 தத்துவங்களும் கடந்த மேல் இடம். அதுவே அவனது **திருநாடு**.

4. உலகியல் இன்பம் அனைத்தையும் கடந்த மேலான வீடுபேற்றின்கண் இறப்பும் பிறப்பும் அற்ற உயர்ந்த அழகிய **நகரம்(ஊர்)**.
5. அவ்வின்ப நகரில் உள்ளோர், திருவைந்தெழுத்தை இடையறாது கூறிக் கூறித் தம் உயிர்க்காற்றைச் செலுத்துவர். அதுவே அவனது **குதிரை**.
6. உயிரின் ஐவகை மலங்களையும் போக்கும் சிவஞானம் அவனது **யானை**.
7. அன்பர்கள் இறையருளையே மலராகவும், தம் அன்பையே நாராகவும் கொண்டு தொடுக்கும் **மாலை**.
8. ஐந்தொழிலை இடையறாது நிகழ்த்தி நிமிர்ந்து விளங்கும் திருவருட் சத்தியான **கொடி**.
9. சுத்த மாயையிலிருந்து தோன்றும் பேரொலியாகிய **முரசு**.
10. ஐந்தொழில் செய்தும், தான் அதில் தோயாது நினைவு மாத்திரையால் நடத்தும் **ஆணை**.

(கு. சுந்தரமூர்த்தி, கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும், பக். 54-55)

"அகலாத பேரன்பு அடைந்தோர் அகத்துள்
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே"

(கந்தர் கலிவெண்பா - 66-74)

என்பது குமரகுருபரர் வாக்கு

புறச்சந்தானக் குரவருள் நான்காமவராகிய உமாபதிசிவாசாரியரும் தமது நூலுள் ஞானாசிரியரைச் சிவமாகப் பாவித்துத் தசாங்கம் அமைத்துக் கூறுவதும் ஈண்டு எண்ணத்தகும் (நெஞ்சு விடு தூது - 38-79).

குமரகுருபரர் முருகனுக்குத் தசாங்கம் கூறும்போது, சைவர்களின் முதன்மை மந்திரமாகிய ஐந்தெழுத்தையும் (நமசிவாய), உயிர்களை அல்லற்படுத்தி, அறியாமையுட்படுத்தும் ஆணவம், கன்மம், மாயை, திரோதானம், மாயேயம் ஆகிய மலங்களையும் கூறி, அவற்றை நீக்கியருளும் திருவருளையும் குறிக்கின்றார்

மேலும், இறைவன் தனது சத்தியைப் பயன்படுத்தி மேற் கொள்ளும் ஐந்தொழில்களாகிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியவற்றையும் குறிக்கின்றார். மேலும், சிவன், இவற்றைத் தனது சங்கற்பத்தால் நினைத்த மாத்திரத்திலேயே தனது ஆணையால் முடிக்கின்றான் எனவும் கூறுகின்றார் (கந்தர் கலிவெண்பா – 69, 70, 72, 73).

**இறைவன் அட்டமூர்த்தன்**

இறைவன் உயிர்கள் உய்யும்பொருட்டு ஐம்பூதங்கள், சூரிய சந்திரர், உயிர் ஆகியவற்றைத் தன் வடிவமாகக் கொண்டு அட்டமூர்த்தனாகத் திகழ்கிறான் என்பது சைவ சித்தாந்தம் கூறும் கொள்கை. சாத்திர நூல்களான திருவுந்தியாரும், 'எட்டுக் கொண்டார்' (24) என்று கூறும். குமரகுருபரரும்,

'வரும் அட்டமூர்த்தமாம் வாழ்வே'

(கந்தர் கலிவெண்பா–65)

என்றும்,

"இருபெரும் சுடரும் ஒருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமோடு எண்வகை உறுப்பின்
மாபெரும் காயம் தாங்கி ஒய்வின்றி
அருள் முந்துஉறுத்த ஐந்தொழில் நடிக்கும்
பரமானந்தக் கூத்த ... ... ... ... ... ... ..."

(சிதம்பர மும்மணிக்கோவை–54)

என்கின்றார். மேலும்,

"மதிவருக்கன் மதிவளியான் யமானன் தீநீர்
மண்எனும் எண்வகை உறுப்பின் வடிவு கொண்டஒருவன்"

(சிதம்பரச் செய்யுட் கோவை–54)

என்று இறைவனுடைய அட்டமூர்த்தங்களை விளக்குகிறார்.

"இருநிலனாய்த்தீயாகி நீருமாகி
இயமானனாய் எறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாய் அட்டமூர்த்தியாகி" (அப்பர் தேவாரம்)

என்னும் அப்பர் தேவாரமும் ஈண்டு எண்ணத்தக்கது.

மேலும் மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை ஆகிய ஆறு அத்துவாக்களையும் தனது வடிவமாக இறைவன் கொள்கின்றான்.

"மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப் - பந்தனையால்
ஒத்த புவனத்து உருவே உரோமமாத்
தத்துவங்களே சத்த தாதுவா - வைத்த
கலையே அவயவமாய்க் காட்டும் அத்துவாவின்
நிலையே வடிவமா நின்றோய்!"

(கந்தர் கலிவெண்பா-60-62)

என்றும் விளக்குகிறார்.

**ஆணவம்**

ஐந்து மலங்களையும், மூன்றனுள் அடக்கி, ஆணவம், கன்மம், மாயை என்று கூறுவர். இவற்றுள், ஆணவம், சகசமலம், மூல மலம் என்றும் கூறப்பெறும். கண்ணைப் படலம் மறைத்தாற் போன்று உயிரின் அறிவை மறைத்து, உயிருக்குத் தன் முனைப்பை உண்டாக்கி, உயிரின் அனைத்துத் துன்பங்களுக்கும் காரணமாக விளங்குகிறது. நெல்லிற்கு உமி போலவும், செம்பில் களிம்பு போலவும் இவ் ஆணவம் உயிருடன் சேர்ந்துள்ளது (சிவஞானபோதம், உதாரண வெண்பா – 12). உயிரறிவை மறைப்பதால், உயிரினுள் மறைந்துள்ள இறைவனை அறியாது, தானே எச்செயலுக்கும் தலைவன் என்று தருக்கிக் கொண்டு, கள்ளத் தலைவனாய்ச் செயல்படும் (திருவருட்பயன் – 38). குமரகுருபரரும் ஆணவமலத்தை,

'ஆணவமான படலம்' (கந்தர் கலிவெண்பா–26)

என்றும்,

'அகந்தைக் கிழங்கு'

(மீனாட்சியம்மை பி. த. வருகைப் பருவம்–9)

என்றும் உரைப்பர்.

**வினை**

வினையும், பிறப்பு, இறப்பும் ஒன்றுக்கொன்று தொடர் புடையன. இவை கடல் அலைகள் போல் தொடர்ந்து வந்து உயிரைப் பந்தத்துள் செலுத்தும். நிலையாத கொள்ளி வட்டமும், காற்றாடியும் போல, உயிர், பிறப்பு இறப்பில் பட்டு, மூவுலகங் களிலும் சுழன்று திரியும். இதனை மனத்திற் கொண்டே குமரகுருபரரும்,

"... ... ... ... ... ... ... ... ... ... ...தீர்வரிய
கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும் போல்
சென்மித்து உழலத் திரோதித்து... ... ... ..."

(கந்தர் கலிவெண்பா–15, 16)

என்று கூறுகின்றார். மேலும் வினையை 'ஊழ்வினை' (கந்தர் கலிவெண்பா – 25-43) என்றும் குறிப்பிடுகின்றார்.

**இறைவனே குருவாய் வந்தான்**

எண்ணற்ற பல பிறவிகளில் பிறந்து இறந்து சலிப்புற்ற உயிர், இன்பத்தைக் கண்டு மகிழாமலும், துன்பத்தைக் கண்டு துவளாமலும் இரண்டடையும் சமமாகப் பாவிக்கும் மனப் பக்குவத்தை உயிர் அடைகிறது. அந்நிலை, 'இருவினை ஒப்பு' எனப்படும். அந்நிலையில் உயிரறிவை மறைத்த ஆணவமலம் தன் சத்தி தேய்ந்து, மெலிதாகிறது. இது 'மலபரிபாகம்' எனப்படும். இந்நிலையில் உயிரினுள் உள்ள திருவருள் வெளிப்படத் தொடங்குகிறது. உயிரில் சத்தி பதிதல் ஆகிய 'சத்திநிபாதம்' எனப்பட்டு, இது நால்வகையாகப் பேசப்படுகிறது (கந்தர் கலிவெண்பா – 20-22; திருவருட்பயன் - 51). உயிரின் பக்குவத்திற்கேற்ப மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற வகைகளில் சத்திநிபாதம் உயிரினுள் நிகழும்போது, நான்காம் நிலையில் இறைவனே குருவாய்த் தோன்றுகின்றான். அருட்சத்தி பதிந்தவுடன், பக்குவ உயிர்களுக்கு, உலகப் பற்றுக்கள் மீது அச்சம் பிறப்பதால், உலகப்பற்றுக்களினின்றும் விரைவில் விடுபட உயிர் அவாக் கொள்கிறது. இந்நிலையில் 'குர்வே சிவமெனக் கூறினன் நந்தி' (திருமந்திரம்) என்பதற் கிணங்க இறைவன் கண்ணுதலும் கறைக்கண்டமும் கரந்து குருவாய் வருகிறான். இதனை,

"கருணைத் திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரன் என்றோர் திருப்பேர் கொண்டு"

என்று குமரகுருபரர் அருளுகின்றார். மேலும், தம் குருவாகிய மாசிலாமணி தேசிகர், தம் பிறவியறுத்துத் தமக்குப் பேரின்ப வாழ்வு அருளியதாகப் போற்றுகின்றார்.

"எம்மனோர் போல இனிது எழுந்து அருளிக்
கைம்மாறு அற்ற கணக்கில் பேரின்ப
மோனவாழ்வு அளிக்கும் ஞானதேசிகன்"

(பண்டார மும்மணிக்கோவை)

என்றும்,

"விளங்கு எழில் மிடற்று ஓர்
களங்கம் கரந்து மாசிலாமணி"

(பண்டார மும்மணிக்கோவை)

என்றும் தம் ஞானாசிரியரைச் சிவமெனக் கருதிப் போற்றித் துதிக்கின்றார்.

இக்கட்டுரை வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. சைவ சமயம், சமயப் பிணக்கற்ற ஒருமை நெறியாக விளங்குவது;
2. சிவபெருமானுக்குரிய 'தசாங்கம்' முதலானவற்றைக் குமரகுருபரர் முருகப்பெருமானுக்கு ஏற்றி உரைக்கின்றார்;
3. சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் ஆணவம், வினை, சத்திநிபாதம் முதலானவற்றைக் குமரகுருபரர் தம் கந்தர் கலிவெண்பாவில் எடுத்தோதியுள்ளார்.

# அடிகள் கண்ட கலைமகளும் மீனாட்சியும்

செ. தேவராசு, கோவை

குமரகுருபரர் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருவைகுண்டத்தில் தோன்றியவர். இளம் வயதில் ஐந்தாண்டுவரை பேசாமல் இருந்து திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்ற இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். இவரின் சகலகலாவல்லி மாலை, மீனாட்சியம்மை குறம் போன்ற நூல்களில் கலைமகளிடம் அருள், கல்வி, குறத்தி குறி சொல்லுதல், பாடுவதற்கு பெயர் கேட்டல் மற்றும் சொக்க நாதரின் அருள் போன்றவைகளைக் கூறுகிறார். அவற்றை இக்கட்டுரையில் காண்போம்.

**கலைமகளின் அருள் வேண்டல்**

கலைமகள் வெண்மையான தாமரையில் எழுந்தருளி இருப்பதுபோல் அடியேன் உள்ளத்திலும் எழுந்தருள வேண்டுகிறார். பிரமன் உயர்வு தோற்றும்படி இருப்பவளாகக் கூறி, பொருட்சுவை பொருந்த ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்கையும் பாடும் பணியில் அருள வேண்டுகிறார். கலைமகள் பங்கயமாகிய ஆசனத்தில் கூடும் பசும்பொன் கொடியாகவும், கனதனக்குன்று கூந்தலாகிய காடும் சுமக்கும் கரும்பாக விளங்குவதாகக் கூறுகிறார்.

கலைமகளால் அருளப்பெறும் தமிழ் அமுதத்தை அதிகமாக உண்டு குளித்தலை விரும்பியதை ஒரு நயமாகக் கூறுகிறார். கருத்தாராய்ந்து தெளிவாகச் செய்யும் செய்யுட்களை உடைய புலவர்களின் கவிதை மழை சிந்தக் கண்டு மகிழும் மயிலாகக் கலைமகள் விளங்குவதாகக் கூறுகிறார். தமிழ் நூல்களின் பாகுபாடுகளை ஆராய்ந்து கூறும் கல்வியும், சொற்சுவை போல் வாக்கும் பெருக பணித்து அருளுமாறு வேண்டுகின்றார். வடநூல் கடலும் செந்தமிழ்ச் செல்வமும் தொண்டர்களின் செந்நாவில் இருந்து காக்கும் கருணைக் கடலாகக் கலைமகள்

திகழ்வதாகக் குறிப்பிடுகிறார். தாமரை தன் நெஞ்சமாகிய தடாகத்தில் மலராததற்கு என்ன காரணம் என்று கலை மகளிடம் வினவுகிறார்.

**கல்வி வேண்டல்**

கலைமகளிடம் அடிகளார் இசைத்தமிழ், நாடகத்தமிழ், நூலறிவு ஆகிய முத்தமிழ்க் கல்வியும் கவித்துவமும் வேண்டுகிறார். கலைமகள் வேதத்தால் கூறப்படும் ஐம்பூதத்தில் இருப்பதாகவும், அன்பர்களுக்கு காட்சியளிப்பவளாகவும் திகழுவதாகக் குறிப்பிடுகிறார். செய்யுள், செய்யுட் கருத்து, அறம், பொருள், இன்பம் என்பதை தன்னிடத்தில் சேர்க்கும் உள்ளம் உடையதாகத் தமிழின் சிறப்பினைக் கூறுகிறார். கலைமகள் பாலையும் நீரையும் பிரிக்கும் அன்னம் போன்று விளங்குவதாகக் கூறுகிறார்.

திருமகளுக்குக் கல்விப் பெருஞ்செல்வத்தை கலைமகள் அழியாது வழங்குவதாகக் குறிப்பிடுகிறார். சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக இருக்கும் சகலகலாவல்லியை மனதால் நினைப்பதற்கு அரியவளாகக் கூறுகிறார். உலகம் கண்ட வெண்குடைக்குக் கீழாக மேற்பட்ட மன்னரும் தன் இசையைக் கண்ட அளவிலேயே பணியச் செய்வதாக கலைமகளை வேண்டு கிறார். படைப்பவன் முதலாக விண்ணுலகம் கண்ட தெய்வங்கள் பலகோடி இருப்பினும் தனக்குச் சகலகலாவல்லியைப் போன்று கண்கண்ட தெய்வம் இல்லை என்று கலைமகளின் அருள், கல்வி போன்றவற்றைக் குறிப்பிடுகிறார்.

**பொதிகை மலைக் குறத்தி**

பூ மருவிப் பொழிந்து திகழும் மதுராபுரி மருவிய மீனாட்சி யம்மை தேன் மருவிய சந்திரன் தவழும் தென்பொதிகையைக் குறம் பாடிப் போற்ற வேண்டும் எனக் கூறுகிறார். மீனாட்சி செந்நெல் முத்து, கரும்பு முத்து, ஒளி ஆகியவற்றுடன் திகழ் வதாகச் சொல்லுகிறார். பொன்னும், முத்தும் கிடைக்கும் வெள்ளருவிப் பொதிகைமலை எனப் பொதிகையைச் சிறப்பிக் கிறார். மீனாட்சி கரிகாலன் செண்டால் எறிந்த மை அடை யாளம் இருக்கும் இமயமலை முதல் மதுரை வரை அணியாய் இருப்பதாகக் கூறுகிறார். தாமரை மலரில் உள்ள வண்டினை மனதுள் வைத்துள்ள அகத்தியர் குடியிருக்கும் பொதிகை மலையின் குறத்தி இருப்பதாக அடிகளார் கூறுகிறார்.

**சொக்கநாதர் அருளுதல்**

மங்கை குங்குமக் கொங்கையும், பங்கயச் செங்கையும் உடைய மீன் கண்ணினால் மீனாட்சி வேதம் செய்வதாகக் கூறுகிறார். பங்கனைக் கழல சொக்கலிங்கனை மீனாட்சி கூடி ஏவுமாறு வேண்டுகிறார். பொன்னே, புடமிட்ட பொன்னே, மயிலே, வரிக்குயிலே என்று கொஞ்சியே பழிக்கு அஞ்சி யார் உன்னைக் கூடுவாரென மீனாட்சியைக் கேட்கிறார். அதற்கு புழுகால் தரையை மெழுகி, பிள்ளையாரை வைத்து, பொற் கோலமிட்டு, நெல் நிறைந்த நாழியை வைக்கவேண்டும் என்று கூறுகிறார். ஆழியணிந்த கையைக் கொடுத்தால் மீனாட்சி சொக்கநாதர் அருள் புரிவாரெனக் கூறுகின்றார். யாருடைய சொல்லுமே பொருளற்ற பரியாச் சொல் என்றும் வாசமே தன் குழலாயுடைய சொக்கநாதர் வந்து அணைவார் என்றும் குறிப்பிடுகிறார்.

**குறி சொல்லுதல்**

நங்கை கருதும் குறி கேட்க தன் செங்கையை கொடுக்குமாறு கேட்கிறார். தூசும் ஒரு காசும் வைத்தால் மதுரேசர் உன்னை வந்து சேருவாரென நங்கையிடம் குறி சொல்லுகிறார். கைக் குறியின் முகக்குறி இடப்பாகத்தில் எழுந்த பல்லியின் சகுனம் நல்லதென்றும் பெண்கட்கு இடக்கண் துடித்தல் நல்லதென்றும் கூறுகிறார். குறி சொல்பவள் மீனாட்சியின் மெய்க்குறி, வளைக் குறி, முலைக்குறி போன்றதை அணிந்தாளின் தோளில் மேவு வாயென கூறுகிறார். வடமலையைக் காட்டிலும் பொதிகை மலையே என் மலை என்று பொதிகை மலையினை அடிகளார் குறிப்பிடுகிறார்.

**பொதிகை மலைச் சிறப்பு**

திங்கள் முடிசூடும் அலைத்தென்றல் விளையாடும் அலையில் தங்கிய மேகம் சூழ்ந்துள்ள அகத்தியர் வாழும் பொதிகைமலை மீனாட்சியின் திருவருள் சுரந்து பொழிவதாகக் கூறுகிறார். மதம் பெய்து உறங்கும் கொலைக்களிறு கிடந்து பிளிறும் மலையாகவும், பசும் குழந்தைத் தென்றலும் திளைக்குமிடமாகப் பொதிகையைக் கூறுகிறார். தென்றல் காற்று வளருதல், வடமொழி தென்மொழி பயிலுதல், முருகன் விளையாடுதல், நலமணிகள் விளைதல் போன்றவையாகவுள்ள, அன்னம் பயிலும் பொழில் கூடல்

மீனாட்சி ஆண்ட பொதிகையைத் தன் மலையாகக் குமரகுருபரர் கூறுகிறார்,

### அஃறிணைப் பொருட்கள்

சிங்கமும் வெண்களிறும் பொதிகை மலையில் விளையாடும். சினப்புலியும் பெண்மானும் திளைத்திடும். வெங்கரடி மரையோடு விளையாடும். விட அரவும் மயிலும் விருந்தினை உண்ணும். கச்சைப் போரிட்டும் அதர்த்தெழுந்து சுதிர்த்துப் பணைத்த மணிக்கொங்கை பசுங்கொம்பன் மீனாட்சி பயந்தவாறு முருகனுக்கு வள்ளிநாயகியைக் கொடுத்த குறவர் குலமென அடிகளார் தன் குலத்தைக் கூறுகிறார்.

### குறிஞ்சிநிலச் சிறப்பு

கொழுமரத்தில் தாழ உண்டான வள்ளிக்கிழங்கைத் தோண்டியெடுத்தும், குறிஞ்சி மலரறிந்து முல்லைக்கொடியில் வைத்துக் கட்டுவதாகக் கூறுகிறார். பழுத்த பழச்சாற்றின் தேனுண்டு பசுமை ஆடையும், மரவுரியும் சேர்ந்த ஆடையை அணிவதாகக் குறிப்பிடுகிறார். வேங்கைப் புலித்தோலில் உறங்கி எழுந்து மீனாட்சியம்மை காலில் விழுந்து வினைகெடுப்பது தன் குறக்குடியின் இயல்பு என்கிறார் அடிகளார். புலியின் பார்வைக்கு மான் அஞ்சுமென்றும் மலைக்குகையில் வரிவேங்கடம் யானை யுடன் உறங்குமென்றும் கூறுகிறார். கருமலையில் வெள்ளருவி வழிந்தோடுவதைக் கூறுகின்றார். மான், இளம் பெண்யானை போன்றவை விளையாடும் குறிஞ்சி நிலமே தன் குடியிருப்பாக உரைக்கிறார்.

### காடு, மலை சென்று வள்ளி குறி கூறல்

வெள்ளிமலைக் குறவன் மகன் முருகன் கொண்ட வள்ளிக்கு மலைக்குறவர் சிதனம் வழங்கியதாகக் கூறுகிறார். கூடல் புன வாயில் பிரான்மலைக் குன்று, குற்றாலம், ஆப்பனூர், பூவனம், நெல்வேலி, ஏடகம், ஆடானை திருக்கானப் பேர், சுழியல், இராமேசுவரம், திருப்பத்தூர் இவை முதலான தலங்கள் சென்றும் மதுரை நாடும் பிறநாடும் தன் நாடாகக் காடுமலை யெல்லாம் திரிந்து வள்ளி குறி சொல்லிக் காலம் கழித்ததாகக் கூறுகிறார்.

### குறி சொல்லும் முறை

ஒருவேளைக் கஞ்சியும் தன் குழந்தைக்கு எண்லண ஆடை கொடுத்தால் நீ மனதில் நினைப்பதெல்லாம் புகல்வனவாய்

காண்பாயென கூறுகிறார். மூன்று காலமும் பொருந்துமாறு வகுத்துப் பார்த்துக் கூறுவது தங்கள் குறச்சாதியெனக் குறிப்பிடு கிறார். குங்குமம் சந்தனக் குழம்பில் தரைமெழுகி, கோலமிட்டு, குங்குலியக் கொழும்புகை காட்டி, நவமணிகளின் இசை நான்கும் பரப்பி தென்மேலை மூலையில் பிள்ளையாரை வைத்துப் பொங்கும் நறுமலர் அறுங்கோட்டை ஐங்கரர்க்குச் சார்த்தி நெய் விளக்கிட்டுக் குறி சொல்லக் கேட்குமாறு கூறுகிறார்.

''முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லை முன்னேவை யம்மே''

எனக் கூறுகிறார். நெல் அளந்தபோது எழுந்த பல்லியின் சொல், பத்தினிப்பெண் வாய்ச்சொல், தும்மல் நன்மையென உரைக்கிறார். அம்மையிடம் மேகத்தினைக் கொணருமாறு வேண்டுகிறார். நவமணிகளுடைய மீனாட்சியின் கையிலுள்ள மலர்களை வண்டுகள் கொய்வதால் வருந்துமென்றும் அவ்வாறு வருந்துபவர்க்கு நவநிதியளிக்கும் கையாக அம்மை விளங்கு வதாகக் கூறுகிறார்.

**மீனாட்சியின் பெயர் கேட்டல்**

மீனாட்சியம்மையின் செங்கையை கொங்கையில் வைத்தால் சொக்கநாதர் வருவதாகக் கூறுகிறார். தனரேகை அளவில் செல்வத்தினைத் தரும் அம்மையின் செங்கைத்துடியினை தென்மதுரேசரின் புயத்தோடு சேர்த்துப் பார்த்தால் புத்திர ரேகை எவர்க்குமில்லை என்றும் மீனாட்சியம்மை தன்னோடு இருக்கத் தகுமென்றும் குமரகுருபரர் கூறுகிறார். அன்பினை மேற்கொண்டு அவ்வையார் பாடிய தென்பாண்டி நாட்டான் பெயரையும், அம்மையின் பெயரையும் கூறுமாறு கேட்கின்றார்.

''எண்டிசைக்கும் வேம்பாயெம்
மிறையவர்க்குக் கரும்பாகும்
வண்டிசைக்குந் தாரினாள் பேரைச்
சொல்லாய் பாடநான்''

என்று வேண்டுகின்றார் அம்மையிடம். பாண்டிய அரசர்க்குரிய குதிரை கால்தூளியால் சூரியக் குதிரையாகிய விண்பரியை மூடி மண்பரியாக்கும் இயல்பு. யானைகள் எட்டுத்திசையும் புறங் கொடுத்து ஓடச்செய்த திரைகொண்டவள் பெயரைக் கூறுமாறு வேண்டுகிறார்.

**மீனாட்சியைப் பாடுதல்**

ஆனேற்றும் கொடியானையைக் காமன் வென்றிட, மீனேற்றின் கொடியுயர்த்தாளெனக் கூறுகிறார். அரசர்க்கு யானை இல்லையென்று எட்டுதிசைக்கும் ஒரு தனியானையை மீனாட்சி செலுத்தியதாகக் கூறுகிறார். விண்ணிலிருந்து பரவும் கதிர் மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ் மண்புரக்கும் அபிடேகவல்லியைப் பாடுவதாகக் கூறுகிறார். மேலும் அடிகள்,

"ஊன்கொண்ட முடைத்தலையிற்
பலிகொண்டார்க் குலகேழும்
தான்கொண்ட வரசாட்சி
தந்தாளைப் பாடுவனே"

என்று மீனாட்சியம்மையைப் பாடுவதாகக் கூறுகின்றார். நறுமணம் கமழும் சடைக்காட்டில் அழகு, கொன்றைத் தேன், பிறை போன்றன மணப்பதாகவும், எவ்விடமும் தாமாகி இருந்தவர்க்கு எவ்விடத்தையும் அமுதமாக்கும் தன்மை கொண்டவள் மீனாட்சியம்மை என்று குறிப்பிடுகிறார்.

இலைக்குறியும், குணமும் நமக்கு என கூறுவார்க்கு வளைக்குறி, முலைக்குறியணிந்த மொய்குழலினைப் பாடுவதாகவும், அனைத்துப் பொருள்கள், உயிர்களில் மீனாட்சி பரந்து கிடப்பதாகவும் கூறுகிறார். புகழிருக்கும் தமிழ்க்கூடலின் பழிக்கு அஞ்சி மீனாட்சி சொக்கநாதருடன் இருப்பதாக சொல்கிறார். அடிகளாரின் சைவசித்தாந்தம், இலக்கியப் புலமை, தமிழ்ப்பற்று, நீதிநெறிகள் போன்ற பல செய்திகளை அறியமுடிகிறது.

# குமரகுருபரம்

பி. ஆர். நரசிம்மன், பழனி

குமரகுருபரம் என்ற இச்சொல் குமரன், குரு, பரம் என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டது. இவற்றுள் பரம் என்னும் பகுதி பரம்பொருளைக் குறிக்கும். சைவம் என்பதன் பொருள் சிவத்தோடு சேர்ந்திருப்பது என்பதாகும். சைவத்தின் முப்பொருள் உண்மைகளான பதி, பசு, பாசம் ஆகியவற்றுள், பதி அல்லது தலைவன் என்னும் பொருள்படும் சைவத்தின் உயரிய செம்பொருளான சிவத்தையே பரம், என்னும் பரம்பொருள் சுற்றி நிற்கின்றது. பரம்பொருளுக்குரிய தமிழ்ச் சொல்லான கடவுள் கடந்து உள்ள சிவனையே குறிக்கும். கடந்து என்பதன் பொருள் காலத்தையும், இடத்தையும் கடந்தது என்பதாகும். இதன் மறுதலையான எக்காலத்தும், எவ்விடத்தும் நிலைத்து நிற்கின்ற சந்து எனப்படும் சிவமே பரம்பொருளாகும்.

சைவத்தின் குரு என்னும் ஆசிரியருக்கு உயரிய இடமுண்டு. சைவநெறி நிற்கும் அன்பர் அல்லது சிவத்தோடு சேர்ந்திருக்க விழைவர். அதற்குரிய வழிகளை கைக்கொள்வதற்கு குருவின் தீர்க்கை இன்றியமையாததாகும். சைவம் படைப்பு முழுமைக்கும் முழுமுதற் சிவபெருமானை தட்சிணாமூர்த்தியைக் குறிப்பிடும். இவரே, முதல் குரு, குரு என்னும் சொல்லில் 'கு' என்பது அறியாமையையும், 'ரு' என்பது நீக்குதலையும் குறிக்கும். எனவே, அறியாமையை நீக்குபவரே 'குரு' என்பதாகும். குமரகுருபரம் என்ற சொல்லின் பரமாகிய சிவனே குருவாகவும் விளங்கி நிற்கின்றார்.

குமரன் என்னும் சொல் முருகனைக் குறிப்பிடும் உயர்தனிச் செம்மொழியாகும். முருகன் சிவனின் மைந்தன். குமரன் என்னும் சிவபெருமானுடைய மைந்தனாகிய முருகனுடைய பிறப்பை நோக்குங்கால் சிவபெருமானின் நெற்றிக் கண்ணி லிருந்து கிளம்பிய பேரொளியே முருகன் என்பதை அறியலாம். தாயின் வியர்வையிலிருந்து உருவாக்கப்பட்ட விநாயகப்

பெருமானுக்குக்கூட மைந்தன் என்னும் பொருள் கொண்ட குமரன் என்ற பெயரில்லை. ஏனெனில் உமையம்மையின் திருமகனான விநாயகப்பெருமான் ஓங்கார வடிவினன் ஆயின் சிவபெருமானின் மைந்தனான குமரன் சிவபரம்பொருளேயாகும். சிவனும் குமரனும் வெவ்வேறானவர் அல்லர். முற்றொருமை நிலையில் ஒருவரே ஆவர். எனவே, குமரனும், குருவாகிய சிவனும் பரம்பொருளேயாகும் என்பதே சுற்றி நிற்பதை குமரகுருபரம் என்பது தெள்ளிதின் விளங்கும்.

தவத்திரு குமரகுருபரர் சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவில், 37–வது கண்ணியில் தொடங்கி 122–ம் கண்ணி வரை முருகனைப் பற்றிய செய்திகள் அனைத்திலும் விளக்கமுற வியந்தோய்ந்து கின்றான். ஆனால் முதல் 36 கண்ணிகளில் முருகனாகிய குமரனும், சிவனாகிய குருவும், ஒருவரே என்பதே விளக்கும் வாயிலாக சிவபெருமானின் இயல்புகளை முருகனுக்கே உரியதாக குறிப்பிடுகின்றார். சிவபெருமானும், குமாரகுருவாகிய முருகனும், ஒன்று என்பதே 'காசினிக்கே தோன்றி குருபரனின்றோர் திருப் பெயர் கொண்டு' என்னும் திருவாக்கார் உணர்த்துகின்றார். பரசிவத்தின் இயல்புகளான நித்தியம், போதம், ஆனந்தம் ஆகியவற்றை நித்தியானந்தபோதமாய் குறிப்பிடுகின்றார். சிவபெருமானின் உணர்வாகிய அறிவு குற்றமற்ற அறிவும், காணாதபோதம் எனக் குறிப்பிடுகின்றார். இதன் பொருள் பசு வாகிய உயிர் ஞான மார்க்கத்தில் நின்ற போதும் குற்றமற்ற அறிவு கைவரப்பெற்றபோதும் தன்னையோ, சிவபரம் பொருளையோ அறிய இயலாது. சிவபரம்பொருள் போதமாகிய அறிவு உணர்த்தலாயன்றி குற்றமற்ற அறிவின் இயல்பை தெரிவிக்கின்றார்.

சிவபெருமானை ஆதி நடு அந்தம் கடந்தவன் என்றும் போக்குவரவும் புணர்வும் இல்லாதவன் என்றும் குறிப்பிடுகையில் படைப்பு முழுமையும், தோன்றி நின்று ஒடுங்கும் இயல்புகள் கொண்டதாக இருக்க இத்தகைய போக்குவரவு இல்லாது சிவன் என்பதும், முதலும் முடிவும் மட்டுமின்றி இடைநிலையே இல்லாதவன் சிவன் என்பது குறிப்பிடுவது இவை சிவனாகிய குருவிற்கும் குமாரனாகிய முருகனுக்கும் பொருந்துவதே என்கின்றார்.

'காரணமில்லாத கதி' 'கருவின்றி நின்ற கருவாம்' 'உருவின்றி நின்ற உருவாம்' ஆகிய சொற்றொடர்கள் ஒரு பற்று இல்லாது தானே இருக்கும் இறைவனின் சுயம்பு நிலையை குறிக்கும். இவை சைவ சித்தாந்தம் கூறும் இறைவனின் எண்வகை பண்புகளில் ஒன்றான தன்வயத்தலால் என்பதனை குறிப்பிடுவன. குணம் குறுகியலான் கோலம் இலான் எங்கும் செறியும் பரமசிவம்' இவை அனைத்தும் சிவனின் மற்றொரு பண்பான பாசங் களினின்றும் இயல்பாகவே சிவன் நீங்கி இருத்தலைக் குறிப்பிடு கின்றனர். சிவனுக்குரிய இயல்புகளை முருகனுக்குரிய இயல்பு களாகக் குறிப்பது இருவரும் ஒரே பரம்பொருளே என்பதைக் குறிப்பிதற்கேயாம்.

தனக்கென எவ்வித பண்புகளும், குறிகளும், உருவமும் இல்லாத பரம்பொருள் நலன்தரும் வேதங்களாகிய நான்கு உருவங்களையும் நான்கு அருவங்களையும் ஒரு அரு உருவமும், அடியார்களின் பக்குவத்திற்கேற்ப பரம்பொருள் உவந்து மேற் கொள்ளும் திருஉருவங்களாகிய பருவ வடிவங்களையும் சிவபெருமான் மேற்கொள்வது ஐந்தொழில் புரிவதற்கேயாகும். ஐந்தொழிலில் முதல் தொழிலான படைத்தலானது இருன் மரத்துள் மோகமுரும் பல்லுயிர்க்கு முக்தி அளிப்பதற்கேயாகும். படைப்பினால் உயிர்கள் தேவமுறுகின்றன. உடல் பெற காரணமாக உள்ள அடிப்படை பொருள்கள் விந்து என்னும் சுத்தமாயை அல்லது குடிலை, மோகினி என்னும் அசுத்தமாயை மான் என்னும் பிரகிரிதி மாயை ஆகியவையாகும். இவைகளே உயிர்களைச் சுட்டுகின்றன.

குமரகுருபரர் படைப்பில் முட்டையிலிருந்து வெளிவருபவை, வியர்வையிலிருந்து வெளிவருபவை, விதையிலிருந்து முளைப் பவை, கருவிலிருந்து வருபவை என்னும் நால்வகை பிறப்புக் களையும் நிற்பன, நெளிவன, தத்துவன, தவழ்வன, நடப்பன, கிடப்பன, பறப்பன என்னும் எழுவகை பிறவிகளையும் நான்கு லட்சம் யோனி வேதங்களையும் குறிப்பிடுகின்றார். இவை அனைத்திற்கும் காரணமாக துய்த்து தீர்த்தற்குரிய வினை களைக் குறிப்பிடுகின்றார். உயிர்கள் தம்மை உணர்ந்தால் இத்தகு வினைகளே துய்த்து தீர்க்காமலே விட்டுவிடும், வீடு பேறும் கிட்டாத ஒன்றாகிவிடும். எனவே, அந்நிலையில் படைப்பின் நோக்கமும் நிறைவேறாது. எனவே அறியாமையை நீக்குகின்ற நிலையில் நிற்கின்ற குருவாகிய பரம்பொருள் உயிர்கள் தம்மை உணராது ஒளிய மறைத்தல் என்னும்

திரோதானத்தொழிலும் செய்கின்றார். உயிர்கள் துய்த்து தீர்த்தற்குரிய வினைகளே அவ்வாறு முடிக்க பரம்பொருள் உயிர்களின் இச்சா, கிரியா, ஞானசக்திகளை செயல்படுத்தவும் செய்கின்றார். உயிர்களும் உரிய நிலையில் குருவருளால் தீர்க்கை பெற்று சரியை, கிரியை, யோகம் ஆகியவற்றைக் கடைபிடிக்கும் பொழுது ஞானத்தினால் தெளிந்த அறிவாகிய, 'ஆலோகத்தை அகத்துவிற்கின்றார் பெருமாள். இதன் பொருள் அறியாமையை நீக்குவித்தலாகும். இதன் மறுதலையாகவே சக்திநிவாதமும் நிகழ்கின்றது. சக்தி நிவாதம் அல்லது இறையருள் இழிந்து வருதல் நான்கு நிலைகளில் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் இருவினை ஒப்பினையும், மலங்கள் நீக்கப்பெறு தற்குரிய பக்குவத்தையும் பெற்ற உயிர்களின் ஆணவ வளத்தை ஞானக்கண்காட்டி இழித்து சாலோக, சாமீப, சாரூப நிலைகளை உயிர்களுக்கு அளிக்கின்றார். பெருமாள், மேலும் இறைவன், தன் வடிவு காட்டுதலும், ஒரு மலத்தாராகிய விஞ்ஞான களற்கும், இருமலர்த்தானாகிய பிறரை களற்கும், மும் மலர்தா னாகிய சலருக்கும் வெவ்வேறு நிலைகளைக் காட்டி பெருமான் அருள் புரிகின்றான்.

மேற்கூறிய செய்திகள் அனைத்தும் பதியாகிய சிவபரம் பொருளுக்கே உரித்தானவைகளாக சைவமரபு குறிப்பிடினும் தவத்திரு குமரகுருபரர் சுவாமிகள் தனது முதல் பிரபந்த இலக்கியமாகிய கந்தர் கலிவெண்பாவில் குமரனுக்கு உரியதாக குறிப்பிடுவதினின்று குமரகுருவாகிய முருகனும் குருபரமாகிய சிவனும், ஒருவரே என்பதே தெள்ளத்தெளிவாக விளக்கு கின்றார்.

முருகனுடைய திருவுருவ நலன்களாக தவத்திரு குமரகுருபரர் சுவாமிகள் குறிப்பிடுகின்ற ஆறு திருமுகங்கள் சிவனின் ஐந்து திருமுகங்களுடன், ஒன்றுசேர்ந்து, ஆறுமுகமாக விவரிக்கின்றார், திருக்குமரனின் திருக்கரங்களின் செயல்களாகட்டும், தசாதங் களாகட்டும் மற்றும் திரு அவதாரம், திருவிளையாடல்கள் அனைத்துமே சிவபரம்பொருளின் இயல்புகளுடன் ஒத்திருத் தலைக் காணலாம். எனவே, தவத்திரு குமரகுருபரர் சுவாமி களின் திருக்கண்களுக்குக் குமரன் வடிவில் சிவபெருமானும், சிவனின் இயல்புகளில் குமரனின் இயல்புகளும் காட்சி அளித்துள்ளதை கந்தர் கலிவெண்பா விளக்கமாக எடுத்துரைக் கின்றது எனலாம்.

# நீதிநெறியும் இலக்கியத் தகுதியும்

அ. நலங்கிள்ளி, திருச்சி

மனித மாண்பை அடித்தளமாகக் கொண்டது இலக்கியம், மனித வாழ்வையும், மனித உணர்ச்சிகளையும் படம் பிடித்துக் காட்டி அவனை நன்னெறிக்கண் நெறிப்படுத்துவது இலக்கியம். நீதி இலக்கியம் என்பது மனிதனை மனிதனாக வாழச் செய்வதற் குரிய அறநெறிக் கருத்துக்களை எடுத்துரைப்பது, நீதிகளை அடுக்கிச் சொல்வது நீதி இலக்கியமாகாது. அது நீதி நூலாகக் கருதப்படும். இலக்கியத் தகுதியுடனும், சுவையுடனும். கலையழகும் குன்றாத நிலையில் அறநெறிக் கருத்துக்களை எடுத்துரைக்கும்போது அது நீதி இலக்கியமாகிறது.

தலைசிறந்த கவிஞன், நீதி இலக்கியத்தை இயற்றும்போது அறக்கருத்துக்களுக்கு முதன்மை கொடுத்தாலும் இன்புறுத்தும் கவிதைப் பண்புகளையும், கலைத் திறனையும் அவனால் அதில் இடம்பெறச் செய்ய முடியும். அப்போது அவன் கூறும் நீதிக் கருத்துக்கள் இலக்கியத் தன்மையைப் பெற்று விடுகின்றன. 'நீநி இலக்யெம்' பொதுமைப்பண்பு கொண்டதாக இருக்க வேண்டும், அவ்வாறு அமைவதே சிறப்புடைத்து. நீதிநெறிகள் படிப்போருக்குரிய விதிகளாக இல்லாமல் படிப்போர் தாமாகவே ஏற்றுக்கொள்ளச் செய்யும் வகையில் கூறுவனவாக அமைய வேண்டும். நீதிநெறிகள் இலக்கியத் தன்மையுடன் திகழும்போது தான் அவ்வாறு அமையும்.

குமரகுருபரர் தலைசிறந்த கவிஞர். அவருடைய பிள்ளைத் தமிழ் இலக்கியம், மாலை இலக்கியம், கலம்பக இலக்கியம், செய்யுட்கோவை, மும்மணிக்கோவை, குறம் போன்றன சிறப்பு மிக்க இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இவற்றைக் காட்டிலும் அவர்தம் 'நீதிநெறி விளக்கம்' என்ற அறநூல் இலக்கியத்தகுதி வாய்ந்ததாகப் போற்றப் பெறுவதே சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

''குமரகுருபரரின் 'நீதிநெறி விளக்கம்' இலக்கிய இயல்புகள் நிறைந்ததோர் இலக்கியமாகும். அதில் கருத்துக்களுக்கு முதன்மை இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும் ஆசிரியர் கற்பவர் உள்ளத்தைக் கவரத்தக்க முறையில் கலையழகும், கற்பனை வளமும் குன்றாதவகையில் அதைப் படைத்துள்ளார். தமிழில் உள்ள நீதிநூல்களில் திருக்குறளுக்கு அடுத்த நிலையில் சிறப்புமிக்க நீதி இலக்கியமாக அது விளங்குகின்றது. அதில் சொல் நயமும், பொருள் நயமும் இலக்கிய இன்பமும் இணைந்தும், இழைந்தும் உள்ளன. அதனால் அது கருத்திலே வலிவும், கலையழகிலே பொலிவும் பெற்றுத் திகழ்கிறது.'' (க. த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், பக். 354, 355) என்ற கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வகையில் குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கத்தின் இலக்கியத் தகுதியைக் காணலாம்.

நீதிநெறி விளக்கம் கடவுள் வாழ்த்துப் பாடலைச் சேர்த்து நூற்றிரண்டு பாடல்களை உடையது, கல்விச் சிறப்பு, ஆட்சி யாளருக்குரிய அறிவுரை, ஈகையின் தேவை, பணிவின் உயர்வு, இல்வாழ்க்கை முறை, செல்வ நிலையாமை, துறவுப் பெருமை, வாழ்க்கை நெறிகள் முதலியன பற்றிய கருத்துக்களை நீதிநெறி விளக்கம் அழகுற எடுத்துக் கூறுகின்றது.

**கல்வி நலம்**

குமரகுருபரர் கல்விக்கு முதன்மையளித்துப் பாடியுள்ளார். உடன்பாட்டு முறையிலும், எதிர்மறை முறையிலும் கல்விச் சிறப்பினைப் பல பாடல்களில் கூறுகின்றார்.

> ''கல்வியே கற்புடைப் பெண்டிராப் பெண்டிர்க்குச்
> செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் – சொல்வளம்
> மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
> செல்வமு முண்டு சிலர்க்கு'' (பா. 3)

இப்பாடலில் கல்வியைக் கற்புடைய மனைவியாகவும், அம்மனைவியினால் பெறும் செல்வப் புதல்வனை இனிய செய்யுளாகவும், சொல்வன்மையைச் செல்வமாகவும் உருவகப் படுத்தியுள்ளார். பிரமன் படைப்புக்களையும், புலவர்களின் படைப்புக்களையும் ஒப்பு நோக்கி,

> ''... ... ... ... ... ... மலரவன் செய்
> வெற்றுடம்பு மாய்வன போல் மாயா புகழ் கொண்டு
> மற்றிவர் செய்யும் உடம்பு'' (பா. 6)

எனக் கூறுகின்றார். புலவர்களைப் போலவே கலைமகளைத் தன்பாற் பெற்ற பிரமனது படைப்பு அழியக்கூடியது; புலவர்களின் படைப்போ புகழையும் பெற்று அழியாமலும் நிற்கக் கூடியது எனக் கூறுவது நயமிக்கது; நுட்பம் வாய்ந்தது.

வறுமையுடையாரது கல்வி எவ்வளவுதான் மேம்பாடுடையதாக இருப்பினும் சிறப்படையாது எனக் கூறும் குமரகுருபரர், இதற்கு

"... ... ... ... ... ... மனைத்தக்காள்
மாண்பிலளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்" (பா. 9)

என அழகான உவமையை எடுத்தாள்கின்றார். நல்ல மனைவி அமையாதவனின் நல்லறம் சிறவாமைபோல் வறுமையாளனின் கல்வியும் சிறவாது என்பது கருத்து.

"வறுமையிற் கல்வி போலப் புலப்படா மருங்கு நல்லார்"
(திருவிளையாடற் புராணம்-4:58)

எனக் கூறுவதும் ஈண்டு நோக்கத்தக்கது.

**ஆட்சித்துறை**

அரசனுக்கு அருகில் சான்றோர்கள் இல்லாவிடினும் தக்க சமயத்தில் அவர்கள் அவனுக்கு உறுதுணையாக அமைவர். சிறியோர் இடைவிடாது அரசனோடு இருந்தாலும் உணவு முதலிய சிறுசிறு இன்பங்களையே பெறுவர். இக்கருத்தைக் கூற வந்த குமரகுருபரர்,

"அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு" (பா. 25)

என்ற எடுத்துக்காட்டுவமையை எடுத்தாள்கின்றார். அரண்மனை வாயிலில் நிற்கும் யானை போர் செய்வதற்கும், அந்தப்புரத்தில் உள்ள பூனை உணவு உண்பதற்கும் பயன்படுவதைக் காட்டுகின்றார்.

மக்களை வருத்தி வரிவாங்கும் அரசன் செயலை, மடியை அறுத்துப் பசுவிடம் பால் கொள்ளும் செயலுக்கு ஒப்பிடுவது நயம் மிக்கது.

**ஈட்டலும் ஈகையும்**

வஞ்சனையால் ஈட்டும் பொருள் முடிவில் அழியும் என்று வலியுறுத்திக் கூறுவர் குமரகுருபரர். சமயம் பார்த்து, எளியோரை ஏமாற்றி அச்சுறுத்திச் சேர்த்த செல்வமானது பெண்ணின் மார்பகம் போலப் பெருகி வளர்ந்தாலும், நாளடைவில்

அச்செல்வம் பெண்ணின் இடைபோலத் தேய்ந்து விடும் எனக் கூறுவது சுவை பயப்பது. தலையாயார் செல்வம் பொதுமகளே போல்வது; ஏனையோர் செல்வம் குலமகளே போல்வது; கடையாயார் செல்வம் கைப்பெண் நலம் போல்வது (பா. 66) என்னும் பாடல் உவமை நலம் சான்றது.

ஈகையின் சிறப்பை உருவகமாக ஒரு பாடலில் குமரகுருபரர் தெளிவுறுத்துகின்றார்.

''கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா – வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு'' (பா. 36)

இரவலரைச் சேய்மையில் இனிமையாகப் பார்த்தல் அரும்பு; நகைமுகம் அன்று மலர்ந்தமலர்; இன்மொழியாகிய வாய்மை இனிய காய்; வள்ளண்மை பழம் என உருவகப்படுத்துதல் இனிமை பயக்கின்றது.

**இல்வாழ்க்கை**

இல்வாழ்க்கையின் சிறப்பினைத் துறவியாகிய குமரகுருபரர் பல இடங்களில் சிறப்பித்துக் கூறுகின்றார். கருமம் சிதையாமல், கல்விச் செல்வம் கெடாமல், தருமமும் தாழ்வுபடாமல், இல்வாழ்க்கையின் நன்மையும் குன்றாமல் பெண்ணிடத்தில் இன்பம் துய்த்தல் நலம் (பா. 77) என்று கூறுவது உவகை பயப்பதாகவும், உண்மையை அறிவதாகவும் அமைந்துள்ளது.

''கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன் போல் – முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
இறந்த வெலாம் துன்பமலா தில்'' (பா. 99)

இல்லறமும் துறவறமும் இணைகின்ற பான்மையை இங்குக் காணலாம்.

**துறவுப் பெருமை**

துறவு என்பது மிக உயர்ந்த நெறி. பிறரால் பழிக்கப்படக் கூடாத நெறி. துறவு நெறிக்குக் கூடாதன எல்லாவற்றையும் பட்டியலிட்டு அழகுற உயர்த்துகின்றார் குமரகுருபரர். (பா. 84) 'உள்ளத்துறவே' சிறந்தது என்கின்றார். தவப்போர்வை 'கஞ்சுகமன்று' என்பவர். அக்கஞ்சுகம்,

'எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது'

என்று சொல்லாட்சித் திறனுடன் கூறுவது அழகுடைத்து. 'நெஞ்சில் துறவார் துறந்தார் போல்' (276) என்ற குறள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

'வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தே மென்று மகிழன்மின்' (பா. 93)

என்று அறிவுறுத்துகின்றார்.

'கற்றாங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருந்திப் – பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச் சென்றார்'' (பா. 100)

என்று துறவிலக்கணம் கூறி வீடு பெற வழிவகுக்கின்றார். அடுக்கிவரும் சொல்லாட்சினை இங்குக் காணலாம். 'பொய்யாமை, பொய்யாமை ஆற்றின்' என்ற குறள் (297) ஈண்டு ஒப்பிடற்குரியது.

**நன்னெறிகள்**

குமரகுருபரர் மனித வாழ்க்கைக்குரிய பல நன்னெறிகளை இலக்கியச் சுவைபயக்க எடுத்துரைக்கின்றார். ஒருவன் தன்னைத் தானே வியந்து கொள்ளுதல் விளக்கில் நீர்வார்த்து எரிய வைப்பது போன்றது (பா. 18) யார் கூற்றையும் ஆராயாமல் நம்பக்கூடாது; தாய்க்கொலை சால்புடைத் தென்பாரும் உண்டு (பா. 38) அழிவுக்கு அஞ்சாது மானத்தைக் காத்தல் வேண்டும் (பா. 40) யானையைப் பாகன் நெறிப்படுத்துவது போன்று அரசனை அமைச்சன் நெறிப்படுத்த வேண்டும் (பா. 44) வெங்காரம் வெம்மையாயினும் நோய்தீர்க்கும்; சிங்கி (விஷம்) குளிர்ந்ததாயினும் கொல்லும்; அதுபோல பெரியவர் கடுமொழி நன்மையைத் தரும், பகைவர் இன்மொழி தீமை தரும் (பா. 58) இவ்வாறு இலக்கிய நயம்படப் பல நீதிகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

மனிதனை நெறிப்படுத்தக்கூடிய நீதிநெறிகள் ஆணைகள் போல இருப்பின் அவை கால வெள்ளத்தில் நிலைபெறுவதில்லை. ஆனால் அந்த நீதிகள் இலக்கியத் தன்மையுடன் எடுத்துரைக்கப் படும்போது நிலைத்த வாழ்வைப் பெறுகின்றன. குமரகுருபரரின் நீதிநெறிவிளக்கம் கற்பனை நயத்துடனும், அணிநலன்களுடனும், சொல்லாட்சித் திறனுடனும் உயர்ந்து விளங்குவதால் தனிச் சிறப்பைப் பெற்றுள்ளது.

# குமரகுருபரர் பூவல்லி

இரா. நளினிகாந்தம், தஞ்சாவூர்.

தமிழிலக்கிய மரபைச் சங்க இலக்கியங்கள், நீதிஇலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் பல்வகையாகப் பகுப்பர்.. அவற்றுள் சிற்றிலக்கியக் காலம் 14-17ஆம் நூற்றாண்டு வரை அமையும். இக்காலத்தில் தோன்றிய ஆதி குமரகுருபரர் அடிகள் சிற்றிலக்கிய வேந்தர் எனப்படுகிறார்.

சிற்றிலக்கியங்களின் காலம் 14-17.ஆம் நூற்றாண்டு எனினும் அதன் தோற்றம் பக்தி இலக்கியக் காலகட்டத்திலிருந்து காண முடிகிறது. 17-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும் பல சிற்றிலக்கி யங்கள் தோன்றிவளர்ந்துள்ளன. அங்ஙனம் 20ஆம்நூற்றாண்டில் எழுந்த குமரகுருபரர் பூவல்லி ஆய்வுப் பொருளாக அமைகிறது.

பூவல்லி சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. பாட்டுடைத் தலைவனின் அருமை பெருமைகளைப் பாடிப் பூக்கொய்து விளையாடுவதால் பூவல்லி எனப் பெயர் பெற்றது. இது சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பெற்றிருக்கும் பல்வரிக் கூத்தினுள் ஒன்றாகிய கொய்யூமுள்ளிப்பூ என்னும் மகளிர் விளையாட்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

இறைவனை வழிபடப் பல வழிகள் உண்டு. அவற்றில் ஒன்று விளையாட்டின் மூலம் இறைவன் பெருமைகளைக் கூறுவதாகும். மாணிக்கவாசகரும் இறைவனது பெருமைகளைப் பொற்சுண்ணம் இடித்தல், அம்மானை போன்ற விளையாட்டின் மூலம் வெளிப் படுத்துகிறார். இவ்வகையில் பூவல்லி இலக்கியத்திற்கு முதல் களன் அமைத்தவர் மாணிக்கவாசகப் பெருமான் ஆவார். இவர் பாடிய திருப்பூவல்லி தரவு கொச்சகக் கலிப்பாவால் இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இருபது பாடல்களை உடையது. இம் மரபில் திருப்பனந்தாள் காசிமடம் காறுபாறு சுவாமிகள் குமாரசாமி தம்பிரான் சுவாமிகள் குமரகுருபரராகிய இறையடியாரைப் பாடடுடைத் தலைவராகக் கொண்டு பத்துப்

பாடல்களைப் பாடியுள்ளார். பாட்டின் இறுதியில் 'பூக்கொய் யாமோ' என்று முடிக்கப் பெற்றிருக்கும் இப்பாடல்களின் மூலம் சுவாமிகள் குமரகுருபரரது பெருமைகளைச் சுட்டிக் காட்டி யிருக்கிறார்.

**இலக்கிய மரபு**

தலைவியானவள் தன் தோழியரை அழைத்து தலைவனுக் குரிய மலர்களைக் கொய்ய அழைப்பதாயும் அவ்வாறு அழைக்கும் நிலையில் பாட்டுடைத்தலைவன் புகழ் கூறியபடி பூக்கொய்யும் நிலையையும் உடையதாக பூவல்லி இலக்கியப் பொருண்மை அமைகிறது. இத்தன்மையில் வழுவாமல் ஸ்ரீகுமரகுருபரர் பூவல்லியில்,

> 'கோன் தனது சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ' (1)
> 'பொன்னடிகள் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ'(2)
> குருபரர் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ (3)
> குழைத் தமிழால் பாடி நாம் பூவல்லி

என்று தலைவி குமரகுருபரர் புகழ் பாடிக் கொண்டே பூக்கொய்யக் கருதும் தன்மை புலப்படுகிறது.

சைவ சித்தாந்த வழிபாட்டில் குரு- லிங்க- சங்கம வழிபாடு சுட்டப்பெறும். குருவைச் சிவனாகக் காண்டல், லிங்க வடிவில் சிவனைக் காணல், இறையடியார் திருக்கூட்டத்தை சிவனாகக் காணல் என அவை அமைகின்றன. இவ்வுயரிய மரபில் குமர குருபரர் மாசிலாமணிதேசிகரை குருவாயும் சிவனாயும் ஒருங்கே கருதிப் பண்டாரமும்மணிக்கோவை பாடினார். அது போன்றே குமரகுருபரர் பூவல்லி பாடிய ஸ்ரீசுவாமிகள் குமரகுருபரர் வேறு பரமன் வேறு என்னாது பாட்டுடைத் தலைவராய் தம் ஆதி குருவாம் குமரகுருபரரைப் போற்றுகிறார். எனவே, சிவனைப் பாடிய திருப்பூவல்லியினின்று இறையடியராம் குமரகுருபரரைப் பாடிய குமரகுருபரர் பூவல்லி வேறுபட்டதன்று. ஒத்தத்தன்மை யுடையனவே.

**அருட்சிறப்பு**

ஸ்ரீகுமரகுருபரர் பூவல்லி அடிகளின் அருளாற்றலையும் நூல் சிறப்பையும் விதந்தோதும் மாணிக்கவாசகரின் திருக்கோவையை முத்தித்தரும் பனுவல் என்று வழிகாட்டியவன் என குமர குருபரரை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

மனமானது மாயையில் இடர்ப்பட்டு வருந்தும் காலத்தில் மயங்கவிடாது காப்பவனும் அருள் செய்யும் தந்தை ஒப்பவனும் அனைத்து ஆதரவாய் விளங்கும் அன்னை ஒப்பவனும் மனஇருள் ஒழிக்கும் சுடர்போன்றவனும் இன்னும் பல்நிலைகளிலும் காத்து அருளும் ஸ்ரீகுமரகுருபரர் என்று ஆசிரியர் அடிகளின் அருளாற்றலைக் குறிப்பிடுகிறார். இதனை,

மருள்கின்ற காலத்தே மயங்காமல் காத்தளிக்க
அருள் அளிக்கும் அப்பனாய் அணைத்தருளும் அன்னையாய்
இருள் ஒழிக்கும் சுடராகி எல்லாமாய்க் காக்கின்ற
குருபரனார் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ (4)

என்ற பாடலால் அறியலாம். அப்பரின் அப்பன் நீ அம்மை நீ என்ற பாடல் ஒப்புநோக்கத்தக்கது.

அடிகளை ஆசிரியர் கற்றவர்தம் உள்ளத்தே களிப்புற அமையும். நூல் நயமாயும், பிறவியாகிய பிணியோடவல்ல மருந்தாயும், எல்லார்க்கும் நன்னெறி காட்டுபவராகவும் குமர குருபரர் திகழ்கிறார்.

அடிகள் இசுலாமிய மதம் திகழ்ந்த வடவர் ஆட்சிப் பகுதியில் மறவன்மையால் அன்றித் தவவன்மையால் சைவமும் தமிழும் நாட்டினர். இதனால் அயல் மதத்தினரும் அடிகளிடம் அன்பு பாராட்டினர். அடிகளும் இன மத வேற்றுமை பாராது அனைவரையும் அரவணைத்து அருள் புரிந்தார். அத்தகைய அருள் புரிந்த குருநாதர் தன்னையும் ஒரு பொருளாகக் கருதி ஆட்கொண்டான் என வியப்புற்று வழிபடுகிறார். இதனை,

ஆதிகுமரகுரு பரஅடிகள் எமதய்யன்
நீதிநெறி விளக்கம் தந்தோன் நிகழ்காசி
வீதியிலே தமிழ் முழக்கம் விளைத்தோன் பசுபாசச்
சோதிலான் கழல்பாடிப் பூவல்லி கொய்யாமோ (5)

என்ற பாடலில் அறியலாம். மணிவாசகரின் பாடலில் தாழ்ச்சி யுடைய தன்னையும் இறைவன் ஏற்றான் என்ற குறிப்பில் அமைந்த,

நாயிற் கடைபட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்

மாயப்பிறப்பறுத் தாண்டான் என் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ (6)

பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

**தெய்வச் செய்திகள்**

ஸ்ரீகுமரகுருபர அடிகள் தராசுகோ அவைக்கு ஏகியபோது மன்னனும் துருக்கியரும் அடிகளிடம் தம் தெய்வ ஆற்றலை வெளிப்படுத்த வேண்டும் என்றனர். அப்போது ஊனுணவை, மரக்கறி உணவாய் மாற்றுதல், பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் கையில் ஏந்துதல் எனப் பல தெய்வச் செயல்கள் நிகழ்த்துகிறார். மன்னன் அடிபணிந்து தம் குறை பொறுத்திட வேண்டுகிறான். அப்போது கருடன் பறக்கும் இடங்களைத் தருமாறு அடிகள் கூற, அவ்வாறே அவனும் சம்மதிக்கிறான். காசியில் கருடன் வட்டமிடுதல் இல்லை என்பது மரபு. அப்படியிருக்க காசியில் உபய கருடன் காட்டிய தெய்வச்செயல் பெரிதன்றோ. இவ்வியப்பையே ஆசிரியர்,

திருவோங்க நாடாண்ட சீர்காசி மன்னன் முன்
இரும்புதனைக் காய்ச்சித்தன் கைஏந்திக் காட்டியவன்
இருகருடன் காசியிலே பரந்துவரக் காட்டியவன்
குருபரன் தனைப் பாடிப் பூவல்லி கொய்யாமோ (6)

என்ற பாடலில் குறிப்பிட்டுரைக்கிறார்.

**நூல் சிறப்பு**

குமரகுருபரர் 5-ஆம் வயதில் கந்தர் கலிவெண்பா தொடங்கி, காசிக் கலம்பகம் ஈறாக பன்னிரண்டனுக்கும் மேற்பட்ட பிரபந்தங்கள் பாடியருளினார். அடிகள் பாடிய நூல்களில் சிலவற்றைப் பெருமைபடப் பூவல்லி ஆசிரியர் கூறுகிறார்.

**கந்தர் கலிவெண்பா**

பிறவி ஊமையிலிருந்து 5 ஆம் வயதில் திருச்செந்தூர் முருகன் அருளால் 'பூ' என அடியெடுத்துத் தரப்பெற்ற குமரகுருபரர் 'பூமேவு கமல' என்று தொடங்கும் கந்தர் கலிவெண்பாவைப் பாடினார். இப்பாடலில் சைவசாத்திரச் செழுமையைக் காணலாம். இது கருதியே வேத முதலான கருத்தெல்லாம் 'பூ' என்ற ஒன்றால் அடைந்தார் என்பது பொருள்பட,

வேதமுதல் கலைகளெல்லாம் பூவொன்றால் வந்தணைய
நாதனாம் முருகன் நலங்காட்டஅப் பூமுதலாய
ஓதரிய கந்தர் கலிவெண்பாப் பாடிய
போதனார் கழல்பாடிப் பூவல்லி கொய்யாமோ (8)

என்று கூறுகிறார்.

**நீதிநெறி விளக்கம்**

எம் தலைவன், காசியில் தமிழ் முழங்கச் செய்த பெரியான். பசு பாச குற்றமற்றவன் அத்தகையோன் பாடிய நீதிநெறி விளக்கம் (7) என்று கூறுகிறார். அந்நூலின் சிறப்பை,

புண்பட்ட மனத்துக்கோர் மருந்துண்டோ என்றேங்கி
மண்ணுலகில் உழல்கின்ற உயிர்கட்கு அமுதமென
வண்டமிழால் நீதிநெறி மழைபொழிந்த குமரகுரு (9)

எனப் பாராட்டுவார்.

**பிள்ளைத்தமிழ்**

வடமொழி திகழ் வடநாட்டிலும், தென்மொழி திகழ் தமிழகத்திலும் பல பனுவல்கள் பாடி பிரபந்தமாகிய இணைப்பைச் செய்தவர். மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழும் குமரகுருபரர் பாடியருளினார். முருகனையும் அம்மையையும் குழவியாய்க் கண்டு பாடி மகிழ்ந்தார். மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடுகையில் மீனாட்சியம்மை வருகைப் பருவத்தில் அர்ச்சகர் மகளாய் வந்து மன்னன் மடியில் அமர்ந்து கேட்டனள். 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்' என்ற பாடலை மீண்டும் பாடச் சொல்லி, மன்னன் கழுத்திலிருந்த முத்து மாலையை எடுத்து அணிவித்த சிறப்புடையவர் என்று ஆசிரியர் அடிகளின் தெய்வக்கவி நலம் போற்றுகிறார்.

மேற்கண்ட பூவல்லியில், அடியாருக்கு அருளும் பாங்கு, அடிகள் பெற்ற தெய்வக்கவி நலம், நல்வழி காட்டும் தன்மை, சைவமும் தமிழும் சிறப்புறக் காட்டிய தெய்வச் செயல்கள், இறையருளுடன் படைத்தருளிய பிரபந்தங்கள் ஆகியன பூக்கொய்யும் மகளிர் பாடும் பொருண்மையாயின.

இந்நூல் முன்னூல் மரபுவழாது, இலக்கியச் சிறப்பு குன்றாது, அடிகள் பெருமையைப் பேச வந்த நூலாய்த் திகழ்கிறது.

# அருணகிரியாரும் குமரகுருபரரும்

**ப. நாகப்பன் நாயர்,** வெள்ளமடம்.

ஆன்மீக உலகம் செய்த அருந்தவப் பயனால் அவதரித்த மகான்கள் அருணகிரியாரும் குமரகுருபரரும். முன்னவர் 13-ம் நூற்றாண்டில் தோன்றியவர். பின்னவர் 17-ம் நூற்றாண்டில் தோன்றியவர். அருணகிரியார் பிரபுட தேவராயர் காலத்தில் திருவண்ணாமலையில் பிறந்தவர். குமரகுருபரர் திரு வைகுண்டத்தின் வட பகுதியான திருகைலாசபுரத்தில் பிறந்தவர். குமரகுருபரரது பெற்றோர் சண்முகசிகாமணிக் கவிராயர், சிவகாமசுந்தரி அம்மையார்.

அருணகிரியார் முருகப் பெருமானின் திருவாக்கால் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர். ''சும்மா இரு சொல்லற'' என்ற ஞான உபதேசம் பெற்றவர். குமரகுருபரர் பிறவி மூங்கையரா யிருந்து செந்திலாதிபன் திருவருளால் பேச்சு வரப் பெற்றவர்.

அருணகிரிநாதர் ''முத்தைந்தருபத்தித் திரு நகை அத்திக் கிறை சத்திச் சரவண முத்திக்கொரு வித்துக்குருபர என வோதும்'' என்று தொடங்கிப் பாடுவாராயினர். குமரகுருபரரோ ''கந்தர் கலிவெண்பா'' பாடித் தொடங்கினார்.

இருவருமே எண்ணற்ற தோத்திரப் பாடல்கள் பாடிப் பக்தி நெறியை வளர்த்தவர்கள். மொழி வேறுபாடு கருதாமல் பாடி மகிழ்ந்தவர்கள். அன்பு என்பதே இருவரது பாடல்களிலும் இழையோடும் அடிச்சரடு. பக்தி என்பதே இருவரது பாடல் களிலும் வெளிப்படும் பலன். இருவருடைய பேச்சிலும் மூச்சிலும் எதிரொலித்தது பைந்தமிழ். கேட்டார் பிணிக்கும் தகையவாய் கேளாரும் வேட்ப மொழிந்த தமிழ் அருளாளர்கள்.

திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், வேல்விருத்தம், மயில் விருத்தம் போன்ற நூல்களைப் பாடியவர் அருணகிரியார். கந்தர் கலிவெண்பா, கைலைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்

தமிழ், பண்டார மும்மணிக்கோவை, காசிக் கலம்பகம், காசித் துண்டி விநாயகர் கலம்பகம், சகலகலாவல்லி மாலை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் போன்ற நூல்களைப் பாடியவர் குமரகுருபரர்.

இருவரது வாழ்விலும் இறையருளால் அற்புதங்கள் பல நிகழ்ந்துள்ளன. குமரகுருபரர் வாழ்வில் நிகழ்ந்த முதல் அற்புதம் அவர் பேசுந் தன்மை பெற்ற பெரும் பேறாகும். மதுரையில் திருமலை நாயக்கர் மன்னர் முன்னிலையில் குமர குருபரர் தமது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பிரபந்தத்தை அரங்கேற்றியபோது அங்கயற்கண்ணி அம்மையே சிறுமியாக வந்து குமரகுருபரருக்கு முத்துமாலையை அளித்துச் சென்றமை மற்றொரு அற்புதமாகும். சகலகலாவல்லி மாலை பாடி இந்நூல் இந்துஸ்தானி மொழியில் பேசும் வல்லமை பெற்றமை பிறிதொரு அற்புதமாகும். இவை போன்றே அருணகிரியார் வாழ்விலும் அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன.

திருவண்ணாமலை வல்லாளராஜன் கோபுரத்திலிருந்து "முருகா" என்று கதறியவண்ணமே கீழே சாடியபோது முருகப் பெருமானின் மென் கரங்களால் தாங்கப்பட்டு காப்பாற்றப்பட்டமை ஓர் அற்புதம். கந்தப்பெருமானே தம் கைவேலால் "ஓம்" என்னும் உயிர் மந்திரத்தை அருணகிரியாரின் நாவில் எழுதியது இன்னொரு அதிசயம். செந்திலம்பதியில் நடன தரிசனம் பெற்றமை இன்னுமோர் அதிசயம். பழநியில் ஜெபமாலை பெற்றமையும், திருவேரகத்தில் பிரணவமந்திர உபதேசம் பெற்றமையும், திருவண்ணாமலையில் கம்பத்தினின்றும் கந்தப் பெருமானை வரவழைத்துப் பலரும் காணச் செய்தமையும், விராலிமலையில் சித்திகள் பெற்றமையும் ஆகிய அதிசயங்கள் இறையருளின் வெளிப்பாட்டினையும் இதற்கு அருணகிரியார் ஒரு கருவியாகப் பயன்பட்ட நிலை அற்புதத்திலும் அற்புதமாகும்.

அருணகிரியாரின் படைப்புகளில் சந்தம் பொங்கிப் பரவுவது ஒரு பெருஞ்சிறப்பு. இவரது எழுத்துக்கள் ஓசை ஒழுங்கினால் உள்ளத்தைப் பிணிக்கும் ஒப்புயர்வற்ற எழுத்துக்களாகும். எனவே அவரை "வாக்கிற்கு அருணகிரி" என்று மகிழ்ந்து போற்றுகிறோம்.

"ஆடும் பரிவேல் அணி சேவலெனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்"

எனப் பாடித் தமக்குரிய பணியாகத் தயாபரனைப் பாடுவது மட்டுமே அமைய வேண்டும் என்று அருணகிரியார் வரையறுத்துக் கூறுவார். "என்னை இறைவன் நன்றாய்ப் படைத்தனன் தன்னை நன்றாய்த் தமிழ் செயுமாறே" என்று திருமூலர் கூறுவார். "கண்ணன் என்னைக் கவியாய்ச் சமைத்தது வண்ணத்தமிழில் வாழ்ந்திடுமாறே" என்பது கண்ணதாசன் வாக்கு.

"பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்
தித்தித்திருக்கும் அமுது கண்டேன்"

என கந்தரலங்காரத்தில் அருணகிரியார் பாடுவார். "மொய்த்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழில் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்" என கந்தப் பெருமானின் கருணையைப் போற்றிக் கசிந்துருகுவார் அருணகிரியார்.

"பழுத்தமுது தமிழ்ப்பலகையிருக்குமொரு கவிப் புலவன் இசைக்குருகி வரைக்குகையையிடித்து வழி காணும்" என்று நக்கீரன் அருள் பெற்ற வரலாற்றினை 'வேல் வகுப்பில் வடித்துக் காட்டுவார் அருணகிரியார். "அசுரர் கிளை வேரொடும் மடிய அடு தீரா" என முருகப்பெருமான் சூரர் கிளையறுத்த செய்தியினைப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவன் அருணகிரிப் பெருமான்.

குமரகுருபரர் காலத்தால் அழியாத கந்தர் கலிவெண்பா பாடிக் களித்தவர். 122 கண்ணிகளையுடைய இந்நூல் சாத்திரமணம், தோத்திரமணம், வரலாற்று மணம் ஆகிய மும்மணங்களும் ஒருங்கு கமழ நிற்பது. இந்நூல் இம்மைக்கும் மறுமைக்கும் உதவுவதோடு முத்திப்பேறு கிட்டவும் வழிகாட்ட வல்லது பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மையை விளங்க உரைப்பது கந்தர் கலிவெண்பா.

10345 பாடல்களையுடைய கந்தபுராணத்தின் ஆறு காண்டங்களையும் தனது கந்தர் கலிவெண்பாவில் 74-வது கண்ணியின் தனிச்சொல் முதல் 108-வது கண்ணி வரையுள்ள 35 கண்ணிகளால் மிகச் சுருக்கமாகவும் அழகாகவும் அருளியுள்ளார் குமரகுருபரர்.

குறை முடித்து விண்ணம் குறையேற்றித் தேவர்
சிறை விடுத் தாட்கொண் டளித்த தேவே

என்று தேவர் சிறைவீடு பெற்றதனைப் பாடும் அருட்கவி குமரகுருபரர்.

"சைவக் கொழுந்தே தவக்கடலே! வான் உதவும்
தெய்வக் களிற்றை மணம் செய்தோனே"

என தெய்வானை திருமணத்தையும்

"தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே"

என்று வள்ளி திருமணத்தையும் சுருக்கமாக ஆனால் தெளிவாகப் பாடி மகிழ்வார் குமரகுருபரர்.

இறைத்தலந்தோறும் சென்று இறைவனை இறைஞ்சுவதும் இன்தமிழ்ப்பாக்கள் இசைப்பதும் குமரகுருபரரின் கடமையாய் அமைந்துவிட்டது கடவுளின் குறிப்பே. திருமலை நாயக்க மன்னரின் வேண்டுகோளுக்கிணங்க நம் குருபரர் பாடிய நூல் நீதிநெறி விளக்கம். திருவாரூர்த் தியாகேசப் பெருமானைப் போற்றும் நூல் திருவாரூர் நான்மணிமாலை என்னும் நற்றமிழ் நூல். புள்ளிருக்குவேளூர் எனப் பெயர் பெறும் வைத்தீஸ்வரன் கோவிலில் குடி கொண்டுள்ள இறைவன் மீது பாடப்பட்ட நூல் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.

யாப்பருங்கலக்காரிகையில் காணப்படும் உதாரணச் செய்யுள்கள் ஜைனச் சார்புடையனவாயிருத்தலின் சைவச் சார்புடைய செய்யுள்களைத் தருதல் வேண்டும் என அன்பர்கள் வேண்டிக் கொண்டதற்கேற்ப குமரகுருபரர் பாடியருளிய நூல் சிதம்பர செய்யுட் கோவை.

தம் ஞானாசிரியர் மீது அன்னார் பாடிய அரிய நூல் பண்டார மும்மணிக்கோவை. இந்நூல் தருமை ஆதீனத்தில் பாடப்பட்டது.

குமரகுருபரர் தலயாத்திரையாக – புனித யாத்திரையாக தமிழ் வழங்காத காசிக்குச் சென்றார். யாத்திரை சென்ற இடத்தில் அங்கு ஒரு சைவ மடத்தை நிறுவினார். அம்மடம் இன்றும் தமிழ் மடமாகவும், தன்னை நாடிவரும் தமிழருக்கு விருந்தளிக்கும் மடமாகவும், சைவ சித்தாந்த நூல்களைப்

போதிக்கும் கல்வி மடமாகவும் விளங்குகிறது. காசிவாசி என்னும் பெயரும் பட்டமும் குமரகுருபரரை வந்தடைந்தன.

சைவ சமயத்தில் அழுத்தமான பற்றுடையவரென்றாலும் வைணவத்தின்பால் காழ்ப்புடையவரல்லர் குமரகுருபரர்.

குமரகுருபரரின் பிரபந்தத்திலுள்ள நூல்களுக்குத் தமிழ்த் தாத்தா. மகாமகோபாத்தியாய டாக்டர். உ.வே. சாமிநாத ஐயர் ஆய்வுரை எழுதியுள்ளார்.

கௌமாரமடம் நிறுவிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமது நூலாகிய புலவர் புராணத்தில் குமர குருபரரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

ஆதிசங்கரரைப் போலவே குமரகுருபர சுவாமிகள் அறு வகைச் சமய ஒருமைப்பாட்டைக் காணவே – அத்துறையில் ஆதிசங்கரர் தொடங்கிய பணிக்கு வெற்றி தேடவே வடநாடு சென்றார் என்பர். இவரது நூல்களில் காப்புச் செய்யுள்களில் கணபதியும், சக்தியும், முருகனும், திருமாலும், சிவனும் இடம் பெறுவது தனிச் சிறப்பு.

குமரகுருபரர் சிறந்த பௌராணிகர். துளசிதாசரோடு தோழமை கொண்டு இராமாயணத் தொடர் சொற்பொழிவு களைக் காசியில் நிகழ்த்தியவர். கேதார கட்டத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்த சிவலிங்கத்தைப் பலர் அறிய வெளியே எடுத்து அதற்கு தனிக்கோயில் எழுப்பித் தந்தார்.

அருணகிரிநாத சுவாமிகளும் காசியில் சமாதி அடைந்த குமரகுருபர சுவாமிகளும் இந்தியக் கலாச்சாரத்திற்கு இரு விழிகள் ஆவர். அவர்களால் தமிழ் தழைத்தது. சைவம் மணம் பரப்பியது. இருவருமே மகத்தான மாமணிகள். மனிதம் உய்யப் பிறந்த மகான்கள்.

# குமரகுருபரரும் பாம்பன் சுவாமிகளும்

கு. நாகராஜன், ஈரோடு.

குமரகுருபர சுவாமிகளின் இலக்கிய ஆய்வு மாநாட்டில், பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் வாழ்க்கை மற்றும் வாக்குகளில் காணப்பெறும் செய்திகள் சிலவற்றைச் சுட்டிக் காட்டி, இருபெரும் அடியார்களின் சமயம் பற்றிய கருத்துக் களை ஒப்பிட்டுப் பார்ப்போம். இவ் ஆராய்ச்சியின் மூலம் நம் மனங்களில் உள்ள பக்தியின் அளவும் தமிழ்ப் பற்றும் சிறிதள வேனும் வளர்ச்சியடைய வேண்டும்.

### சுவாமிகள் இருவரின் காலம் – வயது

சுவாமிகள் இருவருமே தென்பாண்டிச் சிங்கங்கள். பண்பாளர்களின் இல்லங்களில் விளங்கும் திம்பயிர்கள். தெய்வத் தின் திறனைக் கண்ட அருளாளர்கள். 311வது குருபூஜை என்ற மாத்திரத்திலும், திருமலை நாயக்கர் காலத்தில் மதுரை யில் மீனாட்சி அம்மன் பிள்ளைத்தமிழ் அரங்கேறிய செய்தியாலும் குமரகுருபரரின் காலத்தை நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

பாம்பன் சுவாமிகள் 1850–1929 வரை வாழ்ந்துள்ளார். ‘பாம்பன்’ என்று ஊர்ப் பெயரால் தன்னை வெளிப்படுத்திக் கொண்டுள்ளார். இயற்பெயர் அப்பாவு. சென்னை திருவான்மியூரில் சமாதி கொண்டுள்ளார்.

### செந்திலாண்டவரின் பெருங்கருணை

குமரகுருபரரின் பெற்றோர்கள் சிறந்த முருக பக்தி உடையவர்கள். 5 வயது வரை வாய் பேசாது இருந்து, திருஅருள் வாய்க்கப் பெற்றதோடு அல்லாமல், ‘கந்தர் கலிவெண்பா’வைத் திருவாய் மலர்ந்து அருளினார். இந்நூல் நமது வழிபாட்டு நூலாக விளங்குகிறது. பாம்பன் சுவாமிகள் அருளிய ‘பரிபூஜன பஞ்சாமிர்தவண்ணம்’ செந்திலாண்டவனின் முத்திரையைப் பெற்றது. கவுண்டர் மண்டபத்தில் பஞ்சாமிர்த

வண்ணம் ஓதிய அருளாளர்களிடம் கனவில் தோன்றிய முருகன், 'இவ்வண்ணம் பாடுமிடங்களில் நானும் இருப்பேன்' என உறுதி கூறினார். 35 கண்ணிகளிலேயே கந்தபுராணச் செய்திகளை (10, 345 பாடல்களைக் கொண்டது) சுருக்கமாகவும், அழகாகவும் அடிகளார் கூறியிருப்பது போலவே, பாம்பன் சுவாமிகள் 'முதல்வன் புராண முடிப்பு' எனும் பதிகம் பாடியுள்ளார். கந்தர் சஷ்டி விரதம் போன்ற விழாக்களில் இப்பதிகத்தைப் பாராயணம் செய்து, கந்தபுராணத்தைப் பாராயணம் செய்த புண்ணியத்தைப் பெறலாம் எனக் கூறுகின்றனர். முருகன் திருச்செந்தூரில் தங்கியிருந்ததைக்,

"கருணை வெள்ளம் எனத் தவிசின் வீற்றிருந்து" (95)

என அடிகளார் குறிப்பிடுகிறார். பாம்பன் சுவாமிகள்

"இஞ்சிவளை மந்ரமலி செந்திலிலமர்ந்தவெழி
லெந்தையே கந்த சிவமே"

என செந்திலாண்டவனைப் பிரார்த்திக்கிறார். மறக்கருணையால் பகைவனுக்கும் அருள்புரிந்த நல்ல நெஞ்சினை உடையவர் நம் பரமன்.

**சிவகுக சமம்**

கந்தர் கலிவெண்பாவின் 69வது கண்ணியில்

"எங்கும் நிறைந்து ஐந்தெழுத்தைக் கூறி நடாத்தும்..."

என்பதில் சிவபெருமானின் பெருமையையும், 109வது கண்ணியில்

"ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தைகுடி
கொண்டேனே"

என்பதில் முருகப் பெருமானின் மந்திரத்தின் பெருமையையும் அழகாகக் குறிப்பிடுகிறார். பாம்பன் சுவாமிகளோ தனக்கே உள்ள கம்பீரத்துடன்

"சிவஞ் சக்திக் கன்னியமாச் சேயை யுரைப்போர்
பவம்பற்றிப் பாசறை கொள்வார்"

என்கிறார். சிவபக்தி உடையவர்கள் முருகப் பெருமானை எந்த விதத்தில் தாழ்த்திப் பேசவோ, எழுதவோ கூடாது. முருக பக்தியாளர்கள் சிவபெருமானைத் தாழ்த்திப் பேசவோ எழுதவோ கூடாது. இன்பத்தை வழங்க, மனக்கவலையை மாற்ற, இறை அருளைப் பெறவல்ல அருள் நூல்களை இம்மைக்கும் மறுமைக்கும்

பயன்படுமாறு நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதுவே அறிவுடைமை.

பாரதத்தின் தென்திசைக் காவலன் செந்திலாண்டவனையும், வடநாட்டிலுள்ள காசி விஸ்வநாதரையும் ஒருங்கே போற்றி யுள்ளார் குமரகுருபரர். முருகப் பெருமான் பரமசிவத்தினின்றும் வேறல்ல என்னும் கொள்கையைப் பல இடங்களில் கூறுகிறார்.

'மறை முடிவில் நின்று நிறை செல்வன்'

'தனி முத்திக்கொரு வித்தே'

என முருகனை 'முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் அழகாகக் குறிப்பிடுகிறார்.

பாம்பன் சுவாமிகளின் சண்முக கவசத்தில்,

'எண் திசை போற்ற நின்ற என்னருள் ஈசனான
திண்திறள் சரவணத்தான்'

எனக் கயிலைச் செல்வனாகத்தான் முருகனைக் குறிப்பிடுகிறார்.

**சிவநிந்தனை பொறா மனமுடையவர்கள்**

சிவபெருமானிடம் திரு நந்திதேவர் வேண்டிய பதினாறு பேறுகளில் ''மறைகள் நிந்தனை சைவ நிந்தனை பொற மனம் வேண்டும்'' என்கிறார். பாம்பன் சுவாமிகள் தமது 'திருத் தொடையலில்'

''மால் நெறியில் கரங்கள் தூக்கிப்
பேசிய ஓர் வியாதனை நீ மூடன் எனத்
திருப்பிருந்தைப் பெருமான் சொல்லி''

எனக் குறிப்பிட்டு வியாசனின் அறிவு மயக்கத்தைப் பெருமாளே முன்னின்று போக்கிய வரலாற்றைக் கூறுகிறார். இதே செய்தி 'குமரகுருபரரின் சிதம்பர மும்மணிக்கோவை'யில் திருமாலே முதல்வரென்று கூறிய வாதராயணன் என்ற வியாச முனிவரின் கையை நந்திதேவர் விளங்காமல் செய்துவிட்ட நிகழ்ச்சியைக் காணலாம்.

**சிறப்பியல்புகள் பல கொண்ட சிவநேயர்கள்**

இவ்விரு அருளாளர்களும் பக்தி, ஞானம், வைராக்கியம் போன்ற நற்குணங்கள் மிகுதியாகப் பெற்றிருந்தனர். தருமபுர ஆதீன 4-ம் பட்டம் ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் சிவஞான உபதேசம் பெறச் சென்றது, காசியாத்திரை சென்றுவர கட்டளை இட்டது, கால அவகாசம் கருதிச் சிதம்பரம் சென்றது, நீதிநெறி

விளக்கம் இயற்றியது, கல்லாடை பெற்றது என இவரது வாழ்க்கை குரு பக்திக்கு நல்ல ஒரு இலக்கணமாகும்.

'பண்டார மும்மணிக்கோவை'யில் குருவை பலவாறு துதித்துள்ளார். பாம்பன் சுவாமிகள் 17-3-1894 அன்று பிரப்பன் வலசை எனும் ஊரில் 35 நாட்கள் தவம் மேற்கொண்டு செவ்வேள் பரமனின் உபதேசத்தைப் பெறுகிறார். "முருகப் பெருமானே தனக்குச் சொல்ல வேண்டியவைகளைச் சொல்ல வேண்டும்" என உறுதி பூண்டு வெற்றியும் பெற்றார். சிதம்பர மும்மணிக்கோவையில் இல்லறத்தானின் 5 வகை வேள்வி பற்றி யும் துறவு மேற்கொள்ளும் முறையையும் தெளிவாக வெளிப் படுத்தியுள்ளார். பாம்பன் சுவாமிகள் 45-வது வயதில் துறவறம் மேற்கொண்ட செய்தியையும், உப்பு, புளி, காரம் நீக்கிய உணவை ஒரு நாளில் ஒரு வேளை, அதுவும் தானாக வந்தாலே உண்ணுவது எனும் நியமம் கொண்ட அருள் வாழ்க்கையும் இங்கு ஒப்பிடத் தக்கது.

சிவபக்தர்கள் மேல் உள்ள மதிப்பை இரு அருளாளர்களும் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளனர்.

"விண்மிசை உலகையும் வேண்டார்"

'யம பயமில்லாதவர்'

'விழித்துறங்குந் தொண்டர்'

என்றெல்லாம் தொண்டர் தம் பெருமையைக் குருபரர் போற்று கிறார்.

பாம்பன் சுவாமிகள் "அடியவர்க்கு அடிமை நாம்" எனும் பதிகத்தில் 64 தனியடியார்களையும், தொகை அடியார்களையும் துதிக்கிறார். 'அட்டாட்ட விக்ரக லீலை' சிவபெருமானின் 64 மூர்த்தங்களையும் பாடி ஆடுகிறார். ஞானசம்பந்தமூர்த்தி சரித்திரத்தை 3 பாக்களில் ஒரே வாக்கியமாக அமையும்படி கூறியுள்ளார். காசி குமரகுரு மடத்தில் பாம்பன் சுவாமிகள் யாத்திரையின்போது 'கல்லாடை' பெற்றார்.

### பன்மொழிப் புலவர்கள்

வடமொழிக்கு உரிய நன்மதிப்பைக் குமரகுருபரர் வழங்கினார். மறைகளின் பழமைப்பண்பும், தமிழின் புதுமை அழகையும் பல இடங்களில் பாராட்டியுள்ளார். 'சகலகலாவல்லி மாலை', 'மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்' எனப் பல சான்றுகள் கூறலாம்.

பாம்பன் சுவாமிகள் ''வடமொழியும் கற்ற தமிழர் இருவிழியு முடையரை ஒப்பர்'' என்கிறார். நாம அர்ச்சனை, மந்திர ஜெபம், உத்திரகிரிய்ய போன்றவற்றிற்கு வடமொழி முக்கிய உதவியாக இருக்கும் என்றும், ஈசனுடைய திருச்செவி உள்ளங் களை மகிழ்விக்குமாறு இன்னோசையுடனும், உருக்கத்துடன் பாடுவதற்கும் பொருளை அறிவதற்கும் தென்மொழியே உதவி யாக இருக்கும் என்றும் கூறுகிறார்.

**தமிழ்ப்பற்று**

குமரகுருபரர் தமிழினிடத்தே தெய்வத் தன்மையைக் கண்டவர், சிவபெருமான், மீனாட்சியம்மை, முருகன், திருமால், கலைமகள் ஆகிய தெய்வங்களை எல்லாம் தமிழ்த் தொடர்பும், வேட்கையுமுடையர்களாகவே சித்திரிக்கின்றார்.

'முதுசொற்புலவர் தெளிந்த பசுந்தமிழ்'
'தலைச் சங்கம் பொங்கும் பண்முத்தமிழ்'
'கொழித்தெடுத்துத் தெள்ளித் தெளிக்குந்தமிழ்'

எனப் பலவாறாகத் தமிழின் சிறப்பைப் புலப்படுத்துகிறார். பாம்பன் சுவாமிகளின் 'சேந்தன் செந்தமிழ்' எனும் நூல், முந்து தமிழ் என அருணகிரியாரால் அருளப்பட்ட தமிழ் – தானே தனித்து இயங்கும் தன்மையுடையது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

**அணிச் சிறப்பு**

பத்து வகை அழகும் ஒருங்கே பெற்றுத் திகழும் குமர குருபரரின் கந்தர் கலிவெண்பாவில் உள்ள அணிச் சிறப்பினை மட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். தன்மையணியின் பாற்பட்டு முருகனின் அழகை வருணனை செய்கிறார் சுவாமி. இல்பொருள் உவமையணியின் எடுத்துக்காட்டுகளாகக் கீழ்க் கண்டவைகளைக் கூறலாம்.

பூத்த பவளப் பொருப்பு ஒன்று வெள்ளி வெற்பில்
வாய்த்தனைய (31)

சோதி இளம்பருதி நூறாயிரங்கோடி போல வளந்தரு
தெய்வீக வடிவம் (57)

ஐம்பெருங் காப்பியங்களோடு சூளாமணி முதலியவற்றை அணிந்து சிறக்கிறாள் நமது தமிழன்னை என்று கூறும் மரபு

நம்மிடையே உண்டு. அன்னையின் மேனியில் தோன்றிய பிறமொழி வடுக்களைக் களைய எண்ணிய பாம்பன் சுவாமிகள் 'சேந்தன் செந்தமிழ்' எனும் அரிய படைப்பின் மூலம் அதை நிறைவேற்றியுள்ளார்.

பல்வேறு அணிச் சிறப்புகள் கொண்ட இந்நூல் முருக வழிபாட்டினர்க்கு வழிகாட்டும், மொழி இயல் ஆய்வாளர்கள், மற்றும் வட சொல்லுக்கான சரியான தமிழ்ச் சொல்லை அறிய விரும்புபவர் போன்றோர்க்கு உதவியாக இருக்கும்.

**திருநடனக் காட்சியருள வேண்டல்**

உயிர்கள் முடிவாகப் பெறுதற்குரிய பயன் இறைவனின் திருவடியை அடைதல். மாணிக்கவாசகர் "தாள் தாமரை" காட்டிட இறைவனை வேண்டுகிறார். காரைக்கால் அம்மையார் திருநடனக் காட்சியைக் காண விழைந்தார். குமரகுருபரரும் தாமரைத்தாளின் சிறப்பினைக் கூறி தனக்கு அருள்புரியுமாறு இறைவனை வேண்டுகிறார்.

'பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு' (122)

பாம்பன் சுவாமிகள் தனது 'பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்' எனும் நூலில் தேன்வண்ணத்தில் ஆடலின் சிறப்பையும் யாரெல்லாம் ஆடி மகிழ்ந்தனர் எனும் பட்டியலையும் கொடுத் துள்ளார். மேலும் தமது "அட்டாட்டவிக்கிரக லீலை" எனும் விருத்தத்தை உருக்கத்தோடு பாடி–ஆடுக என்றும் கூறியுள்ளார். சர்வார்த்த சித்தியும் முக்தியும் பெற இது சிறந்த வழி என்றும் கூறியுள்ளார்.

**நிறைவுரை**

ஞானியர் இருவரின் தமிழ்த் தொண்டு பக்தி, இலக்கிய உணர்வுகளை ஆராய்ந்து கொண்டே போகலாம். இம்மை மறுமையோடு முக்தியும் அருளுமாறு இறைவனை வேண்டும் முறை நம்மால் பின்பற்றப்பட வேண்டிய ஒன்று வெறும் உத்தியோகம், புகழ், பணம் இவைகளைப் பெறுவதற்குத் தமிழைப் பயன்படுத்துவதோடு விட்டு விடாமல் பிறப்பு– இறப்பு எனும் சுழலிலிருந்து விடுபடவும் தெய்வத் தமிழைப் பயன் படுத்தத் தெரிய வேண்டும்.

பாம்பன் சுவாமிகளின் ஞான வாக்கியமும் குமரகுருபரரின் நீதிநெறி விளக்கமும் பல்வகையில் ஒன்றுபட்டுள்ளது. 'சிதம்பரம்' இரு அருளாளர்களின் வாழ்க்கையிலும் முக்கிய நகரமாக விளங்குகிறது. குருபரர் பிள்ளைத்தமிழ் பாடிச் சிறப்பு பெற்றுள்ளார். பாம்பன் சுவாமிகள் பிள்ளைத்தமிழ் பாடியது இல்லை. முருகப்பெருமான் 'பருவம், பருவமாக வளரும் குழந்தையன்று' என்று குறிப்பிட்டுள்ளார்.

இருவரின் அருள்நூல்களும் பாடநூல்களாக வைக்கப் பட்டுள்ளன. மொழி- மதம் இவைகள் ஒன்றாக இருக்கக்கூடாது எனக் கூறிய நமது பாரதிதாசன் 'குமரகுருபரர்' எனும் நாடகம் எழுதியுள்ளார்.

# குமரகுருபரரின் அறவியல் நோக்கு

நாகப்பா. நாச்சியப்பன், புதுச்சேரி.

அறவியல் நோக்கம் என்பது இலக்கியப் படைப்பாளர்களின் படைப்புக்களில் இலைமறை காயாகவோ, உள்ளங்கை நெல்லிக் கனியாகவோ அமைந்திருப்பது உண்டு சிலர் அறவியல் நோக்கத் திற்காகவே இலக்கியம் படைத்துள்ளனர். சிலர் இலக்கியப் போக்கில் அறவியல் நோக்கையும் அமைத்துக் கூறுகின்றனர். தமிழ் இலக்கியப் பரப்பில் பண்டு தொட்டு இன்று வரை அறவியல் நோக்கு இழையோடி வருவதைக் காணமுடிகிறது. தமிழ் இலக்கிய வரலாற்றுக் காலத்தில் சில குறிப்பிட்ட கால கட்டங்கள் அறவியல் நெறிக் காலமாகவே இருந்து வந்துள்ளன. இயற்கை நெறிக் காலத்திலும், பக்தி நெறிக் காலத்திலும், காப்பியநெறிக் காலத்திலும், சிற்றிலக்கிய நெறிக் காலத்திலும், புத்திலக்கிய நெறிக் காலத்திலும் இலக்கியப் படைப்பாளர்கள் அறவியல் நோக்கைப் புறக்கணிக்காமல் தகுந்த இடமறிந்து பெய்து தந்துள்ளனர். இந்நிலையில் சைவத்தையும், தமிழையும் வளர்த்த திருமடங்கள் வழிவந்த குமரகுருபரரின் அறவியல் நோக்கை அவர் காலக் கண்ணோட்டத்துடன் காண்பது பயன் தருவதாகும்.

காசியில் திருமடம் கண்டு தமிழையும் பக்தியுணர்வையும் வளர்த்த பெருந்தகையாளர் குமரகுருபரர். தென்னாட்டு ஸ்ரீ வைகுந்தம் வடநாட்டுக் காசிக்கு வந்து தமிழ் மாண்புணர்த் தியமை நம் தமிழ் மண் செய்த தவப்பயன் என்றே கூறலாம். குமரகுருபரர் வாழ்ந்த காலம் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதி எனத் தெளியலாம். மதுரையை நாயக்க அரசர்களின் ஆட்சியின்கீழ் திருமலை நாயக்கர் அரசாட்சி செய்து வந்த காலம் (கி.பி. 1623-1659) தமிழ் நாட்டில் பிறநாட்டவர் ஆட்சி தலைதூக்கிய காலம், பிறமொழி ஆட்சி ஏற்றம் பெறத் தொடங்கிய காலம். இக்கால கட்டத்தில் குமரகுருபரரின் தோற்றம் அமைகிறது. குமரகுருபரர் சைவமடம் சார்ந்த

சான்றோர்களின் வரிசையில் ஞானியாக வாழ்ந்து தமிழையும் சைவத்தையும் தமிழ்நாட்டில் வளர்த்த பங்களிப்பாளர்.

இவருடைய நூல்கள் அனைத்தும் சைவசமயக் கடவுளர் களையும், சைவசமயத் தலைவரையும் பாடும் முகமாக அமைந் துள்ளன. தமிழ் நாட்டில் சைவமும் வைணவமும் ஒன்றோடு ஒன்று முரணிக் கொண்டு இருந்த காலகட்டத்தில் குமரகுருபரரின் படைப்புக்கள் வெளிவந்துள்ளன. ஆனால் இவர்தம் படைப்புக் களில் சமயக் காழ்ப்புஉணர்வு மேலோங்கவில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. அறமுணர்த்தும் நோக்கினும் போக்கினும் சமயச் சார்பின்றி, சமயக் காழ்ப்புணர்வுமின்றி உலகியல் நோக்கில் உரைத்துள்ள திறமும் எண்ணிப் பார்க்கத் தக்கது.

இவர்தம் படைப்புக்கள் எல்லாவற்றிலும் அறவியல் நோக்கம் இழையோடி இருந்தாலும் அறவியல் எண்ணத்திலேயே படைக்கப் பெற்ற ஒரு நூல் நீதிநெறி விளக்கமாகும். குமரகுருபர அடிகள் சிதம்பரத்தில் தங்கி இருந்த காலத்தில் நீதிநெறி விளக்கம் என்னும் நூல் இயற்றப்பட்டது என்று கூறுவர். மதுரையை யாண்ட திருமலை நாயக்கரின் வேண்டுகோளின்படி அடிகள் மதுரையில் இருந்த காலத்தில் இந்நூலை இயற்றியதாகவும், இதற்கு அரியநாயகிபுரம் எனும் ஊர் நன்கொடையாக அளிக்கப் பட்டது என்றும் கூறுவர்.

திருக்குறளின் ஆயிரத்து முந்நூற்று முப்பது பாக்கள் விரிந் திருப்பதால், அவற்றிலிருந்து சுருக்கமான நீதிநூலினை அடிகள் பாடித் தர வேண்டும் என்று திருமலை நாயக்கர் வேண்டிக் கொண்டதற்கிணங்கப் பாடப்பட்டதாகவும், ‘திருக்குறள் பருவத்திலே பெற்ற பிள்ளை’ என்ற பாராட்டுமொழி வழங்கிய தாகவும் கருத்துக்கள் நிலவுகின்றன. வள்ளுவரின் வான்மறை முப்பால்களைக் கொண்டு பதின்மூன்று இயல்களில் அமைந் துள்ளது. குமரகுருபரரின் நீதிநெறி விளக்கம் கல்வி, செல்வம், உலகியல், அரசியல், தவம், மெய்யுணர்வு என்ற முறையில் நூறு பாக்களைக் கொண்டு அமைந்துள்ளது.

அடிகள் வாழ்ந்த கால கட்டத்தில் அரசியல் ஆட்சிமுறை, நெறி பிறழ்ந்த நிலையில் செல்வத்திற்கும், உடல் வலிமைக்கும் முதன்மை கொடுத்து ஆண்டான் அடிமை என்ற நிலையில்

இயங்கி வந்தது. சான்றோர்கள் கூடாவொழுக்கம் தீயொழுக்கம் என்று ஒதுக்கி வைத்த ஒழுக்கக்கேடுகள் ஆட்சியாளர்களின் தவறான போக்கால் உலகியலில் ஊடுருவத் தொடங்கின. அத்தகைய சூழலில் சமயநெறி நின்ற சான்றோர் தத்தமது சமயமே பெரிதெனக் கண்மூடித்தனமாக இயங்கினால் அது சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் கேடு விளைவித்ததாக ஆகிவிடக் கூடும். உலகியல் நிலை தடுமாறுகின்ற பொழுது சமயச் சான்றோர்கள் தத்தமது சமயத்தில் நின்றபடியே உலகியலைத் திருத்தி நல்வழிப் படுத்தியமைக்கு அப்பரடிகளின் வாழ்வும், வாக்கும் சிறந்த சான்றாகும்.

உலகியலை முன்னிருத்திச் சமயத்தையும் கடவுளையும் காண விழைந்த குமரகுருபரர் முதலில் நீதிநெறி விளக்கத்தில் கல்விக்கு முதன்மைச் சிறப்புக் கொடுத்துப் பாடினார். சமுதாயத்தில் சிலருக்கு மட்டுமே உடைமையாக இருந்த கல்வியைக் கற்று சமுதாயத்தை அனைவருக்கும் உடைமையாக்க விரும்பியவர் குமரகுருபரர். ஆகவேதான் உலகியலில் அறியாமையில் மூழ்கிக் கிடந்த சமுதாயத்தை நோக்கி,

> "தொடங்குங் காற்றுன்பமா யின்பம் பயக்கும்
> மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காமம்
> முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
> பிற்பயக்கும் பீழை பெரிது" (208)

என்று புலன் இன்பத்தோடு ஒப்பு வைத்து அறம் உரைத்துச் சென்றுள்ளார். கல்வி கற்றால் மட்டும் போதாது சொல்வன்மை இல்லையேல், அக்கல்வியால் பயனில்லை. சமுதாயத்தை நேர் நிறுத்த வேண்டிய கல்வியானது நேர் நிறுத்த வேண்டிய இடமான அவையில் பயன்பாடற்றுப் போகுமானால் அக்கல்வி பயனற்றது என்பதை உலகியல் உவமையோடு அவைக்கு அஞ்சுவானிடத்தேயிருக்கும் கல்வி, அயலானிடம் சென்ற இல்லாளினும் இழிந்தது என்று கூறுகிறார். அயலான்பாற் சென்ற மனைவியை அகற்றி விடலாம் பயன்படாக் கல்வியை உடையானிடமிருந்து அப்பயன்படாக் கல்வியை நீக்க முடியாது என்று வன்மையாகக் கடிந்து கூறுகிறார்.

நாயக்கராட்சி தமிழ் நாட்டை ஆண்டு கொண்டிருந்த கால கட்டத்தில் தமிழ் நாட்டில் சாதிக்கொடுமை, பரத்தையர் ஒழுக்கம், பிறன்மனைநயத்தல், செல்வக் களியாட்டம் போன்ற

சமுதாயக் கேடுகள் மலிந்திருந்தன. ஆட்சியாளர்களைக் களிப் பூட்டும் நோக்கில் மலிந்த இலக்கியங்களும் (விறலிவிடுதூது, கூளப்பநாயக்கன் காதல்) தோன்றின. தமிழ் மாண்பில் செம்மாந்திருந்த சமுதாயம் சீரழிவுக்குட்பட்டதைக் கண்டு சமுதாயச் சான்றோராய் வந்த குமரகுருபரர் சமுதாயத்தைச் சீர்திருத்த எண்ணம் கொண்டார். அவ்வுயரிய எண்ணத்தின் வெளிப்பாடே நீதிநெறி விளக்கம் என்னும் அற நூலாகும். ஆகவேதான் அக்காலச் சமுதாய ஒழுக்கக் கேடுகளை உவமையாகக் கூறி, அறம் உரைக்கும் நோக்கை அடிகள் கையாண்டுள்ளார்.

இவர் தம் அறநூலில் உலோபியரைப் பாராட்டும் உலகம், செல்வச் செருக்கு, தற்புகழ்ச்சி, அரசியல்பு, கொடுங்கோன்மை, பெரியாரைப் பிழையாமை, ஈகையின் இன்றியமையாமை, உலக நிலையாமை முறைதவறிய அரசனை நன்னெறிப்படுத்த வேண்டிய அமைச்சன் மக்களின் முயற்சியுடைமை, ஊக்க முடைமை, மனத்தூய்மை, வஞ்சனையால் ஈட்டும் பொருளின் தன்மை, பேராசையின் குற்றம், புல்லியார் ஆரவாரம், நல்லோர் அறிமடம், பிறர்மனை நயத்தல், காமத்தின் தீமை, கற்பில்லாத குலமகளிரது இழிவு, தவவிரதம் பூண்டார், துறவறத்தார் செயல்கள், ஞானியர் உலக இன்பத்தை விரும்பாமை, உள்ளத்துளவின் சிறப்பு, ஞானாசிரியர் இயல்பு, மெய்யுணர்வால் வரும் இன்பம் என்று பதினாறு பதினேழாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் தேவையை நிறைவு செய்வான் வேண்டி அடிகள் இவ்வற நூலைப் படைத்தளித்துள்ளார்.

உலகியலில் ஒரு மனிதன் முழுமைபெற வேண்டும் என்றால் அவன் இல்லறம் துறவறம் ஆகிய இருபெரு அறங்களிலும் வழுவாது நிற்கவேண்டும். ஆகவேதான் வள்ளுவப்பெருந்தகை அறத்துப்பாலில் நான்கு இயல்களில் முப்பத்தெட்டு அதிகாரங் களில் இல்லறத்திற்கு இருபது அதிகாரங்களையும், துறவறத் திற்கு பதின்மூன்று அதிகாரங்களையும் ஒதுக்கினார். நாணயத்தின் இருபக்கங்கள் போல ஒரு நாட்பொழுதின் இரு கூறுகள் போல வாழ்க்கையின் இருபக்கங்களாக இல்லறத்தையும் துறவறத்தையும் நம் ஞானிகள் வாழ்ந்து காட்டியுள்ளனர். குமரகுருபரர் தன் ஞானப் பனுவலில் ஒன்றான சிதம்பர

மும்மணிக்கோவையில் இல்லறம் துறவறம் என்னும் இரண்டின் இலக்கணத்தையும் இரத்தினச் சுருக்கமாக ஒரு செய்யுளிற் பாடியுள்ளார்.

"நல்லற நூல்களிற் சொல்லறம் பலசில
இல்லறத் துறவற மெனச்சிறந் தனவே
அந்நிலை யிரண்டினுண் முன்னது கிளப்பிற்
கற்ற நூற் றுறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ
டன்பு மருளுந் தாங்கி யின்சொலின்
விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியு மாற்றி யிவ்வகை
நல்லற நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவா னறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே
மற்றையது கிளப்பின் மனையற நிரப்பி
முற்றுணர் கேள்வியின் முதுக்குறை வெய்திப்
பொருளு மின்பமு மொரீஇ யருளொடு
பொறையு மாற்றலு நிறைபே ரொழுக்கமும்
வாய்மையுந் தவமுந் தூய்மையுந் தழீஇ
ஓரறிவுயிர்க்கு முறுதுய ரோம்பிக்
காலோய் நடை யனாகித் தோலுடுத்
தென் பெழுமி யாக்கையன் றுன்புறத் துளங்காது
வரையுங் கானும் எய்திச் சருகொடு
கானீ ரருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீ ரழுவத் தழுங்கி வேனிலில்
ஐவகையழலின் மெய்வருந்த வருந்தி
இவ்வகை யொழுகு மியல்பிற் றன்றே"

(சிதம்பர மும்மணிக்கோவை - 451)

என்பது இல்லறத்திற்கும், துறவறத்திற்கும் அடிகள் உரைத்த நல்லிலக்கணமாகும். சிதம்பர மும்மணிக்கோவையின் நிறைவுப் பகுதியில், அடிகள் உலகியலில் மனம் நிறைவு படாமல் அல்லல் உற்று அலைந்து அழிந்து போவதைக் கண்டு வருந்தி, நறுக்குத் தரித்தாற் போன்று நாற்சீர்களில் நல்லதோர் கருத்தை எடுத்தியம்புகிறார்.

"செல்வம் மென்பது சிந்தையி னிறைவே
அல்கா நல்குர வவாவெனப் படுமே"
(சி.மு. கோ - 475)

என்ற அடிகளின் சிந்தைத் தெளிவு அவர்தம் அறவியல் நோக்கிற்குச் சிகரமாய் அமைந்த ஒன்று என்று கூறலாம்.

காலத்தின் கட்டாயத்தை, காலத்தின் தேவையை அறிந்து காலக்கண்ணோட்டத்துடன் கவிதை படைப்போன், படைப் போரில் தலைசிறந்தவன் ஆகிறான். அவனுடைய உலகளாவிய நோக்கும் அவன் படைப்பின் போக்கும் புறப் போராட்டங் களுக்குத் தீர்வு காணும் முறையில் அமைந்து சமுதாயத்தின் பொறுப்புக்களை ஏற்கும் முறையில் அமைந்து விடுகிறது. இந்நிலையில் அடிகளின் அறநூற் படைப்பின் நோக்கும் போக்கும் அவரை உலக மக்களிடையே

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு" (குறள் 21)

என்னும் குறளுக்கு எடுத்துக்காட்டாய் இலங்கச் செய்கிறது.

# அடிகளாரின் அணுகுமுறை அறிவியல்

ம. வே. பசுபதி, திருப்பனந்தாள்

## 1.1. அணுகுமுறை அறிவியல் என்றாலென்ன?

சமுதாயத்தில் மனிதன் ஓர் அங்கம். இப்படி உணரும்போது மனிதக் கடமைகளில் புறக்கடமைகள் அதிகப்படுகின்றன. எவை யெவை கடமைகளாக அமையவேண்டும் என்பதை அறநூல்கள் அறிவிக்கும்! எவையெவை குணங்கள் என அறநூல்கள் உள்ளிட்ட அனைத்திலக்கியங்களுமே சொல்லிக்கொடுக்கும். மனிதன் பொருளீட்டுதலைக் காட்டிலும், அறிவீட்டுதலைக் காட்டிலும் நல்லவனென்றும், வல்லவனென்றும்பெயரீட்டுதலும், எடுத்தகாரியம் யாவினும் வெற்றியீட்டுதலும் வேண்டு மாகையால் கற்பிக்கப்பெற்ற குணங்களின் அடிப்படையில் வகுத்துக்கொண்ட கடமைகளை வெற்றியை நோக்கி நகர்த்தும் வழிமுறைகளை அணுகுமுறை எனலாம். இந்த விளக்கம் அணுகுமுறை பற்றிப் பாதியளவுக்கும் குறைவாகச் சொன்ன அமைதியையே தருகிறது.

## 1.2. எவற்றிலிருந்து எடுபடும்?

நம் முன்னோர்கள் 'ஆசாரம்' என்று சிலவற்றைச் சொன்னார்கள். அவற்றிலும் சில அணுகுமுறைகள் உள்ளன. மரபுகள்; சில ஆணைகள்; அவற்றிலும் அணுகுமுறை அறிவியல்கள் உள்ளன. காப்பியங்கள் மற்றும் கதைபொதி பாடல்களில் சில நடப்புக்கள், அசைவுகள், உரையாடல்கள் அணுகுமுறைகளை அறிவிக்கின்றன இலக்கியங்களில் வரும் அஃறிணைப் பொருள்கள், உயிர்களின் இயல்புகள் செயல்களில் கூட இவ்வறிவியல் காணப்பெறுகிறது. கற்பனைகள் சிலவற்றில் இவ்வணுகுமுறை அறிவுறுத்தப்பெறும்போது கவிஞனை வியப்ப தற்காக மட்டும் கற்பனைகள் செய்யப் பெறவில்லை என உணர முடிகிறது.

நிகழ்வுசாராத் தனிப்பாட்டுக்களில்கூட 'அணுகுமுறை' பற்றிச் செய்திகளைத் திரட்ட முடிகிறதென்றால் இப்போது

மிகுதியும் தேவைப்படுவது 'தேடல் வேட்கை'யே என்பது உண்மையாகும்.

## 1.3. எதற்காகத் தேவை?

'நல்ல நூல்கள் நம்மை நெறிப்படுத்துகின்றன' என்ற கோட்பாடு பல நேரங்களில் பல அறிஞர்களால் வற்புறுத்தப் பட்ட பிறகு 'அணுகுமுறை அறிவியலைத் தேடல்' என்னும் நிலைமை எதற்காக? என ஓர் ஐயம் எழலாம்.

அறநூல்கள் சொல்லும் அறவுரைகள் எல்லாவற்றையும், நீதிநூல்கள் சொல்லும் அறிவுரைகள் எல்லாவற்றையும் பின் பற்றுதல் ஒரு மனித வாழ்க்கையில் இயலவில்லை. ஒன்றைப் பின்பற்றுவதே 'போதும்போதும்' என்றாகி விடுகிறது. 'சிரம சாத்யம்' என்ற சொல்லால் குறித்தால் இது பொருத்தமாக இருக்கும். திருத்தொண்டர்கள் ஒரு பெரும் குணத்தைக் கொண்டு ஒருபெரும் நற்செயலைக் கடைப்பிடியாகச் செய்தனர். அவற்றிற்கு இறைவன் சோதனை கொடுத்தான் என்று சிலரும், அக்குணத்தையும் கடைப்பிடியையும் உலகுக்கு உணர்த்தினான் என்று பலரும் உரைப்பர். எவ்வாறாயினும் அவை 'சிரமசாத் தியம்' (கடுமுயல்வு செய்தால் மட்டுமே கிடைக்கும் வெற்றி) என்பதையும் உணர்த்துகின்றன எனலே சரியாகும்.

ஆனால் அணுகுமுறைகள் எல்லாருக்கும் தேவை; எல்லா நேரங்களுக்கும் தேவை; சற்றொப்ப எல்லாமுமே தேவை. சிரமசாத்யம் இதிலில்லை. குணங்கள் கடைப்பிடி முதலிய நல்லன சார்ந்தது அணுகுமுறையாகையினால் இதன் தேவை மிகுதியாகவே அமையும்.

பல அணுகுமுறைச் செய்திகளை நாம் அறம் என்றோ, நீதியென்றோ, குணம் என்றோ நெறிப்பாடென்றோ தலைப் பிட்டுக் கருதுகிறோம். சற்று நிதானித்துச் சிந்தித்து அணுகு முறையை வேறு பிரித்துக் கற்கப் பழக வேண்டும்.

நாம் அணுகுமுறைப் பிழை செய்யும்போது பிறர் கொதிப் படைவதைப் பார்க்கிறோம். பிறர் அணுகுமுறையும் பிழை செய்யும்போது நாம் கொதிப்படைகிறோம். எனவே ஒட்டு மொத்தச் சமுதாயத்திற்கும் அணுகுமுறை அறிவு இன்றியமை யாதது என உணரலாம்.

## 1.4. எது அணுகுமுறை?

அறத்தை, நீதியை, குணத்தை, நெறிப்பாட்டை, நடப்புகளை, அசைவுகளை, உரையாடல்களை, ஆசாரங்களை, மரபுகளை, ஆணைகளை, இயல்புகளைச், செயல்களை, கற்பனைகளை அப்படி அப்படியே எடுத்துக்கொள்ளும்போது அவை அணுகுமுறை ஆவதில்லை. அவற்றில் தேவையானவற்றைப் பயன்பாட்டுக்கேற்ற ஊகத்தையும் மதிநுட்பத்தையும் கலந்து எடுத்துக்கொள்வதே அணுகுமுறை அறிவாகிறது. மேம்போக்காகப் பார்த்தால் இது உளவியல் போன்றே இருக்குமெனினும் இதனை உளவியல் என்று கூறலாகாது. உளவியல் சார்புடையது எனக் கொள்வதில் தவறில்லை.

சம அளவிலான ஆற்றலும் அறிவும் பெற்ற இருவர் ஒரே நேரத்தில் ஒரு செயலில் முயலும்போது ஒருவர் வெற்றியும் ஒருவர் தோல்வியும் அடைவதைக் காண்கிறோம். இருவரும் வென்றேற வாய்ப்பிருந்தபோதிலும் ஒருவரே வென்றார் என்னும்போது வென்றவரை அதிர்ஷ்டக்காரர் என்று குறிப்பிடுகிறோம். சமயச் சார்புச் சிந்தனை அந்த முடிவுக்கு வரும். ஆனாலும் அதிர்ட்டத்தைத் துய்ப்பாக்கியது எதுவோ அதையே நாம் அணுகுமுறை என்று குறிப்பிடவேண்டும்.

> ''ஈன்றாள் பசிகாண்பா ளாயினும் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை''

என்பது அறம். 'செய்யற்க' என்றது 'சான்றோர் புகழும் வினை செய்க' என்று கொண்டு, அத்தகு செயல்களை வரிசைப் படுத்துவது ஒருவகை உரைகூறும் தன்மை. சுயலாபம் கருதாமல் பொதுநலம் கருதிக் களவு முதலிய குற்றங்களை நீக்குக என விரிவுரை செய்வது சமூகவியல். பெற்ற தாயின் உற்றதுயரைக் காணும்போது எதையும் செய்து அவள் துயர்துடைக்க முற்படுவதுதான் இயல்பு அதைத் தவிர்க்கவே 'ஆயினும்' என்றார் என நயம் கூறும்போது உளவியல் தலைகாட்டும். ஈன்றாள் பசிதீர்க்க வேண்டிய மானுடக் கடமை செய்ய, இக்குறள் ஒரு ஊகத்தைத் தூண்டுகிறதே அங்கேதான் அணுகுமுறை அறிவியலின் தொடக்கம் காணப்படுகிறது இங்கே இது ஆகாது என்றால் எது அணுகுமுறை என்ற சிந்தனை வரவேண்டும். 'தாய்க்கு வந்தது வறுமை என்றால் 'உழைத்து முன்னேறிக் கரையேற்று' என்ற இன்னொரு அறமே அதற்குத்

தீர்வாகிவிடும். ஆனால் தாய்க்கு வந்தது பசி! தீமைசெய்து பசியைத் தீர்ப்பதுதான் கூடாது, பசியைத் தீர்க்காதே என்றும், அங்கே உத்தரவில்லை. பசியைத் தீர்ப்பது உன் கடமை. சிந்தித்துப்பார். குப்பைக் கீரையை எடுத்து நீர் உலை ஏற்றி உப்பின்றிப் பசி தணித்த வரலாறில்லையா? யோசி! அதை யோசி! செயல்படு. அணுகுமுறை அறிவியல் உன் பயன்பாட்டுக்கு வந்துவிட்டது.

ஆக உரையாசிரியர்களின் துணைகொண்டு பதப்பொருள் நயப்பொருள்களைக் கற்றறிந்து சுவைக்கும் நாம், நமக்காக ஊகித்தெடுத்துப் பயன்படுத்திக் கொள்ளும் சின்னஞ்சிறியது முதல் பென்னம் பெரியது வரை உள்ளனவே அணுகுமுறை அறிவியலாகும்.

### 1.5. இந்த அறிவியல் கோழையாக்குமா?

நல்லனவற்றை, மகிழ்வூட்டுவனவற்றை, வாழ்வாங்கு வாழச் சரியானவற்றை, கடைத்தேற்றத்திற்கும், வென்றேறலுக்கும் உரியனவற்றைச் செழிக்கச் செய்வதும் சிறக்கச் செய்வதும் அணுமுறைகளேயல்லாமல் மனிதனைக் கோழையாக்க இதிலென்ன இருக்க முடியும்? குணங்களின் நெளிவு சுளிவுகள் பக்குவமாகக் – கையாளப்படும்போது நாம் நம்மையே வியந்து கொள்ளும் நிலைமை உருவாகுமே அல்லாமல் அதில் ஒரு செம்மாப்பும் பிறக்குமேயல்லாமல் அதனால் வீரம் பாழ்படாது.

வன்முறைகள், கொடுங்கோன்மைகள், விபரீத உணர்வுகள், துன்புறுத்திக் கண்டு மகிழும் குரூரங்கள், பிறர் நேரத்தையும், புகழையும், ஆற்றலையும், செல்வத்தையும் சொல்லால் செயலால் தலைதாக்கும் எதிராளித் தனங்கள், எதையும் கொச்சைப் படுத்தும் மதியின்மைகள், ஏய்ப்புகளையே வாய்ப்புகளாக இன்புறும் மனநோய்ச் செயல்கள், இன்னோரன்னவையெல்லாம் வீரமாகு மென்றால், இவற்றின் தற்காலிக மின்னலெல்லாம் வெற்றியாகு மென்றால் அவ்வீரங்களையும் வெல்லும் வீரமென்றும், அவ்வெற்றிகளையும் வீழ்த்தும் வெற்றியென்னும் அணுகுமுறை அறிவையே அறிவிக்கவியலும்.

### 2.1. ஸ்ரீகுமரகுருபரர் (பொது)

தாமிரபரணி ஆற்றங்கரையிலிருந்து கங்கைக்கரை வரையில் மக்களோடு பழகிய தனித்துவமும் மகத்துவமும் வாய்ந்த

வரலாற்று நாயகர் அருளாளர் ஸ்ரீகுமரகுருபர அடிகளார் ஆவார். அப்பெருமகனாரின் அருள் வாழ்க்கையே அணுகுமுறை அறிவியலின் பல வகைமைகளின் பயன்பாடுகளை மெய்ப்பிப்ப தென்றால் அது மிகையாகாது. பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடக்கம் பதினேழாம் நூற்றாண்டு முழுமைக்குமான காலத்தில் தென்னக வரலாற்று நிலைமையைக் கருத்துட் கொண்டே அவர்தம் இலக்கியங்களில் இவ்வறிவியல் பார்வை செய்ய வேண்டியுள்ளது. எல்லா நூல்களுக்குமே காலம் காணலை வழிமுறைக் கோட்பாடாக வகுத்துக்கொள்வது தெளிந்த பயனைத்தரும். மேலெழுதிய கால எல்லையில் தமிழகம் நாயக்கர்கள், மராட்டியர்கள், நவாபுகள் மற்றும் பல்வேறு சிற்றரசர்களின் ஆட்சிகளால் சிதறுண்டு கிடந்தது. வடபகுதியில் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கமும் ஏற்பட்டுவிட்டது. பெரும்பாலான இக்குறுநில மன்னர்கள் சமயப்பற்று மிக்கவர் களாக விளங்கினார்கள் என்றாலும் அவர்களுக்குள் நல்லிணக்கம் இல்லை. சமயத்தை உள்ளீடாகக் கொண்டு போர்கள் நிகழ்ந்ததும் இக்கால எல்லையிலேயே ஆகும். ‘ஒருபாற் கோடாமை சான்றோர்க்கணி’ என்ற நிலையில் சமயத்தலைவர்கள் விளங்கினர். அரசியல் சூழல்கள் எவ்வாறிருந்தபோதும் சமய இலக்கியங்கள், சமய விவாதங்கள், விரிவுரை நூல்கள் ஆகியவையும் ஒருபால் தோன்றி வளர்ந்து கொண்டிருந்தன.

பல்வேறு ஆளுகைக்குட்பட்ட பகுதிகளில் பயணம் மேற் கொண்டு சமயப்பணி செய்யும் ஒருவர் தம் படைப்புக்களில் யாரையும் புகழ்ந்தோ இகழ்ந்தோ படைத்தல் ஆகாது என்ற பொது அணுகுமுறை ஸ்ரீ சுவாமிகளின் படைப்புகள் முழுமைக்கும் பரவியதாகும். வகுத்துப் பின்பற்றியமையாகாமையின் இது கொள்கையாகாது; அணுகுமுறையே ஆகும். குறம் இலக்கியத்தின் இறுதியில் உள்ள கொச்சக வெண்பா ஸ்ரீ சுவாமிகள் அருளிய தாகாது. அதில் ‘கச்சிநகர்’ என்பதும் பொருந்தி வரவில்லை.

மதுரையில் பேராதரவு காட்டிய திருமலைநாயக்கர் தொடக்கம் காசியில் உபயகருடன் வட்டமிட்டுக் காட்டிய நிலமெல்லாம் கொடுத்த இசுலாமிய மன்னன் வரை இவ்வணுகு முறையை அவர் பின்பற்றினார். மனிதமனம் புகழை விரும்புவது. மன்னன்மனம் இப்பெரும் அருளாளர் தம்மை ஒரு சொல்லிலாவது குறிக்க வேண்டும் என விரும்பியிருக்காதா? இருக்கும். அதை ஸ்ரீ சுவாமிகளின் தனித்த உரையாடல்கள் மாற்றியிருக்கும்.

இவ்வகையில் உலகியலில் மேற்கொள்ளத்தகுந்த அணுகு முறை வெளிப்பாடு வருமாறு. நமக்கெனப் பிழைப்புக்கு ஒருதுறை அமையும். தொண்டுக்கென ஒரு துறையைக் கொள்வோம். இரண்டும் ஒன்றாகவும் இருக்கும். ஒன்றோ இரண்டோ அத்துறை/ துறைகள் தவிரப் பிறதுறைகளை அறிந்துகொள்வது பேசுவது செய்யலாம். ஆனால் படைப்புக்களில்-எழுத்துக்களில் பிறதுறை களை விமரிசிக்காமல் விடுவது நம் துறையில் வென்றேற வாய்ப்புக்களை மிகுதியாக்கும்.

இவ்வண்ணம் அப்பெருமகனாரின் வாழ்வியலிலிருந்து சிலபல அணுகுமுறைகளைப் பிரித்தறிவது நலமாம்.

### 3.1. பிரபந்தங்களில்

ஸ்ரீ குமரகுருபரர் பிரபந்தங்களில் அணுகுமுறை அறிவியல் பார்வை செலுத்தி அதைப் பிரித்து விரித்தெழுதப் புக்கால் அது தனியொரு நூலாகும். எனினும் சான்றுக்காகச் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

### 3.2. கந்தர் கலிவெண்பாவில்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவில் 'திருச் செந்திலாண்டவன் மனத்தில் உறைபவன்; என் மனத்திலும் தங்கியுள்ளான்' என்கிறார். 'உளம்தளிற்கண்டு ஆதரிப்போர்க்கு ஆருயிராய்', 'அன்பர் அகத்தாமரையின் மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே', 'ஆறெழுத்தும் கூறுமவர் சிந்தை குடி கொண்டேனே', 'உல்லாசமாக உளத்திருந்து' என்றெல்லாம் விளிகளை அமைத்துப் பிறகு இறுதியாக 'பல்விதமாம்' எனத் தொடங்கி 'அடியேற்கும் முன்னின்றருள்' எனப் பல கோரிக்கை களை ஒன்றுபோல் வேண்டுகிறார். இறையருளால் கவித்துவம் பெற்றவர் இவற்றைத் தமக்காகக் கேட்கவில்லை என்பது அடிப்படையாகும்.

இவ்வகையில் உலகியலில் மேற்கொள்ளத் தகுந்த அணுகு முறை அறிவியல் வெளிப்பாடு வருமாறு:

கோரிக்கைகளைத் தமக்காகக் கேட்கும்போது கெஞ்சுவதும், பிறருக்காகக் கேட்கும்போது வேறுவிதமாகவும் அமைத்தலைத் தவிர்ப்பது நலம். நாம் விரும்பியவர்களை நம்மை விரும்பும் நிலைக்குக் கொண்டு வந்து பிறகே கேட்கவேண்டும். யாரிடம்

அல்லது எந்தத்துறையிடம் நம் கோரிக்கை செல்கிறதோ அவரின், அதன் வரலாறு, செயற்பாடு, சூழல், ஆற்றல் அறிந்து வைத் திருத்தல் வேண்டும். எடுத்த எடுப்பிலேயே கேட்கக்கூடாது. இவை நாகரிகம் என்ற குணக்குறிப்பின் பாற்பட்டனபோலத் தோன்றினும் இவை 'முழுமை' என்ற தொகுதியையும் 'மென்மை' வகைமையையும் சார்ந்த அணுகுமுறையே ஆகும்.

### 3.3. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில்

மீனாட்சியம்மை குழந்தையாக இருக்கிறாள். அவள் லோக மாதா என்பது உண்மைதானென்றாலும் இப்பொழுது அவள் குழந்தை. அந்தக் குழந்தையைத் 'தாயே வருக' என அருகில் இருந்தவர்கள் அழைத்தார்கள். அது பேதைமை. அது அறியாமற் சொல்லும் பிழை. பெண்ணை அவள் வயதுக்கும் குறைவான வார்த்தை சொல்லி அழைப்பது நல்லது என்பது உளவியல். அப்படிச் செய்யாமல் 'தாயே'! என்று அழைத்தால் கோபம் வரும். ஆனால் அம்பிகை கோபிக்கவில்லை. உலகெலாம் ஈன்ற பின்னும் குமரியாக இருந்தவளைக் குழந்தையாக இருக்கும் போதே 'தாயே!' என்று அழைக்கலாமா? கூடாது. அவள் கோபித்தாளா? – இல்லை. சிரித்தாள்.

> ''தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு
> ததும்புபு(ன்) னகையாட''

என்கிறார் ஸ்ரீ சுவாமிகள்.

இவ்வகையில் உலகியலில் மேற்கொள்ளத்தகுந்த அணுகு முறை அறிவியல் வெளிப்பாடு வருமாறு. நாம் மனைவியுடன் பொது இடத்திற்குச் செல்கிறோம். அல்லது பயணிக்கிறோம். நம்மை மட்டும் அறிந்த ஒருவர் எதிர்ப்படுகிறார். 'அருகில் இருப்பவள் உன் தமைக்கைதானே' என்கிறார். எரிச்சலான எரிச்சல் வரும், நம்மைக் காட்டிலும் நம் மனைவிக்கு, இவை போன்ற வகைத்துன்பங்களைத்தான் திருவள்ளுவர் இடுக்கண் என்று சொன்னார். இடுக்கண் வந்துவிட்டது. அவன் வேண்டு மென்று பரிகசிக்கவில்லை என்பது புரிகிறது. எனவே, அப்போது சிரித்துவிடவேண்டும். பதிலே சொல்லக் கூடாது. இப்படி யெல்லாம் அசட்டுப்பிசட்டென்று பேசக்கூடாது என உபதேசமும் செய்யலாகாது.

இதுபோன்ற இடுக்கண்கள் அனைத்திற்கும் இதுவே அணுகு முறை. அணுகுமுறைகள் ஒருவர் ஒருமிதமாகவும், வேறொருவர்

வேறுவிதமாகவும் சொல்வதுண்டு. நமக்கு எது பொருந்திவரும் எனக் கண்டு ஏற்கவேண்டும்.

### 3.4. மதுரைக் கலம்பகத்தில்

மதுரைக்கலம்பகத்துள் பல அகப்பொருட் செய்யுட்களும் உள்ளன. அகப்பொருட் செய்யுட்களில் பெரிதும் வாழ்வியல் அணுகுமுறைகள் இருக்கும். பெரிய நிகழ்வுகளுக்கான அணுகு முறைகளும் மதுரைக் கலம்பகத்துள் உள்ளன. பொது அணுகு முறைகளும் உள்ளன. "(எய்வதுவும், இளைப்பும்) புந்தி வையா தார் வைதலுரின் மதியார் தாம் மதித்திடுதல் வழக்கே" என்று ஒரு தொடர். அத்தொடரின் இடம் நோக்கிய பொருளுடன் மேம்பொருளும் ஒத்துவருகிறது. முரண்விளைந்தழிவணி அமைந்த பாடல் அது. (வைதல் என்பதற்குப் பழமொழி கூறுதல் என்ற உரை பொருந்தாது)

எய்வதுவும், இளைப்பும் அங்குள்ள சூழல். 'எச்சூழலையும் ஆதாரத்தையும் அறிவிற் கொள்ளாமல் பழி சுமத்தினால் அதனைப் பொருட்படுத்தாதவர் தாமே ஒரு மதிப்பிடுவது வழக்கமே' – இதுவே மேம்பொருளாகும். அணுகுமுறைக்காக இன்னொரு பொருளும் இதற்குச் செல்லவியலும். மதியார் தாம் மதித்திடுதல் வழக்கே. உரிய அணுகுமுறையில் பழிபோக்க வழக்காக்குவர் என்பது அது.

இவ்வகையில் உலகியலில் மேற்கொள்ளத் தகுந்த அணுகு முறை அறிவியல் வெளிப்பாடு வருமாறு:-

மனிதப்பிறப்பு, பழிக்காளாகாமல் தப்பியதில்லை. பழி சொல்பவர்கள் ஒரு சூழலை, ஒரு ஆதாரம் போன்றதைத் தாம் கூறும் பழிக்கு மேற்கோளாகச் சொல்வர். அதற்கு அச்சப்பட்டு ஒதுங்கும் இயல்பு உள்ளவர்களின் அணுகுமுறை அச்சம் காரண மாகப் பெரிய விளைவுகளை உண்டாக்கிவிடலாம். ஒன்று அதை மதியாராக இருக்க வேண்டும். அதனால் தானாகப் பழியடங்க வாய்ப்புண்டு. உணர்ச்சிவசப்படுதல் ஆகாது. ஏனென்றால் பழி சொல்பவர்க்குத் தாம் சொல்லும் ஆதாரம் பிறழ உணர்ந்து கண்டது எனத் தெரியாமலிருக்கலாம். பழிபோக்கிக் கொள்ள மதியாராக – அறிவுடைமையுடன், மதித்து – அப்பழியை மதிப்பீடு செய்து அதன்பின் இடுவது வழக்காதல் வேண்டும். அதாவது பழிசொன்னவனும், பழி சொல்லப்பட்டவனும் ஒரு

நடுவுநிலையாளன் முன்பு சந்திக்க வேண்டுமேயல்லாமல் நேருக்கு நேர் சந்தித்தல் ஆத்திரங்களையே உருவாக்கும். இதற்குமேல் எதுவும் ஊகிக்க இங்கு இடமில்லை. இதன்பின்னரும் பழி உறுதி என்பதுபோலப் பேசப்பட்டாலும் சரியான, மதியார் அணுகு முறையாதலின் அப்பழி வரலாறாகி விடாது. நமக்கு வேண்டியது அதுதானே!

### 3.5. நீதிநெறி விளக்கத்தில்

102 வெண்பாக்களில் அருளியுள்ள நீதிகள் நம் உளம் பதியப் பல உத்திகளை ஸ்ரீ சுவாமிகள் கையாண்டுள்ளார்கள். அவற்றில் மிகப்பல உலகியல் பிரச்சனைகளை வைக்கிறார். அவற்றிற்கு அணுகுமுறைகளைக் குறிப்பாகவும், உய்த்துணரும் வகையிலும் வைக்கிறார். இந்நூலில் பென்னம் பெரிய நிகழ்வுகளும் உள்ளன. கற்றோர் அவையில் எடுத்துச்சொல்லக் கைகொடுக்காத கல்வியை 'அச்சக்கல்வி' என்கிறார். அது பட்டப்பகலில், மனைவி அயலானுடன் உடலுறவு கொள்வதைப் பார்ப்பதைவிடப் பொல்லாதது. அவளை தீது என்று நீத்து விடலாம். இந்தக் கல்வியை அப்படி நீத்தல் இயலாதே! என்று முடிக்கிறார்.

இவ்வகையில் உலகியலில் மேற்கொள்ளத் தகுந்த அணுகு முறை அறிவியல் வெளிப்பாடு வருமாறு:-

நீத்தார் பெருமை என்பதில் நீத்தல் பற்று நீக்குதல் என்றாகிறது. தொடர்பைத் துண்டித்தலே நீத்தல் ஆகும். எனவே அவளை அவ்வாறு கண்டபின் விவாகரத்துச் செய்ய வேண்டும். விவாகரத்து மணமுறிவு என்பன இன்றைய வார்த்தைகள். இந்தச் செயற்பாடுகள் அன்றும் இருந்தன. மேலும் கணவன் அவள் உறவைத் தொடர்ந்தால் உயிர் ஆபத்தை உண்டாக்கும். உடலுறவில் இவனை அவளுக்குப் பிடிக்கவில்லை; அல்லது போதவில்லை ஆகையினால்தான் அவள் கடும்பகலென்றும் பாராது அவ்வாறு நடந்துகொள்ளவும் துணிந்தாள். ஒருவேளை அவளுக்குப் பல சுவை வேண்டியிருக்கலாம். என்னதான் தனிக்கட்டுப்பாடு, சமூகக் கட்டுப்பாடு செய்தாலும் இனிப் பகலில் இல்லை என்ற அளவுக்குத்தான் உத்தரவாதம் ஏற்படும். அறிந்தும் உடனுறைந்தால் துணிவு அதிகமாகிவிடும். இது 'பாம்போடுடனுறைந்தற்று' என்ற வள்ளுவர் வாக்குப்

போலாகிவிடும். எனவே முதலில் 'தீது என்று' காணவேண்டும். அண்டை அயலார்க்கும் நிரூபிக்க வேண்டும். பிறகு நீத்தல் வேண்டும். 'தீது என்று' என்பதால் முடிவுசெய்யத்தக்க வழக்கின் வழியாக உறுதிசெய்ய வேண்டியது அவசியம் என்பது உய்த்துணர வேண்டியதாகிறது. உட்டுவரும் கல்வி என்று அவையறியாக் கல்வியைச் சொன்னதால் இதுவும் சமூக அச்சத்துடன் அணுகவேண்டிய ஒன்று என்றாகிறது. அந்த நிகழ்வு தீது. எவரும் குற்றவாளிகள் அல்லர். விரிப்பில் பெருகும்.

## 4 1. பிரபந்தங்களில்

பெண்களுக்குச் சம உரிமை கொடுப்பதில் இருபாலும் தாழ்வின்றி அணுகவேண்டிய முறைமைகள் திருவாரூர் நான்மணிமாலையில் உணரக் கிடப்பதையும், குழந்தைக் குறும்புகளை அவர்களின் இயல்பூக்கம் குன்றாமல் உளவியற் பூச்சுடன் அணுகவேண்டிய முறைகள் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் உணரக் கிடப்பதையும் சிதம்பர மும்மணிக் கோவை இரண்டாம் செய்யுளில் பலதுறை அணுகுமுறைகள் உய்த்துணரக் கிடத்தலையும், நோய், அச்சம் சூழ்கையில் மேற்கொள்ளவேண்டிய அணுகுமுறைகள் சிதம்பரச் செய்யுட் கோவையில் உணரக்கிடப்பதையும் புரிந்துணர்வு தொடர்பான அணுகுமுறை பண்டார மும்மணிக்கோவையுள் பொதிந்து கிடப்பதையும், எஞ்சிய நூல்களையும் நுணுகிக் கண்டு அணுகு முறைச் செய்திகளைப் பிரித்தெடுத்து வெளிப்பாடுகளைக் கொணர்ந்து பயன்படுத்தவேண்டும்.

## 5.1. நிறைவுத் தொடக்கவுரை

இக்கட்டுரை அணுகுமுறை அறிவியல் தொடர்பான மாதிரிக் கட்டுரையாகையினால் ஓரளவுக்கு இது நிறைவுரையாயினும் இவ்வியல் தொடர்பாக இனி ஆற்றவேண்டிய மிகப்பெரும் பணிகளுக்கு இது தொடக்கவுரையே ஆகும்.

பொதுப் பிரச்சனைகட்கு அணுகுமுறைகளைப் பென்னம் பெரிய அணுகுமுறைகள் நாள்நடப்புப் பிரச்சனைகட்கு அணுகு முறைகளைச் சிறிய அணுகுமுறைகள் எனத் தொகைப்படுத்திக் கொண்டு, மெல்லிய, வலிய அணுகுமுறைகள் ஆகத் தன்மைகள் குறித்து, கடத்தல் அணுகுமுறை, விடுத்தல் அணுகுமுறை,

நிரவல் அணுகுமுறை, ஊர்தல் அணுகுமுறை, தொடுத்தல் அணுகுமுறை, வீழ்த்தல் அணுகுமுறை, முடித்தல் அணுகுமுறை என்ற பொது வகைமைகளில் வகுத்தல் அணுகுமுறை, பழகல் அணுகுமுறை, அறிவித்தல் அணுகுமுறை, உரைசெய்தல் அணுகு முறை, ஓர்ப்பு அணுகுமுறை, இறுதிசெய்தலணுகுமுறை, எதிர்ப் பறியணுகுமுறை, பிறழ்வுணர்வணுகுமுறை, இடுக்கணறியணுகு முறை, இளையபறியணுகுமுறை, உணர்தல் அணுகுமுறை, தெளிதலணுகுமுறை, உய்த்தலணுகுமுறை, தெளிபணுகுமுறை என்ற சிறப்பு வகைகளில் பொது, குழு, தனி என்ற மும்மைப் பாகுபாடுகட்கும் அணுகுமுறை அறிவியலின் அமைதிகளை வகுத்துக்கொள்ள வேண்டும்.

நிர்வாக இயல், வாழ்வியல், சமூகவியல் ஆகியவற்றுக்கும் தேவையாகும் பிறவற்றுக்கும் உளவியல் துணைமையுடன் வரையறைகள் செய்துகொள்ள வேண்டும். சிறப்பணுகுமுறை களில் சொல்லுதல் தொடர்பான வகைமைகளுள் உத்திகளை அடக்கி மெய்ப்பித்தல் செய்தல் வேண்டும்.

இந்நிரலில் தமிழன்னையின் அணிகலன்களை உலகுக்கு மேலும் பயன்படும் வகையில் தொட்டுவழிபட குருவருள் கூட்டுவதாகுக.

இந்த இளம் இயல் முதிய இயற்பழங்களின் சாராகட்டும், பார்வைகள் நேராகட்டும்! இதனால் தனிமனித வாழ்வுகளும், பொதுவாழ்வுகளும், அமைதியைமாந்திச் சீராகட்டும்.

# மதுரைக் கலம்பகம்

இல. பழநிச்சாமி, கரூர்

குமரகுருபரர் அருளிச் செய்த மதுரைக்கலம்பத்தின், கலம்பக இலக்கியம் என்ற அமர்வில் ஒரு கட்டுரை என்னால் இயன்ற வரை எழுத உள்ளேன். கலம்பகம் என்பது 18 வகை உறுப்புக் களை உடையது என்பர். இந் நூலுக்குப் பல்வகைப் பொருள் கூறப்படினும், பலவகை மலர்கள் கலந்து அமைத்த கலம்பக மாலை என்று பொருள் கொள்வதே பொருந்தும். இப்பிரபந் தத்தில் அகத்துறை, புறத்துறைகளில் பலவும், பலவகைப் பொருள்களும் தெய்வ வழிபாடும், பல்வகை யாப்புக்களால் விரவி வரப் பாடியமையால் இப் பெயர் வந்தது என்னலாம்.

கலம்பகம் 100 பாடல்களைக் கொண்டது. சைவ எல்லப்ப நாவலர், பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், இரட்டைப் புலவர்கள், மகான் வண்ணச்சரபம், தண்டபாணி சுவாமிகள், மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலான சான்றோர்கள் பலர் கலம்பகங்கள் பாடியுள்ளார்கள்.

சிலவகை மகளிரைக் கண்டு, காமுற்ற இளைஞர்கள் தம் காமக்குறிப்புத் தோன்ற அவர்களோடு பேசும் உலகியலைத் தழுவி மதங்கியார், பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் என்னும் உறுப்புக்கள் கலம்பக நூலில் உள்ளனவாம்.

இவற்றுள் மதங்கு என்பவள் வாள்சுழற்றி ஆடுபவள். பிச்சியார் என்பவர் சிவ வேடம் புனைந்து வருபவள். கொற்றி வைணவ வேடப்பெண். இவ்வுறுப்புக்களில் அம் மகளிர்க்கு உரிய செய்திகள் தோன்றும்படி சிலேடை அமைத்துப் பாடுவது புலவர் நெறியாம். இவற்றை அன்றி மறம், குறம், சம்பிரதம், சித்து, களி, ஊர், அம்மானை, ஊசல், பாணாற்றுப்படை என்னும் உறுப்புக்கள் இந்நூலில் வருவனவாம்.

மறம் என்பது மறச்சாதி மகள் ஒருத்தியை ஒரு மன்னன் மணம் பேசி வரத் தூது விடுப்பது. அச் செய்தியை அறிவிக்கும் திருமுகம் கொண்டு வந்த தூதனை நோக்கி, அச்சாதியினரின் தலைவன் சினந்து கூறல். குறம் என்பது குறத்தி குறி கூறல், பிறரால் இயற்ற முடியாத அரிய செயல்களைத் தான் செய்து விடுவதாகக் கூறுவது சம்பிரதம். இரசவாதம் செய்யும் சித்தனாகத் தன்னை ஒருவன் கூறிக் கொள்வது. சித்து கட்குடியன் கூறுவதாக அமைவது களி. பாட்டுடைத் தலைவரின் ஊரைச் சிறப்பிப்பது ஊர். மகளிர் அம்மானை ஆடுதற்கும், ஊசல் ஆடுதற்கும் உரிய செய்யுட்கள் முறையே அம்மானையும் ஊசலும் ஆகும். அம்மானை மூன்று பெண்கள் பாடுவதாக அமைவது.

**மதுரைக் கலம்பகம்**

காப்பு, கொச்சகக் கலிப்பாவுடன், புயவகுப்பு, அம்மானை, மதங்கியார், தழை, ஊசல், பறவை விடு தூது, கொற்றியார் ஊர் கைக்கிளை, கிள்ளை விடு தூது, சித்து, கார், இடைச்சியார், வலைச்சியார், மடல், பரண், மறம், குறம் முதலான உறுப்புக் களை ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்னும் பாக்களும் பாவின் இனங்களும் விரவி வர, மடக்கு, சிலேடை யமகம் திரிபு இரட்டுற மொழிதல் முதலான பாக்களின் திறத்துடன் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளால் பாடப்பெற்ற அற்புதமான சிற்றிலக்கியம்.

இக் கலம்பக உறுப்புக்களின் சில பாடங்களின் நயம் காண்போம்:

**விநாயகர் காப்பு**

104. புந்தித் தடத்துப் புலக் களிறு ஓடம் புளிறு தொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குதவு என்பதென் தண்மலர்தூய்
வந்திப்பதும் தனி வாழ்த்துவதும் முடிதாழ்த்த நின்று
சிந்திப்பதும் அன்றிச் சித்தி விநாயகன் தன் சேவடியே

**பொழிப்பு:** சித்தி விநாயகக் கடவுளின் சிவந்த பாதத்தை குளிர்ந்த மலர் தூவி வணங்குவதும் வாழ்த்துவதும் தலை தாழ்ந்து நின்று அவன் திருவுருவைச் சிந்திப்பதும் அல்லாமல் உள்ளம் என்னும் தடாகத்தில் ஐம்புலன்களாகிய யானைகள்

ஓடிடப் பிளிறுகின்ற தொந்திக் கணபதியின் தந்தையான சிவபெருமான் மீது பாடுகின்ற தமிழுக்கு உதவ வேண்டும் என்று கேட்கவும் வேண்டுமோ? வேண்டுவதில்லையாம் என் கடன் பணி செய்தல் – தன் கடன் அடியேனைக் காப்பது என்பது அப்பர் சுவாமிகளின் திருவாக்கு.

**சிவபெருமான் துதி**

106\. பொருள் நான்கு ஒருங்கு ஈன்ற பொன் மாடக் கூடல்
இருள் நான்று இருண்ட கண்டத்து எம்மான் சரண்அன்றே
மண்துழாய் உள்ளடாற்குக் கண் மலரோடு ஒண் மவுலித்
தண் துழாய் பூத்த தடம்

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினையும் தந்தவரும், நான்மாடக்கூடலில் இருள் அழிய இருண்ட கண்டத்தை உடையவரும் ஆகிய எம் பெருமானின் பாதம் ஆகிய தடாகம். பூமியைத் துழாவி உண்ட திருமாலின் கண்மலரான செந்தாமரை மலருடன் அவரின் திருமுடியின் மலரான துளவ மலரும் பூத்த தடாகம் ஆம்.

திருமால் தன் கண் மலரால் திருவடிகளை அருச்சித்த தனாலும், திருமுடி பட வணங்கும்போது அதன் கண் உள்ள திருத்துழாய் வீழ்வதனாலும், சிவபிரான் திருப்பாதம் தடாகம் என உருவகப்படுத்தினார்.

**புய வகுப்பில் சில வரிகள்**

தமிழ் வளர் மதுரையில் ஒரு குமரியாகிய அங்கயற் கண்ணியைத் தழுவிய சுந்தரேசர் விசாலமான புயங்கள் அமுத மதுரம் ஒழுகும் தமிழ்க் கவிமாலையைச் சூடின. உமா பரமேஸ்வரியின் வளைதழுதம்பும், முலைத்தழும்பும் பெற்றுக்குழைந்தன. முருகப் பெருமானின் வாய் ஊறல் நீர் ததும்பிச் சிந்தக் கசிந்து கனிந்தன என்பதாம்.

தலைவியின் பேதமையைக் குறித்துத் தோழி இரங்கிக் கூறியது.

**விருத்தக் கலித்துறை**

110\. ஒன்றே உடம்பு அங்கு இரண்டே இடும் பங்கு
உடம்பு ஒன்று இல்லார்
என்றே அறிந்தும் பின் நின்றே இரங்கு என்று
இரக்கின்றவா

குன்றே இரண்டு அன்றி வெண்பொன் பசும் பொன்
குயின்றே செயும்
மன்றே இருக்கப் புறங்காட்டு அரங்கு ஆட
வல்லாரையே

உடம்பு ஒன்றே உமாதேவிக்கு ஒரு பங்கு, தமக்கு ஒரு பங்காக இரண்டு பங்காக உள்ளது. அன்றியும் ஒரு பாகம் உமாதேவிக்கும் ஒரு பாகம் திருமாலுக்கும் உரியன ஆகலின் உடம்பு ஒன்றும் தனக்கு இல்லாமல் வெளியையே உடம்பாகக் கொண்டவர் என்று அறிந்தும் என் தலைவி நீ இரங்குவாயாக என்று சொல்லி அவரை இரந்து நிற்பது பேதமை. அன்றியும் வெள்ளிமலை, பொன்மலை இரண்டுடன் வெள்ளியம்பலம் பொன்னம்பலம் இரண்டும் இருக்க மயான பூமியையே ஆட ரங்காகக் கொண்டு ஆட வல்லாரை வேண்டுவதில் என்ன உள்ளது.

"ஒரு பாதி மால்கொள மற்றொரு பாதி உமையவள் கொண்டு இரு பாதியாலும் இறந்தான் புராரி என்பது கவி காளமேகம் வாக்கு"

**அம்மானை மூன்று பெண்கள் பாடுவது**

117. இருவருக்கும் காண்பரிய ஈசர் மதுரேசனார்
விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனர்காண் அம்மானை
விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனரே ஆமாகில்
அருமை உடம்பு ஒன்று இரு கூறு ஆவதேன் அம்மானை
ஆனாலும் காயம் இல்லை ஐயர் அவர்க்கு அம்மானை

இருவர் பிரமன் – திருமால் – விருதுகட்டி வெற்றி விருது கட்டி உடம்பு இருகூறு (தமக்கு ஒரு கூறு – உமைக்கு ஒரு கூறு) வென்றவர் உடம்பு இருகூறு ஆவது ஏன் என்று வினவுகின்றாள்– மற்றவன் காயம் இல்லை – உடம்பு இல்லை. புண் இல்லை என்று கூறுகின்றான்.

**மதங்கியார்**

தனது இருகைகளிலும் வாளாயுதம் ஏந்தி வீசிக் கொண்டு ஆடும் ஒரு மதங்கச் சாதி மங்கையை நோக்கி ஓர் இளைஞன் காமுற்றுக் கூறும் கூற்று இது.

119. எறிவேல் இரண்டும் எனதுயிர் சோர உண்டுலவ
இகல்வாள் இரண்டு விசிறா
வெறிசேர் கடம்பவன மதுரேசர் முன்குலவி
விளையாடு மின் கொடி யனீர்
சிறுநூல் மருங்குல் இறும் இறுமா கொல் என்று சில
சிலநூபுரம் சொல் முறையிடு
அறியீர் என் நெஞ்சும் அலமாவே சுழன்றிடு நும்
அதிவேகம் நன்றறவுமே.

உன் கண்களாகிய வேல் இரண்டும் எனது உயிரை உண்டு உலவும் போர் வாள் இரண்டைக் கைகளில் ஏந்தி வீசிக் கொண்டு கடம்பவன மதுரேசர் முன்பு விளையாடும் மின்னல் கொடி போன்ற மதங்கியரே. உன் நூல் போன்ற இடை ஒடியும் ஒடியும் என்று உன் காலில் அணிந்த சிலம்பு கலீர் கலீர் என்று சத்தமிட்டு முறையிடுவதை நீர் அறியவில்லை. என் நெஞ்சும் மருண்டு சுழல்கின்றது. உன் அதிவேகமான ஆடல் நன்றாயிருக்கின்றது. இடைஒசியும் என்று கால் சிலம்பு முறையிடுகிறது என்று சொல்லும் நயம் காண்க.

**தழை**

பாங்கி தலைவன் தந்த தழையை ஏற்றுக் கொள்ளும்படி தலைவியிடம் சொல்லுதல்.

124. பல்லார் உயிர்க்குயிரா மதுரேசர்
அப் பாண்டியன் முன்
கல்லணைக்கு இட்ட கரும்புஅன்று
காண் நின் களபக்கொங்கை
வல்லாணைக்கே இடூவாய்த்தது
போலுமென் வாட்கள் அன்னாய்
வில்லார் புயத்து அண்ணல்
தண்ணெளியால் தந்த மென்தழையே.

என் தாய் போன்ற தலைவியே பலர் உயிர்க்கும் உயிராகிய சோமசுந்தரர் அபிசேக பாண்டியன் முன்பு கல்லாணைக்குத் தின்னக் கொடுத்த கரும்பு அல்ல இது. உனது களபம் தோய்ந்த கொங்கைகள் ஆன இரண்டு ஆனைகளுக்கும், வில் ஏந்திய புயத்து அண்ணல் ஆகிய தலைவன் கருணையினால் தந்த தழை ஆகும்.

தழை என்பது மலர்களையும் இலைகளையும் சேர்த்துக் கட்டிச் செய்யப்பெற்ற ஆடையாம்.

அருணைக் கலம்பகத்தில் சைவ எல்லப்ப நாவலர் ஐயனே நீர் தந்த தழை எங்கள் பெண்கள் முகர்ந்தபோது துவண்டது உடம்பில் போர்த்தபோது புலர்ந்தது. கண்ணீர் பாய்ந்த போது நனைந்தது. கண்களால் மீளவும் பார்த்தபோது பசுமையாக தழைத்தது என்று நயம்படக் கூறுகிறார்.

மடக்கு

162. ஐயமணிக்கலம் என் பணியே
அன்பு அணியர் கொள்வது என்பணியே
மெய்யணிசாந்தமும் வெண்பலியே
வேண்டுவதும் கொள வெண்பலியே
எய்ய எடுப்பதோர் செம்மலையே
ஏந்தி அணைப்பது ஓர் செம்மலையே
வையகம் வாய்ந்த வளம்பதியே
வாழ்வது கூடல் வளம்பதியே

"உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருள் – மெய்யினையே"

என்று ஞானசம்பந்தர் அருளிய மடக்கு அணி போன்று அமைந்திருப்பது காண்க. மற்றும் இந்தக் கலம்பக இலக்கியத்தின் உறுப்புக்கள் முழுவதும் ஆய்வது இந்தக் கட்டுரையில் அடங்காத தாம்

இந்தக் கலம்பகச் செய்யுள் சான்றோர் கவிக்கு இலக்கண மாகத் திகழ்வது பெரும்புலவர்கள் பாடிய கலம்பக வகைகளை எடுத்துக் காட்டுவது சாலச் சிறந்தது எனினும் சில கலம்பக இலக்கியங்களை மட்டும் சுருக்கமாகக் காட்டியுள்ளேன். சித்து, களி, மறம், குறம், பாண், சம்பிரதம் முதலியன இந்தக் கலம்பகப் பனுவலில் அருமையாக அமைந்துள்ளன.

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது

என்னும் பொய்யாமொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய குமரகுருபர சுவாமிகளின் செய்யுள் நுட்பங்களை ஆராய்வது எளிதல்ல.

# குமரகுருபரரும் வள்ளலாரும்

ச. பாக்கியவதி சங்கரலிங்கம், சென்னை

தமிழகம் செய்த தவப்பயனாய், இம்மண்ணில் தோன்றிய ஆன்றோரும் சான்றோரும் அருந்தவ முனிவரும் ஆற்றல்சால் சித்தரும் கணக்கற்றோர். அவர்களுள் இங்கு உரைக்கப் பெறுவோர் குமரகுருபரரும், வள்ளலாரும் ஆவர். இவ்விருவரும் புலமையும் நல்லொழுக்கமும் நிரம்பிய சைவச் சான்றோர்க்குப் புதல்வராய்த் தோன்றும் பேறு பெற்றவர்கள்; இளம் குழவி நிலையிலேயே இறையருள் பெற்றவர்கள்; முன்னவர் ஐந்தாம் ஆண்டுவரை ஒன்றுமே பேசாதிருந்து, அன்னையும் தந்தையும் ஆராத்துயருடன் ஆண்டவனை வேண்ட, எடுத்தவுடனே பாமாலை பாடியவர்; பின்னவர் ஐந்தாம் திங்களிலேயே வெட்ட வெளியாம் சிதம்பர ரகசியத்தை உணர்ந்து, ஒன்பதாம் அகவை யிலிருந்து பாடத் தொடங்கியவர். இருவரும் முருகனையே முதலில் பாடியவர்கள். குமரகுருபரர் மதுரை மீனாட்சி யம்மையால் முத்துமாலை அணிவிக்கப் பெற்றவர் எனின் வள்ளலார் திருவொற்றியூர் வடிவுடையம்மனால் அமுதூட்டப் பெற்றவர். இருவரும் இளமையிலேயே இவ்வுலகப் பற்றினைத் துறந்து இறைவனை இறுகப்பற்றிக் கொண்டவர்கள்; கந்தனைக் கண்ணாரக் காணும் பேறு பெற்றவர்கள்; பற்பல தலங்களுக்கும் சென்று பரமனைப் பாடிப் பணிந்தவர்கள்; ஓதாது உணர்ந்த கல்விக் கடல்கள்; சித்து வித்தைகள் கைவரப் பெற்ற சித்தர்கள்; வடமொழிப் புலமையும் பெற்றவர்களாயினும் தமிழ்மீது தணியாத பற்றுக் கொண்டவர்கள். ஒருவர் காசிக்குச் சென்று மடம் கட்டி, மக்களின் பசிப்பிணியுடன் மடமையும் போக்கி ஆன்மீகப் பணிபுரிந்தவர் என்றால் மற்றவர் சத்திய தருமச் சாலையும் ஞானசபையும் அமைத்துப் பணிபுரிந்தவர். இவை தவிரவாழ்வின் இறுதியில் தாம்தாம் விரும்பியவண்ணம் இறைவனுடன் இணைந்தவர்கள். இவ்வண்ணம் பல நிலைகளில் ஒன்றுபட்டவர்கள், தத்தம் பாடல்களில் வெளிப்படுமாற்றை நோக்குவோம்,

**காலச்சூழல்**

பொதுவாக அவரவர் வாழ்ந்த காலத்து அரசியல், பொருளாதார, சமூக, சமய, பண்பாட்டுச் சூழல் அவர்தம் பாக்களில் பிரதிபலிப்பது இயல்பாதலின், இருவரது பாக்களையும் ஒப்பிட்டுக் காணுமுன், அச்சூழலை முதற்கண் காணல் இன்றியமையாதது. இருவர் வாழ்ந்த காலத்தும் தமிழகம் தமிழரால் ஆளும் பேறுபெறவில்லை. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் குமரகுருபரர் தோன்றிய காலை, தமிழகத்தை நாயக்க மன்னர்கள் தமதாக்கியிருந்தனர். இம்மன்னர்கள் குடிமக்கள் நலத்தை உண்மையாகவே பேணிக் காத்தவர்களாயினும், பலதுறைகளிலும் அவர்களுக்கு நல்வாழ்வு அளிக்க முயன்றவராயினும், போர், வெள்ளம், பஞ்சம், நோய் நொடி போன்றவை மக்களை வாட்டி வந்தன. சமுதாயம் குலவேறுபாடு, பொருளற்ற சடங்குகள், சிறுதெய்வ வழிபாடு, உயிர்ப்பலி போன்ற எண்ணற்ற கண்மூடிப் பழக்க வழக்கங் களால் அலைப்புண்டு, பிளவுபட்டுக் காணப்பட்டது. சைவமும், வைணவமும் சிறப்பாக வாழ்ந்திருந்தாலும் கிறித்தவமும், இஸ்லாமும் மெல்ல ஊடுருவிக் கொண்டிருந்தன. மொத்தத்தில் மக்கள் அமைதியான வாழ்க்கையோ, வளமான வாழ்க்கையோ வாழ்ந்ததாகக் கூறமுடியாது.

வள்ளலார் தோன்றிய பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ்த் தமிழகம் அடிமைப் பட்டுக் கிடந்தது. மக்களின் ஏழ்மையையும் அறியாமையையும் அடித்தளமாகக் கொண்டு கிறித்தவம் வேரூன்றியதெனின் அச்சுறுத்தலால் இஸ்லாமும் வளர்ந்து கொண்டிருந்தது. எண்ணற்ற சாதிகளும் இனங்களும் மக்களைக் கூறுபோட்டுக் கொண்டிருந்தன. தீண்டாமை புற்றுநோயாய் வளர்ந்திருந்தது. வறுமை ஒருபுறம் வருத்த, மக்கள் மனதில் பொங்கியெழும் பேராசையும் அழுக்காறும் வாழ்க்கையைத் தடம் புரளச் செய்தன. குமரகுருபரரது காலத்தில் ஓரளவு சீர்கெடத் தொடங்கியிருந்த நிலை, வள்ளலாரது காலத்தில் உச்சநிலை யடைந்து அதற்கொரு தீர்வை, திருப்பத்தை எதிர்நோக்கி யிருந்தது எனலாம்.

**பாடியவை**

பதினேழாம் நூற்றாண்டு இலக்கிய வகையை நோக்கின், பிரபந்தங்களின் நூற்றாண்டு. அதனை அடியொற்றிக் குமரகுருபரரும் கலிவெண்பா, பிள்ளைத்தமிழ், குறவஞ்சி, கலம்பகம், கோவை, மாலை என்ற பிரபந்த வகைகளைப் பாடியுள்ளார். இவையனைத்தும் இறைவனைப் பாட, மக்களை நன்னெறி உய்த்தற் பொருட்டுப் பாடிய நீதிநெறி விளக்கம் மட்டும் குறளைப் பின்பற்றி நாலடி வெண்பாக்களாக உள்ளது. இவரது பாடல்கள் உ. வே. சா. பதிப்பை நோக்க மொத்தம் 709 பாடல்கள்.

வள்ளலார் தாம் வாழ்ந்த காலம் முழுமையும் இடையறாது இறைவன்பால் பக்திப் பெருக்கோடு பாக்களையும் வாரிவழங்கி யுள்ளார். இவரது தன்னடக்கத்தால் இழந்தவை போக எஞ்சியவை 5818. இவற்றில் பெரும்பான்மை தனித்தனி நூலாக அல்லாமல் தேவார திருவாசகப் பாக்களைப் போல் பதிகம் பதிகமாக பாடப்பெற்றவை. அருட்பெருஞ்ஜோதி அகவல், அருள்விளக்கமாலை போன்று சில பிரபந்தங்களும் உண்டு. இவை ஆறு திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. இவர் வாழ்ந்த காலத்து உரைநடையிலும் இலக்கியங்கள் எழுதப்பட்டமையின் மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என இரு உரைநடை நூல்களும் இயற்றியுள்ளார்.

**பாடப்பெற்றோர்**

இருவருமே முதலில் முருகனைப் பாடியிருப்பினும் சிவனையே பெரிதும் பாடியுள்ளனர்; அம்மைக்கும் சிறப்பிடம் தருகின்றனர். குமரகுருபரர் ஞானாசிரியரைப் போற்றிப் பண்டார மும்மணிக்கோவை பாட சமயக்குரவர் நால்வருக்கும் தனித்தனிப் பாமாலை சூட்டுகின்றார் வள்ளலார். இருவரும் பிற தெய்வங்களையும் ஆங்காங்குப் பாடியிருப்பதோடு கலைமகளையும் போற்றித் துதித்துள்ளனர்.

**பாட்டுத்திறன்**

கருவில் திருவுடையோராய்த் தோன்றிய இருவரும் பாடிய பாக்கள் மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாப்

புகழ் கொண்டு நிலைநிற்பவை. அவர்கள் ஒன்றுபடுமாற்றையும் சிற்சிலவிடத்து வேறுபடுமாற்றையும் இனி நோக்குவோம்.

**போற்றல்**

ஓதாது தாம் உணர்ந்தவனை, தேவரும் பிறரும் தேடிக் காண வொண்ணாதவனை, அன்னைக்குத் தன்னில் பாதியைத் தந்தவனை, அடியவர்க்கு எளியவனை, கங்கையையும் கலையையும் உச்சியிற் கொண்டவனை, தம் கண்ணாக, கண்மணியாக, கண்ணின் ஒளியாகக் கொண்டு பலபடப் போற்றிய இருவரும், அவனன்றியேதுமிலை எனத் தெளிவுறுத்துகின்றனர்.

> "வானே நிலனே கனலே மறிபுனலே
> ஊனே அவ்வூனில் உயிரே உயிர்த்துணையே
> ஆனேறும் ஏறே அரசே அருட்கடலே
> தேனே யமுதே அளியோங்கள் செல்வமே" (502)
> ... ... ... ... ... ... ... ... ...

எனக் குமரகுருபரரும்,

> "வானே அவ்வானுலவும் காற்றே காற்றின் வருநெருப்பே
> நெருப்புறுநீர் வடிவே நீரில்
> தானேயும் புவியே அப்புவியில்தங்கும் தாபரமே
> சங்கமமே சாற்றுகின்ற
> ஊனே நல்லுயிரே உள்ஒளியே உள்ளத்துணர்வே
> அவ்வுணர்வு கலந்தூறுகின்ற
> தேனே முக்கனியே செங்கரும்பின் பாகின்
> தீஞ்சுவையே சுவையனைத்தும் திரண்ட தேவே"
> (2095)

என வள்ளலாரும் பாடக் காண்க.

**தற்பழித்தல்**

எல்லாமே அவனாக அறிந்த நிலையில், தானெனும் மாயை, ஆணவம் சற்றேனும் இல்லாத நிலையில், 'சிவமே தவமே சரணம் சரணம்' என அவன் திருவடிக்கண் சரணடைந்த நிலையில், தம்மை ஒன்று மற்றதாக இருவரும் காண்கின்றனர். இறையருள் பெறுதற்கும் தமக்குத் தகுதியிலையென எண்ணி, 'சிறிய எனது புன்மொழி' (4) 'என் பொருளில் புன்மொழி' (312) எனத் தம் மொழியையும், 'யானே புலனும் நலனுமிலேன்' (502), 'செய்தவவேடம் மெய்யில் தாங்கி கைதவ ஒழுக்கம் உள் வைத்துப்

பொதிந்தும்' (460) எனத் தம்மையும் குமரகுருபரர் பழித்துரைக்கின்றார். இவரினும் தம்மை மிகமிக இழிந்தோராகக் கருதும் வள்ளலார், 'வஞ்ச நெஞ்சினேன் வல்விலங்கு அனையேன்' (338), 'மையல் நெஞ்சினேன் மதியிலேன்' (339), 'நாய்க்கும் இணையிலேன்' (636), 'நின்னடிக்கே தொண்டறிந்து செய்யாத துட்டனேன்' (687), 'ஆட்டுகின்ற நீ அறிந்திலை போலும் ஐவர் பக்கம் நான் ஆடுகின்றதனை' (1073) என்றிவ்வாறாக மிகப்பல இடங்களில் பழித்துக் கொள்கின்றார். இங்ஙனம் தம்மைத் தாழ்த்தித் தாழ்த்தி உயர்நிலை அடைந்தவர்கள் இவர்கள்.

**வேண்டல்**

கடையரில் கடையராய்த் தம்மைக் காணும் இவர்கள் இறைவனிடம் வேண்டுவதெல்லாம் பொன்னோ பொருளோ போகத்திற்குரிய வொன்றோ அல்ல. குமரகுருபரர் தம் மனதில் பதிந்த கந்தனின் திருவுருவைப் பாடற்குப் போலும், முதற்கண், எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை வேண்டுமென்கின்றார். மேலும் இப்பிறப்பில் இருபற்றும் மும்மலமும் நீங்கப் பெறவேண்டும்; நின்னடியார் கூட்டத்து இவ்வெளியேனும் இணைந்து பேரின்பம் நுகர வேண்டும்; நின் பூங்கமலக்கால் காட்டி ஆட்கொண்டருள வேண்டும் (119–122) என்கிறார். வாழ்ந்து முடிந்த போதல்ல; வாய்திறந்து பேசத் தொடங்கிய போதே இவற்றை வேண்டுகின்றார் என்பது தான் இங்கு நாம் உணர வேண்டுவது. வள்ளலாரும் 'எவ்வுயிர்க்கும் உறவோங்கும் நின்பதம் என்உளம் ஓங்கி வளம் ஓங்க உய்கின்ற நாள் எந்தநாள்' (1) என்று ஒன்பதாம் அகவையில் தாம் பாடிய முதற்பாடலிலேயே வேண்டுகின்றார்'. 'நின்றனைப் பாடும் தெருளூறல் வேண்டும்'; (2582) இணையடிகள் மறவாத மனம் ஒன்று மாத்திரம் எனக்கு அடைதல் வேண்டும்' (4576), என்பவர் தமக்காக வேண்டுவதினும் பிறருக்காக வேண்டுவதே மிகுதி. 'மருளாய உலகமெலாம் மருள் நீங்கி ஞானமன்றிடத்தே வள்ளலுனை வாழ்த்தியிடல் வேண்டும்' (4088).

> ''அகத்தே கறுத்து புறத்தே வெளுத்து
> இருந்த உலகர் அனைவரையும்
> சகத்தே திருத்திச் சன்மார்க்க
> சங்கத்து அடைவித்திட அவரும்
> இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடவே'' (5485)

இவ்வுலகிற்கு வருவிக்க உற்றேன் என உரைப்பது தாம் பெற்ற இன்பம் இவ்வையமும் பெற வேண்டுமென அவர் விழைவதைப் புலப்படுத்தும்.

**வேண்டுகோள் விடுத்தல்**

தம்மைப் போல் உலகோர் அனைவரும் பேரின்பம் பெற விளையும் இவர்கள் அவர்களிடத்து விடுவிக்கும் வேண்டுகோள்கள் அவர்களை உய்விக்கும் நோக்குடன் விளங்குகின்றன.

'பிணியென்று பெயராமே | துணைநின்று தவஞ்செய்வீர்
அணிமன்றலுமை பாகன் | மணிமன்று பணியீரே' (558)

'போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றம் குமைக்க வருமுன் நமரங்காள்
ஏற்றுஉ வந்தான் பொற்றாளினை' (506)

இவை குமரகுருபரர் வாக்கு.

'சத்துவ ஞான வடிவாண்டி – சிவ
சண்முக நாதனைப் பாடுங்கடி' (531)
'பொய்வந்த உள்ளத்தில் போகாண்டி – அந்தப்
புண்ணியன் பொன்னடி போற்றுங்கடி' (534)

என்று இறைவனைப் பாடிப் பரவ அழைக்கும் வள்ளலார், 'கொல்லா விரதமது கொள்ளாரைக் காணிலொரு புல்லாக எண்ணிப் புறம் பொழிக' என்று கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் வற்புறுத்துவதோடு, சாதி சமய வேறுபாடு கூடாது; எவ்வுயிரையும் தம்முயிர் போல் நேசிக்க வேண்டும்; ஏழைகளின் பசி தீர்க்க வேண்டும்; ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையைக் கைக்கொள்ள வேண்டும் என்பதுபோலப் பல வேண்டுகோள்களை மிகத் தெளிவாகத் தம் உரைநடைப் பகுதிகளில் மக்கள் முன்வைக்கின்றார்.

**முன்னோர் மொழிபொருள் போற்றல்**

கல்விக்கூடம் சென்று கற்காமலே கற்க வேண்டிய நூல்களைக் கற்றுணர்ந்த இருவரும் அம்முன்னோரது பொன் மொழிகளைத் தம் வாயிலாகவும் வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றில் சமயக்குரவர் நால்வர்தம் மொழிகள் முதலிடம் பெறுகின்றன. திருக்குறள், பழமொழி, நாலடியார் போன்ற நீதிநூற் கருத்துக்களும் முன்னோரது சைவ சித்தாந்தக் கருத்துக்களும் ஆங்காங்கே மிளிர்கின்றன.

'பூரணமாய் நித்தமாய்ப் போக்குவரவும் புணர்வும்
காரணமுமில்லாக் கதியாகி' (8)

என்ற அடிகள்

'போக்கு வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே'

என்ற திருவாசக வரிகளை நினைவுபடுத்துபவை. வள்ளலார் 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்ற அப்பர் பாடலைப் பின்பற்றியே

'பாட்டு வந்தால் பாடுகின்றேன்
பணிவித்தால் பணிகின்றேன்
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ...
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோ
இச்சிறியனால் ஆவதென்னே' (3369)

எனப் பாடுகின்றார்.

**நாயகியாய் நலிதல்**

இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும் பாவித்து அந்நாயகனை அடைதற்காக ஏங்கி இரங்கிப் பாடும் மரபு பக்தி இலக்கியத்தில் நயமும் இனிமையும் நிரம்பிய ஒன்று. இங்ஙனம் நாயகனை நாடும் நாயகியாய் இருவரும் நலிந்து உருகிப் பாடிய பாடல்கள் எண்ணற்றவை.

'புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச்
சொக்கர் கர்ப்பூரச் சொக்கர்
அழகிய சொக்கர் கடம்பவனச்
சொக்கர் அங்கயற்கண்
தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்கர்
என்றென்று சந்ததம் நீ
பழகிய சொற்குப் பயன்
தேர்ந்துவா இங்கென் இளங்கிளியே' (157)

'ஓவாநிலையார் பொற்சிலையார் ஒற்றி
நகரார் உண்மை சொலும்
தூவாய் மொழியார் அவர்முன்போய்ச்
சுகங்காள் நின்று சொல்லீரோ

பூவார் முடியாள் பூமுடியாள்
போவாள் வருவாள் பொருந்துகிலாள்
ஆவா என்பாள் மகளிரொடும்
ஆடாள் தேடாள் அனம்என்றே' (1508)

மனிதரிடத்துத் தம் மனக்கவலை உரைப்பது இயலாத நிலையில் பறவையையும் விலங்குகளையும் இயங்கா இயற்கைப் பொருள்களையும் தூது விடும் மரபில் இருவரும் இங்ஙனம் கிளியைத் தூது விடுகின்றனர்.

**தமிழ்க் காதல்**

இறைவன் மீது மட்டுமன்றி அவ்விறையை வழிபடுவதற்கு, வாழ்த்தற்கு வகை செய்யும் தமிழ்மொழி மீதும் இருவரும் தீராக் காதல் கொண்டிருந்தனர். அன்றிலிருந்து இன்றுவரை தமிழுக்குப் பலரும் அடைமொழி பல பகன்றுள்ளனர். ஆயினும் குமரகுருபரர் தமிழுக்கு அடைமொழி அணிவித்து மகிழ்ந்தது போன்று இதுகாறும் யாரும் அணிவித்திலர். 'கலைத்தமிழ்த் தீம்பாலமுதம்' (706); 'கொத்து முத்தமிழ்' (350); 'கொழுத்த தமிழ்' (620); 'தருசுவையமுதெழ மதுரமது ஒழுகும் பசுந்தமிழ்' (115); 'தீஞ்சுவைக் கனியுந்தண்டேன் நறையும் வடித்தெடுத்த சாரங்கனிந் தூற்றிருந்த பசுந்தமிழ் (393); 'புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழ்' (105); விரைத்தேன் பில்குந் தேத்தமிழ்' (699). தமிழ் நாட்டை விட்டு நெடுந் தொலைவில் நெடுங்காலம் வாழ நேர்ந்ததால் மனதிற்குள் அதனை நினைந்து நினைந்து ஏங்கிய ஏக்கமே, வருந்திய வருத்தமே இவ்வாறு அடைப்பெருக்காய் வழிந்தது போலும். வள்ளலாரும் தமிழைப் போற்றுகின்றார். மக்கள் வடமொழி மோகம் கொண்டு அலைவது கண்டு வருந்தித்தமிழ் என்ற சொற்கு விரிவான விளக்கமும் தருகின்றார். வடமொழி தாய் பாஷை என வாதிட்டால் தமிழ் தந்தை பாஷை எனப் பதிலும் கொடுக்கின்றார்.

**பொது நோக்கு**

வடக்கே சென்று அங்கு ஆளும் முகமதிய மன்னன் உதவி யொடு காசியில் மடம் அமைத்து ஆன்மீகப் பணியாற்றியவர் குமரகுருபரர். பல சமயங்களும் சாதிப்பிரிவுகளும் இருந்தாலும் அவற்றுக்கிடையே அவ்வப்போது சிற்சில பூசல்கள் எழுந்தாலும்

ஓரளவு அவை கட்டுக்கடங்கி இருந்த காலம். அதனால் அதுபற்றி விரிவாக எதுவும் பாடாத குமரகுருபரர் ஓரிடத்து,

> 'இதுவே பொருளென்று எவர் எவர் கூறினும் ஏற்பது எது
> அதுவே பொருளென்று அறிந்து கொண்டேன்
> அப்பொருள் எவர்க்கும்
> பொதுவே யென்றானும் பொருந்தும் எல்லோர்க்கும்
> பொதுவில் நிற்கும்' (330)

எனப் பாடுவதிலிருந்து பொது நோக்குடையார் என அறிய முடிகின்றது. வள்ளலார் வாழ்ந்த காலத்துத் தமிழர் சமுதாயம் வைதீகப் பிடிப்பிலும், சைவ வேளாளர் பிடிப்பிலும் சிக்குண்டு தவித்தமையின், இப்பிடிப்புகளினின்றும் மீட்க சமரச சன்மார்க்க சபையையும், சத்திய ஞானசபையையும் வள்ளலார் தோற்று விக்க நேர்ந்தது; மக்களிடையே அதனைப் போதிக்கவும் வற்புறுத்தவும் நேர்ந்தது; ஒளி வழிபாட்டினைத் தொடங்கவும் நேர்ந்தது.

> 'சாதிகுலம் சமயமெலாம் தவிர்த்தெனை மேலேற்றித்
> தனித்திரு வமுது அளித்த தனித்தலைமைப் பொருளே'
> (4112)

> 'வரையில் உயர்குலமென்றும் தாழ்ந்த குலமென்றும்
> வகுக்கின்றீர் இருகுலமும் மாண்டிடக் காண்கின்றீர்'

### வேற்றுமை

மேற்கூறிய அனைத்தினும் ஒன்றுபட்டு நிற்கும் இருவரும் வருணனை செய்வதில் பெரிதும் வேறுபட்டு நிற்கின்றனர். இறையை நினைந்து இன்புற்றுப் பாடுவதில் குருபரரோடு இணைந்து நிற்கும் வள்ளலார் மண்ணையும் விண்ணையும் அவர் போல் அனுபவித்து அனுபவித்துப் பாடக் காண்கிலோம் எனவே மண்ணை மண்ணாகவே இவர் காண்கின்றார். 'திருவோங்கு சென்னை' (1), 'தரையில் உயர் சென்னை' (10), 'தண்ணம் பொழில்சூழ் ஒற்றியுளீர்' (1837) என்பது போன்று அடை மட்டுமே வழங்க, குருபரரோ விண்ணையே மண்ணிற்குக் கொண்டு வந்து விடுகிறார். தம் கற்பனை வளத்தால் இரண்டிற்கும் பாலமும் அமைத்து விடுகிறார்.

குருபரர் நீதிநெறி விளக்கம் பாடி மக்களுக்கு நன்னெறி காட்டினார் என்றாலும், மக்களுக்கு இறைமையைப் போதித்தார்

என்றாலும் அம்மக்களோடு வள்ளலாரைப் போல் நெருங்கிய தொடர்பு அற்றவராய் இருந்ததனாற் போலும். அவர்களது அன்றாட வாழ்வின் வருத்தங்கள் அவரைப் பாதிக்கவில்லை. வள்ளலார் தமிழக மக்களோடு மக்களாக வாழ்ந்து அவர்களது அறியாமை, ஆற்றாமை, அழுக்காறு, அவா ஆகிய அனைத்திலும் அருகிருந்து உணர்ந்தவராதலின் அவர்கள் பொருட்டு வருந்தினர்; வாடினார்; அவர்தம் குற்றங் குறைகளையெல்லாம் தமதாகவே ஏற்றுப் பாடினார். மனிதகுலம் உய்ய வேண்டும் என்ற ஏக்கத் தோடு பாடினார். அதனால் அவரது பாடல்களில் கண்ணீர் வழியும் உருக்கம் உண்டே தவிர உயர்வு நவிற்சியில்லை. கண் மூடிக் கற்பனையில் களிக்கும் காட்சி இல்லை. இறையனு பவத்தைப் பாடுங்கால் மட்டுமே அவரது உள்ளத்தில் களிப்பு கரையின்றிப் பெருகுகின்றது.

‘அருட்பெருஞ் ஜோதியைக் கண்டேனே
ஆனந்தத் தெள்ளமுது உண்டேனே’
‘சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு
தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு’ (5259)

சுருங்கக்கூறின் குருபரர் இம்மண்ணிலே வாழ்ந்தாலும் அவரது எண்ணமெலாம் விண்ணை நோக்கியே, இறைவனை நோக்கியே இருந்தது. வள்ளலார் எண்ணமெலாம் இறையோடு இணைந்திருந் தாலும் இந்த மண்ணை, மண்ணின் மைந்தர்களின் வாழ்க்கை அவலங்களை விட்டு விலகவேயில்லை. அதனால் அவரது பாடல்கள் மண்ணை நோக்கியே அமைய, குருபரரது பாடல்கள் அவர் கண்ட விண்ணை நமக்கும் காட்டியருளின.

# கந்தபுராணமும் கந்தர் கலிவெண்பாவும்

பி. பார்வதி, குற்றாலம்

கச்சியப்ப சிவாசாரியார் எழுதிய கந்தபுராணத்தின் சாரமாக விளங்குவது கந்தர் கலிவெண்பா. மூன்று வயதில் "உமையொரு பாகனைக், கண்ட சம்பந்தர்" 'தோடுடைய செவியன்விடையேறி ஓர் தூவென் மதிசூடி ..' எனப் பாடியதைப் போல. ஐந்து வயதில் திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் திறம் பெற்ற குமரகுருபரர் 'பூமேவும் செங்கமலப் புத்தேளும் தேறரிய ... ....' எனத் தொடங்கும் கந்தர் கலிவெண்பாவின் வழி தான் கண்ட முருகனின் தோற்றத்தையும் இறையியல்பையும் எடுத்தோதுகிறார். இந்நூலைப் பற்றி கி. வா. ஜகந்நாதன், "ஒருவகையில் பார்த்தால் இந்த நூல் சைவசித்தாந்த நூற் சுருக்கமும், கந்தபுராணச் சுருக்கமும், கவசச் சுருக்கமாக விளங்குவதைக் காணலாம் என்கிறார். (முகவுரை–கந்தர் கலிவெண்பா விளக்கம், ப. VIII). கந்தனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுள்ள இவ்விரு இலக்கியங்களுள் கந்தபுராணம் மக்களிடையே சிறப்புப் பெறவில்லை. ஆனால் கந்தர் கலிவெண்பா மக்களால் போற்றப்படும் இலக்கியமாகத் திகழ்கிறது. கந்தபுராணத்தை விடக் கந்தர் கலிவெண்பா சிறப்புப் பெற்றதற்குரிய காரணங்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சிறந்த இலக்கியம் எது?

காலம் கடந்து, மொழி கடந்து, மதங்கடந்து மக்களால் போற்றப்படுவதே இலக்கியம் எனப்படும். "இலக்கியம் தான் கூற எடுத்துக் கொண்ட பொருளிலும் அதனைக் கூறும் வகையிலும் பொதுத் தன்மையுடையதாக இருத்தல் வேண்டும். அதாவது, அனைவருக்கும் அது இன்பமூட்டுவதாக இருத்தல் வேண்டும்" என்கிறார் அ. ச. ஞானசம்பந்தன் (இலக்கியக் கலை, ப. 12). கந்தபுராணம் இந்த வகையில் அமையாது சைவக் காப்பியமாக மட்டுமே படைக்கப்பட்டிருக்கிறது "அறக்கருத்

துக்கள் குறிப்பிட்டுச் சொல்லும் வகையில் கதையுடன் அமைய வில்லை. இராமாயணம் போல் மக்கள் மத்தியில் கந்தபுராணம் செல்வாக்கு பெறவில்லை'' என்ற கிருஷ்ணனின் கருத்து (கந்த புராணம் போற்றப்படாதது ஏன்? ஆய்வுக்கோவை, தொகுதி 1, 1997, பக். 418) கந்தபுராணம் அனைவருக்கும் இன்பமூட்டும் இலக்கியமாக அமையவில்லை என்பதைப் புலப்படுத்துகிறது. இக்காப்பியத்தின் சாரமாக விளங்கும் கந்தர் கலிவெண்பா பெரும்பான்மையான சைவ சமய மக்களால் பெரிதும் போற்றப்படும் இலக்கியமாகத் திகழ்கிறது.

**கந்தபுராணச் சாரமே கந்தர் கலிவெண்பா**

கந்தபுராணம் உமை சிவன் திருமணம் தொடங்கி, முருகன் வள்ளி, தெய்வானையோடு கந்தமலையில் இனிது வீற்றிருந்தது ஈறாக 141 படலங்கள் வழி முருகனின் கதையைப் பேசுகிறது. முருகன் தோன்றியதற்கான காரணம், சரவணப் பொய்கையில் கார்த்திகைப் பெண்டிரால் வளர்க்கப்பட்ட விதம், அவனது தோற்றப்பொலிவு, திருவிளையாடல்கள், வள்ளி தெய்வயானைத் திருமணங்கள் போன்றவை கந்தபுராணம் கூறியதைப் போலவே கந்தர் கலிவெண்பா கூறுகிறது. கந்தபுராணம் ஒவ்வொரு படலத்திலும் கூறும் கருத்தை, ரத்தினச்சுருக்கமாக ஓரிரு கண்ணிகளில் குமரகுருபரர் தந்துள்ளார். திருமுருகன் தோற்றம், துணைவர்கள் தோன்றுதல், சரவணப் பொய்கை என்ற மூன்று படலங்கள் வழி கச்சியப்பர் கூறிய கருத்தைக் குமரகுருபரர் 12 கண்ணிகளில் கூறியுள்ளார். இதனையே, கி. வா. ஜகந்நாதன் ''கந்தபுராணத்திலே மிக விரிவாகச் சண்முகநாதனுடைய திரு அவதாரம் வருகிறது. குமரகுருபர முனிவர் அதையே சுருக்கமாகச் சொன்னார்'' எனக் கூறியுள்ளார். (கந்தர் கலிவெண்பா விளக்கம் ப. 130). இவ்வாறு கந்தபுராணத்தின் சாரமாக விளங்கும் கந்தர் கலிவெண்பா மக்களிடையே சிறப்புப் பெற்றமைக்கும், கந்த புராணம் செல்வாக்கு பெறாமைக்கும் உரிய காரணங்கள் பல. அவற்றுள் சில இக்கட்டுரை வழி ஆராயப்படுகின்றன.

**பாடுபொருள்**

இரண்டு இலக்கியங்களும் முருகனையே பாடுபொருளாகக் கொண்டுள்ளன. கந்தபுராணம் பெருங்காப்பியம் எனக் கூறும் தன்மை பெற்றது. ஆறு காண்டங்களும், 141 படலங்களும், 10345 செய்யுட்களையும் கொண்ட இவ்விலக்கியத்தில் முருகனே

பாட்டுடைத் தலைவனாவான். ஆனால் இலக்கியத்தில் சிவன் பற்றிய செய்திகள் அதிகமாகப் பேசப்படுகின்றன. முருகனுக்குத் தரப்படும் முக்கியத்துவத்தை விட சிவனுக்கே அதிக முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது போன்று இலக்கியம் அமைந்துள்ளது. முருகப் பெருமானின் அருட்செயல்கள் இவ்விலக்கியத்தில் விரித்துரைக்கப் படவில்லை.

கலிவெண்பாவால் ஆகிய 122 கண்ணிகளை உடைய கந்தர் கலிவெண்பாவில் முருகனே பாட்டுடைத் தலைவன். சிவனே முருகனாக அவரித்ததாகக் கூறும் குமரகுருபரர் சிவனின் அனைத்துப் பண்புகளையும் முருகனுக்கு எடுத்தோதி அவனைத் தன்னேரில்லாத் தலைவனாகப் படைத்துள்ளார். இவ்விலக்கியத்தின் உறுதிப்பொருள் முருகன் அருள்பெற்று வீடுபேறு பெறுவதாகும் அதனைக் குமரகுருபரர் செம்மையாக எடுத்துரைத்துள்ளார். "சென்மப்பகை முதலியன எதிர்த்தாலும் மயில் வாகனத்தில் வந்து அவற்றிலிருந்து என்னைக் காத்து, எனக்கு அருள் செய்து, உனது பாதக்கமலத்தை எனக்குக் காட்டி என்னை ஆட்கொள்ள வேண்டும்" எனக் குமரகுருபரர் வேண்டுவதன் வழி, முருகன் அடியவர்க்கு அருளுவான் என்பதை எடுத்துரைக்கிறார். இத்தன்மையைக் கந்தபுராணத்தில் காண முடியவில்லை.

**ஒலிநயம்**

பாட்டில் புலவரால் அமைக்கப்பட்ட உணர்ச்சியைப் படிப்போர் உய்ப்பது ஒலிநயம். கால அளவு, தன்மை, ஒலிக்கும் முறை என்ற மூவகைகளில் வேறுபடும் ஒலிகளை வெவ்வேறு வகையாக அமைத்து இலக்கியம் படைப்பது புலவர்களின் தன்மையாகும். புலவரின் உணர்ச்சி அனுபவம் பாட்டில் ஒலிநயமாகப் புலப்படும் "பாட்டில் கையாளப்படும் ஒவ்வோர் ஒலியும், இயக்கத்தை அல்லது அழுத்தத்தைக் கூறுவதாக, திறமான கற்பனையைப் புலப்படுத்துவதாகப் பாடலில் அமையும்" என்கிறார் எம்சன் (சபா. அருணாசலம், குமர குருபரர் ஒலிநயப் புலவர், ஆ. கோவை–1978 தொகுதி 1, ப.65). கவிஞனுடைய உணர்வு, கற்பனை, எண்ணம் ஆகியவை சொல்லோசையோடு ஒன்றும் போது ஒலிநயம் சிறப்புப் பெறுகிறது. இவ் ஒலிநயம் கந்தபுராணத்தைவிட, கந்தர் கலிவெண்பாவில் மிகுந்துள்ளது.

விருத்தப்பா வடிவில் அமைந்த கந்தபுராணத்தில் உவமையும் உயர்வு நவிற்சி அணியும் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ள அளவிற்கு ஒலிநயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. ஆனால் கலிவெண்பாவால் ஆன கந்தர்கலிவெண்பா ஒலிநயம் மிக்கதாக விளங்குகிறது. வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை எனும் தளைகளைக் கொண்டு, ஒரு பொருள்மேல் பாடப்படுவதே கலிவெண்பா எனப்படும். அவ்வகையில் முருகனின் சிறப்பைப் பாடுதல் என்ற ஓரே பொருளைக் கொண்டு கந்தர் கலிவெண்பா யாக்கப்பட்டுள்ளதால் இதன் ஓசை நயம் சிறப்பிடம் பெறுகிறது. சந்தநயமும் ஒலிநயமும் சிறந்து விளங்கும் கந்தர் கலிவெண்பா ஒலிநயத்தில் கந்தபுராணத்தை விஞ்சி நிற்கிறது எனலாம். "குமரகுருபரர் சிறந்த கவிஞர். அவரது செய்யுட்களில் தனிச்சிறப்புப்பெற்று விளங்குவது பாடல் களில் பயிலப்படும் ஒலிநயமே. ஏனைய பாட்டுக்களிலிருந்து இவருடைய செய்யுட்களைச் செவிப்புலன் கொண்டே வேறு படுத்தி விடலாம். இவற்றைக் கற்குங்கால் பொருளிலே கருத்துச் செல்வதற்கு முன் செய்யுட்களின் ஓசை கருத்தை இழுக்கின்றது" என்ற உ. வே. சாமிநாத ஐயரின் கருத்து கந்தர் கலிவெண்பா விற்குச் சாலப் பொருந்தும்.

**பக்தியுணர்வு**

முருகப் பெருமானை வணங்குபவர் பெறும் பேறுகள் கந்தபுராணத்தில் கூறப்படுகின்றன. வெள்ளிக்கிழமை நோன்பு முருகக்கடவுளுடைய நோன்பாகும்; அதனைக் கடைப்பிடித்த வர்கள் எண்ணியதை எண்ணியாங்கு எய்துவர் எனக் கூறி அதற்குச் சான்றாக பகீரதன் கோரன் எனும் அரக்கனை வென்று அரசுரிமை பெற்றது கூறப்படுகிறது. கார்த்திகை நாளில் விரதம் இருந்தால் மேலாகிய நிலையை அடையலாம் எனக் கூறி கார்த்திகை நோன்பை மேற்கொண்ட அந்தணன் மநுவாகி உலகம் முழுவதையும் ஆண்டான் என, அதன் சிறப்பை எடுத்துரைக்கிறது. ஐப்பசித் திங்களில் பிரதமை முதலாக ஆறு நாட்களும் காலையில் நீராடி முறைப்படி முருகனை வழிபட்டால் சிறந்த நன்மைகளை அடையலாம் எனக் கூறி, முசுகுந்த சக்கரவர்த்தியைச் சான்றாகக் காட்டுகிறது. இவ்வாறு, முருகனை வழிபட்டு நோன்பு இருந்தால் என்ன பயனைப் பெறலாம் என்பதை 'முருகவழிபாடு' என்ற படலம் வழி எடுத்துரைத்தக்

கச்சியப்ப முனிவர், முருகன் அடியவர்களுக்கு எவ்வாறெல்லாம் அருளுவான் என்பதை எடுத்துரைக்கவில்லை.

கந்தர் கலிவெண்பா முருகப் பெருமானை வணங்குபவர் பெறும் பேறுகளை மட்டும் கூறாமல் அடியவர்களுக்கு முருகன் எவையெல்லாம் அருளுவான் என்பதைத் தனது வேண்டுதல் வாயிலாகக் குமரகுருபரர் விளக்குகிறார். குமரகுருபரர் முருகனிடம் 'ஜன்மப்பகை போகும்படி அருள் வேண்டும், துன்பம் வரும்போது பச்சைமயில் வாகனம் முதலியவற்றுடன் எழுந்தருளித் துன்பங்களை நீக்கி உள்ளத்தில் இருக்க வேண்டும், பழுத்த தமிழ்ப்புலமையை எனக்குத் தரவேண்டும். இரு பற்றையும் மும்மலத்தையும் போக்கி என்னை அடியார்களுடன் கூட்டிப் பரலோக அநுபவத்தை வழங்கி, பாதத்தாமரையைக் காட்டி என்னை ஆட்கொண்டு முன்னின்று அருள்புரிய வேண்டும், என்று விண்ணப்பிக்கிறார். இதன்வழி கந்தபுராணத்தில் கூறப்படாத பக்திநிலை, இவ்விலக்கியத்தில் விதந்துரைக்கப் பட்டுள்ளதை அறிய முடிகிறது.

**கிளைக்கதைகள்**

கிளைக்கதைகள் கதை அமைப்பிற்குத் துணை செய்யும் நோக்கத்தோடு இலக்கியத்தில் இணைக்கப்படுகின்றன. "கிளைக் கதைகள் மொத்தக் கதையோடு பின்னிப்பிணையும் இழையாகி நோக்க நிறைவேற்றமாகிக் காப்பியத்தின் முழு அமைப்புக்குத் துணையாகும்போது உத்தி அணுகுமுறையுடன் கருதத்தக்கன" என்ற உ. வே. சாமிநாத ஐயரின் கருத்து (கம்பன் இலக்கிய உத்திகள், ப. 396) கிளைக்கதைகள் இலக்கியத்தில் இடம் பெறுவதன் நோக்கத்தை எடுத்துரைக்கிறது. கந்தபுராணத்தில் அமையும் கிளைக்கதைகள் முருகனோடு இணையவில்லை. அவை பெரும்பாலும் சிவனின் பெருமையையே சித்திரிக்கின்றன. மார்க்கண்டேயன் கதை, சந்திரனுக்கு அருள் செய்தமை, தக்கன் வேள்வி அழித்தல், ததீசிகதை, வியாழபகவான் இந்திரனுக்கு அறிவுரை கூறும் கதை போன்றவை கந்தனோடு தொடர்பில்லாத கதைகளாகும்.

கந்தர் கலிவெண்பாவில் இடம்பெறும் கிளைக்கதைகள் அனைத்தும் முருகனோடு தொடர்புடைய கதைகளே. கந்தனோடு தொடர்பு இல்லாத கிளைக்கதைகள் கந்தர் கலிவெண்பாவில் இடம்பெறவில்லை எனலாம். முருகப்

பெருமானின் திருவிளையாடல்களைக் கூறும்போது வீரவாகு தோன்றியதையும், தேவர்களை அச்சுறுத்திய ஆட்டை அடக்கித் தனது வாகனமாக்கிக் கொண்டதையும், பிரமனுக்கும் ஓம் எனும் மந்திரத்தை உரைத்ததையும், ஓம் எனும் மந்திரத்தின் பொருளை அறியாத பிரமனைச் சிறை செய்த கதையும், தாரகனை வதைத்து, கிரௌஞ்சகிரியைப் பொடியாக்கிச் சூரபன்மனை அழித்த தன்மை ஆகிய கிளைக்கதைகள் ஆறுமுகனின் திருவிளையாடல்களைக் கூறும் நோக்கில் இலக்கியத்தில் புகுத்தப்பட்டுள்ளன. சரவணனோடு தொடர்பு இல்லாத கதைகள் கந்தர் கலிவெண்பாவில் பேசப்படவில்லை.

## முடிவுகள்

1. கந்தபுராணத்தில் முருகனின் புகழ் பாடுவதை விட சிவனின் சிறப்பே மிகுதியாக உரைக்கப்படுகிறது. சிவனே முருகனாக அவதரித்துள்ளான் எனக் கூறுகிறது கந்தர் கலிவெண்பா.

2. கந்தபுராணத்தை விட கந்தர் கலிவெண்பா இன்னோசை உடையதாக ஒலிநயம் மிக்கதாக விளங்குகிறது.

3. கந்தபுராணத்தில் உறுதிப்பொருள் கூறப்படவில்லை, கந்தர் கலிவெண்பா வீடுபேறு அடைவதையே உறுதிப் பொருளாகக் கொண்டுள்ளது.

4. கலிவெண்பாவில் இடம்பெறும் கிளைக்கதைகள் கதையுடன் ஒன்றிய தன்மையதாக விளங்குகின்றன.

# குமரகுருபரரும் சுற்றுச்சூழலும்

ச. பாலு, பூண்டி

**முன்னுரை**

அவ்வக்காலங்களில் தமிழ் மொழியில் புலவர் பெருமக்களால் இயற்றப் பெற்ற பிரபந்தங்கள் பல இருப்பினும் சில பிரபந்தங்களே பயிலப் பெற்றுவந்தன. தமிழ் பயில்வாரிற் பெரும்பாலோர் தவறாமல் படித்துப் பயன்பெறும் பிரபந்தத் தொகுதியில் முன்வரிசையில் நிற்பது ஸ்ரீ குமரகுருபர முனிவரின் பிரபந்தத் தொகுதி. ஸ்ரீ குமரகுருபரர் இயற்றிய பிரபந்தங் களாக இப்போது தெரிந்தவை பதினாறு. இவர்தம் நூல்களின் அடிப்படையில் வரலாற்று ஆய்வும், இலக்கிய ஆய்வும் நிகழ்த்தப் பெற்று வந்தாலும் அவர் கால சுற்றுச்சூழல் பற்றி குறிப்பிட்டுள்ளமையைப் பற்றி ஆய்வு செய்யும் எண்ணத்துடன் இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது.

அடிகளாரின் இலக்கியங்களில் சாத்திரப் பதிவுகள் வெகுவாகக் காணக் கிடைக்கின்றன. மேலும், புவியியல், அண்டவியல், உயிரியல், உடலியல், மருத்துவம் எனப் பல நிலைகளில் ஆய்வுக் களங்களை இவர்தம் படைப்புகளில் காண்கிறோம். இக்கட்டுரையில் அடிகளார் சுற்றுச்சூழலின் முக்கிய தொகுதி களான தாவரங்கள், விலங்குகள் பற்றிக் குறிப்பிட்டுள்ள செய்திகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

அடிகளார் பயணம் மேற்கொண்டு பாடல் இயற்றிய தலங்கள் திருச்செந்தூர், மதுரை, திருவாரூர், சிதம்பரம், காசி முதலியவை. இம்முனிவரின் பாடல்களில் ஐவகை நிலங்களில் சிலவற்றையும் அவற்றின் கருப்பொருள்கள் பற்றிய செய்தி களையும் நிறையக் காணலாம். குறிஞ்சியை வருணித்து அதற்குத் தலைவன் முருகன் என்றுணர்த்துகிறார். வயலும், வயலைச் சார்ந்த இடங்களும் மருதநிலமாகும். இவர் பிரபந்தங்கள் பாட எடுத்துக் கொண்ட தலங்களும் பெரும்பாலானவை மருத

நிலத்தில் அமைந்துள்ளவை. மருதநில வருணனைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

"மென்பான் மருதத் தண்புனற் கமலை" (திருவாரூர் நான்மணிமாலை, பா. 324) என்ற வரிகளில் திருவாரூர் மருத நிலத்திலுள்ள தலமென்று கூறுவர். மருதமும், நெய்தலும் மென்பாலெனப்படும். சோழநாட்டில் பெரும்பாலானவை மருத நிலங்களே. காவிரியாறு அணைக்கட்டுகளின்றி தடையற்று ஓடிய தமிழ்நாட்டில் மருதநிலங்கள் சிறப்பாக இருந்தன. இன்று தடைகள் பல கண்டுள்ள காவிரியாறு செல்லும் நிலங்கள் மருத நிலத்துக்கான இலக்கணங்களை இழந்து வருகின்றன. மருத நிலங்கள் இன்று யூக்கலிப்டஸ், மரவள்ளிக்கிழங்கு, எண்ணெய்ப் பனை, தேக்கு என்று பலவகை பணத் தாவரங்கள் பயிரிடப்பட்டு வருகின்றன. இதன் பலன் மிகுதியான சுற்றுச்சூழல் சீர்கேடு என்பது கண்கூடு. அந்தந்த நிலத்துக்கான பயிர்கள்தான் பயிரிடப்பட வேண்டும் என்பது சுற்றுச்சூழல் விதி. இதனை மீறினால் மருதம் பாலையாகும் நாள் வெகுதூரத்தில் இல்லை யென்பது சுற்றுச்சூழல் வல்லுனர்கள் நமக்குத் தெரிவிக்கும் செய்தி.

"மருதக் கோமகன் குடிகொண்ட சோணாட"

(மு. கு. பி. பா. 445)

என்ற வரிகளால் சோழ நாட்டில் பெரும்பாலானவை மருத நிலங்களே என்றறியலாம்.

"மருதம்வீற்றிருந்த பெருவளஞ் சுரக்கும் தருமையம்பதி"

(பண். மு. பா. 569)

என்ற வரிகளில் தருமபுரமும் மருதநிலமே என்றறியலாம்.

"இறும்பூது பயக்கு நறும்பணை மருதக்
கன்னிமதி லுடுத்த காசிமா நகரம்" (காசிக் க. பா. 656)

என்ற வரிகளில் காசியும் மருத நிலத்தில் அமையப் பெற்றது என்பதை அறியலாம்.

"நெய்தலோடு தழீஇய மருதவேனித் தெய்வப்புலியூர்"

(சித. மும். பா. 454)

என்ற வரிகளில் தாழை மரங்களாகிய நெய்தல் நிலக் கருப் பொருளும், வயலிலுள்ள சங்கும், முத்துமாகிய மருதநிலக் கருப் பொருளும் மயங்கிய காட்சியமைந்த சிதம்பரத்தைக் குறிப்பிடு

கின்றார். இன்றைய சிதம்பரத்தின் நிலையை நாம் நன்கு அறிவோம் சுற்றுச்சூழல் மிகவும் சீர்கெட்டுள்ள நகரங்களுள் ஒன்று சிதம்பரம் என்று பெயரெடுத்துள்ளது. சிதம்பரம் சுற்றுச் சூழல் மேம்பாடு குறித்துச் சிந்திக்க, செயல்பட இன்று யாரும் இல்லை என்பது யாவரும் அறிந்ததே. சிதம்பரம் நகரின் வயல் களினூடே செல்லும் சாலைகளில் தாழை மரங்களையும் தில்லை மரங்களையும் காணலாம். சிதம்பரத்தின் திருக்கோவில் தல விருட்சம் தில்லையாகும். மருதமும், நெய்தலும் மயங்கிய காட்சி தில்லை மரங்களால் உறுதிப்படுத்தப்படுகின்றது. தாழையும், தில்லையும் சுற்றுச்சுழல் மாசுவைக் கட்டுப்படுத்தும் குணம் கொண்டவை. எனவே சிதம்பரம் சுற்றுச்சூழலில் நிறைய தாழை மற்றும் தில்லை மரங்கள் வளர்க்கப்பட வேண்டியது கட்டாயம். இயலவில்லையெனில் இருக்கும் மரங்களையாவது பாதுகாத்து பராமரிக்கலாம். சிதம்பரத்தை அடுத்துள்ள பிச்சாவரம் காடுகளில் இருந்து முல்லை மரங்கள் சிதம்பரத்தில் பரவியிருக்கலாம் என்பது ஆய்வாளர் ஊகமாகும்.

கண்ணிற் கண்ட காட்சிகளைக் கருத்தால் விரிவுபடுத்திக் கவியிலமைக்கும் புலவர்களுடைய செய்யுட்களின் இயற்கையோடு ஒத்த நிகழ்ச்சிகளையும், காட்சிகளையும் காணாவிடிலும், இவர் களுடைய கற்பனையின் அடிநிலையில் இயற்கைக் காட்சிகள் இருப்பதை உணரலாம். இயற்கைக் காட்சிகள் நிரம்பிய தலம் சுற்றுச்சூழல் மாசற்ற, நோயற்ற மனித வாழ்க்கைக்கு உகந்த தலம் என்பது அறிவியல் உண்மை.

மதுரையில் அடிகளார் கண்ட இயற்கைக் காட்சியை விவரிக்கையில்,

வார்க்குன் றிரண்டு சுமந்தொசியும்
மலர்க்கொம் பனையார் குழற்றுஞ்சும்
மழலைச் சுரும்பார் புகுந்துழக்க
மலர்த்தா துகுத்து வானதியைத்
தூர்க்கும் பொதும்பின் முயற்கலைமேல்
துள்ளிப் புகு முசுக்கலையின்
துழனிக் கொதுங்கி சுழனியினெற்
சூட்டுப் படப்பை மேய்ந்துகதிர்ப்
போர்க்குன் றேறுங் கருமுகிலை
வெள்வாய் மள்ளர் பிணையவிடும்

பொருகோட் டெருமைப் போத்தினொடும்
பூட்டி யடிக்க விடிக்குரல்விட்
டார்க்கும் பழனத் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்குடி கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ (மீ. பி. பா. 28)

என்ற வரிகளில் மதுரையில் உள்ள சோலைகள் வானுலகளவும் உயர்ந்து நிற்கின்றன. பெண்களின் கூந்தலிலே வாசஞ் செய்யும் வண்டுகள் அந்தச் சோலைகளிலே புகுந்து உழக்குவதனால் அங்குள்ள மலர்களின் தாதுகள், அதனால் ஆகாயகங்கை தூர்கின்றது. அச்சோலையிலுள்ள முசுக்கலை தன்னருகே தோன்றும் சந்திரனிடத்திலுள்ள முயலின்மேல் துள்ள அதன் ஆராவாரத்தைக் கண்டு அஞ்சிய மேகங்கள் மருத நிலத்திலே உள்ள நெற்போர்களின்மேல் தங்குகின்றன. அங்கே கள்ளைக் குடித்து மயங்கி நிற்கும் மள்ளர் அம்மேகங்களை எருமைக் கடா வென்று கருதி அவற்றைத் தம்பாலுள்ள எருமைக் கடாக்களோடு சேர்த்துப் பிணையலிட்டுக் கடாவடிக்கின்றனர்.

அன்றைய மதுரையின் சுற்றுச்சூழல் விவரிக்கப்பட்டுள்ளது. மரங்களடர்ந்த சோலைகள் ஒரு நகரத்தின் சுகாதாரத்துக்கு மிகவும் முக்கியம். உயர்ந்த மரங்கள் கோடையில் நகரத்தைக் குளிர்விக்கும் தன்மையுடையவை. இன்றைய மதுரையின் சுற்றுச் சூழல் மேம்பாட்டுக்கு மீண்டும் அடிகளாரது காலத்து மரங்கள் அடர்ந்த சோலைகளை உண்டாக்குவது மிகவும் அவசியம்.

மதுரை வயலிலே முளைத்த நெல் வானுலகத்திற் கதிர்விட அதனைக் காமதேனு தின்று கடைவாய் குதட்டுகின்றது (மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ் பா.50) எனக்குறிப்பிடுகின்றார். கமுகும், கரும்பும் சூரிய மண்டலத்தளவும் உயர்ந்து சூரியனது தேரின் இருபுறத்திலும் நின்று அதற்கு அலங்காரம் செய்கின்றன என்கிறார். (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் பா. 423). இதனால், உயர்ந்த பாக்கு மரங்களும், கரும்பும் மதுரையின்கண் விளைந்தமையும், தேருக்கு அவற்றைக் கட்டி அலங்கரிக்கும் மரபு இருந்ததும் தெளிவாகிறது. இன்று பாக்கு மர சாகுபடி மதுரை மாவட்டத்தில் இல்லையென்றே சொல்லிவிடலாம். ஆலைக்கரும்புகள்தான், இன்று அதிகம் சாகுபடி செய்கின்றனர். அச்சுவெல்லம் பயன்படுத்துவது வெகுவாகக் குறைந்து வருகிறது.

உயர்ந்த கரும்புகள் இன்று பொங்கலுக்காக மட்டும்தான் பயிரிடப்பட்டு வருகின்றன. இன்றைய வேளாண்மை மாற்றம் கண்டு வருகிறது. சுற்றுச்சூழலுக்கு இசைவான இயற்கை வேளாண்மையே இன்றைக்கு அனைவருக்கும் தேவை.

மதி நுட்பமும் நூலறிவும் ஒருங்கு வாய்ந்த இப்பெரியார் உலகியலறிவும் நன்கமைந்தவர். இவர் தம் கண்களால் உலகை நன்கறிந்து தாம் கண்டும் கேட்டும் அறிந்தவற்றைத் தம்முடைய கவிதைப் பிரவாகத்திலே கலந்து செலுத்துகின்றார். ''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்னும் மனோபாவமும் விரிந்த உலகியலறிவும் உடையவர் என்பதை உணரலாம். ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரையிலுள்ளவற்றின் இயல்புகளை இவர் தெரிந்து செய்யுள் செய்கின்றார்.

நிலத்தைக் கீண்டு பொற்சுளைகளோடு பழுத்து நிற்கும் குடக்கனிகளையுடைய வேர்ப்பலாவின் வருணனையைப் பல இடங்களில் காணலாம். பலாமரங்களில் தேனீக்கள் விரும்பி கூடு கட்டும். தேனீக்கள் அடர்ந்த சுற்றுச்சூழல் மாசற்றது அறிவியல் உண்மை. அடர்ந்த மரங்கள் உள்ள சோலைகளற்ற இன்றைய சுற்றுச்சூழலில் தேனீக்களையும், தேன்கூடுகளையும் காண்பது மிகவும் அரிது.

''தென்னந் தமிழி னுடன்பிறந்த
சிறுகா லரும்பத் தீயரும்பும்'' (மீ. பி. பா. 24)

என்ற வரிகளில், தென்றல் காற்று வீசும் காலத்து மாமரம் சிவந்த தளிர்கள் விடுவதைக் குறிப்பிடுகின்றார்.

''சுரும்பூண் வெறுத்த துதைமலர் வேங்கை''
(பண். மு. பா. 578)

என்ற வரிகளில் மதுரையின் வளம் பற்றிக் குறிப்பிடுகையில் வேங்கை மலரை வண்டு விரும்பாமையைத் தெரிவிக்கிறார். (வேங்கை – Pterocorpus marsupium குடும்பம் – FABACEAE). வேங்கை மரம் இந்தியாவெங்கும் காணப்படக் கூடியது. இம் மரத்தின் மலரில் வண்டு தேன் அருந்தாது என்று குறிப்பிடுகிறார் அடிகளார். இதற்குக் காரணம் என்ன என்பது ஆய்வுக்குரியது.

''இலையறம் பூத்த சுதைமலர்ப் புன்னையின்''
(பண். மு., பா. 578)

என்ற வரிகளில் புன்னை மரம் வெண்மையான மலர்களை இலையறப் பூத்திருத்தலைக் குறிப்பிடுகிறார். புன்னைப் பூக்கள் மருத்துவப் பயனுள்ளவை. மண்ணுக்கு வளம் சேர்ப்பவை. புன்னை பூக்கும் காலத்தில் கிடைக்கும் தேன் சர்க்கரை நோய் நீக்கும் வல்லமை பெற்றது. இம்மரம் அக்காலச் சுற்றுச்சூழலில் மிகுந்து இருந்தமை அடிகளாரின் பாடலால் தெரிகிறது.

''மகரயாழ் மழலைக்கு மரவங்க ணுண்டுகில்
வழங்கக் கொழுங்கோங்கு தூங்
காடகப் பொற்கிழி யவிழ்க்கு மதுரை'' (மீ.பி., பா. 73)

என்ற வரிகளில் வெண்கடம்ப மலர் துகிலைப்போல தோன்றுவதையும், கோங்குமலர் பொற்கிழியைப் போல தோன்றுவதையும் குறிப்பிடுகிறார்.

(வெண்கடம்பு - தாவர பெயர்: Anthocephalus cadamba
குடும்பம்: RUBIACEAE)

(கோங்கு - தாவர பெயர்: Hopea glabra
குடும்பம்: DIPTEROCARPACEAE)

வெண்கடம்ப மரம் இந்தியாவின் எல்லாப் பகுதியிலும் காணப்படுவது இது ஒரு புனிதமான மரம். தெற்கே மதுரையில் மீனாட்சி சுந்தரேஸ்வரர் கடம்பவனத்தில் கோயில் கொண்டு உள்ளார். வடக்கே மதுராவில் கடம்பவனத்தில் ஸ்ரீ கிருஷ்ணனும், இராதையும் ஆடிப்பாடித் திளைத்தனர்.

''அரைகுழைக்கும் பொழிற்காசி யணிநகருக்
கேடுதிரே லறன்மென் கூந்தல்'' (கா. க. பா. 672)

என்னும் வரிகளில் அரை என்னும் மரம் தளிர்க்கும் சோலையையுடைய காசி என்று குறிப்பிடுகிறார்.

(அரை - தாவர பெயர்: Bauhinia racemosa குடும்பம்: CAESALPINEACEAE) மந்தாரை இனத்தைச் சேர்ந்த அழகிய பூக்களை உண்டாக்கும் மரம்.

''நெட்டிலைக் கமுகு னெடுங்கயி றார்த்துக்
கட்டுபொன் னூசல் கன்னிய ராடவப்
பைங்குலைக் கமுகு பருக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு தோற்றம்''
(திரு. நான்., பா. 328)

என்ற பாடலில் பாக்கு மரங்களில் பெண்கள் ஊஞ்சலாடும் போது பாக்கு மரங்கள் முத்து உதிர்த்தலைக் குறிப்பிடுகிறார்.

"முடப்புறம் பொதித்த நெட்டிலைக் கைதை
உண்ணென வெண்சோ றேந்தித் தண்ணென"
(சித. மும். பா. 454)

என்ற வரிகளில் தாழம்பூக்கள் வெண்சோறு போன்ற ஒருவகைப் பொருளை உதிர்த்தலைக் குறிப்பிடுகின்றார்.

கொன்றை மரங்கள் கார் காலத்தில் பூக்கும் (சிதம்பரச் செய்யுட் கோவை பா. 530), கொன்றைத் தாது பொன் போலிருக்கும் (திருவாரூர் நான்மணிமாலை பா. 326), முல்லை கார்காலத்தில் மலரும் (மதுரைக் கலம்பகம் பா. 159) என்ற விபரங்களைத் தெரிவிக்கின்றார்.

பறவைகளின் இயல்புகளைக் குறிப்பிடுகையில் அன்னம் தொடுதோலடியையும், செஞ்குட்டையு முடையது (மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ் – 24) என்றும், பாலிலிருந்து நீரைப் பிரிக்கும் ஆற்றலுடையது (காசிக் கலம்பகம்-691) என்றும், குயில் கார்மேகத்தைக் கண்டு வருந்துவது (சிதம்பரச் செய்யுட் கோவை – 545) என்றும், மாமரத்தை விரும்புவது (சிதம்பரச் செய்யுட்கோவை – 522) என்றும், சகோரம் நிலவை அருந்துவது (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் – 373) என்றும், மயில் மேகத்தைக் கண்டு ஆடுவது (சிதம்பரச் செய்யுட் கோவை-522) கொக்கு இரை வருதலைக் கண்டு கருதி கபடமாக உறங்குவது (மதுரைக் கலம்பகம் – 191) என்றும் விவரிக்கின்றார். அடிகளாரின் விவரிப்பில் குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலங் களிலுள்ள சுற்றுச்சூழலில் காணப்படும் பறவை இனங்கள் குறிப்பிடப்படுகின்றன. பறவை இனங்களுக்கு மாசற்ற சுற்றுச் சூழல் முக்கியமானது என்பது சூழலியல் விதி.

விலங்கியலியல்புகளையும் அடிகளார் தெளிவாகக் குறிப் பிட்டுள்ளார். எருமை கயவாயையும், செங்கண்ணையும் உடையது (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – 24) அதன் கொம்பு இரும்பு போன்றது (திருவாரூர் நான்மணிமாலை – 324 ) நெற்கதிரைக் கறித்துக் குதட்டுவது (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்–355) யானை புழுதியாட்டயரும் இயல்பினது (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – 2) மதக் களிப்பால் பாகனை மீறுதல் (பண்டார

மும்மணிக்கோவை – 593) காட்டுப்பசு நக்கி உயிர் வாங்குவது (நீதிநெறி விளக்கம்–280) குரங்கு குழிந்த கண்களையுடையது (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–100) ஒருவகைக் குரங்கு இரு வேறுருவையும் கரு விரலையும் உடையது, பலாப் பழத்தை யுண்பது (திருவாரூர் நான்மணிமாலை – 312) நெடுந்தாளை யுடையது (திருவாரூர் நான்மணிமாலை – 348) மழைக் காலத்தில் கால் தழுவி ஒடுங்குவது (சிதம்பர செய்யுட் கோவை– 525) என்ற விவரங்களையும் தருகின்றார்.

குமரகுருபர முனிவர் காசியில் தங்கியிருந்த மடத்திற்குக் குமாரசாமி மடம் என்று பெயர். அங்கே இவர் சிவயோகம் செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். கேதாரகட்டத்தில் ஸ்ரீ விசுவலிங்கப் பெருமானை வெளிப்படுத்தி அங்கே கோயில் நிருமிக்கச் செய்து நித்திய நைமித்திபங்கள் குறைவற நடக்கும் படி செய்தார்.

குறிஞ்சிக்கு மரங்கள் வேங்கையும், கோங்கும் என்றும்; முல்லைக்குக் கொன்றையும், குருந்தும், புதலும் என்றும்; பாலைக்குப் பாலையும், இருப்பையும் கள்ளியும், சூரையும் என்றும்; மருதத்துக்கு மருதும், காஞ்சியும் என்றும்; நெய்தலுக்குப் புன்னையும், கைதையும் என்றும் அறிவோம்.

கோவில்களில் தலமரங்கள் இருப்பது இயற்கைக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பை வெளிப்படுத்துகிறது. இயற் கையில் இறைவனையும், இறைவனின் இயற்கையையும் காண்பது இந்திய மரபு. இயற்கையே இறைவன், இறைவனே இயற்கை என்ற வகையில் இந்திய மக்களின் வாழ்க்கை அமைகிறது.

ஒவ்வொரு திருத்தலத்துக்கும் ஒவ்வொரு திரு மரம் தலமர மாக விளங்குகின்றது. சில ஆலயங்களில் சிவபிரானுக்குப் பூசனை மூலிகையாவது வில்வம். தமிழ் நாட்டில் முப்பதுக்கு மேற்பட்ட கோவில்களில் வில்வம் தலமரமாக அமைந்துள்ளது. தலமரமாக இல்லாத கோயில்களிலும் வளர்க்கப்பட்டு வருகின்றது. இம்மரம் சுற்றுச்சூழல் மேம்பாட்டுக்கும், உடல் நலனுக்கும் உகந்த ஒரு கற்பக மூலிகை.

கயிலை நாதன் தலவிருட்சம் மகாவில்வம். கயிலை நாதனுக்கு உகந்த பத்திரங்களில் முதல் இடத்தைப் பெறுவது மகாவில்வம். மகாவில்வம் 5, 7, 10, 11, 14, 15, 21 தலங்கள்

உடையது. மகாவில்வ தரிசனம் 1008 சிவாலய தரிசனங்களுக்கு இணையானது மகாவில்வம் அனைத்து நோய்களையும் நீக்கும் சர்வரோக நிவாரணி. மகாவில்வத்தைப் பார்த்தாலும், தொட்டாலும் உடலுக்கும், உள்ளத்திற்கும் அதீத சக்தி உண்டாகிறது என மகாரிஷிகளும், முனிவர்களும், ஆச்சாரியார்களும் அனுபவ ரீதியாகக் கூறியுள்ளனர்.

இத்தகு சிறப்புடைய மகாவில்வத்தை இந்தியா முழுவதும் எல்லா ஆலயங்களிலும், பாதுகாப்பான பொது இடங்களிலும் நட்டு மரமாக்கிச் சுற்றுச்சூழல் மேம்பாட்டிற்கு உதவ வேண்டியது நமது கடமை. இதனையுணர்ந்து, தற்போதைய ''கயிலை மா முனிவர்'' திருவளர் திரு. காசிவாசி முத்துக்குமார சுவாமித்தம்பிரான், அவர்கள் அருளாசி வழங்கி, மகாவில்வத்தை நாடுதோறும் நட்டு மரமாக்கிச் சுற்றுச்சூழல் மேம்பாட்டுப் பணியாற்றிட அன்பர்கள் பலரைப் பணித்துள்ளார்கள். தேவையானவர்களுக்கு இலவசமாக மகாவில்வக் கன்றுகளை வழங்கி வருகின்றார்கள்.

(வில்வத்தின் தாவரவியல் பெயர்: Aegle marmelos.
குடும்பம்: RUTACEAE
மகாவில்வத்தின் தாவரவியல் பெயர்: Naringi crenulata.
குடும்பம்: RUTACEAE

**முடிவுரை**

ஸ்ரீ குமரகுருபர அடிகளாரின் இலக்கிய வரிகளில் காணப்படும் நிலங்களின் கருப்பொருட்கள் இன்றைய காலகட்டத்தில் மாறியுள்ளது; சுற்றுச்சூழலின் சீரழிவை எடுத்துகாட்டுகிறது. ஐவகை நிலங்கள் இலக்கணம் மாறியுள்ளது தெளிவு. இந்நிலையில் காசிவாசி சுவாமிகள் திருத்தல மரமாகிய மகாவில்வம் போன்ற மரங்களை இனங்கண்டு சுற்றுச்சூழலில் நட்டு மரமாக்கி சுற்றுச் சூழலின் மேம்பாட்டுக்கு உதவி வருவது போற்றுவதற்குரியது.

# வண்ணச்சரபர் பார்வையில் குமரகுருபரர்

ஜெ. பிருந்தாஸ்ரீ, தஞ்சாவூர்

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தருடன் ஒருங்குவைத்துப் போற்றத்தக்க பெரியார் குமரகுருபர அடிகள். ஊமையராய்ப் பிறந்த அடிகள் ஐந்தாம் வயதில் திருச்செந்தூர்ப் பெருமான் அருளால் ஞானப் பனுவல்கள் பல பாடத் தொடங்கினார். அவர்தம் வரலாறு பற்றிய குறிப்புகளை மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், ரா. சுப்பிரமணியக் கவிராயர், பாரதிதாசன், வே. செ. சொக்கலிங்கம், சிதம்பரம் ராமலிங்க சுவாமிகள், க. சோமசுந்தர தேசிகர், கா. சு. பிள்ளை, மு அருணாசலம் என அறிஞர் பலர் குறித்துள்ளனர். இவர்களுள் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தண்டபாணி சுவாமிகள், சுப்பிரமணிய கவிராயர், வே. செ. சொக்கலிங்கம் ஆகியோர் புராண நூலாகச் செய்யுள் வடிவில் பாடினர். பிறர் உரை நடையாய் முன்னோர் எழுதியதை அடியொற்றியதாய்ப் படைத்துள்ளனர். பாரதிதாசன் புராண வடிவில் அமைக்காமல் எதிர் பாராத முத்தம் என்ற பனுவலின் பகுதியாய் அமைத்துள்ளார். மு. அருணாசலம் சிறந்த ஆய்வு நூலாகக் குமரகுருபரர் வரலாற்றைப் படைத்துள்ளார். இவற்றுள் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணத்தில் அமைந்த குமரகுருபரர் சருக்கத்தின் துணைகொண்டு இக்கட்டுரை அமைகிறது.

**வண்ணச்சரபம் – அறிமுகம்**

சங்கரலிங்கம் என்ற இயற்பெயருடைய சுவாமிகள் 19-ஆம் நூற்றாண்டினர். நெல்லைப் பதியில் செந்தில் நாயகம், பேச்சி முத்தம்மை ஆகியோர்க்குத் திருமகவாய்ப் பிறந்தார். வண்ண யாப்பில் சிறந்தவராதலால் வண்ணச்சரபம் என்னும் தண்டு கொண்டிருத்தலால் தண்டபாணி சுவாமிகள் என்னும் முருகநெறி பின்பற்றியதால் முருகதாசர் என்றும் திருப்புகழ் பாடியதால்

திருப்புகழ்ச் சாமி என்றும் போற்றப்பட்டார். இவர் குருபர தத்துவம், அறுவகை இலக்கணம், தமிழலங்காரம் முதலான பன்னூல் யாத்த சிறப்பினர். இவர் பாடிய குமரகுருபரர் சருக்கத்தினில் காணப்படும் சிறப்புக்களை இனிக் காணலாம்.

**தந்தை செய் விரதம்**

தன் மகன் ஐந்து வயதாகியும் பேசாமை கண்ட சண்முகசிகாமணிக் கவிராயர் திருச்செந்தூர் முருகனை நினைத்து ஒரு நோன்பு மேற்கொண்டார். தன் மகன் ஒரு மண்டலத்தில் பேசும் சக்தி பெறாவிடில் கடலில் வீழ்ந்து உயிர் போக்குதல் வேண்டும் என்றுளம் கொண்டார். உப்பற்ற வெற்றன்னம் உண்டும் உறங்காமலும் விரதம் மேற்கொண்டார். இச்செய்திப் பொதுப்பட தந்தையார் ஒரு மண்டலம் விரதம் மேற்கொண்டார் என்று பிறர் நூல்களில் சுட்டப் பெறுகிறது. மகாவித்வான் பிள்ளையவர்கள் திருச்செந்தூர் சென்று தினமும் வழிப் பட்டதாய்க் கூறுகிறாரேயன்றி விரதம் பற்றிக் கூறவில்லை. வண்ணச்சரபம் மட்டும் விரிவாய் விரத முறைகளைக் கூறுகிறார்.

**அருச்சகன் மீது ஆவேசம்**

ஒரு மண்டலம் நிறைவுறும் தறுவாயில் சண்முக விலாச மண்டபத்தில் முருகன் குமரகுருபரரை எழுப்பி நீ யார் என அவர் 'அடியேன்' என ஊனம் நீங்கிற்று. முருகன் சிவநெறி பரப்ப ஆணையிட்டார் என பிள்ளையவர்கள் குறிப்பிடுகிறார். சொக்கலிங்கனார், முருகன் குழந்தையைக் 'குமரகுருபரா' என அழைத்து நாவில் சடாக்கர மந்திரம் பொறித்ததாயும் குமரகுருபரர் பெற்றோரை எழுப்பி நிகழ்ந்தது கூறியதாயும் குறிப்பிடுகின்றார்.

ஆனால் தண்டபாணி சுவாமிகள் இவ்விதம் அமைக்கவில்லை. வணங்கி வழிபடும் நாளில் அருச்சகர் வடிவில் முருகன் ஆவேசம் கொண்டு வேல் கையிலெடுத்து; குழந்தைக்குக் கதம்பமாலை அணிவித்து கமண்டலநீர் தெளித்து பழவினைகள் ஒழித்துப் பூ எனப் புகன்றார். உடன் அக்குழந்தை அம்மொழி முதலாகப் பஃறொடை வெண்பா பாடிற்று என்று தண்டபாணி சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

வண்ணச்சரபம் பிறவி ஊமையாயிருந்து இறையருளால் குமரகுருபரர் பேசிய செய்தியைத் தமிழலங்காரத்தில்,

ஆமைக்கு குளஉறுப் பென்னப் பொறிகள் அடங்கநின்று
மாமைப் புயல்வண்ண மாலென்ன வார்புவி வாழ்வுகண்டு
தீமைக்குச் சத்துரு ஆவார் பராவிய செந்திலில் ஓர்
ஊமைக் குழந்தை அருளால் பயின்றிட்டது ஒண்தமிழே
(பா. 64)

என்று குறிக்கிறார். இது ஊமையைப் பேச வைக்கும் தெய்வத் தன்மை உடையது. தமிழ் எனத் தமிழைச் சிறப்பிக்க குமரகுருபரர் அருள்பெற்ற செய்தி கையாளப்பட்டுள்ளது. இது போன்றே புலமையிலக்கணத்திலும்,

மூகைஆய முருந்திள நகைச்சேய்
பாகை நேர்தமிழ் படித்ததும் உளதே (பா. 783)

என்ற நூற்பாவில் தெய்வப்புலவராய்க் குமரகுருபரர் சுட்டப் பெறுகிறார்.

**குருவை நாடல்**

குருவேண்டிக் குமரகுருபரர் வேண்ட எவரிடம் வாக்குத் தடைபடுமோ அவரே குரு என அசரீரி தோன்றிற்று. அதனால் குமரகுருபரர் வடதிசை நோக்கிச் சென்று மதுரை ஆருர் எனத் தலம் பல கடந்து தருமபுரத்தில் மாசிலாமணி தேசிகரைக் காண்கிறார். அவரிடம் பெரியபுராணத்தின் பாடல் ஒன்று பொருள் கூறுகையில் குமரகுருபரர்க்கு வாக்குத் தடைப்பட்டது என்பது மரபாக அமைகிறது. தேசிகர் கட்டளைப்படி தில்லைச் சென்று மீண்டு, துறவறம் பூண்கிறார்.

ஆனால் இச்செய்தியை வண்ணச்சரபம் முழுவதும் வேறு பட்டுரைக்கக் காணலாம். குருவை நாடித் தருமபுரம் வருகிறார். குரு மாசிலாமணி தேசிகர் பரிகலசேடம் (குரு உண்ட மிச்சில்) தொன்னையில் வைத்து இருமின் எனக் கூற அடிகள் அவரையே செந்திலம்பதிக் கடவுளாய்க் கண்டு வழிபடுகிறார். தேசிகர் துறவும் பரிகலமும் அளித்து குமரகுருபரரைச் சீடராய் ஏற்கிறார். இதுமட்டுமின்றி வாக்குத் தடைபடும் செய்தியை தண்டபாணி சுவாமிகள் ஏற்கவில்லை. இறை அருள் பெற்றவர்க்கு வாக்குத் தடைபடும் என்ற கருத்தை ஏற்க இயலாது சுவாமிகள்,

'ஞானகுரு பரன்மகிமை நன்குணர மாட்டாதார்
போனவனை திருத்தொண்டர் புராணத்தின்
கவிஒன்றால்
ஈனமுறச் செயித்தாண்டான் எனச்சொல்வார்' (16)

என்று பிறர் கூற்றாகக் குறிப்பிடுகிறார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் அறுவகை இலக்கணத்தில்

நூலின் துணையினும் நூறுபங்கு அதிகம்
தெய்வத் துணையாம் செழுந்தமிழ்க் கவிக்கே (649)

என்கிறார். புலமையான் பாடுவதினும் தெய்வ அருளான் பாடுதல் சிறப்புப் பெற்றது என்பது ஆசிரியர் கருத்தாக அமைகிறது. எனவேதான் குமரகுருபரர் வாக்குத் தடைபட வாதில் தோற்றார் என்று கூறவில்லை. துறவு மேற்கொண்ட பின்னே பல தலஞ்சென்று வழிபட்டதாயும் வண்ணச்சரபம் கூறுகிறார்.

**மன்னன் கனவு**

காசி மன்னன் (தாராசுகோ) அடிகளை நோக்கி தெய்வீகச் செயல் நிகழ்த்திட வேண்டும் என சிங்கத்தின் மீதேறியும் பழுக்கக் காய்ச்சிய இரும்பு கையிலேந்தியும் ஊனுணவை மரக் கறியுணவாய் மாற்றியும் உபயக்கருடன் காட்டியும் பல செயல்கள் புரிந்ததாய் பாவலர் பிறர் கூறுகின்றனர்.

வண்ணச்சரபம் கூற்றிலும் தெய்வீகச் செயல் நிகழ்த்திட மன்னர் ஆணையிட்டதாகக் காணப்படுகிறது. இம்மன்னனை வண்ணச்சரபம் வீரசேகரன் என்று குறிப்பிடுகிறார்.

குமரகுருபரரைத் தன்னோடு காசி மன்னன் உண்ணச் சொல்கிறான். அப்போது அடிகள் 'நீவிர் உண்பது என்ன?' என வினவ அரசன் கூறிய மொழி கேட்டு பன்றியை ஏனுண்ண வில்லை என்கிறார். அதையுண்ண எம் குரு செப்பவில்லை என்று அரசன் கூற மாமிசம் உண்ண சிவன் எனக்குச் செப்பவில்லை என்று ஊனுணவை மறுத்துவிடுவதாய் வண்ணச்சரபம் அமைக் கிறார். தெய்வச் செயல் நிகழ்த்தினால் மட்டுமே அடிகள் தவவலிமையை உணரவேண்டும் என்ற கருத்தில் அருஞ்செயல் நிகழ்த்திட ஆணையிடுகிறார். அதற்குக் குமரகுருபரர் 'இன்றிரவு உன் தெய்வம் எனை அறியச் செய்யும்' என்றுகூறிச் செல்கிறார். இறைவன் மன்னன் நிதம் தொழும் குருவாகி அவன் கனவில்

'வந்தவன் விருப்பத்தை நிறைவேற்றுக' என்றான். கனவில் தன் குருவைக் கண்ட மன்னன் விடியுமுன் குமரகுருபரரைக் கண்டடி பணிந்து 'தான் மக்கதேசிகன் (முகமது நபி) மொழியால் அடிகள் பெருமை உணர்ந்ததாயும் அவர் கருதியது நிறைவேற்றுவதாயும் கூறுகிறான்.

இவ்வாறு ஊனுண்ணும் மன்னன் அளித்த பொருள் கொண்டு குமரகுருபரர் சைவம் நாட்டியமை பிறர் பழித்திடக்கூடாது என்ற கருத்தில்,

ஒட்ட கம்பசு மேடமா
தியபல உயிர்வதைத் தூன்உண்ணும்
துட்டர் கைப்பொருட் குவைகொடு
புலவரும் தூயமா தவத்தோரும்
இட்ட மாம்தரு மங்கள்மிக்
கியற்றினன் எறிகடல் உவர்நீரால்
வட்ட மாநிலம் உய்யநன்
நீர்பெயும் மழைமுகில் உறழ்ந்தானே (36)

என்று நயம்பட உரைக்கிறார்.

### படிக்காசுப் புலவர் சரித்திரம்

குமரகுருபர அடிகளின் தொண்டராய் படிக்காசுப் புலவர், புலவர் புராணத்தில் சுட்டப்பெறுகிறார். கலந்தையில் பிறந்த இவர் வேளாளர் (அ) செங்குந்த மரபினராய் இருத்தல் வேண்டும். இரந்து பெற்றான் எனப் பழிப்பவர் சிலருண்டு. சந்தத்துடன் பாடும் புலமைமிகு பாவலனைப் பழிகூற அவருக்கு விருப்பமில்லை. எனவே சிவனார் அவர் பாடல் விரும்பி படிக்காசு அளிக்கப்பட்ட பெருமையர் என்பார். வைத்தியநாதக் கலம்பகம் பாடியதாகக் குறிப்பிடும் வண்ணச்சரபம் அவர்தம் முழுமை வரலாறு அறிய இயலவில்லை எனக் குறிப்பிடுகிறார். இச்செய்தி பிறர் குறிப்பிடும் சீடர் மரபில் காணப்பெறவில்லை.

பாவலர் பிறரின் நூல்களில் காணப்படும் செய்திகளில் 'குருமுன் வாக்கு தடைபடும்' என்றுரைத்த அசரீரி, குருநாதர் காசிக்குச் சென்று மீளவரின் சீடராக ஏற்பேன் எனல், மீனாட்சியம்மை அருச்சகர் மகளாய் வந்தக் காலத்து மன்னனின் முத்து மாலையை அடிகட்கு அணிவித்தது. பிள்ளைப் பெருமாளய்யங்கார் சந்திப்பு, திருச்சி முத்து வீரப்ப நாயக்கன்

சந்திப்பு, பூக்களை ஊனாகக் காட்டியது, சுடுகின்ற இரும்பைக் கையில் எடுத்தது, உபயக் கருடன் காட்டியது, பாடிய நூல்கள் பற்றிய முறையான வரலாறு ஆகியன வண்ணச்சரபத்தின் நூலில் குறிக்கப்பெறவில்லை.

குமரகுருபரரின் வாழ்வும் வாக்கும் பற்றி ஆய்ந்த மு. அருணாசலம் பாவலர் கூறும் நிகழ்ச்சிகள் யாவும் உண்மை யாகா. புனைந்துரைக்கப்பெற்ற செவிவழிக் கதைகள் என்பார். அதன்படி வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் சருக்கத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'தண்டபாணி சுவாமி களுக்குக் குமரகுருபரர் வரலாற்றுச் செய்திகள் முறையில் எட்டவில்லை ...... அவர் வேண்டுமென்றே சரித்திரத்தை மாற்றவில்லை. முன்பின் திருத்தமாக அறியாமையால் தெரிந்த அளவு கோத்து வைத்தார் என்கிறார் (குமரகுருபரர், ப. 181).

### குமரகுருபரர்பால் வண்ணச்சரபம் கொண்ட மதிப்பு

புலவர்புராண குமரகுருபரர் சருக்கம் நயமிக்கதாய் எளிமை யாய்த் திகழ்கிறது. இச்சருக்கத்துள் குமரகுருபரரை தெய்வப் புலவராய்க் கருதுகிறார். இறைஅருள் பெற்றவர் எஞ்ஞான்றும் தோற்கமாட்டார் எனும் கருத்தின்படி நிகழ்ச்சிகள் அமைகின்றன. சங்ககால உருத்திரசன்மர் போல் சிறப்பு வாய்ந்தவர். இசுலாமியர் ஆளுகையிலும் தமிழும் சைவமும் நாட்டிய பெருமகனார். அயலரசரிடமிருந்து பொருள் பெற்று தொண்டு புரிந்தார். இறைவன் பாடவேண்டிப் பாடிய சிறப்புடையார் எனப் பல்நிலைகளில் குமரகுருபரர் சிறப்புக்களை கூறுவதன் மூலம் அவர்பால் கொண்ட தன் மதிப்பை வெளிப்படுத்துகிறார்.

# அடிகளின் சித்த மருத்துவக் கருத்துக்கள்

எஸ். பிரேமா அரங்கராசன், தஞ்சை.

**முன்னுரை**

தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு சைவ சமயப் பெரியார்கள் பெரும் தொண்டாற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது. சைவசமயப் பெரும் புலவர்களில் 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த "குமர குருபர சுவாமிகள்" தலைமையானவராவார். பிற சமயக் குறுக்கீடுகளும், அரசியல் மாற்றங்களும் நிலவிய அக்காலத்தே, இவர் சைவத்திற்கும், தமிழுக்கும் அரும்பணியாற்றியுள்ளார். இவர்தம் பாடல்களில் சித்த மருத்துவக் கருத்துகள் விரவிக் காணப்படுகின்றன. அவற்றை இக்கட்டுரையில் காணலாம்.

**சித்தர்கள்**

உள்பொருளைக் "கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள் என்றும் தேவாரம் கூறுகின்றது" சித்தர்கள் சித்த மருத்துவ நூல்கள் இயற்றியவர்கள். அரிய ஆற்றல்களை தம்முடைய அறிவின் வழி அடைந்தவர்கள் எனலாம். இத்தகைய சித்துகள் எண்பது என்றும், அறுபத்து நான்கு என்றும் சித்தர்களின் நூல்களில் காணப்படுகின்றன. குமரகுருபர சுவாமிகளையும் ஓர் சித்தர் எனலாம். ஊமையாக இருந்து பாடல்களைப் பாடியதும், சிங்கத்தின் மேலேறித் தில்லிப் பேரரசரைக் காணச் சென்றதும் அவர் தம் ஆற்றலைப் புலப்படுத்தும் சித்தர்கள் பற்றிய கருத்துகளைத் தமது பாடல்களில் புலப்படுத்துகின்றார்.

தன்னுடைய ஆசிரியரான மாசிலாமணி தேசிகரவர்களைச் சித்தர்களின் தலைவரென்றும் புகழ்கின்றார். "சின்னம் படைத்த முனி, மாசிலாமணி சித்தரியாம்" மாசிலாமணி அருள்பெற்ற சித்தருக்கு உணவிட்டோர், உலகம் முழுவதும் பெறுவார்கள் என்பனவற்றால் மாசிலாமணி தேசிகரின் ஆற்றல் வெளிப் படுத்தப்படுகிறது.

**சித்தர்களின் தத்துவம்**

சித்த மருத்துவம் '96 வகையான தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது. பசு, பதி, பாசம் என்ற மூன்றையும் சித்தர்கள் குறிப்பிடுகின்றார்கள். உயிர், இறைவனை அடைய முடியாமல் தடுப்பது பாசமாகும். மும்மலங்களான ஆணவம், கன்மம், மாயை என்பன பாசத்தின் கிளைகளாகும். மும்மலங்களை நீக்கி, இறையருள் பெறலாம். முக்குற்றங்களான வளி, அழல், ஐயம் என்ற மூன்றால் உடல் இயங்கும். இவை மிகுந்தாலும் குறைந்தாலும் நோய்கள் வரக்கூடும். ''வளியூண் புளிப்பும் பித்தூண் கைப்பும், ஐயூன் மதுரமும் அல்லன பிறவும்'' இது குறித்து ''வைத்திய சார சங்கிரகம்'' கூறுவதாவது. வாதம் அதிகரிக்கப் புளிப்புச்சுவையும், பித்தம் அதிகரிக்கக் கசப்புச் சுவையும், கபம் அதிகரிக்க இனிப்பு சுவையும் நாவில் ஏற்படும் என்பதாகும். நுணுக்கமான இத்தத்துவத்தை குமரகுருபரர் அறிந்துள்ளமை அவரின் மருத்துவ நூலறிவைக் காட்டுகின்றது. ஏழுவகை தோற்றம், நான்குவகை பிறப்பு பற்றியும் இவர் எடுத்துரைக்கின்றார். ''முட்டையில், கருவினில், வித்தினில், வெயர்ப்பில்''– என்பதனால் முட்டை, யோனி, விதை, வியர்வை என்ற நான்கு வழியில் உயிர்கள் தோன்றுவதாக, சித்தர் நூல்கள் கூறுகின்றன. இதில் வியர்வையிலிருந்து உயிர்கள் தோன்றுவதாக உள்ளது. அறிவியல் அடிப்படையில் முரண்பாடாக உள்ளது. ''பொடுகிலிருந்து ஈர்'' ஏற்பட்டு அதிலிருந்து வியர்வையில் பேன் வளரும், வியர்வை, உயிரியானது வளர்வதற்கான சூழலை ஏற்படுத்தும். இதுபோன்றே ஏழு பிறப்பையும் ''நிற்பன, நெளிவன, தத்துவன, தவழ்வன, நடப்பன, கிடப்பன, பறப்பன'' என்றபடி வகைப் படுத்துகின்றார். ஐந்து பொறிகளை உடைய மீனாக உடலை ஒப்பிடுகின்றார். கூற்றுவன் மூன்று முட்களைக் கொண்ட தூண்டிலால் உயிரைப் பிடிக்கின்றான். மூன்று முட்களாக வளி, அழல், ஐயம் என்பன சுட்டப்படுகின்றன.

''புலத்தலை உயிர்மீன் அலைத்தனன் பீடிப்ப
ஐவளிபித்தென அமைத்து, வைத்திருந்த'' (திருவா. நான்.)

என்கிறார்.

**நோயும், பிணியும்**

நோய்களைப் பற்றியும், பிணிகள் குறித்தும் சுவாமிகள் விளக்குகின்றார்கள்.

"ஐவளி பித்து மெய் தரும் வித்தில்
கடலில் திரையென உடலில் திரையொடு"
(சிதம்.- செ. கோ.)

கபம், வாதம், பித்தம் இவை காரணமாக நோய்கள் பிறப்பதால் இவற்றை வித்தென்றால், சித்த மருத்துவத்தில் நோய்களின் தொகை 4448 என்று வரையறுக்கப்பட்டுள்ளது. இந்நோய்களின் அடிப்படை, வளி, அழல், ஐயம் என்ற மூன்றுமாகும். கடலில் தோன்றும் அலைகள் போலத் தோலானது சுருங்கி, முதுமைக் காலத்திலிருக்கும். இந்நிலையில் நோய்கள் தாக்கும். "கலியா நின்றன நலிவு செய் நோய்கள்" மிகவும் துன்பத்தை ஏற்படுத்தும். மேலும் "கருமன்னும் பெரும்பிணி" "பிணியென்று பெயராமே" "பல்கோடி விக்கினமும் பல்பிணியும்" (க.க.- 112) என்று உடல் பிணியை வகைப்படுத்துகின்றார். புழு நெளிந்து அழுகிய புண்ணின் நாற்றம் வீசும் நிலையில் அச்சமடைய மாட்டார்கள் நன்மக்கள். ஏனைய கீழ்மக்கள் மிகு அச்ச மடைவார்கள் இறப்பை எண்ணி. கீழ்மக்களின் நிலை பற்றிப் பேச வந்த சுவாமிகள் அழும் புண்ணையுடைய நன்மக்களின் வலிமையான உள்ளத்தை எடுத்துரைக்கின்றார்.

**மருந்து பற்றிய செய்திகள்**

"மருந்து" என்ற சொல் பல இடங்களில் வருகின்றது. "மருந்துண் வேட்கையன்" என்று சிதம்பர மும்மணிக் கோவையிலும் (பா. 75) "அம்மைக்கும் அருமருந்தாகி நின்ற" (பா. 364) "அருமருந்தாகி நின்ற ஆதிபிரான்" (பா. 364) என்று முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழிலும் வருதல் காண்க. புள்ளிருக்கு வேளூரின் திருக்கோவிலில் தரப்படும் மண்ணுருண்டையும், யாக குண்ட வெண்ணீறும் மருந்தாகும். "சித்தாமிர்தக் குளத்தின்" சிறுதுளி நீரும் மேல்படின் நோய்களைப் போக்கும் என்பனவற்றால் இம்மரபானது இன்றும் பின்பற்றி வருதலைக் காணலாம். திருக்கோவில்களில் மருத்துவ மனைகள் அமைந்திருந்தும், கோவில் பூசாரிகளே மருத்துவர் களாகப் பணியாற்றி வருவதும் இன்றும் நடைமுறையில் உள்ளன. எனவே திருக்கோவில்களில் மருந்தாக மண்ணும், திருநீறும் தரப்படுவதில் வியப்பில்லை. கோவில் திருச்சுற்றுகளில் தோட்டம் அமைப்பதும், அவற்றில் மருந்துச் செடிகளை வளர்ப்பதும் தொன்மையான வழக்கம் ஆகும். சில

ஆண்டுகளுக்கு முன்னர் வரை புள்ளிருக்குவேளூரில் உள்ள திருக்கோவிலில் சித்த மருத்துவமனை நடைபெற்று வந்துள்ளது. திருக்கோவில்கள் யாவும் மக்களுக்கும் தொண்டாற்றி உள்ளன என்பதை இப்பாடல் விரித்துரைக்கும் பண்டார மும்மணிக் கோவையில் ''மீளாமணி, மந்திர, மருந்தால் சென்ம வெல்விட நோய்'' என்ற வரியானது வந்துள்ளது. சித்த மருத்துவமானது மணி, மந்திரம், மருந்து என்ற மூன்று பிரிவுகளாக உள்ளது. மந்திரம் என்பது மறைபொருள். இதனால் மனநோய்களை நீக்குவார்கள். மணி என்பது நவமணிகளால் ஆனது. மணி என்பது இரசத்தால் கட்டப்படும் பொருள். இம்மணிகளை அணிந்து, எண்வகை ஆற்றல்களை அடைவார்கள். சித்தர்கள் இம்மணிகளை மருத்துவத்திற்கும் பயன்படுத்தினார்கள். மருந்து, மக்களுக்கானது. அது இன்றும் பயன்படும். ஆனால் இவற்றால் பழவினைகளைத் தீர்க்க இயலாது. இறைவனின் திருவருள் ஒன்றே, பழவினையைப் போக்கும். பழவினையானது கொடுமையான நஞ்சுக்கு ஒப்பானது. சித்த மருத்துவத்தின் அடிப்படையை, அடிகளார் அறிந்துள்ளமை இவ்வரிகளால் விளங்கும்.

அழியும் உயிர் என அறிந்தபோதும், மருத்துவர்கள் இறுதி வரை மருந்துகளை அளித்து, உயிர்காக்க எண்ணுவதை அடிகள் அழகாகக் குறிப்பிடுகின்றார். ''இறும் உயிர்க்கும் ஆயுள் மருந்தொழுக்க தீதன்றா அல்லனபோல்'' (நீதிநெறி. 254) இக்கொள்கை இன்றளவும் மருத்துவர்களால் பின்பற்றப் படுகிறது. இன்பத்தைத் தரும் நல்மருந்தாக, முருகப்பெருமான் உள்ளார். இவர் மறுமைக்கும் இன்பம் அளிப்பார். எனவே மெய்ஞான மருந்தாவார். புள்ளிருக்குவேளூர் பெருமான், 'இளைப்பு' நோயையும், கருப்பையில் தங்குவதாகிய நெடுங்கால மாக வரும் 'பிறவி நோயையும்', துன்பத்தைத் தரும் நோய் களையும், 'முயலக' நோயையும் நீக்குவான் என்கிறார். இங்கு 'முயற்கறை' என்பதற்கு, உரையில் முயலாகிய களங்கம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அது பொருத்தமின்றி உள்ளது. 'முயர்கறை' முயலக நோய் - இது ஐவகையான வலிப்பு நோய் களில் ஒன்று. இவ்வாறு பொருள் கொள்ளின் பொருத்தமாக இருக்கும் ''மதுரைக் கலம்பகத்தில்'' ''காரம்'' வைத்தல் என்பது பற்றிய செய்தி வருகின்றது. காரம் என்பது புற மருந்துகள் 32-ல் ஒன்று. மூல நோய்க்கும் அழுகிய புண்களை ஆற்றவும்

கார நூல் காரச்சீலை பயன்படும். காரச்சீலை செய்வது பற்றி, அகத்தியர் 'இரணலாகடத்தில்' வருகின்றது.

காமவேளின் கணையால் தலைவலிக்கு மார்பகத்தில் புண் ஏற்பட்டு, ஆறாத நிலையில் உள்ளது. இதற்குக் காரம் வைப்ப தால் என்ன பயன்? என்று ஒரு பாடலில் வருகின்றது. அறுவை மருத்துவக் கருத்துக்களை இப்பாடலில் காணலாம். இதே போன்ற அறுவை மருத்துவம் தொடர்பான கருத்து, நீதிநெறி விளக்கத்தில் (பாடல்–261) வருகின்றது. புறத்தில் நட்புடனும், உள்ளே பகையுடனும் உள்ளவர்களின் நஞ்சு போன்ற பகையை அறுத்துக் களைய வேண்டும். இது கருவியால் புண்ணை அறுத்து, பின்னர் ஆற்றும் மருத்துவரின் செய்கையை ஒத்தது. இங்கும் அறுவை மருத்துவக் கருத்துகள் காட்டப்படு கின்றன. அறுவை மருத்துவம் போன்றே குழந்தை மருத்துவமும் இடம் பெறுகின்றது. குழந்தையின் குடலானது மருந்தைச் சிரணிக்கும் வலிமையற்றது. எனவே மருந்தைத் தாய் உண்டு அதன் பயனைக் குழந்தையானது பெறும்படிச் செய்கின்றாள். இதை "நோயுண் மருந்து தாயுண்டாங்கு" எனப் புலப்படுத்து கின்றார். மனநோய் மருத்துவம் பற்றியும் இவர் நூலில் கூறப்படுகின்றது. பித்துக் கொண்டோர் உணவில் சுவை யறியாமல் உண்பர். பித்துக்கொண்டோர் சுவையறியார் என்ற உரையானது பொருத்தமின்றி உள்ளது. பித்துக்கொண்டோரின் உணவு கொள்ளும் தன்மை ஒழுங்கற்ற முறையில் அமையும் என்பது பொருத்தமான பொருளாகும். நன்னிலையில் உள்ளோர் உணவை முறைப்படியும், ஒழுங்காகவும் நேரத்திலும் உண்பார்கள். உளப்பிணியால் வருத்தமடைந்தவர்கள், இவ்வாறு உண்ணார். இவ்வாறே மருந்துகள் இயல்புகளைப் பற்றியும் சிறப்பாக எடுத்துரைக்கின்றார். வெங்காரமானது உடலுக்கு வெப்பத்தை அளிக்கும் பொருள். சிங்கியானது – நஞ்சானது மிக்க குளிர்ச்சியைத் தரும். ஆனாலும் சிங்கியானது உடலுக்கும் உயிருக்கும் கேடு விளைவிக்கும்.

இதில் வெங்காரம், சிங்கி என்ற முரண்பட்ட மருந்துப் பொருட்கள் கூறப்படுகின்றன. சிங்கி என்பது உலோக நஞ்சு. உரையில் வெங்காரம் வெப்பமானது. உலோக நஞ்சு தண்மை யானது என்றிருப்பது பொருத்தமின்றி உள்ளது. இனிப்புச் சுவையை உடைய உலோக நஞ்சு உடலுக்குக் கேடு தரும்.

காரச் சுவையை உடைய வெங்காரம் உடலுக்கு நன்மையைச் செய்யும் எனக் கொள்ள பொருத்தமாக இருக்கும்.

**சித்து**

சித்தர்களின் கொள்கைகளில் சித்து வகை, ஒன்று. கலம்பக உறுப்புகளில் ஒன்றாக இது இடம் பெற்றுள்ளது. மதுரைக் கலம்பகத்திலும், காசிக் கலம்பகத்திலும் 'சித்து' பற்றிய கருத்துகள் இடம் பெறுகின்றன. மதுரை இறைவன் திருவிளை யாடலில், கல்லானைக்கு கரும்பு தந்தது, செங்கல்லைப் பசும் பொன்னாக மாற்றியது. என மதுரைக் கலம்பகத்தில் வருகிறது. இரும்பைப் பொன்னாக மாற்றிய இரசவாதியாகக் காசிக் கலம்பகத்தில் சிவபெருமான் போற்றப்படுகின்றார்.

**அறநெறி கூறல்**

பிறர் மனைவியரைத் துய்ப்பதால் இன்பம் பெற இயலும் எனினும் அது வேண்டாம். அவ்வாறு கிடைக்கும் இன்பம், இன்பமாகாது. பின்னர் உடல் நடுங்கி, மனம் நடுங்கி நோயாக வரும். அண்மைக் காலத்தில் ஏமக் குறைவு நோயை நோக்க, இவ்வுண்மை புலப்படும். எனவே, 'ஏமக் குறைவு' நோயைத் தடுக்க, அறவழி இன்பத்தையே பெறவேண்டும்.

**முடிவுரை**

சுவாமிகளின் அருட்பாடல்களில் மருத்துவக் கருத்துகள் பொதிந்துள்ளன. அவற்றை மக்களுக்குத் தெரியப்படுத்துவது, சித்த மருத்துவர்களின் பணியாகும். சுவாமிகளின் பாடல்களில் கூறப்பட்ட அறிவியல் கருத்துகளை அனைவரும் அறிய, தனி நூலாக வெளியிடுதல் வேண்டும்.

# குருபரரின் வடமொழி ஆளுமை

ந. புவனேஸ்வரி, தஞ்சாவூர்

வடமொழி அறிந்திருத்தலே பண்டிதத்தனம் என்று கருதுமளவிற்கு வடமொழிச் சொற்கள் தமிழ் வழக்காற்றில் காலந்தோறும் கலப்புற்றன. இக்கலப்பு, தொல்காப்பியம் முதலே அமையக் காணலாம். இந்நிலையில், வடமொழிச் சொற்கள் பரவலாகப் பயன்பாட்டில் இருந்த மரபில் மணிபிரவாள நடை தோன்றியது. தமிழ்ச் சொற்கள் இவை, வடமொழிச் சொற்கள் இவையென்று பகுத்துணர அறியா வண்ணம் பல வகைச் சொற்கள் தமிழிலிருந்து வடமொழிக்கும், வடமொழியில் இருந்து தமிழுக்கும் வந்து சேர்ந்தன. இவ்வாறு மொழிக் கலப்புற்ற கால கட்டத்தில், குமரகுருபரரின் தோற்றம் முக்கியப் பங்கு வகிக்கிறது.

பதினேழாம் நூற்றாண்டில் இலக்கிய உலகிலும், பக்தி இயக்கத்திலும் ஒருங்கு தொண்டாற்றிய பெருமகனார் குமர குருபரர் அடிகள் தம் பனுவல்களில் தமிழைப் பல்வேறு அடைமொழிகளால் சிறப்பிக்கிறார். வடமொழியை அவர் கையாளும் நிலையில் அவரிடம் சொல் மயக்கங்கள் ஏதுமில்லை. மரபு கருதியும், தேவை கருதியும் பயன்படுத்தப் பெற்றனவாக மட்டுமே அவை யமைகின்றன. இங்ஙனம் அமைந்த அவரது வடமொழி அறிவை, அவர் கையாண்டுள்ள வடமொழிச் சொற்களின் வாயிலாக அறிதல் வேண்டி 'கந்தர் கலிவெண்பா'வை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

அடிகள் கையாண்டுள்ள சொல் மரபைப் பொது மரபு, இலக்கண மரபு எனப் பகுத்துக் கொள்ளலாம்.

### பொது மரபு

பொது மரபாவது அடிகள் கையாண்ட சொற்களின் பயன் பாட்டு நோக்கத்தினடிப்படையில் ஈண்டுக் கொள்ளப்பெறுகின்ற

பாகுபாடு ஆகும். கலைச் சொற்கள், பெருவழக்குச் சொற்கள் யாப்பியல் என்ற மூன்று தேவை கருதிச் சொற்கள் அமைகின்றன.

**கலைச் சொற்கள்**

கந்தர் கலிவெண்பாவில் அடிகள், சைவசித்தாந்தக் கருத்துக் களை முருகன் மேல் ஏற்றிக் கூறுதலால், இப்பாடல்களில் உள்ள கலைச் சொற்களில் பெரும்பான்மை சைவசித்தாந்தக் கலைச் சொற்களாகவே அமைந்துள்ளன. இக்கலைச் சொற்கள் இறைவனின் பெருமை, இறைவனை அடையும் வழிகள், மலம், வழிபடுமுறைகள், ஆன்மநிலை முதலியவற்றைச் சுருங்க விளக் கிடத் துணை நிற்கின்றன. சான்றாக, வழிபடுமுறைகளைக் குறிப்பிடுகையில்,

> 'விரதமுதலாய பல மெய்த் தவத்தின் உண்மைச்
> சரியை கிரியா யோகம் சார்வித்(து) – அருள்பெருகு
> சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்(து)
> ஆலோகம் தன்னை அகற்றுவித்து – நால்வகையாம்
> சத்திநிபாதம் தருதற்கு (19–21)

என்ற பகுதியில் விரதம் – சரியை, கிரியை, யோகம் முதலிய வற்றின் அடிப்படையில் அமைவதாகக் கூறி அவை கைவரப் பெற்றவர்க்குச் சாலோகம் முதலான இறைபேறு கிட்டும் என்கிறார். ஒரே அடியில் மூன்றுக்கும் மேற்பட்ட சித்தாந்தத் தொடர்புடைய சொற்கள் வரக்காணலாம். இவையன்றி 'நாதம்', 'நாதாந்தம்', 'அஷ்ட மூர்த்தம்', 'அநாதி', 'பரஞ்சோதி' ஆகியன இறைவன் தொடர்புடையனவாகும்.

உயிர்களின் நிலைப் பற்றிக் கூறுகையில், 'திரிசுரணம், மலபாகம், கன்மம், ஆலோகம், மோகம்,' முதலிய சொற்கள் கையாளப்பட்டுள்ளன.

**பெருவழக்குச் சொற்கள்**

பெருவழக்குச் சொற்கள் என்று ஈண்டுக் குறிக்கப்படுபவை, தமிழில் கலந்து பெருவழக்காகப் பலராலும் ஆளப்பட்ட வடமொழிச் சொற்களேயாகும். இவற்றுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் இருந்தபோதும் பலரால் கையாளப்பட்டு வழக்காற்றில் நிலவிவந்த காரணத்தினால் பயன்படுத்த நேரிட்டிருக்கலாம். 'செங்கமலம், குணம், தாரணி, மோகம், சகடம், புவனம், தெய்வம், கரம், கரதலம், மண்டலம்,

நவரத்தினம், சந்ததம் எனப் பலசொற்கள் இவ்வகையில் வரக் காணலாம்.

**யாப்பியல் தேவை**

சில இடங்களில் யாப்பிலக்கணங் காரணமாக எதுகை, மோனை, கருதிச் சில சொற்கள் வடமொழியிலிருந்து கையாளப் பெற்றுள்ளன.

'வைத்த கரதலமும் வாமமருங்கில் கரமும்' என்ற அடியில் 'வை' என்ற எழுத்திற்கு இணையாக மோனை அமைய வேண்டும் என்ற கருத்தில் 'வாம' என்ற சொல் கொள்ளப் பெற்றுள்ளது.

> 'நாதமும்நா தாந்த முடிவும் நவைதீர்ந்த
> போதமும் காணாத போதமாய் - ஆதிநடு' (2)

இவ்வடிகளில் 'நாதம், போதம்' என்ற சித்தாந்தச் சொற்களில் அமைந்த எதுகைக்கு இணையாக 'ஆதி' என்ற சொல் கொள்ளப் பெற்றுள்ளது. 'ஆதி' என்ற சொல்லிற்கு தொடக்கம், முதல், முன்னை போன்ற சொற்கள் இருப்பினும் எதுகை கருதியே இச்சொல் கையாளப்பட்டிருத்தல் வேண்டும்.

**இலக்கண மரபு**

அடிகள் கையாண்டுள்ள சொற்களில் அமைந்த இலக்கண நுட்பங்கள் இப்பகுதியில் ஆளப்பட்டுள்ளன. அவற்றை 1. தற்சமம், 2. தற்பவம், 3. தமிழ்+வடமொழி, 4. வடமொழி+தமிழ், 5. சொல்லடுக்குகள் என வரிசைப்படுத்தலாம்.

**தற்சமம்**

தொல்காப்பியர், வடசொற்களைத் தமிழ் மொழியில் கையாள நேர்கையில் கொள்ளவேண்டிய நெறிமுறைகளைக் கீழ்க்கண்ட நூற்பாவில் குறிப்பிடுகிறார்.

> 'வடசொல் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே'

வடசொற்களில் அமைந்த வடவெழுத்துக்களை நீக்கி, அதற்கிணையான தமிழ் எழுத்துக்களைக் கொண்டு சொற்களைப் பயன்படுத்தல் தற்சமம் ஆகும். இவ்வகையில் பந்தம், கருணை, சராசரம், மலம், ரோமம், சந்நிதி, புண்டரிகம், தத்துவம் முதலிய சொற்களைக் காணலாம்.

**தற்பவம்**

வடமொழிக்கேயுரிய எழுத்துக்களைத் தமிழ் வழக்காற்றில் உச்சரிக்க ஏலாத நிலையிருப்பின் அவற்றைத் தமிழ் எழுத்துக் களால், உச்சரிக்கத் தகுந்த வகையில் மாற்றி வழங்குதல் தற்பவம் ஆகும். இதையே, தொல்காப்பியர், மேற்கண்ட நூற்பாவின் தொடர்ச்சியாக,

'சிதைந்தன வரினும் இயைந்தன கொளார்'

என்று உரைக்கிறார். 'ஸ்வர்க்காதி-சொர்க்காதி, அவஸ்தை-அவத்தை, ஜ்யோதி – சோதி, சப்ததாது – சத்ததாது, அஷ்ட – அட்ட, சிருஷ்ட – சிட்டி, தேஜஸ் – தேசு, துஷ்ட – துட்ட' என அமையும் சொற்களின் மூலம் வடசொற்கள் தற்பவமாய் அமைகின்ற நிலையினைக் காணலாம்.

வடசொற்கள் தமிழ் உச்சரிப்பில் வழங்குகின்ற நிலையில் தற்சமமாய் வழங்கத் தகும் சொற்களும் திரிந்து வழங்கக் காணலாம். அத்தகைய சொற்களாக 'பந்தம் – பெந்தம், மௌனம் – மோனம்' ஆகியன அமைகின்றன.

**தமிழ் + வடமொழி**

தமிழ்ச் சொற்கள் வடமொழிச் சொற்களை இணைப்பாகக் கொண்டு அமைந்தவை இப்பகுதியில் விளக்கப்படுகின்றன. தமிழ்ச் சொற்கள் நிலை மொழியாகவும், வடமொழிச் சொற்கள் வருமொழியாகவும், அமைந்து தமிழுக்குரிய மெய்ம்மயக்க விதிகள் குன்றா வகையில் இத்தகைய சொற்கள் திகழ்கின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| செம்மை(த) | + | சமலம்(வ) | — | செங்கமலம் |
| மெய்மை(த) | + | ஞானம்(வ) | — | மெய்ஞ்ஞானம் |
| மெய்மை(த) | + | தவம்(வ) | — | மெய்த்தவம் |
| பூ(த) | + | குமுதம்(வ) | — | பூங்குமுதம் |
| மலர்(த) | + | வதனம்(வ) | — | மலர்வதனம் |
| மீ(த) | + | தானம்(வ) | — | மீதானம் |
| தடம்(த) | + | கிரி(வ) | — | தடங்கிரி |

**வடமொழி + தமிழ்**

வடமொழிச் சொற்கள் நிலை மொழியாகவும், தமிழ்ச் சொற்கள் வருமொழியாகவும் அமைந்த சொற்கூட்டம் வடமொழி + தமிழ் என்ற பகுதியில் விளக்கப்படுகின்றது.

| | | | | |
|---|---|---|---|---|
| சித்ர(வ) | + | மயில்(த) | — | சித்ரமயில் |
| துட்ட(வ) | + | மிருகம்(த) | — | துட்டமிருகம் |
| கிரணம்(வ) | + | மணிமுடி(த) | — | கிரணமணிமுடி |
| முகம்(வ) | + | மதி(த) | — | முகமதி |
| ஜென்மம்(வ) | + | விடாய்(த) | — | ஜென்மவிடாய் |

மேற்காண்பவையன்றி வடமொழிச் சொல் தமிழ் காலஇடை நிலைகளைப் பெற்று, வினைச்சொல்லாகத் திகழ்வதை ஜென்மி + த் + த் + உ — ஜென்மித்து என்ற சொல்லின் மூலம் காணலாம்.

**சொல்லடுக்குகள்**

வடமொழிச் சொற்கள் தொடர்ந்து அடுக்கி வந்த தன்மை இப்பகுதியில் விளக்கப்பெறுகிறது. இது அடிகள் கொண்டுள்ள வடமொழி சொற் பயிற்சியை நமக்குத் தெரிவிப்பனவாய்த் திகழ்கின்றன. 'நித்யானந்த போதம், பஞ்சவித ரூப பரசுகம், பாரபுயசைலம், சிதபகிரதி, மலபரிபாகம், சிவஞானம், நவநாதம், சராசரம், பரமானந்தம், நவரத்தினம், இந்திரஜாலம், திரிகரணம் முதலிய சொற்கள் இத்தன்மையவாய் அமைகின்றன. இவற்றுள் சில சித்தாந்தம் தொடர்புடைய சொற்களாய் அமைந்தாலும், அடுக்கி வந்த தன்மை கருதி இப்பகுதியில் கையாளப்பெற்றன.

கந்தர் கலிவெண்பாவில் அமைந்த சொற்களில் ஏறக்குறைய இருபத்தைந்து விழுக்காடு வடமொழிச் சொற்கள் காணப்படு கின்றன. அடிகளின் காலத்தில் வடமொழிச் சொற்கள் எந்த அளவிற்குத் தாக்கம் பெற்றிருந்தன. குமரகுருபரரின் 'கந்தர் கலிவெண்பாவில்' வடமொழிச் சொற்கள் பயன்படுத்தப் பெற்ற திறம், அடிகளின் ஆழ்ந்த வடமொழிப் புலமை, இலக்கண நுட்பம் ஆகியவற்றை மேற்கொண்ட சொற்கள் தெளிவுறுத்து கின்றன.

சைவ சித்தாந்தம் தமிழுக்கே உரிய சிறப்பைப் பெற்றிருந் தாலும் அத்துறைச் சொற்கள் வடமொழியினவாய் அமைந் துள்ளன. இதன்மூலம் அடிகள் காலந்தொட்டுச் சைவ சித்தாந்தக் கலைச்சொற்கள் தமிழாக்கம் செய்யப்பெறவில்லை என்பதையுணரலாம். 1969-க்குப் பிறகு வடமொழிச் சொற்கள் அனைத்தும் தமிழ்ப்படுத்தப்பட்டுத் தரப்படுத்தம் செய்ய ஜஸ்டிஸ் மகாதேவன் உள்ளிட்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது. ஆனால் அதன் பணி முழுமையாக்கம் பெறவில்லை. அதனால் சைவசித்தாந்தக் கலைச்சொற்கள் பெரும்பாலும் வடமொழி யினவாய் தற்போதும் குறிக்கப் பெறுகின்றன.

# குருபரரின் அரசியற் பொருளாதாரம்

தி. புஷ்கலா, தஞ்சை

ஆன்மநேயம் பேசும் நம் குமரகுருபரர் நாட்டின் சமூகப் பொருளாதாரச் சிந்தனைகளையும் கொண்டிருந்தார். நீதிநெறி விளக்கத்தில் அவர் அரசன் பெற வேண்டிய வரிமுறை தொடர் பாகப் பாடியிருப்பது இதற்குத் தக்கதொரு சான்றாகும். இக்கட்டுரை அவர் சுட்டும் வரியமைப்பில் மரபுமுறை தொடர் பாகச் சமூகப் பொருளாதாரத்தைக் காண முயல்கிறது.

ஒரு நாட்டின் வாழ்வும் தாழ்வும், சமூகப் பொருளாதார வளர்ச்சியும், வீழ்ச்சியும் அந்நாட்டின் அரசாட்சியைப் பொறுத்தே அமையும். நமது இலக்கியங்களும், நீதிநூல்களும் அரசியல்பு பற்றிப் பேசுமிடத்து இக்கருத்தினை வலியுறுத்தி வந்திருப்பதைப் பரவலாகக் காணலாம்.

> "... ... ... ... ... ... ... ...
> மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
> இயற்கையல்லன செயற்கையிற் தோன்றினும்
> காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்
> அதுநன் கறிந்தனையாயி னீயும்
> நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
> பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
> குடிபுறந் தருகுவை யாயினின்
> அடிபுறந் தருகுவ ரடங்காதோரே" (புறம்: 35)

எனும் வெள்ளைக்குடி நாகனாரின் கூற்று இங்கு கருதத் தக்கது. இம்மரபுவழிச் சிந்தனை சங்க இலக்கியம் முதல் அண்மைக் காலத்து தோன்றிய தண்டபாணி சுவாமிகளின் 'அரசாட்சி' எனும் நூல் வரை பிரதிபலித்து வந்திருப்பதைக் காணமுடிகிறது. நீதிநெறி விளக்கத்தில் அடிகளார் அரசியல்பு பற்றிக் கூறும்பொழுது அரசன் மக்களைப் பேணும்முறை பற்றியும், வரி கொள்ளும்முறை பற்றியும் கூறியிருத்தல் கருதத்

தக்கது. குறிப்பாக அரசன் வரிகொள்ளும் முறைபற்றி அடிகள் கூறியுள்ள கருத்துக்களையும் 18ஆம் நூற்றாண்டுச் செங்கற்பட்டு ஆவணங்கள் காட்டும் நிலவரிமுறை, அரசு வருவாய், வருவாய்ப் பங்கீட்டு முறை போன்றவை பற்றியும் ஈண்டுக் காணலாம்.

**நீதிநெறி விளக்கத்தில் வரி கொள்ளும் முறை**

அரசியல்பு பற்றிக் கூறப்பட்டுள்ள 15 பாடல்களுள் பின் வரும் மூன்று பாடல்களும் அரசுவருவாய் மற்றும் வரிகொள்ளும் முறை பற்றிக் கூறுவன.

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலு மாண்பே – குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல. (29)

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான் – சென்றொருவன்
ஆவன கூறி னெயிறலைப்பா னாறலைக்கும்
வேடலன் வேந்து மலன் (30)

வாங்கும் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
றூங்கும் களிறோ துயருறா – ஆங்கது கொண்
டூருமெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று (38)

'குடிகொன்றிறை கொள்ளும்' என்ற பாடலில் மக்களை வருத்தி முறையற்ற வகையில் அதிக வரி கொள்வதென்பது கற்றாவின் பாலைக் கறப்பதற்குப் பதில், அதிக பலன் பெற எண்ணி முலைமடியையே அறுத்து எடுப்பதற்கு ஒப்பாகும் என்கிறார் (இங்கே பொன்முட்டையிடும் வாத்தறிந்த கதையும் நினைக்கத்தக்கது) இது கொடுங்கோன்மையைக் காட்டுவதுடன் வரிமூலத்தையே ஒரேயடியாக அழிப்பது போலவும் காட்டப் படுகிறது.

இக்கற்பனை "கங்கைக் கரையில் காறாம்பசுவின் மடியை அறுக்கும் பாவத்தில் போகக் கடவன்" எனச் சாபமிடுவது போல் அமைந்துள்ளது. இதுபோன்று கூறும் வழக்கு கல்வெட்டு, உடன்படிக்கைகள், தர்மபரிபாலன நிவந்தங்களில் பொதுவாகக் காணப்படினும் இவர் காசிவாசியாதலால் இவ்வுவமையை

தானியம் அளப்பவர், கம்புகட்டி போன்றோரும் மற்றும் கிராமத்தார், குயவர், இடையர், வண்ணான், நாவிதன் போன்ற கிராமப் பொது ஊழியரும், கணக்குப் பதிவு செய்யும் கணக்கர், பாதுகாப்புப் பணியில் உள்ள காவல், தூக்கிரி, வெட்டி தலையாரி போன்ற நிர்வாகப்பணியில் உள்ளோரும் இப் பங்குகளைப் பெற்று வந்தோரில் அடங்குவர்.

இவர்களுள் கிராமக் கோயில்கள் மற்றும் கிராமப் பொதுப்பணி ஊழியர் போன்றோரின் பணிகள் அந்தந்த கிராமத் துடனேயோ அல்லது ஓரிரு அண்டை கிராமங்களுடனோ மட்டுமே தொடர்புடையதாய் விளங்கின. ஆனால் பெரிய கோயில்கள், மடங்கள், தலைச்சிறந்த பண்டிதர்கள், கலைஞர்கள், காவல் படையினர், கணக்கு போன்றோரின் பணிகள் பல்வேறு கிராமங் களுடன் தொடர்புடையதாய் விளங்கியமையால் தொடர்புடைய அனைத்துக் கிராமங்களிலிருந்தும் பங்குகளைல் பெற்று வந்ததைக் காணமுடிகிறது.

ஆக மொத்த விளைச்சலிலிருந்து 25% மானியமாகவும் 30% 'மேரைகள்' மற்றும் 'சுதந்திரங்களா'கவும் கிராம சமூக அமைப்புகளுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டு மீதமுள்ள பங்கில் குடிவாரம் நீங்கலாகப் பெறப்பட்ட பங்கே மேல்வாரமாக அதாவது அரசு வருவாயாக இருந்ததை இவ் ஆவணங்கள் மிக விரிவாகப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

இவ் அமைப்பும் செயற்பாடும் பகுந்தளிக்கும் வாழ்வினை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பாகவே இக்கிராமங் களைக் காட்டுகின்றன. சுருங்கக் கூறின் முன்னால் கூறப்பட்ட நமது நீதிநூல்களும், இலக்கியங்களும் காட்டும் சிறந்த அரசாட்சிக்கு ஒரு 'மாதிரியாகவே' இக்கிராம நிர்வாக அமைப்புகள் அமைந்திருந்ததை இவ் ஆவணங்கள் காட்டுகின்றன.

இச்சமூக அமைப்பையும் தொன்றுதொட்ட மரபு வழிகளை யும் நினைத்துப் பார்க்கும் நம் அடிகளார் அன்னிய ஆதிக்கத்தின் கீழ் கொடுமையான வரிச்சுமைகள் மக்களைத் தாக்கிவிடுமோ என்றஞ்சியுள்ளார் எனத் தோன்றுகிறது. எனவேதான் நீதிநெறி விளக்கத்தில் அரசு வரி கொள்ளும் முறை பற்றியும் அவர் விதந்தோதி எச்சரித்துள்ளார் எனலாம். இது அவரது அரசியல் பொருளாதார உணர்வையும் சமூகப் பொருளாதார உணர்வையும் ஒருசேரக் காட்டுவதாகுமன்றோ.

# பிள்ளைக்கவியும் புரட்சிக்கவியும்

த. பூமிநாகநாதன், சென்னை

ஒவ்வொரு காலத்திலே ஒவ்வொரு பெருந்தகையார் தோன்றி உலகிற்குப் பெருநன்மை விளைத்திருக்கின்றனர். திருவள்ளுவர் உலகுள்ளவரை நிலவும் பொதுமறை யளித்தனர். மணிவாசகப் பெருமான் சிவனது அருள்நெறியை நிலைநாட்டினார். சம்பந்தரும் அப்பரும் சமணரை வென்று அன்பு நெறியைப் பாதுகாத்தனர். திருநாவலூரர் யோகமும் வீடும் நல்கும் இறைவன் பேரருளை விளக்கித் தமிழ்நாட்டுத் தொண்டர் தொகுதி செப்பினர். திருமூல மாமுனிவர் மந்திர, யோக, ஞான மாண்புகளை விளக்கினர். நம்பியாண்டார் நம்பி திருமுறைகளை வெளிக் கொணர்ந்தனர். சேக்கிழார் இணையற்ற திருத் தொண்டர் புராணம் ஈந்தார். கச்சியப்பர் எப்பொருளும் செறிந்த கவின்மிகு கந்தபுராணம் தந்தனர். கம்பன் தமிழ்நலம் செறிந்த பொதுப் பெருங்காப்பியம் இயற்றினர். பிள்ளைக்கவி குமரகுருபரன் வடக்கே முதன்முதலில் மடம் ஒன்றை நிறுவி, நற்றமிழ்த் தொண்டு ஆற்றினர். அம்மடம் தமிழ்ச் சைவம் வளர்வதற்கான பாதுகாப்பு அரணாக அமைந்ததோடு தமிழ் மொழிக்கும் வேலியாக இருந்து வடமொழி போன்ற மொழி களால் ஊறு விளையாது காத்து நின்ற பெரும்பணியையும் செய்தது. அவ்வகையில் முதன் முதல் வடக்கே மடம் நிறுவி நற்றமிழின் புகழ் நாட்டிய பெருமை இதனால் குமரகுருபரனைச் சார்ந்தது எனலாம்.

நம்முடைய காலத்தில் ஆரியரின் மாயா வாதத்தால் நற்றமிழ் நசிவுறும் நிலையை உணர்ந்த பாரதிதாசன் உயர் தமிழ் காக்க உயிரையும் சிறு கிரையாக எண்ணும் மனப் பாங்கினைத் தமிழ் மன்பதைக்கு ஊட்டினார். சிலிர்த்து எழுந்தனர் இளைஞர். கெட்ட போரிடும் உலகை வேரொடு சாய்க்க மறத்தமிழர் அறத்தோடு அணி வகுத்தனர்.

இப்படித் தமிழ்மீதும் தமிழர் நலன் மீதும் பற்றுக் கொண்டு, தன்னலம் மறந்து தாயகம் போற்றியதால் பாரதிதாசன் புரட்சிக் கவிஞர் எனப் போற்றப்பட்டார். அவர் குமரகுருபரர்பால் கொண்ட அன்பின் வெளிப்பாட்டையும், தமிழ் முனிவன் குமரகுருபரன் தமிழின் இடத்துக் கொண்ட பற்றினைக் கண்டு நம் புரட்சிக் கவிஞர் பெருமிதம் கொண்ட விதத்தினையும், இருவர் நேயத்திற்கும் காரணமாக விளைந்த அடிப்படைக் கோட்பாட்டை நுணுகிக் காண்பதுமே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

பாவேந்தர் எனப் போற்றப்படும் பாரதிதாசன் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையே கற்றுத் தேர்ச்சி பெற்றவர் என்பது அனைவரும் அறிந்ததே. தமிழ் இலக்கியங்களில் அதிக ஆளுமை பெற்றது சமயம் என்றால் மிகையாகாது. பாரதிதாசன் சமய இலக்கியங்களால் சற்றே கருத்து வேறுபாடு கொண்டவர் என்றாலும், அவ்விலக்கியங்களின் தமிழமுதினைத் தாவிப் பருகத் தயக்கம் கொண்டாரில்லை. 'தன் மகனுக்குத் தமிழ்ப் பாடம் ஆரம்பித்த தமிழாசிரியரிடம் திருவிளையாடற் புராணத்தை முதலில் கற்றுத்தரச் சொன்னவர். பக்தி மறுப்புப் பாதையில் அவர் பயணித்தாலும் பக்தியும் தமிழும் இணைந்து இருந்த பாத்திரத்தில் தமிழை மட்டும் தனித்துப் பருகும் அன்ன வித்தையின் அற்புதமறிந்தவர். அவரது சமய இலக்கிய ஈடுபாட்டில் அவருடைய ஆசிரியர்களான பங்காரு பத்தர், திருப்புலி சாமி அய்யா ஆகியோருக்கும் நிறைந்த பங்கு உண்டு என திரு. புதுவை சிவ இளங்கோ குறிப்பிடுவது ஈண்டு நோக்கத்தக்கது.

சமய இலக்கியத்தின் தமிழையும் தாண்டி, சமயவாதி ஒருவரிடம் அவர் தீவிர ஈடுபாடு கொண்டிருந்தாரென்றால், அது குமரகுருபரர் ஒருவரிடம்தான். வேறு எந்தச் சமயவாதிகள் பற்றியும் பாரதிதாசன் குறிப்பிட்டிருப்பதாகத் தெரியவில்லை. பாரதிதாசன் நெஞ்சிலே இளமை முதலே ஆட்சி செலுத்தி வந்தவர்தான் குமரகுருபரர். 'குமரகுருபரர் ஒரு மகா கவி என்று கூறும் பாரதிதாசன் 'பழைய நூல்களில் குமரகுருபரர் வாழ்க்கை வரலாறாகக் கற்பனை செய்திருப்பது கூட ரசமா யிருக்கிறது என்று கூறியிருப்பதிலிருந்து குமரகுருபரரின் படைப்புகளில் மட்டும் அல்லாது அவரது வாழ்க்கைச் செய்தி களிலும் பாரதிதாசனுக்கு இருந்த மிகுந்த ஈடுபாடு தெளிவாகத்

தெரிகிறது. குமரகுருபரரின் சமயத் தொண்டு, சைவம் பரப்புதல் ஆகியவற்றை விடவும் அவருடைய தமிழே தம்மை ஈர்த்தது என்பதைப் பாரதிதாசன் "அத்தமிழ்க் கவிஞர் அளித்த நறுங்கவிதைகளையும், அத்தமிழரின் வாழ்க்கை வரலாற்றையும் இச்சிறுநூல் தமிழ்நாட்டாருக்கு நினைவுறுத்துவதாக இருக் கட்டும்" என்று தமது எதிர்பாராத முத்தம் நூலின் முன்னுரையில் குறிப்பிட்டிருப்பதன் மூலம் நன்கு அறியலாம்.

எதிர்பாராத முத்தம் என்னும் நாடக நூல் பொன்முடி - பூங்கோதை காதலில் தொடங்கி, வணிக நிமித்தம் பொன்முடி வடநாடு ஏக, அங்கே கயமை உள்ளம் கொண்ட சில ஆரியர் களால் வேள்விக்கு இடையூறு இழைத்தான் எனக் குற்றம் சாற்றப்பட்டுக் கொல்லப்பட்டான். பொன்முடியின் பிரிவு ஆற்றாத பூங்கோதை காதலனைக் கண்ணுற்று அவனுக்கு ஏற்பட்ட அவலத்தைக் கண்டு ஆற்றாது ஆருயிர் விடுத்தாள். இத்துடன் எதிர்பாராத முத்தம் எனும் இலக்கியப் படைப்பு முடிவடைவது போல் தோன்றினாலும் அதன் இரண்டாம் பாகமாக குமரகுருபரரின் வரலாற்று நிகழ்வுகளை அந் நூலிலேயே இணைத்திருக்கிறார் பாரதிதாசன். எதிர்பாராத முத்தம் போன்ற காதலும் சீர்திருத்தமும் கூறும் இலக்கியத் திற்குக் குமரகுருபரரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்வுகளை உள்ளடக்கிய இரண்டாம் பகுதி வலிந்து புனையப்பட்டது என்ற ஓர் கருத்து நிலவினாலும் கூட, பாரதிதாசன் அவ்வாறு வலிந்து எழுதி இணைத்து இருப்பதிலிருந்து குமரகுருபரரின் பால் பாவேந்தருக்கு இருந்த ஈடுபாட்டையே அது வெளி படுத்தும். மேலும் குமரகுருபரரின் வரலாற்றில் பாரதிதாசன் ஈடுபாடு கொண்டதற்கு மற்றும் ஒரு காரணமும் உண்டு. குமரகுருபரருடைய வரலாற்றில் அவர் வடநாடு சென்ற தற்கான காரணம் தெளிவாகக் குறிப்பிடப் படவில்லை என்பது பாரதிதாசனார் கருத்து. முருகக் கடவுள் ஆணைப்படி குமரகுருபரர் வடதிசை ஏகினார் என்றும் தமது ஆசானான மாசிலாமணி தேசிகரின் ஆணைப்படி சைவ சமயத் தொண்டிற் காகக் காசிக்குப் போய் சேவை செய்து முடிவில் அம் மண்ணிலேயே இயற்கை எய்தினார் என்றும் செய்திகள் தெரிவிக்கின்றன. இப்படிக் கிடைக்கின்ற இந்த வரலாற்று நிகழ்வுகளிலிருந்து குமரகுருபரர் எதற்காக வடதிசை சென்றார் என்று ஆய்ந்து, தன் கற்பனை ஊற்று சுரந்த எண்ணத்தின்

எடுத்துக்காட்டி இச்செயல் அவ்வளவு கொடூரமானது என்று எடுத்துக்காட்டுகிறார்.

மேலும் இவர் முறையாகக் கொள்ளும் வரி ஆறில் ஒரு பங்காகவே இருத்தல் வேண்டும் என்பதை உணர்த்துவதுடன் அவ்வாறு வரியை முறையாகக் கொள்ளும் அரசனுக்கு வருவாய் பன்மடங்காக உயரும் என்பதையும் உணர்த்துகிறார். முறையாகக் கொள்ளும் வரியினால் அரசனுடன் குடிகளும் பயன் பெறுவர். குடிகள் நலன் பேணப்படுதலால் தொழிலும் சிறக்கும். அதன்வழி பொருளாதாரமும் ஓங்கும் என்பதே இதன் உட்கருத்து.

இப்பாடல் வரிகள் பின்வரும் பாடல்களை நினைவூட்டுவதாக அமைந்திருத்தல் காணலாம்.

காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மா நிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடு பெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பிரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம் போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே (புறம்: 184)

வாய்ப்படுங் கேடுமின்றாம் வரிசையினறிந்து நாளுங்
காய்த்த நெற்கவளந் தீற்றிற்களிறு தான் கழனி மேயின்
வாய்ப்படலின்றிப் பொன்றும் வல்லனாய் மன்னன் கொள்ளின்
நீத்தநீர் ஞாலமெல்லாந் நிதிநின்று சுரக்குமன்றே (சீவக. 2907)

மாநிரப்புறாச் சிறுப்புலப் பயன்களும் வயக்கரி நிலைநாடித்
தானளத்திடி னடுபசி கெடுமது சார்ந்துபுக் குணின்வேலி
யான தென்னினுங் வாளினுங் காலினு மழிந்துவாய் புகலின்றிப்
போனதாமது போன்றதவ் விறைமகன் புவியெலாம் பொலிவற்றே
(சீகாழித்தல புராணம், அத்தி. 7)

அதிக வரிச்சுமையைக் குடிகள்மேல் திணிப்பதென்பது கொடுங்கோன்மையைக் குறிக்கும் ஏன்பதைப் பாடல் 29-ன்

மூலம் வெளிப்படுத்திய ஆசிரியர் 'இன்று கொளற்பால' எனும் பாடல் மூலமாக அதிக வரி கொள்ளும் அரசனை ஆறலைக் கள்வரொடு ஒப்பிட்டு அதனைக் கீழான, கொடுமையான செயலாகக் காட்டுகிறார்.

மேலும் இவர் 'வாங்கும் கவளத்தொரு சிறிது' எனும் பாடல் வாயிலாக யானையின் கவளத்தில் ஒருசிறிது வீழ்ந்தால் பலகோடி எறும்புகள் அதனைச் சாப்பிடும். சிறிதை இழப்பதால் யானைக்குப் பேரிழப்பு உண்டாகாது. அதுபோல அரசனின் வருவாய் சிறிது குறைந்தாலும் அதனால் அரசனுக்குத் துன்பமேற்படாது. குறைவு ஏற்படாது ஆனால் அது கொண்டு வேறு பலர் பிழைக்கக் கூடும் என்று எடுத்துக் காட்டுகிறார். ஒரு வகையில் இப்பாடல் 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' 'தென்புலத்தார் தெய்வம்' ஆகிய குறட்பாக்களையும்,

> கற்றவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித்தெய்வம்
> அற்றவர்க் கற்றவாறீந் தளவைகண் டாறிலொன்று
> கொற்றவர் கடமைகொள்ளப் பண்டியிற் கொடுபோய்த்
> தென்னாடு
> உற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டியுண்பார்
> (திருவிளை. மதுரைக் - 59)

எனும் பாடலையும் நினைவுறுத்துவதாக உள்ளது.

இம்மூன்று பாடல்களின் வழி பெறப்படும் ஒட்டுமொத்தக் கருத்து யாதெனின் அதிக வரிச்சுமை நாட்டின் பொருளாதார சீர்கேட்டிற்கு வழிகோலும். ஆதலால் நம் மரபு வழி இலக்கியங்களும், சாத்திர, நீதிநூல்களும் சுட்டுவது போல விளைவில் ஆறில் ஒரு பங்கினை வரியாகப் பெற்று, அதன்வழி குடிகளை முறையாகப் பேணி பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலே அரசின் தலையாய கடமை என்பதாகும்.

இயற்கையின் சீற்றம், அன்னிய படையெடுப்புகளால் நேரும் துன்பங்கள், திறமையற்ற அரசர்களின் ஆட்சி, கொடுங் கோன்மை போன்ற பல்வேறுவித காரணங்களால் மக்கள் வரிக்கொடுமைக்கு ஆளாகி இருந்திருப்பதையும், நாட்டின் பொருளாதாரம் சீர்கெட்டிருந்த சூழலையும் நம் வரலாற்றில் ஆங்காங்கே காணமுடிகிறது. இதுபோன்ற சமயங்களிலேயே குமரகுருபரர் போன்ற சமயச் சான்றோர்களும், அறிவிற் சிறந்த

புலவோர்களும் தம் நூல்களின் வாயிலாக உரிய காலத்தில் உரியவிதமாக அரச நீதியை எடுத்துக் கூறி வழிகாட்டி வந்திருக்கின்றனர்.

வரலாற்று ஆவணங்கள் மற்றும் இலக்கியங்கள் வாயிலாகப் பெறப்படும் நமது வரலாற்றை உற்றுநோக்கும்பொழுது அண்மைக் காலம் வரையிலும் நம் பாரதநாடு உற்பத்தியைப் பெருக்கித் தன்னிறைவில் தலைநின்றதையும்

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை

எனும் அடிப்படையில் உற்பத்தியை முறையாகப் பங்கிட்டு வந்திருப்பதையும் அறிய முடிகிறது. இந்நிலை குறிப்பாக ஆங்கிலேயர் ஆதிக்கம் ஏற்படுவதற்கு முன்புவரை நீடித்து வந்துள்ளது. இதனை 18-ஆம் நூற்றாண்டுச் செங்கற்பட்டு ஆவணங்கள் காட்டுகின்றன.

### செங்கற்பட்டு ஓலை ஆவணங்கள்

செங்கற்பட்டு ஆவணங்கள் கி.பி. 1767-ஐ ஒட்டி எழுதப் பட்ட ஓலை ஆவணங்களாகும். சுமார் 2100 கிராமங்களின் வருவாய் கணக்குகளைத் தரும் இவ் ஆவணங்கள் சமூகப் பொருளியல் வரலாற்றை யறிய மிகச்சிறப்பாகத் துணைபுரிவன.

தென்னிந்தியாவில் ஆங்கிலேயர் ஆதிக்கத்திற்கு அடித்தள மாக விளங்கிய செங்கற்பட்டு பகுதியில் கி.பி. 1767-ஐ ஒட்டி ஆங்கிலேயர் நடத்திய ஒரு நேரடி நில ஆய்வுக்கு (Bernard Survey) பயன்படுத்தப்பட்டவை என்ற வகையில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. இடைக்காலம் வரையிலான வரலாற்றையறிய கல்வெட்டுகளும், செப்பேடுகளும் அடிப்படை ஆதாரங்களாகத் திகழ்தல் போல இவ்வோலை ஆவணங்களும் பிற்கால வரலாற்றை (History of Modern Period) அறியப் பெரிதும் துணை செய்வன.

### ஆவணங்கள் தரும் செய்திகள்

வருவாய் கணக்கிடும் பொருட்டு எழுதப்பட்ட இவ் ஆவணங்கள் கிராம நிலங்களின் தரவாரிப் பிரிவு, கிராம சமுதாயம், பல்வேறு இனமக்கள், அவர்தம் தொழில், மானியம், உற்பத்தி, மகசூல், தீர்வை பற்றிய செய்திகளைத் தருகின்றன.

ஒரு கிராமத்தின் மொத்த விளைநிலத்தில் 25% மானியங் களுக்காகவும், மொத்த விளைச்சலிலிருந்து 30% 'சுதந்திரம்',

'மேரை' எனும் பெயர்களில் பங்குகளாகவும் கிராம நிர்வாகப் பணிகளுக்கும் அமைப்புகளுக்கும் ஒதுக்கப்பட்டிருந்ததை இவ் ஆவணங்கள் மிக விரிவாகவும் மிகத் துல்லியமாகவும் எடுத்துக் காட்டுகின்றன.

**கிராம மிராசு மானியம்**

கிராம நிர்வாகத்துடன் தொடர்புடைய சமயம், கல்வி, கலாச்சார நிறுவனங்களும், கணக்கு, காவல், தூக்கிரி, சராப்பு போன்ற கிராம நிர்வாக அலுவலரும், வண்ணான், நாவிதன் போன்ற கிராமப் பொதுப்பணியாளரும் கிராம மிராசு மானிய மாக இவற்றைப் பெற்று வந்தனர். ஒரு கிராமத்திலிருந்து அந்த கிராமத்தைச் சேர்ந்த மிராசுகளுக்கு மட்டுமன்றி அக்கிராம நிர்வாகத்துடன் தொடர்புடைய அன்னியர்களுக்கும் அன்னியர் மானியம் எனும் பெயரில் மானியங்கள் வழங்கப்பட்டு வந்திருப்பதை இவ் ஆவணங்கள் காட்டுகின்றன. ஒருவகையில் மானியங்களைப் பெறுவதன் மூலம் குடிகளும் அரசாண்மையில் பங்கு கொள்வதையே இது காட்டுகிறது எனலாம்.

**மேரைகளும், சுதந்திரங்களும்**

ஒவ்வொரு கிராமத்தின் மொத்த விளைவினின்றும் $\frac{1}{3}$ பங்கு தானியம் பல்வேறு நிர்வாகப் பணிகளுக்கும், சமயம், கல்வி, கலாச்சார நிறுவனங்களுக்கும், பொதுப்பணிகளுக்கும் சிறப் புரிமையாக ஒதுக்கப்பட்டிருந்தன. இவையே 'மேரைகள்', 'சுதந்திரங்கள்' என அழைக்கப்படுகின்றன.

இப்பங்கீடு நான்குவிதமான நிலைகளில் மேற்கொள்ளப்பட்டு வந்ததை இவ் ஆவணங்கள் சுட்டுகின்றன. அறுவடையின் போது, களத்தில் சூட்டடிப்பின் போது 'சூடுதிட்டம்' எனும் பெயரில் கதிராக முதலிலும், களம் அளத்தலுக்கு முன்பாக இரண்டாம் நிலையிலும், அளக்கப்பட்ட பொதுதானியத்திலிருந்து மூன்றாவ தாகவும், பொது தானியம் மேல்வாரம் (அரசின் பங்கு) குடிவார (குடிகளின் பங்கு)மாகப் பிரிக்கப்பட்ட பின் மேல்வாரப் பகுதி யிலிருந்து நான்காவது முறையும் ஆக நான்குவித நிலைகளில் இப்பங்கீடுகள் செய்யப்பட்டு வந்திருக்கின்றன.

கோயில்கள், மடங்கள், சத்திரங்கள், பண்டிதர்கள், வேத விற்பன்னர்கள், பள்ளி ஆசிரியர், வைத்தியர், குடிமி, இசை வல்லுநர், ஆடற்கலைஞர், நாடகசாலை மக்கள் போன்ற சமய, கல்வி கலாச்சாரத் தொடர்புடையோரும், நீர்ப்பாசனம்,

செய்யப் புகுவர் என்பது யாவரும் அறிந்ததே. இது குறித்து குமரகுருபரர் இவ்வாறு கற்பனை செய்கிறார்; கள்ளைக் குடித்த சோழநாட்டு மகளிர் அம்மயக்கத்தால் நிலவைத் தேனடை யென்று எண்ணி அதனை விரும்புகின்றனராம். அவர் விருப்பத்தை அறிந்த ஆடவர் காதல் மயக்கத்தில் நிலவை எட்டிப் பிடித்துப் பிழியத் தொடங்குகின்றனராம். நிலைமையை உணர்ந்த நிலவு, தான் அவரின் காதலியரின் முகத்துக்கு ஒப்பாகப் போட்டியிட்டு அதில் தோற்ற காரணத்தால் தனக்கு இத்தண்டனை கிடைத்தது போலும் எனக் கருதியதாம். எனவே, 'நான் இப்பெண்களின் முகத்துக்கு ஒப்பென்று கூறவில்லையே' எனக் கூறி அவரிடமிருந்து விடுபட்டுச் சென்றதாம். இப்படி ஒரு பாடல் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் இடம் பெறுகின்றது. இதில் தேனடையை எடுத்துப் பிழிதல் என்ற உலகியல் கொண்டு உலகியல் கடந்த நடவாத நிகழ்ச்சி இங்குக் கற்பனை செய்யப் படுகின்றது. காதலரின் விருப்பம் அறிந்து நிலவைப் பிடித்துப் பிழிந்தனர் என்ற மிகைக்கற்பனை போன்றே புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாலும் செய்யப்பட்டுள்ளது.

"கண்ணின் கடைவிழியைக் காதலியர் காட்டி விட்டால்
மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர் கடுகாம்"

என்பதோடு இணைத்துக் காணலாம்.

**குமரகுருபரரின் தமிழ்ப்பற்று**

தமது பாடல்களில் தமிழைப் புகழ்ந்தும் அடைகொடுத்தும் இறைவனோடு இணைத்துப் பேசுகின்ற பாங்கு மூவர் முதலிகள். காலத்திலிருந்தே தொடர்ந்து வந்துள்ளது எனலாம். மூவர் தேவாரங்களிலும், அதன் பின்னர் பரஞ்சோதி முனிவர் போன்ற ஞானிகளின் படைப்புகளிலும் இம்முறை தொடர்ந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. குமரகுருபரர் தமது பாடல்களில் தமிழை அடைகொடுத்தும் உருவகித்தும், இறைமையோடு இணைத்தும் போற்றுகின்றார். தமிழ் மீது மாறாக் காதல் கொண்ட குமரகுருபரர் தண்டமிழ், தெளிதமிழ், கொழுத்தமிழ், தெள்ளுதமிழ், பைந்தமிழ், வடிதமிழ், பசுந்தமிழ், வடிபசுந்தமிழ், சொற்றமிழ், சங்கத் தமிழ், முத்தமிழ், மும்மைத்தமிழ், கொழிதமிழ் போன்ற அடைகளாகக் கொடுத்துத் தமிழுக்கு அழகு சேர்ப்பதைக் காணலாம். இதைப் போன்றே தமிழுக்கு நுண்பொருள் தன்மைகளை ஏற்றிப் பல

இடங்களில் குமரகுருபரர் கூறுகின்றார். சான்றுகளாகத் 'தென்னந் தமிழின் உடன் பிறந்த சிறுகால் 'மதுரித்துட்டெழு முத்தமிழ்' தேக்கமழ் மதுர மொழுகிய தமிழ், பண்ணுலாம் வடிதமிழ், புத்தமுதம் வழிந்தொழுகு தீந்தமிழ், தருசுவை யமுதெழ மதுரமதொழுகு பசுந்தமிழ், தண்டமிழ் மதுரம், இழுமென் மொழித் தெளிதமிழின், செழுந்தமிழ்த் தெள்ளமுது சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ், கலைத்தமிழ், தீம்பாலமுதம் ஒள்ளொளி ததும்பும் ஒண்டமிழ், தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ் எனக் குளுமை, இனிமை, ஒளி, தெளிவு முதலிய பண்புகளுடைய நுண்பொருளாகத் தமிழைக் கற்பனை செய்கிறார். இதுபோன்றே பருப்பொருளாகவும் தமிழைக் கற்பனை செய்யும் மரபைக் குமரகுருபரரிடம் காண முடிகிறது.

மரபு வழி நின்று 'கழகந் தோறும் கொத்து முத்தமிழ்,' முது தமிழுததியில், தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடல், வண்டமிழ்க் கடலின் முத்தமிழ் வெற்பு, செந்தமிழ்ச் செல்வம் என மலர்க்கொத்து கடல், மலை, செல்வம் போன்ற பருப் பொருளாகவும் தமிழைக் குமரகுருபரர் உருவகித்திருப்பதை காணலாம். தமிழை இறைவியோடு இணைத்துப் பார்த்து இன்பம் எய்துகிறார். மதுரை மீனாட்சி அம்மையை

> ''தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
> தொடையின் பயனே நறைபழுத்த
> துறைத்தீந் தமிழின் ஒழுகு நறுஞ்
> சுவையே'' (மீ. அ. பி. த. வரு – 5)

என்ற பாடலில் அன்னை மீனாள் பழைய பாடலின் தொடையின் பயனாக இருப்பதாகக் குமரகுருபரர் புதிய கற்பனையைப் படைக்கிறார். ஆனால் பழம்பாடல் என்பதற்கு உ. வே. சாமிநாதையர் வேதம் எனப் பொருள் கொள்கின்றார். இந்நூலுக்கு உரை எழுதிய புன்னை வனநாத முதலியார் தொடுக்கப்படும் தெய்வத் தன்மையுடைய பழைய பாடல் களாகிய மாலையின் பொருளாயிருப்பவன் எனப் பொருள் கொள்கின்றார். கா. சுப்பிரமணியபிள்ளை பழம்பாடல் என்பதற்குத் தமிழ்ச் செய்யுள் என்றே பொருள் கொள்கிறார். பிரபந்தத் திரட்டில் இந்நூலுக்கு முன்னர் உள்ள கந்தர் கலிவெண்பாவில் பாமேவுந் தெய்வப் பழமறையும் என்ற

தொடருக்கு ஐயர் அவர்கள் பின்னால் தான் எழுதப் போகும் உரைக்கு ஏற்ப, பழம் பாடல் என்பதற்கு வேதம் எனப் பகர்கின்றார். ஆனால் மறை என்ற சொல்லைப் பிள்ளைக் கவி வேதம் என்ற பொருளில் மட்டும் பயன்படுத்தவில்லை மறை என்ற சொல் பல இடங்களில் தமிழ்மறையை அதாவது தேவார திருவாசகத்தைக் குறிப்பதாகக் கா. சுப்பிரமணியப் பிள்ளை சான்றுடன் நிறுவுகிறார்.

ஈண்டுக் கடவுட் பழம்பாடல் என்றது தேவார திருவாசகப் பாடல்களையே என்பது தமிழறிஞர்கள் கருத்து. அவ்வகையில் தமிழை இறைவனோடு ஒப்பிட்டுக் காண்பது குமரகுருபரரின் தனித் தன்மையாகும்.

பாரதிதாசன் தமிழைப் பற்றிக் குறிப்பிடும்போது,

செந்தமிழே! உயிரே! நறுந்தேனே
செயலினை மூச்சினை உனக்களித்தேனே (ப. 37)

வெண்ணிலாவும் வானும் போலே
வீரனும் கூர்வாளும் போலே (வெண்ணிலா)
வண்ணப் பூவும் மணமும் போலே
மகரயாழும் இசையும் போலே
கண்ணும் ஒளியும் போலே எனது
கன்னல் தமிழும் நானும் அல்லவோ வெண்ணிலாவும்
வையகமே உய்யுமாறு
வாய்ந்த தமிழ் என் அரும்போது
துய்யதான சங்க மென்னும்
தொட்டிலில் வளர்ந்த பிள்ளை
(தம்) கையிலே வேலேந்தி – இந்தக்
கடல் உலகாற் மூவேந்தர்
கருத்தேந்திக் காத்தார் – அந்தக்
கன்னல் தமிழும் நானும் நல்ல வெண்ணிலாவும் (ப.175)

என்ற பாடலின் வாயிலாகவும்

தமிழின் சிறப்பு பற்றிப் பேசும்

கனியிடை ஏறிய சுவையும் – முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
பனிமலர் ஏறிய தேனும் – காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்

நனிபசு மொழியும் பாலும் – தென்னை
நல்கிய குளிரிள நீரும்
இனியன என்பேன் எனினும் – தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்! (ப. 175)

என்ற பாடல் வாயிலாகவும்

தமிழுக்கும் அமுதென்று பேர் – அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்
தமிழுக்கு நிலவென்று பேர் – இன்பத்
தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர்
தமிழுக்கு மணம் என்று பேர் – இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்! (ப. 175)

போன்ற பல பாடல்களின் வாயிலாகப் பாவேந்தர் பாரதிதாசன் தமிழின் பெருமைகளை நுண்ணிய பொருளாலும் பருமப் பொருளாலும் உவமைகள் இட்டு விளக்கிச் செல்வதைக் காணலாம்.

**குமரகுருபரரும் – பாரதிதாசனும்**

குமரகுருபரர் தொடக்கத்தில் முருகன் அருளால் பாடத் தொடங்கியவர். பாரதிதாசன் தொடக்க காலத்தில் முருகன் மீது பாமாலைகள் பாடியே தன்னைக் கவிஞனாக அறிமுகப் படுத்திக் கொண்டவர். பாரதிதாசனின் ஊர் பாண்டிச்சேரி. அந்நகருக்கு அருகே உள்ள முருகன் தலமான மயிலமே அவரது அபிமானத்தைப் பெற்று பாடல் தலமாக விளங்குகிறது. மயிலம் ஸ்ரீ ஷண்முகன் வண்ணப்பாட்டு (1920) மயிலம் ஸ்ரீ சிவசண்முகக் கடவுள் பஞ்ச ரத்நம் (1925)மயிலம் சுப்பிரமணியர் துதி (1926) ஆகிய பாடல் தொகுதி மற்றும் சிறுவர் சிறுமி தேசியகீதம் என்ற தொகுதியில் சக்தியைக் குறித்து ஓர் இசைப்பாட்டும் பாடியுள்ளார்.

இப்படி, ஆன்மிக வழியில் நின்றிருந்தாலும் புரட்சிக்கவிஞர் காலச் சூழலால் சமயத்தில் ஏற்பட்ட மாற்றங்களைக் கண்டும், சமூக பாதிப்புகளைக் கண்டும், மனம் கசந்து அந்நெறிவிட்டுத் திராவிட இயக்க உறுப்பினராகத் தன்னை இணைத்துக் கொண்டு, தந்தை பெரியாரின் பாசறையில் புதிய தளபதியாக வீற்றிருந்து தமிழுக்கும் தமிழருக்கும் ஆற்றியுள்ள தொண்டு அளப்பரியது.

அடிப்படையில் குமரகுருபரரின் வரலாற்றைத் தன் எழிலார்ந்த தமிழ்வழியாகப் பாரதிதாசன் படைத்து எதிர்பாராத முத்தம் நூலின் இரண்டாம் களமாக ஆக்கியிருக்கிறார். இதுபற்றிக் கூறும்போது புதுவை சிவ இளங்கோ இவ்வாறு எழுதுகிறார்; ''இத்தகு கருத்துக்கு அடிப்படையாகவும், 'எதிர்பாராத முத்தம்' முதற்பதிப்பு நூலின் சிறப்புரை அமைகிறது. இந்தச் சிறப்புரையை அளித்தவர் தமிழாசிரியர் கவிஞர் ச. சிவப்பிரகாசம் அவர்கள். பாரதிதாசனின் நெருங்கிய தோழரும், தலைமாணாக்கருமான அவர் தனது சிறப்புரையில்'' குமர குருபரர் முருகன் அருளால் ஊமைநிலை நீங்கப் பெற்றதாகவும் அவர் அநேக துதிநூல்களை இயற்றிப் பின் தருமபுர ஆதீன சந்நிதானத்தை அடைந்து, அச்சந்நிதானத்தை ஞான குருவாக ஏற்று ஞானதீட்சை செய்யும்படி வேண்ட, குருமகா சந்நிதானம் பிள்ளைக்கவியை, சிதம்பரம் போய்வரக் கட்டளையிட, அவ் வாணையின்படி சிதம்பரம் சென்று ஆடல்வல்லானைக் கண்டு வணங்கி சிதம்பரத்தின் பெருமைகளைப் பேசும் சிற்றிலக்கியம் ஒன்றையும் படைத்து விட்டுத் திரும்பினார் என்றும் பிறகும் சந்நிதானம் குமரகுருபரரை மீண்டும் காசிக்குச் சென்று கடவுட்பணி செய்து வரக் கட்டளையிட்டார் என்றும் பழைய வரலாறு விரிவாகக் கூறும்.

மேற்கண்ட அவ்வரலாற்றில் குருசந்நிதானம் குமர குருபரரை ஏன் வடநாட்டுக்கு அனுப்பினார் என்பதற்குரிய காரணம் ஒன்றும் கூறப்படவில்லை. ஆனால் பாரதிதாசனார் எழுதியுள்ள இந்த 'எதிர்பாராத முத்தம்'. அதற்குத் தகுந்த காரணத்தைக் கூறுவதாக இருக்கிறது என்று கூறியிருப்பதி லிருந்து குமரகுருபரரின் வடதிசைப் பயணம் பற்றிய ஆய்வு காரணமாகத்தான் அவரது வரலாற்றைப் பாரதிதாசன், 'எதிர்பாராத முத்தம்' என்ற படைப்பில் சேர்த்திருக்கிறார் எனக் கருதலாம்.

''இந்த எதிர்பாராத முத்தம் நூலின் இரண்டாம் பகுதியைக் குமரகுருபரரின் வரலாறாக அமைவதோடு பாரதிதாசனின் குமரகுருபரர் ஈடுபாடு நின்று போய்விட்டதாக நாம் எண்ணமுடியாது. ஏனெனில் 1941-ஆம் ஆண்டு தன்னில் 'எதிர்பாராத முத்தம்' திரைப்படம் ஆக்கும் முயற்சி நடை பெற்றபோது அதற்கான திரைக்கதை வசனம், எழுதும்

பொறுப்பைப் பாரதிதாசனிடமே ஒப்படைத்தனர். சேலம் மார்டன் தியேட்டர்சார் பாரதிதாசன் எழுதிய அந்தக் கதை வசனம் 'குமரகுருபரர்' என்று தலைப்பிடப்பட்டது. அதன் இரண்டாம் பகுதி பொன்முடி – பூங்கோதை என்று தலைப்பிடப் பட்டது. எதிர்பாராத முத்தம் நூலின் கதாநாயகன் பொன்முடி 21 அத்தியாயங்களில் வருகிறான். ஆனால் குமரகுருபரன் என்ற படைப்பின் கதைத் தலைவன் குமரகுருபரர் தான். இதில் பொன்முடி – பூங்கோதை காட்சிகள் 15 இருக்க குமரகுருபருக்கு 16 காட்சிகள் அமைகின்றன. எதிர்பாராத முத்தத்தில் குமரகுரு பரர் பகுதியை விட்டு விட்டாலும் கதை முழுமையாக இருக்கும். ஆனால் குமரகுருபரர் கதை வசனத்தில் குமரகுருபரரை நீக்கி விட முடியாது. காரணம் கதையின் மையமாகக் குமரகுருபரரை வைத்துத் தான் கதை மாந்தர்களைச் சுழல விட்டிருக்கிறார் பாரதிதாசன்''.

எதிர்பாராத முத்தம்; குமரகுருபரர் இந்த இரு காவியங் களிலும் குமரகுருபரர் இடம் பெறுகின்ற காட்சி அமைப்புகள். அவருக்கு கொடுக்கப்பட்டுள்ள உயர்ந்த இடம், இவற்றை யெல்லாம் ஊன்றிக் கவனித்தால் பாரதிதாசனின் நெஞ்சில் குமரகுருபரருக்கு ஒரு தனியிடம் இருப்பது உறுதிப்படும். இதற்குத் தக்க சான்று காண நாம் முனைந்தால் பொன்முடி பாத்திரத்தில் கூட குமரகுருபரரின் சாயல் சற்றே ஊடுருவி யிருப்பது தெரியவரும். உயிர்க்கொலை, வேள்விக்கு எதிர்ப்பு தமிழின் பெருமையை எடுத்துக் கூறல் என்ற பாவேந்தரின் உளப்பண்புகள் அனைத்துமே பொன்முடியின் மீது ஏற்றிக் கூறப்படும் பாங்கினை எதிர்பாராத முத்தத்தில் காணமுடிகிறது.

குமரகுருபரனின் கவின்மிகு சந்த நடையில் உள்ளம் நெகிழ்ந்த பாரதிசாசன் பிள்ளைக்கவியின் சாயலைத் தன் கவிதையில் அங்கும் இங்குமாக நடமாட விட்டிருப்பது அவர் கவிதையைப் படிப்போரால் உணர முடியும். சாதி, சமயம் போன்ற அமைப்புகளில் இருந்து பாவேந்தர் விலகி நின்றாலும் தமிழ் எனும்போது அதனைப் போற்றிப் புகழும் பண்டையப் புலவர்களை நன்றியோடு நினைவு கூறத் தவறவில்லை எனலாம். அவ்வகையில் பாவேந்தர் மனதைத் தொட்ட பிள்ளைக்கவியின் சிறப்புகளையும் புரட்சிக் கவிஞர் பிள்ளைக்கவியைத் தழுவிச் செல்லும் சிற்சில இடங்களையும் ஈண்டுக் காண்போம்.

**பிள்ளைக் கவி குமரகுருபரன்**

நற்றமிழ் புலவர்கள் பலர் இறைவன் தொடக்கச் சொல் விளம்ப, அச்சொல்லைத் தமது முதற்பாடலுக்குரிய முதற் சொல்லாக ஏற்றுக் கவிதை புனைந்துள்ளனர் என்ற ஒரு செவிவழிச் செய்தியுண்டு. அவ்வகையில் நக்கீரன், சுந்தரர், கம்பர், சேக்கிழார், கச்சியப்பர், அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள் எனும் குமரகுருபரதாசன் ஆகியோர் அசரீரி வாயிலாகத் தம் படைப்புகளுக்கு ஏற்ற சொல்லினைப் பெற்றனர் என்பர். ஞானசம்பந்தர் இறைவியிடமே அமுதுண்டு மூத்த பிள்ளைக் கவியாகத் திகழ்ந்தவர் எனச் சைவ சமயம் பகரும். நம் பிள்ளைக் கவியான குமரகுருபரன் இளமையில் ஊமையாக விளங்கினார். பின்னர், செந்தூர் முருகன் அருளால் வாய்பேசா நிலை மாறி அருந்தமிழ்க் கவிதைகள் நல்கினார். தமிழ்ச் செவ்வேளின் நிறைந்த அருளைப் பெற்று பிள்ளைக்கவியின் வரலாற்றைத் தமிழ்ப் பெரியோர்கள் பலரும் பாடியுள்ளனர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய குமரகுருபர சுவாமிகள் புராணத்தில் 338 விருத்தங்கள் கொண்டு பாடப்பட்டுள்ளது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம்முடைய புலவர் புராணத்தில் 42 திரு விருத்தங்களால் பிள்ளைக் கவியின் வரலாற்றைக் கூறியுள்ளார். சேய்த்தொண்டர் புராணம் அல்லது முருகன் அடியார் வரலாறு என்ற முருகவேள் பன்னிரு திருமுறையில் பன்னிரண்டாம் திருமுறையில் தேனூர் வரகவி வே. செ. சொக்கலிங்கனார் 280 பாடல்களில் குமரகுரு பரரின் வாழ்க்கையைச் சித்திரித்துள்ளார். இந்நூல் குமரகுருபர அடிகள் அடியார்க்கும் அடியேன் என முத்திரை இட்டுத் தொடங்கியது ஒரு தனிச் சிறப்பாகும். பாம்பன் சுவாமிகள் தமது காசியாத்திரை என்ற நூலில் பிள்ளைக் கவி பற்றியும் அவர் காசியில் மடம் அமைத்த வரலாறு பற்றியும் நான்கு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். 'முருகன் தொண்டர் சரிதம்' என்ற தலைப்பில் M. S. இராமச்சந்திர ஐயர் என்பார் உரைநடையில் பிள்ளைக்கவியின் வரலாற்றை விளக்கியுள்ளார். 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்' என்ற பெயரில் இலக்கிய வரலாற்று அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் குருபரரைப் பற்றி ஆய்வு நூல் ஒன்று செய்துள்ளார். 'குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்ற தலைப்பில் கா. சுப்பிரமணியபிள்ளை ஓர் நூல் செய்துள்ளார். இருபதாம் நூற்றாண்டு பாரதிதாசன் தனது

உன்னத படைப்பான எதிர்பாராத முத்தம் என்ற காப்பியத்தில் சரிபாதியினைக் குமரகுருபரர் வரலாற்றிற்கெனத் தந்திருப்பது காணத்தக்கது.

பொதுவாகப் பிறமதச் செல்வாக்கும் பிறமொழித் தாக்கு தலும் தமிழகத்தில் பரவலாகக் காணப்பட்ட நேரத்தில் தமிழ் நாட்டில் மடங்கள் தோன்றித் திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை என்ற அடிப்படை கொண்டு தமிழ்மொழி தழைக்கவும் தமிழ் மண்ணுக்குரிய சைவசமய நெறி வளரவும் பாடுபட்டன. இத்தகு சூழலில் தோன்றிய குமரகுருபரர், காலத்தின் போக்குக் கேற்பத் தமிழையும் இறைமையையும் (சைவ சமயத்தையும்) பாடினார். அவ்வாறு பாடும் போது தமிழுக்கும் தனி ஏற்றம் கொடுத்து, சிவன், உமை, முருகன், திருமால், கலைமகள் முதலி யோரை வடமொழியிலிருந்து பிரித்துத் தமிழ்த் தெய்வங்களாக மாற்றிப் பாடும் பாங்கு பிள்ளைக்கவிக்கே உரிய தனித்திறம் எனலாம். எடுத்துக்காட்டாகக் கலைமகள் பற்றிப் பாடும்போது அவரது கற்பனை எத்தனைச் சிறப்பு மிக்கது என்பதை விளக்கும். 'பிரமன் நாவில் இருக்கும் கலைமகள் அவன் வடமொழி பயின்ற செந்நாவின் நிறம்பட்டுத் தன் வெண்ணிறம் மாறு படாமலும், அவன் அண்பலிலிருந்து சுரக்கும் வடமொழியாகிய உமிழ் நீர் பட்டு எச்சில் ஆகாமலும் தமது (பிள்ளைக் கவி) உளமாகிய வெண்டாமரையில் குடிபுகுந்தாள் என அடிகள் வருணிக்கின்றார்.

> "துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
> சுதைநிறஞ் சிதைவுறாமே
> தொன்மறை கனிந்தூறும் அண்பல்நீ ரூறலில்
> தூத்துகில் நனைப்புறாமே
> நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
> நன்னெஞ் செனக் குடிபுகும்
> ஞானப் பிராட்டி" {(முத்து. குமர.-காப்பு – 9)

இப்பாடலில் குமரகுருபரர் தமிழின்பால் அவருக்கு இருந்த அன்பையும் வடமொழி இடத்து அவர் கொண்டிருந்த காழ்ப்பையும் எத்தனை நயமாக விளக்கியுள்ளார் என அறியலாம். பாரதிதாசன் தமிழ்மேற் கொண்ட காதலுக்குச் சான்று பகர்தல் என்பது கதிரவன் ஒளியில் கைவிளக்கு ஏற்றியதற்கு ஒப்பாகும். அவர் பாடல் அத்தனையுமே தமிழைச் சிறப்பிப்பது தான். காதல் வயப்பட்டோர் தமது காதலியர்க்காகச் செயற்கரிய காரியம்

சைவம் தழைக்க வாழ்ந்த தருமபுரத்தின் தலைவராக விளங்கிய மாசிலாமணி தேசிகரைப் பற்றிக் குறிப்பிடும்போது சீர்மாசிலாமணித் தேசிகனார் எனவும் அவர் வாழும் தருமபுரத்தைத் திருமலிந்து மக்கட்குச் செம்மை பாலிக்கும் தருமபுரம்' என்றும் பாராட்டுகிறார். காலச் சூழலால் நிலைமாறி விட்ட தருமபுரத்தைக் கூறும்போது இவ்வாறு வருணிக்கிறார்: வடமொழியின் ஆளுமையும், ஆரியர்களின் செல்வாக்கும் தமிழ் மடங்களை ஆக்கிரமித்துத் தமிழைப் புறக்கணிக்கின்றன என்ற சினத்தின் காரணமாகப் பாவேந்தர் சற்றுக் கடுமையாகவே மடத்து நிருவாகிகளைச் சாடுகிறார்.

தமிழகத்தில் தமிழ்ப் பயிர் – அது
தமிழர்கட் கெல்லாம் உயிர்
தமிழிற் சிவம் பெரிதென்றால் – அது
தலையின் கிழந்த சிறுமியர் – செந்தமிழ்
மொழியை வெறுப்பதேன்
சிரி இருந்திட வேண்டுமாம் – தமிழ்த்
திரு ஒழிந்திட வேண்டுமாம்
குரு வென்றெண்ணிய தமிழர்கள் – இனிக்
குருக்கள் என்றிட வேண்டுமாம் – செந்தமிழ்
மொழியை வெறுப்பதேன் (ப. 1845)

அதேபோன்று மதங்களின் வருகையால் தமிழ் புறக்கணிக்கப் பட்டது என்பது புரட்சிக்கவிஞர் கருத்து ஆகவே தான் அவர்,

எல்லாமதங்களும் நம் தமிழ்க்கே – மிக
எதிர்ப்புடையன என் மானே
பொல்லா மதங்கள் தொலைவ தெந்நாள் – தமிழ்
பொலிவ தெந்நாள் செந்தேனே? (ப. 1843)

எனக் குமுறுகிறார்.

தமிழகத்தில் வெள்ளையர் வருகையால் ஏற்பட்ட சூது வாதுகளால் பாதிக்கப்பட்ட தமிழ்ச் சமூகம் பொருளின்பால் நாட்டம் கொண்டு கயமைக்கும், தீமைக்குமே முதலிடம் தந்தது. தமிழ்நாட்டு மடங்களும் கூட ஆரியர்களின் கூட்டுறவால் தங்கள் கடமையை மறந்து காழ்ப்புணர்ச்சிக்கும், பணச்சேர்க்கைக்கும், சாதிமதக் கோட்பாடுகளுக்கும் முக்கியத்துவம் தந்தன. இந் நிலையில்தான் பாரதிதாசன் முன்னர் சிறப்பித்துப் பாடிய தருமபுரத்தை மேற்கண்டவாறு சித்திரிக்கிறார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற மூன்று கோட்பாடுகளில் அவர்

உள்ளம் ஈர்க்கப்பட்டதாலும் தமிழ்ச் சமூகம் திருந்த வேண்டும் என்ற நோக்கத்தாலும் இக்காலத்திற்கு ஏற்றாற்போல அப்படிப் பாடியுள்ளார் எனலாம்.

பழமையைக் குறிப்பாக அக்கால நேர்மையை எண்ணி மகிழும்போது புரட்சிக் கவிஞர்தம் தமிழின் அழகே அழகு. எடுத்துக்காட்டாகக் குமரகுருபரன் முருகனருளால் பேசத் தொடங்கியதைக் கூறும்போது,

"கைம்மையாய் வாழ்வாள் நல்ல
கணவனைப் பெற்றதைப்போல்
சிட்சையே மகிழ வைத்தான்
நடமாடும் மயிலோன் என்றார்." (ப. 278)

எனக் குமரகுருபரரின் பெற்றோர் பெற்ற மகிழ்ச்சியைத் தான் பெற்ற இன்பமாக ஏற்றுப் பகர்வதைப் பார்க்கும்போது புரட்சிக் கவிஞர் நேர்மையிடத்துக் கொண்ட பற்று விளங்கும்.

தன்னேரில்லாப் புலவர் என்றும் சந்தக் கவிஞர் என்றும் நன்நடைப் பாவலர் என்றும் போற்றப்படும் குமரகுருபரராகிய பிள்ளைக் கவியிடத்து இந்நூற்றாண்டுக் கவிக்கோ தன் அன்பையும் பக்தியையும் செலுத்தும் முகத்தான் தனது படைப்பான 'எதிர்பாராத முத்தம்' தனில் சரிபாதி பங்களித்துப் போற்றியிருக்கிறார். ஆகவே எதிர்பாராத முத்தம் ஒரு பக்கம் காதற் காவியமாகவும் மறுபக்கம் ஒரு தமிழ் நெஞ்சத்தின் நன்றி நவில்தலாகவும் அமைகிறது.

**முடிவுரை**

பிள்ளைக் கவியாம் குமரகுருபரரிடம் பாரதிதாசன் ஈடுபாடு கொள்ளச் செய்த காரண காரியங்களைத் தொகுத்து இக் கட்டுரையில் இயன்ற அளவு கூறப்பட்டுள்ளது. புரட்சிக் கவிஞரின் நன்றி உணர்வை அத்தனை எளிதாக நாம் வார்த்தையில் கூறிவிட முடியாது. அது எதிர்பாராத முத்தம் ஒன்று ஒரு பெண்ணிடம் இருந்து ஓர் இளைஞனுக்குக் கிடைத்தால் அவ்வின்பத்தை எப்படி அறுதியிட்டுக் கூற முடியாதோ அதே நிலைதான் குமரகுருபரர் இடத்துப் பாரதிதாசன் கொண்ட அன்பு.

புரட்சிக் கவிஞரின் நெஞ்சில் நிறைந்து இன்று, எதிர்பாராத முத்தம் போன்ற இலக்கியப் படைப்புகளில் வாழ்ந்து கொண்டிருக்கும் குமரகுருபரரின் தமிழும் தமிழ்நடையும் ஏற்ற மிகு உவமைகளும் என்றும் நம்மைத் தமிழ் உணர்வு மிக்கவர்களாக வாழச் செய்யும்.

இப்பெரியோர்கள் காட்டிய நற்றமிழ் வழி நின்று நாளும் தமிழ் காப்போம்.

# குமரகுருபரரும் வெண்பா யாப்பும்

க. பூரணச்சந்திரன், திருச்சி.

குமரகுருபரர் தமது சில நூல்களில் வெண்பாக்களைக் கையாண்டுள்ளார். மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம், மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, தில்லைச் சிவகாமி யம்மை இரட்டை மணிமாலை போன்றவை அந்நூல்கள். இவற்றில் அவர் வெண்பாவைக் கையாண்டுள்ள விதம் பிற ஆசிரியர்களின் நிலைப்பாட்டிலிருந்து மாறுபடுவதாக இருக்கிறது.

தமிழில் குறள்வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா எனப் பல வகைகள் பேசப்பட்டாலும் நூல்களில் அதிகம் கையாளப் பட்டுள்ளது நேரிசை வெண்பா மட்டுமே. குறள்வெண்பா, திருக்குறள் நூலினால் பெருமை பெற்றுள்ளது. பிற வெண்பாக்கள் அதிக அளவில் கையாளப்பெறவில்லை. முத் தொள்ளாயிரம், நளவெண்பா போன்ற இலக்கிய ஆற்றல் மிக்க நூல்களானாலும், நீதிநூல்களானாலும், நேரிசை வெண்பாவே முதன்மை பெறுகிறது. தனிப்பாடல்களிலும் நேரிசை வெண்பா மட்டுமே மிகுதியாக இடம்பெற்றுள்ளது.

இவ்வாறு நேரிசை வெண்பா மட்டுமே மிகுதியாக இடம் பெறக் காரணத்தினை ஆராயும்போது, அதன் ஒலியமைப்பு முறையே முதற்காரணமாகத் தோற்றுகிறது. நேரிசை வெண்பாவைப் படிக்கும்போது, முதல் ஏழுசீர்கள் வரை வேகமாகச் சென்று ஒரு ஒலிஇடைவெளி தரப்படுகிறது. பிறகு தனிச்சொல். தனிச்சொல்லுக்குப் பிறகும் ஒரு சிறிய ஒலிஇடை வெளி சாத்தியம். இல்லாமலும் இருக்கலாம். தனிச்சொல் சேர்ந்தோ சேராமலோ பிறகுள்ள ஏழுசீர்களும் மிகவேகமாகச் சென்று முடிந்துவிடுகின்றன. மிக வேகமாக ஓடுகின்ற ஒருவன், ஏறத்தாழ தான் ஓடவேண்டிய பாதிதூரம் வந்தவுடனே சற்றே

நின்று, இளைப்பாறி, பிறகு மீண்டும் ஒரு 'தம்' பிடித்து வேகமாக ஓடி மீதியுள்ள தூரத்தையும் ஓடி முடிப்பது போன்ற ஒரு பாவனையை நேரிசை வெண்பா தருகிறது.

இதையே இன்னொரு விதத்தில் நோக்கலாம். அமைப்பு ரீதியாகப் பார்க்கும்போது நேரிசை வெண்பா, இரண்டு தனித் தனிப் பகுதிகளாகத் தானாகவே பிரிந்து நிற்கிறது. முதல் பாதி (முதல் 7 சீர்கள்) வெண்பாவின் தளைக்கேற்ப ஏழாம் சீரில் முழுச்சொல்லாகப் பெற்று நிற்பதனால் ஓர் இழுநிலை உருவாகிறது. இரண்டாம் பாதி (தனிச்சொல் அற்ற மீதி ஏழு சீர்கள்) குறள்வெண்பாவாகவே அமைந்து, நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்ப்பாட்டில் முற்றுப்பெறுவதன் காரணமாக, ஒரு முத்தாய்ப்புக் கிடைக்கிறது – மிருதங்கத்தின் தீர்மானம் போல. முதல் ஏழுசீர்களில் ஏழாம் சீரைச் சற்றே மாற்றினால் அதுவும் ஒரு குறள் வெண்பாவாகவே அமைந்துவிடும். ஆகவே ஒரு நேரிசை வெண்பாவில் தனிச்சொல்லை எடுத்துவிட்டால், தானாகவே இரண்டு குறள் வெண்பாக்களாகப் பிரியும் தன்மையினை அது பெற்றிருக்கிறது எனலாம்.

இந்த அடிப்படை இயல்பு, தமிழில் இருவித நிகழ்வுகளை யேனும் உருவாக்கியிருக்கிறது. (1) இரட்டைப் புலவர்கள் போன்ற இணைந்துபாடும் புலவர்களின்தோற்றம்; (2) திருக்குறள் குமரேச வெண்பா, சோமேசர் முதுமொழிவெண்பா போன்ற நூல்களின் தோற்றம்.

இரட்டைப் புலவர்களில் ஒருவர் வெண்பாவின் முதல் ஏழு சீர்களைப் பாட, மற்றொருவர் தனிச்சொல் உள்ளிட்ட அடுத்த எட்டு சீர்களைப் பாடி முடிப்பது வழக்கமாக இருந்துள்ளது. சிலசமயங்களில் பிற புலவர்களும் இம்மாதிரி விளையாட்டிலோ போட்டியிலோ ஈடுபட்டு வெண்பாக்களை யாத்துள்ளனர். இந்த நிகழ்ச்சிகள், வெண்பாவின் இரண்டாகப் பிரியும் இயல்பை வலியுறுத்துகின்றன. இம்மாதிரி வெண்பாக்களில் தனிச்சொல் இரண்டாவது புலவரின் பாட்டில் – அதாவது இறுதி ஏழு சீர்களுடன் இணைப்புக் கொண்டதாகத் தோற்றமளிக்கிறது.

சோமேசர் முதுமொழிவெண்பா, திருக்குறள் குமரேச வெண்பா போன்ற நூல்களில் இறுதி ஏழுசீர்கள் திருக்குறட் பாவாக அமைந்துவிட, முதல் ஏழுசீர்களும் தனிச்சொல்லும் ஒரு

புலவரால் பாடி இணைக்கப்படுகின்றன. இங்கு தனிச்சொல் திருக்குறட்பாவுடன் மிகுதியாகப் பொருந்துவதைவிட, முதலேழு சீர்களுடன் அதற்குள்ள ஈர்ப்பு அதிகம். இந்த நிகழ்வும் நேரிசை வெண்பா என்பது இரண்டு குறட்பாக்களின் இணைப்பு மாதிரியான தன்மை கொண்டதே என்பதை நிறுவுகிறது.

இந்த இயல்பினைக் கொண்டு நேரிசை வெண்பாவின் அமைப்பை மூன்றாகப் பகுத்துக் காணலாம்.

1. நேரிசை வெண்பாவின் முதலேழு சீர்களும் பின்னேழு சீர்களும் பிரிக்கமுடியாதவாறு ஓர் அங்ககக் கட்டான, இறுக்க மான இயல்பைக் கொண்டிருக்கும் வெண்பாக்கள்.

2. முதலேழு சீர்களோ அன்றி கடையேழு சீர்களோ இவற்றில் ஏதேனும் ஒன்று பிரிக்கக்கூடிய நிலையில் அமைய, இன்னொன்று தொடர்புவிடாத பகுதியாக அமைவது.

3. முதலேழு சீர்களும், பின்னேழு சீர்களும் தனித்தனியே எளிதில் பிரிக்கக் கூடிய பகுதிகளாக அமைந்து, ஒரு அங்ககக் கட்டற்ற தன்மையைக் கொண்டிருப்பவை.

இவற்றிற்கு உதாரணங்களைக் காணலாம்,

**1. அங்ககக் கட்டான வெண்பாக்கள்**

சான்றாக,

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்
ஈட்டங்கள் சூழ இருந்தானைக்-காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழில் தோள்வேந்தர்
வருந்தகையர் எல்லாரும் வந்து. (நளவெண்பா. பா. 4)

(யுதிட்டிரரை மன்னர் பலர் சென்றுகண்ட செய்தியை இப்பாடல் சொல்லுகிறது.) முதலேழு சீர்கள்-சூழ இருந்தானை என்று இரண்டாம் வேற்றுமைத் தொடராக முடிகின்றன. ஆகவே இவை பொருள் முடியவில்லை. கடையெழுசீர்கள்—வேந்தர் வந்து கண்டார்கள் பெருந்தகையை என்று முடிகின்றன. பெருந்தகை யார் என்று தெரியாததால் பொருள் முற்றுப் பெறாமலே உள்ளது. ஆகவே இரண்டு பாதிப்பகுதியிலும் தனித்தனியே பொருள் முற்றுப்பெறாமல் இரண்டும் சேர்ந்த போதுதான் பொருள் முற்றும் தன்மை கொண்டன இம்மாதிரிப் பாட்டுகள்.

**2. பாதிவெண்பா தனியே இயங்கும் தன்மையுடையவை**

குமரகுருபரரின் மீனாட்சியம்மை இரட்டை மணிமாலையி லிருந்து ஒரு பாட்டு:

நெஞ்சே திருக்கோயில் நீலுண்டிருண்ட குழல்
மஞ்சேந்து அபிடேக வல்லிக்கு – விஞ்சி
வரும் அந்தகா என் வழி வருதியால் இக்
கருமம் தகா என் கருத்து.

இதில் பின்னிரு அடிகள் மட்டும் தானாகவே தனித்தியங்கவல்ல குறள் வெண்பாவாக அமைகின்றன. முன்னிரு அடிகள் பொருளளவில் முற்றுப்பெறாமல் நிற்கின்றன. இம்மாதிரி வெண்பாக்களை இரண்டாகப் பிரிக்கலாம் ஆயினும், ஒரு பாதி மட்டுமே இயக்கம் பெறுவதாயிருக்கும்.

**3. இரு தனித்தனிச் செய்யுட்களாக இயங்கவல்லவை**

குமரகுருபரரின் நீதிநெறி விளக்கச் செய்யுள் ஒன்றை உதாரணமாகக் காண்போம்:

தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடங்கொன்று அறிவு அகற்றும் கல்வி-நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

இப்பாட்டில் நெடுங்காமம் என்னும் தனிச்சொல்லை எடுத்து விட்டால், இரண்டு தனித்தனிப் பகுதிகளாக இவ்வெண்பா பிரிந்து நிற்றல் காணலாம். முதற்செய்யுள் கல்வியின் நன்மையைக் கூறுவதாகவும், இரண்டாவது செய்யுள் சிற்றின்பத்தின் துன்பம் கூறுவதாகவும் அமைந்து தனித்தனிப் பாட்டுகளாகி விடுகின்றன.

பொதுவாக, அங்ககக் கட்டமைப்புடைய – பிரிக்கமுடியாத – வெண்பாக்களைக் காணும்போது, அவை ஒரே ஒரு வாக்கியமாக அமைந்துள்ளன. தனிச் சொல்லால் பிரிக்கப்படும் இரு பகுதிகளும் ஒன்றையொன்று அவாவி நிற்பனவாக அமைகின்றன.

ஒரு பாதி பிரிக்கக்கூடிய தன்மை அமைந்த வெண்பாக்கள் பலவகையான இயல்புகள் கொண்டு வரலாம். சான்றாக,

வாங்குவளைக் கையார் வதனமதி பூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான் – தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

இப்பாட்டில் பின்னிரு அடிகள் எச்சமாக அமைந்துவிட, முன்னிரு அடிகளாகும் ஏழுசீர்கள் முற்றாக அமைகின்றன. இதன் காரணமாக, பின்னாலுள்ள பகுதி தனித்தியங்கும் தன்மையற்றுப் போய்விடுகிறது. ஆனால் முன்னிரு அடிகளிலுள்ள முதலேழு சீர்கள் தனிப் பாட்டாக அமையும் தன்மை பெறுகின்றன. (வாங்குவளை... ... போயினான்). இதில் எழுவாய் இல்லா விட்டாலும் ஒன்றை அமைத்துக்கொள்வது கடினமல்ல.

இம்மாதிரி ஒரு பகுதி எச்சமாகவும் இன்னொரு பகுதி முற்றாகவும் அமைவன; ஒரு பகுதி எழுவாய்த் தொடராகவும் இன்னொரு பகுதி முற்றாகவும் அமைவன; ஒரு பகுதி முற்றாகவும் மறுபகுதி செயப்படுபொருள் தொடராகவும் அமைவன – என்றெல்லாம் இவற்றைப் பகுத்துக் காணலாம். இப்பகுப்புகளை இங்கே முற்றுமாக வகைப்படுத்தி நோக்குவது நமது நோக்கமன்று.

முன்பே கூறியவாறு குமரகுருபரர் பல நூல்களில் வெண்பாக்களைக் கையாண்டுள்ளார். இவற்றில் நீதிநெறி விளக்கம் ஒன்று மட்டுமே நீதிநூல். பிற அனைத்தும் படைப் பிலக்கியமாகக் கருதப்படத் தக்கவை.

தமிழிலக்கியங்களில் வெண்பா ஆளப்படும் தன்மையைப் பார்க்கும்போது, நீதிநூல்களில் மட்டுமே பிரியும் தன்மை கொண்ட, அங்ககக் கட்டான அமைப்பற்ற வெண்பாக்கள் மிகுதியாக ஆளப்படுகின்றன. முத்தொள்ளாயிரம், நளவெண்பா போன்ற நூல்களில் மிகுதியான வெண்பாக்கள் அங்ககக்கட்டான அமைப்புக் கொண்டவையாகவே உள்ளன. அதாவது பிரிக்க முடியாத அமைப்புகொண்டவாறே அவை அமைக்கப்பட்டுள்ளன. நீதிநூல்களில் பிரியும் தன்மை கொண்டனவாக அமைந்திருப்பது எளிதாக மனனம் செய்வதற்கு வழிவகுக்கும். இரண்டுபகுதிகளில் ஒன்று உவமையாகவும் இன்னொன்று பொருளாகவும் என்பன போன்று அமையலாம்; அல்லது இரண்டு தனித்தனி அறவுரைகள் அருகருகிருக்குமாறு அமையலாம்; எவ்வாறாயினும் அவற்றைத் தனித்தனியே நினைவுகொள்ளுதல் எளிது.

கதைக்கவிதைகள் போன்றவற்றில் இரண்டாகப் பகுக்கப் படும் தன்மையை வெண்பா கொண்டிருப்பது இலக்கிய நயத்தைச் சிதைக்கும். ஒரு பாட்டு என்னும்போது அதன் அத்தனை உறுப்புகளும் ஒருங்குசேர்ந்து இசையும் ஒருமைப்பாடு அதற்குத் தேவையானது. பகுபடும் தன்மை ஒருமையைச் சிதைத்து விடுவதால் உணர்ச்சி சிதைந்துபோக நேரிடும்.

குமரகுருபரர், மேற்கண்ட மூவகை வெண்பாக்களையும் கையாள்கிறார் என்றாலும் அவரது ஆளுகையில் பிரிக்கக்கூடிய தன்மை கொண்ட, ஒருமையற்ற வெண்பாக்களே மிகுதியாக இருக்கின்றன. பின்வரும் புள்ளி விவரம் இதனை விளக்கும்.

| எண் | இலக்கியம் | முதல்வகை (பிரிக்க இயலாதவை) | இரண்டாம் வகை | மூன்றாம் வகை (பிரிக்கக் கூடியவை) |
|---|---|---|---|---|
| 1. | மதுரைக் கலம்பகம் | 7 | 2 | 5 |
| 2. | நீதிநெறி விளக்கம் | 9 | 16 | 75 |
| 3. | திருவாரூர் நான்மணிமாலை | – | 4 | 7 |
| 4. | சிதம்பரச் செய்யுட் கோவை | – | 5 | 8 |
| 5. | பண்டாரமும்மணிக் கோவை | – | 3 | 8 |
| 6. | காசிக்கலம்பகம் | 1 | 5 | 7 |
| 7. | மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை | 2 | 3 | 5 |
| 8. | சிவகாமியம்மை இரட்டை மணிமாலை | 3 | 3 | 4 |
| | மொத்தம் | 22 | 41 | 119 |

மேற்கண்ட புள்ளி விவரம், குமரகுருபரர் ஒருமைத் தன்மையற்ற, இரண்டாகப் பிரிக்கக்கூடிய தன்மையுடைய வெண்பாக்களையே மிகுதியாகக் கையாளுகிறார் என்பதை விளக்கவல்லது.

பொதுவாக, நீதிநூல் என்ற முறையில் நீதிநெறி விளக்கத்திலுள்ள வெண்பாக்கள் பிரிக்கக்கூடிய தன்மை வாய்ந்தனவாக இருத்தல் எதிர்பார்க்கக்கூடியது. ஆனால் பிற நூல்களில் இத்தன்மை எதிர்பார்க்க இயலாதது. இவ்வாறு அமைவதற்கு குமரகுருபரரின் ஆழ்ந்த நீதிநெறி யுணர்வும் பக்தித்தன்மையுமே காரணமாக அமைந்திருக்கக்கூடும்.

பிரிக்கக்கூடிய தன்மை வாய்ந்த வெண்பாக்கள், இரண்டு தனித்தனித் தொடர்களாக அமைவதால் பெரும்பாலும் முதலேழு சீர்களில் வரும் பகுதி வினைமுற்றினை இறுதியில் கொண்டு அமைகின்றது.

கற்றார்க்குக் கல்வி நலனே கலன் அல்லால்
மற்றோர் அணிகலன் வேண்டா (வாம்) – (முற்ற) முதற்பகுதி
முழுமணிப்பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக்கு அழகு செய்வார் இரண்டாம் பகுதி
கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றந் தமதே பிறிதன்று – (முற்றுணர்ந்தும்) முதற்பகுதி
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன். இரண்டாம் பகுதி

இம்மாதிரி இறுக்கமற்ற – இரண்டாகப் பிரியக்கூடிய தன்மை கொண்ட வெண்பாக்களை மிகுதியாகக் கையாளுதலே குமரகுருபரரின் தனிச்சிறப்பாக அமைகின்றது. நளவெண்பா ஆசிரியர், இறுக்கமான வெண்பாக்களைக் கையாளுவதில் சிறப்புற்றுத் திகழ்கிறார்; காளமேகப் புலவரோ இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட – ஒரு பகுதியை மட்டும் தனிப்பாட்டாகப் பகுக்கக்கூடிய வெண்பாக்களைப் படைப்பதில் தலைசிறந்து விளங்குகிறார்.

# குமரகுருபரர் படைப்பில் பெண்கள்

இலெ. பேபி, புதுவை

தமிழ் இலக்கிய வரலாற்றில், வரலாறுகள் திட்டமிட்டு சில காலப்பகுதிகளாக அமைக்கப்பட்டு இருந்தாலும், எந்த காலப் பாகுபாட்டிற்கும் அடங்காமல் பல சமயங்களில் மிகப்பெரும் புலவர்கள் தோன்றியுள்ளதை மறுப்பதற்கில்லை 14–15 ஆம் நூற்றாண்டில் அருணகிரிநாதரும், 16ஆம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியரும், 17-ஆம் நூற்றாண்டில் குமரகுருபரரும், 18-ஆம் நூற்றாண்டில் தாயுமானவரும் தோன்றி தமிழ் இலக்கியத்தை மட்டுமல்லாமல், சைவ சமயத்தையே, தங்கள் பாடல்களால் மேம்படுத்தியவர்கள்.

இந்த வளர்ச்சி நிலையில் சைவ சமயமானது பழைய காலம் தொடங்கி வளர்ந்து வந்திருக்கிறது என்று நமக்குத் தெரிந்தாலும், கோச்செங்கட் சோழர், காரைக்கால் அம்மையார், திருமூலர் ஆகியோர் வாழ்ந்த ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கி இடையறாது வளர்ந்து வந்திருக்கிறது.

இவ்வழியில் 17 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தோன்றிய குமரகுருபரர் செவ்வனே சமயப் பணியையும் இலக்கியப் பணியையும் செய்துள்ளார். அவர் எழுதியதாகக் கூறப்படும் பிரபந்த நூல்களில் பெண்களின் சித்திரிப்பு எவ்வாறு அமைந்துள்ளது என்பதை ஆராய விழைவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## குமரகுருபரரும் பெண்களும்

மனித சமுதாயத்தின் தோற்றத்திற்கு அடிப்படைக் காரணமாய்ச் சமுதாய வளர்ச்சியில் ஓர் அங்கமாய் அமைந்துள்ள பெண்களின் வாழ்வுநிலை இலக்கியங்களில் காலந் தோறும் பல்வேறு முறைகளில் சித்திரிக்கப்பட்டு வந்துள்ளது. ஆனால் இல்லற வாழ்வில் நாட்டமில்லாத குமரகுருபரர்

பெண்கள் குறித்த எண்ணங்களை எவ்வாறு கொண்டிருந்தார் என்று வெளிப்படையாகத் தெரியாவிட்டாலும், இவரின் வாழ்வில் இடம் பெற்ற இவரை ஈன்ற தாயார், இன்னபிற பெண்கள் மற்றும் பெண் தெய்வங்கள் பற்றிய செய்திகளை இவரின் படைப்பில் பதிவு செய்யப்பட்டுள்ளதால், அவற்றை ஆராய்வதன் மூலம் அறிய முடியும்.

ஒரு படைப்பாளனின் ஆழ்மனத்தில் தோன்றும் எண்ணங்களைப் பண்பாட்டிற்கு ஏற்ற வகையில் படைப்பாக வெளிவருகின்றன. அவ்வகையில் குமரகுருபரரின் படைப்பின் மூலம் பெண்களைப் பற்றிய வெளிப்பாடு எவ்வகையில் இருந்துள்ளது என்பதை அறிந்து கொள்ளலாம்.

17 – ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஒரு இலக்கியத்தை இன்றைய காலக்கட்டத்தில் ஒப்பிட்டுப் பார்த்தல் என்பது சற்று கடினமான விஷயம் தான். இருந்தாலும் பெண்கள் பற்றிய விழிப்புணர்வும், பெண்ணியச் சிந்தனைகளும் இன்றைக்கு வேக மாக வளர்ந்துவரும் காலக் கட்டத்தில் நம் பழைய இலக்கியங் களை மறுபரிசீலனை செய்யும் பொழுது பெண்கள் பற்றிய பல விஷயங்கள் நமக்குக் கிடைக்க வாய்ப்பிருக்கிறது. எனவே குமரகுருபரரின் படைப்பில் பெண்கள் பற்றிய ஆராய்ச்சி இன்றைக்கு இன்றியமையாததாகும். அவ்வகையில் குமர குருபரரின் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' என்ற ஒரு பிரபந்தத்தை மட்டும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் படுகிறது.

### மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் பெண்கள்

குமரகுருபரர், வைகுண்டத்திலிருந்து யாத்திரையாகத் திரு ஆலவாய் என்று சொல்லப்படுகின்ற மதுரைக்கு வந்தார். அப்பொழுது மதுரையில் திருமலை நாயக்கர் ஆட்சி செய்து வந்தார். அம்மன்னர் முன்னிலையில் மீனாட்சியம்மை திருக் கோயிலில் குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழைப் பாடியருளினார்.

'பிள்ளைத்தமிழ்' என்பது தெய்வத்தைக் குழந்தையாகப் பாவித்து அதன் குணநலன்களை வளர்ச்சிக்கேற்ப பத்து பருவங் களாகவும் இயல்பாகவும் கற்பனை அமைத்துப் பாடி வருகின்ற ஒரு பிற்காலத்துப் பிரபந்த வகையாகும். 'பிள்ளை' என்பது

ஆண், பெண் என்ற வேற்றுமையின்றிக் குழந்தை என்று மட்டுமே குறிப்பிடப்படும். பிள்ளைத்தமிழ் என்பது இலக்கண நூல்களில் பிள்ளைக்கவி, பிள்ளைப்பாட்டு, என்றெல்லாம் சொல்லப்படு கிறது. என்றாலும் தமிழ் என்ற பிரபந்த பெயரில் அமைந்த சிறப்புடையது இந்தப் பிரபந்தம் ஒன்றே எனலாம்.

பரம்பொருளான இறைவன் மீது பிள்ளைத்தமிழ் பாடுதல் மரபன்று. பெரும்புலவர்கள் அனைவருமே முழுமையாக மரபைக் கடைபிடிப்பார்கள். பின்னால் வந்த புலவர்கள் தாங்கள் பாடும் பொருளின் தன்மைக்கேற்ப மரபைத்தழுவி மாற்றிக் கொண்டிருக் கிறார்கள். அந்நிலையில் குமரகுருபரர் முதன் முதலாக அம்பிகை மீது பாடுகிறார். இவருக்கு முன் அம்பிகை மீதோ ஏன் பெண்பாற் பிள்ளைத்தமிழே இல்லை எனலாம்.

சிவபிரான் தன் செயல்கள் அனைத்தையும் சக்தி மூலமாகத் தான் வெளிப்படுத்துகிறார். நம்மிடையே இன்றைக்கும் வழக்கி லிருக்கும் பழமொழி "சக்தி இல்லையேல் சிவனே என்றிரு" என்பதாகும். அந்த அளவிற்கு சக்தியான இறைவியும் முக்கியம்; வலிமையான சக்தியும் முக்கியம்.

இந்தியாவில் பல இடங்களில் சக்தி பீடங்கள் அமைக்கப் பட்டுள்ளன. இவை சக்தியின் பெருமையை நினைவூட்டுகின்றன. சிவ தலங்களாக இருந்தாலும், அம்பிக்கைக்குப் பிரதானம் கொடுக்கக்கூடிய தலங்களும் உண்டு. தனியே சக்தி தெய்வத்திற்கு ஆலயம் கட்டப்பட்டிருப்பதையும் நாம் அறிகிறோம்.

சைவ சித்தாந்தத்தில் சக்திக்கும் பிரதான இடம் உண்டு. இறைவன் அம்மையும் அப்பனுமாகக் காட்சியளிக்கிறான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இறைவியின் செயல்களைக் குறிப்பிடுகிறார் குமரகுருபரர். இருந்தாலும் அடிப்படையில் மீனாட்சியம்மையும் ஒரு பெண் என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

**மென்மையானவள்**

பெண் என்பவள் மென்மையானவள்; இதையே குமரகுருபரர் "ஏட்டில் எழுதிக்காட்ட முடியாத மழலை மொழி பேசுகின்ற சோலையில் வாழ்கின்ற பசுங்கிளியே" என்கிறார். கூவும் குரலில்

இனிமை உடையது குயில். பேசுவதில் பழக்கமுடைய ஒரே பறவை இனம் கிளி மட்டுமே. பெண்களில் குரல் இனிமைக்குக் குயிலையும், பேச்சு இனிமைக்குக் கிளியையும் உதாரணமாகச் சொல்வது மரபு. இங்கே மீனாட்சியம்மையின் மழலை மொழி, பச்சைக்கிளியின் மொழிபோல் திகழ்கிறது. எனவே, ''மழலை மொழி பேசும் பைங்கிளியே'' என்கிறார். குழந்தையின் மென்மைத் தன்மையையும் இனிமையையும் மீனாட்சியம்மை யோடு ஒப்பிடுவதை அறியமுடிகிறது.

**பொறுமைக்கு உறைவிடமானவள்**

''இன்னமுதஞ் சமைத்து அன்னைநீ. பன்முறை
இழைத்திட அழித்து அழித்து ஓர்
முற்ற வெளியில் திரியும் மந்தப் பெரும் பித்தன்
முன்நின்று தொந்தம் இடவும்''

என்ற செங்கீரைப் பருவப் பாடல் வரியின் மூலம், அம்மை அடிக்கடி உலகத்தைப் படைக்கிறாள்; அவ்வாறு படைப்பன வற்றைச் சிவபெருமான் அழித்து விடுகிறார்.

அன்னை, படைத்த உலகத்தில் ஒளி தருவதற்காக சூரியன், சந்திரன் இரண்டையும் உருவாக்குகிறார். அலை வீசுகின்ற கடலில் புவனமாகிய பழைய உண்கலத்தை எடுத்து அடிக்கடி கழுவி புதிய கூழைச் சமைக்கிறார்.

இவ்வாறு மீண்டும் மீண்டும் பலமுறை செய்ய, திரும்பத் திரும்ப அழிக்கின்றார் சிவபெருமான். "அன்னையே! நீ உண்டாக்கி வைக்க வைக்க மீண்டும் மீண்டும் அவற்றை அவர் அழித்துவிட்டுச் சும்மா இருக்கவில்லை. அழித்துவிட்ட காலத்தில், உன் முன்னால் நின்று ஆனந்தக் கூத்தாடுகின்றான்.'' மேலும் ''அவன் எவ்வளவுதான் அழித்துக் கொண்டே இருந்தாலும், அன்னையே! நீ கொஞ்சங்கூட வெறுப்போ, சினமோ கொள்ளாமல், நாள்தோறும் பிரபஞ்சத்தைப் படைத்தலாகிய காரியத்தைச் செய்கிறாய்'' என்கிறார் குமரகுருபரர்.

இவ்வாறெல்லாம் பொறுமைக்கு உறைவிடமாக மீனாட்சி யம்மையைப் படைத்துள்ளார்.

**கற்பக விருட்சமானவள்**

அம்மை கற்பக விருட்சம் போன்றவள், தேவலோகத்தில் உள்ள கற்பக விருட்சம் விரும்பியதை எல்லாம் தரக்கூடியது என்று சொல்வார்கள். அதைப் போன்று, அம்மையும் வேண்டுவார்க்கு வேண்டியதையெல்லாம் தரக்கூடிய தன்மை யுடையவள் ஆவாள். மரகதமணியானவள், அம்மை; கருவூலத்தில் வைக்கப்பட்ட மரகதமணியாகத் திகழ்கிறாள். அதாவது கருவூலமாகிய பொக்கிஷத்தில் வைத்துக் கவனமாகப் பாதுகாக்க வேண்டியது வைரமணி ஆகும். அதே போன்று, வேதங்களைப் பாடிய ஞானியர் தங்கள் சுலோகங்களின் பொருளாக அம்மையைப் பாடி வைத்துப் போற்றினார்கள்.

**துணையாகத் திகழ்பவள்**

அடியவர்களுக்குத் தோன்றாத் துணைவனாக விளங்கும் சிவபெருமானுக்கு உற்ற துணையாகத் திகழ்பவள் அம்பிகை. மேலும் ''துவாத சாந்தப் பெருவெளியில் துரியம் கடந்த பரநாத மூலத்தலத்து முளைத்த முழுமுதலே, சிவசக்தி இணக்கமே இயற்றை நடைமுறையாகும். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் திருவிளையாடல் சிவசக்தி இணையத்தின் மூலமாக இடைவிடாது நடைபெற்று நிகழ்ந்து வருகிறது.

**ஒளிவிளக்கானவள்**

அம்மையை ''அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே'' என்கிறார். அடியார்களின் உள்ளத்திலே வேர் ஊன்றிப் பதிந்திருக்கும் ஆணவமாகிய கிழங்கைத் தோண்டி எடுத்து எறிந்துவிடக்கூடிய அடியார்களின் உள்ளம் என்னும் கோயிலுக்கு ஏற்றப்படும் ஒளிவிளக்காகத் திகழ்பவள் அம்மை.

**ஓவியமானவள்**

''எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருஉள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே'' என்று அம்மையைக் குறிப்பிடுகிறார்.

கடல் சூழ்ந்த இந்த உலகத்திற்கு அப்பாற்பட்டதாய் நிற்கும் ஒப்பற்ற இறைவன், தனது உள்ளத்தில் அழகு பொங்கி வழியும்படியாக, உயிர் ஓவியமாக அம்பிகையைத் தீட்டி வைத்து மகிழ்கிறான்,

பரமானந்தமானவள்

"உருகி உருகி நெக்குஉள்
உடைந்து கசிந்திட்டு அசும்பு ஊறும்
உழுவல் அன்பில் பழஅடியார்
உள்ளத் தடத்தில் ஊற்று எடுத்துப்
பெருகு பரமானந்த வெள்ளப்
பெருக்கே சிறியேன் பெற்ற பெரும்
பேறே ... ... ... ... ... ... ... ... ..."

பக்தியாகிய அன்பின் முதிர்ச்சி, சிறுசிறு துளிகளாகக் கசிந்து ஊற்றுப் பெருக்கெடுக்கிறது. அவ்வாறு பெருக்கெடுக்கும் அடியார்களின் உள்ளம் என்றும் தடாகத்தில் பரமானந்தப் பெருவெள்ளமாகத் திகழ்பவள் மீனாட்சியம்மை. மேலும் கடவுளர்களைப் பற்றிச் சொல்லப்படுகின்ற பழைய வேதங்களின் பொருளாகவும், செந்தமிழிலிருந்து தோன்றுகிற இனிய சுவையாகவும், முளைத்த முழுமுதலாகவும், இருக்கின்றாள்.

தென்றலும் தமிழும் பொதிய மலையில் பிறந்தன என்று சொல்வது இலக்கிய மரபு. அம்மையைக் குறிப்பிடும்பொழு தெல்லாம் மதுரையையும் தமிழையும் சேர்ந்தே பாடுகிறார் குமரகுருபரர்.

"ஆறுமடுக்கும் தமிழ் மதுரைக்கு அரசே தாலோதாலேலோ',

"மதுரை துரைமகள் சங்கம் வளர்ந்திட நின்ற
பொலன்கொடி"

"மதுரைப்பதி தழையும் கொடி"

"தமிழ்மொழி பிறந்து பழமதுரையில் வளர்ந்தகொடி"

என்றெல்லாம் கூறுகிறார்.

இலக்கியப் படைப்பாளர்கள் தங்களின் படைப்புகளில் ஆண் பாத்திரங்களைச் சித்தரிப்பதற்கும், பெண் பாத்திரங்களைச் சித்தரிப்பதற்கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு. நல்லவர்கள், தீயவர்கள், உத்தமர்கள், ஊழல் பேர்வழிகள் இனிய பண்பினர், குரூர இயல்பினர், தத்துவவாதிகள், யதார்த்த வாதிகள் என்று வெவ்வேறு விதமான பண்புகள் கொண்டவர் களாக ஆண் பாத்திரங்கள் உருவாக்கப்படுகின்றன. பெண்

பாத்திரங்கள் படைக்கும் பொழுது அவள் தெய்வமாகட்டும். சாதாரண குடும்பத் தலைவியாகட்டும், மென்மையானவள், தன்மையானவள், பெருந்தன்மையானவள்; பிறருக்காக வாழ்பவள்; அழகானவள்; அதே சமயம் அடக்கமானவள்; அதாவது, ஆண் என்பவன் ஆளப்பிறந்தவன்; பெண் அவனையும், அவனுடைய வழித் தோன்றல்களையும் பேணப் பிறந்தவள். இத்தன்மை காலங்காலமாக நம் இலக்கியத்தில் நடைமுறையிலும் இருந்து வந்துள்ளது.

ஆனால் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் மேற்கூறிய கருத்துக்களை முன்வைத்திருந்தாலும், சிவ பெருமானின் பாதியாகச் சக்தியைப் பெருமையாக அளவற்ற ஆற்றலைக் கொண்டவளாக, படைப்பின் கடவுளாக, அதாவது தாயானவள் குழந்தையைப் பெற்றெடுக்கும் தன்மையோடு ஒப்பிட்டு, மீனாட்சியம்மையைப் படைத்தும், ஒரு ஒப்பற்ற தலைவியின் மாண்புகளை வெளிப்படுத்திய பாங்கிலும் குமரகுருபரர் ஒப்பற்றவராகத் திகழ்கிறார் என்பது முழுவதும் உண்மையானதாகும்.

# குமரகுருபரர் காட்டும் ஆனந்த நடனம்

அரு. மருததுரை, திருச்சி

சிவஞானச் செல்வராகிய குமரகுருபரர் தில்லையம்பதியைப் போற்றிப் பாடிய இலக்கியங்கள் சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை. இவ்விரண்டு இலக்கியங்களில் காணலாகும் சிவபெருமானின் ஆனந்த நடன வடிவினை மட்டும் இக்கட்டுரைப் பொருளாகக் கொண்டுள்ளது.

## ஆடலரசின் ஆடல் வடிவங்கள்

கூத்திற் சிறந்தது கூத்தன் கூத்து என்கிறது கூத்த நூல். அண்டத்தை ஆட்டுவிக்கும் இறைவனின் அருட்கூத்தினை அடியவர்கள் போற்றிப் பரவுவர். கூத்தநூல், ''நூற்றெட்டு ஆட்டம்நுதல் விழியோற்கே'' (ப. 151) என்று பேசுகிறது. நூற்றியெட்டுள் நாற்பத்தியெட்டு இறைவன் தானாக ஆடிய நடனங்கள். முப்பத்தியாறு இறைவியுடனும் ஒன்பது திருமாலுடனும் ஆடியவையாகும். மூன்று முருகப்பெருமானுக்காகவும் எஞ்சியவை மற்ற வானவர்களுக்காகவும் ஆடப்பெற்றவை (கூத்தநூல், ப. 184). இவற்றில் பன்னிரண்டு கூத்துக்களைக் கூத்தநூல் சிறப்பாகப் பேசுகிறது (கூத்தநூல், ப. 185) ஆனால், 'ஆகமங்கள் எழு வகையான ஆடல் வடிவங்களையே விவரிக்கின்றன. ஆடல் வல்லானின் ஆடல்வடிவங்கள் கலையுலகின் வியக்கத்தக்க வடிவமாகக் கருதப்படுகின்றன. இவ்வடிவத்தின் பிறப்பிடம் தமிழகமென்றும் இது தமிழகத்திற்கேயுரிய கலை வடிவமென்றும் (Anand Comaraswamy, The Dance of Siva, P. 93) அறிஞர்கள் கருதுகின்றனர்.

## ஆடல் மன்றம்

தில்லைப் பொதுவினை அற்புதமணிமன்று (537), பொன் மன்றம் (494), ஆடகச் சொம்பொனணி மன்றம் (495), மணி மன்றம் (541), பொற்றாது பொதிந்த சிற்சபை (451), திருமன்றம் (558) பசும்பொன்மன்றம் (517) என்று குமரகுருபரர் குறிப்பிடுகின்றார்.

"மன்றம் பொகுட்டா மதிலிதழா மாடங்கள்
துன்றும் புயல்கள் சுரும்பராப் – பொன்றங்கும்
நற்புண்ட ரீகமே யொக்கு நடராசன்
பொற்புண்ட ரீகபுரம்" (பா. 452)

என்ற பாடலடிகள் பொன்னம்பலத்தினைத் தாமரை மலருடன் உவமித்து விளக்குகின்றன. மேலும்,

"வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம் – கோதண்டம்
ஒற்றைமா மேரு வுமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம்" (பா. 458)

என்ற பாடலடிகள் சிற்றம்பலம் அவனது ஆடலுக்குப் போதுமே என்று வியந்து போற்றுவதும் சிந்தனைக்குரியது. அடியவர்களின் கடைத்தேற்றத்திற்காகவே இச்சிற்றம்பலத்தில் இறைவன் ஆடற் பொலிவு கொண்டு விளங்குகிறான் என்பது பெறப் படுகிறது.

**தலபுராணச் செய்தி**

தில்லையில் சிவபெருமான் பதஞ்சலிக்காகவும், புலிக்கால் முனிவனுக்காகவும் பதஞ்சலிக்காமல் ஆடுகிறார் என்பது தலபுராணச் செய்தி. இதனைக் குமரகுருபரர்,

"புரமொன் றிரண்டும் புகையழ லுண்ணப் புவனமுண்ணும்
சரமொன் றகிலஞ் சலிக்கவெய் தோய்சலி யாநடஞ்செய்
வரமொன் றிரண்டு மலர்த்தாளு மூன்றிற்றன் மாமகுடம்
பரமொன் றுமென்றுகொல் லோகொண்டவாவப்
பதஞ்சலியே". (453)

பதஞ்சலி முனிவர் ஆதிசேடராதலின் இரண்டு தாளும் ஊன்றுதலினால் பாரம் பூமியில் உறைத்துப் பூமியைச் சுமக்கும் தமக்குத் துன்பஞ் செய்யுமென்று கருதியோ ஒரு காலை மட்டும் ஊன்றும் நடன தரிசனத்தை அம்முனிவர் விரும்பினார் என்று கூறுகின்றார்.

"... மும்மை ஒரு மாசுண நின்றாட்டுவிக்க
நின்றாடு கின்றதென் கொனீர்" (455)

என்ற அடிகளும் பதஞ்சலிக்காக இறைவன் ஆடுவதாகக் குறிப்பிடுகிறார்.

"புலியூர் மன்றி னொலிகழன் மிழற்றப்
பரம நாடக மிருவரைக் காட்டும்
எரிநிறத் தைம்முகத் தெண்டோண் முக்கட்
கருமிடற் றொருவ நின்..." (524)

"புலிக்கால் முனிவர்க்குப் பொற்கழல் காட்டி" (பா. 463)

ஆகிய பாடலடிகள் புலிக்கால் முனிவர்க்கு ஆடல்கோலம் காட்டிய புராணச் செய்தியை விளக்குகின்றன.

## ஆனந்த நடனம்

புராணங்களும் ஆகமங்களும் ஆனந்த நடனம், அந்தி நடனம், உமை நடனம், கௌரீநடனம், காளிகாண ஆடிய நடனம், திரிபுராநடனம், சங்கார நடனம் என்ற எழுவகையான நடனங் களை (ஸ்ரீதத்துவநிதி, ப. 247) வரிசைப்படுத்துகின்றன.

மயிலை சீனி. வேங்கடசாமி காளிகா தாண்டவம் படைத்தல் செயலையும் சந்தியா தாண்டவம் காத்தல் செயலையும் சங்கார தாண்டவம் அழித்தல் செயலையும் திரிபுர தாண்டவம் மறைத் தலையும், ஊர்த்துவ தாண்டவம் அருளலையும் ஆக ஐந்து செயல்களை ஆனந்த தாண்டவம் (இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், பக். 42-43) காட்டுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

"ஐந்தொழினடிக்கும் பரமானந்தக் கூத்தர்" (பா. 460)

என்று குமரகுருபரர் குறிப்பிடுகின்றார். ஐந்தொழிலும் இயலும் படி நடனம் செய்யும் நடராசப் பெருமான் என்று ஆனந்த நடனத்தை விளக்குகிறார்.

## ஆகமங்கள் காட்டும் வடிவம்

நான்கு கரங்களையும் மூன்று கண்களையும் விரிந்த சடையையும் மயிலிறகு சந்திரன், ஊமத்தம்பூ, கங்கை ஆகியவற்றைச் சடையில் சூடிக் கொண்டும் இடது காதில் மகரமீன் குண்டலமும் வலது காதில் கர்ணபத்திரமும் அணிந்துகொண்டும், பூணூல், அணிகலன்களை மார்பில் தரித்துக் கொண்டும் புலித்தோலாடை அணிந்து கொண்டும், இடதுபுறத்தில் கரத்தை நீட்டிக் கொண்டும் வலது கரத்தில் அருட் குறிப்பினைக் காட்டு பவரும் வலதுகரத்தில் உடுக்கையினைத் தரிப்பவருமாகிய வெண்ணிறமுடைய பரமேசுவரர் முயலகன் மேலே வைத்த திருக்காலை வளைவாக வைத்துக் கொண்டும் செய்யும் நடன

வடிவமானது ஆனந்த நடனம் எனப்படும் வடிவம் என்று (ஸ்ரீதத்துவநிதி, ப. 248) காரணாகமம் குறிப்பிடுகின்றது.

கையம ரும்மழு நாகம்வீணை கலைமான் மறியேந்தி
மெய்யம ரும்பொடிப் பூசிவீசுங் குழையார் தருதோடும்
பையம ரும்மர வாடவாடும் படர் சடையார் (3. 365. 5)

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமின் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்
வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்த பொற்பாதமும் (4.81.4)

அறையும் பைங்கழ லார்ப்ப அரவா அனலேந்திப்
பிறையும் கங்கையுஞ் சூடிப் பெயர்த் தாடும் பெருமான்
(7.86.2)

என்று ஆனந்த நடன வடிவப் பொலிவை மூவர் முதலிகள் பரவுவர்.

மார்பில் வெண்ணீறு அணிந்து சடைகள் எட்டும் தாழவும், வீசியும், சுழலவும் எண்டோள்கள் வீசிய நிலையும் காதில் வெண்குழைகள் ஆடவும், சென்னியில் கங்கை நிலா அரவு ஆகியவற்றைச் சூடிக் கொண்டும், பட்டு, மான், புலித்தோலாடைகளை அணிந்து அவற்றைப் பாம்பினால் கட்டிக் கொண்டும், கபாலம், மான்மறி ஏன மருப்பு முதலியவற்றை மாலையாக அணிந்துகொண்டும் குமிழ் சிரிப்புடனும் குனித்த புருவத்துடனும் காலைத் தூக்கியவாறு ஆனந்த நடன வடிவம் மூவர் தேவாரத்தின் வழியாக அறியப்பெறுகிறது.

"...பசும்பொன் மன்றத் தொருதா ளூன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலி தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனா டுந்திறங் காண்மினோ காண்மினோ" (பா. 517)

"தொல்லுலகம் படுசுடிகைச் சுடர்மணி விளக்கேந்தும்
பல்பொறிய படவரவு மடுபுலியும் பணிசெய்ய
அந்த ரதுந் துபிமுழங்க வமரர்மலர் மழைசிந்த
இந்திரனு மலரவனுங் கரியவனு மேத்தெடுப்பச்

சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவி துணைக்கண்களிப்ப
ஆடகத் திருமன்றத் தனவரத நடஞ்செய்வோய்''
(பா. 538)

என்ற பாடலடிகள் வடிவப் பொலிவினை விளக்குகின்றன.

இவ்வடிவினைக் குமரகுருபரர் ஒரு காலூன்றி, ஒரு கால் தூக்கி ஒரு கையால் அருள் குறிப்பினையருளி ஒரு கையால் திருத்தாள் காட்டி, தமருகம், அழல் ஏந்தி, தலையிலே பிறையினைச் சூடி, எண்டோள் வீசி, அண்டர்கள் கண் களிப்பத் தொண்டர்கள் அகங்குளிப்ப இறைவன் நின்றாடுகின்றான் என்பது இரண்டு நூல்களின் வழி அறியலாகும் வடிவப் பொலிவாகும்.

**ஆனந்த நடன வடிவ விளக்கம்**

ஐந்தொழிலினையும் மெய்த் தொழிலாகப் பாலுண்குழவியின் பசுங்குடல் பொறாது என்று தாய் குழந்தைக்காக மருந்து கொள்வதைப் போன்று மன்னுயிர்த் தொகுதிகளுக்கு இன்னருள் கிடைப்ப வேண்டி வையத்தையளித்த உமையவள் காண்பதற்காகச் சிற்சபை பொலிவுறும்படியாக இறைவன் திருநடனமாடுகிறான் என்று குறிப்பிடும் குமரகுருபரர், மேலும் விரிவாகத் தத்துவ நோக்கில் முன்னோர் நெறி நின்று விளக்கு கிறார்.

''தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு'' (பா. 36)

என்று உண்மை விளக்கம் ஆனந்த நடனத்தின் வடிவினை விளக்குகின்றது. குமரகுருபரரும்,

''பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னானில வளாகமும்
ஏனைப் புவனமு மெண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுன் னமைத்தபொற் கரமே
தோற்றபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே

ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழி லைந்துநின் மெய்த்தொழிலா......" (பா. 451)

என்று விளக்குகின்றார். மேலும், 'ஐந்தொழினடிக்கும் பரமானந்தக் கூத்து' (பா. 460) என்றும் பேசுகிறார். ஆனந்ததாண்டவ ஐஞ்செயல்களையும் இயற்றுகின்றது என்று வடிவ விளக்கம் தருகின்றார்.

**ஆனந்த நடன வடிவச் சிறப்பு**

இந்நடனத்தைக் கண்டால் பிறவிப் பிணியழிந்து முத்தி யுண்டாகும் என்று வேதங்கள் விளக்குவதாகக் குமரகுருபரர் விளக்குகிறார்.

"திருநடங் கும்பிட்டொருவ னுய்ந்திலனாற்
சுருதியு முண்மை சொல்லா கொல்லென" (பா. 469)

"அருவருக்கும் உலகவாழ்வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வா மாடல் காட்ட" (பா. 534)

"தண்ணென் கடுக்கை கண்ணீர் கலுழ்தர
வெண்மதிக் கண்ணி சூடும்
கண்ணுதற் கடவுள்
புண்ணியப் பொதுவிலாடும் பூங்கழ லிறைஞ்சுதும்
விண்மிசைப் போகிய வீடுபெறற் பொருட்டே" (பா. 523)

என்ற பாடலடிகள் ஆடற்கோலம் வீடுபேறளிக்கும் என்பதனை விளக்குகின்றன.

"வளங்கு லாவரு மணங்க ளார்விழி
மயக்கி லேமுலை மயக்கி லேவிழு மாந்தர்காள்
களங்கு லாமுட லிறந்து போயிடு
காடு சேர்முனம் வீடுசேர்வகை கேண்மினோ
துளங்கு நீள்கழ றழங்க வாடல்செய்
சோதி யானணி பூதி யானுமை பாதியான்
விளங்கு சேவடி யுளங்கொ ளீர்மயன்
விடுத்த பாசமு மடுத்த பாசமும் விலங்குமே"
(பா. 535)

எமன் விடுக்கும் பாசக்கயிறும் அநாதியாகப் பொருந்தியிருக்கும் பாசமும் ஆடற்கோலம் கண்டால் விலகிவிடும் என்று பாடுகிறார். மேலும்,

"நின்றாடும் ஆடற்கு உருகாது இருத்திரால்
வன்றின் மறலி புடைத்துக் கொடிறுடைக்கும்
அன்று உருகீர் கெல்லாம்" (பா. 503)

என்ற பாடலடிகளும்,

"நெஞ்சகங் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரண மஞ்சலித் திறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே"
(பா. 548)

என்ற அடிகளும் ஆடலினைக் கண்டால் பெறலாகும் பயனை விரிவாகச் சுட்டுகின்றன.

சிற்றுயிர்க்கிரங்கும் பெரும்பற்றப் புலியூரான் திருக்கூத்தினை ஒரு முறை கண்டாலே பரகதி பெறுவது உறுதி. பற்றற்றவன், கொடியவன் என்றெல்லாம் இறைவன் கருதுவதில்லை. நோய்க்குரிய மருந்தினை அருவருப்புடன் முகம் சுளித்துத் தலை நடுங்கக் கண்ணீர் உகுத்து உண்டாலும் மகிழ்ச்சியோடு உண்டாலும் அந்த மருந்து இருவருக்கும் கொடிய பிணியை மாற்றுகின்றது. அதுபோன்றே உன் திருக்கூத்தினை எவர் கண்டாலும் பயன்பெறுவது திண்ணம் என்று அழகுற உவமை நலம் சிறக்க (பா. 451 : 68.83) விளக்குகிறார். மேலும்,

"கூடுங் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென
நாடு மவிநயத்தை நண்ணிற்றால் – ஓடியகட்
காதனார் காணவொரு கால்காட்டி கையமைத்து
நாதனார் செய்யு நடம்" (பா. 479)

என்ற பாடலில் இடத்திருவடியாகிய குஞ்சித பாதத்தைக் காட்டி அமைத்த திருக்கரம் ஒரு திருவடியைச் சுட்டுவது போலவும் அபயத் திருக்கரம் போதுமென்ற குறிப்பைக்

காட்டுவது போலவும் அமைந்தன என்று புதிய விளக்கம் தருவதும் இவண் சிந்தனைக்குரியது.

குமரகுருபரர் ஆனந்த நடனத்தின் பொலிவினையும் அடியவர்கள் அப்பொலிவினைக் கண்டுய்ய வேண்டும் என்பதனையும் மிக விரிவாக விளக்குகின்றார். உலக இயக்க நிலையின் வடிவமாகவும் மாயையில் அகப்பட்டு உழலும் உயிர்க் கூட்டங்களை மாயையிலிருந்து விடுவிப்பதே அதன் பணியாகவும் திருச்சிற்றம்பலத்தானின் ஆனந்த நடனம் அமைந்துள்ளது என்றும் குமரகுருபரர் விளக்கியுள்ளார்.

குறிப்பு : பாடல் எண்கள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, காசிமடம் (1952) பதிப்பில் உள்ளவாறு.

# குமரகுருபரர் இலக்கியப் பதிப்புகள்

மோ. மருதமுத்து, சென்னை

தமிழ் இலக்கிய வரலாறானது திட்டமான சில காலப்பகுதி களாக அமைந்தபோதிலும் பல சமயங்களில் மிகப்பெரும் புலவர்கள் தோன்றி எந்தக் காலப்பாகுபாட்டுக்குள்ளும் அடங்காமல் தனித்தபெரும் அருட்கவிஞர்களாக விளங்கி வந்துள்ளதைத் தமிழிலக்கிய வரலாற்றில் காணமுடிகிறது. 14, 15ஆம் நூற்றாண்டுகளின் இடைப்பட்ட காலத்தில் அருணகிரிநாதரும், 16-ஆம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியரும், 17-ஆம் நூற்றாண்டில் ஸ்ரீகுமரகுருபரரும், 18-ஆம் நூற்றாண்டில் தாயுமானவரும், 19-ஆம் நூற்றாண்டில் வள்ளலார் என்றழைக்கப்படும் இராமலிங்க அடிகளாரும் ஒப்பற்ற அருட்கவிஞர்களாகத் தோன்றித் தமிழிலக்கியத்தைத் தங்கள் பாடல்களால் வளப்படுத்தியுள்ளார்கள். இந்த வகையில் 17-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்கு உரியவராகிய ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளுடைய இலக்கியங்களையும், அவ் விலக்கியப் பதிப்புகள் மற்றும் அவற்றின் சிறப்பியல்புகள் ஆகிய வற்றை இக்கட்டுரையில் ஆய்வோம்.

## குமரகுருபரரின் இலக்கியங்கள்

குமரகுருபர அடிகள் இளமை முதற்கொண்டே தூய தவ வேடத்துடன் துறவு வாழ்க்கை நடத்தி, பல திருப்பதிகளுக்கும் சென்று இறைவனைத் தொழுது பல செந்தமிழ்ப் பாமாலை களை இயற்றியருளினார். திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, கயிலைக் கலம்பகம், மதுரை மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், புள்ளிருக்குவேளூர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், திருவாரூர் நான்மணிமாலை, சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, நீதிநெறி விளக்கம், பண்டார மும்மணிக்கோவை, சகலகலாவல்லிமாலை, காசித் துண்டி விநாயகர் பதிகம், காசிக்கலம்பகம், மதுரை மீனாட்சி யம்மை குறம், மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை,

தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை போன்ற பல இலக்கிய வகைகளில் நூற்றுக்கணக்கான பாடல்களை அருளி யுள்ளார். இவை அனைத்தும் கடந்த முந்நூறு ஆண்டுகளாக ஓலைச்சுவடிகளில் எழுதிப் பாதுகாக்கப்பெற்றும் சென்ற நூற்றாண்டிலிருந்து இவை அச்சுநூல்களாகப் பதிப்பிக்கப் பெற்றும் வந்துள்ளன. மேற்சொன்ன இந்நூல்களுள் கயிலைக் கலம்பகமும், காசித் துண்டிவிநாயகர் பதிகமும் உரியநிலையில் கிடைக்கவில்லை என்பதைப் பதிப்பு வேந்தர் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் தம் பதிப்பில் கோடிட்டுக் காட்டியுள்ளார்கள். பதிப்புகள் பற்றிய விவரங்களை இனிக் காண்போம்.

**பதிப்புகள் பற்றிய விவரங்கள்**

குமரகுருபர சுவாமிகளின் நூல்கள் முழுமையையும் பதிப்பித்தோர் பலர். அவர்களுள் சிறப்பாகச் சொல்லக் கூடியோரின் பதிப்புகள்: காஞ்சிபுரம் சபாபதி முதலியார் மூலப் பதிப்பு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் பதிப்பு, டாக்டர் உ. வே. சாமிநாதய்யரின் குறிப்புரை மற்றும் ஆராய்ச்சி யுடன் கூடிய பதிப்பு ஆகிய மூன்று பதிப்புகளுமாகும். இம்மூன்று பதிப்புகளும் 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' என்னும் பெயரினைப் பெற்று வெளிவந்துள்ளன. இதையன்றித் தனித்தனி நூல்களாகவும் பலர் இந்நூல்களைப் பதிப்பித் துள்ளனர்.

குமரகுருபர சுவாமிகளின் நூல்களை முதலாவதாக 1835-இல் பதிப்பித்தவர் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் ஆவர். இப்பதிப்பிற்குப் பிறகு முத்தையாப் பிள்ளை என்பவர் குமரகுரு பரரின் நூல்கள் முழுமையையும் 'குமரகுருபரரின் பிரபந்தங்கள்' என்ற பெயரில் ஆங்கில மொழிபெயர்ப்புடன் 1864இல் வெளி யிட்டிருக்கிறார். க.வ.திருவேங்கட நாயுடு என்பவர் 'குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு – அருஞ்செய்யுளுரைக் குறிப்புடன்' எனும் பெயரில் பதிப்பித்துள்ளார்கள். மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் சிறந்த முறையில் குறிப்புரை, ஆராய்ச்சிக் குறிப்புகள் முதலியன எழுதி முதற் பதிப்பாக ஸ்ரீகாசிமடத்துப் பொருளுதவியால் 1939-ஆம் ஆண்டில் பதிப்பித்தார்கள். இந்நூலின் இரண்டாம் பதிப்பாக 1947–ஆம் ஆண்டில் ஐயரவர்களின் குமாரர் திரு. கல்யாணசுந்தரய்யர்

அவர்களும், பின்னர் மூன்றாம் பதிப்பாக 1952-ஆம் ஆண்டில் ஐயரவர்களின் பேரர் திரு. க. சுப்பிரமணிய ஐயர் அவர்களும் இப்பிரபந்தத்திரட்டை ஸ்ரீ காசி மடத்துப் பொருளுதவியால் பதிப்பித்தார்கள். மேலும் இப்பிரபந்தத்திரட்டு நான்காம் பதிப்பாக 1961 ஆம் ஆண்டில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான்சுவாமிகள் அவர்களின் கட்டளைப்படி T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. ஐந்தாம் பதிப்பாக 1988-ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தாரால் இப்பிரபந்தத்திரட்டு, ஐயரவர்கள் செம்பதிப்பாகப் பதிப்பித்த வண்ணமே காசிமடம் திருப்பனந்தாள் அறக்கட்டளை நிதி வெளியீட்டின்வழி வெளியிடப் பெற்றுள்ளது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் குமரகுருபரர் இலக்கியங்கள் முழுவதையும் பதிப்பித்துள்ளனர். மதுரைத் தமிழ்ச்சங்கம் 'திருவாரூர் நான்மணிமாலை' என்னும் நூலினைப் பதிப்பித்துள்ளது. குமரகுருபரரின் இலக்கியங்கள் இதுவரையில் பதிப்பாகிய விவரம் பற்றிய குறிப்புகளை, 'குமரகுருபரரின் இலக்கியங்களும் பதிப்புகளும்' என்ற அட்டவணை இணைப்பில் காணவும்.

பதிப்புகள் மூலம் மட்டும் உள்ள பதிப்பு, மூலமும் உரையும் கொண்ட பதிப்பு, படங்கள் கொண்ட பதிப்பு, தமிழுடன் ஆங்கில மொழிபெயர்ப்பும் அடங்கிய பதிப்பு, தமிழுடன் ஆங்கிலம், இந்தி மொழிபெயர்ப்புகள் அடங்கிய பதிப்பு என இப்படிப் பலவிதப் பதிப்புகள் குமரகுருபர சுவாமிகளின் நூல்களில் காணப்படுகின்றன. குமரகுருபர சுவாமிகள் அருளிய பாடல்களின் திரட்டாகப் பதிப்பிக்கப்பட்ட பதிப்புகளில் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடுவால் இயற்றப்பட்ட உரையுடன் கூடிய பதிப்பு, டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களின் குறிப்புரை மற்றும் ஆராய்ச்சியுடன் கூடிய பதிப்பு ஆகிய இவ் விரண்டின் பதிப்புகள் பற்றி முதலில் இங்கு ஆராயப்படுகின்றன.

### இராமசாமி நாயுடுவின் உரைப்பதிப்பு

காஞ்சிபுரம் சபாபதி முதலியாரின் மாணாக்கருள் ஒருவரான, காஞ்சிபுரம் இராமசாமி நாயுடுவால் இயற்றப்பட்ட உரையுடன் கூடிய பதிப்பானது 1860-இல் வெளிவந்துள்ளது. இப்பதிப்பு சுவாமிகளை, 'திருக்கயிலாயப் பரம்பரைத் தருமபுர ஆதீனத்தைச்

சேர்ந்த காசிமடம் குமரகுருபர சுவாமிகள்' என்று குறிப்பிடு கிறது. இதனுள் தொடக்கத்தில் 'திருமகள் அகலாப் பரம வைகுந்த' என்னும் சிறப்புப் பாயிரப்பாடல் காணப்படுகிறது. தமிழில் பலவகையான புராணங்களிலும் இராமாயணம், பாரதம் போன்ற இதிகாசங்களிலும் பொருத்தமான இடங்களில் ஐதிகப் படங்கள் சேர்க்கப்பட்டிருப்பது போல இந்நூற்பதிப்பிலும் ஏராளமான படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. மீனாட்சியம்மைப் படம், குமரகுருபரர் பேசும் ஆற்றல் பெற்று முருகன்மீது பாடல் பாடுவது, மீனாட்சியம்மை குழந்தைப் பண்ணாகத் தோன்றி குமரகுருபரர் கழுத்தில் முத்துமாலையை இடுதல், பக்த கோடிகள், அரசவையினர் ஆகியோர் பிரசங்கம் கேட்டல், புள்ளிருக்குவேளூரில் முருகன், அர்ச்சகர் வடிவில் வந்து குமரகுருபரர்க்கு விபூதி கொடுத்தல், தேசிகர் முன்னிலையில் குமரகுருபரர் வீற்றிருப்பதும் பணிவதும், காசியில் மடம் கட்டி அறம் செய்க என தேசிகர், குமரகுரு பரர்க்கு ஆசீர்வதித்தல், சுவாமிகள் சிங்கத்தின் மீதேறி வருதல், மாமிசம் காய்கனிகளாக மாறுதல், சுடு இரும்பைக் கையில் ஏந்தி நிற்றல், அன்னதானம் வழங்கும் காட்சி இவ்வாறு பல படங்கள் அப்பதிப்பில் இடம்பெற்றுள்ளன. மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ் பருவம்தோறும் அதற்குரிய ஐதிகப் படங்களைப் பெற்றுக் காணப்படுகிறது. இவ்வாறு பிள்ளைத்தமிழுக்கும் இவருடைய சொந்த வாழ்க்கை வரலாற்றிற்கும் படங்கள் அமைத்திருப்பது வேறொரு புலவர் சரித்திரத்திற்கோ, நூல்களுக்கோ நாம் காண்பதற்கில்லை. எனவே, இப்பிரபந்தத் திரட்டில் படங்கள் அமைந்திருப்பது இந்நூலினைப் பதிப்பித்தோர் குமரகுருபரர் பாலும் அவரது பாடல்களின்பாலும் எவ்வளவு பக்தி கொண்டுள்ளனர் என்பதையும் அக்காலத்தில் இவருடைய சரித்திரம் எந்த அளவிற்கு நம்பப்பட்டு வந்துள்ளது என்பதையும் நாம் தெற்றென அறியமுடிகின்றது.

### டாக்டர் உ. வே. சாமிநாதய்யரின் பதிப்பு

'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' எனப் பெயரிய டாக்டர் உ.வே. சாமிநாதய்யருடைய பதிப்பு 1939-இல் வெளிவந்துள்ளது. இப்பதிப்பில் குமரகுருபர சுவாமிகளின் தனிச்செய்யுட்கள் சில அச்சிடப் பெற்றுள்ளன. நீதிநெறி விளக்கத்தின் பழைய பதிப்பில் வெளிவந்துள்ள சிறப்புப்பாயிரம்

ஒன்றும், குமரகுருமர சுவாமிகளின் சரித்திரச் சுருக்கமும், 101 பக்கங்கள் கூடிய விரிவான ஆராய்ச்சி முன்னுரையும், நூல்களின் கீழ்க்குறிப்புகளாக அருஞ்சொற்பொருள் விளக்கம், ஒத்த இடம் கூறல் போன்ற குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இப்பிர பந்தத்திரட்டில் எண் குறிப்பிடப்படாமல் மதுரை மீனாட்சி யம்மை இரட்டை மணிமாலை, மதுரை மீனாட்சியம்மை குறம், தில்லைச் சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை என்ற மூன்று நூல்கள் இடம் பெற்றுள்ளன. ஐயர் அவர்களுடைய காலத்திற்கு முன்பு அச்சு வடிவம் பெற்ற நூல்களில் குமரகுருபர சுவாமிகள் இயற்றியனவாக இந்நூல்கள் காணப்பட்டதால் அவற்றை இத் திரட்டில் சேர்த்துள்ளதாக ஐயர் அவர்கள் தம் முன்னுரையில் குறித்துள்ளதோடு அம்மூன்று நூல்களும் குமரகுருபரர் வாக்கு அல்ல என்பதற்குப் போதிய சான்றுகளையும் கொடுத் துள்ளார்கள். நூலின் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பகராதியும், அரும்பத முதலியவற்றின் அகராதியும் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு இப்பதிப்பு மிகவும் சிறப்புற்று அமைகிறது.

**நீதிநெறி விளக்கம் – பதிப்புகள்**

நீதிநெறி விளக்கம் என்னும் நூலானது அது தோன்றிய நாள் தொடங்கிப் பெரியவர்களும் பள்ளி மாணவ, மாணவிகளும் விரும்பிப் படித்து மனப்பாடம் செய்கின்ற மிகச் சிறந்த நூலாக இருந்து வருகிறது. இதன் காரணமாக இந்நூலினைக் கணக்கற்ற முறைகள் மூலம் மட்டும் தனியாகவும், உரையோடும், ஆங்கில மொழிபெயர்ப்போடும் பலர் பலவிதமாகப் பதிப்பித்துள்ளனர். பாளையங்கோட்டையிலிருந்த ஒரு பாதிரியார் இதை விரும்பிப் பதிப்பித்தார் என்றும் அச்சமயம் பாதிரியாருக்குத் தமிழ் கற்பித்து வந்த தேவர்பிரான் கவிராயர் என்ற சிறந்த பண்டிதர் அவர் விரும்பியபடி குமரகுருபரருடைய வரலாற்றையும் நூல்களையும் ஓரளவு குறிப்பிட்டு ஒரு சிறப்புப் பாயிரம் செய்து கொடுத்தார் என்றும் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் தம் பதிப்பில் எழுதியிருக்கிறார்.

1835-லிருந்து 1939-க்குள் நீதிநெறி விளக்கத்தை மூலமும் உரையுமாகப் பதின்மூவர் பதிப்பித்திருக்கிறார்கள் என்பது மக்கள் மனத்தில் அது பெற்றிருந்த சிறப்பிடத்தைக் காட்டு கின்றது. இப்பதின்மூவர் பதிப்புக்களிலும் மிகவும் சிறப்புடைய தாகக் காணப்படுவது அ. மகாதேவச் செட்டியார் அவர்களின்

பதிப்பாகும். தரும சிந்தனையைப் பரப்புவதற்காகவே நல்ல நூல்களை வெளியிடுவதை நியமமாகக் கொண்ட சாதுஇரத்தின சற்குரு புத்தகசாலையார் 1920-ஆம் ஆண்டில் 'நீதிநெறி விளக்க மூலமும் விளக்க உரையும்' என்ற நூலினை அ. மகாதேவச் செட்டியார் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்டுள்ளது. இவரும் இதனை நன்முறையில் பரிசோதித்து சிறப்பான அணிந்துரையுடன் பதிப்பித்துள்ளார். இவர் அணிந்துரையின் இறுதியில்,

> "ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் சேவடி வாழ்க
> மஹான்சாது ஸ்ரீசைஇரத்தின சற்குரு திருவடி வாழ்க
> தர்மமும் சத்தியமும் தழைத்தோங்குக
> பிரஜைகள் அனைவரும் அன்புற்று இனிது வாழ்க"

என்று ஒரு வாழ்த்து எழுதியிருக்கிறார். இதைப் படிக்கும்போது குமரகுருபரர்மீது இவருக்கிருந்த பக்தியையும் தெய்வச் சிந்தனையையும் அறியமுடிகின்றது.

அணிந்துரைக்குப்பின் நீதிநெறி விளக்கத்தின் செய்திகள் அடங்கிய அட்டவணை 5 பக்கம்; பின்னர் நீதிநெறி விளக்கத்தின் ஒவ்வொரு செய்யுளுக்கும் மூலமாய்க் கருதத்தக்க திருக்குறள் பாடலின் முதற்குறிப்பு அடங்கிய அட்டவணை 7 பக்கம்; அதன் பிறகு குமரகுருபர சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம் 18 பக்கம்; பின் நூல் மூலமும் விருத்தியுரையும் பாடல், பதவுரை, தொகுப்புரை, விருத்தியுரை, திருக்குறள் மேற்கோள், அதற்குப் பரிமேலழகர் உரை, பிறகு முத்தையாப் பிள்ளையின் ஆங்கில மொழிபெயர்ப்பு என்ற முறையில் எல்லாப் பாடல்களையும் அச்சிட்டிருக்கிறார். நூலின் இறுதியில் வழக்கமாயுள்ள அங்கங் களோடு வினைஉருபுகள், வெண்பா இலக்கணம் என்று 32 பக்கங்கள் கொண்ட ஒருதனி இலக்கணப்பகுதி ஆகியவை அமைந்திலங்குகின்றன. இவற்றைப் பார்க்கும்போது இவ்வளவு சிறப்பாக அச்சிடப்பெற்ற வேறுநூல், மீதியுள்ள பன்னிருவர் பதிப்புகளிலும் இல்லையென்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

பின்னர் 1943-இல் 'நீதிநெறி விளக்கம் மூலமும் உரை வளமும்' என்னும் பெயரில் காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளை என்பவர் தருமபுர ஆதீன வெளியீடாக நீதிநெறி விளக்கத்தைப் பதிப்பித்துள்ளார். இந்நூலின் பதிப்பில் முதற்கண் நூலிலுள்ள செய்யுட்களுக்கெல்லாம் இயன்றவரைச் செய்யுட் சொற்களைக்

கொண்டே சிறுதலைப்புகள் கொடுக்கப் பெற்றுள்ளன. அதன் பின்னர் செய்யுள்; அதனையடுத்து 1 என்ற பகுதியாகச் செய்யுளின் சொற்களையொட்டி நேரான பதவுரையொன்று புதிதாக எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது; 2 என்ற பகுதியாக வழக்காற்றிலுள்ள அந்நுவயம் என்ற கொண்டுகூட்டுப் பொருள் கோள்முறை கொடுக்கப்பெற்றுள்ளது; 3 என்ற பகுதியிற் செய்யுளின் கருத்துரை தரப்பட்டுள்ளது; 4 என்ற பகுதியில் இயன்றவரையிற் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் வழங்கும் ஒத்தக் கருத்துடைய மேற்கோள்கள் எடுத்துத்தரப் பெற்றுள்ளன; 5 என்ற பகுதியில் செய்யுளின் சொற்றொடர்களைப் பிரித் தெடுத்துத் தலைப்பிலிட்டு, கீழே அத்தொடரிலுள்ள சொற்கள் ஒவ்வொன்றிற்குமோ, சிறுதொடர்களுக்கோ பல உரைநூல் களிலுங்கண்ட சிறப்புரைகளும் கருத்துக்களும் எடுத்துக்கொடுக்கப் பெற்றுள்ளன. இறுதியாக, ஆங்கில மொழிபெயர்ப்புகளிற் சிறந்தனவாகக் கருதப்படுபவை காலமுறைக்கேற்றவாறு எடுத்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அவை ஒவ்வொன்றின் கீழும் அவ்வவற்றிற்குரிய உரையாசிரியரின் பெயர் முதலெழுத்துக்கள் தரப்பட்டுள்ளன. அவ்வாறு தரப்படாமற் காணப்பெறுங் குறிப்புக்கள், கருத்துக்களெல்லாம் அடியேனுடையனவாகும் (காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளை, முகவுரை பக். XI) எனப் பதிப்பாசிரியர் குறிப்பிடுகின்றார். நூலின் இறுதியில் பொருள் அட்டவணையொன்றும், செய்யுள் முதற்குறிப்பகராதியும், செய்யுட் பொருளகராதியும் (சொல்லகராதி) சேர்க்கப்பெற்று உள்ளன. இவ்வாறு இப்பதிப்பும் சிறப்புடன் காணப்படுகிறது.

**ஆங்கில மொழிபெயர்ப்புப் பதிப்புகள்**

குமரகுருபரரின் நூல்கள் முழுமையையும் ஆங்கில மொழி பெயர்ப்புடன் 1864-இல் முத்தையாப் பிள்ளை என்பவர் வெளியிட்டிருக்கிறார். நீதிநெறி விளக்கம் என்ற நூலிற்கு, எச். ஸ்டோக்ஸ் என்ற பாதிரியார் 1830-லும் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு 1860-லும், எஸ். வின்பிரட் என்ற பாதிரியார் 1914-லும், கிருஷ்ணசாமி முதலியார் 1917-லும் ஆங்கில மொழி பெயர்ப்பு செய்துள்ளனர். முருகனின் புகழ்நூல்களுள் சிறந்து விளங்குவது கந்தர் கலிவெண்பா. முருகப்பெருமானைப் போற்று தற்குரிய தோத்திர நூல்களுள் இதற்கு இணையான நூல் இல்லை என்றே சொல்லலாம். இந்நூலினை, ஆங்கிலத்தில்

டாக்டர் கி. சிவராமன் என்பவர் மொழிபெயர்த்திருக்கின்றார். சகலகலா வல்லிமாலை என்ற நூலினை ஸ்ரீரங்கநாதாசாரியார் என்பவர் இந்தியில் மொழிபெயர்த்திருக்கின்றார். இவ்விரு மொழிபெயர்ப்பு நூல்களையும் ஸ்ரீகாசிமடம் 1968இல் வெளியிட்டுள்ளது.

செந்தமிழ் இலக்கியத்தில் பிரபந்தத்திரட்டு என்ற தொகுப்பில் தலைசிறந்து விளங்குவது ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அருளிய பிரபந்தத்திரட்டு ஆகும். குமரகுருபரருடைய தமிழ்ப்புலமையின் விரிவையும் உலகியலறிவையும் சமய வுணர்ச்சியையும் தெய்வபக்தியையும் பிற சிறப்பியல்புகளையும் இவரது நூல்களிலிருந்து அறியமுடிகிறது. மேற்சொன்ன செய்திகளான பதிப்புகள் பற்றிய விவரங்கள், இராமசாமி நாயுடு அவர்களின் உரைப்பதிப்பு, டாக்டர் உ. வே. சாமிநாதய்யரின் பதிப்பு, நீதிநெறி விளக்கம் பெற்றுள்ள பதிப்புகள், ஆங்கில மொழிபெயர்ப்புப் பதிப்புகள் ஆகியவற்றின் மூலம் நாற்பதிற்கும் மேற்பட்டவர்கள் குமரகுருபரரது இலக்கியங்களைப் பதிப்பித்துள்ளனர் என்பதையும், அப்பதிப்புகளில் சிலவற்றின் சிறப்புகளையும் இக்கட்டுரை உணர்த்தி நிற்கின்றது. பின்வருகின்ற தமிழார்வலர்கட்கும், தமிழ் ஆய்வாளர்கட்கும் பயன்படும்வண்ணம், குமரகுருபரர் இலக்கியங்களின் பதிப்பு விவரங்கள் அட்டவணைப்படுத்தப் பெற்று இணைப்பில் தரப்பட்டுள்ளன.

## இணைப்பு: குமரகுருபரர் இலக்கியங்களும் பதிப்புகளும்

| வ.எண். | நூற்பெயர் | உரையாசிரியர் | பதிப்பாசிரியர் | வெளியீட்டகம் | இடம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | ஆதி குமரகுருபர அடிகள் நினைவுத் தமிழ்ப் பரிசுத் தொகுதி | — | வித்துவான் மு. அருணாசலம் பிள்ளை | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | அண்ணாமலை நகர் | 1945 |
| 2. | கந்தர் கலிவெண்பா உரையுடன் (முருகன் முந்நூல் மூலமும் உரையும் என்ற நூலில் மூன்றாவதாக அமைந்துள்ளது. பக். 63-78) | — | — | சைவசித்தாந்த மகா சமாஜம் | சென்னை | 1978 |
| 3. | கந்தர் கலிவெண்பா விரிவுரையுடன் | குகஸ்ரீ பு.பா.ரசபதி | இரத்தினசபாபதி நாயகர் | அமிர்தவசனி பிரசுராலயம் | சென்னை | 1953 |
| 4. | கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும் (பொழிப்புரை, விளக்கவுரையுடன்) | பேரா. கு. சுந்தரமூர்த்தி | பேரா. கு. சுந்தரமூர்த்தி | ஸ்ரீ காசி மடம் | திருப்பனந்தாள் | 1979 |
| 5. | கந்தர் கலிவெண்பாவும் சகலகலா வல்லி மாலையும் (ஆங்கில இந்தி மொழிபெயர்ப்புகளுடன்) | — | வித்துவான் முத்துக்குமாரசாமித் தம்பிரான் | ஸ்ரீ காசி மடம் | திருப்பனந்தாள் | 1968 |

| வ.எண். | நூற்பெயர் | உரையாசிரியர் | பதிப்பாசிரியர் | வெளியீட்டகம் | இடம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 6. | காசிக் கலம்பகம் மூலமும் அரும்பதக் குறிப்பும் | — | ஸ்ரீ முத்துக் குமாரசாமித் தம்பிரான் | ஸ்ரீ காசி மடம் | திருப்பனந்தாள் | 1967 |
| 7. | குமரகுருபரர் பிரபந்தங்கள் | — | காஞ்சிபுரம் சபாபதி முதலியார் | — | — | 1835 |
| 8. | குமரகுருபரர் பிரபந்தங்கள் (ஆங்கில மொழிபெயர்ப்புடன்) | — | முத்தையாப் பிள்ளை | — | — | 1864 |
| 9. | குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு (அருஞ் செய்யுளுரைக் குறிப்புடன்) | — | க. வ. திருவேங்கட நாயுடு | — | — | — |
| 10. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு (குறிப்புரை மற்றும் ஆராய்ச்சியுடன்) | டாக்டர் உ. வே. சாமிநாதையர் | டாக்டர் உ. வே. சாமிநாதையர் | ஸ்ரீ காசி மடம் | திருப்பனந்தாள் | 1939 (மு.ப) |
| 11. | ” | ” | சா. கல்யாணசுந்தர ஐயர் | ” | ” | 1947 (இ.ப) |
| 12. | ” | ” | க. சுப்பிரமணிய ஐயர் | ” | ” | 1952 (மு ப) |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 13. | " | " | T. M. குமரகுருபரன் பிள்ளை | " | " | 1961 (நா.ப) |
| 14. | " | " | — | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | அண்ணாமலை நகர் | 1988 (ஐ ப) |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை தெளிவுரையுடன் | தி. பட்டுச்சாமி ஓதுவார் | — | ஸ்ரீ காசி மடம் | திருப்பனந்தாள் | 1962 |
| 16. | திருவாரூர் நான்மணிமாலை உரையுடன் | சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் | — | தமிழகச் சைவநெறிக் கழகம் | திருச்சிராப் பள்ளி | 1992 |
| 17. | நீதிநெறி விள்க்கம் மூலமும் விளக்கவுரையும் | அ. மகாதேவச் செட்டியார் | அ. மகாதேவச் செட்டியார் | சாது இரத்தின சற்குரு புத்தகசாலை | — | 1920 |
| 18. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரைவளமும் | தருமபுரம் 24-வது சந்நிதானம் அவர்கள் | காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளை | தருமபுர ஆதீனம் | தருமபுரம் | 1943 |
| 19. | நீதிநெறி விளக்கம் விளக்கவுரையுடன் | ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் | — | ஒன்பதாம் குருபூசை விழா வெளியீடு | — | 1986 |
| 20. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும் | காஞ்சிபுரம் சபாபதி முதலியார் | — | — | — | 1835 |
| 21. | " | சி. முத்தையாப் பிள்ளை | — | — | — | 1864 |

| வ.எண். | நூற்பெயர் | உரையாசிரியர் | பதிப்பாசிரியர் | வெளியீட்டகம் | இடம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 22. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும் | கோ. இராசகோபால பிள்ளை | — | — | — | 19ஆம் நூற். பிற்பகுதி |
| 23. | " (முதல் 60 செய்யுட்கள்) | ஏ. எஸ். ஜெகராவ் முதலியார் | — | — | — | 1895 |
| 24. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும் | சி. வை. தாமோதரம் பிள்ளை | சி. வை. தாமோதரம் பிள்ளை | — — | — — | 19ஆம் நூற். பிற்பகுதி |
| 25. | " (முதல் 51 செய்யுட்கள்) | வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் | — | — | — | " |
| 26. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும் | அ. குமாரசாமிப் புலவர் | — | — | — | 1902 |
| 27. | " | தி. சுப்பராயச் செட்டியார் | — | — | — | 1928 |
| 28. | " | இளவழகனார் | — | — | — | 1939 |
| 29. | " (முதல் 36 செய்யுட்கள்) | மோ. வேங்கடசாமி | — | — | — | — |
| 30. | நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும் | — | ஊ. புஷ்பரதச் செட்டியார் | — | — | — |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 31. | நீதிநெறி விளக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | மொழிபெயர்ப்பாளர் எச். ஸ்டோக்ஸ் | — | — | — | 1830 |
| 32. | " | முத்தையாப் பிள்ளை | — | — | — | 1864 |
| 33. | " | எஸ். வின்பிரட் | — | — | — | 1914 |
| 34. | நீதிநெறி விளக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | கிருஷ்ணசாமி முதலியார் | — | — | — | 1917 |
| 35. | " | காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு அவர்கள் இயற்றிய உரையுடன் | — | — | — | 1860 |
| 36. | மதுரைக்கலம்பகம் மூலமும் அரும்பதக் குறிப்பும் | — | ஸ்ரீ முத்துக் குமாரசாமித் தம்பிரான் | ஸ்ரீ காசிமடம் | திருப்பனந்தாள் | 1967 |
| 37. | மதுரை மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் உரையுடன் | — | — | தி.தெ.சை.சி நூ. கழகம் | சென்னை | 1945 |
| 38. | " | டாக்டர் உ.வே. சாமிநாதையர் | T.M. குமரகுருபரன் பிள்ளை | ஸ்ரீ காசிமடம் | திருப்பனந்தாள் | 1961 |
| 39. | வைத்தீஸ்வரன் கோயில் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் மூலமும் உரையும் | காஞ்சி மகாவித்துவான் இராமசாமி நாயுடு | ஸி. குமாரசாமி | ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ் | சென்னை | 1945 (இ.ப.) |

# குமரகுருபரரும் குறிப்புப் பொருளும்

சி. மனோகரன், திருப்பனந்தாள்

கவிஞன் தான் கூறவந்த கருத்தை வெளிப்படையாகக் கூறாமல் மறைத்துக் கூறும்போது அதில் ஒருவகை அழகு மிளிர்கிறது. இதைக் கவிஞர்கள் பெரிதும் விரும்புகின்றனர். கவிதை படிக்குந்தொறும் புதுப்புது விளக்கங்களைத் தருதற்குக் காரணம் கவிஞன் கூறவந்த கருத்தைக் குறிப்பாக உணர்த்துவதேயாகும். இத்தன்மையை வடநூலார் தொனி என்பர். தமிழில் குறிப்புப் பொருள் எனலாகும். குமரகுருபரர் பாடல்களில் அமைந்துள்ள குறிப்புப் பொருள் எனப்படும் தொனி பற்றி இக்கட்டுரை விளக்குகிறது.

**தொனி-ஒரு விளக்கம்**

ஆனந்தவர்த்தனரின் 'த்வந்யாலோகம்' என்ற வடமொழி நூல் 'தொனி விளக்கு' என்ற பெயரில் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரிகளால் தமிழாக்கப்பட்டுள்ளது. இந்நூல் தொனி பற்றிய கருத்துக்களைக் கூறுகிறது.

தொனி தோன்றும் விதம், வாச்சியம், வியங்கியம் என்னும் இரு கூறுபாட்டினை உடையது. வாச்சியம் என்பது தமிழில் இடுகுறிப்பொருள் அல்லது வெளிப்படைப்பொருள் என்றும் வியங்கியம் என்பது குறிப்புப்பொருள் என்றும் பொருள்படும். இடுகுறிச் சொல்லாலும் பொருளாலுமே குறிப்புப்பொருள் விளக்கமுறும் என்றாலும் இடுகுறிப்பொருள் தோன்றாது. ஆடை ஆபரணங்களிலிருந்து மாறுபட்டு மகளிருடலிலே கவர்ச்சி தரும் வனப்புபோல அணிகளினின்றும் ஏனைய காவியப் பகுதி களினின்றும் வேறுபட்டு விளங்குவதுதொனி என்று விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. ஆகக் கவிதையின் ஆழத்தில் காணப்படும் பொருளும் கவிதையின் சாராம்சமும் தொனி என அறியலாம்.

**தொனி வகை**

வாச்சியத்தின் அடிப்படையிலும் வியங்கியத்தின் அடிப்படையிலும் தொனி பலவகைப்படுத்தப்பட்டுள்ளது. அதில் வியங்கியத்தின் அடிப்படையிலான வகை முதன்மையானது. அது பொருள் தொனி, அணித்தொனி, சுவைத்தொனி என மூன்று வகையாக்கப்பட்டுள்ளது.

**பொருள் தொனி**

கவிதையில் ஒரு பொருளைக் குறிப்பாகப் பெறுவது பொருள் தொனி. இது முற்றிலுமாக இடுகுறிப் பொருளிலிருந்து மாறுபட்டு குறிப்புப் பொருளைத் தருவதாகும்.

"இருவருக்கும் காண்பரிய ஈசர் மதுரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்கான் அம்மானை
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே ஆமாகில்
அருமை உடம்பொன்று இருகூறாவதேன் அம்மானை
ஆனாலும் காயமில்லை ஐயரவர்க்கு அம்மானை"
(மது. க. பா. 17)

என்ற பாடலில் சிவபெருமான் உடம்பு இரு கூறானது என்றும், இரு கூறாக ஆனாலும் ஐயர்க்குக் காயம் எதுவும் இல்லை என்றும் கூறப்பட்டுள்ளது. இதில் காயம் என்ற சொல் 'புண்' என்ற பொருளில் வந்தது போலத் தோன்றினும் அது உணர்த்தும் குறிப்புப் பொருள் சிறப்புடைத்து. சிவனின் ஒரு கூறு அம்பிகை, ஒரு கூறு திருமால் எனவே சிவனுக்கென்று உடம்பு இல்லை என்ற குறிப்புப் பொருளையே 'காயமில்லை ஐயரவர்க்கு' என்ற தொடர் தருகிறது. இச்செய்தியை 'ஒன்றே உடம்பு இங்கு இரண்டே இடும்பங்கு உடம்பொன்று இலார்' (மது. க., பா .7) என்ற தொடரில் குமரகுருபரர் வெளிப்படையாகக் குறித்துள்ளார்.

பதுமமொடு ஒழுகொளி வளையும் நின்நளினமு
கத்து மிடற்றும் உறப்
பனிமதியொடு சுவை அமுதமும் நுதலொடு
சொற்குதலைக் கண் நிறீஇ
முத்தமிழ் உததியில் வருமொரு திருமகள் (மீ. பி. பா 10)

என்ற பகுதியில் தாமரை போன்ற முகத்தினையும், சங்குபோன்ற கழுத்தையும், வளைந்த மதிபோன்ற நுதலையும், அமுதம்

போன்ற மொழியினையும் கொண்டு தமிழ்க்கடலில் தோன்றிய திருமகள் என்று மீனாட்சியம்மையை ஆசிரியர் குறிக்கிறார். இது இடுகுறிப்பொருள். 'முத்தமிழ் உததி' என்ற தொடர் இப்பகுதிக்குக் குறிப்புப் பொருள் தொனிக்க உதவுகிறது. பாற்கடலில் தோன்றியவள் திருமகள். தமிழ்க்கடலில் தோன்றியவள் மீனாட்சி. பாற்கடலில் திருமகளோடு தோன்றிய பதுமநிதி, சங்கநிதி, பனிமதி, அமுதம் போன்றவற்றை மீனாட்சியம்மை உடல் உறுப்பாகப் பெற்றிருக்கிறாள் என்பது குறிப்புப் பொருள்.

சிலை மதனைக் கண்ணழலால் செற்றனரே ஆமாகில்
மலை மகட்குப் பாகம் வழங்குவதேன் அம்மானை
வழங்காரோ அப்பாலும் மாலானால் அம்மானை
(காசிக். க. பா. 34)

என்ற பகுதியில் மன்மதனை எறித்தவர் மலை மகட்குப் பாகம் கொடுத்தது, அதன்பிறகு ஏற்பட்ட மயக்கத்தால் என்ற பொருள் விளக்கப்படுகிறது. இவ் இடுகுறிப்பொருள் 'அந்தப்பக்கம் திருமாலானால் வழங்காரோ' என்ற குறிப்புப் பொருளைத் தருகிறது.

**அணித் தொனி**

அணிகள் குறிப்பாய் அமைவது அணித்தொனியாகும். உருவகம் உவமை முதலிய அணிகள் அணித்தொனியாகத் தோன்றும்.

கறையாவுக்கு அஞ்சுறாது; அஞ்சுறூஉம் திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு - பிறை முடியோன்
கைம்மான் நடமுவந்த காற்புலிக்கு அஞ்சாது; அஞ்சும்
அம்மான் விழிமானைக் கண்டு (சிதம். செ. பா. 5)

என்ற பாடலில் பாம்புக்கு அஞ்சாத பிறைநிலா இறைவியின் நுதலைக் கண்டு அஞ்சுவதாகவும் புலிக்கு அஞ்சாத மான், மான்விழி மானைக் கண்டு அஞ்சுவதாகவும் செய்தி இடம் பெற்றுள்ளது. இப்பொருள்வழி பிறைநிலவு இறைவி நுதலுக்கும், மான் இறைவிக்கும் இறைவி விழிக்கும் உவமையாக்கும் திறம் தொனிக்கிறது.

கலைமகள் வாழ்க்கை முகத்தெனினும்
மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் - மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா; புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு (நீதி. வி; பா. 6)

என்ற பாடலில் கலைமகளையே தன் நாவில் கொண்டிருந்தாலும் பிரமன் புலவர்களுக்கு ஒப்பாகான். பிரமன் படைக்கின்ற உடல்கள் அழியும். புலவர்கள் படைக்கின்ற கவிதை அழியாது என்ற பொருள் இடம்பெற்றுள்ளது. இதில் படைப்புக் கடவுளைக் கவிதை படைக்கும் புலவனுக்கு உவமையாக்குவதே குமர குருபரரின் நோக்கம் எனத் தெரிகிறது. உவமை தொனியாய்க் கிடைக்கிறது.

பருந்தளிக்கும் முத்தலைவேல் பண்ணவற்கே அன்றி
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்கும் – திருந்த
வலனுயர் சிறப்பின் மன்றவாணன் அக்
குலமுனி புதல்வனுக்கு ஈந்த
அலைகடல் ஆகும் இவ் ஆயிழை நோக்கே

(சிதம். செ., பா. 82)

என்ற பாடலில் 'பாற்கடலாகியநோக்கு' என்பது உருவகம். இது, 'இருநோக்கு இவள்உண்கண் உளது ஒன்று நோய் நோக்கு மற்றது அந்நோய்க்கு மருந்து' என்ற உருவக விரியைத் தொனிக்கச் செய்கிறது.

### சுவைத் தொனி

கவியில் சுவை குறிப்பாக அமைவது சுவைத் தொனியாகும். இச் சுவைத் தொனி வாச்சியத்தால் பெறப்படுவது என்றாலும் அதின் வேறுபட்டது.

"மற்றொன்று இலையென் மருந்துக்குஅந்
தோசெக்கர் மாலை கொடார்
கூற்றொன்றல ஒருகோடி கெட்
டேன் கொழுந்தொன்று தென்றல்
காற்றொன்று இளம்பிறைக் கீற்றொன்று
கார்க்கடல் ஒன்று கண்ணீர்
ஊற்றொன்று இவளுக்கு உயிரொன்று
இலையுண்டு உடம்பொன்றுமே" (மது. க., பா. 6)

என்ற பாடலில் மருந்து போன்ற என் மகளின் காதல் நோய்க்கு ஒரு மருந்து இல்லை அந்தோ. ஒரு கூற்றுவன் அல்ல ஒரு கோடி கூற்றுவன் துன்புறுத்துவது கண்டு மனம் நோகிறேன். தென்றல் காற்றும் இளம்பிறைக் கீற்றும் துன்புறுத்த கண்ணீர் ஊற்றாக இருக்கும் இவளுக்கு உடல்தான் உண்டு, உயிர் இல்லை என்ற

பொருள் இடம் பெற்றுள்ளது. இது விரகதாபத்தை எடுத்துக் காட்டி இரக்கச் சுவையை மேலிடச் செய்கிறது.

"அம்மகோ எனும் விழும் அழும் எழுந்து நின்று
அருவிநீர் விழி சோர
விம்மும் ஏங்கும் மெய்வெயர்த்து வெய்துயிர்க்கும் என்
மெல்லியல் இவட்கம்மா" (மது. க., பா. 15)

என்ற பாடற்பகுதியில் தலைவி ஒருத்தி சிவபெருமான்மீது கொண்ட விரக தாபத்தால் தவிக்கும் நிலை பேசப்பட்டு இரக்கச் சுவை தொனிக்கிறது.

நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கியார்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு வென்பு நெறியக்
கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணாயலை
மட்டுடைத் தூறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மற்றிவன் முனிந்தாலுனக்
கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மையனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே (முத். பி. பா. 67)

என்ற பாடல் தண்ட உபாயத்தால் அம்புலியை விளையாட அழைப்பதாகும். இதில் அமைந்துள்ள சொற்களும் செயல்களும் வீரச்சுவையைத் தொனிக்கின்றன.

தொனி வாச்சியத்தின் வழியிலும் வியங்கியத்தின் வழியிலும் பல்வேறு வகைகளாக உள்ளது. அவற்றை நுணுகி அறியப்புகின் பெருகும். குமரகுருபரர் யாப்புத்திறத்திலும் கற்பனைத்திறத்திலும் கோலாச்சியிருப்பது போன்றே தொனியாம் குறிப்புப் பொருளிலும் சிறப்புற்றிருந்தார் எனக் காட்ட ஒரிரு வகைகளும் ஒரிரு பாடல்களுமே மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

## பாலகுமாரனின் சிம்மாசனம்

**வே. இரா. மாதவன், தஞ்சாவூர்**

முந்நூற்று ஐம்பது ஆண்டுகட்கு முன்பு தமிழகத்திலிருந்து வடக்கே காசி மாநகர் சென்று, அங்கு மாற்று மொழி மன்னனான நவாபின் அரசவையில் சிங்கத்தின் மீது அமர்ந்து வாதிட்டு, தமிழுக்கும் தமிழருக்கும் பெருமை சேர்த்த குமர குருபரரின் வாழ்க்கை வரலாற்றை இன்றைய இளைய தலை முறையினர் மிக எளிதில் உணரும் வண்ணம் 'சிம்மாசனம்' என்னும் புதினமாகப் படைத்து (1998) வெற்றி பெற்றுள்ளார் பாலகுமாரன். தமிழ் இலக்கிய ஆர்வலர்கள் மட்டுமே அறிந் திருந்த குமரகுருபரரை இன்றைய குழந்தைகள் முதல் இல்லத் தரசிகள் வரை அனைவருக்கும் அறிமுகப்படுத்தியிருக்கும் இந்நாவலாசிரியரின் எண்ணங்களைத் தொகுத்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

குமரகுருபரரின் தாய் தந்தையரின் இல்லற வாழ்க்கைச் சிறப்பினைக் கூறி நூலைத் தொடங்குகிறார் ஆசிரியர். தந்தை சண்முகக் கவிராயரின் புலமைச் சிறப்பையும், தாய் சிவகாமியின் குடும்பப் பாங்கினையும் இணைத்துப் பேசும் ஆசிரியர், அவர்கள் இருவரும் பிள்ளைப் பேற்றிற்காக ஏங்கிய நிலைகளையும் எடுத்துரைக்கின்றார். பிள்ளைப் பேறு வேண்டி, செந்தூர் முருகப் பெருமானைத் தொழுது வணங்கிய அம்மையாரின் அருஞ்செயல்களையும் நிரல்படக் கூறுகின்றார்.

அவர்களுக்குப் பிறக்கப்போகும் ஆண் குழந்தை அவர்களிடம் இருக்காது எனவும், அது உலக மக்களுக்காக வாழும் எனவும் ஓர் அந்தணர் முன்னதாகவே கூறியதாக இந்நூலாசிரியர் விவரிக்கிறார்.

"தமிழில் ஐந்தெழுத்து ஓதி, திருச்செந்தூர் முருகன் மீது சித்திரக்கவி பாடி, நமக்குக் குழந்தை வரம் வாங்குவேன். என் தமிழ், எல்லாம் கொடுத்தது போல எனக்குப் பிள்ளையும்

கொடுக்கும். அப்பிள்ளை நம் குடும்பம் விளங்க நமக்கு ஆனந்தம் நல்கும்'' (ப. 34) என்ற உறுதியோடு கவிராயர் காட்சியளிக்கிறார்.

இறையருளால் சூலுற்ற சிவகாமியம்மையாருக்குக் குமர குருபரன் மகனாகப் பிறக்கின்றார். நன்கு பிறந்து வளர்ந்த குழந்தை பேசாமல் மௌனியாக இருப்பதைக் கண்ட பெற்றோர் அந்தத் திருச்செந்தில் முருகனிடமே முறையிடுகின்றனர்.

திருச்செந்தூர் முருகன் கோவில் கருவறைக்குப் பின்னால் அமைந்துள்ள ரோமரிசியின் சீவ சமாதியை வணங்குமாறு ஒரு குருக்கள் கூற, அவ்வாறே தாயும் தந்தையும் குழந்தையுடன் அந்த சமாதியில் வணங்கும்போது, இறையருள் சக்தி அக்குழந்தையிடம் இருப்பதை உணர்கின்றனர்.

''தெலுங்கர்களால் நலிந்து வரும் தமிழைக் காப்பாற்றவும், துலுக்கர்களால் சிதைந்து வரும் இந்து மதத்தைக் காப்பாற்றவும் நீ பிறந்திருக்கிறாய். தாமிரபரணியின் தீபமே......நீ கங்கைக் கரையில் சுடர்விடப் போகிறாய். படைகள் நடந்து வந்த பாதையில் நீ பக்திப் பயணம் செய்யப் போகிறாய்'' (ப. 51) எனக் கூறி குருக்கள் பெரியவர் அப்போதே அக்குழந்தையை வணங்கி மகிழ்ந்தார் என்ற செய்தியைத் தருகிறார் இந் நூலாசிரியர்.

'முருகா' எனப் பேசத் தொடங்கிய குழந்தை, 'பூமேவு செங்கமல' எனத் தொடங்கும் கலிவெண்பாவினை முதன் முதலாகப் பாடக்கேட்ட பெற்றோர் மகிழ்ச்சியால் பூரிப்படை கின்றனர். செந்தில் முருகனின் திருவருளை நினைந்து போற்றுகின்றனர்.

இந்நூலின் இரண்டாம் பகுதியில், திருமலை நாயக்க மன்னன் வரலாறும், குமரகுருபரரின் தமிழ்ப் புலமைச் சிறப்பும் விளக்கப் பெறுகிறது.

திருமலை நாயக்கர் மதுரையில் அரசாண்டிருந்தபோது அவருக்குத் தளபதியாக இருந்த இராமப்பையரைப் பற்றியும் ஆசிரியர் கூறுகிறார். அக்காலச் சூழல் பற்றி இப்பகுதியில் விவரிப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

''முஸ்லீம்கள் அவ்வப்போது வந்து கொள்ளையடித்துவிட்டுப் போன காலம். ராமநாதபுரத்தில் சேதுபதிகள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்த காலம். மைசூர் அரசர்கள் மதுரையைக் கைப்பற்ற வேண்டுமென்று அலைந்த காலம்.

விஜய நகரத்துப் பேரரசர்களுக்குத் தமிழ்நாட்டைச் சேர்ந்த நாயக்க மன்னர்கள் கப்பம் செலுத்த மறுத்த காலம், தமிழ் நாட்டின் தென்பகுதியில் போர்ச்சுக்கீசியர்களும், டச்சுக்காரர் களும் கிறிஸ்துவ மதத்தை மெல்ல மெல்ல பரப்பிக் கொண்டிருந்த காலம்.

சைவமா, வைணவமா, சமணமா, பௌத்தமா, சாக்தமா, கபாலிகமா, விநாயகரா, முருகரா, கிறிஸ்துவமா, இஸ்லாமா, எந்த வழியைப் பின்பற்றுவதென்று தெரியாமல் மக்கள் குழம்பித் தவித்த காலம்.

தலைக்குத் தலை வழிபாடுகள் பற்றி எல்லோரும் எல்லாமும் தெரிந்தது போல் பேசிக் கொண்டிருந்த காலம்.

மக்கள் பேராசையைத் தூண்டிவிட்டுப் பொய்யான ஆட்கள் மத விஷயங்கள் பேசி ஏமாற்றிக் கொண்டிருந்த காலம்.

தமிழ்ப் புலவர்களைத் தெலுங்குப் புலவர்கள் இழிவு படுத்திய காலம். தெலுங்கு அந்தணர்கள் தமிழ் அந்தணர் களைக் குற்றேவலுக்கு வைத்துக் கொண்ட காலம்.

தமிழ் அந்தணர்கள் சமஸ்கிருதத்தோடு தெலுங்கும் படித்த காலம். ''தெலுங்கு படித்தால்தான் வாழ்க்கையில் முன்னேற முடியும். எனவே தெலுங்கு படி...'' என்று எல்லா ஜாதியினரும் தெலுங்கை ஆதரித்த காலம்.

அவ்வப்போது நடந்த போர்களால், போரைத் தொடர்ந்து நடந்த கொள்ளைகளால் பணப்புழக்கம் அதிகமான காலம். பொற்காசுகள் மறவர்களிடம் இருக்க... அதைப் புகழ்ச்சியான வார்த்தைகள் சொல்லி, அந்தணர்கள் பிடுங்கிக் கொண்ட காலம். அப்படி அந்தணனுக்குக் கொடுக்காத மறவன் தன் காசைத் தாசியிடம் தொலைத்த காலம்... தமிழ்ச் சங்கம் வளர்த்த மதுரையில் தமிழர்களுக்கு உயிர் வாழ அனுமதி இருந்தது. மற்றபடி எல்லா வசதிகளும் தெலுங்கர்களுக்கே

இருந்தன'' என இவ்வாறு குமரகுருபரர் வாழ்ந்த காலச்சூழலை ஆசிரியர் விளக்குகிறார்.

திருமலை நாயக்க மன்னரின் பல மனைவியருள் ஒருவரான பாண்டிமாதேவி என்னும் தமிழ்ப் பெண்ணின் அன்புள்ளத்தையும் காட்டுகிறார் ஆசிரியர்.

இராமநாதபுரம் சேதுபதிகளை அடக்கி, சொத்து பாகம் பண்ணி, பஞ்சாயத்துச் செய்துவிட்டு, மதுரை திரும்பிய தளபதி இராமப்பைய்யர் இராமநாதபுரத்திலிருந்து பல பரிசுப் பொருள்களைத் திருமலை நாயக்க மன்னருக்காகக் கொண்டு வருகின்றார். அவற்றுள், தமிழ்ச் சுவடிகளும் பல உள்ளன. அவை அத்தனையும் தேவார, திருவாசகப் பதிகங்கள், சேக்கிழாரின் பெரியபுராணப் பாடல்கள். அவை அனைத்தும் பாண்டிமாதேவிக்குப் பரிசாக அளிக்கப் பெறுகின்றன. பாண்டிமாதேவி மூலமாக நாயக்க மன்னர் தமிழமுதம் பருகினார் என்பதையும் ஆசிரியர் கூறுகிறார். (ப. 71,72).

மதுரைக்கு ஒரு ஞானி வந்திருப்பதைக் குறிப்பால் உணர்ந்த பாண்டிமாதேவி, அந்த ஞானியைத் தேடுமாறு பணிக்கிறாள். தளபதி இராமப்பைய்யர் மூலமாகக் குமரகுருபரரைத் தரிசிக்கின்றார் திருமலை மன்னர்.

அவர்கள் நேரில் சென்று கேட்டுக் கொண்டதற்கிணங்க, குமரகுருபரர் திருமலை நாயக்கரின் அரசவைக்குச் சென்று, அங்கு மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் பாடுகிறார். அன்னை மீனாட்சியே குழந்தையாகத் தோன்றி வந்ததை இங்கே ஆசிரியர் மிக அழகாக வருணிக்கின்றார்.

இறைவழிபாடு பற்றிய மன்னரின் ஐயங்களைப் போக்குகிறார் குமரகுருபரர்.

"இறைவழிபாடு என்பது தனித்த ஒரு செயல் அல்ல. நம் எல்லாச் செயலிலும் இறைவழிபாடு இருக்கிறது.

குழந்தையைக் கொஞ்சுவது, நண்பனோடு பழகுவது, மனைவியோடு கூடுவது, தாய் தந்தையரை வணங்குவது, குருவுக்கு அடிபணிவது, வறியவருக்கு வாரிக் கொடுப்பது போன்ற எல்லாவற்றிலும் நாம் இறையைக் காணலாம்.

இறை என்பது வெட்டவெளியல்ல. ஒன்றுமில்லா சூன்யம் அல்ல. திகைத்துப் போய் நிற்பதல்ல. இசைபட வாழ்தல்தான் இறையுணர்வு. திகைப்பிலிருந்து மீண்டு, எல்லோர் மீதும் அன்பு பொங்கப் பொங்க வாழ்தல்தான் இறையுணர்வு.

இறை எங்குமிருப்பவர். எங்குமிருப்பது, உருவம் இல்லாதும் இருக்கும் உருவத்தோடும் இருக்கும். இறைவன் எங்குமிருப்பதை ஏற்றுக் கொண்டால், உருவத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். உருவமாயிருப்பதில் இறைவன் இல்லையென்று சொல்வது மூடத்தனம்.

இதிலிருந்து உயிரற்ற கல்லிலும், உயிருள்ள பொருளிலும் அன்புள்ளவர் இறைவனைக் காண முடியும். நேசிப்புத்தான் முக்கியம். எதை என்பது முக்கியமல்ல. எல்லாவற்றையும் என்பதுதான் முக்கியம். பகுத்துக்கொண்டு இருப்பது அல்ல.

நேசிக்கத் தெரியாதவர்கள்தான் இங்கே இறைவன் இல்லை என்று சொல்கிறார்கள். இவர் இறைவன் இல்லை என்று சொல்கிறார்கள். தனக்கு எல்லாம் தெரியும் என்று அலட்டிக் கொள்பவர்களால் இறையைக் கண்டு கொள்ள முடியாது. இழிவுதான் செய்ய முடியும்.

அன்பு செய்தலுக்கு முற்றிலும் எதிரான விஷயம் இழிவு செய்தல். இழிவு செய்வோரிடம் இறையுணர்வு இருக்காது." (ப. 93-95)

இவ்வாறு குமரகுருபரர் தம்முடைய இனிய பேச்சினால் அந்தத் தெலுங்கு தேச அரச குடும்பத்தையே கட்டிப் போடுகிறார்.

திருமலை மன்னருக்குச் சில அன்புக் கட்டளைகளையும் இடுகின்றார் குருபரர்.

"பாண்டிமாதேவியை முன்னிறுத்தி தமிழ் வளர்க்க உதவி செய்யுங்கள். மொழியால், மொழி அழியக் கூடாது. மதத்தால் மதம் அழியக் கூடாது.

மொழி, அறிவு தேடுகிற விஷயம். மதம், இறையைத் தேடும் ஆராய்ச்சி. இதில் அலட்டலுக்கு என்ன இருக்கிறது...?

தன் மதமே உயர்வு என்று சொல்கிற எவனும் நிர்மூடன். தன் மொழி மட்டுமே வளர வேண்டும் என நினைப்பவன் கருத்துக் குருடன்.

உலக மக்களின் அறியாமைக்கு மொழியறிவு இல்லாததே காரணம்.

பேசவும், சிரிக்கவும், அழவும், கூச்சலிடவும் மட்டுமா மொழி. இதை நாய்களும் செய்யுமே. ஒரு தேசத்தின் எல்லா மக்களும் மொழியில் புலமை பெற வேண்டும். அத்தனை பேருக்கும் இலக்கிய அறிவு இருக்க வேண்டும் அதுவே வளமான தேசம். தெளிவான வாழ்க்கை.

அழிப்பதை நிறுத்திவிட்டு வளர்ப்பதைப் பற்றி யோசியுங்கள்.

தமிழர், தெலுங்கர், மலையாளர், கன்னடர் என்று மொழியால் பிளவுபட்டிருந்தால் அன்னியர் உள்ளே வர எளிதாகும்.

பஞ்சம் மிகுந்த பாலைவனத்திலிருந்து வந்த இஸ்லாமியர்கள் இந்த தேசத்தைச் சூறையாடி அழிக்க, ஒற்றுமையின்மையே காரணம், மொழி அலட்டலே காரணம்.

இந்த மொழி அலட்டல் புத்தியில்லாத அநாகரீகமான கல்விமான்களால் ஏற்படுகிறது. அரைகுறையான மொழியறிவு உடையவர்கள், அரைகுறையான இறை நம்பிக்கை உடையவர்கள் எல்லாம் தெரிந்தது போல அலட்டுகிறார்கள். அவர்களின் மிருகக் குணம் மொழிப்புலமையோடு வெளிப்படுகிறது.

மொழியின் பெயரால், மதத்தின் பெயரால், மிருகக் குண முள்ளவர்களைத் தூண்டி விடுகிறார்கள். எனவே, இறைமீது நம்பிக்கை வைத்து, எல்லா மொழியும் நன்றெனக் கருதித் தமிழ் வளர்ப்பாயாக ... ...'' (ப. 99-100) என இவ்வாறு உரைக்கின்றார் குமரகுருபரர்.

இவற்றின் பயனாக, தமிழ் மீது தெலுங்கு மன்னர் கொண்டிருந்த அலட்சியம் அறவே நீங்கியது. 'அரவம் அத்து வானம்' என்று அடிக்கடி அலட்டிக் கொள்ளும் அரச குடும்பத்தினர் அமைதியாய்த் தமிழ் படிக்க ஆரம்பித்தார்கள். தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் தெலுங்கர் ஆட்சியில் மரியாதை கூடியது.

தமிழ்க் கவிதைகளை, காவியங்களை, இலக்கண நூல்களைப் பிரதியெடுக்கத் தமிழ்ப்புலவர்களுக்கு மானியம் தரப்பட்டது.

இவ்வாறு, குமரகுருபரரின் அருட்பணியால் தமிழகம் பெற்ற பயன்களை விளக்குகிறார் இந்நூலாசிரியர். அத்துடன், இப்பணிகளை வாய்ப்பாகப் பெற்ற தளபதி இராமப்பையரின் மூலமாகவும் சில எண்ணங்களைத் தருகிறார்.

''மொழி உணர்வும் இறை உணர்வும் பின்னிப் பிணைந்தவை. மொழி, இறையுணர்வோடு வளர வேண்டும். மொழி கோயில்களில் வளர்க்கப்பட வேண்டும். சமஸ்கிருதம் அப்படித்தான் வளர்ந்தது. தமிழும் அப்படித்தான் வளர்ந்தது. தமிழைத் தொடர்ந்து வளர்க்காவிடில் தெலுங்காலும் அரபியாலும் நசுக்கப்படலாம்.

தெற்கே ஆங்கிலேயர்களும் போர்ச்சுக்கிசியர்களும் இன்னொரு மொழியைப் பரப்புகிறார்கள்.

மொழித் துவேசத்தால் மலையாளிகளும் கன்னர்களும் பிரிந்து நிற்கிறார்கள். தமிழ் நான்கு பக்கமும் தாக்கப்படுகிறது. கடவுளே... இறையுணர்வைத் தூண்டி தமிழை நீங்கள்தான் பாதுகாக்க வேண்டும். ... ...'' (ப. 103, 104) எனப் பலவாறு பேசுகிறார் தளபதியார்.

பின்னர், நீதிநெறி விளக்கம் நூல் தோன்றிய வரலாறு கூறும் ஆசிரியர், 'மெய்வருத்தம் பாரார்' எனத் தொடங்கும் பாடல் தளபதி இராமப்பையரைச் சுட்டிப் பாடியதே என்கிறார்.

குமரகுருபரரின் தலப்பயணங்களையும், காசிப் பயணப் பயன் பற்றியும் விளக்குகிறார் ஆசிரியர்.

காசியிலுள்ள விசுவநாதர் ஆலயம் இசுலாமியர்களின் வசமிருந்தது. பூசை எதுவும் நடைபெறாது பூட்டிக்கிடந்தது. எனவே, குருபரர் அப்போதைய காசி நவாபிடம் சென்று, கோயிலைத் தம்மிடம் தரவேண்டுமெனக் கேட்கின்றார். சிம்மாசனத்திலிருந்த நவாப் அவருக்கு ஆசனம் தராமல் நிற்க வைத்துப் பேசுகிறார். அடுத்த நாள், உண்மையான சிங்கத்தின் மீது அமர்ந்து அரசவைக்கு வருகிறார் குமரகுருபரர். அங்கு அவர் நவாப் மொழியான இந்துஸ்தானியிலேயே பேசுகிறார். நவாப்பிடம் பரந்த நிலம் பெற்று, மடம் நிறுவி, தமிழும் சைவமும் வளர்க்கிறார்,

தமிழர்கள் தஞ்சாவூர், மதுரை, திருச்செந்தூர் என்று குறுகிய வட்டத்தில் இல்லாது, முசுலீம்கள் ஆட்சியில் நீண்ட புனித யாத்திரை மேற்கொள்வதற்கு உதாரணமாக குமரகுருபரர் இருந்தார் என்பதை விளக்குகிறார் ஆசிரியர்.

பரதக் கண்டத்தைப் பிரித்து விடாமல் இந்து மதம் இணைக்கிறது என்பதை மக்களுக்கு எடுத்துக் காட்டினார். தமிழும் தமிழரும் சிறிய குட்டையாய்த் தேங்கி விடாமல், இமயமலை அடிவாரம் வரை போய்வரும் ஆவலைத் தூண்டினார் (ப. 122, 123), என இவ்வாறு குமரகுருபரரின் காசி வாழ்க்கை முழுவதையும் இந்நூலாசிரியர் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

அக்காலத்தில், நவாப் போன்ற மன்னர்கள் அமரும் இருக்கைகளில் சிம்ம உருவத்தைப் பொம்மையாக வடிப்பது வழக்கம். சிம்மாசனம் என்றும் அதற்குப் பெயர். ஆயின், இந்து சமயத்தில், தீமையை அழிக்க வந்த காளிக்கு வாகனமாக இருந்தது சிங்கம். இதை மெய்ப்பிக்கவே குமரகுருபரர் அன்று உண்மையான சிங்கத்தின்மீது அமர்ந்து வந்து நவாப்பை வியப்பில் ஆழ்த்தினார். அதனால் தம் பெருமையையும் தம் சமயப் பெருமையையும் உணர்த்தினார். இதை, இன்றைய தலைமுறையினர் அறிந்து போற்ற வேண்டுமென்னும் நோக்கில் பாலகுமாரன் அவர்கள் ‘சிம்மாசனம்’ என்ற பெயரில் - குமரகுருபரர் வாழ்க்கை வரலாற்றைப் - புதினமாக வழங்கியுள்ளார்.

பால பருவத்தில் முருகன் அருள் பெற்று, அனைவருக்கும் முருகனாகவே தோற்றமளித்த பாலகுமாரனான குமரகுருபரர், முதுமையில் இறையருளால் உண்மையான சிம்மாசனம் பெற்று, அந்நிய ஆட்சியாளரிடம் நில உரிமையும் பெற்று, காசியில் திருமடம் நிறுவி, தமிழும் சைவமும் வளர்த்தார் என்று விளக்கும் ஆசிரியர் பாலகுமாரனின் ‘சிம்மாசனம்’ நூல் தமிழறிஞர் வரலாறு கூறும் சிறந்ததொரு படைப்பாகும். அக்காலச் சூழல்களைக் கருத்தில் கொண்டு, மொழிவெறி, இனவெறி, சமயவெறி தவிர்த்து, மக்கள் வாழ வேண்டுமென்பதற்கு எடுத்துக்காட்டாக நம் குமரகுருபரர் விளங்கினார் என்பதை இவர் கதையாக வடித்திருப்பது மிகவும் அருமையாகும்.

**பயன்பட்ட நூல்**

1. சிம்மாசனம், பாலகுமாரன், விசா பப்ளிகேஷன்ஸ், தி. நகர், சென்னை - 600 017. ஆகஸ்டு, 1998.

# பிள்ளைத்தமிழ் எனும் பெரியதமிழ்

அழ. முத்துப்பழனியப்பன், கோவை.

தமிழுக்குப் பெருமை சேர்த்த புலவர்கள் பலருண்டு. தமிழால் பெருமை பெற்ற புலவர்களும் பலருண்டு. புலவர்களால் தமிழ் பெருமை பெற்றதும் உண்டு. இங்ஙனம், தமிழ்ப் பெருமை பெற்ற பெரும்புலவர் குமரகுருபரர்.

'திறமான புலமை எனில் வெளி நாட்டார் அதை
வணக்கஞ் செய்தல் வேண்டும்'

என்ற பார்தியின் வரிகள் தோன்றுவதற்கு முன்னமே, தன் புலமைத்திறத்தால் – ஏன் செருக்கால் வணக்கம் ஏற்றவர் இத்தமிழ்த் துறவி என்பதில் ஐயமில்லை.

தாம் மட்டும் பெருமை பெறாமல், தமக்குப் பின்னர் வாழையடி வாழை என வரும் ஒரு திருமரபை – துறவியர் பரம்பரையைத் தோற்றுவித்த பெரும் புகழும் இவர்க்கு உண்டு'

இவரது பிரபந்தங்கள் அனைத்தையும் குறிப்புரையுடன் ஒருங்குசேரச் சேர்த்துப் பதித்தவர் தமிழ்த்தாத்தா. அதற்குக் காரணராக விளங்கியவர், திருப்பனந்தாள், ஸ்ரீ காசி மடத்து அதிபராக அப்போது விளங்கி அருளிய தவத்திரு சாமிநாதத் தம்பிரான் அவர்கள். இவ்விரு பெருந்தகைகட்கும், தமிழ்கூறு நல்லுலகம் என்றும் கடப்பாடு உடையது.

குமரகுருபரர் அருளிய நூல்களில், பலராலும் கொண்டா டப்பட்டும், பாராயணம் செய்யப்பட்டும் வருபவை அவரது பிள்ளைத்தமிழ்கள் இரண்டும் ஆகும். பழுத்த நாத்திகரான பாரதிதாசன், தமது மாணாக்கர்க்கு, முதன் முதலில் பாடம் சொல்வது, குமரகுருபரர் பிள்ளைத்தமிழ் நூல்கள் தாம் என்பது வரலாறு. காரணம், பழுத்த தமிழ்ப்புலமை பாலிக்க வேண்டும் எனில், இந்நூற்பயிற்சி இன்றியமையாதது என்பது வெளிப்படை. தமிழில் பிள்ளைத்தமிழ் நூல்கள் பெருகி உள்ளன. இறைவனையோ, பெரியவர்களையோ பலவாறு பாராட்டுதற்கும்

புகழ்தற்கும் இந்நூல் சரியான கருவியாக உள்ளது என்பது அறிந்த ஒன்று.

இலக்கியம் கண்டதற்குப் பின் இலக்கணம் என்பது நெறி முறையாதலின், பிள்ளைத்தமிழுக்கும் இலக்கணம் கண்டார்கள் பெரியவர்கள். காப்பு, செங்கிரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, சிறுபறை, சிற்றில், சிறுதேர் எனப் பத்துவகைப் பருவங்கள் ஆண்பாலுக்கும், இறுதி மூன்றிற்குப் பதில் கழங்கு அல்லது நீராடல், அம்மானை, ஊசல் ஆகிய மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் உரியன.

குமரகுருபரர், தருமை ஆதீனக் குரு முதல்வராக நான்காம் பட்டத்தில் எழுந்தருளி இருந்த, தவத்திரு மாசிலாமணி தேசிகர் (1640 – 1688) அவர்களிடம் ஞானதீட்சை பெற்றவர். முருகன் திருவருளால் கலிவெண்பாப் பாடியவர். அம்பிகை திருவருளால், மீனாட்சியம்மை மீது பிள்ளைத்தமிழ் பாடினார். புள்ளிருக்கு வேளூரான, வைத்தீசுவரன் கோயில் வந்தபோது, முருகன் திருவருள் ஆணையால் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழைப் பாடினார் என்பது வரலாறு.

சிவப்பிரகாச சுவாமிகளைப் போல் குமரகுருபர சுவாமிகளும் ஒரு கற்பனைக் களஞ்சியம். இலக்கண, இலக்கியப் புலமை மிக்கவர். திருக்குறள், கம்பராமாயணம் முதலிய நூல்களில் காணக் கிடைக்கும் அரிய தொடர்களும் இவரது பாடல்களில் பயின்று வரும்.

இவருடைய முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழின் சிறப்புக்களைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம். செங்கிரைப் பருவம் முதற்பருவம். குழந்தையின் 5ஆம் மாதத்தில் நிகழும். இதை ஒரு 'நிருத்ய விசேடம்' என்பார் பெரியவாச்சான் பிள்ளை. இப்பருவத்தில் முருகப்பிரான்,

'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாளன்'

என்று பாடுவார். அவன்

'ஆனேறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும்
அருமருந்தாகி நின்ற ஆதிப்பிரான்'

அம்மட்டோ, அவன், வள்ளி நாயகியின்

'தேனூறு கிளவிக்கு வாய்ஊறி நின்றவன்'

என்பார்.

அவன் செங்கீரை ஆடியருளிகின்ற போது
அவனுடைய இளந் தொந்தியும் ஆடுகின்றதாம்
''பைம்பொன் அசும்பிய தொந்தியொடுஞ் சிறு
பண்டி சரிந்தாட''

என்று வருணிப்பார். அவனுடைய முகத்தில் சிறு வேர்வை சொட்டுகின்றது. அவை முத்துக்கள் பூத்திருப்பதைப் போல் உள்ளன என்பார்.

... 'முத்தம் அரும்பி எனக் குறுவேர்வு
முகத்தில் அரும்பியிடப்
புழுதி அளைந்த பசுந்திருமேனி''

என்றும் அவன் 'அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி' என்றும் வியப்பார். இவர் வைத்தீசுவரன் கோயிலை வருணிப்பதைப் போன்று, திருப்போரூர் பிள்ளைத்தமிழில், சிதம்பர சுவாமிகளும் பாடுவார் (பாடல் 10).

அதேபோல் 'தாலப்பருவத்தின் முதற்பாடல் கற்பனை வளம் மிக்கது (தாலாட்டு குழந்தையின் ஏழாம் மாதம் நிகழும்) காலையில் எழுகின்ற இளங்கதிருக்கு எதிராக, நெற்கதிர்கள் செம்பவளம் போன்று கன்னலோ, கமுகோ என ஐயுறும் வகையில் வளர்ந்துள்ளன. அத்தகைய 'சாலிவயல் தமிழ் வேளூர் அழகனே' தாலேலோ என்றும்;

'சங்கத்தமிழின் தலைமைப்புலவர்' என்றும் பாராட்டுவார்.

சப்பாணிப் பருவம் குழந்தையின் ஒன்பதாம் திங்களில் நடைபெறும். இப்பருவத்தில் முருகப் பெருமானை 'கொழி தமிழ் வேதபுரிக் குமரேசன்' என்று பாடுவார்.

அம்மட்டும் அன்றி, ஆதிசேடன் வதியும் நாகருலகமும், வித்தியாதரர் உலகமும், கற்பகக் காவும், கற்பகச் சோலையையும், முருகப்பிரான் தன் தொண்டர்களுக்குக் காணியாட்சியாக வைத்து விட்டான். ஆனால் முருகப்பிரானோ, தடக்கை வெஞ்சிலை வேடர் குடி கொண்ட சிற்றூர்களையும், ஊர்தொறும் உள்ள செந்தினைப்புனம் நிறைந்த தண்ணிய சாரல்களை மட்டும், வள்ளிநாயகியின் சீதனக் காணிகளாகப் பெற்றுக் குறிஞ்சி நிலத்தில் பெருவிருப்பமொடு வாழ்பவன் என்று பாடுவார்

(பாடல் 4 சப்பாணி). இப்பாடலில், திருமாலை முண்டகக் கண்ணன் என்று இடுகுறிப் பெயராகக் குறிப்பிடுவார்.

முத்தப்பருவம் 11-ஆம் மாதம் நிகழும். முத்தம் என்பது அன்பிற்கு அறிகுறியாக, ஒருவகை ஒலி உண்டாக உதடுகளாற் பரிசித்தல் என்பது சூடாமணி. முத்தப்பருவத்தில், முருகன் தென்தமிழும், வடமொழியும் ஒருங்குசேரப் பயின்றவன்; ஆயிடினும் தமிழுக்கே அவன் வாய் முதலிடம் தரும் என்று பாராட்டுவார்.

... கனியக் கனிய அமுதூறும்
கடவுள் மறையும் கற்றவன் அவன்

அதேசமயம்

"முதற்சங்கத் தலைப் பாவலர்
தீஞ்சுவைக் கனியும்
தண்தேன் நறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற்று இருந்த
பசுந்தமிழையும்"

உடையவன் அவன் இத்தகைய 'மும்மைத் தமிழ் தேர் கந்தபுரி முதல்வா முத்தம் தருகவே' என்று முத்தம் கேட்பார்.

வருகைப் பருவம் என்பது நடக்கும் பருவக் குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு தாய், தந்தை முதலியோர் வேண்டுதலாகும். இது குழந்தையின் 12-ஆம் மாதத்தில் நிகழ்வது. குமரகுருபரர் இப்பருவத்தில் முருகப்பிரானின் முழுத் தோற்றத்தை அப்படியே நம் மனக்கண் முன் கொணர்ந்து நிறுத்துவார்.

'அஞ்சொல் தமிழோர் புகழ் வேளூர்க்கு அரசே
வருக வருகவே'

என்று வரவேற்பார். பின்னும்

'அவன் உலகு குளிர எமது அறிவில் ஒழுகுகின்ற சந்திரன் என்றும், உருகா நின்ற அடியார் தம் இதயம் நெகிழும்படி அறிவினிடத்துத் தோன்றுகின்ற சூரியனே என்றும், நூல்களால் நிறைந்த உணர்வு முதிரும்படி முதிர்கின்ற இனியதேனே என்றும், குற்றமற்ற ஞானியர் மூழ்குதற்குரிய பெரிய கருணைநீர் பொங்குகின்ற கடலே என்றும், அளவில்லாத புவனங்கள் முடியும்

வெளியிடத்தில் முதிர்ந்த ஒளிக்குப் பிறப்பிடமே என்றும், அறிவுக்கு அறிவாய் இருப்பதை அறிகிறவராகிய ஞானிகளும் அறிதற்கரிதாகிய பிரமமே' என்றும் முருகப்பிரான் குணங்களை விவரித்துப் பரவசப்படுகின்றார்.

அம்புலிப் பருவம், வானத்தில் உள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுதற்குச் செவிலித் தாயார் முதலியோர் அழைக்கின்ற பருவம். இது குழந்தையின் 16 அல்லது 18 ஆம் திங்களில் நிகழ்வது. பிள்ளைக்கவிக்கு அம்புலி புலி என்பது வழக்கம். ஆனால் நூலாசிரியர்க்கு இயல்பாகக் கவி வருகின்றது. முதற் பாடல் முருகனுக்கும், சந்திரனுக்கும் சிலேடையாக அமைந்துள்ளது. ஐந்தாம் பாடலில் வேலூரில் உள்ள சித்தாமிர்தத் தடத்தில் உள்ள தீர்த்தத்தின் திவலை ஒன்றே நோய்களை நீக்க வல்லது என்பர்.

...'சித்தாமிர்தத் தடத் தீர்த்தத் துறைக்குள் உறுந்
திவலையொன்றே அமையுமால்......

ஆறாம் பாடலில்

'மெய்கண்ட தெய்வம் இத்தெய்வம்
அல்லாற் புவியில் வேறில்லை'

என்றும்,

இவன்......'அழியாத வீடும் தரக்கடவன்' ஆதலின்
இவனோடு அம்புலீ ஆட வாவே'

என்று அழைக்கின்றார்.

சிற்றில் பருவம் என்பது சிறுமியர் சிறு வீடுகட்டி விளையாடுகின்ற காலை அதனைச் சிறுவர் தம் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறுகின்ற பருவம். இதில் 'சிறுமியர் எம் வீட்டை' அழிக்க வேண்டா என வேண்டுவதாகப் பொருள் அமைத்துக் கூறுவது மரபு. இதுமிக்க சுவையுடைய பகுதி. இது குழந்தையின் மூன்றாம் ஆண்டில் நிகழ்வது.

இதில் இரண்டாம் பாட்டில் சுவைபட 'முருகன் திருமுடி தரித்துச் சென்று, சூரர்களைத் தொலைத்த பின்புதான் தேவர்கள் முடிசூட்டி வாழ்ந்தனர் என்பதனை விளக்க

''வானவர் தம் முடிசூட்டும் சோதிமுடி'

என்றார். அதுவும் அன்றி, நாங்கள் கட்டிய வண்டல் மனை அசுரேசன் கடலில் கட்டிய மாளிகையன்று என்பார்.

நீ உன் பெற்றோர்க்குச் செல்லப்பிள்ளை, அதேசமயம்

'விளையாட்டிடத்துச் சிறு குறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ.

அத்தகைய

'செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே'

என்கிறார். மேலும், முதிர்ந்த தேங்காயைத்

'தென்னம்பழம்' என்கிற சொற்றொடரால் சுட்டுவார்.

('தென்னம் பழம் வீழ் சோணாடா')

சிற்றில் பருவத்தில் வேறு புலவர்களும் சிறப்புடன் பாடுவர். பகழியார்,

ஐயா! உனது வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே!

என்பார் கவிராஜ பண்டாரத்தையா நாங்கள்

'நச்சுமரம்' ஆனாலும், நின்னால்
'நட்டமரம்' காண் என்று வேண்டுவார்

சிற்றில் பருவம் உண்மையில், சுவையும், அழகும் நிரம்பியது.

சிறுபறை என்பது தாயார் முதலியோர் சிறுபறை கொட்டி விளையாடுக' எனக் கூறிப் பாடுவது. இது குழந்தையின் இரண்டாம் ஆண்டில் நடைபெறுவதாகப் பாடப்படும். இப்பகுதி கற்பனை நயம் மிக்கது ஆறாம் பாடலைப் பார்க்கலாம்.

முருகப் பெருமான் சிறுபறை முழக்குகின்ற ஒலியை, மேகங்கள் ஒலிக்கின்ற முழக்கம் என்று மயிற்கூட்டங்கள் ஆடுகின்றன. கடல் ஒலி என்று மடந்தையர் மனம் நெகிழ் கின்றனர். பழமறை முழக்கம் என்று எண்ணி, ஆகுதி வேண்டித் தேவர்கள் மனம் நெகிழ்கின்றனர். பரநாதத்தின் ஒலி என்று அனுபூதி பலித்தவர் நெக்குருகுகின்றனர். இறைவன் திருக் கூத்தாடவும், ஆயிரம் கையுடைய பெரியோன் முழக்குகிற குடமுழா முழக்கம் போலும், திருமால் கொட்டும் முழக்கும் முழக்கம் என அமரரும் முனிவரும் ஆர்ப்பரிக்கின்றனர் என்று கற்பனை நயத்துடன் பாடுகின்றார்.

குழந்தை சிறுதேர் உருட்டி விளையாடுதலைத் தெரிவிக்கும் பருவம் சிறுதேர்ப் பருவம். இது நாலாம் ஆண்டில் நிகழ்வது. இப்பருவத்திலும், குமரகுருபரரின் கவிச்சுவை சிறக்கக் காணலாம்.

மழை போலப் பெருகுகின்ற காவேரி ஆறு, ஆயிரமுகக் கங்கையாகியது. அது மீண்டும் பொன்னி நதியாகியது. அத்தகைய 'தேத்தந்த தண்பனை உடுத்த தீம்புனல் – நாட, சிறுதேர் உருட்டி அருளே' என்று பாடுவார் இவரது பாடல்களில், அரிய சில சொல்லாட்சிகள் விளையாடும்.

'அன்றைய கணக்கு இன்னும் வந்திருக்கின்றது (68)
குண்டிகைக் கள்வன் – பிரமன்
குறமகளின்........' தொண்டை வாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன் (15)
'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள' (11)
'புண்ணிய நாறும் ஓர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே' (28)
பொழியாத புயல் (திருமால்) (66)

இப்படிச் சொல்லாட்சிகளும், தொடர்களும் இழும் என் அருவி போல் வந்து வீழ்வது இவரது கவிப் பெருமை.

இவரது பாடல்களில் 'எனை வைத்தி, எனை வைத்தி எனப் பதங்கள் எலாம் இரந்து வேண்டும் தன்மையையும், இவர் அச்சொற்களை வைக்கும் தன்மையை "இனி வைப்பாம், இனி வைப்பாம்" பொறுத்திடுமின் என அச்சொற்களுக்கு அபயம் அளிக்கும் முறையையும் காணலாம்.

இவர் வெறுந்துறவியன்று; தமிழைத் துறக்காத் துறவி. காலம் 'நுலுக்காணியமாக' இருந்த போதும், தமிழையும், சைவத்தையும் காத்து, வளர்த்துச் சிறப்பித்த பெருவீரர், அம்மட்டும் அன்றி, அவை மேலும் சிறக்க, பொலிய, ஒருபுனித மடத்தைத் தோற்றுவித்த ஞானதான வள்ளல் இவர்தாம். இவர் போலும் பெரியோர்கள் தோன்றுவது மிக அருமை; அரிது. ஆயினும் இத்தகையோரே மொழியையும், சமுதாயத்தையும், சமயத்தையும் காக்கும் பெருந் தூண்களாக விளங்குவர் இத்தகைய ஞான முனிவரை நினைவதும், போற்றுவதும், தமிழையும், சைவத்தையும், நினைவதும், போற்றுவதுமாக நிறையும்.

# வழிபாட்டில் அடிகளின் பங்கு

தெ. முருகசாமி, காரைக்குடி

"அருச்சனை" என்பது ஆன்மாவின் குரல். அந்தக் குரல் ஆன்மா தன் உணர்வு தொடங்கிய நாள் தொட்டு எல்லாம்வல்ல ஆண்டவனைத் தேடும் ஆவலில் ஒலிக்கப்படுவது. இந்த ஆன்ம ஒலி வெறும் வெற்றொலியன்று. பொருள் பொதிந்த ஆன்மநேய ஒலி. இதைத்தான்,

> கருவுற்ற நாள்முத லாக
> நின்பாதமே காண்ப தற்கு
> உருகிற்று என்உள்ளமும் நானும்
> கிடந்தலந் தெய்த்தொ ழிந்தேன்.

என்கிறார் அப்பரடிகள். 'பிறந்து வளர்ந்து அறிவு கொண்ட நாள்தொடங்கி' எனச் சேக்கிழாரும் மூர்க்கநாயனாரின் ஆன்ம அடிநாதத்தை நெருடிக்காட்டுகிறார். 'எங்கும் உளனொருவன் காணுங்கொல்' என்ற உணர்வின் ஒலியை நீதியறிந்த நெஞ்சொலியாக நம் குமரகுருபர சுவாமிகளும் கூறினார். எனவே ஒவ்வோர் மனிதரின் உள்மன ஒலி எழுந்து வெளிப்படும் போதெல்லாம் அது வெறும் ஓசை அளவிலான ஒலியாக இல்லாமல் பொருள்தரும் முறையில் ஒலிக்கப்படும்போது மொழி என்ற பெயரைப் பெறுகிறது. அம்மொழி ஆன்மாவின் உய்திநோக்கிய மெய்ப்பொருள் வகையில் அமையும்போது அது வழிபாடு என்ற பெருமையைப் பெறுகிறது.

அருத்து என்ற வேர்ச்சொல் அடியாக அருச்சனை என்ற சொல் உருவானது. இது சங்க இலக்கியச்செஞ்சொல். இதற்கு ஊட்டு என்பது பொருள். இச்சொல்லிலுள்ள தகரத்திற்குச் சகரம்போலியாகி அருச்சு என நின்று அனை என்றதொழிற்பெயர் விகுதி சேர அருச்சனை என்றாகிறது. ஆன்மா தன் எண்ணத்தை ஊட்டுவது என்ற பொருளுணர்வில் இச்சொல் சொற்செட்டாக அமைந்துள்ளது.

அந்தந்த ஆன்மாவும் தன் எண்ணத்தை ஆண்டவனிடம் ஊட்டுங்கால் கருவுற்ற நாள் தொடங்கிப் பயின்ற மொழியிலே கருத்தை ஊட்டும் என்பதில் ஐயமில்லை. இந்த இயல்பான அடிப்படையில்தான் அவரவரும் ஆண்டவனை வழிபட்டனர். வாழையடி வாழையான இந்த அருச்சனை வழிபாட்டு வரிசையில் குவலயம் போற்றும் குமரகுருபரர் கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் மெய்ப்பொருள் வானில் ஒரு துருவ மீனாகக் காட்சியளிக்கிறார்.

பிறந்த ஐந்தாண்டு வரையில் பேச்சின்றி இருந்த குழந்தை, திருச்செந்தில் முருகனருளால் பேசும் ஆற்றலைப் பெற்றுக் கந்தர் கலிவெண்பா பாடிய ஆன்மீக வரலாற்றோடு நம் குமரகுருபரரின் வாழ்வு தொடங்குவதாக வழிவழியே சுட்டப் படுகிறது. ஞானம் கைவரப்பெற்ற நிலையில் பலப்பல நூல்கள் பாடினார். எல்லாம் ஞானத் தமிழாக வெளிவந்தன. இவர்தம் ஞானத் தமிழை மெச்சிய மதுரை மீனாட்சி அம்மை குழந்தையாக வந்து முத்துமாலை அணிவித்துக் குமரகுருபரரையும் அவர்தம் ஞானத்தமிழையும் அங்கீகரித்தார் என்ற தெய்வத்தமிழ் வரலாறு முத்தாய்ப்பானதாகும்.

சிவாலயங்தோறும் சென்று வழிபட்டார். ஞானாசிரியரைத் தேடியலைந்த அடிகளது ஆன்மா தருமபுர ஆதீனகர்த்தர் மாசிலாமணி தேசிகர்பால் சிக்குண்டது. இதனால் துறவு நிலை யடைந்தார். வடக்கே காசிவரை சென்று தம் தவப்பயனால் ஞானத் தமிழ்க் கல்வியறிவைத் தில்லி பாதுஷாவுக்குப் புலப் படுத்தித் திருமடம் அமைத்து அங்கேயே தங்கியிருந்து சிவபெருமான் திருவடியடைந்தார். இஃது குமரகுருபர அடிகளின் வரலாறாயினும் இவ்வரலாற்றின் ஊடகமான செய்தி ஒன்றே இக்கட்டுரையின் வெளிப்படையான கருத்தை வற்புறுத்தத் துணை செய்கிறது.

தொடக்கத்தில் முருகனருள் பெற்ற குமரகுருபரர், பின்னர் சிவனையும் உமாதேவியையும் வழிபட்டுப் பேறு பெற்றதோடு குருவருள் துணையும் பெற்றதெல்லாம் தம் தாய்மொழி வழியாக என்பதுதான் அவர்தம் வரலாற்று ஊடகமாகும். இந்த உண்மையை மறுப்பாரில்லை. தாய்மொழி யறிவோடு அக்காலத் திற்கேற்ப வடமொழிப்புலமை நலமும் சுவாமிகள் பெற்றிருந் தாலும் தாய்மொழிவழி அவர் பெற்ற உயர்வே காலத்தை வென்ற சிறப்பை நிலைநிறுத்தியது எனலாம்.

சிவபெருமான் சுந்தர பாண்டியனாகவும் அம்மை தடாதகைப் பிராட்டியாகவும் முருகன் உக்கிர குமாரனாகவும் மதுரையில் வந்து தோன்றியது தெய்வத் தமிழாலன்றோ என்பது சுவாமி களின் மதுரைக் கலம்பகக் கருத்து.

தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள்
 தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந்த ததுவும், தனிமுத லொருநீ
 சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர்
 கொண்டதும் தண்டமிழ் மதுரம்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
 கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்.

இப்பாடலில் கடவுளர்கள் இடம் பெயர்ந்துவந்து மதுரையில் தங்கும் நிலையில் அவர்தம் குடும்பத்தைத் தமிழ்க் குடும்பமாகக் கூறிய சுவாமிகளின் கூற்று ஒப்புக்காகக் கூறப்பட்டதன்று. மேலும் தமிழே முருகன், முருகனே தமிழ் என்பதைக் கந்தர் கலிவெண்பாவில் விளக்கப்படுத்தியுள்ளார். அன்னை மீனாட்சி– தமிழே வடிவானவள் என்பதைச் சுவாமிகள் போல் கூறினாரில்லை என்பது தமிழ் கூறுலகம் அறிந்த அரிய செய்தியாகும்.

தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
 தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
 சுவையே ... ... ... ... ... ...

என்ற பாடலுக்கு மீனாட்சி அம்மை குழந்தையாக வந்து காட்சி கொடுத்தாள் என்றால் தெய்வத்தமிழின் திறனை என்னென்பது

உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே
 உருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுத லுதயமே

என முருகனைத் தமிழொளியாகப் பாவிக்கிறார் குருபரர். இப்படியாகச் சுவாமிகள் பாடியதெல்லாம் வெறும் செவியின்பம் நல்கும் செய்யுளாக மட்டுமின்றி ஆன்மாவின் மூலஒலியின் முணுமுணுப்பைத் தமிழ்வழி கேட்கச் செய்கின்தன்றோ!

தெய்வங்களைப் போலவே தம் ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரைத் தெய்வத்தமிழால் சைவசித்தாந்தத் துடன் மனங்குழைந்து துதிப்பது அனைவரையும் குரு வணக்கம் செய்யத் தூண்டுவதாய் உள்ளது.

எற்கமலஞ் செய்யு மெழின்மாசி லாமணிதன்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன் – நற்கமலை
ஊரிற் குறுகினே னோர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின்.

குருதேவர் தங்கியுள்ள ஊரையடைந்ததும் சீவன் (உயிர்) சிவமாகிவிட்டதாகச் சுவாமிகள் கூறுகிறார். இந்த ஆன்மாவின் உள்ளொலி உண்மையான தமிழ் ஒலியாகும்.

குமரகுருபரர் அருந்தமிழால் அருள் பெற்றார் என்பதே அங்கை நெல்லியான உண்மை. அந்த அருந்தமிழ் அமுதத்தை ஆண்டவனுக்கு அருந்தி நாமும் அருத்துவோம்.

# குருவைத் தெய்வமாக்கிய குமரன்

**சு. முருகேசன், ஸ்ரீவைகுண்டம்**

''நீரும் ஒரு வாத்தியாரா? அதுவும் பேரரசனாகப் போகிற வனுக்குக் கற்றுக் கொடுக்க உமக்கு என்னய்யா தகுதி இருந்தது? பெரிய புவியியல் நிபுணர்! வரலாற்றுப் பேரறிஞர்! எனக்குத் தேவையான புவியியல் விவரங்களை, வரலாற்றுச் செய்திகளை, நீர் கற்றுக் கொடுத்தீரா? வெறும் அரபு மொழி மட்டும் எனக்குப் போதுமா? ஓர் இளவரசனுக்கு அதன் இலக்கண நுட்பங்கள் ரொம்ப அவசியமோ? வரலாற்றில் பெரும் சாதனைகள் புரிந்த என் முன்னோர்களைப் பற்றிச் சொல்லிய துண்டா? பொன்னான என் இளமைக் காலத்தை வீணடித்த உம்மை நான் மன்னிக்கவே முடியாது. என் முகத்தில் இனி விழிக்காமல் நீர் நாசமாகப் போக...''

முகலாயப் பேரரசனாக விளங்கிய ஔரங்கசீப் (1619-1707) தமது இளமைப் பருவத்தில் ஆசிரியராக விளங்கிய ஒரு முல்லா தமது அரண்மனைக்கு வந்திருந்ததைக் கேள்விப்பட்டு அவரை அழைத்துத் திட்டிய வார்த்தைகள்தாம் இவை.

குமரகுருபர சுவாமிகளின் (1625-1688) காலத்தில் இந்திய உபகண்டத்தில் எம்மாதிரியிலான கல்விச் சூழல் நிலவியிருக்கலா மென்று நாம் இன்று நினைத்துப் பார்க்கையில் இவ்வார்த்தை களை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். இவை பிரான்ஸிஸ் பெர்னியர் என்னும் பிரஞ்சு அறிஞரின் பிரயாண அனுபவங்கள் நிறைந்த நூலிலிருந்து ('ட்ராவெல்ஸ் இன் த மொகல் எம்பயர்') மேற்கோளிடப்பட்டுள்ளன. வட இந்தியாவை 1656 முதல் 1668 வரை சுற்றிப் பார்த்து அக்காலக்கட்டச் சூழ்நிலையை அறிந்த பெர்னியர், அப்பட்டமான அறியாமையில் மக்கள் மூழ்கியிருந்ததை நேரில் கண்டார். உலகம் முழுவதிலிருந்தும் பொன்னும் வெள்ளியும் இந்த மாநிலத்தில் குவிந்து கொண்டு இருந்தாலும் அறிவு வளர்ச்சியில் அரசும் மக்களும் நாட்டம் கொள்ளாமல் வீணடித்த காட்சியை அந்நூலில் விவரித்தார்.

அவர் விடுத்த வினாக்களைக் கவனியுங்கள்: ‘‘இந்துஸ்தானத்தில் கல்விக் கழகங்களுக்கும் கல்லூரிகளுக்கும் அறக்கட்டளைகள் ஏற்படுமா? இவைகளுக்கான ஸ்தாபகர்களை எங்கே நாடுவது? அப்படியே அவர்கள் கிடைத்தாலும் அறிஞர்கள் எங்கே இருக்கிறார்கள்? கல்லூரிகளில் பிள்ளைகளைப் படிக்க வைக்க யாரிடம் சொத்து இருக்கப் போகிறது? அப்படி நபர்கள் இருப்பின் தங்கள் செல்வத்தை வெளிப்படையாக்க யார் முன்வரப் போகிறார்கள்? இறுதியாக இப்படி ஒரு செயலைச் செய்ய யாராவது விரும்பி முன்வந்தாலும் அம்மானியங்களை நிர்வகிக்க அறிவும், திறமையும், கண்ணியமும் மிக்கவர்கள் எங்கே இருக்கப் போகிறார்கள்? அப்படி நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள்தானே இளம் மாணவர்களுக்கு முன்னோடி களாக விளங்க முடியும்.’’

இந்நிலைமையில் ‘எழுத்தறிவித்தவன் இறைவனாகும்’ என்னும் நம்பிக்கை வலுப்பெற்றதில் வியப்பில்லை!

‘எழுத்து’ என்பதே இறைவனால் உருவாக்கப்பட்டது, இது சிருஷ்டியின் மகிமை, என்று மதங்கள் அறிவுறுத்தும். எழுத்தைக் கற்பிப்பவர் தெய்வத்திற்குச் சமமானவரென்பது இந்த நாட்டில் வலியுறுத்தப்பட்டு வந்த சம்பிரதாயம். இங்கே எழுத்தறிவை முறையாகப் பரப்பியவர்களில் ஐரோப்பியக் கிறிஸ்துவப் பாதிரியார்கள் முக்கியமானவர்கள். இவர்கள் தொடங்கிய பள்ளிக்கூடங்களுக்கெனத் தனியாகப்பிரார்த்தனைப் பாடல்களும் இயற்றப்பட்டிருக்கின்றன.

இவர்களின் பணி தொடங்கப்பட்ட காலத்தில்தான் குமரகுருபரரும் ஆன்மிகத்துடன் கல்வியையும் பிரசாரம் செய்து கொண்டிருந்தார். அவர் தமது குருபக்தியை மூன்று பாடல் களில் வெளிப்படுத்தியுள்ளார். கந்தர் கலிவெண்பா, பண்டார மும்மணிக்கோவை, சகலகலாவல்லி மாலை என்னும் தலைப்பு களில் அவை இன்று நமக்குக் கிடைக்கின்றன.

ஸ்ரீவைகுண்டத்துக் கைலாசபுரத்தில் அவதரித்த குமரகுருபரர் ஐந்து ஆண்டுகள் வரை ஊமையாக இருந்தாரெனச் சொல்லப்படுகிறது. அவரது முதல் பேச்சுதான் கந்தர் கலிவெண்பாவாக ஒலித்ததாம். அவர் பிறந்ததே ஒரு கவிராயர் குடும்பத்தில். அவர் பாடியதுகூட ஏற்கெனவே அக்குடும்பத்

திற்குப் பழக்கப்பட்ட கவியாகவும் கருத்தாகவும் இருந்திருக்க லாம். எந்தப் பாடலானாலும் அது இயற்றப்பட்டது எங்கே, எப்போது, என்கிற வரலாற்றுத் தெளிவு இல்லாமல் அதன் பின்புலத்தை மனதில் கொள்வது சிரமம். இந்தக் கலிவெண்பாவில் சாத்திரமும் தோத்திரமும் கந்தனின் சரித்திரத்துடன் பிணைந்திருக்கிறது. ''பழுத்த தமிழ்ப் புலமை''யைப் பயிற்றுவிக்கும் திறன் கொண்ட ஒரு குரு இப்பாடலில் ஓர் இளம் மாணவனின் அகக் கண்ணுக்கு ஓர் ஆண்டவனாக (ஆண்டவனுக்கே உபதேசம் செய்த அரும் புதல்வன் அல்லவா) காட்சி கொடுக்கிறார். இப்பாடலைப் பாடியதற்கு முன்பு குமரகுருபரர் என்ன பேசினார், என்ன பாடினார், என்ன இயற்றினார், என்ன கற்றார் என்பது நமக்குத் தெரியாத பட்சத்தில் அந்தக் காலம் வரை அவரது வரலாறும் ஊமையாகவே கருதப்பட்டு விடுகிறது!

சிறு வயதில் மனப்பாடப் பயிற்சிக்கென இந்தப் பாடலை நம் முன்னோர்கள் பயன்படுத்தியிருக்கின்றனர். நீண்ட காலமாகவே நம் தமிழாசிரியர்கள் ஏடு தொடங்கி ஒரு சிறுவனுக்குத் தமிழின் மரபையும் சித்தாந்தத்தையும் உச்சரிப் பையும் உணர்த்த விரும்பிய போதெல்லாம் இப்பாடலை சிபாரிசு செய்திருக்கிறார்கள். சைவமும் தமிழும் பயிற்றுவிக்கப் பட்ட குடும்பங்களில் இப்பாடல் ஒலித்திருக்கிறது. குமரகுருபரரின் புகழ் பரவத் தொடங்கியதிலிருந்து இப்பாடலுக் கான செல்வாக்கும் அதிகரித்திருக்கும். இன்று தமிழின் சிறுகதை மன்னன் என்னும் போற்றுதலுக்குரிய புதுமைப்பித்தன் (1906-1948) தமது சிறு வயதில் இப்பாடலை மனப்பாடமாக ஒப்பிப்பதில் வல்லவராக விளங்கினாராம். தமிழ் மரபிலான கல்வியில் நாட்டம் கொண்ட பல குடும்பங்களும் பள்ளிகளும் இப்பாடலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கின்றன. இன்றைக்கும்கூட உலகின் பல பகுதிகளிலும் வாழ்கின்ற தமிழ்க் குடும்பங்களில் பல கந்த சஷ்டி முதலிய நாட்களில் இப்பாடலைப் பாராயணம் செய்கின்ற வழக்கைப் பின்பற்றி வருகிறார்கள். இக்கலிவெண்பாவின் நோக்கமே கல்வி போதிக்கும் கடவுளுக்கு விடுக்கும் அடிப்படையான முறையீடாகத்தான் இருக்கிறது. இன்று ஆங்கில மழலைப் பள்ளிகளில் 'நர்ஸரி ரைம்ஸ்' என்கிற அலட்டல்கள் பெருகி வரும் சூழலில் இந்தப் பாடலுக்குள்ள

பெருமிதமான பின்புலத்தை நினைத்துப் பார்ப்பதே ஓர் இனிய அனுபவம் அல்லவா?

குமரகுருபரது குரு பக்தியை நேரடியாக வெளிப்படுத்தும் பாடல்தான் 'பண்டார மும்மணிக்கோவை'. தருமபுரம் மாசிலாமணி தேசிகரே அந்தக் குருநாதர். இத்தேசிகர் குமரகுருபரரின் ஐயப்பாடுகளைத் தீர்ப்பதில் வல்லவராக விளங்கினார். இவரது கட்டளையின்படியே குமரகுருபரர் சிதம்பரம் முதலிய தலங்களுக்கும் காசி மாநகருக்கும் செல்ல நேர்ந்தது. திருச்செந்தூர் கோவிலில் தமக்கு ஓர் "அசரீரி" அறிவித்தபடியிலான ஆசான்தான் தேசிகரென குமரகுருபரர் அடையாளம் கண்டு கொண்டார்.

சிவபெருமானே குருவாக எழுந்தருளியதாக குமரகுருபரர் இந்நூலில் அறிவித்துள்ளார்; "குருவே சிவம்" என்கிற கொள்கையை இந்நூலில் நிலைநாட்டியுள்ளார்.

முருகனும் சிவனும் ஞானாசிரியர்களென்பது ஆன்மிகக் கல்வியையே முக்கியமாகக் கருதித்தான், 'சகலகலாவல்லி'யான கலைமகளைத் துதிப்பது கொஞ்சம் விரிவான நோக்கத்திற்காக. ஒரு நூலின் தொடக்கத்தில் கலைமகளைத் துதிப்பதென்னும் மரபை குமரகுருபரரின் படைப்புகளிலும் பார்க்கிறோம். 'சகலகலாவல்லி மாலை'யில் அவர் கலைமகளிடம் முழுமையாகச் சரணடைகிறார். இப்பாடலிலும் தமது ஆசிரியர் ஒருவரையே அவர் தெய்வமாகத் துதிப்பதாகத் தோன்றுகிறது. வட நாட்டிற்கு அவர் சென்று வடமொழிப் புலமையைப் பெற்ற போது இப்பாடலை இயற்றினார். காசிவாசியாகப் போகும் ஒரு கல்விமானின், ஒரு சைவத் துறவியின், ஒரு தமிழ்ப்புலவனின், வேட்கை இங்கே தெளிவாக ஒலிக்கிறது. "கல்வி"யும் "வடநூற் கடலும்" "தமிழ்ச் செல்வமும்" பெறுவதற்கான பிரார்த்தனை இது. 'சரஸ்வதி', 'பாரதி' என்றெல்லாம் கலை, கல்வி, மொழி முதலியவற்றில் திறமுடைய ஞானிகளைக் குறிப்பிடும் வழக்கம் நம் நாட்டில் இருந்தது. 'சரஸ்வதி ஆச்சார்யா' என்கிற பட்டம் பெற்ற புலவர்கள் காசி நகரில் வாழ்ந்து வந்தனர். அப்படி ஓர் ஆச்சார்யாவிடம், ஒரு பன்மொழிப் புலவரிடம், ஒரு பல்கலை வேந்தரிடம், குமரகுருபரர் இந்துஸ்தானியையும் வேதத் தத்துவங்களையும் கற்றிருப்பாரே, அந்தக் "கருணைக் கடலை" அவர் ஒரு

கடவுளுக்கு நிகராக மதித்திருப்பார்; அந்த மகான் மீது இப்பாடலை அவர் இயற்றியிருப்பார் போலத் தோன்றுகிறது.

இப்பாடலின் கடைசி வரிகள் குமரகுருபரரின் ஆளுமையை நமக்குத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. மதம், மொழி, கலாசாரம், பண்பாடு, அரசியல் முதலியவற்றால் வேறுபட்ட வட்டாரத்தில் ஓர் அறக்கட்டளை மூலமாகக் கல்விப் பிரசாரம் செய்யத் துணிந்த நம் முனிவரின் உணர்ச்சிகள் இவ்வரிகளில் வெளிப்படுகின்றன.

> மண்கண்ட வெண்குடைக் கீழாக
> மேற்பட்ட மன்னருமென்
> பண்கண் டளவிற் பணியச் செய்
> வாய் படைப் போன் முதலாம்
> விண்கண்ட தெய்வம்பல கோடியுண்
> டேனும் விளம்பிலுன் போற்
> கண்கண்ட தெய்வ முளதோ
> சகல கலாவல்லியே.

பண், பாடல் அல்லது எழுத்து மூலமாகப் பெறும் வலிமையால் இந்தப் பாரினையே கவர்ந்துவிட முடியும் என்கிற நம்பிக்கையை இப்பாடல் எதிரொலிக்கிறது. குமரகுருபரர் தாமும் ஒரு குருவாக வளர்ந்து கொண்டிருந்தபோது இப்பாடலை இயற்றினார். 'நீதிநெறி விளக்கம்' மூலமாக அவர் அரசியல், ஆன்மிகம் மற்றும் கல்வி தொடர்பாக வெளியிட்டுள்ள எண்ணங்களையும் இப்பாடலின் பின்புலத்தில் நாம் நினைவுகூரவேண்டும்.

''எழுதுகோல் வாளினும் வலியது'' என்னும் பொருள் இப்பாடலில் தொனிக்கிறது. ''கவிஞர்கள் உலகின் அங்கீகரிக்கப் படாத சட்டமன்ற உறுப்பினர்கள்'' என்று ஆங்கிலக் கவிஞன் ஷெல்லி எழுதினான். ''பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேணும்'' என்று பாரதியார் பராசக்தியை வேண்டியது. இம்மாதிரியான உணர்வுடன்தான் என்பதை நாம் அறிவோம். அகவிருள் அகற்றி அறிவொளி பரப்புவதும் உலகம் உய்வதற்கான ஓர் ஆன்மிகப் பயிற்சியென குமரகுருபரர் தமது இளம் வயதிலிருந்தே அனுபவப் பூர்வமாக அறிந்திருந்தார். கல்வியைப் பெறுவதே கல்வியைப் பரப்புவதற்காக என்று அவர் வலியுறுத்தினார். தனித்துவம் மிக்க அவரது பணிக்கு நமது தேசியக் கல்வியின் வரலாற்றில் ஓர் உன்னதமான இடம் வழங்கப்பட வேண்டும்.

# குமரகுருபரரின் கலம்பக் இலக்கியம்

க. முருகையா, மேலநீலிதநல்லூர்

ஸ்ரீ குமரகுருபரர் திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஸ்ரீவைகுண்டம் என்னும் சிற்றூரைச் சேர்ந்த கைலாயபுரத்தில் பிறந்தவர். வேளாண் குடியினர், சிறுவயதில் ஊமையாயிருந்து திருச்செந்தில் முருகனருளால் பேசப் பெற்றவர். இவர் பதினேழாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டின் பெருந்துறவியாயும், அருந்தமிழ்ப் புலவராகவும், சிவநெறிச் செல்வராகவும் விளங்கியவர்.

கலம்பகம் பாடாக் கவிஞன் கால் கவிஞன் என்பது பழமொழி. எனவே இக்குறையைப் போக்க ஸ்ரீ குமரகுருபர அடிகள் மதுரைக் கலம்பகம், காசிக் கலம்பகம், கைலைக் கலம்பகம் ஆகிய மூன்று கலம்பகங்களைப் பாடியுள்ளார். அவற்றில் இங்கு மதுரைக் கலம்பகம் பற்றிக் காண்போம்.

**கலம்பக இலக்கணம்**

பல்வேறு பொருளில், பல்வேறு செய்யுள்களில், பல்வேறு பட்ட பாத்திரப் படைப்புகள் மூலம் பாட்டுடைத் தலைவனின் ஆற்றலைப் பாடுவது கலம்பகம். கலப்பு + அகம் = கலம்பகம். கலம்பகம் பதினெட்டு உறுப்புகளைக் கொண்டிருக்கும். ஆதலின் கலம் 12 + பகம் 6 = 18 கலம்பகம் என்றும் கூறுவர். பல்வகைச் செய்யுளும் அகம், புறம், வெகுளி, உவகை ஆகிய சுவைகளும் நிரம்பிய ஒரு கலவை இலக்கியம். ஸ்ரீ குமரகுருபர அடிகளது கலம்பகங்களில் அகத்துறைகள் மலிந்துள்ளன.

**மதுரைக் கலம்பகம்**

இக்கலம்பகம் மதுரைச் சொக்கநாதக் கடவுளைப் பாட்டுத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டது. இது சொற்சுவை, பொருட்சுவை நிறைந்தது. வீரம் முதலிய எண் சுவைகளும் இதில் இயம்பப்பட்டுள்ளது. இந்நூல் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப்பட்டது. இதில் திருவிளையாடற்புராணச் செய்திகள்

ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இது சொற்சுவை, பொருட் சுவை, தொடைநயம் உடையது. பெருந்திணை, அகம், புறம் பகுதிகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பாண்டிய மன்னன் காட்டை வெட்டி நாடாக்கியபோது சோமசுந்தரக் கடவுள் தன் சடையில் இருந்த சந்திரனின் நிலவாகிய அமுதத்தை விடுத்தார். அந்த அமுதம் பரந்து அவ்விடத்தை சாந்தி செய்தது. புயவகுப்பு முதலாக "மேக விடுதூது" இறுதியாக பதினெட்டு உறுப்புகளையும் கொண்டது. பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் முதலிய பொருளும் இதில் இடம் பெற்றுள்ளன. சித்தி விநாயகரின் திருவடிகளை வாழ்த்துவதுடன் இந்நூல் தொடங்குகிறது.

**இறைவனின் பெருமை**

அழகிய பொன்னால் செய்த கிரீடத்தைத் தலையில் சூடிய அபிசேகவல்லி என்ற திருப்பெயர் பெற்ற அங்கயற்கண் அம்மையுடன் சிவந்த பொன்மயமான மதில் சூழ்ந்த செந்தமிழ் வழங்கும் மதுரை என்னும் அழகிய நகரில் வீற்றிருப்பவனே! வேப்ப மலர்களால் தொடுக்கப்பட்ட மணமுடைய மாலையை முடிநிறைந்த தலையில் சூடியவனே! அறிவினாலும் அறிவதற்கு அரியா தன்மையை உடையவனாய் இருக்கிறாய் என்று ஸ்ரீ குமரகுருபரர் வாழ்த்துகிறார் "அறிபல ஏறிலுனு மாறிவரு நெறியினை" என இறைச் சிறப்பை எடுத்துக் கூறுகிறார். இதற்கும் மேலாக மிக உயர்ந்த நிலையில் இறைவனை வாழ்த்திப் பாடுகிறார். ஆகாயமும், பூமியும், சந்திரனும், சூரியனும் உடம்பும் உயிரும் உள்ளதும் இல்லாததுமாகிய பொருளாக இருக்கின்றார் என்று இயம்புகிறார்.

"வானுநீ ஊனுநீ
நிலனுநீ உயிரு நீ
மதியு நீ யுளது நீ
கதிரு நீ யிலது நீ"

இதற்கும் மேலாக இறைவனை உயர்த்திக் கூறுவதற்கான வார்த்தை இல்லை என்னும் அளவிற்கு இறைவன் புகழையும் இறைவன் எல்லாமாக விளங்குகின்றான் என்ற உயர்வையும் அற்புதமாக எடுத்துக் கூறியுள்ளார்.

**இறைவனின் அற்புதச் செயல்கள்**

ஆகாயக் கங்கை உன் தலையில் நிறைந்திருப்பதனால் நனையாத நீ விரைந்து வரும் தாமிரபரணி ஆற்றில் நீராடியும் வைகை ஆற்றின் குளிர்ந்த நீர்த்துறையிலும் நீராடியுள்ளாய்

1. விண்ணாறு தலை மடுப்ப நனையா நீ விரைப்பொருளை
தண்ணாறு குடைந்து வைகைத் தண்டுறையும்
படிந்தனையே''

உடம்பாகிய வலையிலே அகப்பட்டு வருந்துகின்ற உயிர்களால் அறியப்படாதவனே! ஒரு மீன் பிடிக்கும் வலையை உனது புயத்தில் ஏற்றுக் கொண்டதும் உமையாகிய ஒருத்தியின் கண்களாகிய வலையில் அகப்பட்டதன்றோ! என இறைவன் அற்புதச் செயல்களை வியந்து பாடுகிறார்.

''ஊன் வலையில் அகப்பட்டார்க்குட்படாய் நின்புயத்தோர்
மீன் வலை கொண்டது மொருத்தி விழி
வலையிற்பட்டதன்றே''

என்பது பாடல்.

இச்செயல் வைகைக்குக் கரை அமைக்க வேண்டி குழந்தை இல்லாத மூதாட்டிக்கு உதவுவதற்காக இறைவனே மனித உருவமெடுத்து பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்ட அற்புதச் செயலைப் போன்று அமைந்துள்ளது.

**வருணனை**

தலைமகளின் சிறப்பைக் கூறவந்த ஸ்ரீகுமரகுருபரர் அவள் கூந்தலை அடர்ந்த மேகத்தின் நிறம் என வருணிக்கிறார். மேனியைப் பொன்னிறம் என்கிறார். பெரிய கண்களைக் கயல் மீன்கள் என்று எடுத்துரைக்கிறார். இடையை மின்னலோடு ஒப்பிடுகிறார். கரும்பும் செந்நெல்லும் விளைகின்ற வயல்களை உடைய அழகிய மருதநிலம் சூழ்ந்த மதுரையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் மலையில் உள்ள வஞ்சிக் கொடி போன்ற அவளது வடிவத்தின் தன்மை இத்தன்மையதாம். அவளிருக்கும் பெரிய சோலை எனது மனமாகும் என்று வர்ணிக்கிறார்.

''புயல் வண்ண மொய்குழல் பொன்
வண்ணந்தன் வண்ணம் போர்த்தடங்கண்
கயல் வண்ணமென் வண்ண மின்வண்ண
மேயிடை கன்னற செந்நெல்

வயல் வண்ணப் பண்ணை மதுரைப்
பிரான் வெற்பில் வஞ்சியனனாய்
இயல் வண்ணமில வண்ண மென்னெஞ்ச
மன்றல் விரும் பொழிலே''

என்ற பாடலில் வர்ணனைத்திறம் நிரம்பியதாக அமைந்துள்ளது. இதில் புயல், கயல், இயல் என முதல் சீர் அனைத்தும் ஒன்று போல் தொடுத்துப் பாடியிருப்பது மேலும் இதனை மேன்மையுறச் செய்கிறது.

**பிச்சியார்**

சிவபெருமான் பிச்சை ஏற்றார் என்ற புராணச் செய்தியைக் குமரகுருபரர் தமக்கே உரிய பாணியில் இயம்புகிறார். பொருந்திய தவ ஒழுக்கத்திற்குரிய கோலமும் திருநீற்றைப் பூசி மூன்று கீற்றும் உடையவராய் வெள்ளியம்பலத்தில் தூக்கிய திருவடியைக் கீழே பதிய வைத்துக் கால்மாறி நடந்து வாயில் தோறும் சென்று கொள்ளும் பிச்சைக்கு உரிய மொழிகள் சொல்லிக் கொண்டு செல்கின்ற ஆதப் பித்தனாகிய சிவபெருமான் போலச் செல்லும் பிச்சியரே. கடைக்கண் பார்வையும் குறுஞ்சிரிப்பையும் உயிரைக் கவரும்படி வெளியில் விடுத்த சிவபெருமானைப் போல் கையில் பற்றிய சூலப்படையையும் விடாதிருக்கின்றார் என்பதனாலே பிச்சியார் என்ற பெயர் உமக்கு வைத்தது என்று கூறுகிறார்.

''பிடித்த சூலமுங் கை விட்டிலரென்றோ
பிச்சியாரெனும் பேரும் கிட்டதே''.

என்ற வரிகள் இறைவனின் திருவிளையாடற் செய்தியை எடுத்தியம்புகிறது.

**இயற்கை நயமும் வீரமும்**

தேன நாத சிலைக்கரும்பு
கொலைக்கரும் பொரு வேம்பெனுந்...
... வீரசுந்தர மாற மாறடும்
வெள்ளியம்பல வாணனே''.

என வீரத்தை இயற்கை நயத்தோடு எடுத்துக் கூறுகிறார் ஸ்ரீ குமரகுருபரர்.

நன்மணம் விட்டு நீங்காத வண்டுகளின் ஒழுங்காகிய வில் ராணியைக் கொண்ட கரும்பாகிய விலையுடைய மன்மதனை

வெகுண்டு எரித்த காலத்தில் அவன் கையில் உள்ள மீனக் கொடியைப் பறித்துத்தான் கொண்டது. ஒரு தன்மையால் உயரத் தாக்கப்படுவதாகிய ஒரு மீன் நீங்காத வலிமையையுடைய கொடியை ஏற்றுக் கொடியுடன் கொண்டிருக்கின்ற கூத்தப் பாண்டியனாகிய சோமசுந்தரக் கடவுளே பகைவர்களை அழிக்கின்ற வெள்ளி அம்பலவாணனே! இனிமை நீங்காத மன்மதன் வில்லாகப் பயன்படும் கொல்லையில் தோன்றிய கரும்பை வேம்பு என்று கூறுவான். நின் அழகிய தோளில் அணிந்திருக்கின்ற வேப்பம் பூ மாலையை முதிர்ந்த தித்திப்புள்ள கரும்பு என்பார். இவ்வாறு மான் பார்வையின் தன்மை நீங்காது மழைபோற் குளிர்ந்த கண்களையுடைய இம்மகளும் மாறி உரையாடத் தொடங்குவாள். ஆதலால் மாறி ஆடும் உனது வல்லமை உன்னை வணங்குவதற்கு வந்தவர்களுக்கு வருமோ? என்று வீரத்தின் சிறப்பைக் கூறுகிறார் ஸ்ரீகுமரகுருபரர்.

**மேக விடு தூது**

சிவபெருமான் மீது அளவு கடந்த காதல் கொண்ட தலைவி ஆகாயத்தில் செல்லும் மேகத்தை அழைத்து மதுரையில் எழுந்தருளி இருக்கும் என் நாயகனிடம் என் நிலையை உரைப்பீராக எனத் தூது விடுவதாக மேக விடு தூது அமைந்துள்ளது. இதில் நான்மாடக் கூடலின் அமைப்பும் கோவிலின் வனப்பும் சொக்கநாதரின் சிறப்பும், நாயகியின் ஆற்றாமையும் நன்கு புலப்படுத்தப்பட்டுள்ளது.

மதுரைக் கலம்பகத்தில் மீனாட்சியின் காதலும், விரகதாபமும், இறைவனுடைய அக்காதல் வெற்றிபெற வேண்டுதலும் இதுபோன்ற பிற செய்திகளும் இடம் பெற்றுள்ளன. ஞானக் குழந்தையாகிய ஸ்ரீ குமரகுருபரரின் படைப்பாற்றலில் சிறந்த நூல் மதுரைக் கலம்பகம் என்றால் அது மிகையாகாது.

பொருனையாற்றங்கரையில் பிறந்து காவிரிக் கரையில் தீட்சை பெற்று கங்கைக் கரையில் மடம் அமைத்து இமாலயத்தில் நேப்பாள நாட்டில் வாழ்ந்த குமரகுருபரரின் வாழ்வும் தொண்டும் ஜீவநதி போன்றதாகும்.

# அடிகளின் முயற்சி விளக்கம்

மு. மூர்த்தி, சென்னை

எப்படிச் செய்வது? என்ற வினா வாக்கியமானது இரண்டு வகைகளால் விளங்கிக் கொள்ளப்படும். செய்ய முடியுமா! செய்யமுடியாது? என்பதை நோக்கி ஐயப்படும் மனநிலை உடையவனுடைய வினாவாக விளக்கம் கொள்வது ஒருவகை.

செயல் செய்ய விழைபவனுடைய செயல் முடித்தற்கேற்ற கூறுகளை ஆராயத் தொடங்கும் என்றவாறு அவ்வினாவை விளங்கிக் கொள்வது ஒரு வகை.

ஒரே வினா வாக்கியமானது இரண்டு வகைப் பொருள் தர நின்றதை 'முயற்சி' என்ற ஒரே விடையினாலே எதிர் கொள்ளலாம். செய்யமுடியுமா என்ற ஐயப்பாட்டு நிலையை 'முயற்சி' இருந்தால் செய்யலாம் என்பதால் ஊக்கப்படுத்துவது ஒருவகை விடை. இன்ன இன்ன முறைகளில் செய்யத்தொடங்க வேண்டும் என்பதாகச் செயல் தொடர்ச்சிக்கான அடிப்படை முயற்சிகளை மேற்கொள்ளுதல் என்பது ஒரு வகை விடை.

செயல் அடிப்படைக்கான ஆற்றல் அடிப்படையிலும் செயலை நிறைவேற்றுதற்கான ஆற்றல் அடிப்படையிலும் 'முயற்சி' என்பதை புரிந்து கொள்ளலாம்.

பல்வேறு அதிகாரங்களில் 'முயற்சி' என்ற சொல்லைத் திருக்குறளில் கையாண்ட திருவள்ளுவர் 'முயற்சியுடைமை' என்பதாக ஓர் அதிகாரம் வைத்தாரில்லை. ஆயினும் ஆள்வினை யுடைமை, ஊக்கமுடைமை என்பன போன்ற அதிகாரங்களில் அமைத்திருக்கிறார்.

அவ்வாறு ஈரதிகாரங்களில் எடுத்துக்காட்டப் பெற்றனவே செய்ய முடியும் என்ற அடிப்படை ஆற்றலும் செய்தற்கான செயல் துணை ஆற்றலுமாக 'முயற்சி' குறித்த ஆற்றல் களாகும்.

திருவள்ளுவர், தெரிந்து செயல்வகை (47), வலி அறிதல் (48) காலம் அறிதல் (49), இடம் அறிதல் (50), தெரிந்து தெளிதல் (51), தெரிந்து வினையாடல் (52) ஆகியவற்றைச் செயல் செய்தற்கான அடிப்படைகளில் விளக்கிக் காட்டியுள்ளார். மேலும், வினைத்தூய்மை (66), வினைத்திட்பம் (67), வினை செயல்வகை (68) ஆகியவற்றைச் செயல்திறம் அடிப்படைகளில் கூறுகிறார்.

'முயற்சி' பற்றி விளக்க வந்த குமரகுருபரர் "முயலாது வைத்த முயற்சி" (50), "உலையா முயற்சி" (51) ஆகிய இரு நிலைகளில் விளக்குகிறார். மேலும், முயற்சிக்கு அடிப்படையான உத்தி பற்றியும் (நீதிநெறி விளக்கம், பா. 49), முயற்சியினால் விளையும் வினையாலும் (நீ. நெ. வி., பா. 52) கூறுகிறார்.

### இடையறவுபடா முயற்சியும் ஊக்கமும்

ஊக்கமுடைமை (60), மடிஇன்மை (61), ஆள்வினை உடைமை (62), எனும் அதிகாரங்களை முறையாகத் திருக்குறளிற் காணமுடிகிறது. இம் மூன்றுமே முயற்சியை 'உறுதி' என்பதாக ஆக்கும் அடிப்படைக் கூறுகள். உறுதிப்பாடுடையதாக முயற்சிச் செயல் அமைய வேண்டும். அந்த முயற்சியே ஊழையும் வெல்லும் திறத்தது என்பதாக வள்ளுவர் கொண்டு 'ஊக்கம் உடைமையில்',

> ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்கம் உடையான் உழை. (குறள்-594)

என்று கூறுகின்றார். முயற்சிக்கு அடிப்படையான ஊக்கம் உடைமை மடிஇன்மையால் ஆளுமைத் திறம் உடையதாகும் என்றவாறு.

> குடியாண்மை உள்வந்த குற்றம் ஒருவன்
> மடியாண்மை மாற்றக் கெடும் (குறள்-609)

என்ற குறட்பாவில் சுட்டுகின்றார். தம்முடைய குடியின் ஆளுமைத் திறத்தில் குற்றமானது, மடிமையிலிருந்து விடுபட்டால் மாற்றம் பெறும் எனக் கூறுகின்றார். மடிஇன்மையால் ஊக்கம் புலப்படும். ஊக்கத்தை மறைத்து மடிமை நீங்கினால் "ஊக்கம்" வெளிப்பட்டுச் செயல் ஆளுமை முயற்சி வெளிப்படும் என்றவாறு 'ஆள்வினை உடைமை' என்ற அதிகாரத்தை மடியின்மையின் பின் வைக்கின்றார். அவ்வதிகாரத்தில், 'தாளாண்மை' என்பதாக

முயற்சியை உறுதியின் நிலைப்பாட்டுத் தன்மையில் தெரிவிக்கின்றார். இவ்வதிகாரத்தில்தான் 'முயற்சி' என்ற சொல்லாட்சியை வெளிப்படுத்துகின்றார் திருவள்ளுவர்.

ஆள்வினை உடைமையாம் முயற்சிக்கு அடிப்படை ஆற்றலான ஊக்கமானது, முயற்சியை இடையறவுபடாத தன்மையில் உறுதிபெற நிறுத்துவது என்ற வகையில்,

> உறுதி பயப்ப கடைபோகா வேனும்
> இறுவரை காறு முயல்ப – இறுமுயிர்க்கும்
> ஆயுண் மருந்தொழுக்க றீதன்றா லல்லனபோல்
> ஆவனவு முண்டு சில (நீ. நெ. வி., பா. 49)

என்ற பாடலைக் குமரகுருபரர் அமைக்கின்றார்.

செயல் கூடவில்லை யென்றாலும் செயலைக் கூட்டும் வண்ணம் முயற்சி செய்யும் என்றும் இதன்வழி முயல வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றார். அதற்கு ஒரு உதாரணத்தை முன் வைக்கின்றார். உயிர் போகும் நிலையிலும் ஆயுள் நீட்டிக்கும் மருந்தைத் தருதல் போல முயற்சித் தன்மையில் உறுதி இடையறவுபடாமையைத் தெரிவிக்கின்றார். அதன் மூலம் 'அல்லனபோல்' ஆவனவும் உண்டு சில' என்ற உண்மையை உரைக்கின்றார். அல்லனபோல ஆவன என்பது எதிர்நிலைச் செயலானது பயன்விளைப்பது போல என்பதைக் குறித்தது. தீய பொருள்களிலிருந்தும் நோய் நீக்கும் பொருளை ஆகும் பொருளாக உண்டாக்குவது. 'அல்லனபோல இருப்பதில் ஆவனமலர்வது என்பது' (உரை, சா. சரவணன்) அது போல முயற்சியானது அல்லதை நல்லதாக மாற்றம் ஊக்கத் தன்மையால் உறுதிபெறல் வேண்டும் என்பது கருத்து.

### முயலாது வைத்த முயற்சி

முயற்சி இல்லையென்று சொல்லுவதற்கும் ஒரு முயற்சி இருக்க வேண்டும் என்றும் அதன் அடிப்படையில் முயற்சியின் நன்மை புலப்பட்டு உரிய முறையில் முயற்சி மேற்கொள்ளப்படும் திறம் அமையும் என்றவாறு,

> முயலாது வைத்து முயற்றின்மை யாலே
> உயலாகா வூழ்திறத்த வென்னார் – மயலாயும்

ஊற்ற மிறுவிளக்க மூமுண்மை காண்டுமென்
றேறா நெறிகான் முகத்து (பா. 50)

என்ற பாடலைப் பாடுகின்றார் குமரகுருபரர்.

ஊழ் உண்மையைச் சோதித்தறிதல் என்பது, முயற்சி இல்லாமலே ஊழால் வரும் நன்மை வரும் என்பதாக இருப்பது போன்றது. முயற்சி இல்லாமல் இருப்பதற்கு சில முயற்சிகள் செய்ய் வேண்டும்; இல்லையாயின் முயற்சிக்கு ஆகாத தன்மை வந்துவிடும் என்றவாறு குறிப்பிடுகின்றார். உயலாகா என் உளுற்றலுக்கு ஆகாத தன்மை ஊழ்த்திறத்துக்குச் சேர்ந்து அதன் பயனாக வேறுநிலை வந்துவிடும் என்றவாறு நன்மை நோக்கிய முயற்சியை வலியுறுத்துகின்றார்.

இருள்படிந்து, எண்ணை இலாது அணையப் போகும் விளக்கை அணையவிடாமல் இருக்க பல செயல்களை மேற் கொள்வார்கள். அதில், எண்ணெய் ஊற்றுதல், திரி தூக்குதல் போல காற்றடிக்காத இடத்தில் விளக்கை வைத்தலும் ஒன்று.

இது புதியதாக ஒன்றும் செய்யாவிடினும் தீமையினின்றும் காத்துக் கொள்ளுதற்கான முயற்சி என்ற அடிப்படையில் விளக்குகிறார். 'முயற்சி' தானே கூடும் எனினும், தானே கூடுமாறு நின்ற முயற்சி கூடுமாறு அதற்காக முயலாது இருக்கும் முயற்சி அடிப்படையாதல் அவசியம் என்கிறார்.

**உடையா முயற்சி**

ஊழின் வலிமையை ஏற்பதற்கும் 'முயலாமுயற்சி' தேவை என்று சொன்ன குமரகுருபரர் ஊழினை விரட்டும் சோர்வுபடா முயற்சியை வலியுறுத்தி,

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே – உலகறியப்
பான்முளை தின்று மறலியுயிர் குடித்த
கான்முளையே போலுங் கரி. (பா. 51)

என்ற பாடலை அமைக்கின்றார். இப்பாடற் கருத்தினை,

தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (குறள்-619)

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். (குறள்-620)

ஆகிய குறட்பாக்களோடும் இணைத்துக் காணலாம்.

**முயற்சி ஆளுகை**

காலம், இடம், செய்வினையின் மூலம் செயல்விளைவு ஆகியன அறிதலும் சூழ்வன சூழ்தலும் தன் துணை தெரிதலும் பிறன் துணை தெரிந்தும் முயற்சியால் செயல் நிறைவேற்றப் பட்ட ஆளுமைத் தன்மையுடையாரும் என்றவாறு,

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து – மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். (பா. 52)

என்ற பாடலை அமைக்கின்றார். குமரகுருபரரின் இப்பாடற் கருத்தை, திருக்குறளின் அதிகாரங்களாகிய 47, 48, 49, 50, 51, 52, 66, 67, 68 என்பன போன்ற அதிகாரங்களின் வழி விரித்துக் காண இயலும்.

# குமரகுருபரரின் வேட்டல்

**இரா. ரேணுகாதேவி, உடுமலைப்பேட்டை**

குமரகுருபரர் பாடிய நூல்களில் சகலகலாவல்லி மாலை என்ற சிற்றிலக்கியம் மட்டும் இங்குக் கட்டுரைப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இந்நூலுக்கு முந்தைய நூலாக, 'மாலை' என்ற பெயரில் 'திருவள்ளுவமாலை' என்ற ஒரு நூலைக் காண்கிறோம். அத்திருவள்ளுவமாலை வள்ளுவரின் குறளுக்குச் சிறப்புச் சேர்க்கும் மாலையாக அமைந்துள்ளது. ஆனால், குமரகுருபரர் கலைமகளுக்குப் பாமாலையாக இதனைச் சூட்டி யுள்ளார். இம்மாலையில் கல்விச் செல்வத்தை வேண்டிப் பாடியுள்ளாரா? அல்லது பொருட் செல்வத்தை வேண்டிப் பாடியுள்ளாரா? என்பதனை ஆய்வதே இக்கட்டுரையின்நோக்கம். மேலும் இவ்விரண்டு செல்வங்களில் குறிப்பாக எதை வேண்டி யுள்ளார் என்பது மட்டுமின்றி, அதில் ஒன்றைச் சிறப்பாக வேண்டி நிற்றலின் நோக்கம் என்னவாக இருக்கும் என்பதுவும் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கலைமகளைப் பாடியது ஏன்?**

கலைகளின் இருப்பிடமாக இருப்பவள் கலைமகள். அவளைச் சகல கலைகளுக்கும் தலைவியாகவும், செல்வத்திற்குத் தலைவியாகத் திருமகளையும் உருவகம் செய்துள்ளார். இவ்விரண்டு தெய்வங்களில் கலைமகளை மட்டும் குமரகுருபரர் தேர்ந்தெடுத்தமைக்குக் காரணம் இருத்தல் வேண்டும். இவர் இளமையில் வாய் பேசாதிருந்திருக்கிறார் என்பது அவருடைய வரலாற்றின் மூலம் தெரிய வருகிறது. அவருடைய இளம் வயது வாழ்க்கைக் குறிப்புகளும் அவரது இலக்கியப் படைப்பைப் புரிந்து கொள்ள உதவுகிறது "ஓர் இலக்கியப் படைப்பு பெரிதும் விளங்கிக் கொள்ளப்பட வேண்டுமாயின், அதன் படைப்பாளியின் வாழ்க்கைக் குறிப்புகள் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும்" (சி.இ.மறைமலை, இலக்கியமும் உளவியலும், பக்.45-46) என்னும் உளவியல் கருத்து ஈண்டு ஒப்பு நோக்குதற்குரியது. குமரகுருபரரின்

கவிதையைப் புரிந்து கொள்ள அவருடைய குழந்தைப் பருவ நிகழ்வுகளும் காரணமாக அமைய முடியும் என்பதனைக் கீழ்வரும் பிராய்டின் கருத்தான,

> "குழந்தை எதைக் காண்கின்றதோ அதனைத் தவிர உலகைப் பற்றிய வேறு அனுபவம் அதற்கு ஏற்பட வாய்ப்பில்லை. எனவே தனது அனுபவத்தை வகைப்படுத்துதற்குரிய மொழி எதனையும் அது பெற்றிருக்கவில்லை. அதன் பார்வைக்குப் படுகின்ற உருவங்கள் நினைவிற் பதிந்து அத்தகைய கட்புலப் படிமங்களே ஒரு மொழியாகச் செயற்படுகின்றன" (மேற்படி, ப. 31)

என்பதன்படி குமரகுருபரரின் குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள், அவருடைய மனதை விட்டு நீங்காமல் இருந்திருக்க வேண்டும். எனவேதான், அவர் கலைமகளை மட்டும் பாடியுள்ளார். அவருக்குப் பொருட் செல்வத்தை விடக் கல்விச் செல்வமே பெரிது எனத் தோன்றியிருக்க வேண்டும். அதன் விளைவாகவே அவர் சகலகலா வல்லியிடம் பத்துப் பாடல்களிலும் தனக்குக் கவி சொல்லும் வல்லமையைத் தரல் வேண்டும் என வேண்டிக் கொண்டுள்ளார்.

**கவிபாட வேண்டல்**

இறைவனிடம் அடியவர்கள் வேண்டிக் கொள்வார்களே யானால், அன்பு, அறம், அருள் வேண்டும் என வேண்டுவர். இதுவே மரபும் ஆகும். சான்றாக,

> ... யாம் இரப்பவை
> பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
> அருளும் அன்பும் அறனும் மூன்றும்
> உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே! (பரி. 5:78-81)

ஈண்டுப் பரிபாடலில் முருகனிடம் அருள், அன்பு அறம் வேண்டும் என்றனர் சங்கத்தமிழர். இதே போன்றே, திருமாலிடம் கீரந்தையார், 'சுற்றத்துக்கும் தமக்கும் மாசற்ற மெய்யுணர்வு வேண்டும்' என்று வேண்டுகிறார்.

நல்லெழுநியாரும் திருமாலிடம், 'எஞ்ஞான்றும் பாடிப் பரவும் பேற்றினை அருள' வேண்டுகிறார். நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் ஆழ்வார்களில் ஒருவர்,

"அச்சுதா; அமரரேறே; ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்"
(நாலாயிர திவ்யப்பிரபந்தம்-873)

என அவரவர்களின் விருப்பமான இறைவனின் பெயரைச் சொல்லும் பேறு போதும் என்று வேண்டிக் கொள்வதனை இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகிறது. ஆனால் குமரகுருபரர் தமக்கு விருப்பமான முருகனை, சிவபெருமானை, மீனாட்சியம்மையை வேண்டிக்கொண்ட போதும் நிறைவு அடையாத நிலையில் சகலகலா வல்லியிடம் கவிபாட வரம் கேட்கிறார். கவிபாட வரம் கேட்பதற்காகவே இப்பாடல்கள் பாடப்பட்டதாகத் தோன்றுகிறது.

"நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும்பணியில் பணித்தருள்" (சகலகலாவல்லி மாலை 2:1–3)

என்ற அவருடைய பாடலில் சொற்சுவை, பொருட்சுவை இரண்டும் கலந்திருக்கும் நிலை வேண்டும் எனக் கேட்கின்றார். கலைமகளிடம், தனக்குப் பேசும் ஆற்றல் வந்தபின்னர் நன்கு பாடும் ஆற்றலும் வரவேண்டும் என வேண்டிக் கொள்வது போன்று அமைந்துள்ளது. காரைக்காலம்மையார், "இறைவா உன்னடிக்கீழ் நானிருந்து பாட நீ ஆட வேண்டும்" என்று கேட்டுக்கொண்ட பாடலடிகள் ஈண்டு ஒப்புநோக்குதற்குரியது.

மேலும், குமரகுருபரர் சகலகலா வல்லிமாலையில் எட்டாவது பாடலிலும் கவிபாட வரம் கேட்டுள்ளார்.

"சொல்விற் பனமு மவதான முங்கவி சொல்லவல்ல
நல்வித்தையுந் தந்தடிமைகொள்"
(சகலகலாவல்லி மாலை 8:1–3)

எனத் தன்னை நாவன்மை உடையவராக்கும்படியும் பல விசயங்களை ஒரே சமயத்தில் கேட்கும் ஆற்றலுள்ளவராக்கவும் வேண்டுவதோடு கவிதை சொல்லும் ஆற்றலையும் கொடுக்க வேண்டும் என்று வேண்டுகிறார். கவிதை நன்கு கைவரப்பெறல் வேண்டுமாயின் சொல்லாற்றலைத் தனக்குத் தரல் வேண்டும் எனக் கலைமகளிடம் வற்புறுத்திக் கேட்கின்றார்.

## 1954

**சொல்வன்மை வேண்டல்**

சொல்வன்மையானது பகைவரையும் தன்பால் ஈர்க்கக்கூடிய ஆற்றல் பெற்றது. சொல்வன்மை பொய்யையும் மெய்யாக்கக் கூடியது. இத்தகு சொல்லாற்றல் என்பது இயற்கையாகவே வரக்கூடியது. இதனையே, ''கல்வி என்பது நூல்களைக் கற்றுப் பெறும் அறிவு. வாக்கென்றது புண்ணிய வசத்தால் எளிதில் கவியியற்றும் ஆற்றலாகிய இயற்கை அறிவு'' (குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு, ப.518.) என்பதில் சொல் என்பது இயற்கையாக வந்தமைவது என்று சுட்டப்பட்டுள்ள நிலையில் இயற்கை அறிவு என்பது சொல்லாற்றலையே சுட்டி நிற்கின்றது. இவ்விரண்டு அறிவுகளைக் குறித்து வள்ளுவரும் கூறியுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்குதற்குரியது.

''நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்'' (குறள்–373)

நூலினால் பெற்ற அறிவைவிட இயற்கையாக உள்ள அறிவே மிக்குத் தோன்றும் என்கிறார் வள்ளுவர். இவ் இயற்கை அறிவையே மிகுவிக்கும்படி, குமரகுருபரர் கலைமகளிடம்,

''தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த
கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்''
(சகலகலாவல்லி மாலை–4:1–3)

என்று வேண்டுகிறார். இதற்குக் காரணம், பேசுகின்ற ஆற்றல் தனக்கு இல்லாமல் பின்னர் கைவரப்பெற்ற நிலையில் அதன் அருமையை உணர்ந்தவர் தாம் வாய் பேசாது ஐந்து வயது வரை வருந்தியவர், தன்னைக் காட்டிலும் தாயும்தந்தையும் அதிகமாக வருந்தியதைக் கண்கூடாகக் கண்டவர். குழந்தைப் பருவத்திலே ஏற்பட்ட இத்துயர நிகழ்ச்சி இவர் அடிமனத்தில் மறையாமல் இருந்திருக்க வேண்டும். அதுவே, இவர் வளர்ந்த பின்னரும் மறையாமல் நின்று கலைமகளிடம் சொற்சுவை தோய்ந்தவாக்குத் தனக்குத்தரல் வேண்டும் என வேண்டத் தூண்டியுள்ளது குமரகுருபரர் வேண்டும் சொல்வன்மை, வள்ளுவரிடம் இலங்குகின்றமையை திருவள்ளுவமாலையில் அரிசில்கிழார் என்னும் புலவர் பாராட்டும் பொழுது,

"பரந்தபொருள் எல்லாம் பார் அறிய வேறு
தெரிந்து திறம்தொறும் சேரச் – சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லார்ஆர் வள்ளுவர் அல் லால்"

(திருவள்ளுவமாலை–13)

என்ற பாராட்டுப் பாடலில் இடம்பெறும் வள்ளுவர் சொல் போன்ற வன்மையான சொல் தனக்கு வேண்டும் என்று வேண்டிக் கொள்வது போல் தோற்றமளிக்கின்றது. சொல் வன்மையும், கவிபாட வல்லமையும் கேட்டதோடன்றி குமரகுருபரர் முத்தமிழையும் தனக்குத் தரவேண்டும் என்று கேட்கின்றார்.

## முத்தமிழ் வேட்டல்

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்ற முத்தமிழும் தனக்குத் தர வேண்டும் என்று குமரகுருபரர் வேண்டுகின்றார்.

"பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங் கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்து நிறைந்தாய் சகல கலாவல்லியே"

(சகலகலாவல்லி மாலை–6)

ஈண்டுப் பண் என்றது இசைத்தமிழையும் பரதம் என்றது நாடகத் தமிழையும் கல்வி என்பது நூலறிவையும் தீஞ்சொற் பனுவல் என்றது இனிய சொல்லமைதியுடைய கவிதையையும் சுட்டி நின்றது. இம் மூன்று தமிழையும் கேட்டு நிற்கின்றார். இதே போன்று கந்தர் கலிவெண்பாவிலும் இவர் தமிழ்ப் புலமையை வேண்டி நிற்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.

"ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும் – ஓசை
எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புலமை பாலித் – தொழுக்கமுடன்"

(கந்தர் கலிவெண்பா–118, 119)

முருகனிடம் தமிழ்ப்புலமையைப் பெற வேண்டுகின்றார். மூன்று தமிழையும் தனக்குத் தரும்படி ஔவையாரும் விநாயகப் பெருமானிடம் கேட்பது ஒப்புநோக்கற்குரியது.

"பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான் தருவேன் – கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா" (நல்வழி, கடவுள் வாழ்த்து)

என மூன்று தமிழையும் ஒருங்கே தனக்குத் தந்தருளும்படி வேண்டிக் கொள்வது போன்றே குமரகுருபரரும் கலைமகளிடம் முத்தமிழை வேண்டியுள்ளார்.

குமரகுருபரரிடம் அரிதாக வந்து சேர்ந்தது பேச்சாற்றல். ஆனால் அவையனைத்தும் இயல்பாகவே கைவரப் பெற்ற வளாகக் கலைமகளை எண்ணியதனால் வியக்கின்றார். அதன் விளைவாக எழுந்த சொன்மாலையே சகலகலாவல்லி மாலை ஆகும். இதில் ஞானத்தின் தோற்றமென்ன நிற்கின்ற கலைமகளைக் கண்டு வியந்ததோடன்றித் ஞானத்தின் செல்வியை வணங்குகிறார்.

**ஞான வேட்கை**

சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக இருக்கும் உண்மை யறிவே ஞானம் என்பர். இதனைப் பெறக் குமரகுருபரர் மிகவும் துன்பப்பட்டிருக்கிறார் என அவருடைய வாழ்க்கை வரலாறு காட்டுகிறது. "சிவஞானவுபதேசம் பெற வேண்டுமென்ற கருத்து இவருக்கு வரவர அதிகமாயிற்று. தமக்குரிய ஞானா சிரியரைத் தேடித் தேர்ந்து சரண்புக வேண்டுமென்று ஆவலுற்றது இவரது மனம். அக்காலத்தில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் 4-ஆம் பட்டத்தில் குருமூர்த்தி யாக விளங்கிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரைத் தமக்குரிய ஆசிரிய ரென்பதைத் தேர்ந்தார். அப்பால் அத்தேசிகரிடம் தமக்குத் துறவுநிலையருள வேண்டுமென்று வேண்டினர். அங்ஙனம் செய்வ தற்குமுன் ஸ்தலயாத்திரை செய்து வரும்படி கட்டளையிட்டனர். காசிக்குச் சென்று வருவதில் நெடுங்காலம் செல்லுமேயென்று கவன்ற குமரகுருபரரை நோக்கிச் சிலகாலம் சிதம்பரவாசமேனும் செய்யும்படி பணித்தனர்." (குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம், ப. 20) இவ்வரலாற்றை நோக்கும் பொழுது இவருக்கு ஞானக் கல்வி என்பது எட்டாக் கனியாக இருந்திருக்கிறது என்று தெரிகிறது. எனவேதான் கலைகளின் அரசியும் ஞானத்தின் தோற்றமுமான கலைமகளைப் பத்துப் பாடல்களில் பரவி

யுள்ளார். அப்பத்துப் பாடல்களில் ஒன்றான, ஒன்பதாம் பாடலில்,

"சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ்
ஞானத்தின் றோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர்
யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ
டரசன்ன நாணநடை
கற்கும் பதாம்புயத்தாயே
சகல கலாவல்லியே"

ஞானத்தின் தோற்றமாக நிற்பவள் இவள் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டதனால்தான் குமரகுருபரர் சகலகலாவல்லி மாலையைப் பாடினார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை எனலாம். சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராக இருக்கும் உண்மையறிவு தனக்கு வேண்டும் என்று கேட்டதற்கும் ஒரு நோக்கம் இருந்திருக்கிறது என்று தெரிகிறது சொல்வன்மை இருக்குமேயானால் எண்ணிய எண்ணியாங்கு எய்த முடியும் என்பது குமரகுருபரரின் எண்ணம்.

**கேளாரும் வேட்பு மொழியும் பண்கேட்டல்**

காசிக்குச் சென்று அங்குள்ள "டில்லி சுல்தானின் அன்பைப் பெற்று", அதுகாறும் மறைக்கப்பட்டிருந்த ஸ்ரீ விசுவலிங்கப் பெருமானை வெளிப்படுத்தி அங்கே கோயில் நிருமிக்கச் செய்து நித்திய நைமித்தியங்கள் நடத்த வேண்டும் என்பது இவரது எண்ணம். (குமரகுருபர சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம், ப. 23) இந்த எண்ணம் ஈடேறும் வண்ணம் அவருக்குப் பாடல் பாட அருள்புரிய வேண்டும் என்று சகலகலைகளின் அரசியிடம் வேண்டும்பொழுது,

"மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும்
விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வமுளதோ சகலகலா வல்லியே"

தன்னுடைய பாடலைக் கேட்டபோதே சுல்தான் பணிய வேண்டும் என்று தன் எண்ணம் ஈடேறக் கலைமகளிடம்

கேட்கிறார். சகலகலாவல்லி மாலையின் உண்மையான உட் பொருளைப் புரிந்து கொள்ள நமக்குக் குமரகுருபரரின் சரித்திரம் பெரிதும் துணைநிற்கிறது எனலாம்.

பிராய்டின் கூற்றுப்படி இளமையில் கண்ட, கேட்ட நிகழ்வுகள் மனதை விட்டு அகலாது என்கிறார். இதே போன்று குமரகுருபரரின் வாழ்வியல் நிகழ்வுகளே இவரைச் சகலகலாவல்லி மாலை எழுதத் தூண்டியுள்ளது. ஆழ்மனதின் படிவுகளே கலைகளாக வெளிப்படுகிறது என்பது பிராய்டின் கூற்று. இதே போன்று ஆழ்மனதில் உறைந்துள்ள எண்ணங்களே ஒருவருக்குத் தேடுதல் வேட்கையைத் தூண்டுவன. அத்தகைய அகத் தூண்டல்களின் விளைவாகவே சகலகலாவல்லி மாலையில் குமரகுருபரரின் மனம் வெளிப்பட்டிருக்கின்றது.

சகலகலாவல்லி மாலையின் மூலம் குமரகுருபரர் சொல் வன்மையையும், கவிபாடும் வல்லமையையும், ஞானக் கல்வியை யும் வேண்டிக் கொள்கிறார். தமக்குப் பேச இயலாத குழந்தைப் பருவத்தில் அனுபவித்த தம்முடைய துயரத்தையும், தம் பெற்றோரின் துயரத்தையும் கண்டதனால்தான் சொல்விற்பனம் வேண்டும் என்று கேட்கிறார். ஞானக் கல்வியைத் தேடி அலைந்து திரிந்தவர். எனவேதான் ஞானத்தின் தலைவியைப் பரவுகின்றார். அவருடைய வாழ்க்கைக் குறிப்பைக் கொண்டு காணும் பொழுது, கலைமகளிடம் வேண்டுவது பொருட் செல்வமன்று என்றும் கல்விச் செல்வமே தனக்கு வேண்டும் என்றும் கேட்கிறார் என்பது வெளிப்படை.

# குமரகுருபரரும் கந்தர் கலிவெண்பாவும்

செ. மா. க. வசந்தகோகிலம், கடலூர்.

பதினேழாம் நூற்றாண்டின் தலைசிறந்த புலவர்களில் ஒருவரான குமரகுருபரரால் முதன் முதலாகப் பாடப் பெற்ற நூலாகக் கருதப்படுவது 'திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா' வாகும். திருச்செந்தூரில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானின் பெருமைகளைக் கலிவெண்பா யாப்பில் கூறும் இந்நூல் 'குட்டிக் கந்தபுராணம்' என்று புகழப்படுகிறது.

**குமரகுருபரர் காலச் சூழல்**

குமரகுருபரர் தோன்றிய காலம் வேற்று அரசியல், வேற்று மொழி, வேற்றுச்சமயம் என்ற மும்முனைத் தாக்குதலுக்குத் தமிழ்மொழியும் இந்து சமயமும் உட்பட்டிருந்த காலமாகும்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இசுலாமிய சமயத்தைப் பரப்பும் நோக்கோடு முசுலீம்கள் குழு ஒன்று அரபு நாட்டிலிருந்து தென்னகம் வந்ததைத் தொடர்ந்து கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஏறத்தாழ ஐயாயிரம் இசுலாமிய சமயத் தொண்டர்கள் தமிழகத்திற்கு வந்தனரென்று தெரிய வருகிறது. இவர்களது சமயப்பணியின் விளைவாகத் தமிழகத்தில் இசுலாமியம் பரவியது. தமிழ் மக்கள் இசுலாத்தில் இணைந்தனர். கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாலிக்காபூரும், குஸ்ருகானும் மதுரையின் மீது படையெடுத்த காரணத்தால் டெல்லி சுல்தானியரின் நேரடி ஆட்சியின் கீழ் மதுரை வந்தது. இசுலாமியக் கலப்பால் தமிழில் அரபு, பாரசீக, உருதுச் சொற்கள் கலந்தன.

தென்னகத்தில் ஏற்பட்ட இத்தகைய இசுலாமியப் பரவலைத் தடுக்கக் கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய விசயநகரப் பேரரசு, இந்து சமயந்தழைக்க சைவ, வைணவக் கோயில்கள் கட்டவும், மடங்கள் நிறுவவும் பொருளுதவி செய்தது. விசயநகரப் பேரரசர்கள் தெலுங்கு,

கன்னட மொழியினராதலால் தமிழகத்தில் தெலுங்கு, கன்னட சமஸ்கிருத மொழிகள் செல்வாக்குப் பெற்றன.

விசயநகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயரின் மறைவிற்குப் பின்னர் தமிழகத்தில் குழப்பங்கள் ஏற்பட்ட நிலையில் கிறித்தவப் பாதிரிமார் தமிழகத்திற்குள் நுழைந்து இந்துக் களைச் சமய மாற்றம் செய்வித்துத் தம் சமயத்தை வளர்க்கும் சீரிய பணியில் முனைப்புடன் ஈடுபடலாயினர். அவ்வமயம் தமிழகப் பாளையங்களை ஆண்டுவந்த தெலுங்கு அல்லது கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்ட பாளையக் காரர்களோ தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட மதுரை நாயக்கர்களோ தமிழகத்தில் கிறித்தவ சமயப் பரவலைத் தடுக்க முயலவில்லை. மதுரையை ஆண்டு வந்த திருமலை நாயக்க மன்னர் தம் ஆட்சிக்காலத்தில் இத்தாலிய ரோமன் கத்தோலிக்கப் பாதிரியார் ராபர்ட்-டி-நொபிலி மதுரை வந்து தமிழக இந்துக்களைக் கிறித்தவ சமய மாற்றம் செய்வித்த மையைத் தடை செய்யவில்லை.

தமிழரல்லாத வேற்று மன்னர்களின் ஆட்சியும் தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம், அரபு, பாரசீகம், உருது முதலான வேற்று மொழிகளும் இசுலாமியம், கிறித்தவம் என்ற வேற்றுச் சமயங்களும் தமிழகத்தைத் தம் ஆதிக்கத்திற்கு உள்ளாக்கி யிருந்த கால கட்டத்தில் தோன்றிய குமரகுருபரருக்குத் தமிழ் மொழியையும் இந்து சமயத்தையும் மீட்க வேண்டிய பெரும் பொறுப்பு இருந்தது. இவர் சைவ வேளாள மரபினராதலின் தம் பாரம்பரியச் சமயமாகிய சைவ சமயத்தைத் தழைக்கச் செய்யவும் தமிழ் மொழியைச் செழிக்கச் செய்யவும் பாடுபட நேர்ந்தது.

### குமரகுருபரரின் சமய, மொழிப்பற்று

கிறித்தவப் பாதிரிமார்களுக்கு இடந்தந்த திருமலை நாயக்க மன்னர் குமரகுருபரருக்கும் பேராதரவு தந்தார். ஆதலால் இவர் வேற்று சமயத்தவரை நேரடியாக எதிர்க்கவுமில்லை; தமது சமகாலப் புலவரான சிவப்பிரகாச சுவாமிகள் 'ஏசுமத நிராகரணம்' என்ற நூலை எழுதிக் கிறித்தவ சமயக் கருத்து களை மறுத்தது போல் மறுப்பு நூல்கள் எழுதவுமில்லை. மாறாகத் தமிழகத்திலும், வட இந்தியாவிலும் சைவ சமயத்தின் பெருமைகளை நிலைநாட்ட முயன்றார். முயற்சியின்

ஒரு படியாகக் காசித் திருத்தலத்தில் கோயில்களும், மடங்களும் அமைத்துத் தங்கியிருந்து சைவ சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியமை குறிப்பிடத் தக்கது. தமிழ்ப் புலவர்களுள் வடநாடு சென்று தங்கியிருந்து தமிழ்நூல்கள் பாடியவர் இவர் ஒருவரே என்பதும் கருதத் தக்கது. தம் நூல்களில் சைவ சமயத்தின் சிறப்புகளையும், சைவ சமயக் கடவுளரின் பெருமை களையும் உயர்த்திக் கூறியுள்ள இவர்,

'... ... ... ... கடைக் கூடாத்
தந்தம் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத்தவர்'

(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், பா. 56)

என்று வேற்றுச் சமயத்தாரை அவ்வப்போது தாக்கவும் தவறவில்லை.

வட இந்தியாவில் சமயப் பணிபுரிய வடமொழியறிவு இவருக்கு இன்றியமையாததாக இருந்தது. வடமொழி கற்கக் கலைமகளின் அருளை வேண்டி இவரால் பாடப்பட்டதே 'சகலகலா வல்லி மாலை' என்பர். தம் நூல்களில் பல இடங்களில் தமிழோடு வடமொழியையும் இயைத்து இவர் கூறியிருப்பதும் அறியத் தக்கது.

குமரகுருபரர் சமயப் பணிக்காக வடமொழியறிவு பெற்றாராயினும் தமிழ் மொழியின் மீது அளவிலாப் பற்றுக் கொண்டிருந்தார். தமிழுக்கு உயரிய அடைமொழிகள் கொடுத்தும் கடவுளரையும் திருத்தலங்களையும் தமிழோடு இயைபுபடுத்தியும் தம் நூல்களில் பலவிடங்களில் கூறியிருப்பது இவரது தமிழுணர்வைத் தெளிவாக்கும். தம் காலத்தில் ஆசுகவி முதலான நாற்கவிகளும், காப்பியங்களும் இலக்கண நூல்களும் தமிழ்ச்சங்கங்களும் இல்லையென்ற ஏக்கம் இவர் நூல்களில் ஆங்காங்கு வெளிப்படுகிறது. ஏனைய சங்கங்களை விட முதற் சங்கத்திற்கு முதன்மை தந்து இவர் பாடியிருப்பது நோக்கத்தக்கது. இச்சங்கங்களில் சிவபெருமான், முருகன், குபேரன் ஆகிய கடவுளரும் புலவராக அமர்ந்து தமிழ் ஆய்ந்ததாக இறையனார் களவியல் உரை கூறுகின்றமை இவரது விருப்பிற்குக் காரணமாக அமைந்திருக்கலாம். இவர்

களில் தமிழ்க் கடவுளாகத் தொன்று தொட்டுப் போற்றப்பட்டு வரும் முருகக் கடவுளைச் சிறப்பிக்கும் நோக்கில் இவரது முதல் நூலாகக் கந்தர் கலிவெண்பா முகிழ்த்திருக்க வேண்டும். ஐந்து வயது வரை ஊமைப் பிள்ளையாக இருந்து பின் முருகப் பெருமானின் பேரருளால் பேசும் திறத்துடன் பாடும் ஆற்றலும் பெற்றாரென்றும் இவர் கனவில் முருகன் தோன்றி இவரைக் 'குமரகுருபரர்' என்று அழைத்ததால் இப்பெயர் அமைந்ததென்றும் இவரைப் பற்றிக் கூறப்படும் செய்திகள் இவருக்கும் முருகக் கடவுளுக்கும் இடையிலான தொடர்பை வலுப்படுத்து கின்றன.

**கந்தர் கலிவெண்பாவின் பாடுபொருள்**

122 கண்ணிகளாக அமைந்த இந்நூலின் முதல் 36 கண்ணி களில் முருகப் பெருமானின் இயல்பும் அவன் ஆன்மாக்களுக்கு அருள் பாலிக்கும் திறமும் 37 முதல் 58 முடியவுள்ள கண்ணி களில் அவனது தோற்றப் பொலிவும் 59 முதல் 65 முடியவுள்ள கண்ணிகளில் அவனது திருவுருவச் சிறப்பும் 66 முதல் 74 முடியவுள்ள கண்ணிகளில் அவனது தசாங்கமும் 75 முதல் 86 முடியவுள்ள கண்ணிகளில் அவனுடைய திருவவதாரமும் 87 முதல் 104 முடியவுள்ள கண்ணிகளில் அவனுடைய திருவிளையாடல்களும் 105 முதல் 108 முடியவுள்ள கண்ணிகளில் அவன் தெய்வானையையும் வள்ளியையும் மணஞ்செய் தருளியதும் 109, 110 கண்ணிகளில் அவன் அடியார் மனத்திலும் செந்திப் பதியிலும் வீற்றிருக்கும் திறமும் 111 முதல் இறுதி வரை குமரகுருபரனின் வேண்டுகோளும் விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

இறைவனின் திருவடியை அடைதற்குதவும் சமய நூல்கள் தோத்திரமாகவோ, சாத்திரமாகவோ, புராணமாகவோ அமைவதுண்டு. கந்தர் கலிவெண்பாவில் இம்மூன்றன் இயல்பு களும் ஒருங்கே அமைந்துள்ளன. திருமுருகாற்றுப்படை, பரிபாடல், கந்தபுராணம் முதலானவை கூறும் புராணச் செய்திகளை உள்ளடக்கிய புராண நூலாகவும் தம் காலத்து சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துகளை விளக்கும் சாத்திர நூலாகவும் முருகனைப் போற்றித் துதித்து அருள் வேண்டும் தோத்திர நூலாகவும் இந்நூல் அமைந்துள்ளது.

சைவ சித்தாந்தக் கருத்துகள் இந்நூலில் நீக்கமற நிறைந்துள்ளன. முதல் 65 கண்ணிகளில் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் உண்மைகளை மிக விளக்கமாகக் கூறுகிறார் குமரகுருபரர். சிவபெருமானின் இயல்புகளாகக் கூறப்படும் அனைத்தும் முருகன் மீது ஏற்றிக் கூறப்பட்டுள்ளமையால் இருவரும் வேறல்லர், ஒருவரே என்று இவர் உணர்த்துவதையும் சைவ சித்தாந்தச் செந்நெறி தழைக்க வேண்டுமென்ற இவரது உட்கிடக்கையையும் அறிய முடிகிறது. இவருடைய பிற நூல் களிலும் சைவ சித்தாந்தக் கருத்துகள் பரவலாகக் காணப்படுவது இங்கு எண்ணத்தக்கது.

முத்திதரவல்ல முருகப் பெருமானை எழிலோவியமாக உள்ளக்கிழியில் தீட்டும் பொருட்டு, திருமுடி முதல் திருவடி வரையிலான அவன் வடிவைச் சொல்லோவியமாக்கும் குமரகுருபரர் அவனுடைய ஆறுமுகங்கள், பன்னிருகரங்களின் அருட்செயல்களை விவரித்து அவனே பேரறிவினன், பேராற்ற லுடையவன் என்பதை உணர்த்துகிறார்.

முருகப் பெருமானின் மலை, ஆறு, நாடு, நகர், குதிரை, யானை, மாலை, கொடி, முரசு, ஆணை ஆகிய பத்து உறுப்பு களையும் அடுத்துப் புகழ்கிறார். குமரகுருபரர் உமாபதி சிவத்தின் 'நெஞ்சு விடு தூது' நூலில் இடம் பெறும் தசாங்கத்தை நினைவுறுத்தும் இப்பகுதியில் ஓர் அரசனுக்குரிய உறுப்புகளை முருகனுக்குரியனவாகக் கூறி, அனைத்து உலகங் களையும் அதிலுள்ள உயிருடைய, உயிரற்ற பொருள்களையும் ஆள்பவன் அவனே என்று உணர்த்துகிறார். சைவ சமயம் ஆட்சி பீடம் ஏற வேண்டும் என்ற அவரது உட்கோள் இதில் விளக்கமுறுகிறது. மதுரை மீனாட்சியம்மை குறத்தில் மீனாட்சியம்மையின் தசாங்கத்தை இவர் போற்றுவதும் இங்குச் சிந்திக்கத் தக்கது.

முருகப் பெருமானின் திருவவதாரம், திருவிளையாடல்கள், அவன் தெய்வானை அம்மையையும், வள்ளியம்மையையும் மணம் புரிந்து கொண்ட செய்தி ஆகியவற்றை அடுத்துக் கூறுகிறார் குமரகுருபரர். நல்லவை செய்வோர்க்கு அருளலும் அல்லவை செய்வோரை அழித்தலுமாகிய அவன் செயல்கள் இங்கு வலியுறுத்தப்படுகின்றன.

இறுதியில் அவனுடைய ஆறு திருப்பதிகளையும் கண்டு அவனது ஆறெழுத்து மந்திரத்தை அன்புடன் ஓதுவார் சிந்தையில் குடியிருப்பவன் அவன் என்பதை உணர்த்தும் குமரகுருபரர் அவனிடம் வரம் வேண்டி நூலை முடிக்கிறார். பிணியும் பகையும் அச்சமும், அவலமும் ஏற்படும்போது எவ்விடத்தும் எக்காலத்தும் மயில் வாகனத்தில் ஈராறு கரங்களொடும் ஓராறு முகங்களொடும் ஓராறு முடிகளொடும் எழுந்தருளி, இம்மைப் பிறப்பில் இரு பற்றுகளை அறுத்து மும்மலங்களை அழித்துத் தம்மைப் பழைய அடியாருடன் கூட்டித் தமக்குத் திருவடி தீட்சை தந்து ஆட்கொள்ள வேண்டுமென்று வேண்டும் அவர்,

> 'ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
> பேசுமியல் பல்காப் பியத்தொகையும் – ஓசை
> எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
> பழுத்ததமிழ்ப் புலமை பாலித்து'
>
> (கந்தர் கலிவெண்பா – 118, 119)

அருளுமாறு வேண்டுவதையும், சகலகலாவல்லி மாலையில் கலை மகளிடத்தும் இவ்வாறே வரம் கேட்பதையும் நோக்குமிடத்து, தமிழ் வாழ வேண்டும், வளர வேண்டும் என்ற இவரது பெருவிருப்பம் புலனாகிறது.

குமரகுருபரரின் படைப்புகளில் பன்னிரண்டு நூல்கள் பாண்டியரின் ஆட்சியின்கீழ் தமிழ் வளர்த்த மதுரைத் தலத்தையும், சைவத் தலங்களில் முதன்மைத்தலமான சிதம்பரத் தையும் சைவக் கடவுளரான சிவபெருமான், சிவகாமியம்மை, மீனாட்சியம்மை, முருகன் ஆகிய கடவுளரைப் பற்றியனவாகவும் அமைந்திருப்பதை நோக்கும்போது தம் காலத்து மங்கிக் காணப்பட்ட தமிழ்மொழியும் சைவ சமயமும், மெருகிடப்பட வேண்டுமென்ற இவரது ஆவல் புலனாகிறது. பிற சமயங்களை அப்புறப்படுத்தினாலன்றிச் சைவ சமயம் தழைக்க இடமில்லை என்றுணர்ந்து அச்சமயங்களை அகற்றுவதற்கான முயற்சியாகத் தம் நூல்களைப் படைத்துள்ளமை தெளிவாகிறது. சைவ சமயத்தைப் பரப்புவதற்காக, சமணருக்கெதிராகத் திருஞான சம்பந்தர் போராடியமையை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இவர் வியந்து போற்றியிருப்பதும் இங்குச் சிந்திக்கத்தக்கது. மிகப் பெருங்கவிஞராக இருப்பினும், தம் காலத்திற்கியைய சமயத்தலங்களையும் சமயக் கடவுளரையும் பற்றிய சிற்றிலக்

கியங்களை மட்டுமே இவர் பாடியுள்ளமை இவரது நோக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது. இந் நோக்கத்தின் முதற்படியாக உருவெடுத்ததே கந்தர் கலிவெண்பாகும்.

தமிழகத்தில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சமண, பௌத்த சமயங்களை வேரறுத்து சைவ சமயத்தை வேரூன்றச் செய்யவும் தமிழை மேம்படச் செய்யவும் முனைப்புடன் செயல்பட்ட சம்பந்தரையும், அப்பரையும் போன்று கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் கிறித்தவ, இசுலாமிய சமயங்கள் வளர்ந்துவரும் நிலையில் சைவ சமயத்தையும், தமிழையும் காக்க விழைந்த குமரகுருபரரின் எண்ணத்தைத் தமிழரின் பாரம்பரியக் கடவுளான முருகனைப் போற்றி இவர் பாடிய கந்தர் கலிவெண்பாவின்வழி உணர முடிகிறது.

# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் படிமம்

செ. விசுவநாதன், கோவை

சிற்றிலக்கிய வகைகளில் பிள்ளைத்தமிழ் என்பது ஒன்று. குமரகுருபரர் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் அனைத்து நூல்களிலும் சிறப்பாக வைத்து எண்ணப்படுவது ஆகும். அந் நூலில் அவருடைய கற்பனைத் திறமும், சொல்வன்மையும், செறிந்த நடையும் யாவரும் மகிழ்ந்து இன்புறக் கூடியது.

சைவப் பின்னணியில் பிறந்து வளர்ந்து, தமது இறுதிக்காலம் வரை சைவத் தொண்டாற்றிய அப்பெரியோரின் மனமும், எண்ணமும் விசாலமானது. அவரது அறிவின் ஆழத்தை வரையறுப்பது கடினமானது. எனினும் அவர் எண்ணத்தில் உருவான சொல்லோவியங்களாகத் திகழ்ந்த படிமங்களை இனம் கண்டு அவற்றை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### படிமம் என்பதன் விளக்கம்

படிமம் என்ற சொல் பல துறைகளிலும் வழங்கப்படுகிறது. இச்சொல்லுக்குப் பல்வேறு விளக்கங்கள் காணப்படுகின்றன. "இமேகோ" என்ற இலத்தீன் சொல்லிலிருந்து தோன்றியது இமேஜ் என்ற சொல். இந்தச் சொல்லுக்குப் போன்மை, பதிலீடு, காட்சித் தன்மையுடையது என்ற பல பொருள்கள் உள்ளன. (Rev. Walter and W. Skeat (ed.) An Etmological Dictionary of English Language, London, Oxford, 1924, p. 207).

படிமம் பற்றிய சிந்தனை, மேலை நாட்டாரிடமிருந்து பரவியதாகும். சமயத்துறை முதல் விளம்பரத்துறை வரை இச் சொல்லுக்குக் காலந்தோறும் ஏற்பட்ட பொருட் செறிவையும் மாறுதலையும் பல ஆங்கில அகராதிகள் தெரிவிக்கின்றன. (David Guralink (e.d.) Webster's New World Dictionary, New Delhi, Oxford, IBH Publisbing Co. 1971, p. 372).

தற்போது கவிதைத் துறையில் இச்சொல்லின் ஆட்சி பரவலாக உள்ளது. இலக்கியத்தைத் திறனாய்வு செய்யும் கோட்பாடுகளில் ஒன்றாகப் படிமம் (Imagery) உள்ளது. எனினும், பண்டைக்காலத்தில் தமிழ்க் கவிதைகளை யாத்த தமிழ்ப் புலவர் களின் சிந்தனையும் உரையாசிரியர்களின் சிந்தனைகளும் இதனோடு ஒத்துப் போவதை மறுக்க இயலாது. தொல்காப் பியர், பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல் ஆகிய இயல்களில் படைப்பு நோக்கில் கவிதைக் கலை பற்றிய கருத்துக்களைக் கூறிச் செல்கிறார்.

கவிதைக் கலையில் படிமம் பெறும் இடம் குறித்து அறிந்து கொள்வது இன்றியமையாதது. கவிஞனின் நோக்கம் உவமை, உருவகத்தைப் படைப்பது அல்ல. தான் கண்டதைச் சொல்வ தற்கு உவமை உருவகத்தைக் கருவியாகப் பயன்படுத்துகிறான். உவமை பற்றிக் குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பம்சம் யாதெனில், இரு வேறுபட்ட பொருட்களுக்கிடையே தொடர்பையும் ஒப்புமையையும் கான்பது மட்டுமின்றி ஒரு பொருள் பற்றிய தமது உணர்வை அல்லது மனப்பதிவை மற்றைப் பொருளுக்கும் பொருத்திப் பார்க்கக் கூடியதாக இருத்தலாகும். அதுவே சிறப்பு. உவமைகள் கேவலம் வெறும் விளக்கப் பொருளாக மட்டுமின்றி, கவிஞன் கூற வந்த உணர்வுக்கு உறுதியளிப்பனவாகவும் இருப்பதைக் காணலாம். அதுவே உவமையின் உயிர் நிலையாகும்'' என்பர் (டாக்டர். கைலாசபதி, கவிஞர் இ. முருகையன், 'கவிதை நயம்').

இவ்வாறான சிந்தனைகளே பிற்காலத்தில் படிமக்கோட்பாடு களாக உருவாகியுள்ளன. இவ்வகையில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் அமைந்த உவமைகள், உருவகங்கள், அணிகள் போன்ற இலக்கணக் கூறுகள் காட்டும் படிமங்களை ஆராய்வது சிறப்புடையதாகின்றது.

## படிம வகைப்பாடு

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் அமைந்துள்ள படிமங் களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். மனப்படிமங்கள், அணிப்படிமங்கள், குறியீட்டுப் படிமங்கள். புலன் உணர்வுப் படிமங்கள் என்பவையே அவையாகும்.

**மனப்படிமம்**

உளவியல் நோக்கில் கவிதைப் படிமங்களை அணுகும்போது அவற்றைக் கற்பனையின் மூலக்கூறுகளாகக் கண்டு அவற்றுக்கு இலக்கியத்திலுள்ள இடத்தை ஆராய்வது இன்றியமையாத தாகும். உளவியல் அடிப்படையில் ஆராய்கின்ற போது படிமங்கள் பெரும்பாலும் புலனுணர்வுகளின் அடிப்படையிலேயே அமைகின்றன. காட்சி, ஓசை, முகர்வு, சுவை, தொடு உணர்வு போன்ற புலனுணர்வுகள் மனப் படிமங்களுக்கு ஆதாயமாக அமைகின்றன. இவ்வகையில் அமையும் படிமங்கள் சிலவற்றைக் காணலாம்.

குமரகுருபரர் காப்புப் பருவத்தில் கலைமகளை வேண்டு கிறார். அப்போது கலைமகள் வீற்றிருக்கும் இருக்கையைச் சொல்லோவியமாகத் தீட்டுகிறார்.

"விளைநறவு கக்கும் புலன்பொகுட் டலர்க்கமல வீடு" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. 9:3) என்ற வரி அவருடைய கற்பனைக்குச் சான்று பகர்வதாக அமைகின்றது. விளைந்த தேனைச் சொரியும் பொன்மயமான கொட்டையுடைய மலர்ந்த தாமரையாகிய வீடு என்பது அதன் பொருளாகும். தாமரை மலரின் பொகுட்டும், அது அமைந்துள்ள வட்ட வடிவமும்; கிண்ணம் போன்ற அமைப்பும் அவருக்கு வீடாகக் காட்சி தருகின்றன. இது காட்சிப் படிமம். அதே சமயம் அப்பொகுட்டின் நிறமும் மனதைக் கவர்கின்றது. அதன் வண்ணத்தைப் பொன் நிறம் என்று ஒப்புமைப்படுத்தி நிறத் தையும், தோற்றத்தையும் படிமமாக்கிக் காட்டுகிறார். இவ்வாறு, மனப்படிமத்தை நிறப்படிமம் என்றும் தோற்றப்படிமம் என்றும் வகைப்படுத்தலாம்.

வண்டுகள் மலரைச் சுற்றி வருவது சாதாரணமாக அனை வரும் காணக் கூடிய காட்சியாகும். ஆனால் குமரகுருபரரின் பார்வையில் அக்காட்சி புது விளக்கம் பெறுகிறது.

"வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்பும் சுரும்பர் பாட"
(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. 9:1,2)

என்று கூறும்போது, வெள்ளி நிறமுள்ள தகட்டு வடிவுற்ற நீண்ட இதழ்களை விரியச் செய்து வண்டுகள் இன்னிசை பாடிக்

கொண்டிருக்கின்றன என்கிறார். வண்டுகள் ஏடுகளை அவிழ்க்கின்றன; அவை வெள்ளித் தகடுகளாக மின்னுகின்றன; என்பன போன்ற நயமான கற்பனைகள் படிமங்களாக கற்போர் மனதில் பதியக்கூடிய சித்திரங்கள் ஆகும்.

செங்கீரைப் பருவத்தில் மீனாட்சியம்மையின் அழகை வருணிக்கும் இடங்களில் ஒவ்வொரு சொல்லும் ஒரு படிமமாகக் காட்சி தருகின்றது.

"முகமதி யூடெழு நகைநில வாட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட
இகல்விழி மகரமும் அம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட"
(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. 11:1-6)

இப்பாடலில், முகமாகிய சந்திரனிடத்துத் தோன்றுகின்ற பற்கள் ஒளி வீசவும், முடியில் அணிந்த உச்சிக்கொண்டை ஆடவும், வளைந்த புருவமாகிய கொடியும், நெற்றியில் அணியப்பட்ட சுட்டி என்ற நகையும் சேர்ந்து ஆடவும், போர் செய்கின்ற கண்களாகிய மகரமீன்களும், அம் மகர மீன்கள் பொருகின்ற இரு மகரவடிவில் செய்யப்பட்ட காதணிகளும் ஆடவும், செங்கீரை ஆட வேண்டும் என்கிறார் குமரகுருபரர்.

சந்திரனை முகமாகவும், அதன் ஒளியைப் பற்களின் ஒளியாகவும், வளைந்த புருவத்தைக் கொடியாகவும், கண்களை மகர மீன்களாகவும் ஒப்பிட்டுக் காட்டுவது நயமுடையதாக இருக்கின்றன. இவ்வொப்பீடுகள் படிமங்களாகக் காட்சி தருகின்றன. மீனாட்சியின் அழகை நேரில் காண்பதைப் போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. இத்தகைய சொல்லோவியங்கள் அழகியல் உணர்வுகளை ஏற்படுத்துவது மட்டுமின்றி அன்பு, பக்தி என்ற வாழ்வியல் நெறிகளுக்கு ஆதாரமாகவும் அமைந்து விடுகின்றன. இதுதான் குமரகுருபரரின் நோக்கமுமாகும்.

**அணிப்படிமங்கள்**

"அணியியல் தத்துவம்' என்ற நூலில் ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் இரண்டு தலைப்புகளில் படிமம் பற்றிய கருத்துக்களைத் தெரிவிக்கிறார், உருவகம் என்பது உவமானம், உவமேயம் என்னும்

இரண்டு கூறுகளையுடையதாக உள்ளது. அந்த இரண்டு கூறு களைப் புரிந்து கொள்வதில் தான் குழப்பம் நிலவுகிறது என்று கூறுகிறார்.'' (இலக்கியத்தில் படிமம் – வெ. இராம. சத்திய மூர்த்தி – ப. 37).

இவ்வாறாகவே உவமைகளிலும் உவமான உவமேயங்கள் எந்த அளவிற்குப் பொருத்தமுடையதாக அமைகிறதோ அந்த அளவிற்குப் படிமங்கள் சிறப்புடையதாக அமையும். எனவே அணியியல் நோக்கில் படிமங்களை ஆராய்வதற்கு உருவகம், மற்றும் உவமை மிகவும் இன்றியமையாததாக அமைகின்றன. இவ்வகையில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் அமைந்துள்ள படிமங்கள் எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

குமரகுருபரருக்குத் தமிழின் மீதுள்ள பக்தி சிறப்புடைய தாகும். அவர் மீனாட்சியை வருணிக்கும்போது தமிழ் மொழியின் இசை, இனிமை, பழமை போன்ற சிறப்புக்களோடு ஒப்பிட்டுக் காண்பதில் ஆர்வமுடையவராக இருப்பதைக் காணமுடிகின்றது. அவருடைய உவமைகளும் உருவகமும் புதிய கருத்துக்களை வெளிப்படுத்த உதவுகின்றன. பிற்காலத்தில் பாரதி, பாரதிதாசன் போன்றோர் தமிழைச் சிறப்பித்துப் பாடுவதற்கு இது முன்னோடியாக அமைந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

முத்தப் பருவம், வருகைப் பருவம் ஆகிய பருவங்களில் பல இடங்களில் தமிழின் சிறப்பு விளக்கப்படுகின்றது. முத்தப் பருவத்தில் மீனாட்சியை வருணிக்கும்போது,

காலத்தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே......''

(மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. 1:1-4)

என்று பாடுகிறார். காலத்தையும், கற்பனையையும் கடந்து நிற்கும் பொற்பேழையில் பழைய பாடல்களின் பொருள்களை யெல்லாம் சேர்த்த பெருஞ் செல்வர்கள் தேடி வைத்திருக்கின்ற தெய்வ மணி என்பது இதன் பொருளாகும்.

கருவூலத்தில் செல்வத்தைச் சேர்த்து வைப்பது அரச குலத்தினருக்கு உரிய கடமையாகும். இத்தகைய ஒரு வழக் கத்தைக் குமரகுருபரர் கற்பனை நயத்தோடு எடுத்தியம்புகிறார்.

காலத்தையும், கற்பனையையும் கடந்து நிற்கிறது ஒரு கருவூலம். அதனில் சேர்த்து வைத்திருப்பது அழியக்கூடிய நிலை யற்ற செல்வம் அல்ல. காலத்தால் அழிக்க முடியாத தமிழ்ப் பாடல்களின் கருத்துச் செல்வம். அந்தச் செல்வத்தைத் தந்த வர்கள் அறிஞர் பெருமக்களாவர். அவர்கள் தேடி வைத்த செல்வமாக, தெய்வத் தன்மை பொருந்தியதாக, மணியைப் போல ஒளி வீசுகின்றதாக உள்ள செல்வம் தான் மீனாட்சி என்று கூறுவது.

அறிஞர்களின் கருத்துக்கள் எவ்வாறு அழிவற்ற தன்மை யுடையதோ அதைப்போல மீனாட்சியும் அழிவற்ற தன்மை யுடையவள் என்று ஒப்புமைப் படுத்துவது சிறப்புடையதாக இருக்கின்றது. இறைவனின் இயல்புகளில் ஒன்றான அழிவற்ற தன்மையைத் தமிழ்ப் பாடல்களுக்குப் பொருந்துமாறு அமைத் திருப்பது புதுமையாகும். மேலும் இது தமிழும், பக்தியும் அவரது உள்ளத்தில் அழியாத இடம் பெற்றிருப்பதை எடுத்துக் காட்டு கின்றது.

கருத்துத் தன்மையை விளக்குவதற்குக் காட்சித் தன்மை யுடைய படிமங்கள் உதவுகின்றன. இயல்பாக வரும் கவியாற்றலில் அவை சிறப்புப் பெறுகின்றன. சான்றாக,

> "... ... ... ... ... ... உயிரால
> வாலத் துணர்வு நீர்ப்பாய்ச்சி
> வளர்ப்பார்க் கொளிபூத் தருள் பழுத்த
> மலர்க்கற் பகமே..." (மீ. பி. தமிழ், பா. 1)

என்று முத்தப்பருவத்தில் மீனாட்சியை வருணிக்கிறார். உயிராகிய பாத்தியில் அறிவு ஆகிய நீரைப் பாய விட்டு வளர்க்கின்றவர்க் கட்கு ஒளியாகிய மலரைத் தோற்றுவித்து அருளாகிய பழம் பழுக்கின்ற மலர்களுடைய கற்பகமே என்பது மேற்கண்ட அடிகளுக்குரிய கருத்தாகும்.

இப்பாடலில் மீனாட்சியைக் 'கற்பகமே' என்று உருவகப் படுத்துகிறார். கற்பகம் என்பது தேவலோகத்திலுள்ள ஒரு மரமாகும். அதனுடைய இயல்பு கேட்பவருக்குக் கேட்பதைக் கொடுப்பதாகும். அதே போன்று மீனாட்சியும், தன்னை நாடி வரும் பக்தர்களுக்கு அருள் பாலிக்கின்ற தன்மையுடையவள் என்பதை உணர்த்துவதற்காகக் 'கற்பகம்' என்ற படிமத்தைத் தோற்றுவிக்கின்றார். அது அவருடைய பக்தியைப் புலப்படுத்துவ தாக அமைகின்றது.

அடுத்து, உயிராகிய பாத்தி, அறிவாகிய நீர், ஒளியாகிய மலர், அருளாகிய பழம் என்று உருவகங்கள் காட்சிப்படுத்தப் படுகின்றன. உயிர், அறிவு, ஒளி, அருள் என்ற (நுண்பொருள்) பொருள்களுக்குப் பாத்தி, நீர், மலர், பழம் என்ற (பருப்பொருள்) பொருள்கள் ஒப்புமைப் படுத்தப்படுகின்றன. இவ்வொப்புமை உயிரின் பரிணாம வளர்ச்சியைக் காட்டுவது போல் அமைகின்றது. அத்துடன் இவ்வுலகியல் வாழ்விலிருந்து பேரின்ப வாழ்விற்குச் செல்லும் மார்க்கத்தை உணர்த்துவதாகவும் அமைகின்றது. இவ்வொப்பீடுகள் படிமங்க்ளாகக் குமரகுருபரரின் கருத்துக்களை வெளிப்படுத்தி விடுகின்றன.

**புலன் உணர்வுப் படிமங்கள்**

ஐம்புலன்களின் உணர்வுகளையும் சொற்சித்திரங்களாக உருவாக்கி கற்போர் மனதில் அதே உணர்வுகளைத் தோற்று விப்பது புலன் உணர்வுப் படிமங்கள் ஆகும். வெறும் காட்சித் தன்மைகள் மட்டுமே படிமமாக முடியாது. படிமம் உணர்வுகளின் அடிப்படையில் அமைய வேண்டும் என்கின்றனர் மேலை நாட்டு அறிஞர்கள். ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் என்பவர், "தெளிவான காட்சி தருவதால் படிமம் ஆற்றலுடையது என்று கூறமுடியாது. காட்சியை விட உணர்வோடு இணைக்கப்பெற்ற ஒரு நிகழ்வாக அமையும் தன்மையிலேதான் அதன் ஆற்றல் அமைகின்றது. உணர்வின் வெளிப்பாடாக அமைவதில் தான் அதன் பயன் அடங்கியிருக்கிறது" என்று கூறுகிறார்.

(Richards I.A., Principles of Literary Criticism, London, Routledge & Kegan Paul Ltd., 1961. P. 119).

அம்புலிப்பருவத்தில் இத்தகைய புலன் உணர்வுப் படிமங்கள் விரவிக் கிடக்கின்றன. சான்றாக,

"குலத்தோடு தெய்வக் குழாம்பிழ்ந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென்றும் அழல்விடங் கொப்பளிக் கின்ற இரு
கோளினுச் சிட்டமென்றும்"

(மீனா. பிள். தமிழ், பா. 64: 1-3)

என்ற அடிகளில்,

தேவர் கூட்டம் இனத்துடன் பிழிந்து வார்த்துப் பருகிச் சுவைபார்த்து உமிழ்ந்த சக்கை நீ என்றும், நெருப்புப் போன்ற விஷத்தைக் கொப்புளிக்கின்ற இராகு என்னும் பாம்பின் எச்சில் என்றும் நிலவை இழிவுபடுத்துகின்ற வகையில் கூறப்பட்டுள்ளன.

கரும்பு, பழம் போன்ற பொருள்களைப் பிழிந்து சாற்றை அருந்திவிட்டுச் சக்கையைத் தூக்கி எறிந்து விடுதல் வழக்கமாகும், ஏனெனில் அச்சக்கை எதற்கும் பயன்படாது என்பதே ஆகும். அதே போன்று வாயிலிருந்து உமிழ்கின்ற எச்சிலும் அருவருக்கத் தக்கதாகும். இந்தச் சக்கையும், எச்சிலும் இழிவுப் பொருள் களாக நிலவுக்கு ஒப்புமைப் படுத்தப்படுகின்றன.

சந்திரனிடமிருந்து தேவர்கள் அமுதத்தை உண்பதால் அது தன் அழகை இழந்து விடுகின்றது. இதை மனதில்கொண்டுதான், தேவர் கூட்டம் பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து உண் கின்றனர் என்கிறார் குமரகுருபரர். அவ்வாறு உண்ட பின் இருப்பது வெறும் சக்கை என்றாகி விடுகின்றது. மீனாட்சியோடு அம்புலி ஆட வராததால் சந்திரனை இவ்வாறு சக்கை என்று கூறுவது நயமுடையதாக இருக்கின்றது.

இதே போன்று இராகு என்னும் கொடிய விஷமுள்ள பாம்பு கிரகண நாளன்று சந்திரனை விழுங்கிப் பின்பு உமிழ்ந்து விடும் என்பது புராணங்களில் காணப்படும் செய்தியாகும். குமரகுருபரர் இதை மனதில் கொண்டுதான் அப்பாம்பின் 'எச்சில்' என்று சந்திரனை இழிவுபடுத்துகின்ற வகையில் வருணிக்கின்றார். இவ்வாறு பயனற்றதும், அருவருக்கத் தக்கதுமான பொருள்கள் புலன் உணர்வுப் படிமங்களாக அமைந்து விடுகின்றன.

**குறியீட்டுப் படிமங்கள்**

ஒரு படிமக்காட்சி வழி குறியீட்டை உணர்த்துகின்ற முறையில் படிமம், பொதுவாகப் படிமமாகக் கொள்பவர்க்குப் படிமமாகவும், ஆழ்ந்து கவனிப்பார்க்குக் குறியீடாகவும் தோற்ற மளிக்கும். கவிதைத் தலைப்பிலோ அல்லது பிற வகையிலோ அது குறியீடு என்பதற்கான குறிப்பிருக்கும். இவ்வாறு இருந்தால் தான் குறியீட்டுப் படிமங்கள் சிறப்பாக அமைய முடியும்.

"படிமங்கள் வெறும் வருணனையாக இருக்கும் போதும் நேர் பொருளே போதும் என்கிறபோதும் அவை வெறும் படிமங்களே; குறியீடுகள் அல்ல; மற்றோர் உட்பொருளை உணர்த்தும் நிலையில் தான் படிமம் குறியீடாகின்றது" (கவிதைப் படிமம் டாக்டர். மு. சுந்திரமுத்து, ப. 52) என்று குறியீட்டுப் படிமத்திற்கு விளக்கம் கூறப்படுகின்றது.

முத்தப் பருவத்தில் சிவபெருமானைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'முக்கண் சுடர்' என்று கூறப்படுகின்றது. 'முக்கண்ணன்'

என்பது சிவபெருமானுக்கே உரியதாகக் குறியீடாக அமைந்து இருப்பது பொருத்த முடையதாகும்.

“முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தம் தருகவே”,

என்ற அடிகளில் மூன்று கண்களுடைய சுடர் என்று சிவபெருமானைச் சுடராக உருவகப் படுத்துகின்றார் குமரகுருபரர். (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – பா. 83). இவ்வடிகளில் உள்ள ‘முக்கட் சுடர்’ என்ற சொல்லுக்கு, நெற்றிக்கண்ணோடு சேர்த்து மூன்று கண்களை உடைய சுடர் என்று நேர் பொருள் கொள்ளலாம். ஆனால் மூன்று கண்கள் என்பது திங்கள், சந்திரன், நெருப்பு ஆகிய மூன்று சுடர்களைக் குறிக்கும் குறியீடாக வருகின்றன. எனவேதான் சிவபெருமானைச் சுடர் என்று குறிப்பால் உணர்த்தி விடுகின்றார்.

இம்மூன்று சுடர்களும் ஒரே தன்மையில் இல்லாது இரண்டு சுடர்கள் வெம்மை யுடையதாயும் ஒன்று மட்டும் குளிர்ச்சி யுடையதாகவும் அமைந்திருக்கின்றன. இவை இறைவனின் இயல்புகளைக் குறிக்கும் வகையில் அமைந்திருக்கின்றன. இவ்வகையில் இவை குறியீட்டுத் தன்மையோடு கூடிய படிமங்களாகவும் அமைந்து விடுகின்றன.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் உள்ள படிமங்கள் சிலவற்றை மட்டும் ஆய்வு செய்தபோது கீழ்கண்ட முடிவுகள் பெறப்படுகின்றன.

உளவியல் அடிப்படையில் காட்டப்பெற்ற மனப்படிமங்கள், குமரகுருபரரின் சமயம், மற்றும் தமிழ் மொழியின் மீது உள்ள பற்றை வெளிப்படுத்துவதாக அமைகின்றன.

அணி அடிப்படையில் அமையும் படிமங்கள், உருவகங்கள், உவமைகள் வாயிலாக அவருடைய கற்பனையையும், கவி புனையும் ஆற்றலையும் வெளிப்படுத்துகின்ற வகையில் அமைகின்றன என்பது பெறப்படுகின்றன.

புலன் உணர்வுகளின் அடிப்படையில் அமையும் படிமங்கள் உணர்வுகளின் வெளிப்பாடுகளைத் தெரிவிக்கும் சொற்சித் திரங்களாக அமைந்துள்ளன என்பது வெளிப்படுத்தப்படுகின்றன.

குறியீட்டுப் படிமங்கள் நேர்பொருளைத் தராமல் குறிப்பாக ஒன்றைச் சுட்டுகின்ற வகையில் அமைந்திருக்கின்றன என்பது பெறப்படுகின்றது.

# பிள்ளைத்தமிழில் பெண்கள்

இரா. விமலா, புதுவை

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் தமிழ்மொழியின் சிறப்புக் களையும் பெருமைகளையும் இறையுணர்வின் மாட்சிகளையும் சிறப்பாக எடுத்துரைப்பதுடன் குழந்தைச் செல்வத்தின் மாண்புகளையும் தனித்தன்மைகளையும் யதார்த்த நிலையில் எடுத்து விளக்குகின்றன.

பிள்ளைத்தமிழ் உலகை வாழ்விக்க வந்த கடவுளர்களையும் பெரியோர்களையும் உலகின் ஒப்பற்ற செல்வங்களாகத் திகழும் குழந்தைகளாகக் கருதி அவர்களின் செயற்கரிய செயல்களையும் சிறப்புக்களையும் போற்றிப் பாராட்டும் ஒப்பற்ற இலக்கிய வகையாகத் திகழ்கின்றது. ஏராளமான பிள்ளைத்தமிழ் நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கதும் சிறப்பா னதுமான ஸ்ரீ குமரகுருபரர் சுவாமிகள் இயற்றியுள்ள மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இடம்பெற்றுள்ள பெண்கள் பற்றிய கருத்துக்களை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

**பிள்ளைத்தமிழ் – பொது இலக்கணம்**

''ஒப்பற்ற இறைவனையோ, இறைவியையோ, இறையடியவர் களையோ மக்களுள் மாண்புற்ற மன்னர்களையோ, வள்ளல் களையோ, தம்மாசிரியர்களையோ குழந்தைப் பருவத்தினராக எண்ணி குழந்தைக்குரிய பத்துப் பருவங்கள் அமைத்து, அப்பத்துப் பருவங்களில் அவர்களின் செயற்கரிய செயல்களையெல்லாம் எடுத்தியம்பும் முகமாகப் பாடப்பெறும் இலக்கிய வகையே பிள்ளைத்தமிழ் ஆகும்'' (கு முத்துராசன், 1992)

**பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய இடமும், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும்**

முந்நூற்றுக்கும் மேற்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள்இயற்றப் பட்டுள்ளன என்ற செய்தி சிற்றிலக்கியம் பற்றியத் திறனாய்வு நூல்களில் காணப்படினும் 'சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்

தமிழ்' என்னும் நூலின் முன்னுரையில் எண்பது பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களின் பெயர்களும் தொண்ணூற்று ஐந்து ஆண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களின் அட்டவணையும் குறிப்பிடப்பட்டுள்ளன. அந்நூல் வெளியான பிறகு சில நூல்கள் இயற்றப்பட்டிருக்கலாம்.

ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கு இணையாகப் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களும் இயற்றப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. அதேநிலையில் சிற்றிலக்கிய நூல்கள் இயற்றுவதிலும், அக்காலத்திலும் பெண்பாற்புலவர்கள் இடம்பெறாமையும் அதன் கால, சமுதாய, பண்பாட்டுச் சூழலோடு ஒப்புநோக்கத் தக்கது.

குமரகுருபர சுவாமிகள், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் என்றும் ஆண்பாற்பிள்ளைத்தமிழில் ஒன்றையும், மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் என்னும் பெண்பாற் பிள்ளைத் தமிழ் ஒன்றையும் என இருபாற்பிள்ளைத்தமிழிலும் இயற்றி யுள்ளமை சுவாமிகளின் சோதனை முயற்சியும் சமத்துவ மனப்பாங்கையும் தெள்ளத்தெளிவாகப் புலப்படுத்துகிறது.

**பருவங்களின் வகைப்பாடும் பெண்நிலையும்**

பிள்ளைத்தமிழின் பொருளமைப்பாக விளங்குவன முறையாக அமைக்கப்பட்டுள்ள பருவங்களே ஆகும். இலக்கண விதி முறைகளின்படி அமையும் பத்துப் பருவங்களில் காப்புப்பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம், சப்பாணி பருவம், முத்தப் பருவம், வருகைப்பருவம், அம்புலிப்பருவம் முதலிய ஏழு பருவங்கள் இருபாற்பிள்ளைத்தமிழுக்கும் பொதுவானவை யாகவும் இறுதி மூன்று பருவங்கள் வெவ்வேறானவையாகவும் அமைக்கப்பட்டுள்ளன. ஆண்பாற் பிள்ளைத்தமிழின் இறுதியில் சிற்றிற்பருவம், சிறுபறைப்பருவம், சிறுதேர்ப்பருவம் ஆகிய பருவங்களும், பெண்பாற்பிள்ளைத்தமிழில் அம்மானைப்பருவம் நீராடற்பருவம், ஊசற்பருவம் ஆகிய பருவங்களும் ஒதுக்கப் பட்டுள்ளன.

பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய இறுதி மூன்று பருவங்களை நோக்கும்போது பெண்களுக்கான சமூக வரையறை, சமூக எல்லை, வாழ்வியல் நெறிகள் யதார்த்த நிலையில் உணர்த்தப் பட்டுள்ளமை புரிகின்றது.

**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் பெண்கள்**

குமரகுருபரர் இந்நூலை மீனாட்சியம்மையைப் பாட்டுடைத் தலைவியாக்கி, அவர் பெயரில் படைத்தபோதிலும் திருமகள், கலைமகள், தெய்வானை முதலிய பெண் தெய்வங்களையும், நடைமுறை வாழ்க்கையை மையமாகக் கொண்ட உழவுமகளிர், இல்லமகளிர், பரத்தையர் போன்ற பெண்களையும் பாடல்களின் இடை இடையே சொல்லிச் செல்கின்றார். சிற்சில புராணங் களும் இலக்கியங்களும் திருமகள், கலைமகள், மலைமகள் என்ற மூன்று பெண் தெய்வங்களும் பொறாமை, ஆசை, வீரம், தன்முனைப்பு, வலிமை, பெண்மை முதலியவை காரணமாகச் சண்டையிட்டுக் கொள்ளும் பாங்கையே வெளிப்படுத்தும் வழக்கம் உடையன.

ஆனால் குமரகுருபரர் மூன்று பெண் தெய்வங்களின் ஒற்றுமையையும் சிறப்பினையும், அன்பையும் தனித்தன்மை களையும் விளக்கிச் சென்றுள்ளமை சிறப்பிற்குரியது. மீனாட்சி யம்மையை இவ்வுலக அன்னையின் குழந்தை, சிறுமை, மலயத்துவச பாண்டியனின் மகள், சிவபெருமானின் மனைவி, மதுரையின் தலைவி, தாய் என்று பல்வேறு பரிமாணங்களில் இவ்வுலகத்தைக் காக்கும் அன்னையாகவும் படைத்துள்ளார்.

**மீனாட்சியம்மையும் வீரமும்**

பாட்டுடைத்தலைவியாகிய மீனாட்சியம்மையின் மாண்புகள், அம்மையிடம் சிவனடியார்கள் பக்தி கொள்ளும்முறை, இறையுணர்வுக்காட்சிகள், குழந்தையின் மனநிலை, உணர்வுகள், அன்னையின் வீரம், புகழ், தெய்வ அருள், சிவனடியார்களையும் மக்களையும் காக்கும் கடமை முதலியவையும் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளன. குறிப்பாக மீனாட்சியம்மை வீரம் செறிந்த சேனைத் தலைவியாகப் படைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடப் பட்டுள்ளது.

> "சேனைத் தலைவர்க டிசையிற் றலைவர்கள்
> செருவிற் றலைவர்களாய்ச்
> சிலையிற் றிடமுடி தேரிற் கொடியொடு
> சிந்தச் சிந்தியிடும்" (பாடல் எண். 30)

இப்பாடல் முழுவதும் அன்னையின் வீரமே சிறப்பித்துக் கூறப் பட்டுள்ளது. போரில் அன்னையும் அவரது வீரர்களும் போரிடும்

காட்சி புகழ்ந்துரைக்கப்பட்டுள்ளது. விண்ணில் இடியுடன் விண் மீன் கூட்டங்கள் அழியும்படிப் போரிட்ட தேவியே! எண்திசைத் தலைவர்கள் பெரிதும் நாணம் அடையவும் சிறிய நாணின் ஒலி செய்து, வளைந்த வில்லில் நீண்ட அம்புகளைச் செலுத்தியவளே! சப்பாணி கொட்டி அருள்க!

வெண்கொற்றக் குடைநிழலில் நிலமடந்தையாகிய மகளை வளர்த்தவளே! சப்பாணி கொட்டுக! என்று பாடி மீனாட்சியைப் போரின் தலைவியாக, சேனைத் தலைவர்கள் நாணும்படி ஒரு பெண்ணைச் சிறந்த போர் வீராங்கனையாகப் படைத்துள்ளமை சிந்திக்கத்தக்கது. பத்திற்கும் மேற்பட்ட பாடல்களில் மீனாட்சி யம்மையின் போர்வீரம் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. சில புராணக் கதைகள் மூலமாகவும் அன்னையின் வீரமும், புகழும் போற்றப்பட்டுள்ளன.

**தமிழ்ச்சிறப்பு**

தமிழின் தனிப்பெரும் சிறப்புக்களை இந்நூல் எடுத்துரைக் கின்றது. பாலும் வெண்மை நிறமும் இரண்டறக் கலந்து இருப்பதுபோல் மீனாட்சியம்மையும் தமிழும் இணைத்துப் போற்றப் பெறுகின்றனர்.

> "தெளிதமிழ் மதுரையில் வளரும்ஓர் இளமயில்"
>
> "அன்னம் பொலியும் தமிழ்மதுரைக்கு
> அரசே தாலே தாலேலோ"
>
> "தென்னவன் தமிழினுடன் பிறந்த
> சிறுகால் அரும்பத் தீயரும்பும்"
>
> "தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
> சப்பாணி கொட்டியருளே"

போன்ற பாடல் அடிகளின் மூலம் தமிழும் மீனாட்சியம்மையும் ஒன்றுபோல் திகழ்வதை உணரலாம்.

தமிழ் வளர்த்த மதுரையில் வீற்றிருக்கும் மீனாட்சியம்மையின் புகழ் தமிழால் சிறப்புப்பெற்றுள்ளது. காப்புப்பருவம் முதல் ஊசற் பருவம் வரை பெரும்பாலான பாடல்களில் தமிழ் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன. தமிழ் நலத்தை, வளத்தை, சிறப்பைத் தனியாகக் கூறாமல் மீனாட்சியம்மையின் பண்பு நலன்களோடும் சிறப்புக்களோடும் உவமித்துக் கூறியுள்ளமை பெண்மைக்கு மேலும் சிறப்புசெய்வதாகும்.

## மதுரைத் தலைவி

இந்நூலின் தலைப்பிற்கேற்பப் பாட்டுடைத் தலைவி மீனாட்சியம்மையை மதுரைக்குத் தலைவியாக மகுடம் சூட்டி மேலும் பெண்ணுக்குச் சிறப்புச் செய்துள்ளார். சில பாடல்களில் பாண்டிய மன்னனின் மகளாகவும், சிவபெருமானின் துணைவி யாகவும் குறிப்பிட்டாலும் பல பாடல்களில் சக்தி நிறைந்த பெண் தெய்வமாக, மதுரையை ஆட்சி புரியும் அரசியாக, தலைவி யாக, இவ்வுலகைக் காக்கும் அன்னையாக படைத்துள்ளார்.

"அவனி தழைத்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை"
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைக்கும் பரமஆ னந்தத்தின்
விளைவே வருக"

போன்ற பாடல் அடிகளின்வழி மீனாட்சியம்மையை மதுரைக்குத் தலைவியாகவும், மும்மூர்த்திகளுக்கும் வித்தாகச் சிறப்பித் துள்ளமையும் புலப்படுகின்றது.

"தோன்றாத் துணைக்குஓர் துணையாகி
துவாதசாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே முத்தம் தருகவே"

சிவபெருமானுக்குத் துணைவியாகி, பிரம்மனுக்கும் மேலே "துவாதசாந்தப் பெருவெளி" என்னும் இடத்தில், பரமாத் மாவையும் கடந்த மேன்மையான ஒலிவடிவத்தின் மூல இடத்தில் தோன்றிய முழுமுதல் தெய்வம் என்று போற்றியுள்ளார்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையில் சிறப்பான இடத்தைப் பெறுவது குமரகுருபரர் இயற்றியுள்ள மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழாகும்.

குமரகுருபர சுவாமிகள் கையாண்டுள்ள பாடுபொருள் பகுப்புச் சிறப்புக்குரியதாய் அமைந்துள்ளது. மதுரை மீனாட்சி யம்மை பாட்டுடைத் தலைவியாக இருப்பினும், தெய்வப் பெண்களை மட்டுமே போற்றிப் பாடாமல், நடைமுறை வாழ்க்கையில் ஈடுபடும் பெண்களையும், அவர்களில் இல்ல மகளிர், பரத்தையர் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

## 1980

சிவபெருமான், திருமால், பிரம்மன் முதலிய தெய்வங்கள் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றிருந்தாலும் பெரும்பான்மை பெண் தெய்வங்களுக்கே சிறப்பிடம் தந்துள்ளமை குறிப்பிடத் தகுந்தது.

சிவபெருமானுக்குத் துணைவியாக மட்டுமே சித்திரித்து விடாமல் போர்க்களத்தில் வீரமுள்ள சேனைத் தலைவியாக, மதுரைக்குத் தலைவியாக, குழந்தையாகவும் மக்களைக் காக்கும் அன்னையாகவும் படைத்துள்ளார்.

பெண்களுக்கேயுரிய அம்மானை, நீராடற், ஊசல் போன்ற விளையாட்டுக்களில் பெண்மையின் தனிப் பண்புகளும், வாழ்வியற் கூறுகளும், சமூக நிலைப்பாடும் உணர்த்தப் படுகின்றது.

# சகலகலாவல்லிமாலை நோக்கம்

சி. விமலா, காரைக்குடி

குமரகுருபரர் இயற்றிய பிரபந்தங்களில் பதின்மூன்று பிரபந்தங்கள் இப்போது கிடைக்கின்றன. அவற்றில் அடிகளார் திருச்செந்தூர் முருகப் பெருமான் மீது முதன் முதலில் 'கந்தர் கலிவெண்பா' என்ற பிரபந்தத்தைப் பாடினார். இதற்குப்பின் தான் பிறந்த ஊரில் வீற்றிருக்கும் கைலாசநாதர் மீது 'கைலைக் கலம்பகம்' பாடியுள்ளார், பல தனிப் பாடல்களும் இயற்றியிருக்கின்றார். அடிகளார் அருளிய, பிரபந்தங்களில் கலைமகளைப் பாடிய நூல் 'சகலகலாவல்லிமாலை' இவர் இந்நூல் பாடியதன் நோக்கம் என்ன என்பதை இக்கட்டுரை ஆராய்கிறது.

**மாலையா? பதிகமா?**

'மாலை' என்பது வெண்பா, கட்டளைக் கலித்துறை யென்னும் இருவகைப் பாட்டுக்களால் தொடுக்கப்படுவது. இதில் ஒவ்வொரு வகையிலும் பத்துப் பத்துப் பாட்டுக்கள் பாடப்படும். இவர் மீனாட்சியம்மை மீதும் சிவகாமியம்மைமீதும் இரட்டை மணிமாலை பாடியுள்ளார். 'சகலகலாவல்லிமாலை' கட்டளைக் கலித்துறையாகப் பாடப்பட்டது. இதன்கண் பத்துப் பாடல்கள் உள்ளன. இதனைச் சகலகலாவல்லிமாலை என்பதைவிடச் சகலகலாவல்லி பதிகம் என்பதே சாலச் சிறந்த பெயராகும்.

கலைக்கும் கல்விக்கும் கடவுள் கலைமகள்; தொன்மைக் காலத்திலிருந்தே கலைமகளை வழிபடும் பழக்கம் இருந்துள்ளது. கலைமகளைச் சரசுவதி, வாக்கு, வாக்குதேவி, வாகீசுவரி, பாரதி, வாணி எனப் பல்வேறு பெயர்களால் அழைப்பர். இந்துக்கள் மட்டுமன்றிப் பௌத்தர்களும் சமணர்களும் இத்தெய்வத்தை வழிபடுகின்றனர்.

குமரகுருபரர் தமிழ்மொழியின் மேல் ஈடில்லாப் பற்றுக் கொண்டவர். கலைமகள்பால் பேரன்பு கொண்டவர். இவர் இயற்றியிருக்கும் பிரபந்தங்கள் அனைத்திலும் கலைமகளைப் போற்றிப் பாடியிருக்கின்றார். கலைமகளுக்கென்று சகலகலா வல்லி மாலை என்ற தனி இலக்கியம் படைத்திருக்கிறார். இதைப் பாடியதன் நோக்கமே தமிழில் சிறந்த புலமையும் மெய்ஞ்ஞானமும் பெற வேண்டும் என்பதாகும். கலைமகளைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு பாடப்பட்ட சரசுவதியந்தாதி போல இச்சகலகலா வல்லி மாலை விளக்குகிறது. இதிலுள்ள பத்துப் பாடல்களிலும் கலைமகளின் சிறப்பும், அவளிடம் ஆசிரியர் வரம் கேட்டும் பாடியிருக்கின்றார்.

**இருக்கையும் திருவடியும்**

கலைமகள் தாமரையில் வீற்றிருப்பாள்; இவள் வீற்றிருக்கும் தாமரை 'வெண்தாமரை' அடிகளார் வெண் டாமரையில் வீற்றிருக்கும் நீ என் உள்ளத்தாமரையிலும் எழுந்தருளவேண்டும். பிரமனின் நாவில் வீற்றிருந்து அவனுக்கு மட்டும் உயர்வு தோன்றும்படி நிற்கும் கலைமகளே, எனக்கும் அப்பேற்றைத் தருக என்பர். மூன்று பாடல்களில் கலைமகள் வீற்றிருக்கும் தன்மையைக் கூறுகின்றார்.

கலைமகளின் திருவடியைச் செம்பஞ்சுக் குழம்பு பூசிய பாதம் அடியவர்களுக்கு இதம் தருகின்ற பாதம்; பிரமனின் நாவினில் வீற்றிருப்பவள் என்றும் போற்றுகிறார்.

கலைமகள் முத்தமிழாகவும், இனிய சொற்களால் அமைந்த பாட்டாகவும், நான்கு வேதத்தில் கூறப்படுகின்ற பொருளாகவும், ஐம்பூதமாகவும், கண்ணும் கருத்துமாக நிறைந்து நிற்பவள், சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராய் மெய்ஞ்ஞானத்தின் தோற்றமாய் நிற்பவள் கலைமகள். உலகில் உள்ள அனைத்துப் பொருளுமாகவும், முழுமுதற் கடவுளாகவும் கலைமகள் இருக்கிறாள் என்று ஆசிரியர் கூறுகிறார். இறுதிப் பாடலில் கலைமகளே உன்னைப் போன்று தெய்வத்தை யான் கண்ட தில்லை; உன்னைப் போன்ற கண்கண்ட தெய்வம் தேவ லோகத்திலேயே இல்லை; என் வேண்டுதலுக்கு அருள் கொடுக்கும் தெய்வம் நீ உன்னைத் தவிர வேறு தெய்வங்களைக் காண வில்லை என்று கலைமகளின் பெருமைகளைப் பாடியிருக்கிறார்.

கல்விக் கடவுளாய்க் கலைமகளைக் குமரகுருபரர் காண்கின்றார். அடிகளார் பிற தெய்வங்களைப் பற்றிப் பேசவில்லை. கலை மகளையும் பிரமனையும் மட்டும் உயர்த்திப் பாடியிருக்கிறார்.

**கலைமகளைப் பேசல்**

'சக மேழுமளித்
துண்டானுறங்க வொழித்தான் பித்
தாக வுண்டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே'

பிரமனுக்கு உயர்வு தோன்றும்படி அவன் நாவில் வீற்றிருப்பவள் கலைமகள், பிரமனுக்குக் கரும்பாக இனிக்கக் கூடியவள். ஏழு உலகையும் உண்டு விட்டு உறங்குபவன் திருமால்; அழிக்கும் தொழிலைச் செய்யும் சிவனோ பித்தனாகக் கூத்தாடுபவன்; கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் பிற சமயத்தைத் திட்டிப் பாடும் மரபு பெருவழக்கு; முக்கூடல் பள்ளில் மூத்தபள்ளி, இளையபள்ளி ஏசல் இதனைக் காட்டும்.

"படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பலகோடி யுண்
டேனும் விளம்பிலுன் போற்
கண்கண்ட தெய்வ முளதோ"

அடியவர்கள், தாம் வழிபடும் கடவுளை, கண்கண்ட தெய்வம் என்று போற்றுவர். பாடுபொருளைப் போற்றுகின்ற மரபால் இவ்வாறு ஆசிரியர் பாடுகிறார்.

**வரமும் தமிழறிவும் வேண்டல்**

குமரகுருபரர் தமிழின் பெருமையைக் கூறி எனக்குத் தமிழ் அறிவையும் மெய்ஞானத்தையும் அருள வேண்டும் என்று வரம் கேட்கின்றார். முதல் பாடலில் தன் நெஞ்சத் தாமரையில் வந்தருள வேண்டுகிறார். இரண்டாவது பாடலில் நாள்தோறும் சொற்சுவையுடனும் பொருட்சுவையுடனும் பாடுவதற்கும், நான்கு வகையான பாக்களையும் அறிந்து கொள்ள அருள் வேண்டும் என்று வரம் கேட்கிறார். அடுத்த இரண்டு பாடல்களில் தமிழின் சிறப்பைப் பேசுகின்றார்.

"அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு
தார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும்படிக்கென்று கூடுங்கொலோ"

செழுந்தமிழும் தெளிந்த அமுதம் போன்ற தமிழையும் கற்று உன் அருள் கடலில் எப்போது குளிக்க முடியுமோ? உன் அருள் பெற்றுப் பாடுகின்ற புலவர்களின் கவியைக் கண்டு மழையைக் கண்ட மயில்போல் மகிழ்வடையும் கலைமகளே! இசையாகப் பாடக்கூடிய கல்வியையும் தமிழின் சிறப்பைப் பாடுபாடு செய்வதற்குரிய அறிவையும் சுவையாகப் பேசக்கூடிய வாக்கையும் எனக்குக் கொடுத்து அருள்வாயாக. வடநூல் புலமையையும் (சமஸ்கிருதம்) செழுந்தமிழ் செல்வத்தையும் தொண்டர்களின் நாவிலிருந்து காக்கின்ற கருணைக்கடல் கலைமகள் ஆவாள் என்பது குருபரர் துணிவு.

செய்யுளையும் செய்யுளுக்குரிய பொருளையும், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கின் பயனையும் எனக்குக் கிடைக்கும்படி அருள்புரிவாயாக (பா. 17). உன் அடியவர்கள் எழுதும் இனிய தமிழின் பொருளை ஆராய்வதும், பாலையும் நீரையும் கலந்து வைத்தால் அன்னம் எவ்வாறு பிரிக்குமோ அவ்வாறே இனிய தமிழைப் பிரிக்கும் தன்மையுடையவள் கலைமகள் என்று தமிழைத் துய்க்கும் தனக்கு அன்னப் பறவையைக் கூறுகின்றார்.

நாவன்மையில் சிறந்தும் வாக்குதேவியாகவும், ஒரே நேரத்தில் பல செய்திகளைச் சொல்ல வல்ல தன்மையையும் எனக்குத் தந்து என்னை அடிமை கொள்வாய். ஒரு பிறப்பில் கற்ற கல்வி ஏழு பிறப்பிற்கும் நம்முடன் இருக்கும் அந்தக் கல்வியைக் கொடுக்கின்ற பெரும் செல்வமே கலைமகளே என்றும் போற்றுகிறார்.

''அடிகளார் அவர்கள் காசிக்குச் சென்று தமிழ்ப்பணி புரிந்து கொண்டும் பலவகையான அறங்களைச் செய்து கொண்டும் இருந்தார். அப்போது அந்நகர் வேந்தனைப் பார்க்க விரும்பினார். அரசனது பேச்சுமொழி வேறாக இருந்தமையால் அம்மொழியைத் தாம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தால் வெண்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகள் மீது 'சகலகலா வல்லி மாலை' இலக்கியத்தைப் பாடிக் கலைமகளின் அருள் பெற்றார். பின்னர் பாதுஷா மன்னனிடம் இந்துஸ் தானியில் பேசினார் என்று தமிழ் அறிஞர்கள் பலர் 'சகலகலா வல்லி மாலை' பாடியதற்குக் காரணம் என்று விளக்குகிறார்கள்.

ஆயினும் அகச்சான்றுகள் ஏதும் இல்லாததால் இது மேலும் ஆய்வதற்குரியதாம்.

**பொதுவான வேண்டுகோள்**

> "மண்கண்ட வெண்குடைக் கீழாக
> மேற்பட்ட மன்னருமென்
> பண்கண்ட அளவிற் பணியச் செய்வாய்' (பா. 10)

என்று பொதுவாக மண்ணுலகை, ஆளுகின்ற மன்னர்கள் என்று கூறியிருக்கின்றாரேயன்றிப் பாதுஷா என்றோ காசிநாடு என்றோ அங்கு ஓடுகின்ற கங்கையைப் பற்றியோ ஒரு செய்தியும் இல்லை. இந்த இரண்டு அடிகளை வைத்துக் கொண்டு இந்துஸ்தானியைக் கற்க வேண்டும் என்பதற்காக இந்த மாலையைப் பாடினார் என்று கூறமுடியாது.

> "படைப்போன் முதலாம்
> விண்கண்ட தெய்வம் பல்கோடியுண்
> டேனும் விளம்பிலுன்போற்
> கண்கண்ட தெய்வமுளதோ"

ஆதலின் இந்நூல் கல்வி வேண்டிப் பாடியது என்பது தெளிவு.

# குமரகுருபரர் படைப்பில் பெண்

சு. விஜயகாந்தி, மயிலம்

குமரகுருபரர் தம் படைப்புக்களில் பெரும்பாலும் கடவுள்களே பாட்டுடைத் தலைவர்களாவர். இறைவன், இறைவி ஆகிய இருவரது இயல்புகளும், சிறப்புகளும் வடிவங்களும், சைவ மத தத்துவங்களும், இவர் தம் படைப்பின் வழி அறிவியலிலும். ''மனிதனின் மீக்கூரிய சக்தியே தெய்வம்'', ''மனிதனும் தெய்வம் ஆகலாம்'' என்பது யாவரும் அறிந்தது. இவ்வடிப்படையில் குமரகுருபரர் படைப்புகளில் ''பெண்ணின் நலன்களை'' ஆய்வதே இக்கட்டுரையின் செயல்.

குமரகுருபரர் படைத்துள்ள மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் வழி உணரும் பெண்ணின் பங்கு ஈங்கு உரைக்கப்பெறும். இந்நூலின் பாட்டுடைத்தலைவி இறைவி மீனாட்சியம்மை அம்மையின் இயல்புகள் யாவும் புராணக் கதையை அடியொற்றியதாக இருந்தாலும், புராணங்களும், இதிகாசங்களும் உலகில் நிகழ்ந்த நிகழ்வுகளை எடுத்துரைக்கின்றன எனும் நம்பிக்கை இன்றும் மக்களிடையே நிலவுகின்றமையால் இவ்வாய்வு முயற்சி மேற்கொள்ளப் பெறுகிறது.

முன்பு, ''தன்பெண்டு, பிள்ளை, சோறு, வீடு'' என்ற குறிப்பிட்ட எல்லைக்குள் கட்டுபட்டிருந்தது பெண்ணின் வாழ்க்கை தற்காலத்தில் பெண்ணின் வாழ்க்கை புறஉலகத் தொடர்பு கொண்டுள்ளது. சமுதாயத்தில் பெண்ணிற்குரிய பங்கினை 1. அக வாழ்க்கை 2. புற வாழ்க்கை என இருநிலையில் பகுக்கலாம்.

**அக வாழ்க்கை**

அக வாழ்க்கை என்பது இல்லற வாழ்க்கை. இல்லறத்தில் பெண் குழந்தையாக, தங்கையாக, தமக்கையாக, மனைவியாக, தாயாக செயல்படுகிறாள். மீனாட்சியம்மை, மலயத்துவசன் மகளாக, குழந்தையாக அவதரித்து, சிவனுக்கு மனைவியாகவும், தாயாகவும் செயல் வடிவம் உறுகிறாள்.

''தனி முதல் யாம் என்பார்க்கு
அம்மனை ஆயவர் தம்மனை ஆனவள்'' (பா. 81)

என்ற அடி, அம்பிகை சிவனுக்குத் தாய் என்பதை உணர்த்தும். சிதம்பரச் செய்யுட்கோவை அன்னையின் செயலுறும் முறையை

''கனகமாற்கவின் செய் மன்றில்
அனக நாடகற்கு எம் அன்னை
மனைவி தாய் தங்கை மகள்'' (சிதம். செ., பா. 33)

எனத் தெளிவுறுத்தும்.

**மலயத்துவசன் மகள்**

மலயத்துவச பாண்டியனின் தவத்தால், அவனது பிள்ளைக்கலியைத் தீர்க்கும் பொருட்டு, மன்னனின் மகளாகத் தடாதகைப் பிராட்டியார் அவதரித்தார் என்பது புராணம். குமரகுருபரரும் இச்செய்தியினை உட்படுத்தி, தம்நூலில் பல இடங்களில் ''மலயத்துவசன் மகள்'' என மீனாட்சியம்மையை அழைக்கின்றார். மீனாட்சியாகிய குழந்தை, தன் தாய், காஞ்சன மாலையால் சீராட்டி, பாராட்டப் பெறுகிறாள். உலகியலுக் கொப்ப காஞ்சனமாலை, அம்மையாம் குழவியை நீராட்டி, நெற்றியில் வெண்ணீறு இட்டு, அணிகலன்கள் எல்லாம் அணிவித்து, அமுதாகிய முலைப்பாலை உண்பிக்கிறாள். குழந்தையின் வாயிலிருந்து ஒழுகும் தேறல் தாயின் பட்டா டையை நனைத்து, அவள் உள்ளம் குளிரச் செய்கிறது (13) இவ் விதம் தாயை மகிழ்வித்த குழந்தை தந்தையையும் மகிழ் வூட்டியது. மலயத்துவசன் உள்ளம் மகிழ, தன் குழந்தையை கரம் பொத்தி வருகவென அழைத்திடுமுன், அக்குழந்தை தவழ்ந்து, ஓடிச்சென்று தந்தையின் மடியில் அமர்ந்தது (14).

''மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு'' (குறள்-65)

என்பதற்கிணங்க இனிய குதலைமொழி அமுதினைத் தாயின் வயிறு குளிரும்படி ஊட்டியது(14).

**சிவசக்தி**

குழந்தையாக தந்தை, தாய் இருவரையும் இன்பூட்டிய அம்மை சிவனின் மனைவியாக இறைவனோடு இணைந்து இவ்வுலகை இயக்குகிறாள் தடாதகைப் பிராட்டியார் எட்டுத்

திக்கிலும் தம் வெற்றியை நிலை நாட்டக் கருதி போர்க்கோலம் பூண்டு, தேர் ஏறிச் சென்று, எதிரே வந்த சிவகணங்களை வென்றார். இதையறிந்த சிவன் போர்க்களத்தில் வந்து அம்மையைக் காண்கிறார். அவ்விடத்து பெண்மை வென்றது. அம்மையின் கையிலுள்ள வில் நிலத்தில் ஊன்றியது. வில் நுனியைத் தடவிய அம்மை உள்ளப் புணர்ச்சியால் ஒரு நகில் மறையப் பெற்று உயிரோவியமாக நின்றார் (34). இவ்விதம் போர்க்கோலமே திருமணக் கோலமாகக் கொண்ட அம்மையார்,

"ஒருவர் என்பது உயரிருபாற்றாய்
பன்மை வினைகொளும் பாங்கிற்றென்ப" (நன்னூல் - 289)

என்ற இலக்கணத்தின் இலக்கியமாகத் திகழ்வுறுகிறார்.

ஊடலும், கூடலும் இல்லறவியல்பு.

"கிழவோன் பணிவும் கிழத்தி உயர்வும்
நினையுங்காலை புலவியுள் உரிய" (தொல். கற்., 19)

எனுமிலக்கணம் ஊடல் நிலையைப் புலப்படுத்தும்.

"கூன் பிறைக்கோடு உழுத பொலன்சீறடி" (45)

என்பது ஊடற்காலத்தில் சிவன் அம்மையின் சீறடியில் வீழ்ந்து வணங்கியதால், சிவன் முடியிலுள்ள பிறை அம்மையின் அடியில் பதிந்ததை உரைக்கும்.

"முழுமணி மிடற்றன் கனன்மழுவீரன்
முக்கணான் தகைநினது எழில்கூர்
முகம்புலர் தலைக்கண்டு உடல் வளைந்து அடியின்
முனைப் பிறைக்கோடு கொண்டுழுது"

எனும் சிவப்பிரகாசர் கருத்தும் இக்கருத்தினை அரண் செய்யும்.

இவ்வுலகை ஈன்ற அம்மை சிற்றில் இழைக்கிறாள். சிவன் அச்சிற்றிலை அழிக்கின்றார் (15) மற்றொருவிடத்து, சிவன் ஊழிக்கூத்தாடுகையில் அம்மையார் உடனிருந்து தாளங்கொட்டு கிறார்(33). இங்ஙனம் அம்மையும் அப்பனுமாக இவ்வுலகை ஆக்கியும், அழித்தும் இயக்கும் திறம் பாராட்டிற்குரியது.

**உலகை ஈன்ற தாய்**

காஞ்சனமாலையால் குழந்தையாக சீராட்டப்பெற்ற உமையம்மை ஈங்கு, தானே தாயாகச் செயல்படுகிறாள்.

இவ்வுலகை ஈன்ற தாயாகிய உமையம்மை (19) விநாயகப் பெருமானுக்கும், முருகப்பெருமானுக்கும் தாயாகிறாள்.

''வடம்பட்ட நின்துணைக் கொங்கைக்குடங்கொட்டு
மதுரவமுதுண்டு'' (56)

என்பது அம்மை விநாயகப் பெருமானுக்கு பாலமுதூட்டியச் சிறப்பினைக் குறிக்கும். அம்மை தெய்வக்குழந்தையாம் முருகப் பெருமானைக் கணைக்காலிற் கிடத்தி, குளிப்பாட்டிப் போற்றி காப்பிட்டு, பாலூட்டி, சுண்ணம்பூசி தொட்டிலில் ஏற்றித்'' தாலாட்டும் (37) தாய்மைப் பண்பு சீர்மைத்தாகும்.

''கட்டித் தயிரோடு மிளகின் சாறும்
உன்னை வளர்ப்பன தமிழர
உயிரை உணர்வை வளர்ப்பது தமிழே''

என்றாற் போல்

''செழுமறை தெளிய வடித்த தமிழ்ப்பதிகத்தோட
திருவருளமுது குழைத்து விடுத்த முலைப்பாலால்
கழுமல மதலை வயிற்றை நிரப்பி மயிற்சேயை''
களிறொடும், வளர வளர்த்த அருள்தாய்'' (42)

என்ற அடிகள் ஞானசம்பந்தர், முருகன், பிள்ளையார் ஆகிய மூவருக்கும் அம்மை தாயாக விளங்கிய அருட்திறத்தைத் தெளிவுப்படுத்துகின்றன.

ஈங்கு அம்மை, இல்லறத்தில் பெண்மைக்கு மெருகூட்டும் உலகியலுக்குச் சான்றாகிறாள்.

**புறவாழ்க்கை**

உலகியலுக்கேற்ப இல்லறமாம் நல்லறம் போற்றிய அம்மை புறவாழ்க்கையில் சர்வ சக்தியாக, நாட்டரசியாக, மறம் போற்றும் அரசியாக, அடியவர் உளம் நிறை இறைவியாகச் செயல்வடிவம் பெறுகிறாள்.

புறவுலகில் செயலாற்றி புகழுற்ற பெண்மணிகள் பலருள்ளனர் என்பதற்கு இலக்கியங்கள் சான்று. ''ஒரு ஆணின் வெற்றிக்குப் பெண் காரணமாக இருப்பது. உலகியல் இந்நிலையில் மீனாட்சியம்மையாகிய இறைவியும் சிவனின் உந்துதலால் சக்தியாக செயல்வடிவமுறுகிறாள்.

## 1990

**சர்வசக்தி**

ஐம்பூதங்களின் இயக்கமே உலக இயக்கம். இவ்வியற்கை யாகிய சக்தியை, நம் இலக்கியங்கள் பெண்ணாக உருவகப்படுத்தி யுள்ளன. பாவேந்தரும்,

"எங்கெங்கும் காணும் சக்தியடா தம்பி
எழுகடல் அவள் வண்ணமடா"

என்கிறார். அம்மை இறைவனின் உந்து சக்தியால் சர்வமும் சக்திமயமாக மிளிரும் பீடு போற்றற்குரித்து.

"வளர் செஞ்சடைக் கருமிடற்றுத்
தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை
... ... ... புரக்க" (பா. 8)

என்ற அடிகளிலுள்ள 'முன்னின்ற' என்னும் சொல் சக்தி முன்னின்று செயல்படும் ஆற்றலைப் புலப்படுத்துகின்றன. உலகை ஈன்ற தாயாகிய அம்மை (19) செங்கீரை ஆடும் போழ்தில் அவள் உலகப் பொருட்களிலெல்லாம் கலந்துள்ளமையால், அண்ட சராசரங்களும் ஆடின (18) எனும் கருத்து இவ்வுலகம் முழுவதும் சக்தியால் இயங்கும் திறனைப் பகரும்.

**நாடாள் அரசி**

அம்மை மதுரையை ஆண்ட வரலாற்றிலிருந்து புராணக் காலந்தொட்டு தற்காலம் வரை பெண்கள் நாட்டையாளும் உரிமை பெற்றிருந்தனர் எனும் செய்தி பெறப்படுகிறது. தற் காலத்தில் பெண்கள் ஆளும் உரிமையை முன்னைக் காட்டிலும் அதிகம் பெற்றுள்ளனர் என்பது மகிழ்ச்சிக்குரியது. அம்மையின் திக்குவிசயத்தில், நந்தி கணத்தவர் தோற்றத்தால் சிவனின் விடைக்கொடி தோற்றது, மன்மதனின் மீனக்கொடியும் தோற்றது, அம்மையின் கயற்கொடி வென்றது (32) எனவே, அம்மை விடைக்கொடி அவர்க்கொரு கயற்கொடி கொடுத்த கொடியாகத் திகழ்கிறாள் (83) குடை நிழலில் புவி மகளை வளர்த்தவள், அவனி தழைத்திட மவுலி புனைந்தவள். உலகத்து உயிர்கள் மறந்தும் பாவக் கடலுக்குள் மூழ்காமலும், சிதறுண்டு அரசியல் நற்றருமம் குடிவிட்டு மாயாமலும் அறவழியில் அம்மை ஆட்சி செய்கிறாள் (31). அம்மை தம் ஆட்சியில், ஆணைச் சக்கரம் சக்கரவாளகிரி வரை சென்று செங்கோல் ஓச்சிய மாண்பு மாட்சிமைத்தாகும் (50).

**மறம் போற்றும் அரசி**

சங்க காலத்தில் மறக்குடிப் பெண்டிர் தம் வீரத்திற்குச்சான்று மூதின்முல்லை, திக்கெங்கும் புகழும்படி ஆட்சி புரியும் அம்மை வீராங்கனையாகச் செயலுறுகிறாள். தற்கால நடப்பியலாகத் திகழும் ''ஆணுக்குப் பெண் இளைப்பில்லை'' என்றாற்போல், புராணக் காலத்திலே அம்மையாருடன் பெண்களாகிய மெய்க் காவலர்களும் போருக்குச் செல்கின்றனர்'' இதனை,

''வீங்கிய கொங்கை யார்த்தகச்சினர் விழிபோல் தைப்ப
வாங்கிய சிலையேறிட்ட கணையினர் வட்டத் தோல்வாள்
தாங்கிய கையர் வைவேல் தளிர்க்கையர்
பிணாத்தெய்வம் போல்
ஓங்கிய வாயத்தாரும் ஏறினார் உடன் அத்திண்தேர்''
(திருவிளை. பா. 607)

எனும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

''**கடல்தானை** செங்களம் கொள அம்மை
திக்கு விஜயம் கொண்ட நாள்'' (55)

எனும் அடியில் **கடல்தானை** என்னும் சொல் அம்மையோடு போருக்குச் சென்ற பெண்களாகிய மெய்க்காவலர்களையும் குறிக்கும், அம்மையின் கடல்தானை, பகைவர்களின் சிலை இற்றிட, அவர் தம் முடி சிந்திட, கணை மழையைச் சொரிந்தது. அதனால் குருதிக் கடல் பெருகியது. அக்குருதிக் கடலில் தலைகுறை பிணங்கள் சுழன்று சென்றன. (29) இப்போர்க்களக் காட்சி அம்மையின் மறமாட்சிக்குப் பரணியாகும். தற்காலத்தில் சமுதாயத்தைக் காக்கும் பணியில் பெண் காவலர்களும், ஈடு பட்டுள்ளனர் என்பது ஈங்கு நினைவுகூரத்தக்கது.

**உளம்கவர் இறைவி**

அம்மை உலகை நெறிப்படுத்தும் இறைவியாக அடியவர் தம் உள்ளம் நிறை தெய்வமாகவும் திகழ்கின்றாள்.

''அடியவர்களின் பேரின்ப பெருவெள்ளம்'' (44)

அகந்தை கிழங்கை அகழ்ந்தெடுக்கும்
தொழும்பர் உளக்கோயிற்கேற்றும் விளக்கு (61)

''அன்பர் என்புருகக் கசிந்திடு பசுந்தேன்'' (68)

போன்ற அடிகள் இறைவியின் இகபர இன்பம் தரும் இறை யாற்றலை நிரூபிக்கின்றன. அம்மையின் புறவாழ்க்கை பெண்ணின் இயற்கை ஆற்றலையும், ஆளுமை ஆற்றலையும், எதிர்ப்பாற்றலையும், இறையாற்றலையும் மெய்ப்பிக்கின்றன.

**பிற பெண்டிர்**

சக்தியின் கூறுகளாகத் திகழும் சப்தமாதர்களின் வெற்றிச் சிறப்பினை குமரகுருபரர் போற்றியுள்ளார் (11). மீனாட்சி யம்மைக்குத் தோழியராக கலைமகளும், திருமகளும் பங்கு பெறுகின்றனர். வைகைக்கு நீராடச் செல்லும்போழ்து, இத் தோழியர் அசதியாடுகின்றனர் (89,90). கலையாற்றலில் வல்ல பெண்மணிகளும் இருந்தனர் என்பதைப் பெண்கள் குரவைக் கூத்து ஆடிய (12) செய்தியிலிருந்து அறியலாம். விளையாட்டுக் கலை நுட்பம் அறிந்த பெண்களும் அக்காலத்திலிருந்தனர் எனும் செய்தி, நூலில் குறிப்பிடப் பெறும் அம்மானை (73) கழற்சிக்காய் ஆடல் (87) கண்பொத்தி ஆடல் (35) மணல் விளையாட்டு (47) ஊசல் ஆடல் (95) போன்றவற்றால் உணரலாம். உழவுத் தொழில் புரியும் கடைசியர் பற்றியக் குறிப்பும் (49) உள்ளமை யால், இப்படிப் பல நிலைகளிலும், சமுதாயத்தில் பெண்கள் செயல்வடிவம் பெற்றதைக் கண்டறியவியலும்.

இவ்விதம் இறைவி அகவாழ்க்கையில் உலகியலுக்கொப்ப குழந்தையாக, தாயாக, மனைவியாகச் செயலுறுகிறாள். புற வாழ்க்கையில், சர்வசக்தியாக, நாட்டரசியாக, மறம் போற்றும் அரசியாக, அடியவர் உளம் கவர் இறைவியாக செயல்வடிவம் உறுகிறாள். இக்கருத்து தற்கால உலகியலுக்கும் பொருந்துவது போற்றற்குரித்து.

# குருபரர் காட்டும் அம்மன் திருவுருவம்

உலகு. வீரப்பன், புதுவை.

குமரகுருபர அடிகளார் இயற்றிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பிள்ளைத்தமிழ் நூல்களில் முன்வைத்துப் போற்றப்படுகிறது. அடிகளார் அம்பிகையைப் பலநிலைகளில் போற்றிப் பல பாடல்களைப் பாடியுள்ளார். இவரது கவித்திறனுக்குச் சான்றாக அமைவது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும் எனக்கொள்ளலாம். இந்நூலில் அம்பிகையின் திருஉருவத்தைத் திருவடிமுதல் உச்சிவரை புகழ்ந்து பாடிப் போற்றியுள்ளார். சில பாடல்களின் துணைகொண்டு அச்சிறப்பைத் தொட்டுக்காட்ட இக்கட்டுரை முனைகின்றது.

**அம்பிகையின் கூந்தல் தோற்றம்**

குமரகுருபர அடிகளார் அம்பிகையின் திருஉருவத்தைச் சிறப்பிக்கும் பொழுது அவளின் கருநிறக் கூந்தல் தோற்றத்திற்கு மேகம் முதலியவை தோற்றன என்பார். மேகங்களால் உண்டாகும் முத்துக்கள் அம்பிகையின் திருவாய் முத்தத்திற்கு ஒவ்வாவென்று முத்தப்பருவத்தில் கற்பனை நயத்துடன் சுட்டுகிறார்.

> ''குழற் கோதைக் குடைந்த கொண்டலுநின்
> குதலைக் கிளிமென் மொழிக்குடைந்த
> குறுங்கட் கரும்புங் கூன்பிறைக்கோ''

போன்ற வரிகளிலும் அம்மனின் பெருமைகள் அடிகளாரால் உரைக்கப் பெறுகின்றன.

**அம்பிகையின் திருவிழிகளின் தோற்றம்**

அடிகளார் அம்பிகையின் திருவிழிகளின் அழகைப் பலவிடங் களில் போற்றிக் கூறியுள்ளார். சான்றாகச் சப்பாணிப் பருவத்தில் வரும்

> ''ஒழுகிய கருணையு வட்டெழ வைத்தவருட்பார்வைக்கு
> உளநெகிழடியர்ப வக்கடல் வற்றவலைத்தோடிக்
> குழையொரு பொருது கொலைக்கணை யைப்பினை''

என்ற அடிகளை எடுத்துக் காட்டலாம்.

மேலும் அம்பிகை அம்மானை விளையாடும்போது திருவிழிகள் பாய்தலுக்கு அடிகளார் காட்டும் சில உவமைகள் மனத்திற்கு உவகையளிக்கின்றன.

''திங்கட் கொழுந்தைக் கொழுந்துபரு படர்சடைச்
செருகு திருமணவாளன் மேற்
செழுமணப் பந்தரிலெடுத் தெறியுமமுதவெண்
திறளையிள் புரலுமறுகாற்''

என்றெல்லாம் புனைகின்றார் குமரகுருபரர்.

மேலும் அம்பிகையின் திருஉருவமான கரம், கண், நகை போன்றவற்றால் அம்மானையின் நிறம் வேறுபடுகின்றது எனச் சிறப்பாக அம்மானைப் பருவத்தில் பல்வேறு இடங்களில் சுட்டிச் செல்கிறார். இதுபோன்ற பாடல்கள் எவ்விலக்கியத்தும் காணப்பெறவில்லை. பாட்டுடைத் தலைவியாகிய அம்பிகை முத்தாலாகிய அம்மனைகளை எடுத்துஎடுத்து வானிலே எறிந்து விளையாடுகின்றாள். இக்காட்சி மணப்பந்தலிலே அம்மையார் சிவபெருமான்மேல் வெள்ளி அமுதத் திறளையை எறிவது போலத் தோன்றுகின்றது என்றும், அம்மானைக் காய்களோடு அம்மையின் கண்களும் செல்லும் காட்சி, திறளையில் சுரும்பினங்கள் மொய்ப்பது போலவும் மதிமிசைத் தாவிடும் மான்போலவும் அம்மனைகள் தோன்றின என்று அடிகளார் கூறுவது இங்கு உற்றுநோக்கத்தக்கது.

''பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்த்தெழும்
பனிமிதி மிசைத்தா விடும்''

என விழிகளின் கருமை, வேகம் போன்றவற்றை மொழிகின்றார் அடிகளார்.

**திருவிழி நீர்**

அடிகளார், அம்பிகையின் திருவிழிகளின் வரும் நீரை வையையோடு ஒப்புமைபடுத்திக் கூறும் பாடலாவது:

''விழியும் சிவப்ப ஆனந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்தவற் கோர்
வேலையிருதல் மிகையன்றே''

வைகையாற்றில் நீராட அம்மையுடன் வாணியும் சென்றாள். அங்கு அம்மையிடம், அம்மையின் காதலர் முன்னாளில் பிட்டுக்கு மண்சுமந்த பெருமை பெற்ற இடம் இதுதான் என்று கூறினாள். அதைக் கேட்டவுடன் அம்மை மயங்கி வருந்திக் காதலால் கசிந்து கண்ணீர்வர நெடிது நின்றாள். இதைக் கண்ட மற்றொரு தாயார் அம்மையிடம் தாங்கள் இவ்வாறு கண்ணீர் வடித்தால் வையை வெள்ளம் பெருகிவிடுமே என்றும், வெள்ளம் பெருகினால் மீண்டும் அம்மையின் காதலர் மண்சுமக்க நேரிடும் என்றும் கூறும் அடிகளார் அம்மையின் விழிநீர்க்கு வையை நீரை ஒப்புமையாகக் கூறியுள்ளார்.

**அம்பிகையின் திருமேனியைப் பாராட்டல்**

அம்பிகையின் அழகுத் திருமேனியைப் பற்றிப் புகழ்ந்து கூறுங்கால் திருமகள் பாற்கடலில் தோன்றியபொழுது பத்மநிதி, சங்கநிதி, சந்திரன், அமுதம் முதலியன தோன்றியன. இதனை மொழியும் குமரகுருபரர் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உறுப்பைப் பற்றிக் கூறவந்து, அவையாவும் ஒருங்கே அமையப் பெற்று அம்பிகையின் திருமேனியின் திருஉருவமாக உருவான தாகக் காட்டுவது எண்ணி மகிழத்தக்கது.

> ''பதும மொடொழுகொளி வளியுநி னளினமு
> கத்துமி டற்றுமுறம் ... ... ...
> முதுதமிழ் ததியில் வருமொரு திருமகள்''

என்ற வரிகள் இதற்குச் சான்றாகும்.

**அம்பிகையின் வடிவமாக நான்மறைகள்**

நீராட்டில் அம்பிகையின் திருஉருவத்தைச் சுட்டும்போது ஒவ்வோர் உறுப்புகளில் உண்டாகும் வேறுபாட்டைத் தெளிவு படப் பல இடங்களில் விளக்கியுள்ளார். சான்றாக,

> ''பண்ணாறு கிளிமொழிப் பாவைநின் திருமேனி
> பாசொலி விரிப்ப வந்தான்
> பவளக் கொடிகாமர் பச்சிளங் கொடியதாய்ப்
> பருமுத்த மரகதமாய்தி''

என வரும் வரிகளைக் கருதலாம். நான்மறைகள் உட்பட உலகத்துப் பொருள்கள் அனைத்தும் அம்பிகையின் திருவடிவமே என்று குமரகுருபரர் சுட்டுகின்றார். மீனாட்சியம்மைநீராடுகின்ற போது அவளது அழகிய உடலின்பசுமை ஒளியினால் பவளக்கொடி பச்சிளங்கொடியாகத் தோற்றமளிக்கின்றது என்றும், நீர்த்

துறையில் வாழும் அன்னங்கள் மயில்கள் போல் காட்சியளிக்கின்றன என்றும், வெவ்வேறு நிறங்கொண்ட பொருள்கள் அனைத்தும் அன்னையின் திருஉருவங்களே என்றும் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார்.

**அம்பிகையின் திருஉருவக்கோலம்**

மீனாட்சியம்மையின் இரண்டு திருவடிகளிலும் அணியப் பெற்றுள்ள கிண்கிணியாகிய சதங்கையும் முறையீடு செய்வது போல் ஒலிக்கின்ற பரல்களையுடைய சிலம்பணியும் இடை இற்றுப்போம், இற்றுப்போம் என்று புலம்புகின்ற மேலாபரணமும் பொற்சரிகையால் சித்திரிக்கப் பெற்ற பட்டாடை உடுத்த சிறந்த இடையும், மேலாடையும் ஒட்டியாணம் என்னும் இடுப்பணியும், செங்கையில் வளர்கின்ற பச்சைக் கிளியும் அழகிய மார்புமேல் அணியப்பெற்றுள்ள முத்தழுத்திய மேலாடையும் மங்கல்மான திருநாண் அணியும் அழகு ஒழுக நிற்பதாக அடுக்கிக் கூறுகின்றார் குமரகுருபரர். மேலும், அம்பிகையைப் பார்த்து, அருள் பொழியும் மதிமுகமும், முகமாகிய சந்திரனின் நீண்ட நிலவு துளிர்கின்ற சிறுநகையும் ஞான ஆனந்தம் என்னும் கடலில் மூழ்கி மகரக் குழையணிந்த காதுடன் போர்புரியும் கயல் மீன்களாகிய கண்களும், வடிவுடை'ப அழகும் மலர்ந்திருக்கப் பெற்ற சுந்தரவல்லியே என பக்திமீதூர அழைப்பார். ஊசற்பருவத்திலிடம்பெறும் பாடல்களில் பொன்னூசலில் வீற்றிருக்கும் அம்பிகையின் திருவடிவு பல்வேறு வகையாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

**முடிவுகள்**

1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் அம்மையின் வடிவழகை வருணிக்கின்றார்.

2. அம்மையின் வடிவமாக நான்மறைகள் உள்ளன எனச் சுட்டுகின்றார்.

3. சுருங்கக்கூறின் உலகப் பொருட்கள் யாவும் அம்மையின் வடிவழகே எனப் போற்றிக் கூறியிருப்பது மனங்கொளத்தக்கது.

4. இதுவரை யாரும் கூறியராத வகையில் வருணனைகள் குமரகுருபரரால் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

5. மனிதர்களின் வேட்கைக்கேற்ப உருவங்கள் அமைந்திருப்பதையும் இதன்வழி அறியலாம்.

# குருபரரின் திருமகள் வழிபாட்டு முறைமை

ஆர். வெங்கட்ராமன், தெ. ஆப்ரிக்கா

அழகுக்கும், அன்புக்கும், செல்வத்திற்குமான பெண் தெய்வம் திருமகள். ஸ்ரீ என்பது திருமகளைக் குறிக்கும். அரிப்பிரியை, ஆக்கம், இந்திரை, இரமை, இளையாள், உலகமாதா (லோகமாதா), கமலை, கோகனகை, ஸ்ரீதேவி, செய்யாள், செல்வி, திரு, திருமகள், நளினி, பதுமாசனி, பதுமாலையை, பதுமை, பார்க்கவி, பாற்கடற் பிறந்தாள், பின்னை, பொருட் செல்வி, பொறி, பொன். மா, முண்டகாசனை, விமலை போன்ற சொற்களால் இலக்கியங்களிலும்,தோத்திரங்களிலும் திருமகளைக் காணலாம். இலக்குமி திரு என்ற சொற்களுக்கு அதிர்ஷ்டம், அழகு, ஸ்ரீதேவி, செல்வம், முத்து என்ற பொருள்களும் உள்ளன. திரு என்னும் சொல் முலைமேல் தோன்றும் வீற்றுத் தெய்வம் (சிலம்பு. கா. 2 அடி. 69) என்ற பொருளிலும் வருதலுண்டு.

**வேதங்களிலும் இதிகாசங்களிலும்**

திருமகள் பாற்கடலிற் பிறந்தவள் என்பது புராண வழக்கு. திருமகள் திருமாலின் மனைவி. திருமாலின் திருமார்பில் உறைபவள். இதனால் 'திருமருவு மார்பினான்' எனத் திருமால் சிறப்பிக்கப் பெறுவான். திருமகளின் மகன் காமதேவன். இச்செய்தியை ஒட்டிச் சைவ வைணவப் புராணங்கள் பல்வேறு நிகழ்வுகளை விரித்துரைத்துள்ளன. இருக்கு வேதத்திலும் அதர்வண வேதத்திலும் ஸ்ரீதேவி குறிக்கப் பெற்றுள்ளாள். ஸ்ரீதேவியின் தமக்கை மூதேவி என்பதும் தீமைதரும் அதன் குறிப்பு அதர்வண வேதத்தில் உள்ளது என்பதும் வேதங்களை ஆய்ந்தோர் சொல்லுவனவாகும்.

இதிகாசங்கள் திருமால் அவதாரம் பற்றியதாகலின் இதிகாசங்களில் திருமகள் பற்றிய செய்திகளுக்குக் குறைவில்லை. திருமாலின் இராமாவதாரத்தில் ஸ்ரீதேவி சீதையாக – ஜனகனின் மகளாக அவதரித்தாள். எனவே ஜானகி எனப் பெற்றாள்.

மகாபாரதம் கிருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீதேவி ருக்மணியாக் அவதரித்தாள். திருமாலின் பரசுராம அவதாரத்தில் திருமகள் தரணி எனப் பெற்றாள்.

**திருக்குறளிலும் சங்க இலக்கியங்களிலும்**

''அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு'' (179)

''வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு'' (519)

''இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு'' (920)

என்னும் குறட்பாக்களில் வள்ளுவர் திருமகளைக் குறித்துள்ளார். இக்குறட்பாக்களில் உள்ள 'திரு' என்பதற்குச் செல்வம் எனப் பொருள் கொள்ளினும்,

''அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்'' (167)

என்ற குறளில் 'செய்யவள்' என்றது திருமகளையே எனத் தெளிந்து கூறலாம். இச்சொல்லாட்சி சிலம்பிலும் (வேட்டுவவரி) பரிபாடலிலும் (திருமால் 2) வந்துள்ளது.

பத்துப்பாட்டுள் 'திரு', அமைதி, அழகு, திருமகள், செல்வம் என்னும் பொருளில் பல இடங்களில் பயின்று வந்துள்ளன.

'திருக்கிளர் செல்வன்' என இந்திரன் குறிக்கப்பெறுகிறான். (திரு. முரு. 159) நன்னன் திருஆர் மார்பினன் எனப் பெறுகிறாள் (மலைபடுகடாம்-356), திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்பது பெரியாழ்வார்மொழி. அரசர்கள் சங்க காலத்தில் திருமாலாகக் கருதப்பட்டமையின் புலவர்கள் அரசன் மார்பில் திருமகள் தங்கியதாகப் பாடினர்.

எட்டுத்தொகை நூல்களிலும் திருமகள் பற்றிய செய்திகள் வருகின்றன. புறநானூற்றின் (358),

''விட்டோரை விடாள் திருவே
விடாதா ரிவள் விடப்பட் டோரே''

என்ற தொடரில் நெடிது சிந்திக்கத்தக்க அரிய குறிப்பு உள்ளது. 'திருமகளை வழிபடுங்கால் அவள் அருளை விரும்பியே வழிபட வேண்டும். இம்மைப் பயன்களை விரும்பிப் பற்றுவிடாது

வேண்டின் அவள் நீங்குவாள்' என்பது இத்தொடரில் அமைந்த அரிய குறிப்பாகும். பெருமாள் திருமொழியிலும் (5:4)

"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும் செல்வம்''

என வருகிறது. செல்வமாகிய திருமகளை முழுவதுமாக உடையவன் திருமால். ஆகையினால் செல்வம் முழுதுடைமையை 'ஆலமர்கடவுள் அன்னநின் செல்வம்' (புறம். 198) எனக் கூறிய வியத்தகு உவமை புறநானூற்றில் காணப்படுகிறது.

பரிபாடலுள் 1,2,3,4,13,15 என்னும் எண்ணுள்ள பாடல்கள் திருமால் பற்றியவை. பரிபாடலுள் திருமகளை வழிபடுதல் பற்றிய இரண்டு அரிய செய்திகள் உள்ளன. திருமாலின் திருமார்பில் உருவாகத் திருமகளை அமைத்தலில்லை. திருமார்பில் மறுவாகவே திருமகள் உள்ளாள் என்பது ஒன்று.

திரு மறு மார்ப (1:36)
மதிமறுச் செய்யோன் சேர்ந்தநின் மாசின் அகலம் (2:30-1)
'பொன்னில் தோன்றிய புனைமறு மார்ப'

என வரும் தொடர்களுக்குப் பரிமேலழகர் திருமகளாகிய மறு என உரை கண்டார். பரிபாடல் பதின்மூன்றில்,

"... ... ... ... ... நின்
திருவரை அகலம் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமும் உரிமைநன் குடைத்து''

என ஒரு தொடர் வருகிறது. திருமகளைத் தொழுவோர்க்குத் திருவைகுண்டம் உரிமையாகிறது என்பது இதன் கருத்து.

எஞ்சிய எட்டுத்தொகை நூல்களிலும் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலும் திருவின் மேன்மைகள் கூறப்பெற்றுள்ளன.

பிரஸஸ்தி எனப்பெறும் மெய்க்கீர்த்திகளுள் முதன்மையான முதலாம் இராசராச சோழனின் மெய்க்கீர்த்தி 'திருமகள்போலப் பெருநிலச் செல்வியும் தனக்கே உரிமைபூண்டமை மனக்கொள' எனத் தொடங்குதலையும் ஈண்டு உடனெண்ண வேண்டும்.

**பக்தி இலக்கியங்களில்**

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்துள் திருமகள் பற்றிய செய்திகள் காணப் பெறுகின்றன. திருமகள், திருமாலின் அவதாரங்களில் உடனாய நிலையே பெரிதும் பேசப்படுகின்றன

எனலாம். வைணவ இலக்கியங்களில் திருமகள் பேசப்பெறுதலில் வியப்பேதுமில்லை. சைவத் திருமுறைகளிலும் செல்வம் மிகுந்த தலங்கள் ஊர்கள் மாளிகைகள் முதலானவற்றைத் திருமகள் தங்கியுள்ளதாகக் கூறுவது சிறப்பானதாகும். அதனினும் கோளறு பதிகத்துள் ஞானசம்பந்தர்,

''திருமகள் கலைய தூர்தி செயமாது பூமி
திசைதெய்வமான பலவும்
அருநெதி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே''

எனப் பாடியருளியுள்ளமை சிந்தனைக்குரியதாகும். தீமைதருவன எல்லாமும் அடியார்களுக்கு நல்லனவாகும் என்ற பட்டியல் களுடன், நன்மை தருவனவும், மேலும் நன்மை பயக்கும் என்ற பட்டியல்களும் கோளறு பதிகத்தில் உள்ளன. 'உமையோடும் வெள்ளைவிடைமேல்' அமர்ந்து சிவபெருமான் உளம்புகுந்திருந் தால் திருமகள் மிக அதிகமாக நலந்தருவாள் என்ற கருத்தை ஞானசம்பந்தர் இதன்வழி அறிவிக்கிறார்.

**குமரகுருபரரின் காப்புக்களில்**

குமரகுருபர சுவாமிகள் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ஆகிய இரு பிள்ளைத் தமிழ் நூல்கள் அருளியுள்ளார். அவ்விரு இலக்கியங்களிலும் காப்புப் பருவ முதற்செய்யுளாகத் 'திருமால் காப்பு' அமைய அமைத்துள்ளார்.

''பூவில் திருவைப் புணர்தலில்
பொன்முடி பூண்கடகம்
மேவப் படுதலின் வெண்சங்கம்
ஆழி விரும்புதலின்
காவல் கடவுளைக் கார்முகில்
வண்ணனைக் காசினியோர்
பாவுக்கு முன்னே பகருவர்
காப்பாப் பணிமொழியே''

என்பது நவநீதப்பாட்டியல் (செ. 26). அவ்வகையில் திருமாலின் காப்பு அமைந்ததெனலாம். திருமகளைக் காப்பில் அமைக்க வேண்டும் என்னும் நியதி இன்றெனினும் திருமகள் காப்பு இரு பிரபந்தங்களிலும் வருகிறது. திருமாலை முதலில் அமைத்தற்கு

உள்ள நான்கு காரணங்களில் திருமகளைப் புணர்தல் முதற் காரணம் எனல் கருதத்தக்கது.

குமரகுருபரர் திருமகளைக் காப்பாகச் செய்த இரு செய்யுள் தொடர்கள் வருமாறு

"வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப்பாயல்
மீமிசைத் துஞ்சு நீல
மேகத்தின்ஆகத்து விடுசுடர்ப் படலைமணி
மென்பரல் உறுத்தநொந்து
பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்
படுமிள வெயிற்குடைந்தும்
பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழல் ஒதுங்குமோர்
பசுங்கொடியை அஞ்சலிப்பாம்" (மீ. பி. த. 7)

திருமாலின் திருமார்பில் உள்ள கௌஸ்துபம் என்ற மணியின் ஒளி வெயிலாகிறது. அந்த மணி காலில் உறுத்துகிறது. அதனால் திருமகள் துளசி மாலையின் நிழலில் ஒதுங்குகிறாள் என்பது இப்பகுதியின் கருத்து.

"மாநிறக் கடவுள்திரு மறுமார்பின் நறவுரி
வனத்துழாய்க் காடு மூடி
மாயிருள் வழங்குதன் திருமாளிகைக்கு அம்தண்
கால்நிறைக்கும் கமல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவம் திறந்தளித்தும்
காதன்மை காட்டும் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை அஞ்சலிப்பாம்" (முத்து. 8)

திருமாலின் திருமார்பில் உள்ள துளசிக்காடு இருட்டை உண்டாக்குகிறது. எனவே திருமகளின் திருமாளிகையில் (திருமால் திருமார்பில்) இருள் சூழ்கிறது. கவுத்துவம் (கௌஸ்துபம்) சூரியனைப் போன்றது. அதன் ஒளிகொண்டு தாமரைக் கதவுகளை (இதழ்களை) விரித்தும் ஒளிபரவச் செய்தும் திருமகள் அன்பை வெளிப்படுத்துகிறாள். காதன்மை - காதல் தன்மை.

இவ்விரு வழிபாடுகளிலும் புறநானூறு கூறியதுபோலச் செல்வம் வேண்டாமை மட்டுமன்றிச் செல்வம் தருபவள் என்ற குறிப்பும் கூறாது அஞ்சலித்திருத்தலையும், பரிபாடலில் கூறியவாறு திருவரை அகலம் மட்டுமே குறித்துத் தொழுதமையும் நோக்கில் சுவாமிகளின் திருவுளக்குறிப்பு விளங்கும். தாமரையில்

உறைபவள் என அஞ்சலித்தால் செல்வம் வேண்டலாகும். திருமார்பில் உறைபவள் எனில் முத்தி வேண்டலாகும் என்பது உளங்கொண்டே இக்காப்புக்கள் அமைந்துள்ளன.

'ஸ்ரீயதே' என்னும் மந்திரச்சொல் மக்களால் வழிபடப் பெறுபவள் என்பதைக் காட்டும். 'ச்ரயதே' என்பது மக்களுக்காக வழிபடுபவள் என்பதைக் காட்டும். ஆன்மாக்களுக்கு முத்தி வழங்குதலுக்குத் தவம்புரிகோலமே திருமார்பில் உறையும் மறுவாகிய கோலம். ''மாநிறக் கடவுள் திரு மறு மார்பின்'' என்றதால் 'மார்பில் மறுவாக உள்ளாள்' என்ற பரிபாடற் கருத்தையும் சுவாமிகள் வழிமொழிகிறார்.

இரு பிள்ளைத்தமிழ் இலக்கியங்களிலும் திருமாலைக் காப்பாக்கிய முதற் செய்யுட்களிலும் திருமகள் உடனாய திருமாலையே குறித்துச் செய்யுள் செய்திருப்பதும் தாயார் வழியாகவே பெருமானைச் சேவிக்கும் வைணவ சம்பிரதாயத்தை உணர்த்துவதாகிறது. இனி அப்பகுதிகளைக் காண்போம்.

''கணிகொண்ட தண்துழாய்க் காடலைத்து ஓடுதேம்
கலுழிபாய்ந்து அளறுசெய்யக்
கழனிபடு நடவையில் கமலத்து அணங்கரசுஓர்
கையணை முகந்துசெல்லப்
பணிகொண்ட முடவுப் படப்பாய் சுருட்டுப்
பணைத்தோள் எருத்தலைப்பப்
பழமறைகள் முறையிடப் பைந்தமிழ் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே''

இது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழின் முதற் செய்யுளாகும். திருவெஃகாவில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பெருமாள் 'கணிகண்ணன் போகின்றான்' என்ற திருமழிசையாழ்வாரின் செய்யுளைக் கேட்டுத் தம்முடைய பாயலைச் சுருட்டிக்கொண்டு அவருடன் சென்றமையை இப்பகுதி குறிக்கிறது. 'கமலத்து அணங்கரசு கையணை முகந்து செல்ல'ப் பெருமாள் சென்றதாக இச்செய்யுளில் சுவாமிகள் குறித்திருப்பது நயமாகும். பெருமாள் பாம்புப் பாயலில் கையைத் தலைக்குத் தாங்கலாக வைத்து அரிதுயில் புரிகிறார். கைக்குத் தாங்கலாக இருப்பது கையணை எனப் பெறுகிறது. பாய்சுருட்டுதலுக்கு முன் நிகழ்ச்சி கையணை முகத்தல். எனவே பைந்தமிழ்க்குப் பின்செல்லுதலுக்குத் தாயார் விரைவுகாட்டினார்கள் என்றபடி. கணவனின் குறிப்பறிந்து

விரைந்து செயலாற்றும் திறம் எனினும் அமையும். கையைக் கோர்த்துப் பற்றிச் சென்றாள் எனப் பொருள் கூறவும் இடமுண்டு.

''தேமேவு கடவுள் பொலங்கிரி திசைக்கரிகள்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத்து எறியத் தடம்கடல்
தெண்திரை முகட்டுஉதித்த
பாமேவும் மதுரம் பழுத்துஅமுதம் ஒழுகும்
பசும்குதலை மழலைஅம்கொல்
பங்கயச் செல்விஇரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே'' (முத்து. 1)

இது முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழின் முதற் செய்யுளாகும். திருமகள் திருப்பாற்கடல் கடைந்தபோது தோன்றியவள். அவள் பேச்சு கவித்துவம் உள்ளது; இனிப்புள்ளது; அமுதமயமானது; குதலை உடையது. அவள் சொற்களும் அழகானவை. அவள் தாமரை மலரில் உள்ள வளானதால் பங்கயச்செல்வி எனப்படுபவள். 'பச்சைமாமலை போல் மேனி'யன் அவளைப் புணர்ந்துள்ளான் என்பன இப்பகுதியின் கருத்துக்கள்.

திருமகள் உடனாய திருமாலையே காப்புக்குரிமையாகப் பாடிய சுவாமிகளின் கவிநுட்பம் நினைந்து வியத்தற்கு உரியதாகும்.

''சங்கு கிடந்த தடங்கை நெடும்புயல் தங்காய்'' (மீனா. 21) என்ற இடத்தில் மீனாட்சியைத் தங்கையாக அறிவித்த ஸ்ரீ சுவாமிகள் திருமகளை அண்ணன் மனைவி எனச் சொல்லாமல் 'திருமகள் கலைமகள் தலைமகள் மலைமகள்' (மீனா. 20) என்றும், 'குண்டுபடு பாற்கடல் வரும் திருச்சேடி' (மீனா. 62) என்றும் தோழியாகக் குறிப்பிட்டது உணரத்தக்க தாகும். திருமகளைச் செய்யாள் என்கிறார்.

''செய்யாள்செய் சரக்கறையாம் திருவால வாயிலுறை
செல்வ னாரே''

என்பது (மதுரை. 9) அப்பாடல் தொடர். செம்மையானவள் என்பது ஒரு பொருளும், செய்யமாட்டாள் என்பது ஒரு பொருளுமாகச் 'செய்யாள்' எனத் திருமகள் குறிக்கப் பெறுகிறாள்.

வேத இதிகாச காலங்களில் திருமகளைப் பற்றிய சிந்தனை பரவலாக இருந்தது. சங்ககாலத்தில் திருமகளைத் திருமாலுடன் சார்த்தித் துதித்த முறை இருந்தமைக்குக் குறிப்புக்கள் உள்ளன. திருமகள் இம்மைநலங்கள் தருபவளாகவும், ஆன்மாக்கள் வீடுபெற வேண்டுபவளாகவும் குறிக்கப்பெறுகிறாள்.

செல்வம், பொருள் உடைமை என்பவை திருமகளின் கருணையினால் நம் முன்னைப்பழவினையையும் ஒட்டிவருபவை. தீக்குணங்கள் உடையார்க்குச் செல்வவகைகள் துய்ப்புக்கு வாரா.

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில்"

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்கவும்,

"யாம் இரப்பவை
பொன்னும் பொருளும் போகமும் அன்று"

என்ற பரிபாடல் தொடருக்கிணங்கவும், வேண்டாதார்க்குப் பக்குவப்படியே பலன் கிட்டும் என்று தெளிவு செய்யும் இவ்வண்ணமாகிய தமிழிலக்கியக் கருத்துக்களை உள்ளடக்கிச் சமயப்பிணக்கறுக்கும் நல்லெண்ண முயற்சியுடன் அருளாளர் குமரகுருபர சுவாமிகள் திருமகளை அஞ்சலிக்கிறார். முருகப் பெருமானிடம் வேண்டுதல்கள் வைக்கும் சுவாமிகள் திருமகளை அஞ்சலித்தல் அவர் காட்டும் வழிபாட்டு முறைமை எனலாம். திருமகளின் வழியாகத் திருமாலைப் போற்றுதல் அவர் காட்டும் மரபுசார்ந்ததோர் முறைமை எனலாம்.

இடைக்கால, பிற்கால இலக்கியங்களில் இருக்கும் திருமகள் பற்றிய செய்திகள், தனித்துதி நூல்கள் அருளாளர்கள் பிரபந்தங்களில் இன்மை, சைவத் திருக்கோயில்களில் திருமகள் திருமேனிகள் சன்னதிகள் அமைந்துள்ளமை ஆகியவற்றை விரிவாக ஆய்வது மேலும் பல செய்திகளை அறிதற்கு ஏதுவாகும்.

# குமரகுருபரரின் சொல் ஆளுகை

ப. வேல்முருகன், காந்திகிராமம்.

பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் தலைசிறந்தவர் குமரகுருபர அடிகள். இவர் தமிழிலும், இந்தியிலும் பாண்டித்துவம் மிக்கவர். 'அடிகள் தமிழ்மொழிச் சொற்களையும், பிறமொழிச் சொற்களையும் சொல்நலம், பொருள் நலம் விளங்க கையாண்டுள்ளார்' என்பதைக் கருதுகோளாகக் கொண்டு விளக்குகிறது இவ் ஆய்வுக் கட்டுரை. இக்கட்டுரைக்கு முதன்மைச் சான்றாகக் குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தத்திரட்டும் (டாக்டர் உ வே. சா. பதிப்பு) துணைமைச் சான்றாக இலக்கண நூற்களும், ஆய்வுக் கட்டுரை களும் அமைகின்றன.

**பொருள் பொருத்தம் மிக்க சொல் ஆளுகை**

இறைவனுக்கும், இறைவிக்கும் உருவம் ஒன்றாக விளங்குவதால், அவ்வுருவத்தை ஒருத்தன் அல்லது ஒருத்தி எனக் கூறுவதா? என்ற மயக்கம் உண்டாக, இருவருக்கும் உரியதாக 'ஒருவர்' என்னும் சொல் பொருத்தப்பாடுடையது என்று கையாள்கிறார் (1961; 534). 'ஒருவர்' என்னும் சொல் உயர்திணை ஆண்பாலையும், பெண்பாலையும் உணர்த்தும் என்னும் இலக்கணச் செய்திக்கேற்ப (தொல். சொல். 191; நன். 289) ஆணும் பெண்ணுமாகக் காணும் இறை உருவத்தை 'ஒருவர்' எனப் பெயரிட்டு அழைக்கும் பொருத்தத்தை அறிய முடிகிறது. ஆணும் பெண்ணுமாக ஒருங்கிருத்தலும், உருவம் ஒன்று மட்டுமே இருத்தலும் விளங்க இச்சொல்லையே மிக்கப் பொருள் பொருத்தம் உடையதாக அமைத்துள்ளார் என்பதை உணர முடிகிறது.

இவ்வாறே இருவரையும் ஒரே நேரத்தில் ஒரே சொல்லால் விளிக்கும் முறையில் 'எந்தாய்' (1961 – 553) என்ற சொல்லைச் சிலேடை நயம்பட, 'எம்தாய்', என்றும் 'எம்தந்தை', என்றும் பொருள்படுமாறு கையாண்டுள்ளார்.

மேலும், மீனாட்சியம்மையைப், 'பெண்ணரசு', என்றும், 'மதுரைக் கரசு', (1.961 : 24 – 28) என்றும் குறிப்பிடுகின்றார். 'அரசு' என்பது உயர்திணைக்கு உரிய சொல்லாகவும், அஃறிணை வினை முடிவு கொள்ளும் என்றும் தொல்காப்பியர் (சொல். 56) வரையறுக்கிறார். எனவே 'அரசு' என்னும் சொல் உயர் திணையில் ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் வழங்கும் என்பது பெறப்படுகிறது. பாலுணர்த்தும் முறையில் அரசன், அரசி என்று வழங்குதல் பின்வழக்கு, 'அரசிளங்குமரி' என்று பால் உணர்த்தியும் அடிகள் ஆண்டுள்ளார்; மலையத்துவசனை, 'முடியரசு' என்றும் குறிக்கிறார் (66). எனவே, தொல்காப்பிய இலக்கண மரபை ஒட்டி 'அரசு' என்னும் சொல்லால் அம்மை யையும் குறிப்பிட்டுள்ளமை அறியமுடிகிறது. தம்கால வழக்குச் சொல்லைக் கையாண்டு அம்மையைத் 'துரைமகள்' என்றும் 'துரைப் பெண்' என்றும் (29,72) கூறுதல் குறிப்பிடத்தக்கது.

இதே போல் மேலும் பல சான்றுகள் உள்ளன. 'விருப்பு வெறுப்பற்றிருப்பார்' என்பதை விருப்பும், வெறுப்பும் அற்றிருப்பர் என்றும், இகபரம் இரண்டோடும் எதிர்நிரனிறை யாகச் சுட்டி இகத்தில் வெறுப்பற்றும் பரத்தில் விருப்பற்றும் இருப்பர் என்றும், வேற்றுமைத் தொகையாகக் கொண்டு விருப் பினிடத்தில் வெறுப்பற்றிருப்பார் என்றும் அடிகள் பல்வேறு வகையான பொருள் விளக்கம் தருதலும் (578) சொற்செறிவு பொருந்திய ஆளுகையாக அமைந்துள்ளது. 'சிற்றாய் பாடிப் பெருங்குடி' என்பதில் கண்ணனுடைய ஆய்ப்பாடியில் ஐந்து லட்சம் பேர் உள்ளனர் என்கின்ற குறிப்பை உயர்த்தும் முறையில் 'பெருங்குடி' என்கின்ற சொல் ஆளப்பட்டுள்ளது எனப்படுகிறது (354: பக். 264). இவ்வாறு அடிகள் சொற்களை ஆளும் முறை மையால் பொருள் உணர்வையும் நுட்பத்தையும் உணரச்செய்தல் புலப்படுகிறது.

**அரிய சொல் ஆளுகை**

'மருகு' (13) எனும் சொல் மருமகனைக் குறித்து வருகிறது. 'மாமடிகள்' (69-355) என்பது மாமனைக் குறித்து நிற்கிறது. இதேபோல்,

சமன் (133) > எமன்
நமரங்காள் (489, 506) > நம்மவர்களே
(விளிப்பொருள்)

விராய் (269) > விறகு, சிராய்(பேச்சுவ்ழக்கு)
திருவம் (320, 472) > செல்வம்.
யோகு (332) > யோகம்.
அகம்படிமைக்குடி (428) > குற்றேவல் செய்யும் குடி.
ததியர் (570) > அடியவர்
அம்மனை (3, 75) > தாய்
கைத்திட்டு (4) > கையெழுத்து இடுதல்
கலாம் (6) > கலாபம்
பகடு (6, 40) > ஐராவதமாகிய யானை.
பிறகிடல் (40) > புறமுதுகு காட்டல்
அம்மகோ! (118) > விளித்து அழுதல்
அமர நாடியர் (196) > தேவமகளிர்
மார் (538) > மார்பு
விரதம் (23) > வரம்
மேக்கு (689) > மேலானது.

**பேச்சு வழக்குச்சொல் ஆளுகை**

அளவும் (13)
இந்தா (114)
இன்றைக் குழந்தை (417)
குப்புற்று (34)
கொம்மென (64)
சருவி (4)
சற்று (1: 80)
செட்டு (111)
சரக்கு (696)
தட்டுமாறுதல் (13)
திடுக்கம் (197)
துழனி (28)
துளை மாடுதல் (401)
நாவளைத்தல் (695)
பயல் (621)
பெண்பிளை (33)
வரத்து (181)

இவையெல்லாம் பேச்சு வழக்குச் சொற்களாக ஆளப்பட்டுள்ளன. தவிர, வட்டார வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. 'தளை' (195) என்னும் 'தாயைக் குறிக்கும் சொல்லை ஆண்டுள்ளார். இது குட்டநாட்டார் வழக்கு' (நன். 273). 'சோதித்தல்' (1.97) என்பது வினவுதல் என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது; இது மலைநாட்டு வழக்கு, நங்களுக்கு (107) என்கின்ற மலைநாட்டு வழக்குச் சொல்லும் காணப்படுகிறது. 'முயலாதுவைத்து' (255) 'அறிந்து வைத்திருந்தும்' (324) ஆகிய வற்றில் 'வைத்து' என்னும் தென்பாண்டி நாட்டு வழக்குச் சொல் காணப்படுகிறது. 'சலாம்' (6) 'கபாய்' (12, 505) இந்துத்

த்தானிச் சொற்களும், சலாபம் (48), துரை (29, 72) (63, 93) ஆகிய பிறமொழிச் சொற்களும் காணப்படுகின்றன.

**இலக்கண மரபுச் சொற்களின் ஆளுகை**

இலக்கண மரபுக்கேற்ப சில சொற்கள் விளங்குதல் குறிக்கத் தக்கது. 'கடல்வாழ் சுறாவும் ஏறெனப் படுமே' (தொல், மரபியல் 40) என்ற நூற்பாவிற்கேற்ப 'மீனேறு' (105) என ஆளக் காண்கிறோம். பன்றியை அடிகள் 'களிறு' (138) எனக் குறிக்கின்றார். இதுவும் தொல் மரபியலை (34) ஒட்டியதாகும். 'தென்றல் களிறு' (159) என்பதும் இலக்கண மரபை ஒட்டி உரையாசிரியர் கருத்திற்கேற்பக் (24-பேரா. உரை) கூறப்பட்டுள்ளதாகும். முதலையை விலங்கு என்று கூறும் முறையில் 'இடங்கர்மா' (373) என்று குறிக்கக் காண்கிறோம். இறையனார் களவியல் உரையில், நெய்தல் கருப்பொருள்களைக் கூறும்போது 'மா – சுறாவும், முதலையும்' எனக் குறிக்கப்பட்டுள்ளது (சூ. 1: உரை. பக். 20). இம்மரபை ஒட்டி அடிகளும் 'இடங்கர்மா' என வழங்கியுள்ளார்.

'அகந்தைக்கு இடமுண்டிலை' (107) என்பதில் 'இடமுண்டிலை' எனும் எதிர்மறை வினைவடிவம் காணப்படுகிறது. உடன்பாட்டு முற்றாகிய 'இடமுண்டு' என்பதன் பின் எதிர்மறை தரும் 'இல்லை' எனும் சொல்லைச் சேர்த்து ஆண்டுள்ள முறை குறிப்பிடத்தக்கது. 'உண்டு' எனும் உடன்பாட்டு வினைக்குப்பின் இல்லை எனும் எதிர்மறை சேர்த்து வழங்குதல் அரிய வழக்காக உள்ளது.

இறைவனுக்கு 'அடிமுடி இன்றே' என்று கூறப்படுவதில், 'இன்றென்பதைத் தனித்தனியே அடியொடும் முடியொடும் கூட்டுப்பொருள் செய்க, ஒருமையாதலின்' என்கிறார் உ. வே.சா. (பக். 389) வேறு, இல்லை, உண்டு என்னும் வினைகள் ஐம்பால் மூவிடத்துக்கும் வழங்கி வருதல் போல (நன். 339), அடிகள் 'இன்று' என்பதை ஆண்டுள்ளார் என்று கருதவும் இடமுண்டு.

**யாப்பின் பொருட்டு திரியும் சொற்கள் ஆளுகை**

யாப்பில் தொடை நலங் கருதிச் சில சொற்கள் ஒலித்திரிபு பெற்று விளங்குதலும் அறியப்படுகிறது.

> 'மன் பெருங் குரவன் பிழைத்த பாவமும் மற்றை
> மாமடிகள் இடு சாவமும்' (69)

இதில் 'பாவம்' என்ற சொல்லமைவிற்கேற்ப, எதுகை அமையுமாறு 'சாவம்' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. 'சாபம்' என வரவேண்டிய சொல் இவ்விடத்துத் தொடை நலங்கருதி 'சாவம்' என வரும்படி ஆண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதே போன்று, 'பத்தர்தஞ்சித்தமும்' (675) என்பதில் 'பக்தர்' என்கின்ற வடசொல், சித்தமும் என்கின்ற சொல்லமைவிற்கேற்ப ஏதுகைப் பொருத்தத்துக்காகத் தமிழியல்பையும் தழுவிப் 'பத்தர்' எனக் கையாண்டுள்ளமைச் சுட்டத்தக்கது. 'சினத்தீர்கடம்ப வனத்திரே' (197) என்று எதுகை நலங்கருதிச் 'சினந்தீர்' என்பது 'சினத்தீர்' எனக் கையாளப்பட்டுள்ளது.

**பிறமொழிச் சொற்களைத் தமிழ்ப்படுத்தி ஆளுதல்**

அடிகள் பிறமொழிச் சொற்களைத் தமிழில் மொழி பெயர்த்தது போன்றே அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

| | | |
|---|---|---|
| நரசிங்கம் | > | நரகரி (603) |
| இரணியன் | > | ஆடகப் பெயரின் அவுணன் (312) |
| பானுகோபன் | > | இரவிபகை (418) |
| கிரவுஞ்சமலை | > | குருகுபெயர்க்குன்றம் (422) |
| மீனாட்சி | > | அங்கயற்கண்ணி (587, 140, 174) |
| விசாலாட்சி | > | பெருந்தடங்கண்ணி (600, 621) |
| கிரியா சக்தி | > | இயற்றல் (1:10) |
| ஞானசக்தி | > | அறிவு (1:10) |
| சரம் | > | நிலையில் பொருள் (460) |
| அசரம் | > | நிலையியல் பொருள் (460) |

இவ்வாறாக தமிழில் பெயர்த்து ஆண்டுள்ளமையைக் காண முடிகின்றது.

**1. அடிகள் பாடல்களில் வடசொற்களின் ஆளுகை**

அடிகளின் பாடல்களில் வடமொழிச் சொற்கள் சமய அடிப்படையிலும், காலச் சூழலாலும் பயின்று வழங்கி வருகின்ற முறையைக் காணமுடிகிறது. செய்யுள் ஈட்டச் சொற்களாக இலக்கணநூலார் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகியவற்றைக் கூறியதற்கேற்ப (தொல். எச். 1) வடசொல் ஆளுகை பரவலாக பயின்றாலும், அடிகளின் செய்யுள் நடையும் ஓசையும் உயர்ந்த நிலையில் யாவரையும் கவரும் தன்மையுடையவாக இருத்தல் குறிப்பிடத்தக்கது. வடசொற்களை

ஆளுகையில் வடமொழிச் சிறப்பு ஒலிகளைத் தவிர்த்து தமிழ் ஒலிகளை அதற்குத் தக்கனவாக அமைத்து ஆளுதல் வேண்டும் என வரையறை செய்வர் தொல்காப்பியர் (எச். 5). அந்த வகையில் அடிகள் ஆளும் வடசொற்கள், வடமொழிச் சிறப் பொலிகள் இன்றித் தமிழ் ஒலிகளிலேயே உள்ளன என்பது உணரத்தக்கது. அப்படியானால் மொழிமுதல், இடை, இறுதி ஆகிய இடங்களில் தமிழில் வழங்கும் ஒலிமுறைகளை இலக்கண நூலார் வரையறுத்துக் காட்டி இருப்பதை, அடிகள் பிறமொழிச் சொல்லாட்சிகளில் சிறிது நெகிழ்த்திக் கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. தமிழ் ஒலி மரபுக்கு மாறான – இருப்பினும் தமிழ் ஒலிகளாலேயே அமைந்த வடசொற்களை யாப்பு, சந்தம் முதலிய காரணங்களால் அடிகள் அமைத்துள்ளார். சான்றுகள்:

| | |
|---|---|
| மந்த்ரம் (1:13) | ப்ரதாபம் (355) |
| இந்த்ர ஞாலம் (442) | ப்ரதாபன் (351) |
| ரத்நம் (1:37) | பத்மம் (359) |
| சித்ரம் (1;102) | பக்தசகாய (172) |
| சக்ரவாளவட்டம் (34) | த்ரிசூலம் (172) |
| சந்த்ரசேகரன் (150) | லோகம் (115) |
| த்ரிகூடம் (362) | கல்யாணசுந்தரனார் (147) |

2. தமிழ் ஒலிமரபிற்கேற்ப ஆண்டுள்ள பிற வடசொற்கள்

| | | |
|---|---|---|
| அபயம் (23) | உபயம் (33) | நிமித்தம் (361) |
| அமுதாசனார் (412) | உருத்திரர் (359) | தர்க்கம் (1:17) |
| அங்கி (202) | கிரியாசக்தி (572) | பிரமம் (1;93) |
| அத்திரம் (536) | கிரீவம் (6) | புருடராமம் (572) |
| அம்பை (505) | குஞ்சிதகமலம் (530) | புருடோத்தமன் (572) |
| அட்டாவதானம் (1:118) | குஞ்சிதபதம் (451) | முட்டி (185) |
| அபிடேகச் (சொக்கர்) (148) | சங்கரித்தல் (1:98) | வாச்சியம் (553) |
| அரசிவசங்கரநாமம் (139) | சன்னிதி (414, 446) | விக்கினம் (1:111) |
| | சிட்டர்கள் (185) | விசயம் (56) |
| இந்திரசாலம் (1;8) | சென்மித்து(1;16) | |

## தமிழ்ச் சிறப்புணர்த்தும் சொல்லாட்சிகள்

அடிகள் தம் பாடல்களில் வடசொற்களை ஆண்டாலும் அவை சிறிதும் குன்றாத வகையில், இனிய, தூய தமிழ்ச் சொற்களையும், சொற்றொடர்களையும் குறைவின்றிப் பயன்படுத்தி வழங்கி நிறைவு செய்வதையும் காணமுடிகின்றன. தமிழ்ப் புலமை மிக்க சான்றோர்கள் தமிழ் மொழியின் சிறப்புக்களையெல்லாம் பலவகை அடைமொழிகளால் வாயாரச் சொல்லி மகிழ்வதையும், புலப்படுத்துவதையும் காணமுடிகின்றன. அவ்வகையில் 'தமிழின் சிறப்புத் தோன்ற அடைமொழி புணர்த்துச் சொல்லியுள்ள இயல்பு, பயில்வார் யாவரையும் ஈர்த்துள்ளது' எனக் குமரகுருபரரின் பாடல்களை மதிப்பிட்ட உ. வே. சா. கூறுகின்றார் (1961: பக். 27). இவர் கூற்றுக்குச் சான்றுகளாக அமைவன; அருந்தமிழ் (344), இசைமுத்தமிழ் (163), நண்டமிழ் (32), (328) கலைத்தமிழ்த் தீம்பாலமுதம் (706), கொத்துமுத்தமிழ் (620), சங்கத்தமிழ் (157, 174, 375, 377), செழுந்தமிழ்ச்செல்வம் (703), தண்டமிழ் (144, 191, 196, 398, 634), தருசுவையமுதெழ மதுரத் தொழுகு பசுந்தமிழ் (115), தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ் (149), துறைத்தமிழ் (88), தெள்ளுதமிழ் (448), தெய்வத்தமிழ் (49, 152), பைந்தமிழ் (3, 158, 472), முதற்சங்கத் தலைபாவலர் தஞ்சுவைக் கனியும் கண்டேன் நறையும் வடித்தெடுத்த சாரன் கனிந்தூற்றிருந்த பசுந்தமிழ் (393), முதுசொல் புலவர் தெளித்த பசுந்தமிழ் (32) என்பன.

தமிழ்மொழியின் நல்லியல்பை இவ்வளவு விரிவாகப் பாராட்டி மொழிந்தவர் யாவருமிலர் என்கின்ற நிலைக்கு அடிகள் குறிப்பிட்டிருத்தல் தனியியல்பாகச் சுட்டத்தக்கது. கடவுளரைத் தமிழ் வேட்கை உடையவர்களாகக் காண்கிறார் அடிகள். இறைவன் சவுந்திரமாறனாகவும், அம்மை தடாதகா தேவியாகவும், குமரவேள் உக்கிரவழுதியாகவும் மதுரையில் தோன்றியமைக்குக் காரணம் தமிழ் வேட்கையே என்கிறார் (196). 'முருகனைச் சங்கத்தமிழின் தலைமைப் புலவன் என்கிறார் (375 – 377). இவ்வாறு தெய்வங்களையெல்லாம் தமிழோடு தொடர்பும் வேட்கையும் உடையவர்களாய்க் காண்கிறார் (149, 53, 62, 378, 439). எனவே தமிழ் மொழியைத் தெய்வத் தமிழாகக் கண்டு (49, 152) வணங்கும் வேட்கையில்,

அடிகள் இறைவனை நாத்தழும்பிருக்கப் பாடியிருத்தல் போல், தமிழையும் மிக உயர்வாகப் பாடியுள்ளார் எனலாம். தமிழ்நாடு அம்பை இருக்கும் கோயிலாகக் கூறப்படுகிறது (37, 57), முது சொற்புலவர் தெளித்த பசுந்தமிழ் நூல் பாழ்போகாமலும், நிலவுலகம் கீழ் மேலாகமலும், பகை நாட்டவர்கள் பாண்டி நாட்டை ஆளாமலும், உயிர்கள் பாவக்கடலில் தோயாமலும், அரசியல் சிதைவுற்றுத் தருமம் மாயாமலும், பாண்டியர்க்குச் சோழர் நட்பென்று உணராதார் ஓதாமலும், மதுரைப்பதி தழைய மீனாட்சி ஆட்சி புரிதல் அடிகளால் கூறப்படுகிறது (32). எனவே தமிழையும் தமிழ்நாட்டையும் வேற்றுநாட்டவர்கள் அழிக்கவும், ஆளவும் முயன்ற குறிப்பு இங்கு உணர்த்தப்படுகிறது எனலாம். இந்நிலையில் தெய்வத்தன்மை மிக்க காரணத் தினாலேயே தமிழும் தமிழ்நாடும் பிறரால் அழிக்கவும், ஆளவும் பட முடியவில்லை எனத் தெளிவுறுத்தும் அடிகள், தமிழின் சிறப்பை நன்கு புலப்படுத்துவதைத் தமது கடமையாகக் கொண்டு இவ்வளவு அடைமொழிகளோடு காட்டி உள்ளார் எனக் கருதல் தகும் (1976 : 219).

அடிகள், வடமொழிச் சொற்களை ஆளும்போது, தமிழில் மொழிமுதல் வாராத (ல், த்ர், ப்ர், வ்ர்), மொழியிடையில் மயங்கி வாராத (ஞ்த்ர், த்ந், த்ர், க்ர், க்த், ல்ய்) மெய் எழுத்துக்கள் வருவதைக் காணமுடிகின்றன. இவை தமிழ் இலக்கண ஒலி மரபுக்கு மாறானவை என்பதில் மாறுபாடு இல்லை. இருப்பினும் இவற்றில் உள்ள ஒலிகள் தமிழ் ஒலிகளே என்ற காரணத்தாலும், யாப்பு, சந்தம் கருதியும் இவ்வாறு ஏற்றுக்கொண்டவர் எனலாம்.

பிறமொழிச் சொற்களை அடிகள் தம் பாடல்களில் அமைத் திருப்பினும், பிறமொழிச் சிறப்பொலிகள் எவையும் அடிகளால் அப்படியே தமிழில் கலந்து எழுதப்படவில்லை என்பது முதன்மை யாகக் குறிப்பிடத் தக்கதாகும்.

# குமரகுருபரரின் கல்வியியல் நெறிகள்

இரா. வேலாயுதம், சென்னை

மனிதனின் அறியாமையை நீக்கி அறிவுடையவனாக ஆக்குவது கல்வியாகும். அறியாமைத் தன்மையிலிருந்து விடுபட தாழ்நிலைக்குக் கொண்டு செல்வதாகக் கல்வி ஞானத்தைப் பயன்படுத்தாமல் உயர்நிலை நோக்குகின்ற நூல்களைக் கற்க வேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் அறிவிக்கும் நூல்களும் அந்நூல்களை அறிதற்குக் கருவிகளான நிகண்டு, இலக்கணம், கணக்கு முதலிய நூல்களும் வாழ்வியற் குறிக்கோளடிப்படையில் கற்கத் தகுந்த நூல்களாவன.

செல்வத்தைக் கல்விச்செல்வம், பொருட்செல்வம் என இரண்டாகப் பகுத்து நோக்குவர். கல்வி என்பது தொழிற் பண்புப் பெயராயினும் அதனை செல்வமாகக் கொண்டு கல்விச் செல்வம் என்பர். ஏனெனில், 'கைப்பொருள் போனாலும் கல்விப் பொருள் போகாது' என்னும் சிறப்பு கருதியேயாம். அதனால் தான் திருவள்ளுவர்,

> ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
> எழுமையும் ஏமாப்பு உடைத்து. (குறள்-398)

என்றார்.

கல்வி என்பது சிந்தனை வளர்ச்சி முறைகளை இணைத்துக் காணுவதுடன் புதுமையை நோக்கி முதுமையோடு இணைத்துக் காணுவதாக அமையவேண்டும். இந்த உலகத்தில் மனிதர் நாய் போல் சினம் உடையவராகவும் நரி போல் பயம் பெருகு பவராகவும் பேய் போல் பறந்து இருப்பவராகவும் உள்ளனர். இவர்களை எல்லாம் தாய்போல் பிணங்காமல் இரவும் பகலும் ஆற்றுப்படுத்தி அவர்களை உயர்த்தும் நோக்கத்தோடு கல்வியின் பயன் அமைய வேண்டும் என்றவாறு தண்டபாணி சுவாமிகள்,

> நாய்போற் சினந்து நரிபோற் பயம் பெருக்கிப்
> பேய்போற் பறந்து பிணங்காமற் – தாய்போ

> லிரவு பகலாற்றானை யெண்ணித் தினமும்
> பரவுவதே கல்விப் பயன்.

என்ற பாடலின் மூலம் சுட்டிக் காட்டுகின்றார்.

உயிருக்கு நீங்காத் துணையாக கல்வியினும் மேம்பட்டது வேறு இல்லை என வற்புறுத்தும் குமரகுருபர சுவாமிகள் சமூக நீதி நோக்கில் அருளிய கல்வியியல் நெறிகள் பற்றிய சிந்தனையை இக்கட்டுரையில் ஓரளவு காண்போம்.

**கல்வியின் பயனும் சிறப்பும்**

கல்வியின் பயனாவது, பிறர் பயன்பெறுமாறு அமைவது. பெற்ற கல்வியை எடுத்துரைக்கும் நிலையில் அதனை விவரிப்பர். ஒருவன் கல்வியால் பயன்பெறுதலோடு சமூகத்திற்கும் பயன் கிட்டுகிறது என்ற வகையில் கல்வியால் பிறரும் பயன் கொள்ளுதல் விளக்கம் பெறும். சேற்று நிலத்தில் நடப்பவனுக்கு ஊன்றுகோல் துணை செய்வது போல வாழ்க்கையில் அறத்துடன் ஒழுக கல்வி உதவும். மக்கள் இம்மையில் அறநெறிப்படி வாழவும் மறுமையில் வீடுபேறு அடையவும் கல்வி சிறந்த துணையாகும் என்ற அடிப்படையில் குமரகுருபர சுவாமிகள் பின்வருமாறு கூறுகின்றார்.

> அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
> புறங்கண்ட நல்லிசையு நாட்டு – முறுங்கவலொன்
> றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
> சிற்றுயிர்க் குற்ற துணை. (நீ. நெ. வி. 2)

வாழ்க்கையில் அறம், பொருள், இன்பம் அளித்து மறுமையில் முத்தி அடைவதற்கும் உலகத்து உயிர்களுக்கு என்றும் நீங்காத துணையாக கல்வியினும் மேம்பட்ட ஒன்று வேறு எதுவும் இல்லை என்கிறார் சுவாமிகள். குறிப்பாக 'புறங்கண்ட நல்லிசையும் நாட்டும்' என்ற ஒருநிலை கல்வியால் வாய்க்கும் என்றார். அறம் பொருள் இன்பம் வீடு ஆகியன ஒருவனுக்கு அமைவதுடன் புறத்தே இருப்பவர்களும் அவற்றைப் பொருந்துமாறு பணியாற்றுவது கல்வி எனச் சிறப்பித்தார்.

கல்வியை செயல்பாட்டு நிலையில் பயன்பாடு உடையதாகவும் ஆக்க வேண்டும். இதைத்தான் தண்டபாணி சுவாமிகள்,

> கற்றோர்தம் வாய் நரர்வாய் கல்விநலம் பயிலா
> மற்றோர் வாய் புள்விலங்கின் வாய்.

என்றவாறு மனுநெறித் திருநூலில் கூறியுள்ளார். பொருள் இல்லாமல் பேசுகிறான், ஏதோ ஒலி வருகிறது என்ற நிலை இல்லாமல் பொருட்பாடு உடையதாய் பேச்சானது கல்வியால் அமைதல் வேண்டுமென்பது அதன் கருத்து. கல்வியால் பெறு-கின்ற இன்பமே முறையாகத் துய்த்து நிலைப்பேற்றுத் தன்மையைக் கூட்டுகின்ற இன்பமாகும்.

அறியாமையை நீக்கி அறிவை ஊட்டுகின்ற கல்வியே மக்களுக்கு ஒணிப்பணிகள் கோத்தாற்போன்று அழகு சேர்க்கும் அணிகலனாகும். பிற உலகப் பொருள்களால் பெறுகின்ற இன்பமும் அழகும் மறைப்பாம் இருள் நிறத்தனவாகிய மணிகள் கோர்க்கப்பெற்ற மாலைகளாகக் கவரப்படாதன வாகும்.

'தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி – நெடுங்காம
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது. (நீ. நெ. வி., 3)

இழிவான காமமானது தொடக்கத்தில் இன்பம் அளிப்பது போல் தோன்றினாலும் முடிவில் துன்பத்தையே அளிக்கும், ஆனால் கல்வியோ முதலில் துன்பம் போல் தோன்றினாலும் பிறகு இன்பம் தரும். அது நிலையானதாகவும் இணையற்றதா கவும் இருக்கும். ஆதலால் உண்மை இன்பத்தை அளிக்கும் கல்வியைக் கற்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

கற்கப் புகும்போது நீங்காதிருந்த அறிவின்மையே துன்பம் பயத்தற்கும். கற்று உணர உணர தோன்றுகின்ற அறிவானது இன்பம் பயத்தற்கும் காரணமாய் அமைவதைச் சுட்டிக் காட்டவே 'மடங்கொன் றறிவகற்றுங் கல்வி' என்றார். இங்கு அறியாமை மீண்டும் உண்டாகாதவாறு கல்வியானது அதைக் கெடுத்து அழித்துவிடும் என்பதால் 'கொன்று' என்றார்.

**கல்விக் குடும்பம்**

பெண்களுக்குக் கல்வியறிவின் இன்றியமையாமையைக் குறிப்பிடும் சுவாமிகள், கல்வியை கற்புள்ள பெண்ணாகவும் உருவகப்படுத்துகிறார்.

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் – சொல்வள
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு. (நீ. நெ. வி. 4)

கல்வி என்ற கற்புடைய பெண் கவிதை என்ற செல்வப் புதல்வனைப் பெற்று, வாக்குவன்மை என்ற செல்வத்தை உடையது என்பார். கல்வியே மூலமாயும் செயல் வெளிப் பாட்டிலும் நின்று பயன்தந்து அநுபவப் பொருளாய் அமைவது என்றார். கல்வியானது செல்வம் தந்தும் மேல் நிறுத்தியும் சமநிலைப் பணியாற்றுவதில் பெண் தன்மையில்வைத்துரைத்தார். இங்குக் கற்புடைய பெண்ணாக கல்வியை உருவகப்படுத்திய சுவாமிகள் பிறிதோரிடத்தில், கற்றதைப் பிறருக்கு எடுத்துரைக்கும் ஆற்றலில்லாதவன் பெற்ற கல்வியானது பிற ஆடவருடன் உறவு கொள்ளுகின்ற பெண்ணைப் போன்றது என்றும் கூறுகின்றார். ஆக, கல்வியைக் கற்புடையப் பெண்ணாகவும், கற்பில்லாத பெண்ணாகவும் அமைத்திருப்பதும் சிந்திக்கத்தக்கது. பிறருக்கு இன்பம் தருவதை, கல்வியைப் பிறருக்குத் தராதவனுடன் ஒப்புமைப்படுத்துகிறான். அதன் மூலம் தருவதால் ஒன்றைப்பழித்து தராததால் ஒன்றைப் பழித்து விளக்கும் நிலையானது பயன்பாடு நன்மை நோக்கிய சமூக நீதியடிப்படையில் கல்வி குறித்து உணரப்படும்.

பொருட்செல்வம் 'படைத்தோர், பலர் இருந்தாலும் ஈகை குணம் சிலர்க்கே இருப்பதுபோல, கல்வி கற்றோர் பலர் இருப்பினும் அதைத் திறம்பட எடுத்துக்கூறும் ஆற்றல் சிலர்க்கே உள்ளதால் 'செல்வமு முண்டு சிலர்க்கு' என்றார். கல்வியைப் பொதுமைப்படுத்தும் அடிப்படையில் சமூகத்திற்குப் பயன்படாத கல்வியை நீதிக்குப் புறம்பாகக் காட்டி விளக்குகிறார்.

நல்ல மனைவியோடு கூடி வாழ்கின்ற வாழ்வானது நல்லறமாக போற்றப்பெறுவது போல, ஒருவனது வாழ்வானது கல்வியாலே சிறந்து விளங்கும். மனைவியானவள் கணவனை ஒழுகி நிற்றல் போல, கல்வியானது கற்றோரின் தேவைக்கேற்ப அவன் விரும்பிய போதெல்லாம் வந்து உதவி நிற்கும். கற்றவன் கணவன் தன்மையிலும், கற்பிப்பவன் மனைவி தன்மையிலும் விளக்கப்படுகின்றனர். தன்னை நிறைவுபடுத்துமாறு நின்ற

நிலையும் சமூகம் சார்ந்து செயல்படுமாறு நின்ற நிலையும் கல்விக்குரிய பணியாகச் சாற்றப்படுகின்றன.

**கற்றாருட் கல்லார்**

கல்வியைச் சிறிது கற்றவளவில் அமையாது மேலும் மேலும் கற்றல் வேண்டும். தம்மினும் குறைவாகக் கற்றவரை நோக்கி, 'நாம் இவரினும் வல்லமை உடையோம்' என்று கர்வம் கொள்ளாமல் 'தம்மினுங் கற்றாரை நோக்கிக் கருத்தழிக, கற்றதெல்லாம் எற்றே யிவர்க்குநா மென்று' என்பதாக ஒவ்வொருவரும் அமைத்துக் கொள்ள வேண்டும் என்கிறார் சுவாமிகள். இதன் மூலம் கல்வி வெளிப்பாட்டிலும், கல்வி உடைமை நிலையிலும் ஏற்றத் தாழ்வில்லாத நீதியை உடையது என்பதைப் புலப்படுத்துகிறார் குமரகுருபர அடிகள்.

> அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லா
> ரவையஞ்சா வாகுலச் சொல்லு – நவையஞ்சி
> யீத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா நின்னலமும்
> பூத்தலிற் பூவாமை நன்று. (நீ. நெ. வி. 6)

என்பதன் வழி, அவைக்கு அஞ்சுகின்ற மெய்விதிர்ப்பார் பெற்ற கல்வியும், கல்லாதவர்கள் வாய்மொழிச் சொல்லும், பிறருக்கு ஒரு பொருளும் மனமுவந்து கொடுக்காதவரின் செல்வமும், வறுமை உடையோன் பெற்ற அழகிய மனைவியின் நலமும் பயனின்றி அழிந்துபோகும். ஆதலினாலே, இத்தகைய தன்மைகள் தமக்கும் பயனின்றி பிறருக்கும் துன்பம் உண்டாக்க வல்லதாய் இருப்பதால் 'பூத்தலிற் பூவாமை நன்று' என்று கூறினார் சுவாமிகள், இதைத்தான் திருவள்ளுவர்,

> இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்ற
> துணர விரித்துரையா தார். (குறள்– 650)

என்றவாறு கூறுகின்றார். இதன்மூலம் கற்றவர்களிலும் அவைக்கு அஞ்சாதவரே உண்மையில் கற்றோராகக் கருதப் பட்டதை அறியமுடிகிறது. மற்றோர் கற்றும் கல்லாதவரே யாவர் என்பது பெறப்படுகிறது. எனவே சமூகப் பொதுமை நீதியை அடிப்படையாகக் கொண்டு தனக்கும் பிறருக்கும் நன்மை தரும் அடிப்படையில் வேறுபாட்டு நீதிகளைத் தராத நிலையில் கல்வியின் திறம் காட்டுகிறார் சுவாமிகள்.

**கற்றன மறவாமை**

'மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை' என்று முதுமொழிக்காஞ்சி கல்வி பற்றிச் சுட்டிக் காட்டுகின்றது. நுனிப்புல் மேய்வதைப் போல மேலும் மேலும் பல நூல்களைக் கற்பதைவிட, கற்றவற்றை மறவாமல் பாதுகாத்தலே சிறத்தலாகும் என்பதை,

> வருந்தித்தாங் கற்றன ஓம்பாது மற்றும்
> பரிந்துசில கற்பான் தொடங்கல் - கருந்தனங்
> கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட்டரிப்பரித்தாங்
> கெய்த்துப் பொருள்செய் திடல். (நீ. நெ. வி. 9)

என்றவாறு கூறுவார் சுவாமிகள். இதன் மூலம் தாம் கற்ற நூல்களைப் பன்முறையும் நினைந்து நினைந்து உள்ளத்து அமைத்துக் கொள்ளுதல் வேண்டும் என்பது கல்விப் பயிற்சி நோக்கிப் பெறப்படுகிறது.

கற்பது சிறிதளவாயினும் நன்கு கற்று அதை மனத்தில் நிறுத்த வேண்டும். கற்றோர்கள் நிறைந்த அவையில் கற்ற கல்வியானது நினைவில் வராமற் போனால் அத்தகைய கல்வி நாணந்தருவதாகும். இதைத்தான் திருவள்ளுவர்,

> கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
> நல்லா ரவையஞ்சு வார். (குறள் - 729)

என்று கூறுகின்றார். இதே கருத்தை குமரகுருபர சுவாமிகள்,

> நெடும்பகற் கற்ற வவையத் துதவா
> துடைந்துளா ருட்குவருங் கல்வி - கடும்பக
> லேதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
> தீதென்று நீப்பரி தால். (நீ. நெ. வி. 8)

என்றவாறு குறிப்பிடுகின்றார்.

**கல்வியும் பொருளும்**

கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் செல்வமாகக் கொள்ளப் பெற்றாலும் கல்வியே என்றும் அழியாத செல்வ மாகும். பொருட்செல்வம் பிறராலும் காலத்தாலும் அழிந்து போகும். கல்விச் செல்வம் பிறருக்குக் கொடுக்கக் கொடுக்க பெருகிக் கொண்டே செல்லும். ஆகவே, இடையறாத இன்பத்தை அளிக்கும் கல்விப் பொருளே செல்வப் பொருளினும்

சிறப்புடையனவாகும். நிலைத்த நீதித் தன்மையிலும், நீதியை நிலவச் செய்யும் விரிந்த பொதுமையாம். உயர்வு நீர்மையிலும் கல்வியின் சமூகப் பணியைக் குறிக்கின்றார் அடிகள்.

வேறுபாடும் பொருள் ஏற்றத்தாழ்வும் இல்லாத அணிகலன் என்ற வகையில் கல்வியைச் சுட்டி,

> கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லான்
> மற்றோ ரணிகலம் வேண்டாவா – முற்ற
> முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
> யழகுக் கழகுசெய் வார். (நீ. நெ. வி. 13)

என்றவாறு பாடுகின்றார்.

மக்களை நன்மை நோக்கில் பொதுமைப்படுத்துவது; அப்பொதுமை விரிந்தும் வளர்ந்தும் வேறுபாடின்றி பலரையும் இணைக்கும் நீதித் தன்மையினதாக மலர வேண்டும் என்னும் அடிப்படைகளில் குமரகுருபர சுவாமிகள் கல்விக்கொள்கை உணரப்பெறுகிறது.

# செய்யுட் கோவையில் சிவவடிவங்கள்

**ஆ. வேலுசுவாமி சுதந்திரன், தஞ்சாவூர்.**

குமரகுருபரர் பாடல்களில் சிவன் விஷ்ணுவின் இறை வடிவங்களும் புராணப் பின்னணிச் செய்திகளும் மிகத் தெளிவாக விவரிக்கப்படுகின்றன.

'ஆடகச் செம்பொனளி மன்றிடங்கொண்ட
பாடகச் சீறடியாள் பாகத்தான்'

என்ற வரிகள் வழி உமையை ஒருபாகமாகக் கொண்ட அர்த்தநாரீசுவரர் வடிவம் வெளிக்காட்டப்படுகிறது. தமிழகக் கலைவரலாற்றில் அர்த்தநாரீசுவரர் சிற்பம் முதன்முதலாக மகாபலிபுரம் தர்மராஜரதத்தில் இடம்பெறுகிறது. சங்க இலக்கி யங்களிலும், இரட்டைக் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத் திலும் அர்த்தநாரீசுவரரைக் குறித்துச் செய்திகளுண்டு. வடமொழி நூல்களான ஆகமங்களில் மூன்று நான்கு கைகளுடன் அமைந்த சிற்பங்களின் படிமக்கலை சிறப்புக்கள் விளக்கப்படு கிறது. மேலும் முதன்முதலாக தமிழகத்தில் அர்த்தநாரீசு வரருக்கு கட்டப்பட்ட ஆலயம் சேலம் மாவட்டம் திருச் செங்கோட்டிலிருக்கிறது. மூலவராகிய அர்த்தநாரீசுவரமூர்த்தி, பழனிக்கடவுளைப் போன்று நவபாஷாணத்தால் உருவாக்கப் பட்டதென்பர். ஆனால் தற்பொழுது செப்புத் திருமேனி மட்டுமே கருவறையிலிருக்கிறது. 'கங்கையாள் கேள்வன் கழறொழுஉக் கை கூப்பி நின்றிறைஞ்சச் சென்றிறைஞ்சுங்கூற்று' என்ற வரிகளில், சிவன் கங்காதர மூர்த்தியாகக் காட்டப்படு கிறார். கங்காதரமூர்த்திச் சிற்பங்களும் பல்லவர் காலமுதல் இடம்பெறுகிறது. கங்கையை ஒரு முடியில் தாங்குவதாகச் சிற்பங்கள் காட்டுகின்றன. பல்லவர் காலச் சிற்பத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டு திருச்சி, மேல்குடைவரை மண்டபத்தில் இடம் பெறும் மூர்த்தியைக் குறிப்பிடலாம். சோழர் காலத்தில் செப்புத் திருமேனிகளும் தோன்றின.

வின்மதனை வென்ற தயா விழியே என்ற வரி மன்மதனை எரித்த சிவனின் மதனாந்தகமூர்த்தி சிற்பத்தைக் காட்டுகிறது.

சோழ மன்னன் முதலாம் இராசேந்திரன் கட்டிய கங்கைகொண்ட சோழீசுவரர் ஆலயத்தில் மிகச் சிறந்த சிற்பம் இடம்பெறுகிறது. சில கோயில்களில் திருச்சுற்றிலும் இடம்பெறுகிறது. சோதியானணி பூதியானுமைபாதியான் என்ற வரியும் உமையொரு வடிவத்தைக் காட்டுகிறது.

'வின்மாரனுயிர் கொண்ட விழிக்கென்பார்' என்ற வரியும் மதனாந்தக மூர்த்தியை வெளிக்காட்டுகிறது. ஒன்ர்தம் பொன் எயில் தீமடுத்தது என்ற வரி செம்பொன், வெண்பொன், கரும் பொன்னால் உருவாக்கப்பட்ட மதிலை, தீயினால் அழித்த சிவனின் திரிபுராந்தக மூர்த்தி வடிவத்தைக் காட்டுகிறது. சோழ மன்னன் முதலாம் இராசராசனால் கட்டப்பட்ட தஞ்சை பெரிய கோயிலில் கட்டிடங்களின் மேல்பகுதியில் இரண்டு கைகளுடன் காட்சி தரும் திரிபுராந்தக சிற்பங்களைக் காணலாம். தஞ்சைக் கலைக்கூடத்தில் நான்கு திருக்கரங்களைக் கொண்ட செப்புத் திருமேனிகள் இடம்பெறுகின்றன. முயலகன் மீது காலூன்றி காட்சிதரும் திரிபுராந்தகமூர்த்தி செப்புத் திருமேனியும் கலைக்கூடத்தில் இடம்பெறுகிறது.

'உருவலனருவல னொருவன் மற்றிருவருக்
கரியவனென்ன வுணர்ந்தறைகுநரறைக'

என்ற வரிகளில் பிரமன், விஷ்ணுவிற்குப் புலப்படாது சோதியாய்க் காட்சி கொடுத்த இலிங்கோத்பவமூர்த்தி காட்டப் படுகிறது. புதுக்கோட்டை திருமையம் குடைவரை சிவன் கோயிலில் இரு கைகளுடன் காட்சிதரும் இலிங்கோத்பவ மூர்த்தி கற்சிற்பத்தைப் பார்க்கலாம். ஒரு கை வரதமுத்திரை காட்டியும், மற்றொன்று இடுப்பையும் பிடித்திருக்கின்றது. இலிங்கத்தின் இருமருங்கிலும் தீப்பிழம்புகள் இடம்பெறுவது இச்சிற்பத்தின் சிறப்பு அம்சமாகும். சோழ மன்னன் முதலாம் பராந்தகன் காலமுதல் கருவறையின் பின்புறச் சுவற்றில் இச்சிற்பம் இடம் பெறுமெனலாம். பிரம்மாவைக் குறிக்க அன்னமும் விஷ்ணுவைக் குறிக்க பன்றியும் இலிங்கத்தின் மேல், கீழ் பகுதிகளில் முறையே இடம்பெறுமெனலாம். உலோகத்தாலான இலிங்கோத்பவ மூர்த்தி, தமிழகக் கோயில்களில் எங்குமே இடம்பெறவில்லை புலியூர் மன்றினொலிகழன் மிழற்றப்பரம நாடகமிருவரைக் காட்டு என்ற வரிகள், சிவனின் திருநடனத்தை, வியாக்ரபாதர், பதஞ்சலி முனிவர்கள் கண்டு வணங்கினார்கள் என்று காட்டு

கிறது. சிற்பங்களில் நடராசர் வடிவத்துடன் இரு முனிவர்களின் உருவங்களைப் பார்ப்பது மிக அரிதாகும். சீர்காழி, பிரம்ம புரீசுவர ஆலயத்தில் ஒரு மண்டபத் தூணில் மட்டுமே வியாக்ரபாதர் காட்டப்படுகிறார். கல்வெட்டில் இம்மூர்த்தி இலிங்கபூர்ண தேவரென்றும் அழைக்கப்படுகிறார்.

தஞ்சைப் பெரிய கோயில், கங்கைகொண்ட சோழபுரம் கங்கைகொண்ட சோழீசுவரர் ஆலயத்திலும், நடராசர் சிற்பத்தின் அருகில் காரைக்கால் அம்மையார் மட்டுமே காட்டப்பட்டிருக்கிறார்.

'வரத்திற் பிறப்பொன் றருள் கெனினும் வள்ளல்'

கரத்திற் கபாலத்தை என்ற வரியில் கபாலத்தைத் தாங்கிய பைரவமூர்த்தி உணர்த்தப்படுகிறது. கோயில்களில் திருச்சுற்றில் இச்சிற்பம் இடம்பெறும் நான்கு திருக்கரங்களிலொன்றில் கபாலம் இடம்பெறும். சோழர் காலத்திய செப்புத் திருமேனி யொன்று தஞ்சைக் கலைக்கூடத்தில் இடம்பெற்றிருக்கிறது.

'திருமுடியிற் கண்ணியு மாலையும் பாம்பு
திருமார்பிலாரமும் பாம்பு – பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொரு புயத்திற் கங்கணமும் பாம்பு'

என்ற வரிகள் பிச்சாடணமூர்த்தியைக் குறிப்பதாகக் கருதலாம். சோழர் காலச் சிறந்த எடுத்துக்காட்டாகத் தஞ்சைக் கலைக் கூடத்தில் இடம்பெறும் செப்புத் திருமேனியைக் குறிப்பிடலாம். இம்மூர்த்திக்கு மட்டுமே பாம்பு ஆடையாகவும் அணிகலன் களாகவும் பயன்படுகிறது.

'கூற்றங்குமைத்த குறைக்கழற் கால் கும்பிட்டு' என்ற வரி சிவனின் காலாந்தகமூர்த்தி வடிவத்தைக் காட்டுகிறது. திருக்கடையூர் அமிர்தகடேசுவரர் ஆலயத்தில் கருவறையினுள்ளே இச்சிற்பத்தைப் பார்க்கலாம். தஞ்சைப் பல்கலைக்கழக அருங்காட்சியகத்திலும் இச்சிற்பம் இடம்பெறுகிறது. இச்சிற்பம் குறித்துத் தேவாரப் பாடல்களில் ஏராளமான செய்திகளுமுண்டு.

'காளி யாடக் கனலுமிழ் கண்ணுதன்
மீளியாடுதல் பாருமே
மீளி யாடல் வியந்தவ டோற்றெனக்
கூளி பாதக் குனிப்பதும் பாருமே பாருமே'

என்ற வரிகளில் நடராசனின் திருநடனத்துடன் காளியும் கூளியும் நின்றாடுவதை விவரிக்கிறார். இக்காட்சியைச் சிற்பமாகக் கங்கைகொண்ட சோழீசுவர ஆலயத்தில் பார்க்கலாம். இச்சிற்பத்தின் அடிப்பாகத்தில் காரைக்கால் அம்மையாரும் இடம்பெறுகிறார். முருகப் பெருமான் மயில் மீதிருந்து காட்சியைக் களிக்கிறார். விநாயகரும் உடன் இருக்கிறார்.

'வைய மீன்ற மறைக் கிழவனுங்
கொய்துழாய் மௌலிக் குணக் கொண்டலுந்
தருவார் நீழற்றா வேந்தனும்
வான்முறை தாழ்ந்து வாழ்த்திசைப்ப
மைதீருணர்வின் முழமுனிவனும்
பையரவர்கம் பணிந்திறைஞ்ச
விமை யம்பயந்த விளங்கொடியொடுந்
தமனியப் பொதுவிற் றாண்டவம்புரி
தில்லைவாண நின்'

என்ற வரிகளில் நடராசனின் திருநடனத்தை பிரம்மா, திருமால், இந்திரன், வியாக்ரபாதர், பதஞ்சலி முனிவர், உமாதேவியர் கண்டுகளிக்கும் காட்சியைக் காட்டுகிறார். ஆனால் காட்சி விளக்கப் படவில்லையெனலாம்.

'கடித்தாமரைக் கண்ணன் விழிக் கமலந்தர
வடித்தாமரைச் சுடர்ப்பரிதியையளித் தருளினை-அதனால்
புதுமலர்ப் பொழிற்றில்லை வாண
வுதவியின் வரைத்தோ வடிகள் கைம்மாறே'

என்ற வரிகளில் சக்கராயுதத்தைப் பெறுவதற்காக திருமால் தனது கண்ணையே மலராகச் சிவனுக்குச் சாத்தியதும் சிவன் தனது பெருவிரலால் நிலத்தைக் கீறி சக்கரத்தைக் கொடுத் தருளினார் என்ற புராணச் செய்தியுமுண்டு. இக்காட்சியை வெளிப்படுத்தும் புடைப்புச்சிற்பம் கங்கைகொண்ட சோழபுர ஆலயத்தில் இடம் பெறுகிறது. இச்செய்தியைப்

பங்கயமாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்களிடந்தரன் சேவடி மேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவி நாந் தோணோக்க மாடாமோ'

என்று திருவாசகம் காட்டுகிறது.

'இலவிதழ்மதிலுத லிரதியொ புரதம் துலைவற' என்ற வரிகளில் இரதியின் அழகு விவரிக்கப்படுகிறது. உதட்டிற்கு முருக்கம்பூவும், நெற்றிக்கு சந்திரனும் ஒப்புமை காட்டப்படுவது குமரகுருபரனின் கலை இரசனையை காட்டுகிறதெனலாம். கோயில் தூண்களில் மன்மதன், இரதி சிற்பங்கள், பாண்டியர் காலத்திலும் பின்னருமே தோன்றின. நாயக்கர் காலத்திலும் எழிலார்ந்த சிற்பங்களைப் பார்க்கலாம். திருநெல்வேலி நெல்லையப்பர் தூண் சிற்பங்களும் கிருஷ்ணாபுரம் சிற்பங்களும் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

"எழின் மலரின் மிசையோய் நீ
அரவணையிற்றுயின்றோய் நீ - ஆலின்கீழ்
அமர்ந்தோய் நீ"

என்ற வரிகளில் அடிகளார் சிவனைப் பிரமனாகவும், திருமாலா கவும், தட்சிணாமூர்த்தியாகவும் காட்டுகிறார். காஞ்சிபுரம் கைலாசநாதபுரம் ஆலயத்தில் இடம்பெறும் தட்சிணாமூர்த்தி சிற்பமே முதன்மைச் சிற்பமாகும். சங்க இலக்கியங்களில் ஆலமர்ச் செல்வன் என்று அழைக்கப்படுகிறார்.

'மலைக்கோடு விளையாடும் பருவத்து மற்றுத்தன்
கொலைக்கோடு பட்டவெனக் குலைந்து மனங்கலங்குமால்'

என்ற வரிகளில் சிவனது மார்பில் பார்வதியின் முலையாகிய கொம்பு பதிந்ததைக் காட்டுகிறது. காஞ்சிபுரம் ஏகாம்பரேசுவரர் கோயில் இலிங்கத்தில் இக்காட்சி புடைப்புச் சிற்பமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

"தாமடிகளின் மறந்து மறித்தலைகொண்டார் கலைவல்ல
மாமடிகள் யாமடிகள் மறவாமை யுடையமே"

என்ற வரிகளில் தக்கன் ஆட்டுத்தலையைப் பெற்ற நிகழ்ச்சி எடுத்துக் காட்டப்படுகிறது. ஆட்டுத்தலையுடன் தக்கன் சிற்பங் களும் கோயில்களில் இடம்பெறுகிறது. தக்கன் ஆட்டுத்தலை பெற்ற செய்தியை,

"சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன் றன்வேள்வியின்
யிந்திரனைத் தோணெரித் திட்டெச்சன் றலையரிந்
தந்தரமே எல்லுமலர் கதிரோன் பற்றகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டுகந்த

செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்கா ணம்மானாய்''

என்று திருவாசகமும்,

''செருக்கொடுஞ் சிவநிந்தை செய் வாய்க்கலை தீர்வு
விரிக்கினென்று முன் சிறுவிதி தலையற வெட்டி
யெரிக்கு நல்கி நிந்தனை செயா மறிமுக மயைத்துத்
தருக்கி நின்றவன் வீரன் வந்தொரு புடை சார்ந்தான்''

என்று பிரபுலிங்கலீலை வரிகளும் எடுத்துக் காட்டுகிறது.

''கம்பக் கரடக் களிற்றின் கபாயணிந்த
வம் பொற்புயத்தார்க் கமைந்ததா – லம்பை
முலையாளைக் கோடணிந்த மார்பு''

என்ற வரிகள் ககசம்ஹாரமூர்த்தியைக் காட்டுகிறது.

சிவனை வெண்ணீற்றன், பூங்கொன்றைக் கண்ணியான், செஞ்சடையான், வெண்ணீற்றன், கொம்பேறுடையான், கறை கண்டன், ஆடல்செய் சோதியான், அம்பலக்கூத்தன், அணிபூதி யான், உமைபாதியான், முக்கண் நக்கர் என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். மறைக்கிழவன் என்ற சொல்லால் பிரம்மாவையும், தார்வேந்தன் என்ற சொல்லால் இந்திரனையும் கமலலோசனை குணக்கொண்டல் என்ற சொற்களால் திருமாலையும், மழமுனிவன் என்ற சொல்லால் வியாக்கிர பாதரையும் குறிப்பிடுகின்றார்.

குமரகுருபரர் காலக்கட்டத்தில் உமையொருபாகன், கங்காதரமூர்த்தி, மதனாந்தகமூர்த்தி, திரிபுராந்தகமூர்த்தி, இலிங்கோத்பவமூர்த்தி, பைரவமூர்த்தி, விஷ்ணு அனுக்கிரக மூர்த்தி, ஆலமர்ச்செல்வன் போன்ற சிவனின் வடிவங்கள் வழிபாட்டில் முக்கியத்துவம் பெற்றிருந்தன என்ற உண்மை இக்கட்டுரை மூலம் வெளிக்கொணரப்படுகிறது.

# மாலையில் தகவல் தொடர்பு நுட்பம்

கி. இராசா, திருச்சி

மாலை எனப் பெயர் பெற்ற இலக்கிய வகைகள் தமிழில் பல உள. 'ஏதேனும் ஒரு பொருள் பற்றிப் பல பாடல்கள் தொடர்ந்து அமைந்தபோது அவற்றிற்கு மாலை என்ற பொதுப் பெயர் வழங்கப்பட்டது' என்பர். பாட்டியல் நூல்கள் சொல்லும் மாலை இலக்கிய வகைகளுக்குரிய இலக்கணத்தைக் கொண்டு யாப்பு அடிப்படையிலான மாலை வகை, அமைப்பு அடிப்படையிலான மாலை வகை, எண்ணிக்கை அடிப்படையிலான மாலைவகை, பொருள் அடிப்படையிலான மாலை வகை எனப் பல்வேறு நோக்கில் பிரித்துப் பார்க்க இயலும். இவ்வாறு பார்க்கும்போது குமரகுருபரர் பாடிய சகலகலாவல்லி மாலை, பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கணத்தில் அடங்காமல் பொதுவாக நாமகளின் புகழையும், அவள் அருளை வேண்டும் நோக்கத்தையும் மாலையாக அமைத்துப் பாடிய நூல் என்பது புலனாகின்றது.

இன்னொரு நோக்கிலும் சகலகலாவல்லி மாலை ஒரு புதுமை இலக்கிய வகையாகத் திகழ்கிறது. யாரேனும் ஒரு தலைவரின் / வள்ளலின் அருட்பார்வையை வேண்டியோ, இறைவனின் அருள் நலத்தை வேண்டியோ பாடப்படும் இலக்கியங்கள் முறையீடு, விண்ணப்பம், வேட்டல் என்று பெயர் பெறுகின்றன. இதற்குச் சான்றுகளாக பட்டினத்துப் பிள்ளையாரின் முதல்வன் முறையீடு, வள்ளலாரின் முறையிட்ட பத்து, இரந்தவிண்ணப்பம், மருண்மாலை விண்ணப்பம், வேட்கை விண்ணப்பம், பெருவிண்ணப்பம், சிறுவிண்ணப்பம், திரு. வி. க. வின் கிறித்துவின் அருள்வேட்டல், திருமால் அருள்வேட்டல், ஆகிய நூற்களைக் கூறலாம். மேற்கூறப்பட்ட முறையீடு, விண்ணப்பம், வேட்டல் ஆகிய இலக்கிய வகைகளின் நோக்கமும், சகலகலாவல்லி மாலை இலக்கியத்தின் நோக்கமும் ஒன்றே. ஆயினும் இங்கு இந்நோக்கத்திற்கேற்ப அடையாளம் காட்டு

கின்ற வகைப் பெயர் இல்லை. அதற்குப் பதிலாக மாலை என்ற பொதுப் பெயரே அமைந்துள்ளது. இம்மாலையில் இடம் பெற்றுள்ள பாடல்களை நுணுகிப் பார்க்குமிடத்து அவற்றின் நோக்கம், இது முறையீடு, விண்ணப்பம், வேட்டல் ஆகிய இலக்கிய வகைகளின் இயல்புகளைக் கொண்டதாக அமையும் நிலையைக் காட்டுகிறது.

சகலகலாவல்லிமாலை, பத்துப் பாடல்களால் ஆக்கப்பெற்ற சிறுநூல். ஆனால் அதன் வரலாறும் வலிமையும் மிகப் பெரிது. இந்நூல் காசித்தரணியில் பாடப்பெற்றது. ''காசிக்குச் சென்று அங்குள்ள முகமதிய மன்னன் ஒரு சர்வதேச மாநாடு கூட்டியிருந்தபோது அதில் அந்நாட்டுமொழியில் தம் சைவசமய விளக்கத்தை விரிவுரையாற்றி அனைவரையும் தம்வசப்படுத்தும் நோக்கத்தோடு சுவாமிகள் எல்லா மொழிக்கும் தெய்வமாகிய சரசுவதியை இந்நூலால் துதித்துத் தேவியின் அருள்பெற்று அவ்வண்ணமே இந்தச் சமயமாநாட்டில் பேசி மன்னனைத் தம்வசப்படுத்தினார்' என்பர். இந்த வரலாறு குறித்த புராணக் கதைகள் (தொன்மங்கள்) மூன்று வகைகளாக வழங்கி வருகின்றன.

சகலகலாவல்லி மாலையில் குமரகுருபரர், நாமகளின் அருள் நலம் வேண்டிப் பாடுகிறார். ஒவ்வொரு பாடலிலும் முதற் பகுதியில் தம்முடைய வேண்டுதலை வைக்கிறார். இரண்டாம் பகுதியில் கலைமகளின் புகழை ஓதுகிறார். அருள்தருவோரை வேண்டுவது மட்டும் போதாது; அவரைத் தம்வசப் படுத்தவேண்டும் – என்ற தகவலியல் நுட்பம் சகலகலாவல்லி மாலையில் வெளிப்படுகின்றது. இந்த நுட்பத்தை நாம் சீட்டுக் கவியில் உணரலாம். புறநானூற்றுள் கடைநிலைத் துறை யிலமைந்த பாடல்களில் இதனைக் காணலாம். சிற்றிலக்கியங் களுள் தூதுப் பாடல்களிலும், பிள்ளைத்தமிழிலும் (அம்புலிப் பருவம்) இதன் செல்வாக்கினைப் பார்க்கலாம். தூதுப் பாடல் களில் தூது செல்ல விடுக்கும் பொருளின் சிறப்பைப் பாடுவ தென்பது முக்கியமானதொரு கூறாகும்.

திருநறையூர் நம்பி மேக விடு தூதுவின் ஆசிரியர், தூது விடுக்கப்படும் மேகத்தின் புகழைப் பின்வருமாறு பாடுகிறார்.

''ஊனாய் உடலாய் உறுதுணையாய் தெய்வமாய்
ஆனா மருந்தாய் என் ஆருயிராய் – ஆனாத

நெஞ்சமாய்க் கண்ணாய் நினைவாய் வினையேற்குத்
தஞ்சமாய் நின்ற தனி முதலே'

இதே போன்று கிளியைத் தூது விடுக்கும் அழகர் கிள்ளை விடு தூதின் ஆசிரியர், கிளியின் புகழை,

"... ... ... சுத்தமுறும்
ஐந்து பூதத்தி லொன்றே யானபடை நான்கிலொன்றே
முந்துமுத லானபொருண் மூன்றி லொன்றே – வந்த
இருபயனி லொன்றே..."

என்று பலபட மொழிகின்றார்.

சகலகலாவல்லி மாலையிலும் நாமகளின் அருள் வேண்டும் குமரகுருபரர் அவளைப் புகழ் மாலையில் அணி செய்கிறார்.

"... ... ... சக மேழுமளித்
துண்டா னுறங்க வொழித்தான்பித்
தாகவுண் டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகல கலாவல்லியே" (1)

என்றும்,

"... ... ...வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமும்
தொண்டர்செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடலே
சகல கலாவல்லியே" (4)

என்றும்,

"... ... ...எழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங் காலு மன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்
சகல கலாவல்லியே" (6)

என்றும்,

"... ... ...படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல கோடியுண்
டேனும் விளம்பிலுன்போல்
கண்கண்ட தெய்வ முளதோ
சகல கலாவல்லியே" (10)

என்றும்

ஒவ்வொரு பாடலிலும் நாமகளின் புகழ் பரவுகிறார். புகழ் சொல்லுதல், போற்றிப்பரவுதல் என்பது துதிப்பாடல்களின் முக்கியமான கூறாகும். இத்தகு பாடல்கள் அமைந்த வகைகளைப் போற்றிப் பாடல்வகை, தோத்திரப் பாடல்வகை, துதிப்பாடல் வகை. கவசம், காப்பு என்பர். இவ்வாறு முன்பே சொன்னதுபோன்று சகலகலாவல்லிமாலை இலக்கியம் முறையீடு, விண்ணப்பம், வேட்டல் போன்ற இலக்கிய வகைகளின் பண்புகளை மட்டுமல்லாது போற்றிப்பாடல், காப்பு போன்ற இலக்கிய வகைகளின் பண்புகளையும். கொண்டிருப்பது நினைத்துப் பார்க்கத் தக்கது.

சகலகலாவல்லிமாலை பாடப்பெற்ற வரலாறும் தகவல் தொடர்பினையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. 15ஆம் நூற்றாண்டில் (சற்றேறக்குறைய 1650–களில்) ஷாஜகானின் மூத்தமகன் தாராஷீகோ, தன் ஆட்சியிலிருந்த காசியில் சர்வ சமய மாநாடு ஒன்றைக் கூட்டினான். அம்மாநாட்டில் தமிழர்கள் பலர் இருந்தனர். ஆயினும் பிறமொழிகளை குறிப்பாக இந்துஸ்தானியைச் சார்ந்தவர்கள் பெரும்பான்மையாக இருந்தார்கள். இந்துஸ்தானி அப்பொழுது அரசாங்க மொழியாக (Official language) செல்வாக்குப் பெற்றிருந்தது. எனவே இந்துஸ்தானி மொழியிலேயே தாராஷீகோவிடம் உரையாடி அவன் அன்பைப் பெற்று சைவசமயத்தின் பெருமையை உணர்த்த வேண்டும் என்று குமரகுருபரர் விழைந்தார். தகவல் தொடர்புக்குத் தடையாக உள்ள இந்துஸ்தானியைக் கற்றுத் தெளிய உறுதி பூண்டார். இதற்குத் தெய்வத்தின் – சிறப்பாக நாமகளின் அருள் இன்றியமையாதது என நம்பினார். இந்நம்பிக்கையின் வெளிப்பாடே சகலகலாவல்லிமாலை (இந்நூல் தொடர்பான புராணச் செய்திகள் வேறொரு ஆய்வுக்கு உரியவை).

இந்நூலில்,

"நாடும் பொருட்சுவை சொற்சுவை
தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்
வாய் ... ... ... ... ... ..." (2)

என்றும்,

''தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த
கல்வியும் சொற்சுவை தோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய் ... ... ... ... ... ...'' (4)

என்றும்,

''பண்ணும் பரதமும் கல்வியும்
தீஞ்சொற் பனுவலும் யான்
எண்ணும் பொழுதெளி செய்தநல்
காய் ... ... ... .... ... ...'' (6)

என்றும், ஒவ்வொரு பாடலிலும் நாமகளை வேண்டுகின்றார்.

வாக்குநலமும், அவ்வாக்கினைக் கேட்பார் உள்ளத்தில் சென்று தைக்குமாறு சொல்லவல்ல கலைநலமும் நல்கவேண்டும் என்று நாமகளைத் துதிக்கிறார். இவ்வாறு தான் (Source) சொல்லுகின்ற தகவல் (Message), சரியான முறையில் (Channel), கேட்போரைச் (Receiver) சென்றடைய வேண்டும் என்ற விழைவும் வேட்கையும் இப்பாடற் பகுதிகளில் புலனாகின்றன. இறையனார் அகப்பொருள் உரைகாரர் சொல்லுகின்ற ஈவோன் (ஆசிரியன்: Source), கொள்வோன் (மாணவன்: Receiver), ஈதல் இயற்கை (ஆசிரியர் சொல்லும் முறை: Channel), கோடல் மரபு (மாணவன் கேட்கும் பாடம்: Message) எனும் தகவல் தொடர்பு நுட்பத்தின் தொடர்ச்சியாக சகலகலாவல்லி மாலை அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

சகலகலாவல்லி மாலையில் இடம் பெற்றுள்ள பாடல்களின் முற்பகுதி கேட்போர் உள்ளம் தைக்குமாறு வாக்குச் செல்வத்தை அருள வேண்டும் என்ற விண்ணப்பமாகவும், பிற்பகுதி, யாரிடம் முறையிடுகின்றோமோ அவருடைய ஆற்றலை வியந்துபோற்றி அவரைத் தம் வயப்படுத்தும் புகழ்மாலையாகவும் அமைந்துள்ளது. இவ்வாறு குமரகுருபரர் பாடிய சகலகலாவல்லி மாலையின் பாடல்கள் தகவல் தொடர்பு நுட்பத்திற்கு எடுத்துக்காட்டு இலக்கியமாய் விளங்குகின்றது.

# குமரகுருபரர் போற்றும் கங்கை

த. கலா, தஞ்சாவூர்

உலக இயக்கத்துக்கும் உயிர்களின் இயக்கத்துக்கும் காற்றைப் போலவே நீரின் இன்றியமையாமையும் பெரிதாகும். இவ் வுண்மையை மனதிற் கொண்டே மனிதர்கள் நீரின் மூலங்களான மேகம், ஆறு, கடல், குளங்களைப் பெரிதும் மதித்துப் போற்றுவ ராயினர். சிறப்பாக கடல், குளம், ஏரி போன்ற நீர்நிலைகளுக்கும் ஆறுகளே மூலமாக விளங்குகின்றன. அதனால் ஆறுகளைத் தெய்வத்துடன் இணைத்துப் போற்றி வருகின்றனர். தெய்வத் துக்கு இணையாகவும் தெய்வமாகவும் ஜீவநதிகளைப் போற்றும் மரபு உலகச் சமயங்கள் பலவற்றிலும் காணப்படுகிறது. கங்கை, சிந்து, காவிரி போன்ற இந்திய நதிகளைப் போலவே, தேம்ஸ், நைல் போன்ற நதிகளும் வணக்கத்திற்கு உரிய நதிகளாகும். இவ்வகையில் பாரத மக்களும் சென்றாடும் தீர்த்தங்களை யெல்லாம் இறைவனாகவே போற்றி வழிபடுகின்ற மரபில் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றனர். இக்கட்டுரையில் குமரகுருபரர் தம் பாடல்களில் கங்கைப் பேராற்றை எவ்வா றெல்லாம் போற்றுகிறார் என்பதைக் காணலாம்.

**கங்கைப் பேராறு**

பாரதம் நிலவளம், நீர்வளம், மலைவளங்களால் நிறைந்த நாடாக உள்ளது. தத்துவ வளர்ச்சிக்கும் சமய உணர்வுக்கும் அடித்தளமாக அமைந்துள்ளது. பல்வேறு கலாச்சாரம், பல்வேறு மொழி, பல்வேறு இனங்களால் வேறுபட்டிருக்கிறது என்றாலும், நதிகளைப் போற்றுவதில் வேற்றுமையில் ஒற்றுமை காண்பது போல் எல்லா மக்களும் ஒன்றுபட்டு நிற்பதைக் காணமுடிகிறது. இங்கே பல்வேறு நதிகள் தோன்றி வளமூட்டுகின்றன. சிறியதும் பெரியதுமாக, எப்போதும் ஓடும் ஜீவ நதியாக, அவ்வப்போது ஓடும் காட்டாறுகளாகப் பல நிலைகளில் அவற்றைக் காணலாம். ஆயினும் சிறப்புக்குரிய நதிகளாக ஏழு நதிகளைப் போற்றியுள்ள மரபை ஒரு சுலோகம் எடுத்துக் காட்டுகிறது. கங்கை, யமுனை,

கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவிரி என்பனவே அவை. ஒவ்வொரு நாளும் நீராடும்போதும் இந்நதிகளின் பெயர்களைச் சொல்லி நீராடுவது இந்தியர்களின் கடமையாகக் காணப்படுகிறது. இச்சுலோகத்தில் முதன்மையானதாகக் கருதப் படும் கங்கைப் பேராற்றின்மீது இந்திய மக்களுக்கு எவ்வளவு மரியாதை! எத்தனை ஈடுபாடு! எத்தனை பக்தி! எத்தனை மதிப்பு!

சென்ற ஆண்டு நாங்கள் வட இந்தியப் பயணம் மேற் கொண்டபோது கங்கைநதி தோன்றும் இடம் முதலாகக் காசி வரை கங்கையைத் தொடர்ந்த நிலையில் பயணித்தோம். வழி நெடுகிலும் சமய இன வேறுபாடுகளைக் கடந்து கங்கா மாதாவைப் போற்றி நீராடி வழிபடும் இந்திய மக்களின் நம்பிக்கையை வியந்தோம். அரித்துவார் போன்ற இடங்களில் கங்கை நதிக்குத் தூபதீப ஆராதனை சோடசோபசாரம் செய்து நாளும் மலர் வழிபாட்டை நிறைவு செய்கின்ற லட்சோப லட்ச மக்களின் பக்தியுணர்வைக் கண்டு மெய்சிலிர்த்த நேரங்கள் பல. கிராம மக்கள் சாதாரண தண்ணீரைக் கூட கங்கா தீர்த்தமாக் – தம் வீட்டுக் கிணற்றைக் கூட கங்காநதியாகப் பாவிப்பதன் நோக்கம் அப்போதுதான் புரிந்தது. பேருந்தில் அவ்வப்போது இசைக்கும் பாடல்களில் 'ஓ...கங்கையே, நீ திருமாலின் பாதத் தினின்று தோன்றினாய். ஆனால் உன் மடியில்தான் திருமாலும் வசிக்கின்றார் இது என்ன விந்தை! உன்னால் உலக உயிர்கள் அனைத்தும் வாழ்கின்றன. நீ நதிகளின் இராணி. உன் பாதங் களில் சரணடைந்தோம். எங்கள் பாவங்களைப் போக்கி நலம் பல செய்வாயாக. உன் மகத்துவம் ஈடு இணையற்றது போன்ற கருத்துகள் பளிச்சிட்டன. ஆம் கீதையிலும் கண்ணன், நதிகளில் நான் கங்கையாக இருக்கிறேன்' என்றல்லவா மொழிந்திருக்கிறார். எனவே கங்கைப் பேராறு நதிகளின் இராணியாகத்தான் திகழ் கிறாள் என்பதைக் கண்கூடாக உணர்ந்தோம். எப்போதோ நீராடி மகிழ்ந்த என் போன்ற சாதாரணமானவர்க்கே கங்கையின் உயர்வும் சிறப்பும் புரியும்போது கங்கைக் கரையிலேயே வாழ்ந்த காசிவாசி தவஞானியரான குமரகுருபரர்க்குக் கங்கையின் மீது அளவற்ற பக்தியன்றோ, காதலன்றோ இருந்திருக்கும்.

### குமரகுருபரரும் நதிகளும்

குமரகுருபரர் தாமிரபரணிக் கரையிலே தோன்றியவர். வைகைக் கரையிலும் காவிரிக் கரையிலும் தம் உடல், உணர்வு,

ஞானத்தை வளர்த்துக் கொண்டவர். காசி மாநகரில் கங்கைக் கரையில் திருமடம் அமைத்து அங்கேயே முத்திபெற்றவர். எனவே தோற்றம் முதலாக அவரது வாழ்வின் சிறந்த கட்டங்களெல்லாம் ஏதோ ஒரு நதிக்கரையிலேயே அமைந்திருக் கிறது. அந்தக் கட்டங்களையெல்லாம் அவர் மகிழ்வுடன் நினைவு கூர்வது போல அவர்தம் பாடல்களில் அந்நதிகளைப் பெரிதும் வருணித்துக் காட்டியுள்ளார்.

இறைவன் வைகை மண்ணைச் சுமந்தார். இக்காட்சியைக் குமரகுருபரர் வேறொரு நயத்துடன் காட்டுகிறார். சிவ பெருமானே, 'நீ கங்கையாற்றைச் சுமந்தாலும் நனையாமல் இருக்கின்றாய் அதனால்தான் வைகையிலும் பொருநை நதியிலும் படிந்து நனைந்தாயோ?

விண்ணாறு தலைமடுப்ப நனையாநீ விரைபொருநைத்
தண்ணாறு குடைந்துவையைத் தண்துறையும் படிந்தனையே
வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் திருமுடிமண் சுமந்ததே

(மதுரைக் கலம்.-1)

காவிரி நதியை, சேல்பாய் தடம்பணை யுடுத்த காவிரி தெள்ளு தமிழ் விரிபுனற் காவிரி, கழனிவிரி காவிரி, தெள்ளுபுனற் காவிரி, தெய்வநதி, பொன்னி நதி எனப் போற்றுகின்றார். ஓரிடத்தில் காவிரியில் உள்ள வளமான வாளை மீன்கள் துள்ளிக்குதித்து இறைவன் சடைமுடி மேலுள்ள நிலவில் விழுகின்றது எனவும் அதனால் நிலவிலிருந்து அமுத தாரகைகள் ஒழுகிக் காவிரியில் கலக்கின்றன. அதனால் காவிரியும் வெண்ணிறம் பெற்று கங்கையாகின்றது என்று கற்பனை செய்கின்றார்

(முத்துக். பிள்ளைத்: 8)

மீனாட்சியம்மை குறத்தில் (32) வைகைப் பேராறு மட்டும் கடலில் சேராது நிற்கும் என்பதை சுட்டிக் காட்டுகின்றார்.

'பல நதிகள் புணர்ந்த நதிபதியை யணையாத வைகைக் குலநதித் தண்டுறைச் செல்விபேரைச் சொல்லாய் பாட நான்' பல நதிகளும் கடல்தலைவனைச் சேர்ந்துவிட்டதால் அவன் பரத்தன், அதனால் அவனுடன் சேரமாட்டேன் என்று உறுதி யாக இருக்கிறதாம் வைகைக் குலமகளாம் பேராறு, இத்தகு சிறப்பினால்தான் மீனாட்சியம்மையும் அத்துறையின்கண் வந்து மகிழ்கின்றாளாம்.

கங்கையில் அதன் புனிதத் தன்மையை வியந்து தேவமகளிர் பலரும் வந்து நீராடி மகிழ்வர். அவர்கள் ஒளிவடிவினர் அதனால் வெண்ணிறமானவர்கள். இக்காட்சியைக் காவிரிக் கரையிலும் காண்கிறார் நம் அடிகளார். காவிரிக் கரையில் கூட்டம் கூட்ட மாக நீராடி மகிழும் அன்னப்பறவைகளைப் பார்த்து நீங்களும் தேவமகளிர்தான் போலும் என்று வியக்கிறார்.

பின்னற் றிரைச்சுர நதித்தன் டுறைத்தேவர்
　　பேதைக் குழாங்க ளென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
　　பெருந்தண் டுறைச்சிறை விரித்து
அன்னக் குழாந்தி ளைத்தாடு சோணாடு (முத்.பிள். 420)

இவ்வாறு அருவி நதிகளை வருணித்து மகிழ்கின்ற இடங்களி லெல்லாம் தம் கற்பனைச் சிறகால் மகிழ வைக்கும் நம் அடிகளார் அவற்றிற்கிடையே தத்துவக் கருத்துகளைச் சமய நோக்குடன் வழங்குவதை உணரலாம்.

பொன்னும் முத்தும் சொரியும் வெள்ளருவிப்
　　பொதிய மலைக் குறத்தி நானம்மே.

அங்கயற் கண்ணம்மை திருவருள் சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை என்னம்மே
(குறம்: 13)

இவ்வாறு குமரகுருபரர் தம் இலக்கியங்களில் நீர்வளம் தொடர்பான பல கற்பனைகளையும் வருணனைகளையும் காப்பிய வளத்துடன் குறிப்பிடுவதை நாம் காணமுடிகிறது. இவற்றுக்கெல்லாம் முடிமணியாக அவர் கங்கைப் பேராற்றை வியந்து பாராட்டுவதுடன் இறைவனாகவே போற்றியுள்ள சிறப்பைக் காசிக்கலம்பகம், திருவாரூர் நான்மணிமாலை போன்ற இலக்கியங்களில் பரக்கக் காணலாம்.

**கங்கையும் காசியும்**

புனிதப் பேராறு பாய்வதால் காசிநகர் புனிதமடைகிறது. கோடான கோடி மக்களுக்கு ஞானம் வழங்கிய புண்ணிய ஞானபூமியாகக் காசிமாநகரம் தொடர்ந்து விளங்குகிறது. இங்கே இறக்கின்ற சாதாரண உயிர்களுக்குக் கூட சிவபெருமானே வந்து பிரணவப் பொருளை உபதேசித்து முத்திக்கு வழிகாட்டுவாராம். இந்நகருக்கு அவிமுத்தநகர் என்றே பெயர். அதாவது சிவபெருமான் எக்காலத்தும்

நீங்காது உறைகின்ற நகராக இது விளங்குகிறது. இச்சிறப்பி னால் அங்கு சென்ற நம் குமரகுருபரர் நிகழ்த்திய அற்புதங் களும், ஆக்கங்களும் சொல்லில் அடங்கா. வடஇந்தியா சென்றும் தமிழ்மீது அவர் கொண்டிருந்த காதலும் பயிற்சியும் வியக்கச் செய்கிறது. அத்துடன் காசி மாநகர் மீது அவர் கொண்ட காதல் கங்கைப் பேராற்றால்தான் மேலும் மிகுந்ததாகத் தோன்றுகிறது. காசி மாநகர் மீது கலம்பகம் பாடியதோடல்லாமல் பிறதலங்களைப் பற்றிய பாடல்களில் எல்லாம் கங்கையை நினைவு கூர்ந்து ஒப்புமை, உருவகம், பிற அணிகளால் அழகுபடுத்தியுள்ளார். கங்கைப் பேராற்றின் மீது அவர் கொண்ட காதலை அளவிட முடியாது.

இளமையிலேயே துறவு பூண்டு இறைவன் திருவடியையே புணையாகக் கொண்டு இவ்வுலகை, நீக்க விரும்பிய நம் குமரகுருபரர்க்குத் தமிழ்க் கவிதைதான் கைகொடுத்ததாம். இச்சிறப்பை நன்றியுடன் காசிக்கலம்பகத்தில் குறிப்பிடுகிறார். தமிழ்க் கவிதையின் வழியாக இறைவனைப் பிடித்ததாகக் கூறியுள்ளார்.

'எங்கவிதை கொண்டு ஆட்கொண்ட காசிநாதர்' இப்படி இறைவன் ஆட்கொண்டுவிட்டதால் பெருநன்றியுடன் அந்நகரையும் கங்கையையும் போற்றுகிறார். சுந்தரமூர்த்தி நாயனாரின் இனிய தமிழ்க் கவிதைகளைக் கேட்ட திருச்செவி யால் தம் பாடல்களையும் ஏற்றுக் கொண்டதாகக் காசிநாதரை வியக்கின்றார்.

தூது கொண்டும் தமைத் தோழமை கொண்ட
தொண்டர் தண்டமிழ்ச் சொற்கொண்ட குண்டலக்
காது கொண்டு எங்கவிதை கொண்டு
ஆட்கொண்ட காசிநாதர் (36)

தம் தமிழ்க் கவிதைகளைச் சிவபெருமானாம் காசிநாதர் ஏற்றுக் கொண்டதால் அவருக்குத் தலங்கள்தோறும் இருக்கின்ற தெய்வங்களெல்லாம் காசிநாதராகவே காட்சியளிக்கின்றனர். ஆங்காங்கே இருக்கின்ற தீர்த்தங்களும் ஆறுகளும் குளங்களும் கூட கங்கையாகவே காட்சி தருகின்றன.

காணுங் காணு நதிகளெல் லாம்புனற்
கங்கை யேயங் குளதெய்வம் யாவையும்

தாணு வெங்கள் அகிலேச ரேமற்றைத்
தலங்கள் யாவும் தடமதிற் காசியே (17)

தெய்வநதி, சுரநதி இல்லை என்பது இலை ஓர் மருங்கிலே எனும் வள்ளல் நதி, எவ்வறங்களும் உண்டு ஓர் மருங்கிலே, சுரகங்கை ஆயிரமுகக் கங்கை, தெய்வகங்கை, பாகீரதி, மந்தாகினி, வரநதி எனப் பலபட விதந்து அழைத்துக் கங்கையைப் புகழ்கின்றார்.

கங்கை நதி உயிர்களுக்கெல்லாம் பெருவள்ளலாகப் பல வளங்களைத் தருகிறதாம். மக்களுக்கே யன்றிப் பிற உயிர் களுக்கும் ஏன் கடலரசனுக்கும்கூட அவள்தான் உணவு தருகிறாளாம். மக்கள் அனைவரும் திளைத்து நீராடி மகிழ் கின்றனராம். அன்னம், சங்கு வயல், தோட்டம் என அனைத்தும் கங்கையில் மகிழ்கின்றனவாம்.

வள்ளக் கலச முலைக் கங்கையாள் (காசிக். க. 65)

குரைபுனற் கங்கை கரைவழிச் சென்றாங்குத்
திரைசுழித் தெறியும் பொருபுனற் கங்கை (37)

குரைத்த தெண்டிரைக் கங்கைமங் கையர்துணைக்
கொங்கை மான்மதச் சேற்றைக்
கரைத்து இருங்கடல் கருங்கடலாச் செயும்
காசி மாநகர் தானே (78)
குடம்உடைந் ததெென வானின் அங்கண்மடி
மடிமடை திறந்து பொழி
பாலொடும் கொழுமடற் பொதியவந்து
கைதை சொரி சோறு மிட்டணி
திரைக் கையாற்
கடல் வயிற்றினை நிரப்புகின்ற சுரகங்கை (97)

தடமலர்ப் படப்பைத் தண்டலைக்காசி (101)

வளைமுரலும் அவிமுத்த நகர் (100)

அன்னம் இனத்தோடு களிக்கும் அவிமுத்தநகர் (99)

வளங்கனி பண்ணை வயல்சூழ் அவிமுத்தநகர் (62)

சேற்றடிக் கஞ்சமலர் வயற்காசி (60)

செந்தேன் ஒழுகும் காசி (50)

இவ்வாறு காசியையும் கங்கையையும் பலபடப் பாராட்டி மகிழ்கின்றார் நம் அடிகளார்.

காசி மாநகரில் இருக்கும்போது காசியைப் பற்றிய இலக்கியத்தில் கங்கையைப் புகழ்ந்து பாடத்தானே வேண்டும். அது தானே கவியியல்பு. இவ்வாறு நினைவார்க்கு எல்லாம் மாற்றமுரைப்பது போல பிற இலக்கியங்களிலும் கங்கையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் நம் அடிகளார். காவிரியை, வையையாற்றைப் பாடும் போதெல்லாம் கூட கங்கையை நினைத்துப் பாடுகின்றார். சிதம்பரச் செய்யுட்கோவை போன்ற இலக்கண இலக்கிய நூல்களிலும் கங்கையை வியந்துள்ளார்.

நாமப்புனற் கங்கைப் பேராறு (சிதம். 22)

கண்ணுதலான் சடைக்காடு கஞ்சவனம் ஒக்கும்
மற்றவ் வனத்தே குடிகொண்டு வாழும் வெள்ளை
அனமொக்கும் கங்கை (சிதம். 13)

மற்றொரு கற்பனையானது அடிகள் கொண்ட இலக்கிய நயத்திற்கும் கங்கைக் காதலுக்கும் ஒருசேர புகழ்சேர்ப்பதாகும்.

மின்வீழ்ந் தன்ன விரிசடைக் காட்டிற்
பன்மாண் துத்திப் பஃறலைப் பாந்தள்
சிறுமூச்சிற் பிறந்த பெருங்காற்றடிப்ப
விரிதிரை சுருட்டும் பொருபுனற் கங்கை
படம்விரித் தாடும்அச் சுடிகை வாளரவின்
அழற்கண் கான்றஅவ் ஆரழல் கொளுத்தச்
சுழித்துள் வாங்கிச் சுருங்கச் சுருங்காது
திருநுதற் கண்ணிற் றீக்கொழுந் தோட
உருகுமின் அமுதம் உவட்டெழுந் தோடியக்
கங்கை கடுநிரப்பு. (சிதம். 17)

## திரிவேணி

ஆறுகள் ஒன்றுடன் ஒன்று கூடுகின்ற இடங்கள் ஆறுகள் கடலுடன் சேருகின்ற இடங்கள் பல்வேறு காரணங்களால் சிறப்படைகின்றன. காவிரி கடலுடன் இணையும் பூம்புகார் விழா மற்றும் காவிரிப்பூம்பட்டினச் சிறப்பை நாம் நன்கறிவோம். இரண்டாறுகள் கூடுகின்ற இடத்தையெல்லாம் முக்கூடல் என்றே அழைப்பது நம் மரபு. இரண்டு ஆறுகள் இணைகின்ற சுழற்சியால் மூன்றாவதான நீரூற்று ஒன்று

தோன்றிக் கலப்பதாக நம்புகின்றனர். வடக்கே இத்தகு இடங்களைப் பிரயாகை, திரிவேணி என்பர். நந்த பிரயாகை, கர்ணப் பிரயாகை, ருத்ரபிரயாகை, தேவப்பிரயாகை இப்படிப் பல...... அந்த இடங்களிலெல்லாம் பொது வழிபாடு, மங்கல வழிபாடு, நீத்தார் வழிபாடு போன்றவற்றை மேற்கொள்வது சிறப்பானதாகக் கருதப்படுகிறது. இது தொன்று தொட்டு வரும் இந்திய மரபாகும்.

அந்த வகையில் கங்கையும், யமுனையும் கலக்கின்ற அலகாபாத் எனும் இடம் திரிவேணி சங்கமமாகப் போற்றப் படுகிறது. அங்கே இவ்விரண்டு நதிகளுடன் பூமியிலிருந்து சரஸ்வதி எனும் நதியும் வந்து கலப்பதாகக் கூறுகின்றனர். கங்கை வெண்மை நிறம். யமுனை கருமை நிறம், சரஸ்வதியோ செம்மை நிறம். இம்முக்கூடலை இன்றும் கண்டு மகிழலாம். குமரகுருபரர்க்கு இத்திரிவேணி சங்கமத்தில் மிகுந்த ஈடுபாடு. எனவே பல இடங்களில் இச்சங்கமத்தை நினைத்துப் பாடுகிறார்.

சிவபெருமானும் உமாதேவியாரும் முருகனுடன் அமர்ந் திருக்கின்ற காட்சியை சோமாஸ்கந்த வடிவமாகக் கூறுவர். இச் சோமாஸ்கந்த வடிவம் திரிவேணியாகவே நம் குமரகுருபரர்க்குத் தோன்றுகிறது.

> தம்மேனி வெண்பொடியாற் றண்ணளியால் ஆரூரர்
> செம்மேனி கங்கைத் திருநதியே - அம்மேனி
> மானே யமுனையந்த வாணிநதியுங் குமரன்
> தானே குடைவேந் தனித்து
>
> (திருவாரூர் நான்மணிமாலை - 346)

சிவந்த சிவபெருமான் தம் மேனிமேல் பூசிய வெண்ணீற்றால் வெளுத்தமைந்த கங்கை யானார், பச்சை நிறம் கொண்ட பார்வதி யமுனையானாள், சிவந்த குமரனோ சரஸ்வதியாய்க் காட்சி தந்து திரிவேணியாகி விட்டனர்!

திருவாரூர் மாடங்களில் வயிரம் நீலமணி செம்மணி ஆகியன பதிக்கப் பெற்று பொலிவு பெற்று விளங்குகின்றன. இது கூட நம் குமரகுருபரர்க்குத் திரிவேணியை நினைவூட்டுகிறதாம்.

> ஒண்கதிர் வயிரமுந் தண்கதிர் நீலமும்
> சேயொளி பரப்புஞ் செம்மணிக் குழாமும்
> மாயிருள் துரந்து மழகதிர் எறிப்பச்

சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவநீண் மறுகிற் செல்வது கடுப்ப
ஒள்ளொளி ததும்பும் ஒண்தமிழ்க் கமலை (13)

இப்படித் திருவாரூர் வீதிகளில் கூட திரிவேணி சங்கமித்து ஓடுவதாகக் காண்கிறார் நம் அடிகளார்.

வைகைக் கரையில் மகளிர் நீராடி மகிழ்கின்றனர். அவர்கள் குங்குமம் கருநிறமுடைய கத்தூரி வெண்ணிறமுடைய பச்சைக் கற்பூரம் இவற்றைப் பூசிக் குளிக்கின்றனர். அவை ஒன்றாகக் கரைந்து வைகையில் ஓடுவது திரிவேணி ஓடுவதாகத் தோன்றுகிறதாம்.

கண்ணாறு குழலியர் குடக்கொங்கை பொங்குலிசங்
களமுங் கத்தூரியும்
கற்பூரமும் ஒக்கக் கரைந்தோடி வாணியும்
காளிந்தியுங் கங்கையாம்
விண்ணாறு மளவலாய் விளையாடு புதுவகை
(மீனாட். பிள். 86)

இவ்வாறு தாம் காண்கின்ற காட்சிகளிலெல்லாம் கங்கையைத் தரிசித்து மகிழும் நம் குமரகுருபரரின் கங்கைக் காதலை எவ்வளவு வியந்தாலும் தகும். வாழ்க கங்கை.

# அடிகளாரின் சமுதாயச் சிந்தனைகள்

ஆ. குணசேகரன், தஞ்சாவூர்

பதினேழாம் நூற்றாண்டின் மிகச் சிறந்த தமிழ்ப் புலவர் குமரகுருபரர் ஆவார். இவரின் வாழ்க்கை வரலாற்றினைப் புலவர் பெருமக்கள் பலர் இயற்றியுள்ளனர். அவற்றுள் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய 'குமரகுருபர சுவாமிசள் புராணம்', தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 'புலவர் புராணம்', கா. சுப்பிரமணியபிள்ளையின் 'குமரகுருபர அடிகள் வரலாறு' மற்றும் உ.வே. சாமிநாதையர் அவர்கள் பதிப்பித்த 'குமரகுருபர பிரபந்ததிரட்டில் உள்ள அடிகளின் சரித்திரச் சுருக்கம் போன்றன முக்கியமானவை.

**அடிகளின் வாழ்க்கை வரலாறு**

தமிழகத்தின் தென் பகுதியில் பொருநை நதிக்கரையில் அமைந்துள்ள ஸ்ரீவைகுண்டத்தில் 300 ஆண்டுகளுக்கு முன்னர் சைவ வேளாளர் குலத்தில் சண்முகசிகாமணிக்கும் சிவகாமி அம்மையாருக்கும் முதல் குழந்தையாக அடிகள் பிறந்தார். இவர்கள் பிறந்த காலத்தினை கி.பி. 1618-க்கும் கி.பி. 1654-க்கும் இடைப்பட்டது எனக் கொள்ளலாம். ஐந்து வயது வரை பேசாதிருந்த அடிகள் திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் திறம் பெற்றார். அவராலேயே குமரகுருபரர் என்னும் பெயரையும் பெற்றார் என்பர்.

அடிகள் கவிராயர் பரம்பரையில் பிறந்ததால் இளமை யிலேயே கவிபாடும் திறனைப் பெற்றார் எனக் கருதலாம். இவர்கள் முதன்முதலில் பாடியது கந்தர் கலிவெண்பாவாகும். பல பதிகளுக்குச் சென்று பல நூல்களை இயற்றிய அடிகள் பின்னர் தருமபுரம் சென்று தேசிகரிடம் ஞானோபதேசம் பெற்று அவர்மீது பண்டார மும்மணிக்கோவை பாடினார்கள். பின்னர்க் காசிப்பயணம் மேற்கொண்ட அடிகள் அங்குக் காசிக் கலம்பகம் மற்றும் சகலகலாவல்லிமாலை என்ற நூல்களை இயற்றினார்கள். அங்கிருந்த முகம்மதிய மன்னன் அடிகளாரின்

ஆற்றலைக் கண்டு வியந்து, ஒரு திருமடத்தினை அமைத்துக் கொடுத்தான். அடிகள் அங்கிருந்த கேதாரநாதர் கோயிலைச் சீர்செய்து அங்கு தென்னாட்டுப் பூசை முறைகளைச் செய்ய ஏற்பாடு செய்தார். காசியிலிருந்த அடிகள் தமது இறுதிநாளில் தம் மாணவருள் சிறந்தவரான சொக்கலிங்க முனிவரிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டு வைகாசித் திங்கள் மூன்றாம் நாள் சமாதியானார்கள். அடிகள் காசியில் மடம் அமைத்து சைவத்தை நிலைநாட்டியது வடநாட்டினர் தென்னாட்டு சைவசித்தாந்தத்தை அறிவதற்கு வழிவகுத்தது எனலாம்.

**குமரகுருபரர் காலச் சமுதாயம்**

குமரகுருபரர் 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்பதால் அவர்கள் வாழ்ந்த சமுதாயம் பல கூறுகளை உடையதாக விளங்கியது. அவர்கள் கால ஆட்சிச் சூழல் பற்றி நாம் அறிதல் அன்றைய சமுதாய நிலையைப் பற்றி நாம் அறிய ஏற்புடையதாக அமையும். அடிகளார் தமது பாடல்களில் சமுதாயம் தொடர்பான பல கருத்துக்களைக் கற்பனை வளத்துடன் அமைத்துள்ளார்கள். அவற்றினைப் பற்றி அறிவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அடிகளின் கால அரசியல் நிலை**

பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் மாலிக்காபூரின் படையெடுப்பினால் 50 ஆண்டுகள், மதுரை மாலிக்காபூரின் ஆட்சியிலும் அவனுக்குப் பின்னர் வந்தவர்களின் ஆட்சியிலும் இருந்தது. ஆந்திரத்தில் விசயநகர ஆட்சி ஏற்படும் வரையில் தமிழ்நாட்டில் அமைதியில்லை. பின்னர் மதுரையில் விசயநகரத் தாரின் செல்வாக்குப் பெற்ற, நாயக்கர்கள் ஆட்சியை ஏற்படுத்தி னார்கள். அதன்பின்னரே தமிழகத்தில் ஓரளவிற்கு இலக்கிய வளர்ச்சி ஏற்படத் தொடங்கியது எனலாம். 13-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் பெரும் காப்பியங்கள் எதுவும் எழுதப்படவில்லை. கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் கிருத்துவ சமயக் கருத்துக்களும் முகம்மதியச் சமயக் கருத்துக்களும் தமிழில் வந்தன. இச்சமயச் சூழ்நிலையில்தான் சைவ சமயத்தைக் காக்க பல சைவ மடங்கள் தோன்றின. இவை சமயப் பணியுடன் தமிழ்மொழியில் பல இலக்கியங்களைப் படைக்கவும் முற்பட்டன. நாயக்க மன்னர்களும் பல சமய

நூல்கள் வெளிவர உதவினர். புலவர்கள் பலர் தலபுராணங் களைப் பாடி மக்களை மகிழ்வித்தார்கள். படைப்போருக்கும் படிப்போருக்கும் அமைதியான சூழல் இல்லாததால் சிற்றிலக்கியங்கள் மட்டுமே புலவர்களால் பாடப்பெற்றன. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரரும் சிவப்பிரகாசரும் புலமை நிறைந்த இலக்கியங்களைப் படைக்கா விட்டாலும் சமய வளர்ச்சிக்காக இவர்கள் படைத்த நூல்களில் இலக்கியச் சுவை மிகவும் நிரம்பியுள்ளது.

**குமரகுருபரர் காலத் தமிழினம்**

பிறமொழியாளர்களுக்கு அடிமைப்பட்டுத் தன் தாய் மொழியின் வளர்ச்சியைப் பற்றி எண்ணாது இருக்கும் தமிழினத் தினைப் பற்றி உணர்ந்த குமரகுருபரர், தம்மினம் விழித்தெழ வேண்டும் என்ற எண்ணத்துடன், மதுரையைப் பற்றிப் பாடும் போது இன உணர்வுடன் கூடிய கற்பனையாகத் தமது மீனாட்சி அம்மைப் பிள்ளைத்தமிழில் பாடுகின்றார்.

''நிலவே உனக்கென ஒரு சுதந்திரமில்லை
நீ கதிரவன் வழங்கும் ஒலியைப் பெற்று உலவுகின்றாய்''

சுதந்திரமற்ற வாழ்வு ஒரு வாழ்வா? என்று சாடுவதாக இப்பாடல் அமைகின்றது. பாண்டியர்களின் காலத்தில் சிறப்புற்று விளங்கிய மதுரை மக்கள் தெலுங்கு நாயக்க மன்னர்களின் ஆட்சியில் தன்னிலை இழந்து அவலப்பட்ட நிலையை விளக்குகின்றார்.

பலமொழி பேசும் மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்த தமிழகத்தில் தமிழ்மொழி தன்னிலை மாறாது சிறந்து விளங்க வேண்டும் என்னும் கருத்துடைய குமரகுருபரர்,

''வடகலை யில்பல கலையொடு தமிழ்வளருங் கூடல்''

என மதுரைக் கலம்பகத்தில் கூறுகின்றார். வான் உயர வளர்ந்த பொதிகை மலையின் மீது வளர்கின்ற நிலவாகத் தமிழைக் கற்பனையுடன் விளக்குகின்றார். மேலும் இவர் தமிழ்மொழியை இவறவன், இறைவி, முருகன் மற்றும் கலைமகளுடன் தொடர்பு படுத்திக் கூறுவது தமிழ்மொழியின் சிறப்பை மக்கள் உணரச் செய்ய வேண்டும் என்பதற்காகும்.

### குமரகுருபரர் கால சைவ சமயம்

மதுரையை ஆண்ட திருமலை நாயக்க மன்னன் கிருத்தவ மத போதகர்களுக்குத் தனது ஆதரவையும் அன்பளிப்புக்களையும் அளித்ததால் கிருத்துவ மதம் தமிழகத்தில் வளரத் தொடங்கியது. மன்னனே கிருத்தவ சமயத்திற்கு மாறி விடுவானோ எனப் பலரும் ஐயப்பட்டனர். இதனால் சைவசமய வளர்ச்சித் தடைபட்டு விடுமோ என எண்ணிய அடிகள், 'ஒருமீன் வானைக் கடல் என்று எண்ணி குதித்துத் தாவ, அது சென்று வான் கங்கையில் வீழ்ந்து புதுச் சுகம் பெற்றதாகக் கூறுகின்றார்.

### விருந்தோம்பல் பண்பு

அடிகள் வாழ்ந்த காலத்துத் தமிழ் மக்கள் விருந்தோம்பலைத் தமது வாழ்வியல் கடமையாகக் கொண்டு வாழ்ந்தனர். அடிகள் தனது மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் 'அங்கயற்கண் அம்மை எட்டுத்திசை யானைகளையும் எடுத்து ஒன்றோடு ஒன்று இணைக்கும் காட்சி, புது விருந்தினரைக் கண்டால் அவர்களைக் கட்டி வரவேற்பது போல் இருந்ததாகக் கூறு கின்றார். இக்கற்பனையின் மூலம் விருந்தினர்களை வரவேற்கும் தன்மையைக் காணமுடிகின்றது. இசுலாமியர்களின் ஆட்சியின் காரணமாகத் தமிழகத்தில் விருந்தோம்பல் பண்பில் ஏற்பட்ட பழக்க வழக்கத்தின் மாற்றங்களையும் அடிகள் தமது பாடலில் குறிப்பிடுகின்றார்.

### பழக்க வழக்கங்கள்

அடிகள் வாழ்ந்த சமுதாயத்தின் பழக்க வழக்கங்களின் ஒன்று, பெண்கள் தம் கணவன் இறந்தால் மார்பில் அடித்து அழுவார்கள் என்பதாகும். இதனை அடிகள் தமது சிதம்பரச் செய்யுட் கோவையில் (பாடல் 49) சிவபெருமான் நஞ்சினை உண்ணாமல் போயிருந்தால் தேவர்களின் மனைவிகளின் கைகளும் கொங்கையும் சிவந்து போயிருக்கும் என்று கூறு கின்றார். அதாவது ஆலகால நஞ்சினைத் தேவர்கள் உண்டு இறந்திருந்தால் அவர்களின் மனைவிகள் மார்பையடித்துப் புலம்புவதால் அவர்களின் மார்பகமும் கைகளும் சிவந்திருக்கும் என்று கூறுகின்றார்.

கணவன் உண்ட உணவின் மீதியை மனைவி உண்பதையே சில குடும்பப் பெண்கள் இன்றும் பழக்கமாகக் கொண்டுள்ளனர்

என்பதைக் காண்கின்றோம். இதனையே அன்றைய குடும்ப மகளிர் கடைப்பிடித்தனர் என்பதை அடிகள் திருவாரூர் நான்மணிமாலையில் ஒரு கற்பனையாக விளக்குகின்றார். 'சிவனிடத்தில் காதல் கொண்ட ஒரு பெண்ணிற்கு அமுதும் நஞ்சாகத் தோன்றியதாம். அந்நஞ்சு சிவன் உண்டு எஞ்சியது என எண்ணி அப்பெண் உண்ணத் தொடங்கினாள்' என்று கூறுவதால் விளங்குகின்றது.

**கல்வி நிலை**

அடிகள் வாழ்ந்த காலத்தில் கல்வி கற்பதென்பது உயர்சாதி பிரிவினருக்கு உரியதாயிருந்தது. அவர்கள் மட்டுமே வேதம் பயின்றனர். இக்கருத்தையே இராபர்ட் டி நோபிளி(1610) மற்றும் லொரிசியோ பாதிரியாரும் குறிப்பிடுகின்றனர். இக்கருத்தினை உணர்த்தும் வகையில் அடிகளார் தமது பாடல்களில் கற்பனை நயத்துடன் குறிப்பிடுகின்றார். வடமொழிக் கல்வியே சிறந்திருந்த அக்காலத்தில் வேதம் படைத்த பிரமன் படைக்கும் உடல் அழியும், தமிழ் படித்த புலவர்கள் படைத்த கவிதை யாகிய உடல் என்றும் அழியாமல் இருக்கும் என்ற கற்பனையில் (நீதிநெறி விளக்கம்-6) படைக்கின்றார். தமிழ்க் கல்வியின் சிறப்பினை இக்கற்பனை மூலம் விளக்குவதைக் காணலாம்.

கல்வியின் பயன் கற்றதைப் பிறருக்கு எடுத்துரைக்கும் ஆற்றலைப் பெறுவதாகும். அவ்வாற்றல் இல்லாமல் அடிமையில் பிறர் கூறுவதைக் கேட்டு வாழும் தமிழர்களுக்கு உணர்ச்சியூட்ட எண்ணிய அடிகள் 'கற்றதை எடுத்துக்கூறும் ஆற்றல் இல்லாதவன்' கற்றகல்வி பிற ஆடவருடன் உறவுகொள்ளும் மனைவி போன்றது என்கின்றார். (நீதிநெறி விளக்கம்-1). முறையாகக் கல்வி கற்காத வனைக் கற்பிழந்த பெண் போல என்று சாடுகின்றார்.

**விழாக்களும் பண்டிகைகளும்**

நாயக்க மன்னர்களும் அவர்களின் கீழிருந்த பாளையக் காரர்களும் கோவில் விழாக்கள் நடத்துவதிலும் அந்தணர்களுக்கு அக்ரஹாரங்கள் அமைப்பதிலும் அதிக முக்கியத்துவம் கொண்டி ருந்தனர். திருமால் கோவில் கொண்டிருக்கும் வைணவக் கோயில் களில் நடத்தப்படும் விழாக்களின்போது இறைவனை ஊர்வல மாக எடுத்துச் செல்லும்போது திருவாய்மொழி ஓதுவார் இறைவனுக்கு முன்னே செல்லுவர். இறைவனுக்குப் பின்னால்

வேதங்களைச் சொல்லி வருவதையும் அடிகள் தனக்கே உரிய கற்பனை நயத்துடன் கீழ்வருமாறு கூறுகின்றார்கள். 'தமிழைநாடி இறைவன் வருகின்றான் என்றும் வடமொழி வேதம் இறைவனிடம் முறையிட்டு அவன் பின்னால் செல்வதாகவும்' கூறுகின்றார். இதன் மூலம் தமிழ்மொழியின் சிறப்பை விளக்கு கின்றார். மேலும் புலால் உண்ணும் சமுதாய வழக்கத்தினைக் குறைகூறும் அடிகள், பேய்கள் இறைச்சியைக் கம்பியில் கோர்த்து, தீயில் இட்டு தம் குட்டிப் பேய்களுக்குக் கொடுப்பதாகக் கூறுகின்றார். மேலும் சமுதாயத்தில் இருந்த தீய பண்புகளை அடிகள் சாடுகின்றார்.

அடிகளாரின் படைப்புக்கள் காலத்தால் அழியாதவை. இவர் இறைபக்தியும், நூலறிவும் கற்பனைத் திறனும் சமுதாயச் சிந்தனைகளும் கொண்டவர். இவரின் படைப்புகளால் அவர் கால அரசியல் நிலை, தமிழ்மொழியின் நிலை, சமயநிலை, கல்வி நிலை போன்றவைகளை அறியமுடிகிறது.

# முருகாற்றுப்படையும் கந்தர் கலிவெண்பாவும்

வ. குருநாதன், தஞ்சாவூர்

**திருமுருகாற்றுப்படை**

முருகப்பெருமானாகிய குமரவேளை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படை, சங்க இலக்கியமாகிய பத்துப் பாட்டிலும் சைவத்திருமுறை இலக்கிய வரிசையில் பதினோராம் திருமுறையிலும் இடம் பெற்றமைந்த இருபெருஞ் சிறப்பினையுடையது. பழந்தமிழ் ஆற்றுப்படை இலக்கணத்தை அடியொற்றி, வீடுபேறு அடைதற்குரிய செவ்வி (பக்குவம்) அமைந்தானோர் இரவலனை அவ்வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துகின்ற முறையில் இயன்ற திருமுருகாற்றுப்படை, முருகனின் சிறப்புக்களையும் அவன் அமர்ந்துறையும் இடங்களாகிய அறுபடை வீடுகளையும் அடுக்கிமொழிந்து, அன்பர்கள் அவனைக்கண்டு வணங்க வேண்டும் அடைவினையும் அவர்களுக்கு அவன் அருளுகின்ற வீடுபேறாகிய பெறலரும் பரிசிலையும் விவரித்துக் கூறுகின்றது.

முருகனைக் குறித்தெழுந்த முதற்பெரும் பாடலும் இலக்கியமுமாய் 317 அடிகளையுடைய ஆசிரிய நெடும்பாட்டாகிய முருகாற்றுப்படையினை, நாள்தோறும் வழிபாட்டிலே பாடுகின்ற அடியார்களை முருகன் உவந்து அவர்களுக்கு முன்தோன்றி அவர்களின் மனக்கவலையைத் தீர்த்தருளி அவர்கள் கேட்ட வரங்களேயன்றி நினைத்த வரங்களையெல்லாம் அருளுவானென்பது ஆன்றோர் வாக்கு.

> நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
> தற்கோல நாடோறும் சாற்றினால் – முற்கோல
> மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
> தாம்நினைத்த எல்லாம் தரும்.

என்பது காணலாம். இவ்வுண்மையை உணர்ந்து திருமுருகாற்றுப்படையை ஒவ்வொரு நாளும் ஓதி அருட்பயன் பெறுகின்ற அன்பர்கள் பலர்.

### கந்தர் கலிவெண்பா

திருச்செந்தூர்க் கந்தப் பெருமானைக் குறித்துக் குமரகுருபரர் பாடிய கலிவெண்பாப் பாடலே கந்தர் கலிவெண்பா. இது முருகப்பெருமானைச் சித்தாந்த நிலையில் பரமசிவமாகவே கொண்டு, அவனுடைய அருவமான பரதத்துவ வடிவத்தைப் பாராட்டியும் அப்பெருமான் ஆறுமுகமும் பன்னிரு கைகளும் கொண்ட உருவத் திருமேனியனாய்த் தோன்றித் திருவிளை யாடல் புரிந்ததும் அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காத்ததும் தேவயானையையும் வள்ளியையும் திருமணம் புரிந்ததுமாகிய செயல்களைப் புகழ்ந்தும் அவனை வாழ்த்தி வணங்கி வேண்டுதல் புரிகின்ற முறையில் அமைந்துள்ளது. பாடல் முழுதும் பரவிவரும் விளிகளால் முருகனை முன்னிலையில் அழைத்து வேண்டுகின்ற திறம் கந்தர் கலிவெண்பாவில் மிகச் சிறப்பாகக் காணப்படு கின்றது. நூற்றிருபத்திரண்டு ஈரடிக் கண்ணிகளாய் இருநூற்று நாற்பத்து நான்கடிகள் கொண்டு இயன்ற கந்தர் கலிவெண் பாவும் முன்னைத் திருமுருகாற்றுப்படையினைப் போலவே முருகனடியார்களால் நாள்தோறும் ஓதப்பெறுகின்ற நலமிகு பாடலாய்த் திகழ்கின்றது.

### திருமுருகாற்றுப்படையில் முருகன் திருவுருக் காட்சி

திருமுருகாற்றுப் படையில் முருகனின் திருவுருக்காட்சி பல நிலைகளில் புனைந்து காட்டப் பெறுகின்றது. எடுத்த எடுப்பிலேயே முருகப்பெருமானின் முழுத்தோற்றத்தைக் காண் கிறோம்.

> உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
> ஓவற விமைக்கும் சேண்விளங்கு அவிரொளி
> உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
> செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
> மறுவில் கற்பின் வாணுதல் கணவன் (1–6)

இந்த முதலாறு அடிகளிலேயே முருகனின் முழுத்தோற்றமும் விளங்க அவனை அறிமுகம் செய்கின்றது முருகாற்றுப்படை. 'காலை இளஞாயிறு கடலிலே எழுவதுபோல் தூரத்தே சென்று விளங்கும் அவிரொளியையும் தன்னைச் சேர்ந்தோராகிய அடியார்கள் தன்முன் வந்து பணியும்போது அவர்களின்

தீவினைகளைப் போக்கி அவர்களைத் தாங்கியதும், அவர்தம் அறியாமையை உடைத்தற்குக் காரணமான வலிமையமைந்தது மாகிய தாள்களையும், அழித்தற்குரியோரை அழித்த இடிபோன்ற தடக்கைகளையும் உடையவன், மறுவிலாக் கற்பமைந்தவளாகிய ஒளிபொருந்திய நெற்றியையுடையவள் கணவனாகிய முருகன்' என்பது இவ்வடிகள் காட்டும் முருகனின் தோற்றம். இளஞாயிறு கடலின்மேல் எழுந்து வருவதுபோல் எழில் முருகன் மயிலின்மேல் அமர்ந்து தோன்றுகின்றான். அவ்வாறு தோன்றும்போது, இடை விடாது ஒளிர்வதும் நெடுந்தூரத்தே விளங்குவதும் பளிச்சிடுவது மாகிய அவன் திருமேனிப் பேரொளியை முதல் மூன்றடிகள் புனைகின்றன. அடியார்களைக் காத்தருளும் திருவடிச் சிறப்பினை நான்காமடியும் பகைவர்களை அழித்தருளும் திருக்கைச் சிறப்பினை ஐந்தாமடியும் உலகுயிர்த் தோற்றத்திற்குக் காரண மான பெண்மை யிணைவினை ஆறாமடியும் காட்டுகின்றன. இவ்வாறு திருமுருகாற்றுப்படையின் தொடக்க அடிகளில் முருகனின் திருவுருவக் காட்சியைக் காண்கிறோம். தொடர்ந்து,

> இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
> உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன் (10-11)
> சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
> பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன் (43-44)

எனவரும் அடிகளில் முருகன் இன்பத்திற்குரிய கடப்பம் பூமாலை யணிந்த மார்பினாயும் செங்காந்தட் பூக்களால் கட்டப்பட்ட தலைமாலை யணிந்த திருமுடியனாயும் காட்சியளிக்கின்றான்.

### திருமுருகாற்றுப்படையில் ஆறுமுகம் பன்னிரு கைகள்

திருமுருகாற்றுப்படையில் இரண்டாவது படைவீடாகிய திருச்செந்தூரில் முருகன் ஆறுமுகமும் பன்னிரு கைகளும் உடையவனாய் யானைமேல் எழுந்தருளும் திருக்காட்சி சிறப்புறக் காட்டப் பெறுகின்றது. மத்தகத்தில் பட்டத்தோடே வாடா மாலை கிடந்தசைய, தாழ்மணி மாறிமாறி ஒலிக்கின்ற பக்கங் களையும் கடுமையான நடையினையும் கூற்றுவனையொத்த வலிமையினையுமுடைய 'காற்றெழுந்தாற்போலும் களிற்றி யானையின் மேலேறி வருகிறான் முருகன். ஐவகை வடிவ வேறு பாடுகளோடே செய்தொழில் நுட்பங்களெல்லாம் முற்றிய முடி யொடு கூடிவிளங்கும் திருமணி, மின்னலைப்போல் சென்னியிலே பொலிவுறவும் பொன்னாற் செய்த மகரக்குழை மதியைச் சூழ்ந்து

நீங்காத விண்மீன்களைப்போல் ஒளிவிடவும் தவமுனிவர் மனங் களிலே பொருந்தித் தோன்றுகின்ற ஒளிநிறமுகங்களோடே முருகன் யானைமேல் வருகின்றான். அவனுடைய ஆறுமுகங்களுள் ஒருமுகம் உலகம் மாசின்றி விளங்கும்படி பல கதிர்களையும் தோற்றுவிக்கின்றது; மற்றொரு முகம் அன்பர்கள் ஏத்துதற்கிசை வரக அவர்களிடம் வைத்த அருளினால் மகிழ்ந்து அவர்கள் வேண்டும் பொருள்களை முடித்துக் கொடுக்கின்றது; ஒருமுகம் மந்திர விதிகளின் மரபு மாறாத அந்தணர்களின் வேள்விகளில் தீங்கு நேராதபடி காக்கின்றது; மற்றொருமுகம் நூல்களால் உணரமுடியாத அனுபவப் பொருள்களை ஆராய்ந்து முனிவர்கள் பாதுகாப்புறும்படி அவர்களுக்குணர்த்தித் திங்களைப்போல் திசைகளையெல்லாம் விளக்குகின்றது; ஒருமுகம் தேவரைக் காப்பதற்கு அசுரரை அழிக்கவேண்டுமென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடு அப்பகைவர்களைப் போரிலே அழித் தொழித்துக் களவேள்வி செய்கின்றது; மற்றொருமுகம் குறவர் மடமகளாகிய கொடிபோலும் இடையினையுடைய வள்ளி யோடே குறுநகை புரிந்து மகிழ்கின்றது.

இவ்வாறு முருகனின் ஆறுமுகங்களும் தத்தம் தொழில்களில் ஈடுபட்டொழுகுதலுக்கேற்ப, அவனுடைய பன்னிரு கைகளும் தொழிலுறுகின்றன. அம்முறையில் மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்த முகத்திற்கேற்ப ஒருகை ஞாயிற்று வெம்மையைப் பல்லுயிரும் பொறுக்க மாட்டாவென்று கருதித் தமதருளினால் சுடரொடு திரிந்து அவ்வெம்மையைத் தணிக்கின்ற விண்செலல் மரபின் ஐயர்களாகிய சித்தர்களைப் பாதுகாக்க மேலோங்கியெழுகின்றது; அவ்வாறு எழுந்த கைக்கு இணையான மற்றைக் கை தனக்கொரு தொழிலின்றி இடுப்பிலே ஊன்றியிருக் கின்றது. ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக் காதலின் உவந்து வரங்கொடுக்கும் இரண்டாவது முகத்திற்கேற்ப ஒருகை அவ்வன்பர்களிடத்துச் செல்லுமாறு தான் ஏறியிருக்கும் யானையையேவி அங்குசம் செலுத்த அதற்கிணையான மற்றொருகை தனக்கும் தொழிலின்றிச் செந்நிற ஆடையணிந்த தொடையின் மேலே ஒய்ந்திருக்கின்றது. மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர்களின் வேள்விகளைக் காக்கும் மூன்றாவது முகத்திற்கேற்ப இரு கைகள் அவ்வேள்விகளை அழிக்கவரும் அசுரர்களை ஓட்டுமாறு கேடகத்தையும் வேலையும் வலமாகச் சுழற்றுகின்றன. எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்

திங்கள் போலத் திசைகளை விளக்கி முனிவர்களுக்கு உணர்த்தும் நான்காவது முகத்திற்கேற்ப ஒருகை அம்முனிவர்களுக்குத் தத்துவங்களைக் கூறி உரை கடந்த பொருள்களை உணர்த்துமாறு மோனமுத்திரை காட்டி மார்போடே விளங்க, அதற்கிணையான மற்றைக்கை மார்பின் மாலையோடே சேர்ந்து பொலிகின்றது. செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவுகொள் நெஞ்சமொடு களவேள்வி செய்யும் ஐந்தாவது முகத்திற்கேற்ப ஒருகை தொடியொடு மேலே சுழன்று வேள்வி முத்திரை கொடுக்க, அதற்கிணையான மற்றைக்கைதான் மணியொலியை மாறிமாறி யெழுப்புகின்றது. குறமகள் வள்ளியொடு நகைமகிழும் ஆறாவது முகம் உலகிற்கு இல்வாழ்க்கைநிகழ்த்துவித்ததாகலின் அதற்கேற்ப ஒருகை மழையைப் பெய்விக்க, மற்றொருகை அவ்வில்வாழ்க்கை நிகழ்த்துதற் பொருட்டு மணமாலையைச் சூட்டுகின்றது. இம்முறையில் ஆறுமுகங்களுக்கேற்பத் தொழில்படுகின்ற பன்னிரு கைகளோடு முருகன் திருச்செந்தூரிலே யானைமேல் எழுந்தருளு கின்றான் என்று திருமுருகாற்றுப்படை மொழிகின்றது.

**கந்தர் கலிவெண்பாவில் முருகன் திருக்கோலம்**

திருமுருகாற்றுப்படையிலே காணப் பெறுகின்ற முருகனின் திருவுருவக் காட்சி பெரும்பான்மை ஒத்தும் சிறுபான்மை வேறுபட்டும் கந்தர் கலிவெண்பாவிலும் காட்டப் பெறுகின்றது. முன்னூலின் முதலிலும் இடையிலுமாக இருவேறு நிலைகளில் புனையப் பெறுகின்ற முருகனின் தோற்றம் பின்னூலில் ஒரே தொடர்ச்சியாய் முடிமுதல் அடியீறாக மொழியப் பெறுகின்றது.

> "... ... ... ... ... ... ... ... — மின்னுருவம்
> தோய்ந்தநவ ரத்னச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
> வாய்ந்த கிரண மணிமுடியும் –
> சென்மவிடாய் தீர்க்கும் திருமொழியும் (36-41)

முருகாற்றுப்படையிலே திருமுடியும் குழையும் மட்டுமே புனைவுபெற, கந்தர் கலிவெண்பாவில் அவ்விரண்டுடனே நெற்றிகளும் அவற்றிற் பொட்டுகளும் கண்களும் வாயும் திருமொழியும் புனைவுபெறக் காண்கிறோம். மின்னொளியில் தோய்ந்தாற் போலும் ஒன்பான் மணிகள் பதித்த பசும்பொன்னாலான ஒளிவீசும் ஆறு திருமுடிகளும், எட்டாம் பிறைத் துண்டங்கள் ஆறினை நிரல்படப் பதிற்தாற்போன்ற திருநீற்றுக் கீற்றுக்கள் மலர்ந்த ஆறு திருநெற்றிகளில் இடப்பட்ட பொட்டுக்களின்

அழகும், பருவத்தில் மலர்ந்த தாமரைகள் பன்னிரண்டு பூத்தாற் போல் அருள்பொழியும் பன்னிரு திருக்கண்களும், கதிரவர் பன்னிருவரும் தோன்றி ஒளிவீசினாற்போல் விளங்குகின்ற பன்னிரு மகரக்குழைகளும் நிலவுபோல் ஒளிவீசும் புன்முறுவல் பூத்தலர்ந்த அழகிய பூங்குமுத மலர்போன்ற ஆறுதிருச் செவ்வாய்களும் பிறவி வேட்கையைத் தீர்க்கும் திருமொழியு முடையவனாக முருகப்பெருமானின் திருமுடியணிந்த திருமுகப் பகுதியைப் புனைகின்ற கந்தர் கலிவெண்பா, தொடர்ந்து அப்பெருமானின் ஆறு திருமுகங்களை அவற்றின் தொழிலமையைப் புனைந்து காட்டுகின்றது.

... ... ... ... ... ... ... ... வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூ ரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்தும் திருமுகமும் –
தாகமுடன்
வந்தடியில் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும் (41–47)

என்று முருகனின் அறுமுக வண்ணனை அமைகின்றது. வில்லேந்திய தோள்களையுடைய கொடிய அசுரர்கள் போற்றிப் புகழும் கொடுமைமிக்க சூரனைக் கொன்று அவனைச் சார்ந்த ஏனைப் பகைவர்களின் உயிர்களையும் சிந்திய **முருகனின் வீரத் திருமுகமும்,** எல்லா உயிர்களுக்கும் அமைந்த ஊழ்வினைகளைப் போக்கி அவற்றிற்கு என்றுமழியாத பேரின்பப் பெருவாழ்வைத் தந்தருளும் செந்தாமரை மலர் போன்ற **முருகனின் இன்பத் திருமுகமும்** வேதங்களாகிய பழமறைகளையும் ஆகமங்களையும் கற்றுணரும் அடியார்களுக்கு ஏற்படும் ஐயங்களை அகற்றி, அவர்களுக்கு அவற்றின் தெளிபொருளை உணர்த்தும் முருகனின் **ஞானத்திருமுகமும்** உலகவுயிர்கள் எல்லாவற்றையும் விட்டுப் போகாத ஆணவமாகிய அறியாமையிருளை அகற்றிப் பற்பல சூரியர்கள் ஒருங்கிணைந்தாற்போல் ஒளிவீசுகின்றதும் தாமரை மலர் போன்றதுமான **முருகனின் சோதித் திருமுகமும்,** உயிரினங்க ளெல்லாம் ஆணும் பெண்ணுமாய் இணைந்து இனப்பெருக்கம் செய்து தொடர்ச்சியுறுதற்கு ஏதுவான முறையினை எடுத்துக் காட்டுமாறு அன்போடே இன்பமுறும் காதலியாகிய வள்ளிக்கும் வானவர் மகளாகிய தேவயானைக்கும் களிப்பினையூட்டுகின்ற **முருகனின் காதல் திருமுகமும்** இறைவனின் திருவருளைப் பெற வேண்டுமென்ற தீராத வேட்கையுடன் வந்து திருவடியிற்

சேர்ந்தோர் மகிழுமாறு வரங்கள் பலவற்றைத் தந்தருளுகின்ற முருகனின் தெய்வத் திருமுகமும் கந்தர் கலிவெண்பாவிலே கவினுறப் புனைவு பெறுகின்றன.

இவ்வாறு முருகனின் அறுமுகப் புனைவினை அமைத்துப் பாடும் கந்தர் கலிவெண்பா தொடர்ந்து அப்பெருமானின் பன்னிரு கைகளையும் பாடிப் பரவுகின்றது.

> ... ... ... ... ... ... ... ... — கொந்தவிழ்ந்த
> வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
> பாரப் புயசயிலம் பன்னிரண்டும் (47-48)

என வரும் அடிகள் தொகை நிலையில் பன்னிரு கைகளையும் குறித்துக் காட்டுகின்றன. உலக வுயிர்களுக்கு இன்ப நுகர்ச்சியையும் ஞானத்தையும் (போகத்தையும் யோகத்தையும்) அருள்பவனாதலால், அவற்றிற்கேற்பத் தேன் சொரிகின்ற கடப்பமலர் மாலையையும் மணங்கமழ்கின்ற குராமலர் மாலையையும் அணிந்து விளங்குகின்றான் முருகன். தொடர்ந்து,

> ... ... ... ... ... ... ... ... ... ... — ஆரமுதம்
> தேவர்க் குதவும் திருக்கரமும் சூர்மகளிர்
> மேவக் குழைந்தணைந்த மென்கரமும்—ஓவாது
> மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
> சேர வணிந்த திருக்கரமும் — மார்பகத்தில்
> வைத்த காதலமும் வாமமருங் கிற்கரமும்
> உய்த்த குறங்கில் ஒருகரமும்—மொய்த்த
> சிறுதொடிசேர் கையும்மணி சேர்ந்ததடங் கையும்
> கறுவுசமர் அங்குசம்சேர் கையும் — தெறுபோர்
> அதிர்கே டகம்சுழற்றும் அங்கைத் தலமும்
> கதிர்வாள் விதிர்க்கும் கரமும் (48-53)

என்று முருகனின் பன்னிரு கைகளின் செயல்களையும் தனித் தனியே பாடுகின்றது கந்தர் கலிவெண்பா. தேவர்களுக்கு உணவாகும் ஆரமுதத்தை ஒரு திருக்கரம் உதவ, சூரரமகளிர் மேவுமாறு குழைந்து அவர்களை அணைக்கின்றது ஒரு மென்கரம். உலகிற்கு இன்றியமையாத மாரியை ஒரு மலர்க்கரம் பொழிய, மலர் மாலைகளை ஒருங்கே அணிகின்றது ஒரு திருக்கரம். மார்பகத்தில் ஒருகை வைத்திருக்க இடப்புற இடுப்பில் ஒருகை ஊன்றியிருக்கிறது. மேல் தொடை மேலே ஒருகை ஒய்ந்திருக்க, வீரவளையணிந்து ஒருகை விளங்குகின்றது.

ஒருகை மணியெடுத்து ஒலிக்க, ஒருகை அங்குசமெடுத்து யானையைச் செலுத்துகின்றது. ஒருகை கேடகமேந்திச் சுழற்ற' ஒருகை வாளேந்தி வீசுகின்றது.

இவ்வாறு முருகனின் ஆறுமுகங்களுக்கேற்பப் பன்னிரு கைகளையும் புனைந்து பாடிய கந்தர் கலிவெண்பா, மேலும் தொடர்ந்து, காதல் மகளிர் விரும்பித் தழுவியதும் அழகிய பொன்மணிப் பூண்களை அணிந்ததுமாகிய அவனுடைய திருமார்பையும் அம்மார்பிலே அணிந்த பசும் பொன்னாலாகிய முப்புரிநூலையும் உருத்திராக்க மாலையையும் பூம்பட்டுடை யையும் பொன்னரை ஞாணின்மேல் கச்சையணிந்த அழகிய திருவரையையும், பொற்கழலும் கிண்கிணியும் சிலம்புமணிந்த திருவடிகளையும் ஒளிமிக்க நூறாயிரம் கோடி இளஞ்சூரியர் களைப்போல் ஒளிவிடுகின்ற தெய்விக வடிவையும் புனைந்து, அன்பர்களின் அகத்தாமரை மேல் அமர்ந்து விளங்கும் விளக்கொளியாய் அவனை விளித்து அமைகின்றது (53-58).

முடிவுரை

முருகனருளைப் பெறுதற்காக அவனிடம் அன்பர்களை ஆற்றுப்படுத்தும் முறையில் நக்கீரரால் மொழியப்பெற்ற முதற்பெரும் பாடலாகிய திருமுருகாற்றுப்படையும் முருகனைப் பல்வேறு நிலைகளில் புனைந்து அவனருளை வேண்டுகின்ற குமரகுருபரரின் கந்தர் கலிவெண்பாவும் தத்தம் பண்பு நலன்களில் இன்னும் பலவாறு இசைந்து விளங்குகின்றன. அவற்றையெல்லாம் இக்கட்டுரையில் எடுத்துரைத்தல் இயலாமையால் இவ்வளவில் இதனை முடிக்கலாம்.

# ஸ்ரீகுமரகுருபரனில் குமரகுருபரர் நூல்கள்

மோ. கோ. கோவைமணி, தஞ்சாவூர்.

ஒரு சிலரிடம் மட்டும் கொலுவீற்றிருந்த ஓலை இலக்கியங்கள் அச்சேற்றத்திற்குப் பிறகு பரவலாயின. இப்பரவல் தனித்தனி நூல்களாகவும் இதழ்களின் வழி பகுதி பகுதியாகவும் தொடர்ந்து வெளிவந்துள்ளன. தமிழகத்தில் முதன்முதலில் இப்பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்ட இதழ் 'செந்தமிழ்'. இதனைத் தொடர்ந்து பல பருவ இதழ்கள் நூல்களை வெளியிட்டு வந்துள்ளன. இதில் **ஸ்ரீகுமரகுருபரன்** எனும் பருவ இதழும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

## ஸ்ரீகுமரகுருபரன்

காசித் திருமடத்தின் வெளியீடே 'ஸ்ரீகுமரகுருபரன்' இவ்விதழ் கி. பி. 1950ஆம் ஆண்டு தை மாதம் 1-ந்தேதி தொடங்கி தொடர்ந்து கி. பி. 1976-ஆம் ஆண்டு வரை 27 தொகுதிகளும் ஒவ்வொருதமிழ் மாத 1-ந்தேதி ஸ்ரீவைகுண்டத்தில் இருந்து வெளிவந்துள்ளது. ஸ்ரீகுமரகுருபரன் ஓர் இலக்கியப் பருவ இதழாகும். இதில் ஆய்வுக்கட்டுரைகள், நூல் மதிப்புரைகள், பொதுக்கட்டுரைகள், ஒரு நூல் தொடர்பான தொடர் ஆய்வுக் கட்டுரைகள், ஆங்கிலம் மற்றும் இந்தி மொழிபெயர்ப்பு நூல்கள், ஆங்கிலக் கட்டுரைகள், மூல நூல்கள், மூல நூல் உரைகள், மூலமும் உரையும் எனப் பல நிலைகளில் இப்பருவ இதழ் வெளிவந்துள்ளது.

## ஸ்ரீகுமரகுருபரனில் நூல்கள்

ஸ்ரீகுமரகுருபரனில் வெளியான நூல்களை ஆறு நிலை களாகப் பகுக்கலாம்.

1. குமரகுருபரர் நூல்கள்
2. திருமுறை மற்றும் சாத்திர நூல்கள்
3. மொழிபெயர்ப்பு நூல்கள்
4. பதிப்பு நூல்கள்

5. தற்காலப் புலவர்களின் நூல்கள்
6. பிற நிறுவன வெளியீட்டு நூல்கள்

என அமையும் இவ்வெல்லாவற்றையும் ஆயின் ஆய்வு விரியும். எனவே, குமரகுருபரரின் நூல்களை மட்டும் இங்குக் காண்போம்.

**குமரகுருபரரின் நூல்கள்**

ஸ்ரீகுமரகுருபரனில் வெளிவந்த ஸ்ரீகுமரகுருபரர் நூல்களை இரண்டு பிரிவுகளாகப் பகுக்கலாம். அவை,

1. குமரகுருபரர் இயற்றிய நூல்கள்
2. குமரகுருபரர் பற்றிய நூல்கள்

என்பனவாகும்.

**குமரகுருபரர் இயற்றிய நூல்கள்**

ஸ்ரீகுமரகுருபரனில் குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலி வெண்பா நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், முத்துக் குமாரசாமி, பிள்ளைத்தமிழ், சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம், சிதம்பர மும்மணிக்கோவை போன்ற பத்து நூல்களும் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார், தேவகோட்டை அவர்களின் உரையுடன் வெளியாகி யுள்ளன. இப்பத்து நூல்களைப் பற்றிப் பின்வருமாறு காண்போம்.

**1. கந்தர் கலிவெண்பா**

கந்தர் கலிவெண்பாவானது முருகக் கடவுளிடம் விண்ணப்பம் செய்து கொள்ளும் முறையில் அமைந்துள்ளது. இந்நூல், 122 கண்ணிகள் கொண்ட கலிவெண்பாவாலானது. சிவபெருமானின் விசேடணங்கள் பலவற்றையும் முருகக் கடவுள் மீது ஏற்றிப் பாடப்பெற்ற சிறந்த நூல். இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 9, பகுதி 4–8-களில் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

**2. நீதிநெறி விளக்கம்**

திருக்குறளில் கண்ட கருத்துக்களை வேறு உருவத்திலே அமைத்துக் கூறும் நூல் நீதிநெறி விளக்கம். சில இடங்களில்

திருக்குறளில் உள்ள சொற்றொடர்களைப் பொன்னேபோற் போற்றி எடுத்தாளப்பட்டுள்ளது. தனிச்சொல் கொண்ட 102 வெண்பாவாலானது. இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 13இன் பகுதி 11, 12-லும்; தொகுதி 14-இன் பகுதி 1–12-லும்; தொகுதி 15-இன் பகுதி 1–4-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது. இந்நூலின் முதல் 16 பாடல்களுக்கு பொ. முத்தரசு அவர்கள் தமிழுரைக்கு ஆங்கில மொழிபெயர்ப்பு செய்துள்ளார். இம்மொழிபெயர்ப்பு தொகுதி 13இன் பகுதி 12 இல் வெளியாகியுள்ளது.

### 3. சிதம்பரச் செய்யுட்கோவை

யாப்பருங்கலக் காரிகையில் காணப்படும் மேற்கோள் செய்யுட்கள் எல்லாம் பெரும்பாலும் சமண சமயச் சார்புடையனவாகவே இருப்பதைக் கண்ட குமரகுருபரர் காரிகையின் இலக்கணங்களுக்கு மேற்கோள் செய்யுட்களைப் புதியதாக இயற்றினார். நடராசப் பெருமான் தொடர்பான செய்திகளாக 84 பாடல்களில் பாடப்பட்டதே சிதம்பரச் செய்யுட்கோவை. இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 20–இன் பகுதி 4–12-லும்; தொகுதி 21-இன் பகுதி 1–7-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

### 4. திருவாரூர் நான்மணிமாலை

நான்மணிமாலை என்பது வெவ்வேறு வகையான நான்கு மணிகளால் ஆன மாலையைப் போல வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்பவை முறையே அந்தாதியாக அமைய நாற்பது செய்யுட்களில் பாடுவது. திருவாரூர் நான்மணிமாலையில் பல அகத்துறைச் செய்திகளடங்கிய செய்யுட்கள் விரவி வருகின்றன. திருவாரூரில் வீற்றிருக்கும் சிவபெருமான் மீது பாடப்பெற்ற இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 8-இன் பகுதி 1–5-களில் பாடலும் உரையும் எனக் காப்புடன் பதிப்பாகியுள்ளது.

### 5. மும்மணிக்கோவை நூல்கள்

மும்மணிக்கோவை என்பது மூன்று வேறுவேறு மணிகளால் ஆன மாலையைப் போல ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்பன அந்தாதியாக அமைய முப்பது செய்யுட்கள் கொண்டது. இவ்வகையில் சுவாமிகள் சிதம்பர மும்மணிக்கோவையையும் பண்டார மும்மணிக்கோவையையும் படைத்துள்ளார்.

5. அ. சிதம்பர மும்மணிக்கோவை

காசிக்குச் சென்று தரிசனம் செய்வதில் ஏற்படும் துன்பங்களையும் சிதம்பரத்திற்குச் சென்று தரிசனம் செய்வதில் ஏற்படும் எளிமையையும் சிதம்பர மும்மணிக்கோவையின் முதற்பாடலில் விளக்கி, சிதம்பர மகிமையை நூல் முழுக்க விளக்கியிருக்கின்றார். இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 19-இன் பகுதி 3, 4, 8-12-லும்; தொகுதி 20-இன் பகுதி 1, 2-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

5. ஆ. பண்டார மும்மணிக்கோவை

சுவாமிகளின் குரு மாசிலாமணி தேசிகரைப் பற்றி எழுதப் பெற்ற நூல் பண்டார மும்மணிக்கோவை. இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 21-இன் பகுதி 8–12-லும்; தொகுதி 22-இன் பகுதி 1–4-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

6. கலம்பக நூல்கள்

கலம்பகம் என்பது பலவகை மலர்களும் கலந்தமைந்த கதம்ப மாலை போல பல்வேறு வகைப்பட்ட பா வகைகளால் அமைந்தது. இவ்வகையில் சுவாமிகள் மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம் என இரண்டு நூல்களைப் படைத்துள்ளார்.

6. அ. மதுரைக் கலம்பகம்

மதுரை மாநகரின் பெருமைகளைப் பாடுவதாக அமைந்ததே மதுரைக் கலம்பகம். இம்மதுரைக் கலம்பகத்தில் புயவகுப்பு, அம்மானை, மதங்கியார், தழை, ஊசல், களி, மடக்கு, பறவைவிடுதூது, பிச்சியார், மடல், கொற்றியார், ஊர், கைக்கிளை, கிள்ளைவிடுதூது, காலம், சித்து, கார், இடைச்சியார், வலைச்சியார், பாண், மறம், குறம், மேகவிடு தூது, சம்பிரதம், உருவெளிப்பாடு போன்ற உறுப்புக்களுடனும் கட்டளைக் கலித்துறை, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, நேரிசை வெண்பா, அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம், விருத்தக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, சந்தம், கலித்தாழிசை, எழுசீர்ச்சந்த விருத்தம், வஞ்சித்துறை வஞ்சி விருத்தம், எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், மருட்பா, பதினான்கு சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம், நேரிசை யாசிரியப்பா போன்ற யாப்பு வகைகளால் அமைந்த 103 பாடல்களைக்

கொண்ட இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 12-இன் பகுதி 9-12-லும்; தொகுதி 13-இன் பகுதி 1-4; 6-10-களிலும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

### 6. ஆ. காசிக்கலம்பகம்

காசி மாநகரின் பெருமைகளை எடுத்துரைக்கும் நூல் காசிக்கலம்பகம். மதுரைக் கலம்பகத்தில் எடுத்தாண்ட அதே யாப்புக்களையும் யாப்பு உறுப்புக்களையும் கொண்டு பாடப் பெற்றுள்ள இந்நூல் ஸ்ரீகுமரகுருபரனில் தொகுதி 22-இன் பகுதி 5-12-லும்; தொகுதி 23-இன் பகுதி 1-9, 12-களிலும்; தொகுதி 24-இன் பகுதி 1, 2-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

### 7. பிள்ளைத்தமிழ் நூல்கள்

சுவாமிகள் இரண்டு பிள்ளைத்தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்கள். ஆண்பாற் பிள்ளைத்தமிழாக முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழையும் பெண்பாற் பிள்ளைத்தமிழாக மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழையும் பாடியுள்ளார்.

### 7.அ. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

இந்நூல் வைத்தீஸ்வரன் கோயிலில் குடிகொண்டிருக்கும் முத்துக்குமாரசாமி மீது பாடிய பிள்ளைத்தமிழாகும். பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் பத்துப் பருவத்திற்கும் நூறு பாடல்களோடு விநாயகக் கடவுள் துதியையும் சேர்த்து 101 பாடல்களைக் கொண்ட இந்நூல் ஸ்ரீ குமரகுருபரனில் தொகுதி 15-இன் பகுதி 11-லும்; தொகுதி 16-இன் பகுதி 1-12-லும்; தொகுதி 17-இன் பகுதி 1-12-லும்; தொகுதி 18-இன் பகுதி 1-12-லும்; தொகுதி 19-இன் பகுதி 1-2-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

### 7.ஆ. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

மதுரையில் வீற்றிருக்கும் மீனாட்சியம்மை மீது மதுரையில் திருமலை நாயக்கர் முன்னிலையில் பாடிய நூல் இது. பருவத்திற்குப் பத்துப் பாடலென பத்துப் பருவத்திற்கும் நூறு பாடல்களோடு விநாயகர் துதிப்பாடல் ஒன்றையும் சேர்த்து 101 பாடல்களாலான இந்நூல் ஸ்ரீ குமரகுருபரனில் தொகுதி 9-இன் பகுதி 9-12-லும்; தொகுதி 10-இன் பகுதி 2-12-லும்; தொகுதி

11-இன் பகுதி 1–4-லும்; தொகுதி 12-இன் பகுதி 2–8-லும் பாடலும் உரையும் எனப் பதிப்பாகியுள்ளது.

**குமரகுருபரர் பற்றிய நூல்கள்**

குமரகுருபரரைப் பற்றி ஸ்ரீகுமரகுருபரனில் குமரகுருபரர் பிள்ளைத்தமிழ், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நான்மணிமாலை, குமரகுருபர சுவாமிகள் சரித்திரம் போன்ற மூன்று நூல்கள் வெளியாகியுள்ளன.

**1. ஸ்ரீ குமரகுருபரர் பிள்ளைத்தமிழ்**

ஸ்ரீ குமரகுருபரரின் வாழ்க்கை வரலாற்றுக்குத் துணை செய்யும் வகையில் அவரின் இளமைக்கால வரலாற்றைக் கற்பனையுடன் வீரைக்கவிஞர் மகாவித்துவான் கா.ந. நெல்லையப்பர், வீரவநல்லூர் அவர்களால் ஸ்ரீ குமரகுருபரர் மீது பாடப்பெற்றது. ஒவ்வொரு பருவமும் ஐந்து பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பருவப் பாடல்களும் உரையும் ஒவ்வொரு பகுதியில் வெளியாகியுள்ளது. ஒவ்வொரு பருவப் பாடல்களும் தனித்தனியாக இடம்பெற்றுள்ளன. இந்நூல் ஸ்ரீ குமரகுருபரனில் தொகுதி 4-இன் பகுதி 1–10-இல் வெளியாகியுள்ளது.

**2. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நான்மணிமாலை**

குமரகுருபர சுவாமிகள் திருவாரூர் நான்மணிமாலை பாடியது போல் சுவாமிகள் மீது மிகுந்த பற்று கொண்ட வித்துவான் திரு. ச. சுந்தரேசன், திருப்பனந்தாள் அவர்கள் குமரகுருபர சுவாமிகளை மையமாக வைத்து இந்நூலைப் படைத்துள்ளார். சுவாமிகளைப் போல் வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா என்பவை முறையே அந்தாதியாக அமைத்துப் பாடியுள்ளார் இந்நூலாசிரியர். இந்நூல் ஸ்ரீ குமரகுருபரனில் தொகுதி 6-இன் பகுதி 5-இல் முதல் 15 பாடல்கள் மட்டும் வெளியாகியுள்ளன. மற்ற பாடல்கள் பற்றிய தகவல் தெரியவில்லை.

**3. குமரகுருபர சுவாமிகள் சரித்திரம்**

குமரகுருபர சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்று நூல் இது. இதில் குமரகுருபரரின் இளமை (பிறப்பு) தொடங்கி சிவனடி சேர்ந்தது வரையிலான அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் படிப்படியாக கவிதை நடையில் வண்ணச்சரபம்

தண்டபாணி சுவாமிகளுக்கு ஓர் வரலாற்று நூல் கவிதை நடையில் அமைந்தது போல் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களால் இயற்றப்பட்டது. 260 பாடல்களைக் கொண்ட இந்நூல் திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமி நாதையர் நூல்நிலையநூலகர் வித்வான் ஸ்ரீ.அ.நாராயணசுவாமி அவர்கள் எழுதிய குறிப்புரையுடன் தொகுதி 26-இன் பகுதி 3–12-களில் வெளியாகியுள்ளது.

**முடிபுகள்**

1. ஸ்ரீகுமரகுருபரனில் வெளியான குமரகுருபரரின் நூல்கள் எதற்கும் முன்னுரை இல்லை. இதனால் இந்நூல்கள் சுவடிகளை மூலமாகக் கொண்டு வெளியானதா? வேறு அச்சு நூல்களைக் கொண்டு வெளியானதா? என அறிய முடியவில்லை.

2. இது ஒரு தொகுப்பு ஆய்வாகவே அமைந்துள்ளது. இவ்வாய்வை மேலும் விரிவாக ஆய்வு செய்து செம்மைப் படுத்தவேண்டும்.

3. பதிப்பு நூல் வரலாற்றில் ஸ்ரீகுமரகுருபரனுக்கு எப்பொழுதும் ஓர் நிலைத்த இடமுண்டு என்பதில் ஐயமில்லை.

4. ஸ்ரீகுமரகுருபரரின் நூல்களுக்கு பாலகவி. வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் விரிவான உரை எழுதியிருப்பதை இவ்விதழ் வழி அறிகிறோம். இவ்வுரைகள் மூலத்தோடு தனித்தனியாகவோ டாக்டர் உ.வே.சா.வின் ஸ்ரீகுமரகுருபரரின் பிரபந்தத் திரட்டைப் போலவோ தொகுத்து வெளிவந்தால் ஆர்வலர்களுக்கும் மாணாக்கர்களுக்கும் பயனுடையதாக இருக்கும். இதழ்களில் வெளிவரும் நூல்கள் பெரும்பாலும் தனி நூலாக வெளிவராமை இதுவரை ஒரு குறையாகவே இருக்கிறது. இதனைப் போக்கும் விதத்தில் திருப்பனந்தாள் காசித்திருமட அதிபர் சுவாமிகள் இப்பிரபந்தத் திரட்டை வெளியிட வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

5. ஸ்ரீகுமரகுருபரர் படைத்த நான்மணிமாலை, பிள்ளைத் தமிழ் போன்ற இலக்கிய வகைகளில் அவரைப் பின்பற்றிய தற்காலக் கவிஞர்கள் சுவாமிகளை மையமாக வைத்து நான்மணிமாலை, பிள்ளைத்தமிழ் பாடியிருப்பது பாராட்டத்தக்கது.

# சுவாமிகள் காலமும் காசித்திருமடமும்

இரா. சுவாமிநாதன், தஞ்சாவூர்

வட இந்தியாவில் கி. பி. 1628 – 1656 வரை ஆட்சி புரிந்த ஷாஜஹான் மற்றும் கி. பி. 1659 – 1707 வரை ஆட்சிபுரிந்த ஔரங்கசீப் ஆகிய முகலாய மன்னர்களின் பேராட்சி நடைபெற்றது. அக்காலக் கட்டத்தில்தான் காசி மாவட்டத்தில் மட்டும் சுமார் 74 ஆலயங்களும், காசியிலுள்ள விசுவநாதர் ஆலயமும், பண்டோலா மன்னரால் அன்றே ரூ. 34 இலட்சத்தில் கட்டப்பட்ட மதுரா ஆலயமும் இடிக்கப்பட்டன. மேலும், சோமநாதபுரம் ஆலயத்தின் சிலைகளும் தூண்களும் மசூதிகளின் படிகளாக்கப்பட்டு இந்துக்களின் மத உணர்வுகள் பறிக்கப்பட்டும் மிதிக்கப்பட்டும் இருந்தன என்பதனைச் சரித்திர ஆவணங்கள் உறுதி செய்கின்றன.

இந்த நெருக்கடியான காலக்கட்டத்திலே தான் நம் பேரருளாளர் குமரகுருபரர் அவர்கள் செந்திலாண்டவன் பேரருளாலும் அவருடைய ஞானகுரு தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்களின் வழிகாட்டலின்படியும் நெஞ்சுரம் மிகக் கொண்டு துறவறம் பூண்டு இந்து மதத்தின் சைவம் தழைக்க அன்று காசியினை ஆண்டு கொண்டிருந்த பாதுஷாவினைத் தம்வயப்படுத்தி, கருடன் காட்டிய பகுதிகளைப் பரிசிலாகப் பெற்று, கங்கைக் கரையோரம் கேதாரக் கட்டத்தில் குமாரசுவாமித் திருமடத்தினை நிறுவினார்.

**குமரகுருபரரின் காலம்**

குமரகுருபரரின் காலம் 17-ம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர். குருபரரின் முக்தியாண்டு 1999 – 311 அதாவது கி.பி.1688 (குமரகுருபர சுவாமிகளின் குருபூசை இடைவிடாது நடைபெற்று வருவதாகக் கொண்டால்) ஆகும்.

**குருபரர் பிறந்த ஆண்டு**

குருபரர் பிறந்த 5 வயது முதல் பேசாதிருந்தார். அவர் பேசும் திறன் பெற்றுப் பின் சிறு பாலகனாய் இருந்தபொழுது

மதுரைக்குச் சென்று மதுரையம்பதியிலே உறையும் மீனாட்சி அம்மை மேல் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் புனைந்த நேரத்தில் மும்முலையாளே சிறுமியாய்த் தோன்றி திருமலைநாயக்க மன்னருடன் இருந்த பாலகனாகிய குருபரருக்கு முத்துமாலை அளித்ததாகவும் செவிவழிச் செய்தி. உண்டு. திரு. எஸ். ஆர். பாலசுப்ரமணியன், வரலாற்று வல்லுனர் அவர்களின் கருத்துப்படி திருமலைநாயக்கர் 1623–1659-ல் ஆட்சிபுரிந்தாலும் கி. பி. 1635-ல் தான் தனது தலைமையிடத்தை மதுரைக்கு மாற்றினார் என்பதாம்.

எனவே, திருமலை நாயக்கர் அரசவையில் இந்நிகழ்ச்சி 1635ல் நடைபெற்றிருக்கக் கூடும் எனலாம். குருபரருக்கு 5–10 வயது வரை பாலபருவம். எனவே, குருபரரின் 10ஆம் வயதில் இந்நிகழ்வு நடைபெற்றிருக்குமானால் அவரது திரு அவதாரம் கி.பி. 1625 எனக் கொள்ளலாம். இது குருபரரின் காலம் கி. பி. 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனும் தோராய கணிப்பு காலத்திற் குள்ளாகவோ இருப்பதைக் காணலாம்.

எனவே, குமரகுருபரர் கி.பி. 1625-ல் அவதரித்து கி.பி. 1688 வரை வாழ்ந்தார் எனக் கொள்ளலாம். இதன்படி குமரகுருபரர் கி.பி. 1625-ல் அவதரித்து கி.பி. 1635–36-ல் தருமையாதீனத்தை யடைந்து தருமையாதீன 4ஆம் அதிபர் மாசிலாமணி தேசிகர் அவர்களிடம் சிவதீட்சை ஞானோபதேசம் முதலியன பெற்று சுமார் 10 ஆண்டுகள் அங்கிருந்து 1645-ல் தலயாத்திரை மேற்கொண்டு கி.பி. 1647-ல் காசி சென்றிருக்கலாம்.

காசியில் கி.பி. 1647-ல் ஷாஜஹான் பேரரசின் கீழ் சிற்றரசாக இருந்த பாதுஷாவிடம் நிலங்களைப் பரிசிலாகப் பெற்று 1648-ல் காசியில் கங்கைக்கரை கேதாரக் கட்டத்தில் குமாரசுவாமி மடத்தினை நிறுவினார் போலும்!

| | | | |
|---|---|---|---|
| குமரகுருபரர் | 1648 | — | 1688* |
| சொக்கநாத சுவாமிகள் | 1688 | — | 1693* |
| அருணாசல சுவாமிகள் | 1693 | — | 1703* |
| அம்பலவாண சுவாமிகள் | 1703 | — | 1713* |
| சடையப்ப சுவாமிகள் | 1713 | — | 1720* |
| தில்லை நாயக்க சுவாமிகள் | 1720 | — | 1756* |

என்ற காலக் கணக்கில் குமர குருபரரும் அவர்பின் வந்தவர் களும் தலைமையேற்று இருந்திருக்கலாம் என ஊகிக்கலாம்.

அம்பலவாண சுவாமிகள் காலத்திலேயே மொகலாயர்களின் காலம் வீழ்ச்சியுற ஆரம்பித்தது எனலாம்.

ஆக, கி.பி. 1625–1688 வரை 63 ஆண்டுகள் தவமுனிபுங்கராக நெஞ்சுரம் கொண்டு மொகலாய மன்னர்களின் சீற்றத்தில் சிக்கிய சைவமும், தமிழும் தழைக்க அரும்பணியாற்றிய குமரகுருபரரின் புகழ் இன்னும் பல நூறாண்டுகள் நிலைத்து நிற்பதாகும்.

குமரகுருபரர் தருமையாதீனம் சென்று மாசிலாமணி தேசிகர் அவர்களைத் தமது ஞானகுருவாக ஏற்று சிவதீட்சை மற்றும் ஞானோபதேசம் பெற்று, துறவறம் காத்து தலயாத்திரை மேற்கொண்டார்.

தலயாத்திரையுனூடே பன்மொழிப் பயின்று வடதிசைச் சென்று ஆங்கே கோலோச்சிய பாதுஷாவைத் தம் தவவலியாற் கவர்ந்து கருடம் காட்டிய எல்லை வரை நிலங்களைப் பரிசிலாகப் பெற்று கி.பி. 1648-ல் காசியில் கங்கை நதிக்கரையின் கேதாரக் கட்டத்தில் குமாரசுவாமி மடத்தை நிறுவினார்.

கி.பி. 1628–1707 வரை மொகலாயர்களால் ஒடுக்கப்பட்ட இந்து மதத்தினை நிலைபெறச் செய்ய நெடுநோக்கோடு நெஞ்சுரத்துடன் குமாரசாமி மடத்தினை நிறுவினார் என்றால் அதனைப் பாராட்ட சொற்களேது? குருபரர் தம் ஞானாசிரியன் பால் கொண்ட ஈடுபாட்டினாலே தமக்குப் பிறகும் குமாரசுவாமி மடத்தினை நிர்வகிக்க தருமையாதீன மடத்திலிருந்தே வாரிசு வருதல் வேண்டும் என்று வரையறை செய்ததனாலேயே இன்றளவும் இம்மரபு பின்பற்றபட்டு வருவது கண்கூடு.

இவ்வாறாக கி.பி. 1648ல் வாரணாசியில் நிறுவப்பட்ட குமாரசாமி மடத்தின் மூலம் சைவமும் தமிழும் தழைக்க குமரகுருபரரைத் தொடர்ந்து கி. பி. 1720 வரை சுமார் 70 ஆண்டு காலம் காசியைத் தலைமையிடமாகக் கொண்டு பணி தொடர்ந்து நடைபெற்றது.

ஆறாவது தலைமை பொறுப்பேற்ற தில்லைநாயக சுவாமிகள் (1720–1756) காலத்தில் கி.பி. 1736-ல் காசியிலுள்ள மடத்தில் தருமங்களை நிர்வகிப்பதில் பொருளாதாரப் பற்றாக்குறை ஏற்பட்டதைத் தொடர்ந்து தில்லை நாயக சுவாமிகள் 'ரமேஷ் பண்டாரி' (ரமேஷ் பண்டாரி என்பார் இம்மடத்தில் மேலாளராக இருக்கக் கூடும்) என்பார் மூலம் மராட்டிய மன்னரிடம் நிதியுதவி வேண்டினார். கி.பி. 1730-ல் தஞ்சையை ஆண்ட இரண்டாம்

ஏகோஜிக்கு ஆறு மனைவியர் இருந்தனர். இவர் 1736-ல் காலமானதைத் தொடர்ந்து அன்னாரது மூத்த பட்டத்தரசி சஜான் பாயி என்பார் ஆட்சிப் பொறுப்பேற்றார்.

இது தொடர்பான தஞ்சை சரஸ்வதி மகாலில் உள்ள மோடி ஆவணக் குறிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளதாக அறியமுடிகிறது.

"காசியிலுள்ள தருமபுர மடத்தின் சிஷ்யரான நாயக் பண்டாரி ஹுஜுவிடம் செய்துக் கொண்ட அர்ஜி.

"காசியிலுள்ள அன்னசத்திரம், நந்தவனம் நடத்த வேண்டி பேஸஜி 500 சக்கரம் கொடுத்துக் கொண்டிருந்தார். ஆனால் வருஷத்திற்கு தொகை வந்து சேர்கிறதில்லை. ஆகையால் ஒரு கிராமத்தை சர்வமானியம் செய்து கொடுக்க வேண்டும்" என்று அதற்கு பேஸஜி "தற்போது தம்முடைய பேரால் அதிக தருமம் நடக்க 500 சக்கரம் ஜாஸ்தியும் முன்பிருந்த 500 சக்கரத்தையும் சேர்த்து 1000 சக்கரமும் மொயிலுக்கு தாலுக்கா குர்சீயைச் சேர்ந்த சோன்பட் என்ற ஊரில் உள்ள நன்செய், புன்செய் நிலங்களைச் சர்வமானியம் செய்துக் கொடுத்தார்" – என்பதனை அறிய முடிகிறது.

எனவே, மேற்கண்ட நிவந்தம் சோழப் பேரரசன் இராசராசன் தமக்கை குந்தவை பிராட்டியார் அடியொற்றி மராட்டியப் பட்டத்தரசி சஜான் பாயால் வழங்கப்பட்டது என்பதனை இவ்வாவணத்தில் சஜான் பாயி எனக் குறிப் பிட்டுள்ளதைக் கொண்டு இதனை உறுதி செய்யலாம்.

தஞ்சை மராட்டியர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் நூலாசிரியர் மேற்கண்ட ஆவணக்குறிப்பிலிருந்து காசியிலிருந்த தில்லை நாயக்க சுவாமிகளும்; காசியிலுள்ள தருமபுர மடத்தின் சிஷ்யரான நாயக் பண்டாரி என ஆவணத்தில் குறிப்பிட்டுள்ள நாயக் பண்டாரி என்பாரும் ஒருவரே என ஊகித்திருப்பது ஐயப்பாட்டிற் குரியதாகின்றது.

கி. பி. 1720-இல் ஸ்ரீகுமாரசுவாமி மடத்தில் தலைமை பொறுப்பேற்றவுடனேயே அப்பட்டத்திற்குரிய தில்லை நாயக சுவாமிகள் என்றே இருந்திருக்க வேண்டும், தில்லை நாயக சுவாமிகளை 'நாயக்' எனச் சுருக்கமாக அழைத்திருக்கலாம். தம்பிரான், சுவாமிகளைப் பண்டாரம் என அழைப்பது மரபு. எனவே இரண்டையும் இணைத்து தில்லை நாயக சுவாமிகளை நாயக் பண்டாரி என்றே அழைத்திருப்பர் போலும். இது இந்தி

மொழியமைப்புக்குரிய சொல்லாட்சியே ஆகும். அவ்வாறிருக்க கி.பி. 1720 சுமார் 10 ஆண்டுகள் தலைமைப் பொறுப்பில் உள்ள தில்லை நாயக சுவாமிகள் நாயக் பண்டார்ரி என்ற பிரிதொரு பெயரில் மராட்டிய மன்னருக்கு நிதியுதவி வேண்டி கடிதம் எழுத அவசியம் நேர்ந்திருக்கக் காரணமில்லை. மேலும், நாயக் பண்டாரி என்ற பெயர் வட இந்தியர்களின் பெயரினை ஒப்பதாலும் (பண்டாரி என்ற சொல்லுக்கு தீரமான நெஞ்சினன் எனப் பொருள்) பண்டாரி என்பது அன்னாரது இயற்பெயராகவும், நாயக் என்பது அவர் பணிபுரிந்த பதவியின் பெயரும் சேர்ந்து நாயக் பண்டாரி என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும்.

எனவே, நாயக் பண்டாரி என்பார் இராணுவத்தில் பணியிலிருந்து ஓய்வு பெற்றபின் காசியிலுள்ள குமாரசுவாமி திருமடத்தில் ஸ்ரீலஸ்ரீ தில்லை நாயக்க சுவாமிகள் அவர்களிடம் மடத்தின் நிர்வாகப் பொறுப்புக்களைக் கவனிக்கும் மேலாளர் போன்று பணிபுரிந்திருத்தல் கூடும் என ஊகிக்கத் தோன்று கிறது. எனவே, மேற்படிக் கடிதம் தில்லை நாயக சுவாமிகளின் மடத்தின் சார்பாக நாயக் பண்டாரியாரின் பேரில் அனுப்பப் பெற்றிருக்கக் கூடும். ஆகவே, நாயக் பண்டாரி என்பார் திருமடத்தில் பணியாளராதல் கூடும். ஆதலால் நாயக் பண்டாரியும், தில்லை நாயக சுவாமிகளும் ஒருவரே என்ற நூலாசிரியரின் கூற்றுப்படியல்லாது அவர்கள் இருவராக இருக்கக் கூடுமோ எனச் சிந்திக்க வைக்கின்றது.

**காசிமடம் திருப்பனந்தாளில் நிறுவப்பட்டதற்கான காரணிகள்**

1. மொகலாயப் பேரரசின் வீழ்ச்சி. 2. கி.பி. 1737-ல் மராட்டிய பட்டத்தரசியார் சுஜான்பாயி அவர்களால் குமாரசுவாமி மடத்தின் மூலம் தருமங்களை நிர்வகிக்கும் பொருட்டு குர்சி தாலுக்கா சோன்பட் என்ற கிராமத்திலுள்ள நன்செய் புன்செய் நிலங்களைச் சர்வமானியம் செய்து கொடுத்தது. இந்த சோன்பட் என்ற கிராமம் தற்போதைய ''பட்டம்'' என நம்பலாம். (இந்த பட்டம் தற்போது திருப்பனந்தாளுக்கு அருகில் உள்ளது) கி.பி. 1720-லிருந்து குமாரசுவாமி திருமடத்தின் அதிபராக விளங்கிய தில்லைநாயக சுவாமிகள், மேற்படி நிலங்கள் நேரடிப் பார்வையில் இருந் தால்தான் அதன் மூலம் வரும் வருவாயைக் கொண்டு மடத்தின்

பணிகளைச் சிறப்புறச் செய்ய இயலும் என்று கருதியதும்; 3. தமது குருபீடமான தருமபுரத்திற்கு அருகில் இருப்பதுவே சிஷ்யருக்குச் சிறப்பென எண்ணியதாலும், 4. நாயன்மாரால் பாடப்பெற்றதும் குங்கலியக் கலய நாயனார் சிறப்பெய்திய சைவத்தலமாகவும்திருத்தமடகை ஈசுவரமாகவும் திருப்பனந்தாள் விளங்கியதாலுமே இங்குக் காசியிலுள்ள குமாரசுவாமி மடத்தின் முதல் கிளையாக அமைத்து பின்பு நிரந்தரமாக இங்கேயே தங்கி "காசிவாசி" என்பதனைச் சிறப்புப் பெயராக் கினார் எனின் அதுவே பொருத்தமுடையாகும்.

கி.பி. 1772-ல் பிராதபசிங்கர் மகன் துளஜா (1765 – 1787) அரசரால் காசி தருமத்தின் திருலோகி மாகாணத்தைச் சேர்ந்த எட்டுக் கிராமங்களும் குறிச்சி மாகாணத்தில் உக்கடை, தரணி மாகாணத்தில் நாலாதபடி என்ற கிராமங்களும் சர்வமானியம் செய்து கொடுக்கப்பட்டது. அவ்வமயம் குமரகுருபர சுவாமிகள் 2 என்பவர் இம்மடத்தில் தலைவராக இருந்தார். தற்போதும் திருலோக்கி முதலான கிராமங்கள் ஸ்ரீ காசிமடத்திற்குச் சொந்தமாக உள்ளதனைக் கொண்டு மேற்கண்ட செய்தியை உறுதி செய்யலாம்.

கி.பி. 1850-ல் சைதாம்பாபாயி "கைலாஸவாஸி" என்பவர் பெயரால் காசியில் சிவன்கோயில் எடுப்பிக்கவும், பூசை நிவதேனத்துக்காகவும் காசித்தம்பிரான் அவர்களிடம் ரூ. 2,500/– கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. கி. பி. 1851-ல் ஒவுசாகேப் அவர்களால் காசி கேதார கூட்டத்தில் உள்ள கேதாரீசுவரர் கோயிலில் விளக்கு போட 70,000 விளக்குத் திரியும் விளக்கு எண்ணெயும் வாங்கவும், விளக்கிடும் நாளில் அந்தணருக்கு உணவளிக்கவும் ரூ. 125 அனுப்பப் பட்டதாகவும் தெரிகிறது.

கி. பி. 1798 – 1836 வரை அதிபராக விளங்கிய சட்டப் பத்தம்பிரான் காலத்தில் காசியில் காசித்தம்பிரானாக விளங்கிய அய்யாறப்பத் தம்பிரான் சிவாஜி மகாராஜாவிற்கு எழுதியுள்ள கடிதத்தில் சாம்பாஜி நாயக்கர் தருமம் கலிஜிஅக்கா தருமம், மலையாள தருமம், கொச்சித் தருமம், கள்ளிக்கோட்டை தருமம், சேதுபதி தருமம், தொண்டைமான் தருமம், மதுரை, துறையூர், வெங்கடகிரி, நெல்லூர், ஆர்க்காடு, சைதாவூர், ஹைதராபாத், சென்னைப் பட்டினம், விஜயநகரம் தரும

ராஜதிவான் செட்டி பிள்ளைகள் தருமம் சரிவர நடந்து வருவதாக எழுதியுள்ளார்கள்.

மேலும் குமரகுருபர சுவாமிகள் 2 அவர்களிடம் நாரேபந்த் தபீர் என்பார் மதுரை சக்கரம் 2000 அளித்து இராமேசுவரத்தில் வேதாத்தியாயனம், நந்தவனம், தண்ணீர்ப்பந்கல் முதலியன நடத்த நிதியளித்துள்ளார் எனத் தெரிய வருகின்றது.

இவைகளினின்று காசி மடத்திற்குத் தருமகாரியங்களை நிர்வகிப்பதற்காக பல்வேறு மன்னர்களும் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறான உதவிகளைச் செய்து வந்துள்ளனர் எனத் தெரிய வருகின்றது.

இவ்வாறாக கி. பி. 1648-ல் காசியில் குமரகுருபரரால் குமாரசுவாமி மடமாக நிறுவப்பட்டு கி. பி. 1737-ல் தில்லை நாயகசுவாமிகளால் திருப்பனந்தாளில் நிறுவப்பட்டு அன்று முதல் ஸ்ரீ காசிமடமாகி, சுமார் மூன்று நூற்றாண்டுகட்கு (350 ஆண்டுகள்) மேலாகச் சைவமும் தமமும் தழைக்க இடையறாது அரும்பணி ஆற்றிவருகிறது.

குமரகுருபரரும் அவரடி பின்பற்றி அன்னாரது பின்னோராகிய சொக்கலிங்க சுவாமிகள் முதல் இன்றுள்ள முத்துக்குமாரசுவாமிகள் ஈறாக,

> "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார்"

என வள்ளுவன் வழிநின்று காசிமடம் அதன் குறிக்கோளின்று நழுவாது அறம் காத்து சைவநெறியும் தமிழும் வளர்த்து வருவதால் தான் எனின் வேறு சான்றுரைக்கவும் வேண்டுமோ?

கி. பி. 1737-ல் இந்தத் திருமடம் தமிழகத்திலே தோற்று விக்கப்படாமலிருப்பினும்; வழிவழிவாய் வந்த சுவாமிகளனை வரும் சைவமும் தமிழும் தழைக்க அரும்பணி ஆற்றாம லிருந்தாலும் குமாரசுவாமி மடம் காசியிலே இன்றளவும் ஒரு மொழி சிறுபான்மையினரின் ஆய்வுக்கூட அளவினதாகவே இருந்திருக்கும் என்பது உறுதி.

சுமார் 250 ஆண்டுகட்கு முன்பாகவே திருப்புமுனையைச் சந்தித்து அறம் காத்து தமிழும் சைவமும் வளர்க்கும் இத்திருமடம் மேலும் பன்னூற்றாண்டுகள் தன்பணி தொடர எல்லாம் வல்ல ஈசனடி பணிந்தேத்துவோமாக!

# இந்து சிலை மாளிகையும் தூளிகையும்

கோ. தெய்வநாயகம், தஞ்சை

உலக விந்தைகளுள் ஒன்று இந்தியத் தாஜ்மகால். தாஜ்மகால் ஒரு அரசியின் நினைவாலயம். அதாவது ஒரு சமாதிக் கட்டுமானம் எனினும் உலக அளவில் அது மதிக்கப் பெறுதற்கு அது புலனாக்கும் ஒப்பற்ற 'அழகு'தான் காரணமாகிறது. இவ் அழகு அக்கட்டுமானத்தின் வழிப் புலனாவதற்கு அடிப்படைக் காரணங்களாக மூன்றைக் கொள்ளலாம். அவை;

1. கட்டுமானச் சூழல்
2. கட்டுமானத் திட்டம்
3. கட்டுமானப் பொருள்

முதலாவது காரணத்தை நோக்கும் போது இச்சூழல் ஒரு நதியோரச் சோலையாக இருப்பதும் ஊருக்கு வெளியாகத் தனித்து இருப்பதும் ஆகும். யமுனை நதிக்கரையில் ஆக்ராவில் திகழும் இத் தாஜ்மகால் விரிந்து பரந்த நீலவானம், வெண் மேகங்கள் யமுனையின் பசிய நீல நிற அலை கூடிய நீர்த்தரங்கம், பசிய ஆற்றங்கரைச் சூழல் ஆகிய வண்ணப் பின்னணியில் கட்டுமான முகடு ஒன்றில் தோற்றப் பொலிவு கொண்டுள்ள சிறப்பாகும்.

இரண்டாங் காரணத்தை நோக்குங்கால் இக்கட்டுமானம் மிகப் பெரும் திட்ட அளவீட்டில் பிரம்மாண்டமாக எழும்பி யுள்ளமை ஆகும். தளம் முதல் தூபி வரை காணலாகும் கட்டுமான உறுப்புகள் யாவும் அளவீட்டில் மிகப் பெரியவை யாகவும் நிலைப்பாடும் கலைப்பாடும் மிக்கவையாவும் நாற்புறப் பார்வையழகு தருவதாகவும் விளங்கும் திட்ட வரைவாகும். மொகலாயப் பேரரசின் அரசியல் ஆளுமையும் பேரரசன் ஷாஜஹானின் அற்புதக் காதலின் ஆழமும் இந்த திட்டமிடலின் அடிப்படை ஆதாரங்களாத உள்ள நுட்பமும் புலனாகும்.

மூன்றாவதாகிய கட்டுமானப் பொருட்களின் அருமையும் தரமும் அளவும் கொள்ளீடும், பயன்பாடும் அக்கட்டுமானத்தின் தனிப்பெரும் சிறப்பையும் தனித்துவத்தினையும், கட்டுநர் அக்கட்டுமானத்தின்பால் கொண்டுள்ள ஈடுபாட்டு முனைப்பையும் காட்டுவதாகும். மேலும் அக்கட்டிடத்தின் அகப்புறத் தோற்றத்திற்கும் பொலிவிற்கும் கட்டிடம் கட்டப் பயன்படும் பொருள்களே காரணங்களாகின்றன. அவை கொண்டுள்ள வடிவாக்கம் இப்பொலிவினை மேம்படுத்துவதாயுள்ளது.

இந்நிலையில் ராஜபுதனத்து வெள்ளைச் சலவைக் கற்பாளங்கள் தாஜ்மகாலின் உள்ளும் புறமும் சுவர், தளம் ஆகியவற்றின் பரப்புகளில் பயன்படுத்தப்பட்டு வெள்ளிய வண்ணப் பொலிவை அமைதி மிக்க தரத்தில் முன் குறிப்பிட்ட பலவண்ணப் பின்னணியில் புலப்படுத்துகின்ற அக்கட்டுமானத்தில் காலத்தை வென்று புலப்படும் ‘காதல்’ உணர்வின் ஆழத்தை அப்பொலிவு என்றென்றும் விளக்குகின்றது.

17-ஆம் நூற்றாண்டில் வடஇந்தியாவை முழுமையாக ஆட்சி செய்த மொகலாயப் பேரரசின் அதிசயப் படைப்பாக வட இந்தியா முழுதும் பேசப்பட்ட ஒரு கட்டுமானம்தான் பளிங்குக்கல் படைப்பாகிய தாஜ்மகால். எனவே இத்தாஜ்மகால் இந்தியா முழுதும் ஏதோவொரு காரணத்தால் பயணித்து வந்த பயணியரிடையே நன்கு அறிமுகமாகி ஆர்வத்தோடு கண்டதிசயிக்கப் பெற்ற அருமைத்தாகும்.

அப்பயணிக்கு அத்தாஜ்மகாலை பகலிலோ இரவிலோ, இருளிலோ நிலவொளியிலோ காணும் வாய்ப்பமைந்திட அவ்வாய்ப்பிற்கேற்ப அத்தாஜ்மகாலின் பொலிவைத்துய்த்திடும் வாய்ப்பமைந்திருக்கலாம். அவருள்ளும் நல்ல படைப்புத்திறமும் கற்பனை வளமும் நிரம்பிய கவிஞர்கள் இத்தாஜ்மகாலை அக்காலத்தில் காணும் வாய்ப்புப் பெற்றிருந்தால் அதிலும் பளிங்குக்கற்களை முதன் முதலாகக் கண்டு அரும் பொருளாகக் கருதிடும் தமிழ்க் கவிஞர் ஒருவர் கண்டிருந்தால் அதன் விளைவு வேறெதாக இருக்க முடியும்? கவிதையன்றி?

இதோ ஒரு கவிதை......அல்ல......அல்ல...... செய்யுள் ஆம் உணர்வுப் பீறலின் அற்புதப் பதிவு,

''தீற்றுஞ் சுதைவெண் நிலவெறிப்பத்
திரள்மா மணிகள் வெயில் விரிக்கும்
செம்பொற் றலத்துப் பேரமர்க்கண்
சிறியர்நறிய அகிற் புகையிட்
டாற்றுங் குழற்காட் டினைப் புயலென்
றாடு மயில்கண் டம்பவளத்
தரும்பு நகையைச் சகோரப்புள்
ளருந்த விரிந்த முழுநகை வீண்
டுற்று நிலவுக் கிந்து சிலை
யொளிர் மாளிகையும் சூளிகையும்
உருகிப் பெருகும் கலுழி வெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவு
மாற்றுங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மணியாள் எயிறு வாய்த்த முழு
மணியே தாலோ தாலேலோ''

தமிழிலக்கிய உலகிலே; கற்பனைத் திறத்திலே தனிப்பெரும் இடம் கொண்ட குமரகுருபர சுவாமிகளின் பாடல்தான் இது.

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழின் தாலப் பருவப் பாடலாகக் கிளக்கப்பட்ட இப்பாடலின் ஆற்றல் பற்றித்தான் இனி சிந்திக்கின்றோம்.

குமரகுருபர சுவாமிகள் 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சமயஞ்சார் கவிஞர். வடமொழியும் தமிழும் கைவரப் பெற்றவர். காசி சென்று தமது சித்தாற்றலால் இசுலாமிய மன்னரின் உள்ளத்தை வென்று காசியிலேயே காசி மடத்தைத் தோற்றுவித்து வளர்த்த பெருந்தகை. அவரது வடநாட்டு வாழ்வியல் அனுபவம் பளிங்குக் கல் கட்டுமானங்களையும் அறிமுகம் செய்திருக்கலாம்.

சுண்ணச் சாந்தை முட்டையின் வெண் கரு, கடுக்காய் காடித் தண்ணீர் இவற்றுடன் கலந்து அம்மியிலிட்டு அரைத்து வழித்த விழுது கொண்டு பூசிய சுவர்ப் பரப்புகளில் அன்றைய தமிழகக் கட்டுமானங்கள் நிலவென ஒளியைப் பளபளப்புடன் தந்து நின்றதற்கு சுவாமிகளின் உள்ளம் பெருமிதமும் பேருவகையும் அடைந்திருக்கிறது. அதனைத்தான் இப்பாடலின்

முதற் தொடர்களும் சுட்டுகின்றன. மதுரை நாயக்கர் மகாலும், தஞ்சை அரண்மனையும், சாளுவ நாயக்கன் பட்டினத்து மனோராவும், பல்லாயிரம் பழம் வீடுகளும் இத்தகு பளபளக்கும் வெள்ளிய சுண்ணக்காரைப் பூச்சிற்குப் பழக்கமுற்றவை. சுவாமிகளின் நெஞ்சைக் கவர்ந்தவை. இதனைத்தான் 'தீற்றுஞ் சுதை வெண்ணிலா போன்ற முத்தொளியை வழங்கிடும் செம்பொற்றலம்' என சுவாமிகள் சுட்டுகிறார்.

பளிங்குக் கல் கட்டுமானங்களை 'இந்து சிலை மாளிகை, சூளிகை எனக் குறிக்கின்றார். நாம் சலவைக்கல், பளிங்குக்கல், சோப்புக்கல், மார்பில் எனக் குறித்திடும் வெள்ளைச் சலவைக் கற்களைச் சுவாமிகள் 'இந்து சிலை' அதாவது 'நிலவுக்கல்' எனச் சுட்டுகின்றார்.

தமிழகத்தார்க்கு 'வடவர் தந்த வான்கேழ் விட்டமும் சந்திரகாந்த, சூரியகாந்தக் கற்கள் சங்க காலத்திலேயே வாழ்வியற் கட்டுமானங்களில் ஓரோவிடங்களில் பயன் கொள்ளப்பட்டதை நெடுநல்வாடையும் சிலப்பதிகாரமும் பிறவும் நமக்கு நன்கு விளக்குகின்றன.

ஆனால் சந்திர காந்தக் கற்களாலேயே கட்டுமானம் முழுதும் பொலிவுறும் வாய்ப்பு வடஇந்தியாவிற்கே வாய்த்த ஒரு அருமையாகும். காசியில் ராஜபுதனத்து அரசர்களும், செல்வரும் பொதுமக்களும் தங்குதற்கு அவர்களால் கங்கைக் கரையில் கட்டப்பட்டிருந்த பல கட்டிடங்கள் இச்சந்திரகாந்தக் கற்களைக் கொண்டு படைக்கப்பட்டவையாக இருந்திருக்கலாம். மேலும் பிற அரசரும் இதன் அழகு பற்றி இவ்வணமே தமது வாழிடங்களையும் காசியிலும் அலகாபாத்திலும் அருகாமை இடங்களிலும் படைத்திருக்கலாம்.

சுவாமிகள் காசியில் நெடுநாள் தங்கி வாழ்ந்தவராதலின் காசியில் அக்கட்டிடங்களின் பொலிவைக் கங்கையின் நீர் பெருக்குப் பின்னணியில் கண்டு மகிழ்ந்திருக்கலாம்.

தில்லிக்கருகாமையிலுள்ள ஆக்ராவின் தாஜ்மகாலை யமுனையின் நீர்ப் பெருக்குப் பின்னணியில் சூரிய ஒளியிலும், நிலவிலும் கண்டு மகிழ்ந்திருக்கலாம். 'இந்து சிலையினூடே சூரிய ஒளி ஒழுகி வெளிப்படும், பட்டுத் தெறித்து ஊடறுத்து ஒசும்பி ஒழுகி வெளிப்படும் நுட்பம் கண்டு அதிசயித்திருக்கலாம்.

நீர்த்தரங்கப் பின்னணியில் இப்பளிங்குக் கட்டுமானங்கள் உருகி ஒழுகிடும் தோற்றம் போல் உணர்வு தரும் சிறப்பு கண்டு மனங்களித்திருக்கலாம். இவ்வினிய உணர்வுகள் மனத்தில் பதிவாகியிருந்து முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழின் பாடல் புனைவின்போது பிரவாகமாக வெளிப்போந்து இந்த அதி அற்புத கற்பனைச் செறிவும் வீறும் மிக்க பாடலைத் தந்திருக்க வேண்டும்.

கற்பனையின் அடிப்படைகள் காசிக் கட்டுமானங்களோ, தாஜ்மகாலோ அல்லது வேறெதுவோ பிற கற்பனையாவும் சுவாமிகளின் அதீத ஆற்றலே.

இப்போது இச்செய்யுளின் பொருள் காண்போம்.

கடற்கரையை அடுத்த உள்ளூராகிய புள்ளிருக்குவேளூர் காந்தபுரியாகும். அவ்வூரின் வீடுகளில் சுவர்களில் பூசப்பட்டுள்ள சுண்ணச்சுதைச் சாந்து நிலவொளியை ஒப்ப ஒளிதரும். அங்குப் பதிக்கப்பெற்றுள்ள ரத்தின மணிகள் வெயில் போன்று ஒளி விரிக்கும். அத்தகு செம்பொன்னின் நிறம் வாய்ந்த வீடுகளில் வாழ்ந்த பெரிய அழகிய கண்களையுடைய நங்கையர் நறிய அகிற்புகையிட்டுத் தம் ஈரக் கூந்தலை உலர்த்துவர். அகிற்புகை மூட்டத்தின் பின்னணியில் ஆழ்ந்து காணப்பெறும் அக் கூந்தன் தொகுதியை மழை மேகம் எனக் கருதி அங்குள்ள மயில்கள் மகிழ்வு கொண்டு தோகை விரித்தாடும். அம் மயக்கு கண்ட நங்கையரின் அழகிய பவளம் போன்ற அதரங்களில் அரும்பிடும் முறுவலை நிலவுக்கதிர் எனக் கருதிய சகோரப் பறவை அருந்தும். அது கண்டு முழுதும் மலர்ந்த முகத்தினராம் அவ்விளம் பெண்களின் முழு நகையால் பற்கள் யாவும் பளிரென வீசிடும் ஒளி முழு நிலவொளியாக அருவிபோல ஊற்ற அவ்வொளிப் பெருக்கின் வீழ்ச்சியாலே அங்குள்ள நிலவுக் கற்களால் ஆன மாளிகையும் சூளிகையும் உருகிப் பெருகின. அந்நீர்ப் பெருக்கு அடுத்துள்ள கடல் பெருக்கின் உவர்ப்புச் சுவையை மாற்றும் அருமை வாய்ந்தது தெய்வத் தன்மை வாய்ந்த கந்தபுரியாகிய வைத்தீசுவரன் கோயில் ஆகும். அக்கந்தபுரியின் வாழ் முதலாகிய முருகா தால மிடுக, மலைமகளின் மணி வயிறு வாய்ந்த முழு மணி போன்ற செவ்வேளே தாலமிடுக. என்ன அற்புதமான கற்பனை.

கற்பனை இருக்கட்டும் கட்டுமானத்திலும் சுவாமிகள் காட்டும் விளக்கம் வியக்கத்தக்கது.

மாளிகை என்பன குவி மாடக் கூரையுடன் கலிங்கனாகிய குடுமி படைத்த கட்டுமானங்கள், அவை சமயஞ் சார்ந்தவை யாகும். பளிங்கு முற்றங்கள் படைத்த சூளிகையைச் சுட்டுவதும் தாஜ்மகாலின் அற்புதக் காட்சியாம்.

இவ்வகையில்,

1. கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் குமரகுருபர சுவாமிகள் வாழ்ந்தவராவார்.
2. இவர் வட இந்தியாவில் சில பகுதிகளில் பல ஆண்டுகள் தங்கி வாழ்ந்தவர்.
3. மொகலாயப் பேரரசர் ஷாஜஹான் 17-ஆம் நூற் றாண்டில் தாஜ்மகாலைக் கட்டியுள்ளார். (1627-1658)
4. காசியிலும் பல ராஜபுதனத்து சலவைக்கல் கட்டிடங்கள் அக்காலத்தில் இருந்தன.
5. எனவே சுவாமிகள் இக்கட்டிட அழகினைக் கண்டு மகிழ்ந்திருக்க வாய்ப்புண்டு.
6. சுவாமிகள் தமது கற்பனை வளம் மிக்க செய்யுற் புனைவுகளில் இந் நிலவுக்கல் கட்டிடங்களைப் பல இடங்களில் குறித்துள்ளார்.
7. அதில் அற்புதம் மிக்க இப்பாடலின் அடிப்படைக்கு இந்நேர் கண்ட காட்சியுணர்வும் ஒரு காரணமா யிருக்கலாம்.

# குமரகுருபரர் விரும்பும் இளைய சமுதாயம்

**கோ. ப. நல்லசிவம், தஞ்சாவூர்.**

குமரகுருபரர் இளமை முதலாகவே துறவு நெறியில் நின்று இறையருளைப் பெற்றவர். எல்லாவற்றையும் துறந்தவர் மொழியைத் துறந்தாரில்லை. சொல்லப் போனால் மற்றெல்லாரையும் விட தமிழை உயிராக, உணர்வாக, இறையாக மதித்துப் போற்றியவராக வாழ்ந்திருக்கிறார். அவரது மொழிப்பற்றையும் தமிழ்க்காதலையும் எண்ணி எண்ணி வாழ்நாளெல்லாம் வியக்கலாம். தாமிரபரணி, வைகை, காவிரிக் கரைகளில் கண்ட தமிழைக் காசியிலும் கங்கைக் கரையிலும் கூட சுவைத்து மகிழ்கிறார். உடம்பை முன்னம் இழுக்கென்றிருந்தேன், உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன் அதனால் உடம்பை யானிருந்து ஓம்புகின்றேனே என்னும் திருமூலர் கருத்துப்படி இவ்வுடம்பின் வழி உறுபொருளாம் இறையை அடைய முடியும் என முழுமையாக நம்பினார். ஆதலின் நிலையாமையை உணர்த்தும்போது கூட இந்த யாக்கையை அவர் ஓட்டைமாடத்து ஒன்பது வாசல் என்றோ, புழுப்பெய்த பண்டி, சீழும் எலும்பும் இரத்தமும் சேர்ந்த பை என்றோ இகழவில்லை. வாய்த்தது ஈதோர் பிறவி நந்தமக்கு என மகிழ்ந்து இவ்வுடம்பின் உறுதுணையாலே இறையருளைப் பெற முடியும் என்று கருதி வெற்றியும் பெற்றார். இக்கட்டுலர குமரகுருபரர் பாடல்களில் காணப்பெறும் கல்விக் கொள்கை மற்றும் இளைய சமுதாய நெறி ஆகியவற்றைக் காண முற்படுகின்றது.

## தமிழ்க் கல்வியின் பயன்

உடம்புக்கும் உயிருக்கும் உறுதுணையாக வல்லது கல்வியே என்பதில் அவருக்கு அழுத்தமான நம்பிக்கை இருந்தது. கல்வி காட்டாதன இல்லை. கல்வி கரை சேர்க்கும், பிறவிப் பெருங் கடலை நீந்தப் பெரும்புணையாகும் என்பது அவர் கொள்கை.

அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும் – உறுங்கவல் ஒன்று
உற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை. (நீதிநெறி. 1)

இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டியவற்றையெல்லாம் நிறைவாகக் கொடுத்துப் பின் முடிவாக வீட்டின்பமாம் முத்திப் பேற்றையும் கல்வி அளிக்க வல்லதாகும். ஆதலின் கற்பதும் கற்றவழி நிற்பதும் நன்னெறியாம் முத்தியைத் தரும் என்கிறார்.

கற்றாங்கு அறிந்துஅடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டுமனந் திருத்திப் – பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணிபறநின்று ஒன்றுணர்ந்து
நிற்பாரே நீள்நெறிச்சென் றார். (நீதி. 101)

பொதுப்பட உரைக்கப்பெறும் கல்வியிலும் மொழிக் கல்வி என்பது 'இலக்கிய இலக்கணப் புலமை என்பது சிறப்பாகத் தமிழ்க்கல்வி என்பது இறைவனை அடைவதற்குரிய சீரான வழியைக் காட்டும் என்கிறார். ஆதலின் தாம் வணங்கும் தெய்வங்களிடமெல்லாம் தமக்குத் தமிழ்ப்புலமை வாய்க்கப்பெற வேண்டும் என்று இறைஞ்சுகிறார்.

"முருகனே உன்னிடம் நாங்கள் இரந்து கேட்பவை பொன்னும் பொருளும் போகமும் அல்ல உன்னிடத்து நீங்காத அன்பும் அதனால் நாங்கள் பெறும் அருளும்தான் எமக்குத் தேவை எனப் பரிபாடல் காட்டுகிறதே, அத்தகு நிலையிலேயே நம் குமரகுருபரர் தமிழ்க்கல்வியை வேண்டுகிறார். தம் முதற் பாடலாம் கந்தர் கலிவெண்பாவிலே (118–119)

"ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவதா னமும்சீர்ப்
பேசும் இயல் பல்காப்பியத் தொகையும் – ஓசை
எழுத்து முதலாம்ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமையைப் பாலித்திட வேண்டுகிறார்.

இறுதிப் பாடலாகிய சகலகலாவல்லி மாலையிலும் அவர் இம் மொழிப்புலமையையே பெரிதும் வேண்டுவதைக் காணலாம்.

பண்ணும் பரதமும் தீஞ்சொற்பனுவலும், சொல்விற்பனமும், அவதானமும் கவிசொல்லவல்ல நல்வித்தையும் தந்து அடிமை கொள்வாய், பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும் என்பாற் கூட்டும்படி நின் கடைக்கண் நல்காய், நாடும்

பொருட்சுவை, சொற்சுவை தோய்தர நாற்கவியும் பாடும் பணியிற் பணித்தருள்வாய், தூக்கும் பனுவற் துறைதோய்ந்த கல்வியும் சொற்சுவை தோய் வாக்கும் பெருகப் பணித்தருள்வாய் என்றெல்லாம் வருகின்ற பாடல் வரிகள் குமரகுருபரர்க்குக் கல்விப் பெருமையே பெருமையாக இருந்ததைக் காட்டுகின்றன. ஆம் வாழ்வின் நிறைவாகவே கல்வியறிவைக் கண்டார் அவர்.

கல்வியின் பயன் இறையருளை, இறைவனை அடைவதாகும். இதனைத் தம் பாடல்களில் சுட்டியுள்ள நம் அடிகளார், தமிழ்க் கல்விக்குத் தெய்வங்கள் தண்ணருள் சுரக்கும் தன்மையை உறுதிபட நினைவு கூர்கின்றார். தம் வாழ்நாள் பட்டறிவைக் கொண்டே இதனை உணர்த்துகின்றார். புலவோர் கவிமழை சிந்தக் கண்டு களிக்கும் மயிலே, (சகல. 3). இவட்கு ஆடல், வேறில்லை எமைப் பாட்டுவிப்பதும் கேட்பதும்'' (மீனாட்சி இரட்டை. 7) தூது கொண்டும் தமைத் தோழமை கொண்ட தொண்டர் தண்தமிழ்ச் சொற்கொண்ட குண்டலக் காது கொண்டு எம் கவிதை கொண்டடு ஆட்கொண்ட காசிநாதர். (காசிக். 36) இவ்வாறெல்லாம் தமிழ்க் கல்வியை விரும்பியேற்று அருள்புரியும் தெய்வங்களும் தமிழ் பாடுகின்றன. பாடி மகிழ் கின்றனவாம்.

> ''மும்மைத் தமிழ் தேர் கந்தபுரி
> முருகா முத்தந் தருகவே'' (முத். பிள். 45)
>
> ''சங்கத் தமிழின் தலைமைப் புலவா
> தாலே தாலேலோ'' (முத். பிள். 27)
>
> ''முதுதமிழ் உததியில் வரும்ஒரு
> திருமகள் முத்தம் அளித்தருளே (மீனாட். 52)
>
> ''முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ்
> நூல் பாழ் போகாமே
> மதுரைப்பதி தழையத் தழையுங்கொடி'' (மீனாட். 31)

இப்படிப் பல இடங்களில் தெய்வங்களின் தமிழ்க் காதலைக் காட்டுகிறார். ஓரிடத்தில், கலைமகளும் வேத மொழிகளைக் கேட்டுக்கேட்டு அலுத்து விட்டதால் தமிழின் சுவையறிய இறங்கி வந்தாள் என்கிறார். இவையெல்லாம் தமிழ்க் கல்வியாற் இறைவனை யடைய முடியும் என்பதற்கான சான்றுகளேயாம். இவற்றுக்கெல்லாம் முடிமணியாக பல்வேறு வகைப்பட்ட பக்தி நெறிகளில் தமிழ்ப்பாவால் துதிக்கும் நெறியே மேலானது

எளிதானது என்பதற்கு ஒரு சான்று காட்டுகிறார் நம் அடிகள். சரியை, கிரியை போன்ற வழிகளால் சிவபெருமானை வழிபட்ட திருமால் தம் கண்களையே மலராக அருச்சித்து பெற்ற பேற்றைவிட, நம் சுந்தரர் சொன்மாலை புனைந்து பெற்ற பேறு அதிகமாகும். ஆம், அவர்தம் பாடல் இறைவனையே பரவை பால் தூது அனுப்பும் தோழமையாக்கி விட்டதே. தமிழ் எதைச் செய்யாது?

> தண்மலரும் பொழில் தென்கமலேசர்க்குச் சாத்துகின்ற
> ஒண்மலர் சொன்மலர்க்கு ஒவ்வாதுபோலும்
> மற்றோர்புலவன்
> பண்மலர் சாத்திப் பணிகொண்டவா பச்சைமால் சிவந்த
> கண்மலர் சாத்தியும் காண்பரி தானகழல் மலரே.
>
> (திருவாரூர் நான்மணி. 31.)

கல்வி கற்பது இறைவனை அடைவதற்கே. எனினும் இடையில் தாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றாற் போல தாம் கற்ற கல்வியை வீணாக்காது பிறர்க்கும் கற்றுக் கொடுத்துப் பயன்பெறச் செய்ய வேண்டும். சொல்வன்மை உண்டெனிற் கொன்னே விடுத்தொழித்தல் நல்வினை கோறலின் வேறல்ல. (நீதி. 69) போன்றன இதனை வலியுறுத்தல் காணலாம்.

இவ்வாறு கல்வியின், தமிழ்க் கல்வியின் சிறப்பையும் பயனையும் பல இடங்களில் விதந்தோதி மொழிப்பற்றிடத்து நம்மைத் துறவு கொள்ள வேண்டா என ஆணையிட்டு, கல்வி இறைவனைக் காட்டும், வீட்டின்பத்தை உறுதியாக நல்கும் என ஊக்கப்படுத்துகின்றார் நம் அடிகளார். கற்றதனால் ஆயபயன் வாலறிவன் தாள் தொழுவது எனக் கல்வியின் பண்பைச் சுட்டினார் திருவள்ளுவர். நம் அடிகளோ ஒருபடி மேலே சென்று நல்ல தமிழ்க்கல்வி இறைவனைத் தொழுவதால் கிடைக்கும் பயனையும் தந்துவிடும் என உறுதிபட மொழிகின்றார்.

### இளமையிற் கல்வி

அன்றறிவாம் என்னாது அறம் செய்ய வேண்டும், தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும், இளமையிற் கல்வி சிலைமேல் எழுத்து, ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா போன்ற முதுமொழி களை நன்குணர்ந்தவர் நம் குமரகுருபரர், ஆதலின் சமூக உணர்வுடன் பல கருத்துகளைத் தம் பாடல்களில் ஆங்காங்கே

பெய்துள்ளார். இளமையும் யாக்கையும் நிலையாதன. ஆதலின் இளமையும் யாக்கையும் இருக்கும்போதே கல்வி கற்றுவிட வேண்டும், அதன்வழி இறையைத் தேடி விடவேண்டும் என்பதை இளைய சமுதாயததினர்க்கு அறிவுறுத்துகிறார். சிற்றுயிர்க்கு உற்றதுணை கல்வியே என்று குறிப்பிட்ட அடிகளார், இளமை இருக்கும் போதே உடல், பொருள் இவற்றைக் கொண்டு கல்வி யால் இறைவனைத் தொழ வேண்டும் என அறிவுறுத்துகிறார்.

நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் – நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாதது எம்பிரான் மன்று. (நீதி. 1)

இவ்வாறு நிலையாமையை மிக எளிய உவமை வழி தெளி வாக்கிய நம் அடிகளார், கல்வி கற்பது கடினமானாலும் நலஞ் செய்யும் பெருமை கொண்டது. ஆதலின் அதனை முயன்று காமத்தை விலக்கிக் கற்க வேண்டும் என்கிறார். இளைய வயதில் தோன்றும் ஆசையும் பிறவும் தொடர்ந்த துன்பங்கள் பல வற்றுக்கு வித்திட்டுவிடும். "சுகார்த்தி வித்யம் த்யஜே, வித்யார்த்தி சுகம் த்யஜே" எனும் வாக்கிற்கிணங்க சுகத்தை விரும்புவான் பயனுள்ள கல்வியை இழந்து துன்பப்படுவான் வித்தையாகிய அறிவை விரும்புவான் சுகத்தைத் தியாகம் செய்து மேன்மையடைவான் எனும் பொருளில் அற்புதமான ஒரு வெண்பாவின் வழியாக உரைக்கின்றார்.

தொடங்குங் காற்துன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன்று அறிவுஅகற்றும் கல்வி – நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது. (நீதி. 3)

இவ் அறிவுரை இளைஞர்க்கு அவர்தரும் சிறந்த பாலபாட மாகும். தொடக்கத்திலேயே கல்வியின் பயனைச் சுட்டிக் காட்டிப் பின் அலைபாய்கின்ற ஆசைகளின் துன்பவிளைவுகளை எடுத்துக் காட்டி விட்டால் இளைய சமுதாயம் தொடர்ந்து நெறியான வாழ்க்கையில் செல்லும் என்று அவர் நம்புகிறார். ஆதலின் மீண்டும் நிலையாமையை எடுத்துச் சொல்லி இளமையும் சூழலும் இருக்கும் போதே எம்பிரானை ஏத்திப் பயன்பெற வேண்டும் என்று அறிவுறுத்துகிறார். காமவயப்பட்டு துன்பத்தில் உழன்று வீணாகச் செத்து ஒழிவதால் என்ன பயன்? காமியத்

தழுந்தி இளையாதே காலர் கைபடிந்து உழலாதே எனும் அருணகிரியாரின் வாக்கு ஈண்டு நினையத்தகும்.

அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே யிறந்து விடல். (சிதம். செய். 34)

தெளிவில் கேள்வியிற் சின்னூ லோதி
அளவா நின்னிலை யளத்தும் போலும்
அறிவும் ஆயுளும் குறையக் குறையாத
பையுள் நோய் எண்ணில படைத்துப்
பொய்யுடல் சுமக்கும் புன்மை. (சிதம். மும். 17)

**முயற்சி திருவினையாக்கும்**

தொடங்குங்கால் கல்வி துன்பமாயிருப்பது போல் தோன்றினும் அதனைத் தொடர்ந்து முயன்று கற்றல் வேண்டும். அதுவும் தவமும் ஒன்றே. ஆதலின் இடையீடுகளை முறியடித்துக் கருமமே கண்ணாயிருந்து அதனை மேற்கொள்ள வேண்டும். தடைகள் கண்டு தளரக் கூடாது என்று ஊக்கப்படுத்துகிறார் நம் அடிகளார்.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் – செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (நீதி. 53)

முயற்சி திருவினையாக்கும், ஊழையும் வெல்ல முடியும். தொடர்ந்த முயற்சி வெற்றியைத் தரும் என்று ஊக்கப்படுத்துகிறார். ஒருவர் துன்பப்பட்டு இறக்கின்ற தறுவாயிலும் அவருக்கு மருந்துகளைக் கொடுத்து மருத்துவம் பார்ப்போம், இது மனித இயல்பு. அதுபோல கடைசி வரை முயலவேண்டும் என்கிறார். அவ்வாறு முயன்றால் விதியையும் வெல்ல முடியும். ஆம். மார்க்கண்டேயன் வரலாற்றைச் சுட்டிக் காட்டி முயற்சியை ஊக்கப்படுத்துகிறார்.

"உலையா முயற்சி களைகணா ஊழின்
வலி சிந்தும் வன்மையும் உண்டே" (நீதி. 57)

என்றும்,

"உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப" (நீதி. 49)

என்றும் ஊக்கப்படுத்துகிறார். எனவே கல்வி, தவம் இவற்றை யாக்கை நிலையாமையை மனத்துட் கொண்டு தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும் என்கிறார்.

இளைய முதுதவம் ஆற்றுதும் நோற்றென்
உளைவின்று காண்பாரும் ஊழே – விரிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம். (நீதி. 91)

அடக்கம் தேவை

இப்படியெல்லாம் முயன்று கல்வி கற்றுத் தவமேற் கொண்ட விடத்து நம்மைப்போல் கற்றார் உளரோ என்ற தறுகண்வந்து விடுமே. அதை வரவிடாமல் காத்துக் கொண்டு அடக்கமாக இருக்க வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார் அவர்.

முற்றும் உணர்ந்த வரில்லை முழுவதூஉங்
கற்றனம் என்று களியற்க. (நீதி. 14)

தம்மின் கற்றாரை நோக்கிக் கருத்தழிய வேண்டும். நாம் இவ்வளவு கற்க வில்லையே, நம் கல்வி எம்மாத்திரம்? என்று அடங்க வேண்டும் என்கிறார். இவ்வாறு எல்லாம் கூறியவர் சிலபண்புகளுக்கும் விளக்கம் தருகிறார். இவை ஊன்றிப் பயிலத் தக்கன.

இன்பம் நயவாமை யன்றே நலம்
தன்னை வியவாமை யன்றே வியப்பாவது (நீதி. 19)
செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவா எனப் படுமே. (சிதம்.மும். 26)

இவ்வாறு அடங்கிக் கற்றுத் துறைபோகிய வழி உண்டாக்கும் இலக்கியவளம் என்றும் வாழுமாறு அமையும். பிரமனை விட இக்கவிஞர்கள் உயர்ந்து விடுவர். வீழாது என்றும் வாழும் இயல்பினராவாராம்.

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்தமிழோர்க் கொவ்வான் – மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு. (நீதி. 7)

இல்லறமும் நல்லறமே

இவ்வளவும் கூறி விட்டதால் ஏதோ காமம் ஒழித்துக் கல்விகற்று தவமியற்றும் தவவாழ்க்கையைத் தான் குமரகுருபரர்

வலியுறுத்துகிறாரோ என்று ஐயுறுவார்க்கு இல்லறமும் நல்லறமே என்பதை அழகான இலக்கணமாகத் தருகிறார்.

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமும் தாழ்வு படாமே – பெரிதுந்தம்
இன்னலும் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்தல் நலம். (நீதி. 78)

காமம் கதுவப்பெற்றார் கொலை, களவு, பொய் போன்ற குற்றங்களுக்கு ஆளாவதால் அதனை முறைப்படுத்தும் நல்லறத்திற்கு அவர் இவ்வாறு இலக்கணம் காட்டுகிறார்போலும்.

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து – மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமாசு அகற்றுந்
நலமன்றோ நல்லாறு எனல். (நீதி. 60)

இந்நற்பண்புகளுடன் நல்லார் உறவும் சேர்ந்து விட்டால் இல்லறம் மேலோங்கி இருக்கும் சிறப்புக் குரியதாகிவிடும்.

செம்மை செய்தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே.
(சிதம். மும். 1)

**வறியவர் கல்வி பயன் தராதா?**

இவ்வாறெல்லாம் கல்வியின் சிறப்பையும் வாழ்க்கையின் நலத்தையும் சுட்டிய நம் குமரகுருபரர், வறியவன் கற்கும் கல்வியில் பயன் இல்லை என்பதுபோல் பாடியிருப்பது சிந்தனைக் குரியதாக இருக்கிறது பசித்தவனிடம் கல்வியை, தவத்தை, சமய உண்மைகளைப் பேசுவதால் பயன் இருக்குமா?

எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையும் சீர்ப்பா டிலவாம் – மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல். (நீதி. 10)

எனவே வறுமையைப் போக்கிக் கல்வி நல்குவதை அரசுதான் பொறுப்பேற்றுச் செய்ய வேண்டும் என்கிறார் போலும். இளமையிற் கற்கவேண்டிய காலத்து வறுமை அம்முயற்சிகளுக் கெல்லாம் தடையாகிவிடும் போலும், கொடிது கொடிது

இளமையிற் வறுமை எனப் பாடிய ஔவையாரும் இது கருதியே கூறியிருப்பார் போலும்.

வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியிரங்கிய வள்ளலார், பசித்திரு, தனித்திரு, விழித்திரு எனக் கூறினாலும் பசித்தவனிடம் ஞானத்தைப் பேசி என்ன பயன்? அவன் வயிற்றுக்குச் சோறிட்ட பின்பே எதையும் பேச வேண்டும் என உணர்ந்து அறச்சாலைகளை நிறுவியமையை ஈண்டு நினைவு கூர்தல் தகும். இதுகுறித்தே குமரகுருபரர் வரிவாங்குதல், பொருளீட்டுதல், முயற்சி போன்றவற்றை கூறியுள்ளார் எனலாம்.

இவ்வாறு குமரகுருபரர் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய அடிப்படையாகக் கல்வியையும் முயற்சியையும் பிற நல்லறங் களையும் வெளிப்படுத்தி இளைய சமுதாயத்தைவழி நடத்துவதில் தலைசிறந்த இலக்கியக் கவிஞராகவும், மொழியால் வீடுபேற்றை யடைய முடியும் என்ற நம்பிக்கையை ஊட்டுவதில் தெய்வக் கவிஞராகவும் திகழ்கின்றார் எனலாம். வாழ்க குமரகுருபரர் தமிழ்.

# குமரகுருபரரின் இலக்கிய நோக்கு

த. கோ. பரமசிவம், தஞ்சாவூர்.

இலக்கியமும் வாழ்க்கையும் கண்ணாடியும் எதிரொளியும் போன்றன. கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை போல இவை ஒன்றுடன் ஒன்று சர்வசம நிலையில் இணைந்துள்ளன. இலக்கியத் திறனாய்வாளர் பலரும் இலக்கியம் என்பது காலக்கண்ணாடி, வாழ்க்கைக் கண்ணாடி என்னும் கூற்றில் ஒருமித்த கருத்தையே கொண்டுள்ளனர். கலை வாழ்க்கைக்கே என்றும், கலை கலைக்காகவே என்றும் இரு வேறுபட்ட கருத்துக்களைக் கொண்ட மேலை நாட்டு மற்றும் கீழைநாட்டு இலக்கிய ஆய்வாளர்களும் இதில் ஒருமித்திருப்பது காணலாம்.

எதுவும்... சொல்லானாலும் செயலானாலும் ஒரு பயனுடையதாக, நோக்குடையதாக, குறிக்கோள் உடையதாக இருக்க வேண்டும். பயனில சொல்வானை மனிதன் என்று சொல்லாதே அவனைப் பதர் என்று கூறு என்று வள்ளுவர் ஆணையிடுகிறார். இதை நோக்கும் போது சாதாரண வார்த்தையே பயனை நோக்கித்தான் அமைய வேண்டும் என்று கூறும்போது அதன் முதிர்ச்சியாகிய செயல் எப்படி இருக்க வேண்டும்? பெருநோக்குடையதாக வன்றோ இருக்க வேண்டும். பயனில் சொற்கே பதடி என்று கடிந்த வள்ளுவர் பயனில் செயலை எவ்வாறு இகழ்வார். எனவே வெளிப்படத் தோன்றும் சொல்லும் செயலுமாகிய வாழ்க்கை என்பதும் ஒரு நோக்குடையதாக பயனுடையதாக அமைய வேண்டும் என்பதில் ஐயமில்லை. எனவே வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடியாம் இலக்கியமும் நோக்குடையதாக பயனுடையதாகத் தானே இருக்கவேண்டும். நன்னோக்கும் நற்பயனுமில்லாத இலக்கியம் இலக்கியமாகா என்றனர் நம் முன்னோர். அதனால்தான் நூல், கலை போன்ற எதுவும் நாற்பயன் கொண்டதாக இருக்க வேண்டும் என்று இலக்கணமே செய்தனர். அறமும் பொருளும்

இன்பமும் இவற்றால் வரும் வீடுபேறும் கருதியதாக இலக்கியங்கள் அமைய வேண்டும். அத்தகையனவே இலக்கியங்கள். இப்பயன்களை வழங்கத்தவறும் பிற சிற்றிலக்கியங்களேயாம்.

தம்முடைய நோக்கம் இது. தாம் கூறப் போந்தது இது என ஒரு பொருளைத் தேர்ந்து அதனை முறைப்படுத்தி வழங்குவதே நூலின் நோக்கமாக இருக்கும். அவ்வாறு தேர்ந்த பொருளைச் சுவைப்பார் திறனுக்கு ஏற்பக் கூறி உணர்த்த முயலும்போது கையாளப்பெறும் உத்திகளே இலக்கியத்தின் போக்கு என்பர். பசி உணர்வு, காம உணர்வு போன்றன இயல்பானவை. ஆயின் அற உணர்வும் இறையுணர்வும் ஒருவன் முயற்சியால் கல்வியறிவால் எழுவன ஆகும். இதனை வலியுறுத்தும் போக்கில் அமைந்தனவே குமரகுருபரரின் கவிதைகள். மானுடம் உய்யும் நெறியனைத்தும் தம் இலக்கியங் களின் நுதல் பொருளாக அவர் அமைத்திருத்தலைக் காணலாம்.

நம் குமரகுருபரர் துறவியான ஞானியாவார். எனினும் தமிழ்மொழியை, தமிழிலக்கியத்தைத் துறவாது புரட்சி செய்தவர். ஆதலின் சிற்றிலக்கியங்கள் பலவற்றைப் படைத்துப் பிரபந்த வேந்தராகவே திகழ்ந்தவர். அவர் படைத்தன சிற்றிலக்கியங்களே. எனினும் பேரிலக்கிய மரபு விதிக்கும் நாற்பயனை நல்கும் நற்கவிதைகளாகவே அவற்றைப் படைத்துள்ளார். இது அவர் செய்த இலக்கியப் புரட்சியாகும். இப்புரட்சியில் திளைக்கும் இக்கட்டுரை குமரகுருபரரின் இலக்கிய நோக்கு பற்றிய ஆய்வில் ஈடுபடுகிறது.

### இலக்கிய நோக்கு

இலக்கியம் என்பதே இலக்குடையதுதான். இலக்கிலும் இலக்கிய நோக்கமும் நோக்கத்தின் பயனும் இருக்க வேண்டுவதே இலக்கிய நோக்காகும். இந்த இலக்கியம் எதை நோக்குகிறது? இந்த இலக்கியம் எதைச் சொல்லுகிறது? இந்த இலக்கியம் எப் பயனை நல்க வல்லது? இந்த இலக்கியம் எதற்காக எழுந்தது? எதை நிறுவுதற்காக எழுந்தது? இதன் அடிப்படை யாது? போன்ற பல்வேறு வினாக்களுக்கும் விடை தருவதாக அமைய வேண்டுவதே இலக்கியநோக்கு. வாழ்க்கையைப் படம் பிடிப்பது தான் இலக்கியம் என்றாலும் உன்னதக் காட்சிகளுக்கு நம்மை அழைத்துச் செல்லவேண்டும்.

வாழ்க்கை பொருளுடையதாக இருக்கவேண்டும், ஏதோ வெந்ததைத் தின்று செத்தோம் என்றிருக்கக் கூடாது. சொற்கள் பயனுடையதாக இருக்க வேண்டும், செயல்கள் நிலைத்த அருமையும் பயனுமுடையதாய் அமையவேண்டும். இப்படி அமைந்துவிட்டால் இவற்றால் அமைந்த வாழ்க்கையும் பொருளுடையதாகவே அமைந்துவிடும். எனவே வாழ்க்கையின் கண்ணாடியாக விளங்கும் இலக்கியங்களுக்கும் இத்தகு பயன்பாடு இன்றியமையாததாகும். மனிதனை நெறிப்படுத்தத் தோன்றியன இலக்கியங்கள். அவனிடத்துக் காணும் குற்றங்களைக் கடிந்து நன்மைகளைப் பாராட்டி அன்பு, மனிதநேயம், சமுதாய நலன் முதலான நற்கூறுகளை ஏற்கத் தூண்டுவதாக அவை அமைதல் வேண்டும். தாம் சார்ந்த மொழி, இனம், மக்களைக் காலங்கடந்தும் உயர்த்துதற்குரிய உணர்வுகளைத் தூண்டுவதாக அவை விளங்க வேண்டும். சமுதாயம் எப்படி இருக்கிறது என்பதைக் காட்டுவதிலும் சமுதாயம் எப்படி இருக்க வேண்டும், எப்படி உயர்வடைய வேண்டும் என்பதைத் தனிமனித உணர்வு களுடன் இணைத்துக் காட்டும் இலக்கியமே வாழும் இலக்கிய மாகக் கருதபெறும்.

கவியரசர் கம்பர் கவிதை குறித்துத் தெரிவிக்கும் கருத்துகள் இலக்கிய விளக்கமாகவே அமைதல் காணலாம்.

''கற்பக அனையவக் கவிஞர் நாட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது''

(பம்பை. 3713)

''புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்''

(2732)

''நல்லியல் கவிஞர் நாவில் பொருள்குறித் தமர்ந்த நாமச்
சொல்லென செய்யுட் கொண்ட தொடையென தொடையை நீக்கி
எல்லையில் சென்றும் தீரா இசையென பழுதிலாத
பல்லலங் காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ''

(7293)

இத்தகு இலக்கணத்தைக் கொண்ட இலக்கியங்களே வாழும் இலக்கியங்கள். நோக்குடைய இலக்கியங்கள். பயன்படும் இலக்கியங்களாம்.

ஆக, இலக்கியம் என்பது நோக்குடையதாக, பொருளுடையதாக இருக்கவேண்டும் என்பதில் கருத்து மாறுபாட்டிற்கு இடமில்லை எனலாம். ஒன்றின் நோக்கம் பெரிதாகவும் இருக்கலாம், சிறிதாகவும் இருக்கமுடியும். ஆயின் நுகர்வோர் பெறுகின்ற நன்மையைப் பொறுத்தே அதன் பயனை அளவிட்டுக் கூறமுடியும். காலச் சூழலும் தேவையும் இடமும் கூட இப்பயனை மாற்ற முடியும், முற்றிலும் சிதைக்க முடியும். இப்பயன் காலங்கடந்தும் வாழும், சிலநேரங்களில் காலத்தால் மறக்கடிக்கப்பெற்று வீழ்ந்து விடுவதும் உண்டு. இலக்கிய நோக்கம் என்பது கவிஞரைப் பொறுத்து அமைவதாகும். பயனோ மக்களைப் பொறுத்தது. பயன்பாட்டைப் பொறுத்தே நோக்கத்தின் உயர்வு வெளிப்படும். பெருமையும் சிறப்பும் கூட பயன்பாட்டைப் பொறுத்தே அமையும். இந்த நோக்கமும் பயன்பாடும் காலங்கடந்தும் வாழும் போது அக்கவிஞரை அருட்கவிஞராக மதித்துப் போற்றும் நிலை உருவாகும். குமரகுருபரரின் நோக்கும் அதனால் பெறும் பயனும் அவரை அருட்கவிஞராக உயர்த்துவனவே என்றால் அது மிகையாகாது.

இலக்கியத்தில் இடம்பெறும் கற்பனைகள் கூட சுவை பயக்கின்றன, இன்பம் ஊட்டுகின்றன. என்றாலும் அதில் இன்ப நோக்கமொன்றே குறிக்கோளாக அமைந்துவிடக் கூடாது, உண்மையை விளக்குவதோடு உண்மையை ஒட்டியதாகவும் இருத்தல் வேண்டும். அத்தகு கற்பனைகளே இலக்கியங்களில் வாழ்கின்றன என்பர். இன்பமூட்டுவதே இலக்கியத்தின் பயன் என்பர் சிலர். ஆயின் இலக்கியம் அளிக்கும் இன்பம் நிலை பேறுடையதாக இருக்கவேண்டுமானால் மனித வாழ்க்கையை மேம்படுத்தும், உயரச் செய்யும் அறநெறிக் கருத்துகளும் அனுபவ உண்மைகளும் அதில் இடம்பெறத்தான் செய்ய வேண்டும். அப்பொழுது தான் அது வாழும் இலக்கியமாகக் கருதப்பெறும் என்பர் டி. எஸ். எலியட் போன்றோர்.

"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்"

"ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்"

"உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்"

எனக்கூறித் தாம் எதற்காகச் சிலப்பதிகாரத்தை எழுதினோம் என்பதற்கு விளக்கம் தருகிறார் இளங்கோவடிகள். கம்பரும், அறம் வெல்லும், பாவம் தோற்கும்; காமமே அலைக்கழிப்பது; குலப் பெருமை பாராட்டுக்குரியது; உடன் பிறந்தார் பாசம் போற்றற்குரியது போன்றவற்றுக்காக இராமாவதாரம் பாடியுள்ளார்.

அந்த வகையில் குமரகுருபரர் இலக்கண இலக்கியமாகவே தம் நூல்களை யாத்தருளியிருப்பது நோக்கத் தகுவதாகும். இலக்கணம் என்பது கருத்தை வெளியிடுவதாக அமையும், இலக்கியம் என்பதோ உலகுக்கு வழங்கத்தக்க பொருளைக் குறியாகக் கொண்டு அதனைச் சுவைபடவும் மேம்படவும் விளக்கிக் கூறுவதாக அமையும். குமரகுருபரரின் கவிதைகள் இவ்விரண்டுள்ளும் அடங்கியிருத்தலை உணரலாம். அவர்தம் நூல்களில் நடப்பியல், குறிக்கோளியல் இரண்டையும் காண முடியும். கல்வி, அரசு போன்றவை பற்றிய அவர்தம் கருத்துகள் இவ்விரண்டையும் வெளிப்படுத்துவனவேயாம்.

காலத்துக்கும் சூழலுக்கும் ஏற்ப இவற்றை வெளிப் படுத்துவதில் அருட்கவிஞர்கள் முன்னிற்பர். இராமலிங்கர் 5-ம் திருமுறை வரை சைவநோக்குடனே தம் திருஅருட்பாவை வழங்கியுள்ளார். ஆயின் 6-ம் திருமுறையில் சமுதாய நோக் கொன்றையே முதன்மைப்படுத்தியுள்ளார் என்பர். குமரகுருபரர், கந்தர் கலிவெண்பாவில் சமயநோக்கொன்றையே முதன்மைப் படுத்தி, "இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ்ந்து திருவடிப்பேறு அடைய அருள்க" என வேண்டியுள்ளார், ஆயின் நீதிநெறி விளக்கத்தில் சமுதாய நோக்கொன்றையே முதன்மைப்படுத்தி மனித இனம் மேம்படும் வழிமுறைகளைச் சிந்தித்திருக்கிறார். எனவே அவரது இலக்கியநோக்கு இருவகையிலும் நடப்பியலிலும் குறிக்கோளியலிலும் தலைசிறந்து விளங்குதலைக் காணலாம். அவரது கவிதைகளில் இவை இயல்பாகவே அமைந்து உள்ளமையை மேலோட்டமாகக் காண்பாரும் உணர்வர். சுருங்கக் கூறின், குமரகுருபரரின் இலக்கியங்கள் இலக்கியச் சுவையையும் வாழ்க்கைப் பயனையும் ஒருசேர கலந்து தந்து இன்பத்தை ஊட்டி நிற்கின்றன எனலாம்.

**பிறவிப்பிணி**

உயிர்கள் பிறந்தும் இறந்தும், இறந்தும் பிறந்தும் எனத் தொடர் ஓட்டத்தில் நிலையில்லாது அலைந்து கொண்டுள்ளன.

முப்பு சாக்காடு போலவே பிறவியும் ஒரு நோய்தான். இப்பிறவிப்பிணியினின்று விடுபடுவது எவ்வாறு? நிலைத்திருப்பது எப்படி? எத்தனை பிறவி எடுத்து எடுத்து மடிவது? ஏன் இந்தச் சுழற்சி? அலைச்சல்? இதற்கு ஒரு விடிவு கிடைக்காதா என ஏக்கமுற்ற ஞானியர் பலராவர். காமியமாகிய ஆசையில் விழுந்து திளைப்பதுதான் இப்பிறவித்துன்பத்திற்குக் காரணமா? என்று ஐயுற்றனர். காமியத் தழுந்தி இளையாதே. காலர் கைப்படிந்து மடியாதே என்றும்

எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
எனதிடர்ப் பிறவி அவதாரம்
கழுகொடு நரியும் எரிபுவி மறலி
கமலனும் மிகவும் அயர்வானார்''

என்றும் அருணகிரியார் தம் திருப்புகழில் கூறுவது போலவே, பட்டினத்தாரும்,

''மாதாவும் உடல் சலித்தாள்
வேதாவும் கை சலித்தாள்''

என இப்பிறவித்துயரையும் சுழற்சியையும் வேதனையோடு கூறுகின்றார். மாணிக்கவாசகரோ எல்லா வகைப்பட்ட பிறவி யையும் தாம் மேற்கொண்டு ஒய்ந்துவிட்டதாகப் பட்டியல் போட்டு இனிப் பட முடியாது துயரம். உன் திருவடிகளைப் பற்றி விட்டேன். அதனால் இனியாவது எனக்கு விடுதலை கிடைத்து விடும் என்கிறார்.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லா மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
(சிவபுராணம் 26-32)

எனவே பிறவாது இருக்க வேண்டுமாயின் இறவாது இருக்க வேண்டும். இறவாமை வேண்டுமெனில் முத்தி பெற வேண்டும். அப்போதுதான் பிறவிப்பிணி முற்றுமாக நம்மைவிட்டு நீங்கும். அதுதான் சும்மா இருக்கும் சுகம். அப்பேரின்பத்தை நாடுவதே உயிர்களின் நோக்கமாக இருக்கவேண்டும் என்று உணர்ந்தனர்.

உணர்த்தினர் நம் ஞானிகள். இப்பேரின்பத்தை அடைவதற்குரிய வழி இறைவனைப் பிடித்துக் கொள்வதுதான். பிறவிப் பெருங் கடலை கடப்பதற்கு இறைவன் திருவடிகளே சரியான ஓடமாக இருக்கும். எனவே இறைவனைப் பிடித்துக் கொள்ளும் பேரன்பு ஒன்றே இதற்குரிய வழியாகும் என்றுணர்ந்து உணர்த்தினர்.

பரமஞானியராகிய நம் குமரகுருபரரும் இத்தகு உன்னத நிலையையே தம் நோக்காகக் காட்டுகின்றமையை அவர்தம் நூல்களில் பரக்கக் காணலாம்.

"புண்ணியப் பொதுவில் ஆடும் பூங்கழல் இறைஞ்சுதும்
விண்மிசைப் போகிய வீடுபெறற் பொருட்டே.

(சிதம். செய். 43)

இத்தகு கருத்தையே பல இடங்களிலும் அவர் வலியுறுத்தி யுள்ளமையை அவர்தம் கவிதைகளில் காணலாம். பிறவிப் பிணியை அகற்றி வீடுபெறுவது நம் வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்கவேண்டும். அந்த இலக்கை அடைவதிலேயே எக்காலமும் எச்செயலும் அமைய வேண்டும். இந்நன் நோக்கத்தையே, பெருநோக்கத்தையே இலக்கிய நோக்காக வெளிப்படுத்தியுள்ளார் அவர்.

**யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையம்**

குமரகுருபரர் இலக்கணத்தில் இலக்கியத்தையும் இலக்கி யத்தில் இலக்கணத்தையும் காட்டி, தமிழ்க்காதலும் அதன்வழி இறைக்காதலும் அடைவதுதான் தம் இலக்கிய நோக்கமாகக் காட்டுகிறார். கவிஞர்களின் கவிதைகள் பலவிதமாகக் காணப் படுகின்றன. மண்ணிலிருந்து இச்சமுதாய மக்களின் பிரச்சினை களை மட்டுமே ஊடுருவி நோக்கிய நிலையில் இம்மண்ணை மட்டுமே காட்டி நிற்கும் கவிதைகள், இம் மண்ணிலிருந்து கொண்டு வீடு பேறடையும் நோக்கொன்றையே கொண்டு விண்ணைக் காணவிரும்பும் கவிதைகள், மண்ணின் சிக்கல்களை ஊடுருவி நோக்கி அவற்றைக் களைய வழிகூறி விண்ணைக் காட்டி விண்ணுக்கு அழைத்துச் செல்லும் கவிதைகள் எனப் பலவகை களில் கவிதைகள் காணப்படுகின்றன.

உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் எனும் நன்னோக்கிற் கிணங்க நாம் எடுத்துள்ள மனிதப் பிறவியினின்று இன்னும் உயர்ந்து வீடுபேற்றையும் பெற்று விடவேண்டும் என்பதில் நம்

அடிகளார் மிகுந்த ஈடுபாடு கொண்டவராகக் காணப்படுகிறார். தாம் பெற்ற பெறுகின்ற பட்டறிவுகளின் வழி, பிறரையும் உயர்த்துகின்ற வகையில் பிரச்சார நோக்கிலும் அவர் கவிதை களைப் புனைந்திருப்பது அவரது பரந்துபட்ட சமூக உணர்வைப் பிரதிபலிப்பதாகக் காணப்படுகிறது. தாம் கல்வியின்வழி இறைவனைப் பெற்றதும் அதன்வழி வீடுபேறு பெறப் போவதையும் பலர்க்கும் உணர்த்தி யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்கிறார்.

கல்வியை விட சிற்றுயிர்க்கு உற்றதுணை வேறில்லை. ஏனெனில் "கல்லா நெஞ்சில் நில்லான் ஈசன்" எனும் முதுமொழியை அவர் நன்குணர்ந்தவராவார். ஆதலின் வீடு பெறுவதற்கு இறையும் இறையைப் பெறுவதற்குக் கல்வியும், கல்வியைப் பெறுவதற்கு முயற்சியும் இன்றியமையாதன என்பதைப் பல இடங்களில் பேசுகிறார்.

அவரது இலக்கியங்களில் நான்கு வழிகளில் இலக்கிய நோக்கைக் காணமுடியும். இறையருளை விரும்பி விழைந்து பெறுதல் அதற்காகக் கல்வியில் கருத்தூன்றல்; அக்கல்வியால் சைவ சமயக் கருத்துகளை விளக்கிப் புரிய வைத்தல் அதற்குத் தமிழறிவே சாலச் சிறந்த தெனல்; இவ்விரு நோக்கத்தால் தம்மைத் தூய்மை செய்து கொள்ளும் முயற்சியில் ஈடுபடுதல். இவற்றையெல்லாம் அடைந்த பிறகு கிடைக்கின்ற பேரின்பத்தைப் பிறர்க்கும் எடுத்துரைத்து வழிநடத்துதல் என்பனவாம் அவை. கற்றவற்றைப் பிறர்க்குச் சொல்லித் தராதவர்கள், "இணர் ஊழ்த்தும் நாறா மலரனையர்" என்பதோடு

"சொல்வன்மை உண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல. (நீதி. 69)

என்று பழித்துக்கூறியும் பிறர்க்குப் பயன்படவே கல்வியும் இறையன்பும் இருக்க வேண்டும் என்கிறார். இவ்விறுதி நோக்கம் அவர்தம் இலட்சிய நோக்காகவே மிளிர்வதை யாண்டும் காணலாம். தம் குருநாதரை வியந்து துதிக்கின்ற பாடலில் (பண்டார. மும். 20) இதனை நிறுவுதல் காணலாம்.

"சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்கும் காவியப் புலவ
செவிதொறும் செவிதொறும் தெள்ளமு தூட்டிக்
கவிஞர் வயினிரப்புங் கல்விப் பிரசங்க"

குமரகுருபரர் வாழ்ந்தகாலத்து மாற்றுக் கலாச்சாரமும் மாற்று மொழிகளும் தலைதூக்குகின்ற சூழல் இருந்தது. அவர், தென்னாட்டில் தோன்றியவர் வடநாடு சென்று வடமொழி களைக் கற்று முத்தி பெற்றவர். சைவசமயியாக இருந்து முகமதிய மன்னரின் மதிப்பையும் பெற்றவர். துறவியாக இருந்து மொழியைத் துறக்காது பாராட்டி வளர்த்தவர். தமிழ்த் தொடர்பைவிட அவர் கவிதைகளில் துறவு தத்துவம் பற்றிய குறிப்புகள் குறைந்து காணப்படுவதே இதற்குச் சான்று. இம்மாறுபட்ட சூழல்களிலும் சிலவற்றைப் பட்டறிவு கொண்டு தெளிந்த ஞானியராக அவர் விளங்குதலின் மொழிக்கல்வியை அவர் வலியுறுத்தி நம்பிக்கையூட்டுவதில் தலைநின்றார் போல் தோன்றுகிறது. ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழறிவித்தற் காகவே குறிஞ்சிப்பாட்டு பாடிய வரலாற்றை ஒப்ப, தமிழர் களுக்குத் தமிழுணர்வை (முத்தியும் தரவல்ல உயர்ந்த மொழி) ஊட்டுவதற்காகவே அவர் தமிழ் பாடியது போல அவர் தம் கருத்துகள் யாண்டும் காணப்படுகின்றன. ஆதலின் தமிழும் தமிழோடிணைந்த இசையும் எல்லாவற்றையும் கூட்டுவிக்கும் என்பதை உணர்த்தினார்.

''மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட
மன்னரும்என்
பண்கண்டளவில் பணியச் செய்வாய்''

எனச் சகலகலாவல்லி மாலையில் வேண்டிய நம் அடிகளார், சுந்தரர் சொன்மாலை இறைவனைத் தூதுபோகும் ஏவலனாக்கியது, பச்சைப்பசுங் கொண்டலான திருமால் பைந்தமிழ் பின் சென்றது, முதுதமிழ்ப்புலவனாக முருகன் வீற்றிருப்பது, கலைமகளும் தமிழ் வேட்டல் என்றெல்லாம் தமிழின் சிறப்பை எடுத்துக்காட்டி என் கவிதையைக் கேட்பதையே வேலையாகக் கொண்டுள்ளாள் மீனாட்சி,

''இவட்கு ஆடல்வே றில்லை எமைப்
பாட்டுவிப் பதுங்கேட் பதுவும்'' (மீனாட்.இரட். 7)

என்றும்,

''பொழிந்து ஒழுகு முதுமறையின் சுவைகண்டும்
புத்தமுதம்,
வழிந்து ஒழுகும் தீந்தமிழின் மழலை செவிமடுத்
தனையே'' (மதுரைக் கலம். 2)

என்றும்,

"எம் கவிதைகொண்டு ஆட்கொண்ட காசிநாதர்"

(காசிக்கலம்.)

என்றும் தம் பட்டறிவை விளக்கித் தமிழின்பால் பற்றுகொண்டு நம்பிக்கை கொண்டு அதன்வழி இறையைக் காணுங்கள் என்று அறிவுறுத்துகின்றார்.

**இறைவனைப் பாடுங்கள்**

இறைவனை அடைவதற்கு மிகச்சிறந்ததும் எளிதுமான வழி அவனைத் தமிழாற்பாடித் துதிப்பதுதான். புலவர்களே, முத்தி யாம் முழுநலம் கொடுக்கும் செந்நெறி எது என்று கேட்டால், இதோ அந்த இறைவனைப் பாடுங்கள் போதும்... செந்நெறி கிடைத்துவிடும்.

"வேத்தவை வியப்ப விரைந்தேன் பில்கும்
தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்"

"மண்மகள் கவிதைத் தண்ணிழற் துஞ்சப்
புரவுபூண்டு இந்திர திருவொடும் பொலிந்து
முடிவினும் முடியா முழுநலங் கொடுக்கும்
செந்நெறி வினவுதி ராயின் இன்னிசைப்
பாத்தொடுத்து அடுத்த பரஞ்சுடரை
நாத்தழும் பிருக்க ஏத்துமின் நீரே" (காசிக். 101)

மனிதரையும் மன்னரையும் பாடுவதால் செந்நெறி கிடைத்து விடாது, "பொய்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்னும் சுந்தரர் பாட்டை அடிகளார் அடியொற்றி இருப்பதை ஈண்டு ஒப்பு நோக்கலாம்.

"செல்லார் பொழிற் தில்லைச் சிற்றம்பலத்து எங்கள்
பொல்லா மணியைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்"

(சிதம். செய். 69.)

இவ்வாறு பாடித்தொழுது இறைவனை வழிபடும் நெறியே எளிமையானது, பிற எல்லாம் ஆரவாரத் தன்மையன, கடினம் காட்டுவன. வீடு பெறற் பொருட்டுப் பல்வேறு வகையில் முயன்று தவம் செய்வார்களை விளித்து, இவற்றைவிட எளிய வழி அவனைப் பாடிப் பரவுவதே என்றறிவுறுத்துகின்றார்.

"வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு
நெறிநின்று ஒழுகுதீர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கடன் இதுவே.

(சிதம். செய். 84)

பிணியென்று பெயராமே
துணிநின்று தவஞ்செய்வீர்
அணிமன்றல் உமைபாகன்
மணிமன்று பணியீரே.

அரிதென்று பெயராமே
வரைநின்று தவஞ் செய்வீர்
உருமன்றல் உமைபாகன்
திருமன்று பணியீரே. (சிதம். செய். 78)

இத்தகு பாடல்களை ஊன்றிக் கற்கும்போது அவர்தம் இறைவழிபாட்டுக் கொள்கை தெளிவாதல் காணலாம். இந்நெறியாம் பக்தி நெறி திருமுறையாசிரியர்கள் காட்டிய வழியேயாம். அதனை அடியொற்றியே அடிகளாரும் தம் இறை வழிபாட்டுக் கொள்கையை வழங்கியிருத்தல் காணலாம். இவ்வாறு இறைவழிபாட்டில் எளியவழி வகைகளைச் சுட்டிப் பாடுவதையும் தம் இலக்கிய நோக்காகக் காட்டுகிறார் நம் அடிகளார். ஆக, மனித வாழ்க்கை மேம்படும் பொருட்டுக் கல்வி கற்பதும், அக்கல்வியின் வழி இறைவனை நாடுவதும் அதன்வழி வீடுபேறு அடைவதும் தான் குமரகுருபரர் காட்டும் இலக்கிய நோக்கும் வாழ்க்கையின் பயனுமாகும் எனலாம்.

## கட்டுரையாளர் முகவரி

(அடைப்புக் குறிக்குள் உள்ளவை பக்க எண்கள்)

முதல் தொகுதி: பக். 1 முதல் 652 வரை

இரண்டாம் தொகுதி: பக். 653 முதல் 1330 வரை

மூன்றாம் தொகுதி: பக். 1331 முதல் 2094 வரை

11. திரு பா.அருள்நமச்சிவாயம், வழக்குரைஞர், நாணயக்காரச் செட்டித் தெரு, தஞ்சாவூர் (1381)

12. செல்வி க. அல்லி, இளநிலை ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (1384)

13. திருமதி மு. அவையாம்பாள், தமிழ்த்துறை, ஸ்ரீநேரு மகாவித்யாலயா கலை, அறிவியல் கல்லூரி, மலுமாச்சம் பட்டி, கோவை-21. (26)

14. முனைவர் கு.ப. அழகம்மை, அலமேலு அங்கப்பன் கல்லூரி, குமாரபாளையம், நாமக்கல் மாவட்டம்-638 183 (668)

15. முனைவர் சு. அழகியநம்பி, அய்யநாடார் சானகியம்மாள் கல்லூரி, சிவகாசி-626 124 (676)

16. முனைவர் இரா. அறவேந்தன், ஜெ. ஜெ. கலை, அறிவியல் கல்லூரி, நமணசமுத்திரம் அஞ்சல், புதுக்கோட்டை-622404. (686)

17. முதுமுனைவர் ம. சா. அறிவுடைநம்பி, இணைப் பேராசிரியர், அரியகையெழுத்துச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005. (1391)

18. முனைவர் அ. அறிவுநம்பி, தமிழியல் துறைத்தலைவர், புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி-605 014. (693)

19. முனைவர் க. அன்பழகன், உதவியாளர், இந்திய மொழிகள் பள்ளி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613005. (1403)

20. முனைவர் கி. ஆதிநாராயணன், தமிழ்த்துறை, உலகநாத நாராயணசாமி அரசு கலைக்கல்லூரி, பொன்னேரி-601204 (699)

21. திரு முத்து. ஆபத்சகாயம், 2/9, காளத்தி தெரு, புதுகும்முடிப்பூண்டி (அஞ்சல்), கும்முடிப்பூண்டி வட்டம்-601 201 (32)

22. முனைவர் அ. ஆலிஸ், தமிழியல் துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி (1411)

23. திருமதி ஆ. இசக்கியம்மாள், தேர்வுநிலை விரிவுரையாளர், ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம் (1417)

24. முனைவர் க. இந்திரசித்து, தமிழ் விரிவுரையாளர், வித்யாசாகர் கலை அறிவியல் கல்லூரி, உடுமலைப் பேட்டை-642 126 (41)

25. முனைவர் இந்திராசீநிவாசன், 22-65, தெற்கு அவின்யூ, திருவான்மியூர், சென்னை-600 041. (705)

26. செல்வி தி. இந்திராணி, 11, மாரியம்மன் கோவில் தெரு, மேலக்காவேரி, கும்பகோணம் (710)

27. முனைவர் சே. இரகுராமன், தமிழ்த்துறைப் பேராசிரியர், அ. மா. ஜெயின் கல்லூரி, மீனம்பாக்கம், சென்னை-114 (47)

28. திருமதி த. இரத்னமாலா, ஸ்டாண்டர்டு ஃபயர்ஒர்க்ஸ், இராசரத்தினம் மகளிர் கல்லூரி, சிவகாசி (60)

29. திரு. இரமேஷ் சாமியப்பா, துணை விரிவுரையாளர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-630 003 (769)

30. திரு இர்ாகவன்முத்து, 13-14, கொட்டமடக்கியார் தெரு, காரைக்குடி-630 001 (1425)

31. முனைவர் இரெ.இராசபாண்டியன், தமிழ் விரிவுரையாளர், கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி, விருத்தாசலம்-606 001 (64)

32. மரு. மே. செ. இராசமாணிக்கம், அருட்பெருஞ்சோதி மருத்துவமனை, 163,வீரபத்திரவீதி, ஈரோடு-638003. (715)

33. முனைவர் கி. இராசா, இணைப்பேராசிரியர் (தமிழ்), பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி-620 024 (2026)

34. மு. இராசாங்கம், கி. இரா. ரேவதி, இணைப்பேராசிரியர், அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி-624 601 (726)

35. முனைவர் புலவர் செ. இராசு, கொங்கு ஆய்வு மையம், 7-8, என். ஜி. ஜி. ஓ. காலனி, முதல்தெரு, ஈரோடு-638 009 (734)

36. முனைவர் ந. இராணி, தமிழ் விரிவுரையாளர், ஜெ. ஜெ. கலை, அறிவியல் கல்லூரி, நமணசமுத்திரம் அஞ்சல், புதுக்கோட்டை-622 404 (1436)

37. முனைவர் ச. இராதாகிருஷ்ணன், இணைப்பேராசிரியர், மொழிபெயர்ப்புத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (750)

38. திரு இ. மா. இராமச்சந்திரன், உடற்கல்வி இயக்குநர், அரசு மேல்நிலைப்பள்ளி, அம்மாபாளையம், பெரம்பலூர் மாவட்டம்-621 101 (71)

39. பேரா. மா. இராமச்சந்திரன், தமிழ் விரிவுரையாளர், ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்-628 216 (757)

40. முனைவர் வே. இராமசுப்பிரமணியன், தமிழ்த்துறை, தேசியக் கல்லூரி, திருச்சி-1 (762)

41. செல்வி அ. இராஜராஜேஸ்வரி, ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (80)

42. செல்வி வே. இராஜேஸ்வரி, ஆய்வாளர் (தமிழ்), பாரதி தாசன் பல்கலைக்கழகம், திருச்சி-24 (743)

43. முனைவர் சி. இலட்சுமணன், அரியகையெழுத்துச்சுவடித் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (1442)

44. திரு சீ. இலட்சுமணன், உலகத்தமிழ்க் கல்வி இயக்கம், தமிழூர்-627 808 (88)

45. முனைவர் இளங்கண்ணன், சி-84, சிக்கந்தர் பாட்சா தெரு, காந்தி நகர், உடுமலைப்பேட்டை-642 154, கோவை மாவட்டம் (94)

46. முனைவர் க. இளமதிசானகிராமன், முதுநிலை விரிவுரை யாளர், தமிழியல் துறை, புதுவைப் பல்கலைக்கழகம், புதுவை-605 014 (776)

47. முனைவர் ச. ஈஸ்வரன், தமிழாய்வுத்துறை, தேசியக் கல்லூரி, திருச்சி-620 001 (104)

48. வி. ச. ஈஸ்வரி, இதயா மகளிர் கல்லூரி, ஆரோக்கிய நகர், சருகணி, இராமநாதபுரம் மாவட்டம்-623 405 (111)

49. தவத்திரு. ஊரன் அடிகள், நிறுவனர், சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்-607 303 (118)

50. முனைவர் ந. கடிகாசலம், இணைப்பேராசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113 (1450)

51. பேரா. ஆர். கண்ணன், இந்தியப் பண்பாட்டுத்துறை, அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி-624 602 (783)

52. முனைவர் இரா. கண்ணன், தமிழ்த்துறை, உலகநாத நாராயணசாமி அரசு கலைக்கல்லூரி, பொன்னேரி-601 204 (791)

53. முனைவர் மு. கண்ணன், தமிழ்த்துறை, ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்-628 215 (800)

54. முனைவர் ச. கண்மணி, இணைப்பேராசிரியர் (தமிழ்), எஸ். எஃப். ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி-626 123 (125)

55. வித்துவான் க. கதிரேசன், ஆதீனப்புலவர், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி-630 206 (806)

56. முனைவர் கு. கதிரேசன், தமிழ் விரிவுரையாளர், ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்-628 216 (1458)

57. முனைவர் ஆ. கந்தசாமி, முதல்வர், முத்தியாலுப்பேட்டை மேனிலைப்பள்ளி, சென்னை-600 001 (1467)

58. முனைவர் பொ. நா. கமலா, 14என்/3ஏ, பெரியகருப்பன் தெரு, சிவகாசி-626 189 (815)

59. முனைவர் தி. கமலி, அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழக ஆய்வு மையம், (கல்வியியல் கல்லூரி வளாகம்), சைதாப்பேட்டை, சென்னை-15 (1476)

60. திரு பி. கரிகாலன், 16, சிவன்கோயில் தெரு, அம்மாப் பேட்டை (1481)

61. முனைவர் சோ. கி. கல்யாணி, அரசு கலைக்கல்லூரி, மேலூர்-625 106 (131)

62. செல்வி தி. கலா, ஆய்வாளர், ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (2031)

63. முனைவர் இரா. கலைவாணி, விரிவுரையாளர், இசைத் துறை, அவினாசிலிங்கம் நிகர்நிலைப் பல்கலைக்கழகம், கோவை-641 043 (137)

64. முனைவர் இரா. கஸ்தூரி, அண்ணா ஆதர்ச மகளிர் கல்லூரி, அண்ணாநகர், சென்னை-40 (146)

65. முனைவர் ஆர். கஸ்தூரி நாகராஜன், தமிழ்த்துறை, ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்-627 802 (1486)

66. பேரா. இரா. காசிராசன், தமிழ்த்துறை, தொலைநிலைக் கல்வி இயக்ககம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-625 021 (1495)

67. முனைவர் இரா. காஞ்சனா, இணைப்பேராசிரியர், ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–21 (1503)

68. முனைவர் ந. காந்திமதிலட்சுமி, ஏ. பி. சி. மகாலட்சுமி கல்லூரி, எட்டையாபுரம் ரோடு, தூத்துக்குடி–628 002 (152)

69. திரு வேல். கார்த்திகேயன், முனைவர்ப்பட்ட ஆய்வாளர், தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை–600 005 (822)

70. முனைவர் ஆ. காளியம்மாள், நூலகத் தகவலியல்துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி–2 (1515)

71. ப. கிருட்டிணம்மாள், 51, லூயி பிரகாச வீதி, புதுச்சேரி–1 (1520)

72. முனைவர் இரத்தின. கிருட்டினமூர்த்தி, தாயகம், 15, ஆலைத்தெரு, சண்முகபுரம், பழனி–624 602 (1526)

73. க. கிருஷ்ணமூர்த்தி, தமிழ் விரிவுரையாளர், அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி–1 (160)

74. பேரா. அ. கிருபானந்தம், ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள், தமிழ்க் கல்லூரி, மயிலம்–604 304 (830)

75 முனைவர் த. கிருஷ்ணன், இணைப்பேராசிரியர் (தமிழ்), அய்யநாடார் ஜானகிஅம்மாள் கல்லூரி, சிவகாசி–626 124 (836)

76. திரு வ. கிருஷ்ணன், தமிழ் விரிவுரையாளர், அரசு கலைக் கல்லூரி, உடுமலைப்பேட்டை–642 126 (163)

77. திரு ஆ. குணசேகரன், முதல்நிலை நூலகர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (2040)

78. திரு சுப. குணசேகரன், கா/பெ என். காயத்திரி, 28–பி, சோழன் தெரு, சாந்தி நகர், இலாஸ்பேட்டை, புதுச்சேரி–8 (171)

79. முனைவர் மு. குப்புசாமி, சி2–ஏ/264–ஏ, ஜனக்புரி, புதுடெல்லி–110 058 (178)

80. தவத்திரு. குமரகுருபர சுவாமிகள், ஆதீனகர்த்தர், கௌமார மடாலயம், சின்னவேடன்பட்டி, கோவை–6 (846)

81. திரு இரா. குமார், ஆய்வாளர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–630 003 (183)

82. திரு ச. குமார், ஆய்வாளர், தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம்-695 581 (190)

83. முனைவர் வ. குருநாதன், இணைப்பேராசிரியர், இலக்கியத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (2046)

84. முனைவர் சோ. குருலட்சுமி, ஏ. பி. சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி–628 002 (854)

85. திரு க. கொன்றையாண்டி, திருவள்ளுவர் பதிப்பகம், 52, கந்தாடைத் தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர்–626 125 (861)

86. முனைவர் ப. கோபாலன், தமிழ் விரிவுரையாளர், அரசு கலைக் கல்லூரி, உடுமலைப்பேட்டை, கோவை மாவட்டம்–642 126 (870)

87. பேரா. தி. வே. கோபாலையர், 1, ஈசுவரன் கோயில் தெரு, புதுச்சேரி–605 001 (193)

88. முனைவர் அ. கோபிநாத், தமிழாய்வுத்துறை, பிசப் ஈபர் கல்லூரி, திருச்சி–620 017 (1536)

89. பேரா. எஸ். வி. கோபிநாத், அருள்மிகு பழநியாண்டவர் மகளிர் தொழில்நுட்பக் கல்லூரி, பழநி–624 601 (878)

90. முனைவர் கோமதி சூரியமூர்த்தி, இணைப்பேராசிரியர், சைவசித்தாந்தத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை–625 021 (884)

91. திருமதி கோ. ச. கோமதி முத்துக்குமரன், வரலாற்று உதவி ஆசிரியை, அரசினர் உயர்நிலைப்பள்ளி, மாத்தூர்–602 105 (205)

92. முனைவர் மு. கோவிந்தராசன், விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை–600 030 (1543)

93. திரு மோ. கோ. கோவைமணி, ஆய்வு உதவியாளர், ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை (2054)

94. செல்வி உ. கௌசல்யா, இளநிலை ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை–46 (894)

95. திருமதி சி. கௌசல்யா, தமிழ் விரிவுரையாளர், கு. நா. அரசு மகளிர் கல்லூரி, தஞ்சாவூர்-7 (899)

96. செல்வி பா. சங்கரேஸ்வரி, ஆய்வாளர், இந்திய மொழிகள் பள்ளி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (1553)
97. முனைவர் வே. சசிகலா, இணைப்பேராசிரியர் (தமிழ்), ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்–627 802 (1538)
98. முனைவர் சிவ. சண்முகசுந்தரம், அரசு மேனிலைப்பள்ளி, வெம்பாக்கம்–604 410, காஞ்சிபுரம் (221)
99. புலவர் சு. சண்முகசுந்தரம், முதுநிலை விரிவுரையாளர், தியாகராசர் கல்லூரி, மதுரை–9 (232)
100. முனைவர் முல்லை வீ சண்முகம், தமிழ்த்துறைத் தலைவர், அ. அ. அரசு கலைக்கல்லூரி, நாமக்கல்–637 002 (241)
101. திரு சோ. சண்முகம், தேர்வுத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர் (1564)
102. திரு வெ சத்யநாராயணன், ஆய்வாளர், இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (1572)
103. முனைவர் மு. சதாசிவம், ஆசியவியல் நிறுவனம், செம்மண்சேரி, சோழிங்கநல்லூர் அஞ்சல், சென்னை–600 119 (1578)
104. முனைவர் த. சந்திரகுமார், பேராசிரியர், சிற்பத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (907)
105. முனைவர் இரா. சந்திரசேகரன், தமிழ்த்துறைத் தலைவர், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை–641 046 (913)
106. திரு செ. சு. நா. சந்திரசேகரன், ஆய்வாளர், தமிழ்த் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–630 003 (213)
107. திரு சொ. சந்திரவாணன், காப்பாட்சியர், அகழ் வைப்பகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, குற்றாலம்–627 802 (1585)
108. திருமதி சு. சந்திரா, தமிழ் விரிவுரையாளர், அரசு மகளிர் கலைக்கல்லூரி, புதுக்கோட்டை–622 001 (918)
109. முனைவர் இரா. சம்பத், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், 19, சின்னசுப்பராயப் பிள்ளை வீதி, புதுவை–605 001. (926)
110. திரு ச. அ. சம்பத்குமார், கல்லூரி நூலகர் (முதுநிலை), கா.சு.சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்–612 504 (1595)

111. முனைவர் நல்லூர் சா. சரவணன், சைவசித்தாந்தத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-600 005 (936)

112. முனைவர் மா. சற்குணம், ஸ்ரீசிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மயிலம்-604 304 (944)

113. செல்வி இரா. சாந்தி, ஆய்வாளர், இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (1599)

114. செல்வி மா. சாந்தி, ஜெ. ஜெ. கலை, அறிவியல் கல்லூரி, சிவபுரம், புதுக்கோட்டை (952)

115. முனைவர் ச. சாம்பசிவனார், 'தமிழ் மாருதம்' அ. பெ. எண். 155, மதுரை-625 001 (1607)

116. திரு நா. சாமிநாதன், 20, கல்யாணபுரம் தெரு, சூளைமேடு, சென்னை-94 (1615)

117. செல்வி கு. சாரதாம்பாள், ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (245)

118. முனைவர் இரா. சாவித்திரி, பேருரையாளர் – தமிழ்த் துறை, கு. நா. அரசு மகளிர் கலைக்கல்லூரி, தஞ்சாவூர்-7 (254)

119. முனைவர் சி. சித்ரா, தமிழாய்வுத்துறை, தேசியக் கல்லூரி, திருச்சி-1 (261)

120. முனைவர் ச. சிவகாமி, இணைப்பேராசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், மைய தொழில் நுட்பக் கல்லூரி வளாகம், தரமணி, சென்னை-113 (1623)

121. திரு. இ. சிவசங்கரன், 10, அருணாசலம் முதல் தெரு, அரக்கோணம்-631 001 (1632)

122. திரு பா. சிவநேசன், தமிழ்த்துறை, அரசு ஆடவர் கல்லூரி, கும்பகோணம்-612 001 (270)

123. பேரா. வீ. சிவபாதம், அ. வீ. வா. நினைவு திருபுட்பம் கல்லூரி, பூண்டி (281)

124. திரு கு. சிவலிங்கம், தவத்திரு இராமானந்த அடிகளார் மேல்நிலைப்பள்ளி, சின்னவேடம்பட்டி (அ. நி.) கோவை-641 006 (960)

125. பேரா. ஆ. சிவலிங்கனார், 5/15, கோவில் தெரு, மயிலம்-604 304, விழுப்புரம் மாவட்டம் (291)

126. திரு நா. சிவா, 70, மெயின் ரோடு, பெரிய காலாப்பட்டு, புதுவை-605 014 (1637)

127. திரு இரா. சின்னதுரை, இடைநிலையாசிரியர், ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி, அணைக்கரை, தஞ்சை மாவட்டம்-612 502 (299)

128. செல்வி பெ. சீதாலட்சுமி, திட்ட உதவியாளர், இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (1643)

129. முனைவர் வே. சீதாலெட்சுமி, கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (967)

130. முனைவர் கே. சுகதா, விரிவுரையாளர், தமிழ்த்துறை, பல்கலைக்கழகக் கல்லூரி, பாளயம், திருவனந்தபுரம் (307)

131. முனைவர் மு. சுதர்சன், விரிவுரையாளர் - இலக்கியப்புலம், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், 19, சின்னசுப்பிராயப் பிள்ளை வீதி, புதுச்சேரி-1 (974)

132. திரு யாழ். சுந்தரம், 140 ஏ, வடக்கு ஆவணி மூலவீதி, மதுரை-625 001 (1648)

133. முனைவர் ச. வே. சுப்பிரமணியன், உலகத்தமிழ்க் கல்வி இயக்கம் தமிழூர், அடைக்கலப்பட்டணம் அஞ்சல், நெல்லை மாவட்டம்-627 808 (979)

134. முனைவர் பெ. சுப்பிரமணியன், இணைப்பேராசிரியர் (தமிழ்), அருள்மிகு பழனியாண்டவர் கலை பண்பாட்டுக் கல்லூரி, பழநி-624 601 (315)

135. முனைவர் பெ. சுப்பிரமணியன், அ. வீரையா வாண்டையார் நினைவு திருபுட்பம் கல்லூரி, பூண்டி, தஞ்சை மாவட்டம்-613 503 (1653)

136. புலவர் கோ. சுப்பிரமணியனார், 'ஐயாறப்பர் அருளகம்', 99ஏ, தெற்குவீதி, திருவையாறு-613 204 (984)

137. முனைவர் சுப்புலெட்சுமி, தேர்வுநிலை விரிவுரையாளர், ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்-627 802 (1662)

138. முனைவர் சீ. சுலோர்மணி பாண்டியன், தமிழ்த்துறை, பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம் (1668)

139. திரு இரா. சுவாமிநாதன், தொல்பொருள் பாதுகாப்பு இளநிலைப் பொறியாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை, அரண்மனை, தஞ்சாவூர்-613 009 (2061)

140. திரு நா. சுவாமிநாதன், 19, சக்திநகர், முதல் தெரு, சென்னை-94 (994)

141. புலவர் பனசை. சுவாமிநாதன், அரசு உயர்நிலைப்பள்ளி, கங்கைகொண்ட சோழபுரம்-612 901 (323)

142. திருமதி சே. செந்தமிழ்ப்பாவை, விரிவுரையாளர் (தமிழ்), அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-630 003 (1003)

143. செல்வி ஆ. செந்தாமரைக்கண்ணி, ஜெ. ஜெ. கலை, அறிவியல் கல்லூரி, சிவபுரம், புதுக்கோட்டை (1009)

144. திரு. மா. செந்தில் செல்வக்குமரன், 83, தெற்குக் கடைத் தெரு, பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2 (1675)

145. பாவலர் சொ.ச. செந்திலாண்டவன், O-44, எம்.எம்.டி.ஏ. காலனி, அரும்பாக்கம், சென்னை–106 (331)

146. முனைவர் ஆர். செயச்சந்திரன், திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி, விருத்தாசலம்-606 001. (1016)

147. திருமதி த. செல்லம்மாள், தேர்வுநிலை விரிவுரையாளர் (தமிழ்), கு.நா. அரசு மகளிர் கலைக்கல்லூரி, தஞ்சாவூர்–7 (1681)

148. முனைவர் சு. செல்லையாபிள்ளை, இணைப்பேராசிரியர், தெ. தி. இந்துக் கல்லூரி, நாகர்கோவில்-629 002. (338)

149. முனைவர் சண்முக. செல்வகணபதி, இணைப்பேராசிரியர், அரசர் கல்லூரி, திருவையாறு – 613 204 (345)

150. திரு ஐ. செல்வராஜ், தமிழ்த்துறை, எஸ். ஆர். கே. வி. கலை, அறிவியல் கல்லூரி, கோவை-641 020 (1023)

151. முனைவர் க. சேகர், தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி, தருமபுரம், மயிலாடுதுறை-609 001 (1687)

152. முனைவர் து. சேதுபாண்டியன், இணைப்பேராசிரியர், தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–625 021 (1694)

153. முனைவர் சேயோன், துணைஇயக்குநர், சென்னை வானொலி நிலையம், சென்னை–600 004 (1034)

154. திரு இ. சேனாவரையன், வி. எல். பி. ஜானகியம்மாள் கலை, அறிவியல் கல்லூரி, குனியமுத்தூர், கோவை (1044)

155. தவத்திரு. வீ. சொக்கலிங்க சுவாமிகள், மடாதிபதி, மீனாட்சி சொக்கலிங்க சுவாமிகள் திருமடம், தத்தோஜியப்பா சந்து, தஞ்சாவூர்–613 001 (1051)

156. முனைவர் சோதிபாய் தேவதாஸ், தொலைநிலைக் கல்வி இயக்ககம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–625 021 (1060)

157. முனைவர் இராம. சௌந்திரவல்லி, தமிழ்த்துறை, ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்–627 802 (1072)

158. எம். ஞானப்பூங்கோதை, 244, என். ஜி. ஓ. காலனி, நாகமலை, மதுரை–19 (1702)

159. முனைவர் ப. ஞானம்க்ணபதி, இணைப்பேராசிரியர் (தமிழ்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்–608 002 (355)

160. முனைவர் சு. தங்கத்துரை, திருகொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி, விருத்தாசலம்–606 001 (1077)

161. திரு. இரா. தமிழ்ச்செல்வம், ஓமாம்புலியூர் மெயின்ரோடு, காட்டுமன்னார் கோயில், கடலூர் மாவட்டம்-608 301 (1712)

162. முனைவர் தமிழரசி அன்பழகன், தமிழ்த்துறைத் தலைவர், செங்கமலத்தாயார் கல்வி அறக்கட்டளை மகளிர் கல்லூரி, சுந்தரக்கோட்டை, மன்னார்குடி–614 001 (360)

163. திரு. இராம. தனசேகரன், ஆய்வாளர், தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–625 021 (1719)

164. திருமதி. அ. தனலெட்சுமி, முதுநிலை விரிவுரையாளர், அ. து. ம. மகளிர் கல்லூரி, நாகப்பட்டினம்–611 001 (1726)

165. முனைவர் வி. தாமரைச்செல்வி, புதுவைப் பல்கலைக் கழகம், புதுவை (1086)

166. முனைவர் தாயம்மாள் அறவாணன், பேராசிரியர் & துறைத்தலைவர், அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம், கொடைக்கானல் (1733)

167. ஜா. திரிபுரசூடாமணி, தமிழ் விரிவுரையாளர், தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி, தருமபுரம், மயிலாடுதுறை (368)

168. திரு. தி. திருநாவுக்கரசு, 435, முல்லை, புதிய வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு, தஞ்சாவூர்–613 005 (1093)

169. திரு வெ. திருநாவுக்கரசு, அரசு மகளிர் மேநிலைப்பள்ளி, குடவாசல் (அஞ்சல் & வட்டம்) திருவாரூர் மாவட்டம் (1737)

170. முனைவர் சாமி. திருமாவளவன், தமிழ் விரிவுரையாளர், தேசியக்கல்லூரி, திருச்சி–1 (1100)

171. முனைவர் க. திலகவதி, ஆய்வு உதவியாளர், இலக்கியத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005(1745)

172. பேரா. க. துரையரசன், தமிழ்த்துறை, அரசினர் கல்லூரி (த), கும்பகோணம்-612 001. (378)

173. முனைவர் சி. கோ. தெய்வநாயகம், பேராசிரியர் & தலைவர், கட்டடக்கலைத்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613 005 (2068)

174. திருமதி. எம். தேவகி, 26, முத்துக்கருப்பபிள்ளை சந்து, தெற்குவெளி வீதி, மதுரை-1 (1752)

175. திரு செ. தேவராசு, இளநிலை ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (1760)

176. முனைவர் கோ. தேவேந்திரன், தமிழ் விரிவுரையாளர், சி. டி. எம். கலை, அறிவியல் கல்லூரி, பரங்கிமலை, சென்னை-16 (1106)

177. முனைவர் புரிசை ச. நடராசன், 4/6, அன்னம் இல்லம், எழில்நகர், திருப்பத்தூர்-635 601 (1120)

178. செல்வி. நந்தினி சண்முகலிங்கம், ஆய்வாளர், சைவ சித்தாந்தத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-600 005 (1113)

179. திரு. பி. ஆர். நரசிம்மன், 43, அருள்ஜோதி தெரு, அடிவாரம், பழனி-624 601 (1766)

180. திரு. கோ. ப. நல்லசிவம், கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை, தஞ்சாவூர்-613 001 (2074)

181. முனைவர் அ. நலங்கிள்ளி, இணைப்பேராசிரியர் (தமிழ்), பிஷப் ஈபர் கல்லூரி, திருச்சி-17 (1770)

182. செல்வி இரா. நளினிகாந்தம், ஆய்வாளர், இலக்கியத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (1775)

183. திரு ப. நாகப்பன் நாயர், 6-94, வெள்ளமடம், கன்னியாகுமரி மாவட்டம்-629 305 (1780)

184. சி. நாகமணி, முனைவர்ப்பட்ட ஆய்வாளர் (தமிழ்), புதுவைப் பல்கலைக்கழகம், காலாப்பட்டு, புதுவை-14 (385)

185. முனைவர் வெ. அ. நாகரத்தினம், தமிழ்த்துறை, சேரன் கலை, அறிவியல் கல்லூரி, காங்கேயம் (1128)

186. திரு கு. நாகராசன், பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாஸ சுவாமிகள் அருட்பணி மன்றம், 146, எஸ். கே. சி. ரோடு, ஈரோடு-638 001 (1785)

187. பேரா. கா. நாகராசு, த/பெ. திரு காளிச்சாமிக்கவுண்டர், பாப்பநாயக்கன் பாளையம், தடாகம் (அ. நி.) கோவை மாவட்டம்-641 108 (391)

188. புலவர் ப. வெ. நாகராசன், கௌமார மடாலயம், சின்னவேடன்பட்டி, கோவை-6 (1135)

189. முனைவர் நாகப்பா. நாச்சியப்பன், துறைத்தலைவர், தமிழ் ஆராய்ச்சித்துறை, கா. மு. பட்ட மேற்படிப்பு ஆராய்ச்சி மையம், இலாஸ் பேட்டை, புதுச்சேரி-605 008 (1792)

190. முனைவர் சு. நிர்மலா, தமிழ் விரிவுரையாளர், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை மகளிர் கலைக்கல்லூரி நாமக்கல். (1144)

191. முனைவர் தா. நீலகண்டபிள்ளை, விரிவுரையாளர், தமிழ்த்துறை, தெ. தி. இந்துக்கல்லூரி, நாகர்கோவில்-629 002 (1153)

192. முனைவர் பா. நீலாவதி, இணைப்பேராசிரியை (தமிழ்), அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம், கோவை-43 (399)

193. முனைவர் கா. பகவதி, தமிழ்த்துறை, அரசு மகளிர் கலைக்கல்லூரி, புதுக்கோட்டை-1 (1158)

194. முனைவர் எஸ். பங்கயச் செல்வி, முதுநிலை விரிவுரையாளர் (தமிழ்), கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (1166)

195. பேரா. ம. வே. பசுபதி, முதல்வர், கா. சு. சு. கலைக் கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (1798)

196. திரு மு. பத்மநாபன், தமிழாசிரியர், ஸ்பாடிக்ஸ் மெட்ரிக் மேனிலைப்பள்ளி, மருத்துவக்கல்லூரி சாலை, தஞ்சாவூர்-613 004 (407)

197. செல்வி ச. பத்மினி, இளநிலை ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (414)

198. முனைவர் த. கோ. பரமசிவம், தலைவர், ஓலைச்சுவடித் துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (2083)

199. புலவர் இல. பழநிச்சாமி, ஸ்ரீ சாரதா நிகேதன் மகளிர் அறிவியற் கல்லூரி, சாரதாபுரி, கரூர்-5 (1809)

200. திரு மு. பழனியப்பன், தமிழ் விரிவுரையாளர், மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை-622 001 (420)

201. முனைவர் பாக்யவதி சங்கரலிங்கம், செல்லம்மாள் மகளிர் கல்லூரி, கிண்டி, சென்னை-32 (1815)

202. முனைவர் மு. பாண்டி, தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-630 003 (1173)

203. முனைவர் பி. பார்வதி, 2, எட்டாவது தெரு, என். ஜி. ஓ. காலனி, மேலகரம்–627 818 (1825)

204. பேரா. இரா. பாலசுப்பிரமணியன், இணைப்பேராசிரியர் (தமிழ்), அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–630 003 (1180)

205. திரு தி. பாலசுப்ரமண்யன், தலைமையாசிரியர், அரசு மேனிலைப்பள்ளி, மீன்சுருட்டி–612 903. பெரம்பலூர் மாவட்டம். (1188)

206. திரு நா. பாலசுப்பிரமணியன், இடைநிலையாசிரியர், ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி, அணைக்கரை (அ. நி.), தஞ்சை மாவட்டம்-612 502 (428)

207. திரு. மீ. பாலமுருகன், அங்கப்பா கல்லூரி, அழகேசன் சாலை, சாய்பாபா காலனி, கோவை–641 011. (436)

208. முனைவர் ச. பாலு, 121, அபிராமபுரம், ம. க. சாலை தஞ்சாவூர்–613 003 (1831)

209. முனைவர் அ. பாஸ்கரபால்பாண்டியன், தமிழ்த்துறைத் தலைவர், ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்–628 216 (443)

210. திரு. ஆ. பிரபாகரன், 30, கே. ஜி. எல். பிரபுநகர்-2. மீஞ்சூர்–601 203 (1199)

211. திருமதி ஜெ. பிருந்தாஶ்ரீ, விரிவுரையாளர் (தமிழ்), செங்கமலத்தாயார் கல்வி அறக்கட்டளை மகளிர் கல்லூரி, சுந்தரக்கோட்டை, மன்னார்குடி. (1840)

212. முனைவர் அ. பிரேமா, தமிழ்த்துறை, ஶ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்–627 802. (1206)

213. எஸ். பிரேமா அரங்கராசன், 96, வடக்கு அலங்கம், தஞ்சாவூர்–613 009 (1846)

214. திருமதி ந. புவனேசுவரி, ஆய்வாளர், மொழியியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (1852)

215. முனைவர் பா. புவனேஸ்வரி, ஒய் 161, 3–வது தெரு, அண்ணாநகர், சென்னை–600 040 (1212)

216. செல்வி. தி. புஷ்கலா, ஆய்வாளர், ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–613 005 (1857)

217. திரு. த. பூமிநாகநாதன், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113 (1864)
218. முனைவர் க. பூரணச்சந்திரன், இணைப்பேராசிரியர், பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி-620 017 (1877)
219. திரு தி. பெரியசாமி, முனைவர்ப்பட்ட ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-46 (450)
220. செல்வி. இலெ. பேபி, முனைவர்ப்பட்ட ஆய்வாளர் (தமிழ்), புதுவைப் பல்கலைக்கழகம் காலாபட்டு, புதுவை-14 (1884)
221. பேரா. சொ. பொன்னுசாமி, அருள்மிகு குமரகுருபர சுவாமிகள் கலைக்கல்லூரி, ஸ்ரீ வைகுண்டம், தூத்துக்குடி மாவட்டம் (457)
222. முனைவர் மஞ்சுளா கனகராஜ், தமிழ்த்துறை, ஸ்ரீ நேரு மகாவித்யாலயா கலை, அறிவியல் கல்லூரி, மலுமாச்சம் பட்டி, கோவை-21 (1218)
223. முனைவர் கடலூர் மணிமாறன், முதுநிலை விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் பயிற்சிக்கல்வி நிறுவனம், மாயனூர் – 639 108, கரூர் மாவட்டம். (465)
224. முனைவர் சொ. மணிவண்ணன், அரசர் கல்லூரி, திருவையாறு-613 204 (471)
225. திரு. சொ. அ. மணிவாசகம், பொத்தனூர், நாமக்கல் மாவட்டம்-638 181 (1225)
226. புலவர் சு. மதியழகனார், அரசு மேனிலைப்பள்ளி, வீரகனூர், சேலம் மாவட்டம்-636 116 (479)
227. முனைவர் அரு. மருததுரை, இணைப்பேராசிரியர், தமிழியல் துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி. (1891)
228. திரு மொ. மருதமுத்து, ஆராய்ச்சி உதவியாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113 (1899)
229 முனைவர் மலையமான், தமிழக வரலாற்றுத்துறை, தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம், சென்னை-600 108 (484)
230. முனைவர் சி. மனோகரன், தமிழ் விரிவுரையாளர், கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (1912)
231. முனைவர் வே. இரா. மாதவன், இணைப்பேராசிரியர், ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (1917)

232. முனைவர் நா. மாதவி, முதுநிலை விரிவுரையாளர் (தமிழ்), கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (491)

233. செல்வி பி. மாலதி, ஆய்வாளர் (தமிழ்), அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி–630 003 (499)

234. முனைவர் பா. மாலினி, தமிழ் விரிவுரையாளர், தொலை தூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர். (506)

235. பேரா. திருமலர் எம். எம். மீரான்பிள்ளை, பல்கலைக் கழகக் கல்லூரி, அரசு உயர் கல்வி மையம், திருவனந்தபுரம் (1240)

236. முனைவர் சு. முத்துஇலக்குமி, அரசு மகளிர் கல்லூரி, நிலக்கோட்டை, மதுரை மாவட்டம். (1247)

237. முனைவர் இரா. முத்துக்குமாரசாமி, 42, பெரிய தெரு, மாத்தூர்-602 105 (512)

238. திரு கோ. முத்துசாமி, கல்வெட்டு ஆய்வாளர், கடல் ஆய்வு-காட்சியகம், தொல்லியல் துறை, பூம்புகார் அஞ்சல், நாகை மாவட்டம். (1252)

239. திரு அழ. முத்துப்பழனியப்பன், 4–எ, ஜனதா நகர், சரவணம்பட்டி, கோவை–641 035 (1925)

240. பேரா. பொன். முத்தையன், அரசு கல்லூரி (தன்னாட்சி), கும்பகோணம்-612 001 (521)

241. முனைவர் சொ. முத்தையா, ஆசிரியர் குடியிருப்பு, எண். 17, இரத்தனபள்ளி, சாந்திநிகேதன்-731 235 (1230)

242. பேரா. தெ. முருகசாமி, முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி-630 003 (1932)

243. திரு சு. முருகேசன், 198–டி, வடக்குரத வீதி தொடர்ச்சி, பத்ரகாளியம்மன் கோவில் அருகில், மேலூர், தூத்துக்குடி–628 002 (1936)

244. முனைவர் ந. முருகேசன், முதுநிலைத் தமிழ் விரிவுரை யாளர், கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்–612 504 (528)

245. திரு ப. முருகையன், 4, பிள்ளையார் கோயில் தெரு, திருவான்மியூர், சென்னை–600 041 (1262)

246. முனைவர் அரங்க. மு. முருகையன், தமிழ் விரிவுரையாளர், புதுவைப் பல்கலைக்கழகம், புதுவை–605 014 (1268)

247. முனைவர் க. முருகையா, 172, சண்முகவேல் காம்பவுண்ட், சங்கரன்கோவில்-627 756 (1941)

248. திரு மு. மூர்த்தி, ஆய்வாளர் – தமிழ்மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், மெரினா வளாகம், சென்னை-5 (1946)

249. பேரா. சி. மெய்கண்டான், பெரியார் ஈ. வே. ரா. கல்லூரி, திருச்சி-620 023 (1272)

250. செல்வி ஆ. மேரி இமாகுலேட், ஆய்வாளர், இலக்கியத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (533)

251. முனைவர் மைதிலி வளவன், தமிழ்த்துறைத் தலைவர், சி. கந்தசாமி நாயுடு ஆடவர் கல்லூரி, அண்ணாநகர் கிழக்கு, சென்னை-600 102 (1280)

252. திரு என். ரெங்கநாதன், 1251, பாலோபா சந்து, மேலவீதி, தஞ்சாவூர் (1286)

253. திருமதி இரா. ரேணுகாதேவி, தமிழ் விரிவுரையாளர், அரசு கலைக்கல்லூரி, உடுமலைப்பேட்டை-642 154 (1951)

254. முனைவர் து. லலிதா, இணைப்பேராசிரியர் (தமிழ்), அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம், கோவை-641 043 (542)

255. முனைவர் துரை. லோகநாதன், கா. சு. சு. கலைக்கல்லூரி, திருப்பனந்தாள்-612 504 (1296)

256. திரு. நா. லோகநாதன், முனைவர்ப்பட்ட ஆய்வாளர், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், 19, சின்னசுப்புராயப் பிள்ளைவீதி, புதுச்சேரி-1. (1304)

257. முனைவர் சு. லோகாம்பாள், 1/752, ஏ, இரண்டாம்தெரு, காஞ்சிகாமாட்சி நகர், வி. மு. சத்திரம், திருநெல்வேலி-11 (549)

258. முனைவர் செ. மா. க. வசந்தகோகிலம், சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி, கடலூர்-607 001. (1959)

259. முனைவர் மு. வசந்தமல்லிகா, அவினாசிலிங்கம் பல்கலைக் கழகம், கோவை-641 043 (562)

260. செல்வி இரா. வசந்தமாலை, விரிவுரையாளர், பாரதி தாசன், மகளிர் கல்லூரி, புதுச்சேரி-1. (1313)

261. முனைவர் மு. வள்ளியம்மை பழனியப்பன், தமிழியல்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்-608 002 (568)

262. முனைவர் சா. வளவன், பேராசிரியர்(தமிழ்), பச்சையப்பன் கல்லூரி, சென்னை-600 030 (1324)

263. முனைவர் கா. வாசுதேவன், தமிழ் விரிவுரையாளர், அரசினர் கல்லூரி, கும்பகோணம்-612 001 (572)

264. பேரா. செ. விசுவநாதன், தமிழ்த்துறை, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயக் கலை, அறிவியல் கல்லூரி, எஸ். ஆர். கே. வி. அஞ்சல், கோவை-641 020 (1966)

265. செல்வி. இரா. விமலா, 17, ஜெகதாம்பிகை நகர், பாதிரிக் குப்பம் அஞ்சல், கடலூர்-607 401 (1975)

266. செல்வி சி. விமலா, ஆய்வாளர் (தமிழ்), அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-63 0 003 (1981)

267. பேரா. சு. விஜயகாந்தி, ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி, மயிலம்-604 304 (1986)

268. திரு உலக. வீரப்பன், ஆய்வாளர் - தமிழியல்துறை, புதுவைப் பல்கலைக்கழகம், புதுவை-605 104 (1993)

269. திரு ஆர். வெங்கட்ராமன், 21, இராம் நகர், அசூர் அஞ்சல், கும்பகோணம். (1997)

270 திரு ப. வேல்முருகன், தமிழ்த்துறை, காந்தி கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம்-624 302 (2005)

271. முனைவர் தே. வேலப்பன், நாஞ்சில் இல்லம், இரவிபுதூர், கன்னியாகுமரி மாவட்டம்-629 402 (580)

272. திருமதி பா. வேலம்மாள், தமிழ்த்துறை, ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம்-627 802 (586)

273. திரு இரா. வேலாயுதம், ஆய்வாளர் – தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-600 005 (2013)

274. முனைவர் ஆ. வேலுசுவாமி சுதந்திரன், பேராசிரியர் & தலைவர், சிற்பத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005 (2020)

275. முனைவர் ஜலஜா கோபிநாத், திருக்குறள் ஆய்வகம், காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-625 021 (592)

276. முனைவர் இரா. ஜெகதீசன், தலைமைத் தமிழ் விரிவுரை யாளர், அரசு இசைக்கல்லூரி, பசுமலை, மதுரை-4 (600)

277. திரு த. ஜெயக்குமார், 7, கண்ணாடிக்காரத் தெரு, மானம்புச்சாவடி, தஞ்சாவூர்-613 001 (606)

278. செல்வி எஸ். ஜெயசுதா, முனைவர்ப்பட்ட ஆய்வாளர் (தமிழ்), புதுவைப் பல்கலைக்கழகம், புதுவை-605 014 (611)

279. செல்வி ப. ஜெயபாரதி, தமிழ்த்துறை, அரசு மகளிர் கலைக்கல்லூரி, புதுக்கோட்டை-1 (617)

280. முனைவர் வ. ஜெயா, இணைப்பேராசிரியர், தமிழியல் துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-641 046 (624)

281. பேரா. கி. ஸ்ரீநிவாசன், 17, மணிநாயக்கர் தெரு, கணபதிபுரம், குரோம்பேட்டை, சென்னை-44 (633)

282. திருமதி க. ஸ்ரீவேணி, தமிழ்த்துறை, அரசு மகளிர் கலைக்கல்லூரி, புதுக்கோட்டை-1 (639)

283. செல்வி அ. ஷோபனா, ஆய்வாளர் (தமிழ்), பாரதியார் பல்கலைக்கழகம், கோவை-641 046 (647)